கழக வெளியீடு: ௯௧௪

684

உ

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# நற்றிணை நானூறு

மூலமும் - உரையும்



பின்னத்தூர்

அ. நாராயணசாமி ஐயர் அவர்கள்

எழுதிய உரையுடன்



முதற் பதிப்பு (கழகவழி) மார்ச்சு, 1952.



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, :: MADRAS-1.

*Head Office:*

24, EAST CAR STREET, :: THIRUNELVELI

# பதிப்புரை

பன்னெடுநாளாய் இருவகை வழக்கினும் நின்று நிலவி ‘ஞாலமளந்த மேன்மையதாய்’ உலகனைத்திற்கும் தன் தனிப்பண்பை நல்கி வளமுறுத் திச் சீரும் சிறப்பும் எய்தித் திகழும் தொன்மைமொழி தமிழ்மொழி ஒன்றேயாம். அம்மொழியின்கண் பிற எம்மொழிக்கும் இல்லாத நனி நாகரிக மக்கள் தனி ஒழுகலாற்றுக்கு இலக்கணமும் அமையப்பெற்றிருக் கின்றது. அதுவே பொருளதிகாரம் எனப்படும். பொருளதிகாரம், “அகத்திணை புறத்திணை” என இருபெரும் கூறாய் அவற்றின் துணையாய் விளக்கங்காட்டும் களவு, கற்பு, பொருள், மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு என ஏழு இயல்களையும் கொண்டு மிளிர்கின்றது. இத் தொல்காப்பியம் வரலாற்று ஆராய்ச்சிப்படி ஐயாயிரத்தறுநூறு ஆண்டு களுக்கு முன்னுள்ளதென ஐயமின்றித் துணியப்பட்டதாகும்.

இப்பொருளதிகார இலக்கியமாய்த் திகழ்வன முத்திறத் தொகை நூல்களாகும். அவற்றுள் நடுவணதாகத் திகழ்வன எட்டுத்தொகை. ஏனைய பத்துப்பாட்டும் பதினெண்கீழ்க்கணக்கும் என்ப. எட்டுத்தொகை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, நெடுந்தொகை (அகம்) புறநானூறு என்ப. இவற்றைக் குறிக்கும் பழைய வெண்பா,

“ நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை ” என்ப.

அகத்திணை புறத்திணை என்பன முறையே வீட்டாட்சியும் நாட்டாட்சியும் குறிப்பன. அகம் இன்பத்தினையும், புறம் அறம்பொருள் வீட்டினையும் குறிப்பன. உண்மையான் நோக்கின் அகம் செம்மையுறுதற் குத் துணையாகவே புறம் அமைந்துள்ளதென்பது புலனாகும். புறம் எனினும் காவலெனினும் ஒக்கும். அறம் ஒற்றுமைக்காவலாகவும், பொருள் வேற்றுமைக் காவலாகவும் இருப்பன. எல்லாவுயிர்க்கும் இன்பம் ஒன்றே இயல்பாகக் காணப்படுகிறது. அதனாலேயே, ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனாரும்,

> "எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது
> தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்"

—தொல். பொருள்-சூ. உஉங

என்றருளினர். இன்பமென்பது ஆணும் பெண்ணுமாகப் பொருந்தி வாழ்வது. அதுவே தலையாயதாகும். அவ்வாழ்வு ஓரறிவு முதல் ஐயறிவு ஈறாகச் சொல்லப்படும் எல்லாவுயிர்களுக்கும் உள்ளது. ஆறறிவு படைத்த நம்மனோர் வாழ்க்கையை ஒழுக்கந்தவறா விழுப்பேற்றுடன் நெறிமுறையாய் ஒழுகச்செய்து உய்யும் வழிகாட்டுவது அகன் ஐந்திணையாகும்.

அகன் ஐந்திணையும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை எனச் சொல்லப்படும். இவை, முறையே அறம், பொருள், இன்பம், வீடு, பேறு என்னும் பயன்களை நல்கும் நிலைக்களமும் ஒழுக்கமும் ஆகும். இவையே பொருளுண்மை காட்டும் நமசிவய என்னும் நற்றமிழ் மறைப் பொருளுமாகும்.

எட்டுத்தொகையுள் பதிற்றுப்பத்து, கலித்தொகை இரண்டற்கும் இருபெரும் நல்லிசைப் பெரும்புலவர்கள் கடவுள் வாழ்த்தருளியுள்ளனர்.

சீ

## பதிப்புரை

அவ்விரண்டும் முழுமுதற் சிவபெருமானையே குறிப்பன. பரிபாடல் கடவுட் பாடல்களையே முதன்மையாகக்கொண்டு திகழ்வது. ஏனைய ஐந்துக்கும் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்னும் செந்நெறிப் பெரும்புலவரே கடவுள்வாழ்த்துப் பாடியருளினர். அப்பாடல்களான் தமிழகப்பண்பாம் ஒரு கடவுட் கொள்கையும், அக்கடவுள் முழுமுதற் சிவமென்பதூஉம், அதுவே மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என வழிபடப்பட்டு வருவதும், தெளிவுபெற அமைத்துள்ளனர்.

நற்றிணைக்கு மாயோனும் குறுந்தொகைக்குச் சேயோனும் ஆகிய சிவத்தின் இருகூறும் திருவருளுக்கும், ஐங்குறுநூற்றுக்கு அம்மை அப்பராய்த் திகழும் சிவமுழுமுதற்கும், அகம் புறம் இரண்டற்கும் சிவபெருமானுக்கும் பாடியருளியுள்ள பண்பு எண்ணி எண்ணி இன் புற்றுப் பாராட்டற்குரியது. இம்முறையே "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்னும் தொல்காப்பியப்பொருளதிகார ஐந்தாம் நூற்பா வுக்குப் பொருள்கொள்ளல் அமைவுடைத்து.

எட்டுத்திணையுள் பதிற்றுப்பத்து புறநானூறு இரண்டுமொழித்த ஏனைய ஆறும் அகமேயாம். இவற்றுள்ளும் பரிபாடலொழித்தைந்தும் மக்கள்நுதலிய அகன் ஐந்திணையாகும். இவ்வைந்தனுள்ளும் திணை என் னுஃபெயரால் திகழ்வது நற்றிணை ஒன்றேயாம். அது நற்றாய் போன்று சிறப்புரிமையுடையது. அதன்கண் காணப்பெறும் பாட்டுக்களும் அத் துணைச் சுவைமிக்குடையன. அப்பாட்டுக்கள் இருநூற்றெழுபத்தைந்து பொய்யா நாவின் புலவர் பெருமக்களால் பாடப்பட்டுள்ளன. பாடப்பட்ட புரவலர், மன்னர், வேந்தர் முதலாயினோரும் அத்தொகையினரினும் மிக்கோரேயாவர்: இன்னோர் வரலாறுகள் காண்க. பாட்டுக்கள் அகப் பொருள் குறிக்கும் அளவோடு புறப்பொருளாம் கொடை, ஆட்சிமுறை, ஆட்சிப்பரப்பு, அறப்போர், மொழியோம்பல், நெறிபேணல், அன்பு, அருள், நண்பு, ஒருமை முதலிய பல தமிழகவரலாறும் ஆங்காங்கே வேண்டு மளவு விளக்கப்பட்டுள்ளது படிப்பார்க்கு முடிவிலா இன்பந்தருவதாம்.

இவ்வரிய நூற்குத் திரு. பின்னத்தூர், அ. நாராயணசாமி ஐயரவர்கள் பண்டையுரையாசிரியர் உரையே எனக் கொள்ளும்படி நல்லுரைகண்டு ஏறத்தாழ நாற்பது யாண்டுகளுக்குமுன் வெளிப்படுத்தியுள்ளார்கள். அவர்கள் உரிமையை முறையாகப் பெற்றுச் செவ்வியமுறையில் இப் பொழுது கழகத்தார் வெளியிடுகின்றனர். இதன்கண் கடினமும் மயக்க மும் தரும் சந்திகள் பிரித்தும், அரிது முயன்று பாடவேறுபாடுகள் குறித்தும், இதுகாறும் காணப்பெறாத இருநூற்றுமுப்பத்துநான்காவது பாட்டினைக் கண்டிணைத்தும், ஆயிரத்துக்குமேற்பட்ட அருஞ்சொற் பொருள் எடுத்தமைத்தும் பதிப்பித்துள்ளோம்.

உரை தூய இனிய தமிழ் நடையும், இலக்கணக்குறிப்பும், இறைச்சி உள்ளுறை உவமம் துறை மெய்ப்பாடு பயன் முதலிய அகப்பொருள்களும் கொண்டு திகழ்கின்றது. உரையினை ஊன்றிக்கற்பார் ஒருவாறு தொல்காப்பிய வல்லுநராவர். முற்றுங்கற்றுணரப் பேரார்வங் கொள்வர். உரையாசிரியர்க்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக.

மாணவர் ஆசிரியர் பெருமக்கள் அனைவரும் வாங்கிக் கற்றுங் கற்பித் தும் தமிழகவாய்மைப்பண் புணர்ந்து தூய்மையராய் நாடு மொழி நன்னெறி பீடுறப்பேணி வாழ்வாராக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

பதிப்புரை

பி. அ. நாராயணசாமி ஐயர் வரலாறு

உரையாசிரியர் முகவுரை

பின்னிணைப்பு

பாடினோர் வரலாறு
பாடப்பட்டோர் வரலாறு
நற்றிணை மூலமும் உரையும்
செய்யுள் முதற்குறிப்பு
அருஞ்சொற்பொருள் அகரவரிசை

பக்கம்

.... ௫

.... ௬

.... ௧௩

.... கரு

.... கஎ

.... எ௱

.... க

.... சசஎ

.... சரு௱

# பி. அ. நாராயணசாமி ஐயர் வரலாறு

**குடும்பமும் தோற்றமும் :**

இவ் அந்தணப் பெரியார்

குடும்பத்தில் பிறந்தவர். தந்தையார் அப்பாசாமி ஐயர் என்னும் வேங்கட கிருட்டிண அவதானிகள். தாயார் சீதாலட்சுமி அம்மாள். ஊர் பின்னத்தூர். இது தஞ்சாவூர் மாவட்டத்தைச் சார்ந்த திருத்துறைப்பூண்டித் தாலுகாவைச் சேர்ந்தது. இவர் கி. பி. 1862 செப்டம்பர் 10 புதன்கிழமை கொல்லம் 1038 ஆவணி 27-ம் நாள் பிறந்தவர். இவர் தந்தையார் மருத்துவ நூற் புலவராய், அமைதிக் குணமிருந்தவராய், அறவைத்தியம் செய்வதிலும் மெய்யடியார்களைப் போற்றுவதிலும் தம் வாழ்நாளைப் போக்கிவந்தவர். குடும்பத்திற்குரிய சொத்துக்களைப் பேணி வளர்ப்பதில் சிறிதும் கவலையற்றவர். இவர் தந்தையுடன் பிறந்த பெண்கள் இருவர் மணம்முடிந்த சின்னாளிலேயே கைம்பெண்டிராய்த் தமையன் வீட்டிலே தங்கி வாழ்ந்துவந்தனர். நம் புலவருடன் பிறந்தவர்கள் ஆடவர் மூவர், பெண்கள் மூவர். ஆடவருள் மூத்தவர் நம் புலவரே. இவர்களையெல்லாம் அன்புடன் வளர்த்து வந்தவர் இவர் அத்தையாகிய சேசியம்மாள். இது நம் புலவர் பாடிய 'பழையது விடுதூது' என்னும் பாடல் நூலில்,

> 'ஒத்த அன்பில் பல்கதைகள் ஓதிஉவந் தேசேசி
> அத்தை இனிதூட்டும் அன்னமே'

என்னும் அடிகளால் விளங்கும்.

## இளமையும் கல்வியும் :

இவர் இளமையிலேயே சிறிது வடமொழி கற்றுக்கொண்டதோடு மறையும் ஓதிவந்தார். இவர் பதின்மூன்று அகவை வரை பின்னத்தூரில் பள்ளிக்கூடம் வைத்திருந்த கிருட்டிணாபுரம் முத்துராம பாரதியாரிடம் தமிழ் கற்றுவந்தார். இவர் மன்னார்குடிக்குச் சென்றிருந்த காலத்தில், ஆங்குள்ள ஆங்கிலப் பள்ளித் தமிழ்ப் பண்டிதர் நாராயணசாமிப் பிள்ளை அவர்கள்



கம்ப இராமாயணத்திற் சில செய்யுட்களுக்குப் பொருள் விரித் துரைத்துக்கொண்டிருந்தனர். அதைக்கேட்ட நம் இளம்புலவர் கம்ப இராமாயணம் கற்க ஆவல் மிகுந்தார். சுந்தரகாண்டமே முதலில் வாங்கிப் படித்தார். *பாட்டுக்களை நெட்டுருப்பண்ணும் ஆற்றல் இவர்க்கு இயல்பாகவே அமைந்திருந்தமையால், இவர் எதைப் படித்தபோதிலும் நெட்டுருப் பண்ணிக் கொண்டே வந்தார். இவர் தமிழ் படிக்கவேண்டும் என்னும் அவாவினால் ஏடது

கைவிடேல் என்பதற்கேற்ப எப்போதும் புத்தகமும் கையுமாகவே இருப்பார். இச்செயல், அத்தையார் சேசி அம்மாளுக்கு மாத்திரம் அருவருப்பாயிருந்தது. இவர் தமிழ் படிப்பதில் காலம் போக்குவதை அவர் அடிக்கடி கடிந்து வந்தார்; ஆகவே அத்தையார் அறியாதிருக்க, இவர் வயல் வரம்புகளிலும் கருவேல மரத்தின் கீழிருந்து கல்வி கற்பவ ராயினர். தம் மருமகன் கல்வியிற் காலம்போக்குவது குடும்ப காரியத்திற்கு இடையூறாகும் என்று கருதினர்போலும்.

காவியப் பயிற்சியும் கவிவன்மையும் :

ஆசிரியர் உதவியின்றித் தமிழ்நூல்களைத் தாமே கற்றுத் தேர்ச்சிபெற்ற இவர் கவிபாடும் ஆற்றலும் பெற்றிருந்தார். 'ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும், காற்கூ றல்லது பற்றல ளாகும்' என்று பாயிரம் கூறுமாயின், ஆசானின்றியே கற்ற ஐயரிடத்தில் ஐயங்கள் முற்றும் இல்லாமல் இரா. ஐயந் தீரப் பொருளை உணர்த்தும் ஆசிரியர் ஒருவரை அவாவினின்றார். இக்குறை தீருங்காலம் வாய்த்தது. திருமறைக் காட்டில் பொன் னம்பலப்

பிள்ளை என்னும் புலவர் தலைமணி வீற்றிருந்தனர். இவர் யாழ்ப்பாணம் நல்லூர், ஆறுமுகநாவலர் அவர்கள் மருகரும் மாணவரும் ஆவர். இளம்பூரணம் நச்சினார்க்கினியம் முதலிய உரைகளோடு தொல்காப்பியம் முதலிய இலக்கணங் களையும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், கந்தபுராணம், இராமா யணம் முதலிய இலக்கியங்களையும் பலமுறை ஆராய்ந்துகற்றவர்.

---

* இந்நெட்டுருப் பண்ணும் திறம் இவரிடத்துச் சிறப்பானது என்று மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதையர் அவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்க ஆண்டு விழாப் பேரவையில் குறிப்பிக்க முன்வந்ததுடன் பத்துப்பாட்டு முதலியவற்றின் படிகள் கிடையாதுபோயினும் அவற்றின் அடி பிறழாது ஒப்பிக்கும் திறன்சான்றவர் என்றும் புகழ்ந்துள்ளார்.



அவைகளைப் பல மாணவர்க்கும் கற்பித்தவர். பரிமேலழகர் உரையை ஒருபோதும் மறவாதவர். பாரதத்தில் ஆதி பருவத் திற்கும், மயூரகிரிப்

புராணத்திற்கும் உரைசெய்தவர். இராமாயணப் பொருள் உணர்ச்சியில் இணையில்லாதவர். இனிய மிடற்றிசை ஏய்ந்தவர். பிழையறப் பொருள்கூறிச் சொற்பொழிவு செய்யும் பேராற்றல் வாய்ந்தவர். இன்ன புலவர் உறைவிடம் அடைந்து அவர்தம் நட்புக்கொண்டு, தமக்கேற்பட்டிருந்த ஐயங்களையும் தீர்த்துக்கொண்டனர். அவரிடமே தமிழ்ப் பெருங் காப்பியங்கள் ஐந்தனுள் முதலதாகிய சிலப்பதிகாரத் தையும் பாடங் கேட்டனர். அவர் முன்னிலையில் 'நீலகண்டேச் சுரக் கோவை' பாடி அரங்கேற்றினர். அப்புலவர் விரும்பிய படியே, காளிதாசர் இயற்றிய பிரகசன என்னும் நாடகத்தையும் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்தார்.

## நூல் இயற்றலும் ஆராய்ச்சியும் :

நம் ஐயர் அவர்கள், தமிழ்நாட்டின் பழ வரலாறுகளை ஆராய்வதில் மிக்க விருப்பமுள்ளவர். கோயில்களி லும்,

அவைபோன்ற வேறு இடங்களிலும் வெட்டியுள்ள பழங் கல்வெட்டுக்களைப் படித்தறியும் திறம்பெற்றவர். தமிழ்ப் புலவர் களின் வரலாறும் நன்கு உணர்ந்தவர். புலவர்கள் பல்வேறு சமயங்களிற் பாடிய நற்கவிகளை எல்லாம் மன அறையில் அமைத்து, வேண்டும்போது எடுத்துரைக்கும் வன்மை வாய்ந்த வர். தொல்காப்பியப் பொருளதிகாரப் பயிற்சிச் சிறப்பு விளங்க அதில் எடுத்துக்காட்டிய மேற்கோள்களுக்கு எல்லாம் ஓர் அகராதியும் எழுதிவைத்துள்ளார். இவர் இயற்றிய தமிழ் நூல்களும் உரை நூல்களும் பல. அவற்றுள்; அச்சேறியவை; மாணிக்கராற்றுப் படை 1. இயல்மொழி வாழ்த்து 2. தென் தில்லை (தில்லைவிளாகம்) உலா 3. தென்தில்லைக் கலம்பகம் 4. களப்பாழ்ப் புராணம் 5. இராமாயண அகவல் 6. அச்சா காதவை; இறையனார் ஆற்றுப்படை, பிரகசன நாடகம், இடும் பாவன புராணம், நீலகண்டேச்சுரக் கோவை, சிவகீதை, சிவ புராணம், நரிவிருத்தம், பழையது விடுதூது, மருதப் பாட்டு, தமிழ் நாயகமாலை, செருப்பு விடுதூது, அரதைக்

கோவை, வீர காவியம் என்பன. இறுதி இருநூல்களும் முற்றுப்பெறுதவை.



நற்றிணை வெளியீடும் புலவர் நாள் இறுதியும்:

இவர் சங்க நூலாகிய எட்டுத் தொகையுள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்பவைகளை உரையுடன் வெளிப்படுத்த வேண்டுமென்று பெரு முயற்சி செய்து நற்றிணைக்கு உரை எழுதி முடித்தனர். இவர் 1899-ஜுலை 28 முதல் தம் வாழ் நாளளவும் கும்பகோணம் நகர உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக வேலைபார்த்து வந்தவர். நீரிழிவு நோயால் மெலிந்து தளர்ந்தவர். அகநானூற்றுள்ளும் பல பாட்டுக் களுக்கு உரை எழுதியுள்ளார். நற்றிணையையாவது உரையுடன் அச்சிட்டுக் காண அவாவினர். இவர் இறக்குமுன் நற்றிணை உரை முழுதும் அச்சாகிவிட்டதேனும், பாடினோர் வரலாறும் பாடப்பட்டவர் வரலாறுமே பின்னர்

அச்சிடப் பெறுவவாயின. இவருக்கு இரண்டு பெண்மக்கள் உளர். தம்மை வருத்திய நீரிழிவு நோய் நீங்காது, ஆனந்த ஆண்டு ஆடித்திங்கள் 15-ம் நாள் வியாழக்கிழமை (30-7-1914) பின்னத்தூரில் தம் உரிய மனையில் நிலஉலக வாழ்வை நீத்துச் சிவன் இணையடி நீழல் அடைந்தனர்.

---

## உரையாசிரியர் முகவுரை

நற்றிணை நானூறென்னும் இந்நூல் மதுரைமாநகரில் முன் ஞளில் நிலையிட்ட தமிழ்ச்சங்கத்திருந்த புலவர் பலராலும் பாடப் பெற்ற எட்டுத்தொகையுள் ஒன்று.

பலபல காலத்திற் பற்பல புலவர்களாற் பாடப்பெற்ற அகவற் பாக்களும் பரிபாடலும்

கலிப்பாக்களுமாக அகத்திணை, புறத்திணை இரண்டனையுந் தழுவிச் சுமார் இரண்டாயிரத்தைஞ்ஞூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் முன்னிருந்தன.

அவற்றை, அக்காலத்துள்ள அரசர்கள் கட்டளைப்படி, புலவர் பலர் அகத்திணைக்குரிய செய்யுட்களில் நாலடி முதல் எட்டடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களைத் தொகுத்துக் குறுந்தொகை எனவும், ஒன்பதடி முதல் பன்னிரண்டடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களைத் தொகுத்து நற்றிணை எனவும், பதின்மூன்றடி முதல் முப்பத்தேழடி வரையிலுள்ள நானூறு அகவற்பாக்களைத் தொகுத்து நெடுந்தொகை எனவும், (இதுவே அகநானூறென்பது.) தனித்தனி ஐந்து புலவர்களாற் செய்யப் பெற்ற ஐஞ்ஞூறு அகவற்பாக்களைத் தொகுத்து ஐங்குறுநூறு

எனவும், பரிபாடலுறுப்பாற் செய்யப்பெற்ற எழுபது பாடல்களைத் தொகுத்துப் பரிபாடல் எனவும், கலிப்பாவாற் செய்யப் பெற்ற நூற்றைம்பது பாடல்களைத் தொகுத்துக் கலித்தொகை எனவும், புறத்திணைக்குரிய நானூறு அகவற்பாக்களைத் தொகுத்துப் புறநானூறு எனவும், தனித்தனி பத்துப்புலவர்களாற் செய்யப்பெற்ற நூறு அகவற்பாக்களைத் தொகுத்துப் பதிற்றுப் பத்து எனவும் பெயரிட்டுத் தொகைநூல் எட்டாக்கினார்கள்.

அவ் வெட்டுத்தொகையுள் முதலாவதாக *அமையப்பெற்ற இந் நற்றிணையைச் சோதித்து அச்சிடவேண்டுமென்னும்

---

* நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறு நூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.

விருப்புற்றிருக்கையில், என் நண்பரும், மன்னார்குடி மிசன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் நாராயணசாமிப்பிள்ளை அவர் களின் குமாரரும், போலீசில் உத்தியோகம் வகித்திருப்பவரு மாகிய ஸ்ரீமத் நா. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் யான்
பொருளுக்கு முட்டுப்பாடுறாது வேண்டிய அளவு உதவி, ஏடுகள் தருவித்துச் சோதிக்கும்படி செய்தார்கள். அதன்பின் ஸ்ரீசுவாமி வேதாசலம் அவர்களுடைய முயற்சியைக்கொண்டு சென்னை இராசாங்கக் கையெழுத்துப்
புத்தகசாலையிலுள்ள பிரதியைக் காப்பிசெய்து தருவித்து ஒருவாறு திருத்தி வருகையில் மஹாமஹோபாத்தியாயர் பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் இரண்டு படிகள் அனுப்பினார்கள். அவற்றோடு ஒப்புநோக்கிய பின் மதுரைத் தமிழ்ச்சங்கஞ் சென்று அங்குள்ள படிகளோடு
ஒப்புநோக்கினேன். பின்பு சென்னையிலிருக்கும் ஸ்ரீமான் தி. த. கனகசுந்தரம் பிள்ளை அவர்கள் தம்மிடத்திலிருந்த படிகள் இரண்டனையுங் கொடுத்துதவினார்கள். அவற்றினையும் பெற்று ஒருவாறு திருத்தி எனது அறிவிற்கெட்டியவாறு ஓர் உரையை எழுதி

அச்சிடத்தொடங்கிய காலையில், வி. கோபால சுவாமி இரகுநாத ராஜாளியாரவர்கள், (அரித்துவாரமங்கலம்.) கெ. சுந்தரராம ஐயர் அவர்கள், டி. எ. பாலகிருஷ்ண உடையா ரவர்கள், ராவ்பகதூர் கே. கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், (கும்பகோணம்.) க. ப. சிதம்பரதேவரவர்கள், (தோலி.) சி. வ்யி. அருணசலம் செட்டியார் அவர்கள், (முத்துப்பேட்டை.) சிதம்பர சபாபதிப்பிள்ளை அவர்கள், (மண்ணுக்குமுண்டான்.) ஐ. சின்ன சாமிப்பிள்ளை அவர்கள், (பாலைக்காடு.) முதலிய தமிழபிமான சீலர்களின் பேருதவியால் ஒருவாறு அச்சிட்டு முடித்தனன். எனக்குக் கிடைத்த எல்லாப் படிகளுள்ளும் உ௩௪-வது பாடலும், ௩அ௫-வது பாடலிற் பிற்பகுதியும் காணப்படவில்லை. அவற்றையுந் தேடிச்சேர்த்த பின்னரே வெளியிடவேண்டுமென் றிருந்த யான் காலதாமதப்படுவதைக் கருதி அவைகள் கிடைப் பின் மறுபதிப்பிற் சேர்த்துவிடலாமென்னு மெண்ணத்தோடு இதனை வெளியிடலானேன்.

அ. நாராயணசாமி ஐயன்.

# * பின்னிணைப்பு

## உ௱ச.......................

**பாலை :**

*தலைமகன் பொருள்வயிற் பிரிவுணர்த்த, தோழி வருங்கால இடையீட்டால் வரைவு நீட்டிக்குமாயின் அலர் பெரிதாகும என்பது.*

*எ - து. தலைவன் கேட்டு வரைந்துகொள்ள வேண்டுமென்ற கருத்தால் அலராகின்றது எவன் கொல் எனத் தோழி தலைமகட்குச் சொல்லுவாள்போற் கூறினாள். தலைமகன் வரைவு மறுக்கப்பட்டான் என்பதனை உணர்ந்த தலைமகள் ஆற்றாளாமாகத் தோழி யாய்க்கு அறத்தொடு நிற்ப, செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும். நற்றாய் சொல்லக் கேட்டுக் கொடாதுவிடின் இக்குலத்துக்கு வடுஉண்டுபோலும் என உணர்வாராவது. அதனால் பொருள் அறத்தொடு நிலை மாட்சிப்படுவது.*

சான்றோர் வருந்திய வருத்தமும் நுமது
வான்தோய்வு அன்ன குடிமையும்
நோக்கித்
திருமணி வரன்றும் குன்றம்
கொண்டிவள்
வருமுலை ஆகம் வழங்கினோம் நன்றே
௫. அஃதான்று,
அடைபொருள் கருதுவிர் ஆயின்

குடையோடு

கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
†பங்குனி விழவின் உறந்தையோடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே.

**உரை :**—சால்பமைந்தோர் வருந்திய வருத்தமும், நம் வானைப் பொருந்திஞற் போன்றுயர்ந்த குடிச்சிறப்பும் கருதி, சிறந்த மாணிக்கங்களை வாரிவரும் நீர்வளம் பொருந்திய இக்குன்றிடம், முளைத்தெழும் கொங்கையுடைய எம் இளந்தலைவியை நும்மிடம் அமர்ந்திருக்க இடஞ் செய்தனம். அதுவும் நல்லதே. அஃது அங்ஙனமாக, நீவிர் அடையத் தக்க பொருளை ஈட்டு முயற்சியை மேற்கொண்டு பிரிவீராயின், இடையீட்டான் வரைவுகாலம் நீட்டிக்குமே. நீட்டிப்பின் எம்மிடம் எங்கும் தலைவியின் ஒழுக்கம்பற்றிப் பலரும் பேசும் அலர்மொழி பெருகுவதாமே.

கழுமலப்போரில் வெற்றிபெற்ற நல்ல தேர்ப்படை முதலிய நாற்படையும் அமைந்த சோழன் தலைநகராகிய உறையூரில், பங்குனித்திங்களில் உத்திரநாளில் நடைபெறும் விழா முழக்கமும், சேரன் தலைநகராகிய வஞ்சியென்ற கருவூரில் கொங்கு நாட்டினர் மணியினை இடையில் கட்டிக்கொண்டு தெருவில் ஆடும் உள்ளி விழவின் ஆரவாரமும் சிறிய என்னும்படி விளங்குமே. (ஆதலின் விரைந்து வரைக) எ - று.

உறந்தை - உறையூர். வஞ்சி - கருவூர். வான் - விண். தோய் - படி, பொருந்து. குடிமை - குடியொழுக்கம். கழுமலம் - ஊர். ஆகம் - மார்பு. வரன்று - வாரி. உறந்தையில் நடப்பது உத்திரவிழா ; வஞ்சியில் நடப்பது உள்ளிவிழா. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுடன்படுத்தல்.

---

* முதற்பதிப்பில் காணமுடியாத உ௲௬-ம்பாடல் [இறையனர் அகப்பொருள் உ௮-ம் சூத்திர உரையில் மேற்கோளாகக் காட்டப்படுவது.]
(பாடம்) † பங்குனி விழவின் வஞ்சியோ
டுள்ளி விழவின் உறந்தையும் சிறிதே—

உ

கடவுள் துணை

# பாடினோர் வரலாறு



## க. அகம்பல்மால் ஆதனர்

இவர் ஆதன் என்னும் இயற்பெயருடையவர். அகம்பல் ஓரூர்; மதுரைச் சில்லா, பெரியகுளம் தாலூகாவில் அகமலையென்று ஒரூருளது; அகம்பலென்பதே இங்ஙனந் திரிந்து வழங்குகிறதென்று ஊகிக்கப்படுகின்றது. அகம்பல்மால்-அகம்பலென்னும் ஊர்க்குத் தலைவனென்பதாம். இவர் முல்லைத்திணையை அலங்கரித்துப் பாடியுள்ளார். இவர் பாடலிற் கிளவித்தலைவன் வினைவலபாங்கனுகை வைத்தமை ஆராயத்தக்கது. இவர் பாடியது நற்றிணை, செய்யுள், அக.

## உ. அஞ்சில் அஞ்சியார்

இவர் இயற்பெயர் அஞ்சி. அஞ்சிலென்னும் ஊரினராதலின், அஞ்சில் அஞ்சியாரெனப்பட்டார். இஃது ஊர்பற்றி வந்தபெயர். இவர் மருதத்திணையைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். கூ0.

## ௩. அஞ்சில் ஆந்தையார்

இவர் முற்கூறிய அஞ்சில் என்னுமூரிலுள்ள ஆதன் தந்தையார். தொல். எழுத்து. ௩௪௮-ம் சூத்திர விதிப்படி ஆதன் தந்தை ஆந்தை யெனப்படுவதறிக. இவர் குறிஞ்சி நெய்தல் வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் உ௩௩-ஆம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௪. அம்மள்ளனர்

மள்ளனாரெனப்பலபேர் உளராதலால் அவர்களி னின்றும் வேறு படுத்த இவர் அம்மள்ளனாரெனப் பட்டார்போலும். இவர் குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். இவர் பாடலில் முருகவேளும் வள்ளியம்மையும் உவமிக்கப்பட்டுள்ளனர்; தலைமகன் தலைமகளையழைத்தல் மிக்க இனிமையுடையது. இவர் பாடியது நற். அஉ-ம் செய்யுள்.

## ரு. அம்மூவனார்

மூவன் என்னும் இவர் இயற்பெயர் அடைமொழி புணர்த்தி அம்மூவனாரெனப் பட்டதென்று ஊகிக்கலாம்; ஆயினும் இவர் பாடலில் மேலைக் கடற்கரையின்கணுள்ள தொண்டி, மாந்தை முதலாய சேரநாட்டு ஊர்கள் சிறப்பித்துப் பாடியிருப்பதுபற்றி இவர் சேரநாட்டு மேலைக் கடற்கரையில் இருந்தவரென்று கருதற்கிடமிருத்தலாலும் இக்காலத்தும் அந்நாட்டில் அம்மு, திம்மு, திப்பு என்னும் பெயர்கள் மக்களுக்கிடப்பட்டு வழங்கி

ந நா.—உ

வருதலாலும் இவரது இயற்பெயர் அம்மூவென்று மிருக்கலாம். இவர் பாடியவற்றுள் அகம். ௩௫-ஆஞ் செய்யுளொன்றுமே பாலைத்திணையாகவும் ஏனையவெல்லாம் நெய்தற்றிணையாகவுங் காணக்கிடத்தலின் இவர் நெய்தல் நிலவளத்தைச் சிறப்பித்துப் பாடுதலில் வல்லவராவர். இந்நூல் ௪௬-ஆஞ் செய்யுளைப் பாலைத்திணையிற் பாடத்தொடங்கியவர் களவித் தலைவியை நெய்தனிலத்தினளாக வமைத்தத்னால் இவரது ஆற்றல் பெரிதும் விளங்கும். நற்றிணையில் இவர் கூறிய உள்ளுறைகள் படிப்போர் மனத்தைக் கவர்ந்துகொள்ளுந் தன்மையவாயுள. பாண்டிநாட்டுக் கொற்கைநகரும், நடுநாட்டின் கண்ணதாகிய திருக்கோவலூரும், பெண்ணையாறும், சோழ நாட்டுக் கோயில்வெண்ணியும் இவராற் பாடப்பெற்றுள்ளன. தலைமகன் காமவேட்கையால் உப்புவிற்பாளைத்தடுத்துக்கூறல் வியக்கத்தக்கது; அகப். ௩௯௦. தலைமகளைப் பெறவேண்டிய தலைமகன் ஆங்கு அடிமைத்தொழில் செய்தேனும் பெறுவேமோவென்பதும் அத்தன்மையதாகும்; அகம். ௨௮0. கீழைக்கடற்கரையைச் சிறப்பித்துப்பாடும் உலோச்சனாரும் மேலைக்கடற் கரையைச் சிறப்பித்துப்பாடும் இவருமாகிய இவ்விருவரும் தமிழ்நாட்டிற்கு இருபாலும் விளங்கும் இரண்டு வளரிள ஞாயிறெனவும் இரண்டு கனக வெனவும் இரண்டு இரத்தினங்களெனவுங் கூறத்தக்கவராவார். இவரியற்றினவாக நற்றிணையில் பத்துப் (௪, ௩௫, ௭௬, ௧௩௮, ௨௭௫, ௩0௭, ௩௨௭, ௩௪௭, ௩௬௭, ௩௯௭.) பாடல்களும், குறுந்தொகையில் பதினொன்றும் ஐங்குறுநூற்றில் நெய்தற்பாட்டு நூறும், அகநானூற்றில் ஆறுமாக ௧௨௭ பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬. அம்மெய்யன் நாகனார்

நாகன் என்பது இவர் இயற்பெயர்; நாகன் என்னும் பெயருடையார் பலராதலால் அவரின் இவர் வேறு என்பது தெரிய இவர் இயற்பெயருக்கு முதலில் 'அம்மெய்யன்' என்னும் பெயர் புணர்த்தப்பட்டது. அம்மெய்ய னென்பது தந்தையின் பெயர்போலும். முற்காலத்திற் புலவரிற் பெரும்பாலார் தந்தையின் பெயரையும் தம்பெயரோடு சேர்த்து வைத்துக்கொள்ளுதல் மரபு; ஆதித்தன் மகன் கம்பரை "அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன், கம்பநாட் டாழ்வான் கவி" என்றாற் போல. மேல்வருவனவற்றுக்கும் இஃதொக்கும். இவர் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் காதலியை வருணித்திருப்பது வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். ௨௫௨-ம் செய்யுள்.

## ௭. அல்லங்கீரனார்

கீரன் என்னும் பெயருடையார் பலராதலால் அவரின் இவர் வேறென்பது தெரிய அல்லங் கீரனாரெனப்பட்டார். இஃது ஊர்பற்றி வந்த பெயர். அல்லம் - ஓரூர். மலையாளம் சில்லாவில் அல்லனமென ஒரூருளது. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். முகம்புகு கிளவி பாடவல்லவருள் இவருமொருவர். இவர் பாடியது நற். ௨௪௫-ம் செய்யுள்.

## ௮. அறிவுடைநம்பி

பாண்டியன் அறிவுடைநம்பி யென்பவர் இவரே. புதல்வரில்லார்க்கு இருமைப் பயனு மில்லையென இவர் புறம். ௧௮௮-ஆம் பாடலில் விளங்கக் கூறியுள்ளார். இவர் பிசிராந்தையாராற் பொருண்மொழிக்காஞ்சி பாடப் பெற்றவர்; புறம். ௧௮௪. தலைவியை அச்சுறுத்தித் தினைப்புனங் காவல்



ஓம்புமாறு தோழி கூற்றாக இவர் பாடியது நெறியுடையதாகக் காணப் படும்; அகம். ௨௮. இவர் நெய்தலையுங் குறிஞ்சியையும் புனைந்து பாடியுள் ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் பதினைந்தாம்பாடலொன்றும், குறுந்தொகையி லொன்றும், அகத்தி லொன்றும், புறத்தி லொன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௯. ஆலங்குடி வங்கனார்

இவர் ஆலங்குடியிலுள்ள வங்கனென்னும் இயற்பெயருடையவர். இவர் பாடியவற்றுட் புறத்திணை யொன்றொழிய ஏனையவெல்லாம் மருதத் திணையின வாதலின் மருத நிலத்துள்ள ஆலங்குடியினரெனக் கருதப்படு கின்றனர். மருதநிலத்தில் ஆலங்குடியென்று பலவூருளவாதலின் இவரூர் இன்னதெனத் துணியக்கூடவில்லை. இவர் பாடியனவெல்லாம் பெரும் பாலும் பரத்தையிற் பிரிவே; ஒவ்வொரு செய்யுளும் இனிமை தாராநிற் கும்; நற்றிணையின் ௩௩0, ௪00-ஆம் பாடல்களிலுள்ளுறையும், அகம். ௧0௬, பரத்தை கூறுங் கூற்றும் வியக்கத்தக்கன. இவர் பாடியனவாக நற் றிணையில் மூன்று (௨௩0, ௩௩0, ௪00) பாடல்களும், குறுந்தொகையில் இரண்டும், அகத்தி லொன்றும், புறத் தொன்றும், திருவள்ளுவ மாலையில் ஒன்றுமாக [1]எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧0. ஆலம்பேரி சாத்தனார்

இவர் மதுரையைச்சார்ந்த ஆருலவியநாட்டு ஆலம்பேரி யென்னும் ஊரிலுள்ள சாத்தனென்னும் இயற்பெயருடையவர்; ஏடெழுதுவோரின் பிழையால் வாலம்பேரி சாத்தனாரெனவுங் கூறப்படுவர். இவர் பாடலால் இவர் நெய்தனிலத்தும், பாலைநிலத்தும் நன்றாகப் பயின்றவரென்று தெரி கின்றது; நற். ௧௫௨. எல்லாத் துன்பமும் மடல் முதலாயின தந்தன வென்று தலைவனொந்துகூறுங் கூற்றும், நற். ௨௫௫-ல் ஆறுபார்த்துற்ற அச்சமும், நற். ௩0௩-ல் வேட்கைதாங்காது தலைமகள் இரவுறு துயரங் கூறுவதும் மிக்க சுவையுடையனவாகும்.

மற்றும் இவர் அகம். அக-ல் கடலனது விளங்கிலென்னும் ஊரையும், அகம். ௧௪௩-ல் வானவன் பிட்டன் குதிரைமலையையும், அகம். ௧௭௫-ல் நெடுஞ்செழியன் போர்வென்ற திருத்தலையானங் கானத்தையும், நெவிய னென்னும் கொடையாளி யொருவனையும் பாராட்டிக் கூறியிருத்தலானே அவர்கள் காலத்தவரென்று கொள்ளலாகும். இவர் பாடியனவாக நற் றிணையில் நான்கு (௧௫௨, ௨௫௫, ௩0௩, ௩௩அ) பாடல்களும், அகத்தில் நான்குமாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௧. ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்

சாதேவன் என்பது சகதேவன் என்னும் வடசொல்லின் திரிபு. காவிதி யென்பது பாண்டிநாட்டு வேளாளரில் உழுவித்துண்போர் அரசராற் பெறுவதொரு பட்டம். அகத்தில் இவர் பெயர் ஆவூர்க்கவுதமன் சாதேவன் என்று காணப்படுகிறது; புலவர் பெரும்பாலோர் தத்தம் ஊரைச் சிறப்பித்துக் கூறும் வழக்கின்படியே இவர் சேரநாட்டு ஆமூர் என்பதனைச் சிறப்பித்துக் கூறியிருத்தலின் 'ஆமூர்க்கௌதமன் சாதேவனார்' என்றிருக்கவேண்டிய இவர் பெயர் ஏடெழுதுவோரின் மிகையால் ஆவூர்க்காவிதிகள் சாதேவனாரென்றெழுதப்பட்டது போலும். அங்ஙனம்



ஆயின் இவர் சேரநாட்டு ஆமூரிலுள்ள கௌதம கோத்திரத்துப் பிறந்த சகதேவனென்னும் அந்தணராவர். ஆமூர் குறும்பொறையென்னும் மலையின் கீழ்பாலுள்ள பாலைநிலத்தின் கண்ணது. அதற்கேற்ப இவர் பாடல்கள் பாலைத் திணையை வருணிப்பனவாகும்; கொண்டு தலைக்கழிந்த தலைமகன் நீ அஞ்சாது கொண்டைமேற் காற்றடிக்கச் செல் என்றது சுவையுடையதாகும்; நற் - ௨௬௪. இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௬௪-ஆம் பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௨. இடைக்காடனார்

இவர் பெயராலேயே இவர் இடைக்காடு என்னும் ஊரினரென்று தெரிகிறது; இடைக்காடு - மலையாளம் ஜில்லாவிலுள்ளது. இவர் பாடல்களிலெல்லாம் இடையர்களைப் பலபடியாகச் சிறப்பித்திருத்தலின் இவரும் இடையர்தாமென்று ஊகிக்கப்படுகின்றது. இவர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியிருத்தலின் அவன் காலத்தினராவர்; புறம்-௪௨. முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பலபடியாகப் புனைந்து பாடியுள்ளார். ஆயர் மழையில் நனைந்தபடியே ஊன்றுகோல்மேற் கால்வைத்து நின்று ஆட்டை விளிப்பது சுவையுடையது; நற்-௧௪௨. அங்ஙனம் அழைப்பதுகண்டு அங்கு ஆட்டைக் கொண்டுபோகவந்து பதுங்கியிருந்த நரி அஞ்சியோடாநிற்கும் என்றது மனத்தைக் கவருந்தன்மையது; அகம். ௨௭௪. வம்பமாரியென்று தோழி தலைவியை ஏமாற்றியது வியக்கத்தக்கது; நற். ௩௧௬. இவர் முயற்கண்ணுக்கு நெல்லிக்காயை உவமித்துள்ளார்; அகம். ௨௮௪. நற்றிணை ௨௨௧-ஆம் பாட்டு ஒரு பிரதியில் இடைக்காடர் பாடியதெனவும் மற்றைப் பிரதிகளிலெல்லாம் இளவேட்டனார் பாடியதெனவு மெழுதியிருந்ததனால் இளவேட்டனார் பாடியதாக அச்சிடப்பட்டது; பின்னர் ஆராயுமிடத்து இளவேட்டனார் பாடியனவெல்லாம் பாலைத்திணைப் பாடலாயிருத்தலான் முல்லையை அவர் பாடிலரெனவும் இடைக்காடனாரே பாடியிருக்கவேண்டுமென்றுங் கருதலாயிற்று. அதனையுஞ்சேர்க்க இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (௧௪௨, ௨௨௧, ௩௧௬.) பாடல்களும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் ஐந்தும், புறத்திலொன்றும், திருவள்ளுவமாலையிலொன்றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௫. இளங்கீரனார்

எயினந்தைமகனார் இளங்கீரனாரென்பவரிவரே. வினைவயிற் பிரியுந் தலைமகன் இல்லத்தழுங்கலும் இடைச்சுரத் தழுங்கலுமாகிய துறைகளை அமைத்துப் பாலைத்திணையைப் பலபடியாகப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாலைத்திணையையும் அதிலுள்ள வேடரையும் பலவாறாகப் பாராட்டிக் கூறுதலாலும், இவர்பெயர் எயினந்தைமகனாரென்றிருத்தலாலும், இவரை அந்நிலத்துள்ள வேட்டுவர் மரபினரென்று கொள்ளலாம்; எயினர்-வேடர். சிறுவர் மரத்தினிழலிற் பாண்டிலாடுவது கூறுகின்றார்; நற். ௩. உதியஞ் சேரல் செய்த போர்ச் சிறப்புக் கூறுகின்றார்; நற். ௧௧௩. இதிற் காதலி நோக்கம் இடைச்சுரத்து வந்து தடுப்பதாகக் கூறுவது நயமுடையது. தலைமகன் பிரிகின்றானைத் தடுத்துக் காதலி மேல்வீழ்ந்து முயங்கிவருந்துவது யாவரும் மயங்குந்தன்மையதாகும்; நற். ௩௦௮. மகளிர் பிறை தொழுது ஏத்தும் வழக்கு இவராற் கூறப்பட்டுள்ளது; அகம். ௨௩௯. காதலன்



பிரிந்தவழிக் காதலி சுவரிலே கோடிட்டு நாளெண்ணும் வழக்குக் கூறப்பட்டுள்ளது; அகம். ௨௮௯. யாககுண்டத்தின்கீழ் யாமையைவைத்து மூடும் வழக்குக் கூறப்பட்டுள்ளது; அகம். ௩௬௧. இவர் பாடியனவாக நற்றிணையில் ஆறு (௩, ௬௨, ௧௧௩, ௨௬௯, ௩௦௮, ௩௪௬.) பாடல்களும் அகத்தில் எட்டுமாகப் பதினான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௪. இளநாகனார்

நாகன் என்னும் பெயருடையார் பலரிருத்தலின் அவரின் இவர் வேறென்பது தெரிய இளநாகனாரெனப்பட்டார். இவர் பாலையையும் நெய்தலையும் புனைந்து பாடியுள்ளார்; தலைவியைக் கருதித் தலைமகன் செலவு அழுங்கியது நயமிக்கதாகும்; நற். ௨௦௫. இவர் பாடியன நற்றிணையில் இரண்டு பாட்டு (௨௦௫, ௨௩௧.)

## ௧௫. இளந்திரையனார்

தொண்டைமான் இளந்திரைய னென்பவர் இவரே. இவர் கடியலூர் உருத்திரங் கண்ணனாரென்னும் அந்தணராற் பாடப்பட்ட பெரும்பாண் ஆற்றுப் படை கொண்டவர். "ஆழி யிழைப்பப் பகல்போ மிரவெல் லாந், தோழி துணையாத் துயர்தீரும்-வாழி, கறுமாலை தாராய் திரையவோ வென்னுஞ், சிறுமாலை சென்றடையும் போது" எனப் பொய்கையாராற் பாராட்டிப்பாடப் பெற்றவருமிவரே. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடி யுள்ளார்; காதலி காதலனைக் கடிந்துகூறுவது வியக்கத்தக்கது; நற். கூச. வம்பமாரியென்று தலைவியை ஏமாற்றுதல் சுவையுடையதாகும்; நற். கூகூ. இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (கூச, கூகூ, க0கூ.) பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசு. இளந்தேவனார்

மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனா ரென்பவர் இவரே; பண்டம் - பலசரக்கு. இவர் வணிகர் மரபினர்; பாலையையுங் குறிஞ்சியை யும் புனைந்துபாடியுள்ளார்; காதலி விருந்து புறந்தருதலை வியப்புறப் பாடி யிருக்கிறார்; நற். சக. தலைவன் இரவுக்குறி வருதலைக்கூறுவது பாராட் டற்பாலது; அகம். உகஅ. இவர் பாடியனவாக நற்றிணையில் சக-ஆம் பாடலொன்றும், அகத்தில் மூன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக் கின்றன.

## கஎ. இளம்புல்லூர்க் காவிதி

இவரியற்பெய ரெழுதப்படவில்லை; காவிதிப்பட்ட முடைமையால் பாண்டிநாட்டு உழுவித்துண்ணும் வேளாளரென்று கொள்ளத்தகும். இவர் முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; வாடைக் காற் றுனது யானை பெருமூச்செறிந்தாற் போன்றதென்று இவர் கூறிய உவமை வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். அகூ.

## கஅ. இளம்போதியார்

போதியார் என்றதனாலே இவர் புத்தசமயத்தினர் போலும். இவர் நெய்தற்றிணையைப் புனைந்து கூறியுள்ளார்; தலைவன் வரையாது களவின் வருதற்கு அஞ்சுகின்றுனென்று தோழி கூறுவதாக இவர் கூறியது வியக்கத்தக்கது; நற். எ௨. இவர் பாடியது இப்பாட லொன்றேயாம்.



## கசு. இளவெயினனுர்

எயினனென்னும் பெயர்க் காரணத்தால் இவர் வேட்டுவ மரபினர் என்று தெரிகின்றது. நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் கூறிய உள்ளுறை வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். உசுரு-ம் செய்யுள்.

## உ௦. இளவேட்டனுர்

இளவேட்டனுரென்று அடைமொழி கொடாது கூறப்படுதலின் இவர் மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனுரின் வேறுபோலும். இவர் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; கூதிர்ப்பருவத்து நதிகளில் நீர் குறைவதை வெகு அழகாகக் கூறியுள்ளார்; நற். கருஎ. நற். உஉக-ஆம் பாட்டு முல்லைத்திணை இவர் பாடியதாக ஏடுகளிற் காணப் பட்டமையின் இருந்தபடி அச்சிடப்பட்டது. இப்பொழுது அஃது இடைக்காடனுர் பாடலென்று தெரிகின்றது. அதனையொழித்தால் இவர் பாடியவை நற்றிணையில் இரண்டு பாட்டு. (௩௩, கருஎ.)

## உக. இனிசந்த நாகனுர்

இவர் இனிய குரலொடு பாடவல்ல ராதல்பற்றி இவ்வடைமொழி கொடுக்கப்பட்டார் போலும். சந்தம் - குரல். இனிய சந்தம் இனிசந்த மென விகாரப்பட்டு நின்றது. இவர் பாலையைப் புனைந்து பாடியுள்ளார்; இவர் பாடிய நற்றுய் மனைமருட்சி கேட்போர் யாரையும் மருளப்பண்ணும்; இவர் பாடியது நற். சுசு-ம் செய்யுள்.

## உஉ. உக்கிரப்பெருவழுதி

இவன் பாண்டிய அரசன், தனக்குப் பகைவனாகிய வேங்கைமார்பனை வென்று அவனுக்குரிய கானப்பேரெயில் (காளையார்கோயில்) என்னும் ஊரைக் கைப்பற்றினவனாதலிற், கானப்பேரெயில் கடந்த பாண்டியன் உக்கிரப்பெருவழுதி யென்றுங் கூறப்படுவான்; புறம். உக. மாவெண்கோ என்னுஞ் சேரமானுடனும், இராசசூய யாகஞ்செய்த பெருநற் கிள்ளி என்னுஞ் சோழனுடனும் நட்புடையவன்; புறம். கூகஎ. கடைச்சங்கத்தை யாதரித்தவன்; அச் சங்கப்புலவரோடு ஒப்பப்பாடும் ஆற்றலுடையவன்; ஔவையாராலும் ஆவூர் மூலங்கிழாராலும் புகழ்ந்து பாடப்பெற்றவன்; புறம். உக, கூகஎ. உப்பூரிகுடிகிழார் மகனாவார் உருத்திரசன்மரைக் கொண்டு அகநானூறு தொகுப்பித்தோன் இவனே. இவன் குறிஞ்சியையும் மருதத்தையும் புனைந்து பாடியுள்ளான். இவனது சபையிலே திருக்குறள் அரங்கேற்றினதாக ஒரு கதை வழங்குகிறது. பல்லியடிக்குஞ் சகுனத்தைப் பன்றி ஆராயுமென் றிவன் கூறியது வியப்புடையதாகும்; நற். கூஅ. ஆற்றாமை வாயிலாகப் புக்குக்கூடிய தலைமகன் நீக்கத்துத் தலைவி இரவு இவ்வாறு நிகழ்ந்ததென்று கூறியதாக இவன் கூறுவது யாவரையும் மகிழ்விக்கும்; அகம். உசு. இவன் பாடியனவாக மேற்காட்டிய இரண்டு பாடல்களும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## உரு. உரோடோகத்துக் கந்தரத்தனார்

இவர் கந்தரத்தன் என்னு மியற்பெயருடையவர். உரோடோகம் - ஊர். இவ்வூர்ப்பெயர் ஒரோடோகமெனவும், ஒரோடகமெனவும்,



உரோடகமெனவும் ஏடுகளிற் பலபடியாகப் பிறழ்ந்து காணப்படுகிறது. இப்பொழுது இவ்வூர் ஓரகடமென்று திரிந்து வழங்குகிறது; காஞ்சிபுரம் தாலூகாவிலுள்ளது. இவர் குறிஞ்சித்திணையையும் பாலைத்திணையையும் புனைந்து பாடியுள்ளார்; இவர் பாடியனவாக நற்றிணையில் கூ0சு-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் மூன்றுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## உசா. உலோச்சனார்

இவர் நெய்தல்நிலத்தை மிகச் சிறப்பாக அமைத்துப் பாடவல்லவர்; சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியைப் பாடியிருத்தலானே, அவன் காலத்தவரென்று தெரிகிறது; புறம் - ௩௭௭. நற்றிணை ௧௩௧-ம் பாட்டிலும் அகத்திலும் பெரியனென்னும் வள்ளலையும் அவனது பொறையாற்றையுஞ் சிறப்பித்துக் கூறியுள்ளார். நற். ௩௮-ல் கடற்கரையின் கணுளதாகிய 'காண்டவாயில்' என்னும் ஊர் இவராற் கூறப்பட்டுளது; அதனைக் காண்டவாயில் எம்அழுங்கலூர் என்று பாராட்டிக் கூறி யிருத்தலானே இவர் அவ்வூரிலிருந்தவர்போலுமென்று கருதவுமாம். கடலிலுள்ள பலவகை மீன்களையும் உவமை முதலாய வற்றோடு தெளிவாகக் கூறுதலால், இவர் பரதவர் மரபினர்போலும். மற்றும் நற். ௭௪-ல் மருதத்து நிகழவேண்டிய பரத்தையிற் பிரிவினையும், நற். ௧௪௯-ல் பாலையில் நிகழவேண்டிய உடன் போக்கினையும், ஏனைப் பாடல்களில் குறிஞ்சியில் நிகழ்தற்பாலவாகிய களவொழுக்கம் அனைத்தினையும் நெய்தலில் நிகழ்ந்தனவாகவே வைத்துப்பாடிய ஆற்றல் வியக்கத்தக்கதாகும். நற். ௨௭௮-ல் புன்னைக்காயில் நெய்யெடுக்கும் வழக்கையும் நற். ௩௩௧-லும் அகத்திலும் மகளிர் உப்புக்குவட்டின்மே லேறி மீன்பிடி படகுகளையெண்ணும் வழக்கையும் கூறியுள்ளார். இக்காலத்துத் திமிங்கிலத்தின் மீது எறியீட்டி வீசிப் பிடிக்கின்ற வழக்கம் பண்டைக்காலத்துமுளதென்று அகத்தில் இவர் பாடலா லறியப்படுகிறது. இவர் இத்துணைப்பாடலினும் பெரும்பாலும் களவொழுக்கத்தையே பாராட்டிப் பாடுதலால் களவியல் பாடுதலிற் சிறந்தவரென்று கொள்ளக்கிடக்கின்றது. நற். ௯௬-ம் பாட்டாகிய குறிஞ்சித்திணைச் செய்யுள் இவர் பாடியதாக எழுதியிருப்பது ஒருகால் எடெழுதினோர் தவறாயிருக்கலாம்; அஃது இவர் பாடியதன்று. மற்றும் தலைவன் பகற்குறி வந்து மீள்வானை இன்றிங்கிருந்து விருந்துண்டு செல்கவென்று கூறும் தோழி கூற்றில் அவனுக்கும் அவனுடைய குதிரைக்கும் ஆகாரமமைத்துக் கொடுக்குஞ் சிறப்பை நற். ௨௫௪-லினும் அகத்தினும் விரித்துக் கூறுகின்றார். ஏனை நிலத்தினும் நெய்தனிலமே எந்நாளும் வருவாய்மிக்குளதென்று இவர் கூறும் (நற். ௩௧௧) பாடல் கல்வி யறிவில்லாதாரையும் இனிது மகிழ்விக்கும். இரவுக்குறி நேர்கின்ற தோழி கூறுமுகத்தானே நெய்தனிலத்தூர் தமர் ஒருவரையொருவர் அறியாதபடி மக்கள் நெருக்கமிக்குடையதென்று நற். ௩௩௧-ல் சிறப்பிக்கிறார். கொல்லைப்படப்பைகள் கண்டல் மரங்களை வேலியாகவுடையனவென்று பல இடங்களிற் கூறுகிறார். இக்கண்டல் மரத்தின் கழி (கொம்பு) களே இக்காலத்தில் தோணிதள்ளுபவர்க்குப் பற்றுக்கோடாயுள்ளன; அவை கண்டற்கழி யென்றே வழங்கப்படுகின்றன. விரிப்பிற் பெருகுமாதலின் இம்மட்டோடு நிறுத்தலாயிற்று. இவர் பாடியனவாக நற்றிணையில் இருபது (௧௧, ௩௮, ௬௩, ௯௬, ௭௪, ௧௩௧, ௧௪௯, ௧௯௧, ௨௦௩, ௨௨௩, ௨௪௯, ௨௫௪, ௨௭௮, ௨௮௭, ௩௧௧, ௩௩௧, ௩௫௪, ௩௬௩, ௩௭௨, ௩௭௮)

பாடல்களும், குறுந்தொகையில் நாலும், அகத்தில் எட்டும், புறத்தில் மூன்றுமாக முப்பத்தைந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## உரு. உறையூர்க் கதுவாய்ச்சாத்தனார்

கதுவாய் - முரிந்தவாய். இவ்வடைமொழி எக்காரணம்பற்றிக் கொடுக்கப்பட்டதோ தெரியவில்லை. இவர் மருதத்திணையிற் பயிற்சியுடையவர். இவர் பாடலில் தலைவி ஊடியவழித் தலைவன் கூறுவது வியப்புடையதாகும். இவர் பாடியது நற். கூஎ0-ம் பாட்டு.

## எயினந்தை மகன் இளங்கீரனார்

முன்வந்த (கங) இளங்கீரனா ரென்பவர் இவரே.

## உசு. எயினந்தையார்

எயின் + தந்தை = எயினந்தை; எயினனைத் தந்தையாக வுடையவ ரென்பது; அன்றி இவர் பாடலில் 'எயின் மன்னன்போல' என்றிருந்த வால் இவ்வருந் தொடர்மொழிபற்றி இப்பெயர் கொடுக்கப்பட்டதோ தெரியவில்லை. இவர் முற்கூறிய (கங) இளங்கீரனாரின் தந்தையாராவர்; பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைவன் மகிழ்ச்சியும் தலைவி துயரமும் தோழி கூறுவதாக இவர் கூறியது ஆராயற்பாலது. இவர் பாடியது நற். சங-ம் பாட்டு.

## உஎ. ஐயூர் முடவனார்

முடவனாரென்பது வடிவுபற்றிய பெயர். இவர் முடவர்; இவரது இயற்பெயர் தெரியவில்லை. ஐயூர் - பாண்டிநாட்டகத்த தோரூர். இவர் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியின் ஆற்றலைச் சிறப்பித்து அரசவாகை பாடியவர்; புறம். ௫௧. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனா லாதரிக்கப்பட்டுவந்தவர்; இவர் நடக்க இயலாமையின் ஓர் ஊர்தி (வாகனம்) வேண்டித் தாமான் தோன்றிக் கோனிடஞ்சென்று பரிசில் வேண்ட அவன் இவருக்கு உணவளித்தலும் அதனை விரும்பாராய்த் தாம் வந்த செய்தி தெரிவிப்ப அவ்வண்ணமே யானையும் அதற்கு வேண்டுவ பிறவும் நல்கப்பெற்று மீண்டனர்; புறம். ௩௯௯. கிள்ளிவளவன் இறந்த தறிந்து பெரிதும் புலம்பி வருந்தினர்; புறம். ௨௨௮. அதியன் எழினி போரிற்பட்டதைப் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். ௨௧௬. இவர் நற். ௩௩௪-ல் கூறிய உள்ளுறை யாவரும் வியக்கத்தக்கது. இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்; முகம்புகுகிளவி பாடியவருள் இவருமொருவர். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௨௦௬, ௩௩௪) பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்திலொன்றும், புறத்தில் நாலுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௨௮. ஒருசிறைப் பெரியனார்

இவர் நாஞ்சில் வள்ளுவனைப் பாடிப் பரிசில் பெற்றவர்; புறம். ௧௩௭. முல்லையையுங் குறிஞ்சியையும் புனைந்துபாடியுள்ளார். தலைமகனைத் தேர்ப்பாகன் தேற்றுவதாக இவர் கூறியது இன்பந்தரற்பாலது. இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௨௧-ம் பாடல் ஒன்றும், குறுந்தொகையி லொன்றும் புறத்தி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.



## ௨௯. ஓரம்போகியார்

எடெழுதுவோர் பிழையால் இவர் பெயர் ஓரம்போதியாரெனவும், கரம் போகியாரெனவும், தரம் போகியாரெனவுங் காணப்படுகிறது.

மருதத்திணையை விரித்து அங்கிலத்துள்ள கருப்பொருள்களைத் திணைக்கேற்ற பொருள்களாகக்கொண்டு உள்ளுறையுவமம், இறைச்சி முதலாயவற்றை யமைத்துப் பலவகைச் சத்துவமும் புலப்படக்காட்டிப் பரத்தையிற் பிரிவு முதல் எல்லாவற்றையும் தெளிவாகக்கூறும் ஆற்றலுடையவர்; இவர் பாடியவற்றுட் புறமொன்றொழித்து ஏனைப் பாடலனைத்தும் மருதத் திணையே. இவராற் பாடப்பெற்றோர் ஆதன் அவினி, இருப்பையூர் விராஅன், பாண்டியன், சோழர், மத்தி முதலாயினோர். இத்தகைய மாதரே காதலர்பாற் புலத்தற்குரியரென்று தோழிகூற்றாக இவர் கூறியது அருமைவாய்ந்தது; அகம். ௩௧௬; இதிற் கூறிய உள்ளுறை பாராட்டற்பாலது. புணர்ச்சியின்பங் கூறித் தலைவியைப் புகழ்வது மகிழ்ச்சிதரற் பாலது; குறு. ௭0. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௨0, ௩௬0) பாடல்களும், குறுந்தொகையில் நான்கும் ஐங்குறுநூற்றில் முதல் ௧00-ம், அகத்தில் இரண்டும், புறத்தில் ஒன்றுமாக ௧0௯ பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

இவர் பாடிய "வெள்ளிவிழுத்தொடி" என்ற அகம். ௨௮௬-ம் பாடலை யெடுத்து உடன்பாடாக நக்கீரனார் குறிப்புரை (களவியல். ௧௮) கூறியதும், அதனை நச்சினார்க்கினியர் "பெரியோரொழுக்கம் பெரிதெனக் கிளந்து - பெறுதகையில்லாப் பிழைப்பினும்" (தொல். பொருள். ௧௫0.) என்றதன்கீழ் நக்கீரனார் கூற்றுக் கெதிர்மறையாகக் குறிப்புரை கூறியதும் ஆராயத்தக்கது.

## ௩0. ஔவையார்

இவர் சரிதம் பலவாறாகப் பலருங் கூறியிருக்கின்றதனால், அவற்றைப் பெரும்பாலும் விடுத்துச் சங்கநூலின் துறை கூறிய அளவுக்கு எழுதுகிறேன்.

இவர் பாணர் மரபினர், இளமையில் விறலியாராக ஆடல்பாடல் முதலியவற்றிலே தேர்ந்து விளங்கியவர்; புறம். ௮௯-ல் தம்மை விறலியென்று தாமே கூறுமாற்றானறிக. இவர் ஒருகாலத்துத் தகடூரில் அரசாண்ட 'அதிகமான் நெடுமான் அஞ்சி' என்பானிடம் பரிசில் பெறச்சென்று அவன் பரிசில் கொடாது நீட்டித்தவானே சினந்து மீள்வாராயினர்; புறம். ௨0௬. அதனையறிந்த அஞ்சி, அஞ்சிவந்து வேண்டிய பரிசில் உதவ அதனைப்பெற்று மகிழ்ந்தனர்; புறம். ௩௯0. இவர் அவனால் கொடுக்கப்பட்ட கருநெல்லிக் கனியையுண்டு நெடுங்காலஞ் சீவித்திருந்தனர்; புறம். ௯௧. குறள் ௧00-ம் பாட்டின் விசேடவுரையைப் பார்க்க. அஞ்சியொடு பெருஞ்சேரலிரும்பொறை போர்செய்ய வந்தபொழுது அப்பகை யரசனொடு அஞ்சியைப் பலபடியாகப் புகழ்ந்து கூறியுள்ளார்; புறம். ௮௭, ௮௮, ௮௯. அவ் அஞ்சி கோவலூரை வென்றபொழுது அவனைப் பலவாறாகப் புகழ்ந்து பாடினர்; புறம். ௯௯. அல்லாமலும் புறம். ௯0, ௯௨-ம் பாட்டுக்களில் அவனது வீரத்தன்மையை யெடுத்துச் சிறப்பித்துளார். அவனொடு பெருஞ்சேரலிரும்பொறை போர்செய்தகாலையும் அவன் பொருது புண்பட்டு நின்றகாலையும் இவர் பாடிய செய்யுட்கள் படிப்போர் மனத்தை யுருக்குந் தன்மையவாகும். இவ்வாறு அவனைப்



பாடியதன்றி அவன் மகன் பொருட்டெழினியையும் பலபடியாகப் புகழ்ந்து பாடியுள்ளார்; புறம். ௯௬, ௧0௨. அதிகமான் ஒருகால் இவரைத் தொண்டைமானிடத்துத் தூதாகவிடுப்பச் சென்றபொழுது தொண்டைமான் தன் படைக்கலச்சாலையைக் காட்டக்கண்டு அது தலைக்கீடாக அதிகனைப் புகழ்ந்துபாடினர்; புறம். ௯௫. பின்பு அஞ்சி இறந்ததுகண்டு ஆற்றாது புலம்பினர்; புறம். ௨௩௧, ௨௩௨, ௨௩௫. இவர் கள்ளுண்ணுதலையும் ஊன் உண்ணுதலையும் மிகப் பாராட்டிப்பாடியுள்ளார்; புறம். ௨௩௫, ௨௯0.

மற்றொரு காலத்துக் கொண்கானநாட் டதிபனும் ஏழில்மலைத் தலை வனுமாகிய நன்னன்பாற் சென்று சிறந்த பாடல்களைப் பாடிப் பொருள் கூறி மகிழ்விக்கவும் அவன் அவற்றைப் பாராட்டினானல்லனாக, அது கண்ட ஔவையார் முனிந்து "இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே, குருடேயு மன்றுநின் குற்றம் - மருடீர்ந்த, பாட்டு முரையும் பயிலா தனவிரண், டோட்டைச் செவியு முள" என்று பாடி வெறுத்து மீண் டனர்.

இவர் அகத்துறையில் ஐந்து நிலங்களையுஞ் சிறப்பித்துப் பாடும் ஆற்ற லுடையார். வெள்ளிவீதியார் தம் கணவனைத் தேடிச்சென்றதைப் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். கசஎ. மூவேந்தரும் கொடைவள்ள லாகிய பாரியின் பறம்புமலை (பிரான்மலை)யை முற்றியிருந்தபொழுது பாரி கிளிகளைவிடுத்துப் புறத்திருந்த நெற்கதிரைப்பெற்றுச் சீவித்திருந்த தைச் சுருக்கி விளங்கக் கூறியுள்ளார்; அகம். கஉ0௩. அவ்வரசர்கள் பாரியை வஞ்சித்துக் கொன்று அவனது மலை முதலியவற்றைக் கைக் கொள்ளவும் அதுகாறும் மணம்புரியாதிருந்த பாரிமகளி ரிருவரையும் அழைத்துச்சென்ற கபிலர் விச்சிக்கோ, இருங்கோவேள் ஆகிய இருவ ரிடத்துஞ் சென்று இம்மகளிரிருவரையும் மணம்புரிந்துகொள்கவென வேண்டினார். அவர்கள் மறுத்தனராக உடனே தம்மை யடுத்திருந்த அந்தணர்களின் பாதுகாவலில் அவர்களை வைத்துவிட்டுச் சேரநாடு சென் றனர். அப்பால் அங்குவந்த ஔவையார் பாரிமகளிர்கள் நிலையையறிந்து அவ்விருவரையும் உடனழைத்துச்சென்று திருக்கோவலூரை யடைந்து மலையமான் தெய்வீகனென்பானுக்கு மணம்புரிவித்து மீண்டருளினார். இவர் காமநோயை மரமாக உருவகஞ் செய்திருப்பது வியப்புடையது; அகம். உஎ௩. முகம்புகுகிளவி பாடியவருள் இவருமொருவர். இவராற் பாடப்பெற்றோர் அஞ்சி, அவன் மகன் பொகுட்டெழினி, பாரி, பாண்டி யன் உக்கிரப்பெருவழுதி, சேரமான் மாவெண்கோ, சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளிவளவன், தொண்டைமான், முடி யன், கொண்கானத்து நன்னன் என்பவர்கள். இவர் பாடியனவாக நற்றிணையில் ஏழு (கஉக, கஅஎ, உகு, ௩ஏக, ௩அக, ௩௪0, ௩௪ச) பாடல்களும், குறுந்தொகையில் பதினைந்தும், அகத்தில் நான்கும், புறத் தில் முப்பத்துமூன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக அறுபது பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௧. கச்சிப்பேட்டு இளந்தச்சனார்

தச்சனாரென்றதனால் இவர் கம்மாளரென்று தெரிகிறது. கச்சிப்பேடு - ஓரூர்; காஞ்சிபுரத்தைச் சார்ந்தது. இவர் முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் பாடியது நற். ௨௬௬-ம் பாட்டு.



## ௩௨. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்

இவர் முற்கூறிய இளந்தச்சனாரின் முதியோரென்பது தோன்றப் பெருந்தச்சனாரெனப்பட்டார். இவர் குறிஞ்சித்திணையைப் பாடும் வன்மையுடையார்; இளந்தச்சனார் முல்லையைப்பாடியுளர். மதியுடன் படுக்குந் தலைமகன் நீவிர் யாவிரென வினையதாக இவர் கூறியது சிறப்புடையதாகும்; நற். ௨௧௩. இவர் பாடிய பாட்டு இரண்டு; நற். ௧௪௪, ௨௧௩.

## ௩௩. கடுவன் இளமள்ளனார்

இவரே அகத்தில் மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன் இளமள்ளனாரெனவும் கடுவன் மள்ளனாரெனவுங் கூறப்படுபவர். இவர் இயற்பெயர் மள்ளன். கடுவன் இளவெயினனார் எனப் பரிபாடலில் ஒருவர் பெயர் காணப்படுதலால் கடுவன் என்பது ஓரூரின் பெயர்போலும். அக்காலத்துத் தமிழியற்படி கூத்தாடுந் தொழிலுடைமையாலே தமிழ்க் கூத்தன் எனவும், மதுரையில் வந்து தங்கியதனால் மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவனிளமள்ளனெனப்பட்டாரெனவுங் கொள்க. பாண்டியன் மாறன் வழுதியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; நற். ௧௫௦. இராமபிரான் தென் கடற்கரையகத்துக் கடலடைக்கவேண்டிச் சூழ்ச்சி செய்திருந்த கதையொன்றனை யமைத்துக் காட்டுகிறார்; அகம். ௭௦. முல்லை, குறிஞ்சி, மருதமுதலாய திணைகளைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௫௦-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் இரண்டுமாக நான்குபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௪. கணக்காயனார்

தமிழறிச்சுவடிக்குத் தமிழ்க்கணக்கென்றும், நெடுங்கணக்கென்றும் பெயருண்டு; ஆயம் - கூட்டம்; கூட்டமாகப் பிள்ளைகளைச் சேர்த்து வைத்துத் தமிழ்க்கணக்கைப் பயிற்றுவித்தலால் உவாத்தியாயர் கணக்காய ரெனப்பட்டார்; அங்ஙனமே இவரும் பிள்ளைகளுக்கு உவாத்தியாயராய் இருந்தமையிற் கணக்காயனா ரெனப்பட்டார்; குறுந்தொகை ௩0௪-ம் பாட்டின்கீழ்க் கணக்காயன் தத்தன் என்றெழுதியிருத்தலால் இவரது இயற் பெயர் தத்தனென்பதே. கூரைக் கணக்காயனென்று அகத்தில் காணப் படுகிறது; மதுரை யென்பதில் மகரம் செல்லரித்துவிட எஞ்சிய துரை என்பது பொருள்பயவாமையால் துரையைக் கூரையென்று திருத்தி யெழுதியிருக்கலாம்; இங்ஙனம் ஏடெழுதுவோரால் மதுரை யென்பது கூரையென்றாயிற்று. இவர் நக்கீரனார்க்குத் தந்தையாரென்னும் பதவி வாய்ந்தவர்; குறிஞ்சி நெய்தல் வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; வேங்கடமலையையும் பாண்டியரது கொற்கையின் முத்துக்களையும் புகழ்ந்து கூறியுளர்; அகம். ௨௭. பாண்டியரது பொதியில் மலையும், சேரமானது கொல்லி மலையும் சோழரது காவிரியும் இவராற் பாராட் டப்பட்டுள்ளன; அகம். ௩௩௮. எறியீட்டி வீசித் திமிங்கிலத்தைப் பிடிப் பது இவர் பாடலிற் கூறப்பட்டுள்ளது; குறு. ௩0௪. இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௩-ம் பாடலொன்றும், குறுந்தொகையி லொன்றும், அகத் தில் மூன்றும், புறத்தி லொன்றுமாக ஆறு பாடல்கள் கிடைத்திருக் கின்றன.

### ௩௫. கணி புன்குன்றனார்

நற்றிணை ஏடுகள் பலவற்றிலும் கணி புன்குன்றனாரென்றே யிருத்த லின் அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது; புறநானூற்றிற் கணியன் பூங்குன்

றன் என்றிருக்கின்றது. அது சிறப்பாகக் காணப்படுகிறது. பூங்குன்ற மென்னு மூரிலுள்ள கணியனென்று பொருள்படும். கணியன் சோதிடஞ் சொல்வோன். இவர் வாக்கு யாங்கும் பொதுநோக்காயுள்ளது. பாலையைப் பாடியுள்ளார். மாந்தரியல்பும் அரசரியல்பும் உலகத்தியல்பும் இத்தன்மையவென்று தலைவி கூற்றாகக் கூறியது ஆராயத்தக்கது; நற். உ௲சு. இவர் பாடியனவாக மேற்காட்டிய பாடலொன்றும் புறத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௬. கண்ணகனார்

இவர் இயற்பெயர் நாகன்; கண்ணனுடைய மகனாதலிற் கண்ணனாகனார் என்றும் சொல்லப்படுவர்; சில ஏடுகளிற் கண்ணகனாரென்று, பிழைபட எழுதியிருந்தமையால் இருந்தபடியே பதிப்பிக்கப்பட்டது. இவர் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் முதலானோர் காலத்தவர்; புறம். உஅ௯. பரிபாடல் உ௧-ஞ்செய்யுளுக்கு இசைவகுத்தவர் இவரே. பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். காதலன் பிரிதலைத் தவிர்க்குமாறு தலைவி ஆராய்வதாக இவர் கூறியது ஆராயத்தக்கது; நற். எ௯. இவர் பாடியனவாக மேற்காட்டிய பாடலொன்றும் புறத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௭. கண்ணகாரன் கொற்றனார்

இவரது இயற்பெயர் கொற்றனார். கண்ணகாரன் என்பது விளங்கவில்லை. இவர் பாலையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடிய மனை மருட்சி யாவரையும் மருட்டாநிற்கும்; இவர் பாடியது நற். ௧௪௩-ம் பாட்டு.

## ௩௮. கண்ணங் கொற்றனார்

இவர் இயற்பெயர் கொற்றனார். இது கண்ணனென்னுந் தந்தை பெயரொடு சேர்ந்து கண்ணங்கொற்றனாரென்றாயிற்று. இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்; தலைவன இரவுக்குறி வருகின்றதன் அருமையும், தலைவி அவன்பால் வைத்துள்ள அன்பும் தோழிகூற்றாக விளக்கக்கூறுகின்றார். இவர் பாடியது நற். ௧௫௬-ம் பாட்டு.

## ௩௯. கண்ணம் புல்லனார்

கருவூர்க் கண்ணம் புல்லனாரென்பவ ரிவரே. ஊர் கருவூர்; கண்ணன் தந்தைபெயர்; புல்லன் இயற்பெயர். நெய்தற்றிணையும் பாலைத்திணையும் பாடியுள்ளார். புணர்ந்துடன்போகக்கண்ட செவிலி சுரத்திடை மறவர் நிரைகொணர்ந்துய்ப்பதும் அங்கு அவர் முழங்கும் முழக்கமுங் கேட்டு என்பேதை யாங்ஙனம் வைகுமோவென்று புலம்புவதாக விரித்துக் கூறியுள்ளார்; அகம். ௬௩. இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௫௯-ம் பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௪௦. கதப்பிள்ளைச் சாத்தனார்

இவர் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனாரெனவும், கதப்பிள்ளையெனவும், கருவூர்க் கதப்பிள்ளை யெனவும் பலவாறாகக் கூறப்படுவார். இவர்



இயற்பெயர் சாத்தனாரென்பதே. சேரமான் சேனாபதி பிட்டங்கொற்றனைப் பரிசில்வேண்டிப் பாடியவர்; புறம். ௧௬௮. பாண்டியன் சேனாபதி நாஞ்சில் வள்ளுவனைப் பரிசில்வேண்டி இயன்மொழி பாடியவர்; புறம். ௩௮௦. பெரும்பாலும் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவர் மாலைக்காலத்தை அழகாகப் புனைந்து கூறியிருக்கிறார்; நற். ௩௪௩. தலைவனைப் பிரிந்ததனால் இவ்வூர்த் தோற்றம் இனிதாகக் காணப்படவில்லை யென்ற தலைவி கூற்று வியப்புடையது; நற். ௧௩௫. இவர் பாடியனவாக நற்றிணையில் மேற்காட்டிய இரண்டு பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் ஒன்றும், புறத்தில் இரண்டுமாக எட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கந்தரத்தனார்

இவர் உரோடோகத்துக் கந்தரத்தனாரின் வேறல்லர் என்று எண்ணப்படுகிறது. மேலே (உகூ) பார்க்க.

## சக. கபிலர்

இவர் பாண்டி நாட்டிலே திருவாதவூரில் (பழைய திருவிளையாடல். உஎ-ம் விளையாடல், செய்யுள், ச.) அந்தணர் மரபிலே பிறந்து (புறம், கஉசு, உ00, உ0க.) வளர்ந்து உரிய பருவத்திலே கல்வி கற்பிக்கப்பெற்றுத் தமிழில் ஒப்பாரு மிக்காரு மில்லாத பயிற்சி யுடையராய்க் கடைச்சங்கப் புலவரிலொருவராகிப் பாணர், இடைக்காடர், ஔவையார் முதலாயினோரிடத்துப் பெருகிய நட்புடையராய் விளங்குவாராயினர்.

முன்பொருகால் சேரமான் செல்வக்கடுங்கோ ஆழியாதனைப் பாடி அவனை மகிழ்வித்தனர்; புறம். அ. அவன் இவருடைய கையைப்பற்றி நும்முடைய கை மிக மெல்லியவா யிருக்கின்றனவெனவும் அவனை நோக்கி நீ போரில் பகைவரை வெல்ல அமைந்ததனால் நின் கைகள் வலியவாகும்; நின்னைப் பாடுபவர் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறு தொழில் செய்தறியாராதலால் அவர்களின் கைகளெல்லாம் மெல்லியவே யென்று பாடி யுவப்பித்தார்; புறம். கச. பின்பு கடையெழுவள்ளலிலொருவனாகிய வேள்பாரியை உயிர்த்தோழமைகொண்டு அவனது அவைக்களத்துப் புலவராக வீற்றிருந்தருளினர். அக்காலத்துப் பாரியைப் பாடிய பாடல்கள் கருதுவோருள்ளத்தை மகிழ்விக்குந் தன்மையன; புறம். க0டு முதல் பார்க்க. அங்ஙனமிருக்கு நாளில் இடையே திருக்கோவலூரை யடைந்து முள்ளூரின்கணுள்ள மலையமான் திருமுடிக்காரியைச் சிறப்பித்துப் பலபடியாகப் புகழ்ந்து பாடி, அவன் பரிசில் கொடுக்கப் பெற்று மீண்டனர்; புறம். கஉக முதல். பின்பொருகால் வையாவிக்கோப் பெரும்பேகனிடஞ் சென்று அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைப் பாடி மீண்டு பாரியிடத்திருந்தார்; புறம். கசங. இருக்கும்பொழுது பெரும்பாலும் பாரியினது பறம்பு மலையிற் பழகினவராதலாற் குறிஞ்சித்திணை பாடுதலிற் சிறந்தவராயினர். ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தனைத் தமிழின் சிறப்பு அறிவுறுத்தற்குப் பத்துப்பாட்டு ளொன்றாகிய குறிஞ்சிப்பாட்டுப் பாடியருளினர். அதனையறிந்த அவன் தமிழ் பயின்று சங்கத்தாரோடொப்பப் பாடுந் திறமையடைந்தனன். அவன் பாடியது குறு. கஅச-ம் செய்யுள். இவர் இன்னாநாற்பது என்னும் நீதிநூல் பாடிச் சங்கத்தில் வெளியிட்டருளினர். இது பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று.

இவரடுத்திருந்த வேள்பாரி கொடையாலெய்திய புகழ் இத்தமிழ் நாடெங்கும் பரவலானே அதனைக் கேள்வியுற்ற மூவேந்தரும் பொறாமை கொண்டு படையெடுத்து வந்து பாரியின் பறம்புமலையை முற்றுகை செய்தார்கள்: அதுகண்ட கபிலர் அவர்களிடஞ்சென்று பாரியின் புகழனைத்தையுங்கூறி அவ்வள்ளலுக்கு முந்நூறு கிராமங்களிருந்தன; அவற்றையெல்லம் பரிசிலர் பெற்றுக்கொண்டனர்; இப்பொழுது அவனது பறம்புமலை ஒன்றேயுளது; நீங்களும் பாடிச்சென்றால் அதனைப் பெறலாமென்று அஞ்சாது கூறினர்; புறம். ௧௧௦. அப்பால் அம் மூவரசரும் பாரியை வலிதினழைத்துப் போர்புரிந்து கொன்று அம்மலையையுங் கைப்பற்றிக் கொண்டார்கள்; புறம். ௧௧௨.. கைப்பற்றியவுடன் பாரியின் புதல்வியர் இருவரையும் இவர் அழைத்துக்கொண்டு பறம்பு மலையைநோக்கிப் பலவாறு புலம்பி (புறம். ௧௧௩ முதல் ௧௨௦ வரை.) அதனை விடுத்தகன்று விச்சிக்கோன் என்னுஞ் சிற்றரசனிடஞ் சென்று இப்பெண்களை மணஞ்செய்துகொள்ளென்றனர்; புறம். ௨௦௦. அவன் உடன்படாமை கண்டு புலிகடிமாலென்னும் இருங்கோவேளிடம் போய் இம்மகளிரை மணம் புரிந்துகொள்ளென்று கேட்ப (புறம். ௨௦௧) அவனும் மறுத்தானாக, அது கண்டு அவனை வெறுத்து (புறம். ௨௦௨.) மீண்டு அவர்களைப் பார்ப்பாரின் பாதுகாவலில் வைத்துப் பின்னர்ச் சேரலன் செல்வக் கடுங்கோ ஆழியாதன் பாரிபோன்ற நற்குணமுடையா னென்ப தறிந்து அவனிடஞ் சென்று பதிற்றுப்பத்து ஏழாம்பத்துப் பாடி, அவனைப் புகழ்ந்து கூறி அவன் அளவிறந்த பரிசில் கொடுக்கப்பெற்று மீண்டனர்; (பதிற்று. ஏழாம் பதிகம்.) மீண்டும் பாரியைப் பிரிந்ததனாலாய துன்பம் மிகுந்து தாமும் உயிர்விடத் துணிந்து அவனோடென்னை விதிகூட்டுவதாகவென்று (புறம். ௨௩௬.) கூறி வடக்குமுகமாக விருந்து இந்திரியங்களை ஒடுக்கி ஆகாராதி வேண்டாது உயிர்துறந்தருளினர்.

இவர் குறிஞ்சித்திணையில் வல்லவராதலின் அதற்குரிய கொல்லிமலை, பறம்புமலை, முள்ளூர்மலை, முள்ளூர்க்கானம் இவற்றையெல்லாம் பாராட்டிக் கூறி யுள்ளார். "வாய்மொழிக் கபிலன்" (அகம். ஈஅ) என்று நக்கீரராலும், "நல்லிசைக் கபிலன்" (பதிற்று. அரு.) என்று பெருங்குன்றூர் கிழாராலும், "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (புறம். ருந.) என்று பொருந்தில் இளங்கீரனாராலும், "புலனழுக்கற்ற வந்தணாளன்" (புறம். கஉசு.) "பொய்யா நாவிற் கபிலன்" (புறம். களச.) என்று மாறோக்கத்து நப்பசலையாராலும் சிறப்பித்துப் பாடப்பெற்றவர். மூவேந்தரால் முற்றிய பாரி கபிலரது சூழ்ச்சியால் கிளிகளை விடுத்துக் கதிர் கொணர்ந்து உண்டிருந்தமையை நக்கீரர் சிறப்பித்துக் கூறுகிற்பர்; அகம். எஅ. ஔவையாரும் அச்செயலைப் பெரிதும் பாராட்டாநிற்பர்; அகம். ருஙு.

இவர் மலைக்கு மாயோனை உவமைகூறினதன்றி "நாடாது நட்டலின்" என்ற குறளின் கருத்தை அமைத்துள்ளார்; நற். ருஉ. வேட்டுவன் பெறும் உணவுப்பொருளை விளக்குகின்றார்; நற். ருசு. சகுனச் சிறப்புக் கூறுகிற்பர்; நற். சுரு. புலவியுணர்த்தலின்பத்தைப் பெரிதும் பாராட்டிக் கூறுகின்றார்; நற். உகஎ. முருகவேளைக் கூறியுள்ளார்; நற். உஉரு. பாரியின் பறம்பு மலையைப் பாராட்டிக் கூறியிருக்கின்றார்; நற். உருரு. முள்ளூர் மன்னன் காரி குதிரைமேற் சென்று இரவில் நிரைகவர்ந்து வருவதைச் சிறப்பிக்கிறார்; நற். உசுக. கொல்லிமலையில் ஓரியைக் கொன்று அவனது நகரிற் காரி சென்றமையும் ஆங்குள்ளார் பெரும் பூசலிட்டமையுங் கூறுகிறார்;

நற், ௩௨0. குறமகள் பலவின்சுளையை மந்திக்கு விருந்தாகக் கொடுக்கு மலைநாடனென வருணிக்கிறார்; நற். ௩௫௩. யாவரும் வியக்கத்தக்க உள்ளுறையே கூறியுள்ளார்; நற். ௩௭௩. இவர் பாடிய கிள்ளைவிடுதூது மிக்க இனிமையுடையது; நற். ௩௭௬. தலைவியைச் சிறு கொம்பாகவும் அவள் கொண்ட காமத்தை அதனிடத்துத் தூங்கும் பெரும்பழமாகவுங் கூறுவர்; குறு. ௧௮. இயற்கைப் புணர்ச்சிக்கட் குருகிருந்தது சாட்சியாக வெனத் தலைமகள் கூற்றாகக் கூறுவர்; நற். ௨௫. இவர் குறு. ௩௮ம் செய்யுளிற்கூறிய உள்ளுறையைத் திருக்கோவையாரிலெடுத்தாண்டமை யறிக. (திருக்கோவை ௨௭௬.) ஓரியின் கொல்லிமலையிலுள்ள பாவையைச் சிறப்பித்துக் கூறுவர்; குறு. ௧00. இவர் மலையமான் திருமுடிக் காரியையும் (குறு. ௧௯௮, ௩௧௨.) நள்ளியையும் (அகம். ௨௩௮.) சிறப்பித்துக் கூறுநிற்பர். தலைமகன் மலையை நோக்கியவுடன் பசலை தீர்ந்ததெனத் தலைவி கூறியதாக இவர் பாடியது வியக்கத்தக்கது; குறு. ௨௪௯.

இவர் பாடியனவாக நற்றிணையில் பத்தொன்பது (௧௩, ௩௨, ௫௯, ௬௫, ௭௭, ௨௧௭, ௨௨௨, ௨௨௫, ௨௫௩, ௨௬௭, ௨௯௧, ௩0௯, ௩௨0, ௩௩௬, ௩௫௩, ௩௫௯, ௩௬௮, ௩௭௩, ௩௭௬.) பாடல்களும், குறுந்தொகையில் இருபத்தொன்பதும், ஐங்குறுநூற்றில் குறிஞ்சிப்பாட்டு நூறும், பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்துச்செய்யுள் பத்தும், அகத்தில் பதினாறும், புறத்தில் இருபத்தெட்டும், 'நெட்டிலையிருப்பை' என்ற தனிச்செய்யுளொன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக ௨0௪ செய்யுளும், இன்னா நாற்பதில் நாற்பது செய்யுளும், குறிஞ்சிப்பாட்டு (பத்துப்பாட்டில் ஒன்று) ஒன்றுமாக ௨௪௫ பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

கபிலர்செய்த வேறு பிரபந்தங்கள் சில பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

௪௨. [illegible]

இவர் பாலைத்திணையில் உடன்போக்கையும் அதனை யடுத்த செவிலி புலம்பல், நற்றாய் புலம்பல், மனைமருட்சி, கண்டோரிரக்கம் முதலாய புலம்பல்களையும் பலவாறாகச் சிறப்பித்துப் பாடவல்லவர்; அங்ஙனம் பாடிய பாடல்களனைத்தும் கேட்போரின் கன்மனத்தையும் கரைக்குந் தன்மையன. அகத்திலன்றிப் புறத்திலும் புலம்பற்றுறையாகிய முதுபாலையைப் பாடியுள்ளார். (புறம். ௨௫௪.) (முதுபாலை காவலனிறப்ப வனையோர் புலம்பல்) ஆகவே இவர் இருதிணையிலும் புலம்பல் பாடவல்லவராய் விளங்குகின்றார். அகம். ௧௪௫-ல் அன்னியும் திதியனும் பொருததனைக் கூறுதலால் அவ்விருவர் காலத்துக்கும் பிற்பட்டவராவார். கழங்குக் குறி பார்க்கும் நெறியை வெகு தெளிவாகக் கூறியவர் இவரே; அகம். ௧௯௫. அழிந்த பாலையை வளமுடையதாக்கிக் கூறும் இவரது ஆற்றல் மிகநன்று; அகம். ௨௫௯. உடன்போக்கின்கண் அறத்தொடு நின்று போக்கினை மறுத்து அஞ்சுவித்ததாகப்புதிய நெறி காட்டி யெழுதியவர் இவரே; நற். ௧௨. இதனைப் பெரிதும் பாராட்டி இந்நெறியே நக்கீரனாரும் உரைகூறிப் போயினாரென்றால், இவர் பாடலின் சிறப்பு இவ்வளவினதென் றளவிடற்பாலதோ? இறையனாரகப்பொருள் ௨௯-ம் சூத்திரவுரை. புண் + தாள் = புட்டாள் எனப் புதுவிதி வகுத்தவரில் இவருமொருவர்; நற். ௨௭௯. தலைமகன் தலைமகளாகிய இருவருடைய தாயர்களும் ஒருவரை யொருவர் கடிந்து கூறும் வழக்கு இந்நாள் போலப் பண்டுமுளதென்பது இவர் பாடலா லறியலாம்; நற். ௨௯௩. முன்னாளிற் காலாற் பந்துருட்டும்வழக்குள



தென்பது நற். ௩௨௪-ம் பாடலால் விளங்கும். இன்னும் நன்றாக ஆராயுங்கால் இவர் உலகவழக்கமுற்றும் தெளிவாக அறிந்தவரென்று தோன்றுகின்றது. இவர் பாடியனவாக நற்றிணையில் ஆறு (௧௨, ௧௯௮, ௨௭௯, ௨௯௩, ௩௦௫, ௩௨௪.) பாடல்களும் குறுந்தொகையில் நான்கும், அகத்தில் பன்னிரண்டும், புறத்தில் ஒன்றுமாக இருபத்துமூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௪௩. கருவூர்க் கோசனார்

இவர் பாலைத்திணையிற் பயின்றவர்; தமது பாடலில், சோம்பலாய்ச் செயலற்றிருப்பவர்க்குக் கீர்த்தியும் இன்பமும் கொடைத்தன்மையுமாகிய இவை யில்லையாகுமென்று தெளிவாகக் கூறியுள்ளார். இவர் பாடியது நற். உகச-ம் பாட்டு.

## சச. கழார்க் கீரனெயிற்றியார்

இவர் எயிற்றி யென்னும் இயற்பெயருடையார்; கீரன் என்பவரின் மனைவியார்; பெண்பாற் புலமையார்; சோழநாட்டு மாயூரத்தின் கீழ்பாலுள்ள கழார் என்னு மூரினர்; "வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொன்றும்" நற். உஅக. வேட்டுவ மரபினர்; இவர் கணவன் கீரனென்பவர் சோழர்க்குப் படைத்துணையாகச் சென்று போர்முகத்துப் பொருது வெற்றிதருந் தன்மையார்; "காய்சின வேந்தன் பாசறை நீடி, நந்நோய் அறியா அறனி லாளர்" அகம். உகச. ஆயினும் பிரிந்தாற் காமநோயாற் காதலி வருந்துவளென்பதுபற்றிப் பெரும்பாலும் காதலியை விட்டுப் பிரிபவரல்லர்; "கோடைத் திங்களும் பனிப்போள்" நற். கூகஉ. இங்ஙனம் பூவும் மணமும் போலப் பிரியா துறையுநாளில் ஒருகாற் போருக்குச் செல்லவேண்டினமையிற் கீரனார் போர் பெரிதாயிற்றே வாடைக் காலத்தும் வருதற்கியலாவாறு அங்கு வைகவேண்டியதாகுமே யென்று பலவாறு கவன்றார்; அவர் வருந்துவது கண்ட எயிற்றியார் யான் பொறுத்திருக்கிறேன் நீவிர் குறித்த பருவத்து வருவீராக வென்று காதலனைத் தேற்றி விடுத்து அவர் வருந்தியதைத் தொகுத்து வினைவயிற் செல்லுந் தலைமகன் நெஞ்சைநோக்கி வருந்தியதாகப் பாடிவைத்தனர்; நற். கூகஉ. பின்னர்ப் பெரும்போர் நடந்ததனாற் குறித்த பருவத்து வாராமல் கீரனார் பாசறையினின்றுவிடலும் எயிற்றியார் மழை பெய்கின்ற நடுயாமத்திற் குளிரின் கடுமைதாங்க இயலாது கண்ணுறக்கங் கொள்ளாது நம்மைக் கருதாத காதலர் அன்பிலரெனத் தோழியைநோக்கி வருந்துவாராயினார்; நற். உஅக. வருந்தும்போது கண்ணீர் வடிய அதனைக் "காதலர்ப் பிரிந்த கையறு மகளிர், நீர்வார் கண்ணிற் கருவிளை மலர" எனத் தாமே குறிப்பித்துளார்; அகம். உகச. அங்ஙனம் கண்ணீர் வடிதலும் எம்மை வாடைக்காலத்தும் பிரிந்தவரைக் கருதி அழுதலால் எமது கண்கள் வெட்கமுடையன வல்ல வென்று வெறுத்துக் கூறியும், (குறு. கூகு.) என்னெஞ்சு அவரைக் கருதிப் புண்பட்டதனால் அது வருந்தவேண்டுவதாயிருப்ப யாதொரு தொடர்புமில்லாத என் கண்கள் உறங்கிலவென்றும், (குறு. உகக.) மழை முதலாயின அவர் நாட்டிலில்லையோ? இருந்தால் வந்திருப்பரே யென்றும், (குறு. கூகூ0.) வாடையை நோக்கி நீயெனக்கே வந்தனையோ? இவ் வண்ணமே

தாகிலு மிருப்பரே யென்றும், (அகம். கசுரு.) துணையுடையோரை நோக்கி வாடை வந்துவிட்டதனால் "எப்பொருள் பெறினும் பிரியன்மினோ



வெனச், செப்புவ ரளியர்"; துணையிலேனாதலிற் கூறுவாருமில்லை; பல்லிலே தீப்பிறக்க அடியுண்டு வருந்துவேனோ வென்றும், (அகம். உகஎ) நெற்றியிற் பசலைகொண்டு யான் வருந்த இவள் நம்மால் அளிக்கத்தக்காள் என்று கருதாதவர் இனி நினைக்கவேமாட்டாரோ? நினைத்தும் பெரிய வினையிடைப்பட்டமையின் மறந்துளாரோ? (அகம். உ௩ரு) தோழீ, என் தனிமையில் இவ்வாடை வீசலானே இனிப்பொறேன் என்றும் பலவாறு புலம்பிவைகினர்; (அகம். உ௬௪.) இவ்வாறு வருந்தி வைகியநாளிற் போர் முனையிற் சென்ற கீரனார் மீண்டு வந்தனர்; அவர் வருகிறாரென்பதை முன்னரே ஏவலிளையரா லறிந்த எயிற்றியார் பெருமகிழ்வெய்திக் காதலன் வரும்பொழுது தேர்ப்பாகற்குக் கூறுவதாக அவருள்ளக் கிடையையுந் தம்முடைய நிலையையுஞ் சேரத் தொகுத்துப் பாடினார்; (அகம். உ௩௪) பின்னர், வந்த காதலனோடு மகிழ்ந்துறைவாராயினர். இவர் பாடல்களைப் பிற்காலத்துச் சான்றோர் துறைப்பாற்படுத்தித் தொகைநூலிற் கோத்தாரென்று கொள்க. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (உ௮௧, ௩௧உ) பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் ஐந்துமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௪௫. கள்ளம் பாளனர்

இவர்பெயர் கண்ணம்பாளனாரெனவும் பாடவேறுபாடு முண்டு. அகத்தில்கருவூர்க் கண்ணம்பாளனாரென்றிருத்தலால் இவர் ஊர் கருவூர். 'களப்பாள்' என்று ஊர் இருத்தல்போலக் 'கள்ளம்பாள்' என்பதும் ஊராக இருக்கலாம். அகத்தில் கருவூர்க் கண்ணம்புல்லனாரென் றொருவர்பெயர் காணப்படுகின்றது. இவர்கள் இருவரும் பாடியவெல்லாம் பாலைத்திணையா யிருத்தலானே இருவரும் ஒருவரே யெனவும் ஏடெழுதுவோர் மிகையால் பெயர் வேறுபட்ட தெனவும் ஊகிக்கலாயிற்று. கருவூர் சேரனாட்டகத்துளது. இவர் கூறிய குறைநயப்பு நுண்ணுணர்வினோரை இனிது மகிழ்விக்கும்; (அகம். கஅ0.) இவர் சேரமான் கோக்கோதையையும் அவனது வஞ்சிமூதூரையும் பாராட்டிக் கூறியுள்ளார்; (அகம். உசுங.) இவர் பாடியனவாக நற்றிணையில் கசஅ-ம் பாடலொன்றும், அகத்தில் மூன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சசு. கள்ளிக்குடிப் பூதம் புல்லனார்

இவரது இயற்பெயர் புல்லன்; பூதன் தந்தை பெயர்போலும்; ஊர் கள்ளிக்குடி. இப்பெயர்கொண்டவூர் பலநாடுகளிற் பல இருத்தலால் இவர் ஊர் இன்னதென் றறியக்கூடாதாயினும் இவர் பாலைத்திணையையே சிறப்பித்துப் பாடியிருத்தலால் இவர் நீர்நாட்டினர் அல்லரென்றுமட்டும் தெரிகின்றது. இவர் பாடியனவாக நற்றிணையில் ஙஙங-ஆம் பாடல் ஒன்றும், குறுந்தொகையிலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## சஎ. காசிபன் கீரனார்

இவரது இயற் பெயர் கீரன். கடைச் சங்கத்திலே தலைமை பெற்றிருந்த நக்கீரரின் வேறென்பது தெரிய ஏனைக் கீரர்களெல்லாம் ஒவ்வோரடைமொழி கொடுக்கப்பட்டமையின், இவரும் அவ்வாறே காசிபன் கீரனாரெனப்பட்டார். காசிபனென்றதனால் இவர் காசிப கோத்திரத்தினராகிய அந்தணரென் றறியப்படும். இவர் முல்லைத்திணையைப்

பாடியுள்ளார்; வம்பமாரியென்று தலைவி கருதி ஆற்றுமாறு தோழி மருட்டி மழையைநோக்கிக் கூறுவதாக இவர் பாடியது மிக்க நயமுடைய தாகும். இவர் பாடியது நற் உசஅ-ம் பாட்டு.

## சஅ. காஞ்சிப் புலவனார்

மாங்குடி மருதனாரென்பவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நிலையாமை யறிவுறுத்தவேண்டி மதுரைக் காஞ்சி பாடியதனால் மதுரைக்காஞ்சிப் புலவனெனவும் காஞ்சிப் புலவ னெனவுங் கூறப்பெறுவாராயினார்; மாங்குடி கிழாரென்பவருமிவரே. இவர் வேளாண் மரபினர். மேற்கூறிய நெடுஞ் செழியனது அவைக் களத்துப் புலவராய் அவனைப் பாடி மகிழ்வித்து வைகுவாராயினர்; (புறம். உசு.) ஒரு காலத்துச் சேரனுஞ் சோழனும் மதுரையை முற்றியபொழுது இளைஞனாகிய நெடுஞ் செழியன் வஞ்சினங் கூறுவான் "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் தலைவ னாக" (புறம். எஉ.) என்று இவரைப் பாராட்டிக் கூறினானெனின் இவருடைய மேன்மையும், கல்வி கேள்விகளினுயர்வும் நம்மனோரால் அளவிடப்படுங்கொல்லோ? இவர் பாடிய மதுரைக்காஞ்சியைப் படிப்பவர்க்கு இவரது ஆற்றல் விளங்கும். பின்பொருபொழுது வாட்டாற் றெழினியாதனைப் பரிசில் வேண்டிப் பாடி அவனால் ஆதரிக்கப்பெற்று மீண்டு மதுரையை யடைந்து வைகுவா ராயினார்; (புறம். நகசு.) இவர் எல்லாத்திணையும் புனைந்து பாடவல்லவர். நெடுஞ்செழியன் போரிலே உள்ளஞ்செலுத்தி அவ்வழியே யொழுகுவானை நன்னெறிப்படுத்தி மறுமைக்காய வேள்வி முதலியவை செய்யும்படி பண் ணினவர் இவரே; (புறம். உசு.) கடற்கரையில் மகளிர் விளையாட்டயர் வதனை விளங்கக் கூறியுள்ளார்; (நற். கஉந.) இவர் பாடியனவாக, மது ரைக் காஞ்சியகவல் ஒன்றும், நற்றிணையில் கஉந-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்திலொன்றும், புறத்திலாறும், திரு வள்ளுவமாலையி லொன்றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக் கின்றன. தஞ்சாவூர்ச்சில்லா திருத்துறைப்பூண்டித் தாலுகாவில் மாங்குடி மருதவனமென இரண்டு ஊர்கள் ஒன்றை யொன்று அடுத் துள்ளன. அவற்றுள் முன்னது இவரூரும் பின்னது இவரால் நாட்டப் பட்டதும் போலும்.

## சகூ. காப்பியஞ் சேந்தனார்

இவரது இயற்பெயர் சேந்தனென்பதே; ஏதேனுங் காப்பியஞ் செய்ததனால் இவ்வடைமொழி கொடுக்கப்பெற்றாரோ அன்றேல் காப்பிய மென்பது இவருடைய ஊர்தானோ தெரியவில்லை; காப்பியன் மகனாய சேந்தனாரென்றும் கொள்ளலாம். இவர் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைமகன் வருவதற்குரிய பல்லி சொல்லுதல் முதலாய நிமித்தங்கள் பலவற்றைச் சேர விரித்துக் கூறியுள்ளார்; இவர் பாடியது நற். - உசகூ-ம் பாட்டு.

## ருo. காமக்கணிப் பசலையார்

இவர் மதுரைக் காமக்கணி நப்பசலையா ரெனவுங் கூறப்படுவர்; பெயர்க் காரணத்தாற் பெண்பாலாரென்பது தெளிவு; காமக்கணி காமாட்சி என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. சங்கத்தார் வட சொற்களை அவற்றிற்கு நேராகிய தமிழ்மொழியாலே கூறுதல் வழக்காக



வுடையவர்; நக்கீரனார் திருமுருகாற்றுப்படையுள் ஜம்புநதியிற் பிறந்தமையால் ஜாம்பூநதமெனப் பெயர்பெற்ற தங்கத்தினை அப்பெயராற் கூறாது 'நாவலொடு பெயரிய பொலம்' என்றார்; இதனை நோக்கியறிக. (மகளிர்க் குண்டாகும் பசலையைப் பாராட்டிப் பாடினமையின் இவர் பசலையா ரெனப்பட்டார் போலும்; அத்தகைய பாடல் இவர் பாடியது கிடைத் திலது.) இவர் பாலை முல்லை வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைவர்காள் நிலையில்லாத பொருள் காரணமாக நுங்காதலியரைக் கைவிடா திருங்கோளென்று குயில் கூவாநிற்குமென்று இளவேனிலை வருணிக் கிறார்; (நற். உசக.) இவர் பாடியனவாக மேற்காட்டிய பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ருக. காரிக் கண்ணனார்

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனா ரென்பவரிவரே; வணிகர் மரபினர்; தொல். பொருள், மரபு. எ௬-ம் சூத்திர வுரையில் பார்க்க. அகம். ௧௨௩-ல் "கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை" எனத் தம்மூர்த் துறைமுகத்தைச் சிறப்பித்தலானும், இவர் அவ்வூராரேயெனத் துணியப்படும். இவர் பாண்டியன் இலவந்திகைத்துஞ்சிய நன்மாறனை அவன்வென்றிச் சிறப்புக்கூறி மகிழ்வித்தார்; (புறம். ௫௭.) ஒருகாற் சேரலன்சேனாபதி பிட்டங்கொற்றனிடஞ் சென்று அவனைப் புகழ்ந்து தமது வறுமையைக் கூறிப் பரிசில் பெற்றனர்; (புறம். ௧௬௯.) அதனால் மிக்க மகிழ்ச்சிகொண்டு மீட்டும் அவன்கொடைத் தன்மையைப் புகழ்ந்து இயன்மொழி வாழ்த்துக் கூறினார்; புறம். ௧௭௧. சோழன் பெருந்திருமாவளவனும், பாண்டியன் பெருவழுதியும் ஒருசேர இருந்தாரை உடனிலையாக வாழ்த்தியுள்ளார்; புறம். ௫௮. ஆஅய் அண்டிரனைப் பாராட்டிக் கூறியிருக்கிறார்; (நற். ௨௩௭.) இவர் பாலைத்திணையைப் பலபடியாகச் சிறப்பித்துப் பாடியுளர்; பிரிந்த காதலனைக் கருதி வருந்தினுமில்லையேயென்று தலைவியைத் தோழி கடிந்து கூறுவதாக உரை மாறுபடப் பாடியுள்ளார்; (நற். ௨௩௭.) இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௩௭-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்திலிரண்டும், புறத்திலைந்தும், திருவள்ளுவமாலையிலொன்றுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௫௨. காவன்முல்லைப் பூதனார்

இவரது இயற்பெயர் பூதனென்பதே. காவன்முல்லை புறத்திணைக் கட்பட்ட ஒரு துறை; புறப்பொருள் வெண்பாமாலை வாகைப் படலத்துட் கண்டுகொள்க. அத்துறையைப் பாடினமையின் காவன்முல்லைப் பூதனார் எனப்பட்டார். இவர் பாலைத்திணையைப் பலவாறு புனைந்து பாடியுள்ளார். காதலன் சென்ற சுரநெறி கொடியதென்று வருந்திய தலைவியை அந்நெறி மழைபெய்து நலனுடையதாய் இராநின்றதென்று தோழி ஆற்றுவிப்பதாக இவர் கூறியது இன்சுவையதாகும்; (நற். ௨௭௪.) இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௭௪-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்திலைந்துமாக ஏழு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௫௩. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

அகம். ௨௭௧-ல் 'வணிகராகிச் சென்று' என்று கூறியதனால் இவரை வணிகர் மரபினரென்று கொள்கின்றாம். இவர் அவியனென்னும்



கொடையாளியையும் அவனது மலையையுஞ் சிறப்பித்துப் பாடியிருக்கிறார்; (அகம். ௨௭௧.) வாகைப்பூவை மயிலின் குடுமிக்கு உவமைகூறியுள்ளார்; (குறு. ௩௪௭.) பெரும்பாலும் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளர். இவர் பாடியனவாக நற்றிணையில் ௩௮௯-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், அகத்திலிரண்டுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௫௪. கிடங்கில், காவிதி கீரங்கண்ணனார்

இவரது இயற்பெயர் கண்ணனாரென்பதே; கீரன் தந்தையின் பெயர் போலும்; காவிதிப்பட்டம்பெற்றமையின் உழுவித்துண்ணும் வேளாண் மரபினராவார். கிடங்கில் என்பது நடுநாட்டகத்துள்ள திண்டிவனம்; இஃது ஓய்மா (எறுமா) நாட்டு நல்லியக்கோடன் ஆட்சியுட்பட்டிருந்தது; "கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்"—சிறுபாணாற்றுப்படை, ௧௬0. மற்றுமிவ்வூர் "கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத், தடங்கட் டடங்கட் டளிரியலார் கொல்லார்—கிடங்கில், வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வா, யிளையாடன் கண்ணொக்கு மென்று" என்று பொய்கையாழ்வாராற் சிறப்பித்துப் பாடப்பெற்றது. இக்கீரங்கண்ணனார் நெய்தல் குறிஞ்சி முதலாய வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; பிரிந்தாரை யொறுக்கு மாலைக்காலத்தியல்பும் இரவுறுதுயரமும் விளங்கப்பாடியுள்ளர்; (நற். ௨௧௮.) இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௧௮-ம் பாடலொன்றும் குறுந்தொகையி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௫௫. கிடங்கில், காவிதிப் பெருங்கொற்றனார்

கொற்றனெனப் பலரிருத்தலின் அவர்களின் வேறென்பது தெரிய இவர் பெருங் கொற்றனெனப்பட்டார். இவர் முல்லைத்திணையைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௧௬௨-ம் பாட்டு.

## ௫௬. கிள்ளிமங்கலங்கிழார் மகனார்

## சேரகோவனார்

இவர் இயற்பெயர் கோவனென்பதே. சேர என்னும் அடைமொழி பற்பலர் பெற்றிருக்கிறார்கள்; இன்னகாரணத்தால் இவ்வடைமொழி கொடுக்கப்படுவதென்பதும் இன்னபொருளதென்பதும் விளங்கவில்லை. இவர் வேளாண்மரபினர். கிள்ளிமங்கலம் பாண்டி நாட்டகத்ததோரூர். கிள்ளிமங்கலங்கிழார் என ஒருவர் குறுந்தொகையிற் கூறப்படுகிறார்; அவர்க்கு இச் சேரகோவனார் புதல்வராவார்போலும். இவர் குறிஞ்சித் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைவி படுங் காமத்துயரை யறிந்த தோழி நாம் காவல்கடந்து நாண முதலாயின வொழித்துக் காதலனது ஊர் வினவிச் செல்லுவேமோவென்று கூறுவது வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். ௧௬௯-ம் பாட்டு.

## ௫௭. கீரங்கீரனார்

கீரனுடைய மகனாகிய கீரனார். இவர் நெய்தலைப் புனைந்து பாடியுள்ளார்; தலைவன் தேர்மணிக்குரல் பலருங்கேட்கும்படி வருதலால் நின்னை வரைய வருகிறாரென்று தோழி கூறுவது இனிமை தாராநிற்கும். இவர் பாடியது நற். ௭௮.

## ருஅ. குடவாயிற் கீரத்தனர்

கீரத்தனரெனப்படுபவரும் இவரே. குடவாயில் சோழநாட்டின் கண்ணதாகிய தஞ்சாவூர்ச்சில்லா நன்னிலத் தாலூகாவைச் சார்ந்ததொரு பெரியவூர். இவர் தம்மூரைத் "தண்குடவாயிலன்னோள்" (அகம். சச.) "கொற்றச் சோழர் குடந்தை வைத்த" (அகம். சுo.) "தேர்வண் சோழர் குடந்தை வாயில்" (நற். கஎக.) எனச் சிறப்பித்துக் கூறுகிற்பர். இதனுள் குடவாயி லென்பதனைக் குடந்தையென மேலையோர் திரித்தன ரென்பர் நச்சினார்க்கினியர்; (தொல். பொருள். கஅஅ, உரை.) இவர் முன்பொரு காலத்துச் சோழனொருவன் சேரநாட்டகத்துச் சென்று கழுமலமென்னும் நகரை முற்றித் தன் சேனபதி பழையன் என்பானைப் பகைப்புலத்தவர் சேனபதி கணையனென்பான் கொல்லக்கண்டு பொருது அவனையும் அவ் வூரையுங் கைப்பற்றிய கதையைக் கூறுகின்றவர் அப் போரில் வந்த மற்று முள்ள சேனபதிகளையும் பிற சிற்றரசர்களையும் எடுத்துக்கூறிச் செல்லு கின்றார்; (அகம். சச.) சோழரது திரவியசாலை குடவாயிலின்கணுள்ள தென்று குறிப்பிக்கிறார்; அகம். சுo. [திரவியசாலை மிக்க போர்வீரராற் காக்கப்பட்டுள்ளதெனவும் காவன் மிக்குடைமையிற் சிறைச்சாலையும் குட வாயிலின்கட் கட்டப்பட்டுள்ளதெனவுங் கொண்டு சோழன் செங்கணன் சேரன் கணைக்காலிரும் பொறையைப்பற்றிக் குடவாயிற் கோட்டத்துச் சிறையிட்டானென்று களவழியினும் புறத்துங் கூறியிருப்பதை ஆய்ந்து கொள்க.] நன்னனது ஏழில்மலை இவராற் பாராட்டப்பட்டுளது; (அகம். கசஐ.) சோழநாட்டிலுள்ள அன்னியுந் திதியனும் போர்செய்யத் தொடங்குகையில் இடையில் சமாதானஞ் செய்யச்சென்ற நாகபட்டினத் தாலூகா வைப்பூரிலுள்ள எவ்வி யென்பவனைச் சிறப்பித்துக் கூறுகிறார்; (அகம். கசுக.) உறையூரும் காவிரியும் இவராற் பாராட்டப்பட்டுள்ளன; (அகம். கஅஐ.)

இவர் பெரும்பாலும் பாலைத்திணையையும் சிறுபான்மை மற்றைத் திணைகளையும் புனைந்து பாடியுள்ளார்; மருதநிலத்துப் பள்ளர் பொலி தூற்றிய களம், உப்புப்பாத்தியிற் படிதலின் நுளையர் போந்து மற்போர் புரியக் கண்ட முதியோர் இருவரையும் கைபிணி விடுத்து நுளையர்க்குக் குடக்கள்கொடுத்து விடுத்தார் என்று திணைமயக்கங் கூறி மகிழ்விக்கிறார்; (அகம். கசுசு.) வினைவயிற் சென்று மீண்டு வந்த தலைமகனைக்கண்ட காதலி தான் முற்றுப்பெறாத கோலத்தோடு ஓடிவந்து முயங்குவதாகக்கூறி யாவர்க்குஞ் சுவையமிழ்தூட்டுகிறார்; (நற். சஉ.) இவர் பாடிய பாங்கி பேதைமை யூட்டற்றுறை ஆராயத்தக்கது; (நற். கஎக.)

இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு (உஎ, சஉ, உகஉ, கஎக.) பாடல்களும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் பத்துமாகப் பதினேழு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ருக. குண்டுகண் பாலியாதனர்

இவர் ஆதன் என்னும் இயற்பெயருடையவர்; பாலி இவரது ஊர்; ஆழ்ந்த கண்ணுடைமையிற் குண்டுகணென்னும் அடைமொழி கொடுக்கப் பட்டார். இவர் சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதனைப் பாடிப் பரிசில் பெற்றவர்; (புறம். கஅஎ.) குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடியுள் ளார்; முகம்புகுகிளவி பாடியவருள் இவருமொருவர். இவர் பாடியன வாக நற்றிணையில் உஉ0-ம் பாடலொன்றும், புறத்தி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.



## சு0. குதிரைத்தறியனர்

குதிரைத்தறியென்பது ஓரூர்போலும்; செய்தி விளங்கவில்லை. இவர் பாலைத்திணையைப் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். உகூக-ம் பாட்டு.

## சுக. குளம்பனர்

குளம்பு என்னு மூரினராதலிற் குளம்பனரெனப்பட்டார்; இஃது ஊர்பற்றி வந்த பெயர். இவர் குறிஞ்சித்திணையைப் பாடியுள்ளார்; இவர் பாடியது நற். உஅஅ-ம் பாட்டு.

## ௬௨. குறமகள் குறிஎயினி

இவர் பெண்பாலார்; எயினியென்னு மியற்பெயருடையார்; இவர் பாடலில் 'நின்குறிப்பெவனோ தோழி யென்குறிப்பு' எனக் குறிப்பென்னுஞ் சொல்லை அடுக்கிக் கூறிய சொற்சிறப்பால் இவர் குறிப்பெயினியா ரெனப்பட்டார்; இவர் பெயர் ஏடுகளிற் குறியெயினி யென்றிருந்ததனால் அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது. புறத்தில் (௧௫௭) குறமகள் இளவெயினி என்றொருவர் காணப்படுகிறார்; குறிப்பெயினியாரே இளம்பருவத்தே பாடத்தொடங்கியதால் இளவெயினி யெனப்பட்டாரென்று ஊகிக்கலாம். குறவர் குறிஞ்சித்திணைக்குரியராதலின் அதற்கேற்ப இவரும், குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற்றிணை. ௩௫௭-ம் பாட்டு.

## ௬௩. குன்றியனார்

இவரது பெயர்க் காரணம் விளங்கவில்லை. குறுந்தொகையில் மேலைக் கடற்கரைத் தொண்டியைச் சிறப்பித்திருக்கிறபடியால் இவர் சேரநாட்டவர் என்று தோன்றுகின்றது; குறு. ௨௩௮. இவர் களவு கற்பாகிய இருவகை ஒழுக்கத்தையும் நெய்தற்றிணையிலமைத்துப் பலவாறு பாராட்டிப் பாடி உள்ளார்; மாலைப்பொழுதை அழகாக வருணிக்கிறார்; (நற். ௧௧௭.) இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௧௧௭, ௨௩௯.) பாடலும், குறுந்தொகையில் ஆறும், அகத்தில் இரண்டுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬௪. குன்றூர்கிழார் மகனார் கண்ணத்தனார்

இவர் வேளாளர் மரபினர். குன்றூர் என்று பல ஊருளவாதலின் இவரூர் இன்னதென்றறிய இயலாது. இவர் குறிஞ்சித்திணையைப் பாடி உள்ளார். இவர் பாடியது நற். ௩௩௨-ம் பாட்டு.

## ௬௫. கூடலூர்ப் பல்கண்ணனார்

இவர் நீர்நாட்டின்கணுள்ள கூடலூரின ராகவேண்டும்; மருதத் திணையிற் பாணனை மறுத்துக்கூறுந் துறையையே சிறப்பித்துப் பாடி உள்ளார். இவர் பாடிய பாட்டு இரண்டு. நற். ௨௦௦, ௩௮௦.

## ௬௬. கூற்றங் குமரனார்

இவர் இயற்பெயர் குமரனென்பது. கூற்றன் தந்தை பெயர்; கூற்றனுடைய குமரனார் கூற்றங் குமரனாரென்றாயிற்று. (தொல். எழுத்து. ௩௫௦.)



இவர் முகம்புகுகிளவி பாடியவரில் ஒருவர். குறிஞ்சித்திணையைப் பாடி உள்ளார். இவர் பாடியது நற். ௨௪௪-ம் பாட்டு.

## ௬௭. கொட்டம்பலவனார்

இவர் கொட்டம்பலம் என்னும் ஊரினர். இவர் பாடலில் குறக்குறு மாக்கள் தாளங்கொட்டும் என்னுந் தொடரிற் கொட்டுமென்னுஞ் சொற் சிறப்பானே கொட்டம்பலவன் எனப்பட்டாரெனினுமாம் எனின், சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என அகத்திலும் புறத்திலும் வருதலின் கோட்டம்பலமென வோரூருண்டு எனவும் அதனால் கோட்டம்பலவனாரென்பது ஊர்பற்றி வந்த பெயரெனவுமறிக. கழைக் கூத்தி கயிற்றில் நடக்கின்ற வழக்கு அக்காலத்தும் உண்டென்று இவர் பாடலான் அறியப்படுகிறது; நற். ௯௫. இவர் குறிஞ்சித்திணையைப் பாடியுள்ளார்; தலைமகன் தன்னெஞ்சம் கொடிச்சிகைப்பட்டு விட்டதெனவும், அவள் விட்டாலன்றிப் பிறரால் விடுத்தற் கரியதெனவும் கூறுவதாகப் பலபடப்புனைந்து கூறியுள்ளார்; நற். ௯௫. இவர் பாடியது நற். ௯௫-ம் பாட்டு.

## ௬௮. கொள்ளம் பக்கனார்

இவர் இயற்பெயர் பக்கனென்பது. கொள்ளம் - ஓரூர். குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார். உடம்பு வேறுபட்டமை பற்றி நற்றாய் வினவிய தற்குக் காதலனோடு கூட்டமுண்மையை வினவியதாகக்கொண்டு வரை நாடனை அறிந்திலேன் கண்டதுமில்லை அவனோடு சுனையாடினதுமில்லையே யென்று கூறிவிட்டனையே! இனி என்னாகிமுடியுமோ? என்று தோழி கூற்றாகஇவர் பாடியது வியக்கத்தக்கது. இவர் பாடியது நற். கசஎ-ம் பாட்டு.

## சுசு. கொற்றங் கொற்றனார்

இவர் மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனாரென அகத்திற் கூறப்படுவர்; வேளாண் மரபினர். மாற்றூர் பலவுளவாதலின் இவரூர் இன்ன இடத்ததென்று அறியக்கூட வில்லை. கொற்றன் கொற்றனெனற் பாலது நிலைமொழியீற்று அன் விகுதி கெட்டு அம்முச் சாரியை புணர்ந்தது. (தொல். எழுத்து. ந ௫௦) இவர் குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; காவிரியின் வடபாலுள்ள சிறுகுடி யென்னும் ஊரினையும் அதனை ஆட்சி புரிந்த பண்ணனென்பவனையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்; அகம். ௫ச. இவர் பாடியனவாக நற்றிணையில் உ௫கூ-ம் பாடல் ஒன்றும் அகத்தில் ஒன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## எ௦. கொற்றனார்

செல்லூர்க் கொற்றனார் எனவும் செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார் எனவும் கூறப்படுபவர் இவரே. செல்லூர் சோழநாட்டுக் கீழைக் கடலருகிலுள்ளது. பரசுராம முனிவர் பெருவேள்வி செய்த வூரிதுவே. இக்கொற்றனார் பெரும்பூதனார் என்பவரின் புதல்வர். வணிகர் மரபினர். இவர் மருதம், நெய்தல், பாலை—இவைகளைச் சிறப்பித்துப் பாடி உள்ளார். தலைமகனைப் பரத்தையர் பலர்கூடிக் கைகளைப்பற்றி யீர்த்தலும் அவரிடைப்பட்டு மயங்கும் அவனது நிலைமையை விளங்கக் கூறியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் [illegible] ௦-ம் பாடலொன்றும் குறுந்தொகையி லொன்றும் அகத்தில் [illegible] பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௭௧. கோக்குளமுற்றனார்

இஃது ஊர் பற்றி வந்த பெயர். குளமுற்றம் என்பது ஓரூர். 'குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்' எனப் புறப்பாட்டின்கண் வருதலானும் இவ்வூருண்மை தெளிக. கோவென்னும் உரிமை பெற்ற உழுவித் துண்ணும் வேளாண் மரபினர்; நெய்தலையும் முல்லையையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்; தலைமகன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த இடமும் அவன் தலைவியொடு கடவாடிய துறையும் முதலியவற்றை நினைந்து தலைமகள் புலம்புவதாகச் சுவைபயப்பப் பாடியுள்ளார்; நற். ௯௬. இவர் பாடியனவாக நற்றிணையில் ௯௬-ம் பாடலொன்றும் குறுந்தொகையில் ஒன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௭௨. கோட்டியூர் நல்லந்தையார்

இது நல்லன் தந்தை நல்லந்தையாரென முடியும். தொல். எழுத்து. ௩௪௮-ல் 'துவர' என்றதனால் முடிக்க. பாண்டிநாட்டகத்ததாகிய திருக்கோட்டியூர் என்பது இதுவே. இவர் நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற்றிணை ௨௧௧-ம் பாட்டு.

## ௭௩. கோண்மா நெடுங்கோட்டனார்

இவரைப்பற்றி யாதும் விளங்கவில்லை. இவர் மருதத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். பரத்தையிற் பிரிந்த தலைமகன் தனக்குப் புதல்வன் பிறந்தானென்ப தறிந்து பகலில்வர வெள்கி இரவிற் கள்வன் போல வந்தானென்று வியக்குமாறு கூறுகிற்பர்; நற். ௪0. இவர் பாடியது நற். ௪0-ம் பாட்டு.

## எச. கோவூர் கிழார்

இஃது ஊர்பற்றி வந்த பெயர். இவர் வேளாண் மரபினர். சோழன் நலங்கிள்ளியையும் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையும் பாடி (கூக, கூஉ, கூகூ, சக.) அவர்களால் ஆதரிக்கப்பட்டு வருகிறநாளில் நலங்கிள்ளி யென்பான் ஆவூரை முற்றுகை செய்ய அக்காலத்து உள்ளே அடைத்திருந்த சோழன் நெடுங்கிள்ளியை அதனைத் திறந்து போர்செய்ய வரும் வண்ணம் பாடினர். புறம். சச. அந்நெடுங்கிள்ளி அதனைத் திறந்து நலங்கிள்ளிபால் விட்டுச்சென்று உறையூரை யடைந்து அங்கு வைகினன். ஆவூரைக் கைப்பற்றிய நலங்கிள்ளி சென்று உறையூரையு முற்றுகை செய்தான்; புறம். சரு. அந்நாளில் நலங்கிள்ளியிடத்திருந்து உறையூரினுட்புகுந்த இளந்தத்தனை ஒற்றுவந்தானென்று நெடுங்கிள்ளி கொல்லப் புகுந்தபொழுது அவனைக் கொல்லாதபடி தடுத்துப்பாடி உய்யக்கொண்டார்; (புறம். சஎ.) பின்பு பகை முற்றுவண்ணம் முற்கூறிய சோழரிருவரையும் ஒற்றுமைப்படுத்திப் போரை விலக்கி நெடுங்கிள்ளியைப் பலவாறு புகழ்ந்து பாடி அப்பால் கிள்ளிவளவன்பால் வந்தனர். அம்மன்னன் யாதோவொரு காரணத்தால் மலையமான் மக்களை யானையின் காலில் வைத்து இடறும்படி கட்டலையிடக் கண்டு அவனைப் பாடி அம்மக்களை உய்வித்தார்; புறம். சசு. முற்கூறிய அரசர்களைப் பாடிய பாடல்கள் மிக்க சுவை பயப்பன. இவர் நற்றிணையிற் கூறிய உள்ளுறை வியப்புடையது.



இவர் குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் கூகூ-ம் பாடலொன்றும், குறுந்தொகையிலொன்றும், புறத்தில் பதினைந்துமாகப் பதினேழுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## எரு. கோளியூர்கிழார் மகனர் செழியனர்

இவர் வேளாண் மரபினர்; ஏனைய வெளிப்படை. இவர் பிற யாதுஞ் செய்ததாக இதுவரையில் தெரியவில்லை. இவர் குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். கூஅகூ-ம் பாட்டு.

## எசு. சல்லியங் குமரனூர்

இவர் உறையூர்ச் சல்லியங் குமரனூரெனவுங் கூறப்படுவர். கூற்றங் குமரனூர்க்குக் கூறிய விதியே இங்குங்கொள்க. இவர் பாடலில் சோழ நாட்டு அரிசிலாற்றையும் அதனருகிலுள்ள அம்பல் என்னும் ஊரையும் கிள்ளிவளவனையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். இதனுல் கிள்ளிவள வன் காலத்தவராவார்போலும்; நற். கசக. பாலையையும் மருதத்தையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் கசக-ம் பாட லொன்றும் குறுந்தொகையி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத் திருக்கின்றன.

## எஎ. சாத்தந்தையார்

சாத்தன் தந்தை சாத்தந்தை என்றாயிற்று. (தொல். எழுத்து. நஉஎ.) இவர் முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனைப் போரிற் கொன்ற சோழன் தித்தன் மகன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் வீரச்செயலைச் சிறப் பித்துப் பாடியவர்; (புறம். அ0.) இவர் மகன் கண்ணஞ் சேந்தனூரே பதி னெண் கீழ்க்கணக்கில் ஒன்றாகிய திணைமொழி ஐம்பது பாடியவர். இச் சாத்தந்தையார் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார்; இவர் பாடி யனவாக நற்றிணையில் உகூ-ம் பாடலொன்றும் புறத்தில் நான்குமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## எஅ. சிறுமோலிகனூர்

இவரைப்பற்றி யாதும் விளங்கிலது; குறிஞ்சியைப் பாடியுள்ளார். தலைவி காமநோயால் வருந்துவதறிந்த அன்னை வினவியதற்குக் கூறிய விடை ஆராயத்தக்கது. இவர் பாடியது நற். கூக-ம் பாட்டு.

## எகூ. சிறைக்குடி ஆந்தையார்

ஆதன் தந்தை ஆந்தை. இவர் மனைவியொடு வாழுநாளிற் பொருள் வேண்டிக் காதலியைப் பிரிய நேர்ந்ததுகண்டு நெஞ்சை நோக்கிப் புணர்ந் திருப்பிற் பொருள் அடைவதரிதெனவும் பிரியிற் புணர்ச்சியில்லை யென வும் பலவாறு கூறி வருந்துவாராயினர்; (நற். கசு.) அதுகண்ட அவர் காதலி பிரிவர்போலுமென்று கடுந்துனிகொண்டு பிரியின் இறந்துபடுவேன் எனக்கூறி மாழ்கினள்; புலவர்பிரான் காதலியை நோக்கி நீ பூப்பெய்திய மூன்றுநாட் பிரிந்துறைவது ஓர் யாண்டளவு பிரிந்தாற்போலாகின்ற எனக்குப் பிரிவென்பது எப்படி நேரும்? இதுகாரணமாக நீ இறப்பின் என்னுயிரும் உடன்போகக்கடவதாகவென்றும் நாமிருவரும் சேர்ந்து



வாழாது பிரிந்து ஒருவராக வாழ்வதினும் இறப்பதே நலமென்றும் வற் புறுத்திக் கூறினர்; (குறு. ருஎ.) அங்ஙனங் கூறியதன்றி அவள் கேட்டு இஃதுண்மையென்று கொள்ளுமாறு பூமாலை போன்ற அவளுடைய மேனி தளிரினும் மேதக்கது முயங்குதற்கு மினிதாயிராகின்றது; (குறு. சுஉ.) வன்மையாக அணைத்து முயங்கும் அத்தகையாளைப் பிரிந்தால் யான் எப்படி மறந்தமைகுவேன்? (குறு. கஙஉ.) அத்தகைய நறுந்தண்ணியளைக் கூடுந்தொறும் பிரியகில்லேன்; பிரியின் உயிர் வாழலேன் (குறு. கசுஅ.) என்று பலபடியாக்க் கூறி அவளை மகிழ்வித்தனர். மீட்டும் அவளை நோக்கி ஒண்ணுதலாய், நின்னைப் பிரியகில்லேன்; இதனை நீ தெளிவாய் காண்; (குறு. உஎங.) நின்னட்பை விடுகிலேன் என்று அவள் தெளியு மாறு கூறினர்; (குறு. ௩00.) அவர் பிரிவதில்லையென்று தெளிவித்தலும் காதலி முன்னையினும் பலபடியாக அவர்பால் அன்புமிக்கு அவ்வண்ணமே ஒழுகுவாளாயினள். அங்ஙனம் ஒழுகுவதறிந்த ஆந்தையார் உள்ளுருகி, தலைப்புணைக்கொளின் அவளுங்கொள்ளுவள்; யான் யாற்றின் வீழின் உடனே தானும் விழுந்துயிர்விடுந் தன்மையளல்லளோ (குறு. உஉஉ.) என்று கூறிப் பிரிவென்பதைக் கனவிலும் நினையாதவராய்க் கலந்து முயங்கி மகிழ்ந்துறைவாராயினர். இங்ஙனம் இவர் அழகமைந்த இன்பச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய பாடல்கள் விழைவு விடுத்த விழுமி யோரையும் விழை வெய்துவிக்குந் தன்மையவாகும். இவர் பாடல்களைப் பிற்காலத்துச் சான்றோர் துறைப்பாற்படுத்தித் தொகைநூலுட் கோத்தனர். இவர் பாடியனவாக நற்றிணையில் கசு-ம் பாடலொன்றும், குறுந்தொகை யில் எட்டுமாக ஒன்பது பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## அ0. சீத்தலைச் சாத்தனார்

சீத்தலை யென்பது ஓரூர்; செந்தலை, முகத்தலை, கழாத்தலை, இரும்பிடர்த்தலை என்பவைபோல. பெருஞ்சாத்தன், பேரிசாத்தன் முதலியோரின் வேறுபடுத்த இவரியற்பெயர்க்கு ஊர்ப்பெயர் புணர்த்திச் சீத்தலைச் சாத்தனாரெனப்பட்டது. சீத்தலை யென்னுமூர் திரிசிராப்பள்ளி ச்சில்லா பெருமளூர்த் தாலூக்காவிலுள்ளது; திருவள்ளுவமாலையில் வரும் மருத்துவன் றாமோதரனார் பாடலில் "தலைக்குத்துத் தீர்வுசாத்தற்கு" என்றிருத்தலானே, அதற்கேற்பச் 'சீத்தலை - சீப்பிடித்ததலை' யென்று கதைகட்டிக் கூறுவாருமுளர். தலைக்குத்து ஒருகால் இருந்திருப்பினு மிருக்கலாம்; அதுபற்றிச் சீப்பிடித்தல் ஒருதலையன்மையின் சீத்தலைக்குச் சீப்பிடித்த தலையென்று பொருள் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. இவர் மதுரையிற் சென்று தம் குடும்ப வாழ்விற்காகக் கூலங்களைக்கொண்டு விற்று வியாபாரஞ்செய்துவந்தமையிற் கூலவாணிகன் சாத்தனாரெனவுங் கூறப்படுவார்; வணிக மரபினர்; பௌத்த மதத்தினர். சிலப்பதிகாரத்திற் கூறிய கண்ணகியொடு மதுரை மாதெய்வம் வந்து வினவியபொழுது வெள்ளியம்பலம்பலத்திற் சயனித்திருந்தவிவர் அங்குப் பேசியவற்றைக் கேட்டிருந்து அத்தெய்வம் கண்ணகியைவிடுத்து நீங்கியபின்னர் அக் கண்ணகி அறியாதபடி அவள் பின்சென்று சேரநாடுபுகுந்து சேரன் செங்குட்டுவனுக்கு நிகழ்ந்ததைத் தெரிவித்து அவன் தம்பி இளங்கோவடிகள் அக்கண்ணகி வரலாறாகிய சிலப்பதிகாரத்தைப் பாட அச்சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியாகிய மணிமேகலைதுறவைத் தாமேபாடி வெளியிட்டார். பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் புகழ்ந்து பாடினவர். (புறம். ௫௯.) இவர் முல்லையொழிய ஏனைய நானிலங்களையும் புனைந்து பாடியுள்ளார். அடி மரங்களில் சுரிமூக்கு கொள்ளைகள் மழைக்காலத்து

ஏறி ஓட்டிக்கொள்ளுவதைக் கூறியுள்ளார்; (அகம். ௩௩.) வெளிமான் கொம்பினை வாழைப்பூ வுதிர்ந்த தாற்றோடு உவமித்துள்ளார்; அகம். ௧௩௪. யாவரும் வியக்குமாறு உள்ளுறை கூறியுள்ளார்; (அகம். ௩௦௬, ௩௨௦.) இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (௩௬, ௧௨௭, ௩௩௩) பாடல்களும், குறுந்தொகையி லொன்றும், அகத்தில் ஐந்தும், புறத்தி லொன்றும், திருவள்ளுவ மாலையிலொன்றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௮௧. செங்கண்ணனார்

மதுரைச் செங்கண்ணனாரென அகத்திற் கூறப்படுபவர் இவரே. குறிஞ்சித்திணையைப் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௨௨-ம் பாடலொன்றும் அகத்தில் ஒன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௮௨. செம்பியனார்

இது சோழர் குடிக்குரிய பெயர். இதனால் இவர் சோழமன்னர் மரபினரென்று தெரிகின்றது. இவர் கிள்ளைவிடுதூதாகக் கூறிய நற்றிணைப்பாட்டு மிகவும் பாராட்டற்பாலது. இவர் குறிஞ்சித்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௧௦௨-ம் பாட்டு.

## ௮௩. சேகம்பூதனார்

ஏடுகளிற் சேகம்பூதனுரென் றிருத்தலானே இருந்தவாறே பதிப்பிக்கப்பட்டது. சேந்தம் பூதனுரென்பவரும், மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனு ரென்பவரும் இவரே. மதுரைக் கடைச்சங்கத்து ஏடெழுதுவோரா யிருந்தவர். பெரும்பாலும் குறிஞ்சியையும் முல்லையையும் நெய்தலையும் புனைந்து பாடியுள்ளார். இவர் மாலைப்பொழுதைச் சிறப்பிப்பது கேட்போர் மனத்தைப் பிணியாநிற்கும்; (நற். கூகூ.) யானையை மலைப்பாம்பு பற்றிப் புரட்டுநெறியென நெறியினது ஏதங் கூறுநிற்பர்; நற். உகூக. கழுதைமேல் உப்புப் பொதிகொண்டு செல்லும் வழக்கை விளக்கிக் கூறுகிறார்; அகம். உ0எ. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (கூகூ, உகூக.) பாடலும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் இரண்டுமாக எழு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## அசு. சேந்தங்கண்ணனர்

இவர் இயற்பெயர் கண்ணனுர். சேந்தன் என்னுந் தந்தை பெயரின் அன் விகுதி கெட்டு அம்முச் சாரியை புணர்ந்து சேந்தங்கண்ணனுர் என்றாயிற்று. (தொல். எழுத்து. கூகூ0.) இவர் நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; கேட்போர் மனத்தைப் பிணிக்குமாறு இவர் நாரைவிடுதூது கூறியுள்ளார்; (நற். கூசு.) இவர் பாடியது நற். கூசு-ம் பாட்டு.

## சேந்தம்பூதனுர்

மேலே (அரு) சேகம் பூதனுர் பார்க்க.

ச௪ நற்றிணை நானூறு

## அரு. தங்கால், ஆத்திரேயன்

செங்கண்ணனுர்

செங்கண்ணனெனப் பலருளராதலின் அவரின் இவர் வேறென்பது தெரிய "ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும், யாருஞ் சார்த்தி யவையவை பெறுமே." (தொல். பொருள். கூ௬௦.) என்ற விதிப்படி ஊரும் குலமுங் கூட்டித் தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனெனப் பட்டார். தங்கால் என்பது திருத்தண்காலென இக்காலத்து வழங்கப்படு கிறது ; இது ஸ்ரீ வில்லிபுத்தூருக் கருகிலுள்ளதொரு வைணவத்தலம். ஆத்திரேயன் - ஆத்திரேய கோத்திரத்துப் பிறந்தவன் ; எனவே இவர் அந்தணர் மரபினராவர். முகம்புகு கிளவி பாடவல்லவருள் இவரு மொருவர் ; குறிஞ்சித்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடிய உள்ளுறை வியப்புடையது. இவர் பாடியது நற். ௩அசு - ம் பாட்டு.

## அசு. தங்கால், பொற்கொல்லன் வெண்ணாகனர்

பொற்கொல்ல னென்றமையானே இவர் கம்மாளரென்பது வெளிப் படை. ஊர் முற்கூறிய திருத்தண்காலே. அகம் முதலாய சில ஏடுகளி லும் பொற்கொல்ல னென்பது பிறழ்ந்து பூட்கொல்லனென்றும் பூட் கொற்றனென்றும் எழுதப்பட்டுள்ளது. இஃது ஏடெழுதுவோரால் நேர்ந்தவழு. பூட்கொல்லனென்பது பொருள் பொருந்தாமையால் பூட் கோலவன் (பூண்கட்டிய தடிக்கொம்புடையவன்) எனத் திருத்தப்பட்டது போலும். பூட்கொற்றனை முடக்கொற்றனென்று திருத்தவுமாயிற்று (பூட்கொல்லன் பூண்செய்யும்கொல்லன் அஃதாவது பணித்தட்டான் என்று பொருள்படலாம்.) இவர் பாடலிற் சிலவற்றிலே தமது மரபைப் "பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப" (நற். ௩௧௩.) எனச் சிறப் பித்துக் கூறியுள்ளார். மதுரைப் பொற்கொல்லன் வெண்ணாகன் என ஒருவர் அகத்திற் காணப்படுகிறார். திருத்தண்காலிலிருந்த இவர் மதுரைச் சங்கமேறி அங்கு வைகியதனால் மதுரைப்பொற் கொல்லன் வெண்ணாகன் எனப்பட்டாரோ அறியக்கூடவில்லை. ஆயினும் மதுரையை நீக்கித் தங்காலென்றதனளவே இவர் பாடல் கணக்கிடப்படுகிறது. இவர் குறிஞ் சியையும் பாலையையும் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௩௧௩-ம் பாடலொன்றும், குறுந்தொகையில் ஒன்றும் அகத்தில் இரண்டும், புறத்திலொன்றுமாக ஐந்து பாடல்கள் கிடைத் திருக்கின்றன.

## அஎ. தனிமகனர்

இவர் பாடலுட் "பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே" என உவமை கூறிய அருந்தொடர் மொழியே இவர்க்குரிய பெயராகி வழங் லாயிற்று ; இயற்பெயர் புலப்படவில்லை. பாலைத்திணையைப் புனைந்த பாடியுள்ளார். என் நெஞ்சம் அவர்பாற் சென்றொழிந்தது ; உடம் மாத்திரம் பாழ்காத்திருந்த தனிமகன் போன்று இங்கு இராநின்றதென தலைவி கூற்றாக வியக்குமாறு கூறியுள்ளார். இவர் பாடியது நற். கருங.- பாட்டு.

## அஅ. தாயங் கண்ணனார்

சோழநாட்டு எருக்காட்டூர்த் தாயங் கண்ணனா ரென்பவர் இவரே எருக்காட்டூர் தஞ்சாவூர்ச்ஜில்லா, நன்னிலத் தாலுகாவில், காவாலகுடிக்கு கீழ்பாலுள்ளது. இவர் பெயர் ஏடெழுதுவோரால் பிறழ்ந்தெழுதப்பட்டு,



தையங் கண்ணனாரெனவும் கதையங் கண்ணனாரெனவும் காணப்படும். காடுவாழ்த்துப் பாடியவர் இவரொருவரே. 'பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து'க்கு நச்சினார்க்கினியர் இவர் பாடலையே உதாரணமாகக் கொண்டார் ; (புறம். ஙகூசு, பிற்பகுதி.) இவர் சேரலரது சுள்ளியாற்றில் யவனர் வந்து பொன் கொடுத்து மிளகுப்பொதி வாங்கி ஏகும் வியாபாரச் சிறப்பையும், சேரலனிடத்திருந்த பொற் படிமையைப் பாண்டியன் போர் புரிந்து பெற்றதையும், பரங்குன்றத்தின் சிறப்பையும் விளங்கக் கூறியுள்ளார்; (அகம். கசகூ.) தொண்டையர் வேங்கடமும், சேரர் கொல்லியும், சோழர் காவிரியும் உறையூரும் இவராற் பாராட்டப்பட்டுள்ளன ; (அகம். உகங ; ஙருஎ.) எழினியென்பான் இவராற்பாடப் பெற்றுள்ளான் ; (அகம். கOரு.) இவர் நெய்தல், பாலை, குறிஞ்சிகளின் வளங்களைச் சிறப்பித்துப்பாடும் ஆற்றலுடையார். குராவரும்பைப் பாம்பின் பல்லோ டுவமித்துள்ளார் ; (அகம். உஙஎ.) இதனையே எடுத்தாண்டனர் கம்பரும் ; "குரா வரும் பனைய கூர்வாள் எயிற்றுவெங் குருளை"—கார்காலப் படலம், செய்யுள், கூ. இவர் பாடியனவாக நற்றிணையில் உககூ-ம் பாடலொன்றும், குறுந்தொகையில் ஒன்றும், அகத்தில் ஏழும், புறத்தில் ஒன்றுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## அசு. தும்பிசேர கீரனார்

இவர் பெயர் தும்பிசேர கீரன் : கீரன் என்பது இயற் பெயர் ; சேர- அடைமொழி. இதன் பொருள் விளங்காமையால் இவர் பெயரைச் சேர் கீரனா ரென்று பதிப்பிக்கலாயிற்று. தமது பாடலிலே தும்பியை வண்டை நோக்கி "கொடியைவாழிதும்பி" (நற். உஎஎ.) எனவும் "அம்ம வாழியோ மணிச்சிறைத் தும்பி" (குறுந்தொகை, ௩௯௨.) எனவும் விளித்து அதனைப் பலவாகப் பாராட்டிக் கூறலின், இவர் தும்பிசேரகீரனா ரெனப்பட்டார். இவர் எல்லாத் திணையையும் பாடியுள்ளார். தலைவனிடஞ் சென்று தன் நிலை உரைத்தாயல்லையே என்று தும்பியைத் தலைவி முனிந்து கூறிய தாக இவர் பாடியது இனியசுவை யுடையதாகும் ; (நற். உஎஎ.) தலைவனை முயங்காது கண்ணாலே நோக்கிமட்டும் மகிழ்தற்கு மக்கள் நடைவண்டி யிழுத்து மகிழ்தலை உவமை கூறியுள்ளார் ; (குறு. ௬௧.) வண்டுவிடுதூது இவர் பாடியது ஆராயத்தக்கது ; (குறு. ௩௯௨.) இவர் பாடியனவாக நற் றிணையில் உஎஎ-ம் பாடலொன்றும், குறுந்தொகையில் நான்குமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬௦. துறைக்குறுமாவிற் பாலங் கொற்றனார்

இவர் செய்திபற்றி யாதும் விளங்கவில்லை. தமது பாடலில் வணி கனைக் கிளவித்தலைவனாக அமைத்துக்கூறியதனால் இவர் வணிகமரபினரோ என்றையங் கொள்ளப்படுகின்றது. இவர் பாலையைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். உஅ௬-ம் பாட்டு.

## ௬௧. தூங்கலோரியார்

இவர் தழும்பனையும் அவனது ஊணூரையும் பாடியதாக "வாய்வாட், டமிழகப் படுத்த இமிழிசை முரசின், வருநர் வரையாப் பெருநா ளிருக் கைத், தூங்கல் பாடிய வோங்குபெரு நல்லிசைப், பிடிமகி ழுறுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன், கடிமதில் வரைப்பின் ஊணூரும்" எனக் கணக்

காயனார் மகனார் நக்கீரனார் (அகம். உஉ௬)ல் புதழ்ந்து கூறியுள்ளர்; அங்ஙனம் இவர் பாடியபாடல் காணப்பெருமையின் அழிந்தது போலும். இவர் மருதத்திணையையும் பாலைத்திணையையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௬0-ம் பாடலொன்றும், குறுந்தொகையில் இரண்டுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬உ. தேய்புரிப்பழங்கயிற்றனார்

இவர் பாடலில் நெஞ்சமும் அறிவும் மாறுகொண்டிழுத்தலால் என்னுடம்பு இரண்டு யானையாலிழுக்கப்பட்டுத் தேய்புரிப் பழங்கயிறு இற்றொழிவதுபோல அழியவேண்டியதுதானோ வென்று கூறிய அருந்தொடர்மொழியாகிய உவமையே இவர்க்குப் பெயராயிற்று; இயற்பெயர் புலப்படவில்லை. இவர் பாலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். உ௮௪-ம் பாட்டு.

## ௬௩. தேவனார்

இவர் நெய்தற்றிணையைப் பாடியுள்ளார்; சேரீழரது ஆர்க்காட்டைச் சிறப்பிக்கிறார்; (நற். உஉ௭.) இவர் பாடியது நற். உஉ௭-ம் பாட்டு.

## தொண்டைமான் இளந்திரையன்

முற்கூறிய (௧௫) இளந்திரையனைப் பார்க்க.

## ௬௪. தொல்கபிலர்

இவர் பாடிய நற். ககச-ல் கரையைப் 'புள்ளித் தொல்கரை' என்று கூறிய அடைச்சிறப்பால் தொல்கபில ரெனப்பட்டார். குறிஞ்சித் திணையைச் சிறப்பித்துப் பலபடியாகப் புனைந்து பாடியுள்ளார். பல உள்ளுறைகள் அடுக்கிக் கூறியுளர்; (நற். ௩உ௮.) மடலேறுவேனென்னுந் தலைவன் கூற்றாக இவர் கூறியது வியப்புடையதாகும்; (குறு. கச.) இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு (ககச, உஎ௬, ௩உ௮, ௩௬௬) பாடல்களும், குறுந்தொகையில் ஒன்றும், அகத்தில் ஒன்றுமாக ஆறுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬௫. நக்கண்ணையார்

இவர் பெண்பாலார்: பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணை எனவுங்கூறப்படுவர்; நக்கண்ணை—சுலோசனை என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. அரசர்க்கு மகட்கொடைநேரும்வணிகமரபினர். உறையூர் வீரைவேண்மான் வெளியன் தித்தனது மகன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி யென்னுஞ்சோழன் தன் தந்தை யொடுபகைத்து நாடிழந்து புல்லரிசிக் கூழுண்டு வருந்தியவன் ஆமூர் மல்லனைப் போரில்வென்றது கண்ட இந்நக்கண்ணையார் அவ்வரசனைத் தாம்மணந்து முயங்கவிரும்பித் தம் காதன் மிகுதியையும், அவனை அணைத்து முயங்குதற்கு அவையத்தார் காண்பரேயென்றஞ்சுவதையும், அவனைப் பலகாலும் காணப்பெறினும் முயங்காமையினாலே தம்மேனி பசலை பூத்ததையும், பலவாறாக விரித்துக் கூறி வருந்துவாராயினர்; புறம். அ௩, அச; இன்னும் தாம் சிலம்பொலிப்ப ஓடிச்சென்று தம்மனையின்கணுள்ள பனையடியில் மறைந்துநின்று நோக்கித்

தாம் தம்முடைய வளையுங் கலையும் முதலானவை தோற்கும் ஆண்மை உடையன் அவன் எனவுங் கூறியுள்ளார்; (புறம். அ௧.) இவர் நெய்தலையும் குறிஞ்சியையும் புனைந்து பாடியுள்ளார்; சோழர் மரபின் அழிசியினது ஆர்க்காட்டைச் சிறப்பிக்கிறார்; (நற். அஎ.) இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௧௯, அஎ.) பாடல்களும், அகத்திலொன்றும் புறத்தில் மூன்றுமாக ஆறு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௬௬. நக்கீரர்

இவர் மதுரை நக்கீரரெனவும், கணக்காயனார் மகனார் நக்கீரரெனவும் கூறப்படுவார். இயற்பெயர் கீரனார்; ந - சிறப்புப்பொருளுணர்த்தும் இடைச்சொல். ஒரு காலத்துச் சங்கப்புலவரில் இவர் தலைமைபெற்றிருந்ததுமுண்டு. இறையனார் அகப்பொருளுக்கு உரைசெய்தவர் இவரே. (இப்பொழுதுள்ள அவ்வுரை இவர் கூறியதனை வரன்முறையாகப் பாடங் கேட்டுவந்து ஈற்றில் இளம்பூரணர் எழுதிவைத்ததென்று ஊகிக்கப்படுகின்றது.) திருமுருகாற்றுப்படை நெடுநல்வாடை இவ் விரண்டனையும் இவரே இயற்றியருளினார். எல்லா நிலங்களினுஞ்சென்று அவற்றின் இயற்கையமைப்பை ஆராய்ந்து அவ்வந் நிலங்களிலே பிறந்து வளர்ந்தவரினும் வல்லவராய்ச் செய்யுளியற்றும் ஆற்றல் வாய்ந்தவர். இவர் மகனே கீரவி கொற்றனாரென்பர். இந் நக்கீரனார் சங்கத்தில் வைகுநாளிலே கொண்டான் என்னுங் குயவன் பட்டிமண்டப மெய்தி வடமொழியே சிறப்புடையதென்றும் தமிழ் சிறப்புடையதன்றெனவுமிழித்துக் கூறினான். அதுகேட்ட நக்கீரர் வடமொழியே தமிழைச் சிறப்புடைய மொழியென்று ஒப்புக்கொள்ளுகின்றது; தமிழை இகழ்ந்த நின்னை வடமொழியாலே இறக்கும்படி கூறுகிறேன்; அது நின்னை இறக்கச் செய்யாதாயின் தமிழ் தீதேயென்று சொல்லி "முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி, பரண கபிலரும் வாழி - அரணிலா, ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக் கொண்டான், ஆனந்தஞ் சேர்கசுவா கா" என்று கூறலும் அவன் அவ்விடத்தே வீழ்ந்து உயிர்துறந்தான். (ஆனந்தம் - சாக்காடு.) அதனை நோக்கிய ஏனையோர் வந்து வேண்ட "ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த, காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய, அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற், செந்தமிழே தீர்க்கசுவா கா" என்றொரு வெண்பாப்பாட அவன் உயிர்பெற்றெழுந்தானென்ப.

இந் நக்கீரனார் பிரபுவாகிய அருமனையும் அவனது சிறுகுடியென்னும் ஊரையும் பாராட்டிப் பாடியுள்ளார்; நற். ௩௬௭. பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்றதனை விளங்கக் கூறியிருக்கிறார்; (அகம். ௩௬.) வள்ளலாகிய பாரியின் பறம்புமலையை மூவேந்தரும் முற்றுகை செய்திருந்தபொழுது அடைபட்டிருந்த பாரி, புலவர் பெருமகனாகிய கபிலரது கட்டளைப்படி, கிளிகளை விடுத்து நெற்கதிர்களைக் கொண்டுவந்து உண்டிருந்ததைச் சுருக்கிக் கூறியுள்ளார்; (அகம் ௭௮.) வைப்பூர் எவ்வி இடையிலே தூதாகச்சென்று சமாதானப்படுத்தவும் அடங்காது, அன்னியும் அழுந்தூர்த் திதியனும் போர்செய்ததனைக் கூறியுள்ளார்; (அகம். ௧௨௬.) கார்த்திகை மாதத்துக் கார்த்திகைக்குப் புதுவதாக மணம்புரிந்துகொண்ட மருமகளை அழைத்துவந்து அவளால் முதலில் பால் அடுப்பில் வைக்கச்செய்வதும், கார் நெற்கதிர்களை மண்படாமற் கொணர்ந்து அவலிடித்துப் பொரித்து நிவேதிப்பதும், அன்று வீடுகளிலும் தெருக்களிலும் விளக்குக்களை வைத்துக் கொண்டாடுவதுமாகிய கார்த்

திகைவிழாவை இவர் விரித்துக்கூறுவது படிப்பார்க்கு வியப்பைக் கொடா நிற்கும்; அகம். கசக. மற்றும் இவர் கிள்ளிவளவனையும், இடையர் தலைவன் ஆகிய கழுவுளென்பானையும், வடுகர் தலைவன் எருமை யென்பானையும், குட்டுவன் சேரலையும், திரையனையும், பழையன்மாறனையும் ஆங்காங்குப் பாராட்டிக் கூறுவதுடன் அவரவர்க்குரிய காவிரிப்பட்டினம், மருங்கூர்ப் பட்டினம், தொண்டி, குடநாடு, பவத்திரி, மதுரை முதலாய பதிகளையுஞ் சிறப்பிக்கின்றார்; அகம். உ௰, உ௯௬, உ௬௦, ௩௪௦, ௩௪௬. தூங்கலோரி யார் பாடிய தழும்பனது ஊணூரென ஊணூரைப் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். உஉ௬. இவர் பாடிய அகப்பாட்டுக்களில் பெரும்பாலும் சேரசோழ பாண்டியர் சிற்றரசர் இவர்களில் யாரையேனுங் கூறாதுவிடுவ தில்லை. இன்னும் இவராற் புறத்திற் பாடப்பெற்றோர் பாண்டியன் இல வந்திகைத் துஞ்சிய நன்மாறனும் (புறம். ௫௬.) சோழநாட்டுப் பிடவூர்க் கிழார் மகன் பெருஞ்சாத்தனும்; (புறம். ௩௯௫.) [பிடவூர்-திருசிராப்பள் ளிக்குக் கீழ்பாலுள்ளது.] இவர் சிவபெருமானொடு வாதுகூறியதாகத் திருவிளையாடல் கூறுகிற்கும். இவர் பாடியனவாகப் பத்துப்பாட்டில் இரண்டும், நற்றிணையில் ஏழு (௩௧, அ௬, ௧௪௧, உ௫௮, ௩௪௦, ௩௫௮, ௩௬௭.) பாடல்களும், குறுந்தொகையில் எட்டும், அகத்தில் பதினேழும், திருவள்ளுவமாலையில் ஒன்றும், புறத்தில் மூன்றுமாக முப்பத்தெட்டுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன. இவையேயன்றிப் பதினோராந் திரு முறையில் இவர் செய்த பிரபந்தஞ் சிலவுள, யாப்பருங்கல விருத்தியுரை யில் நக்கீரர் நாலடி நாற்பது என ஒன்று கூறப்படுகிறது; இதுகாறும் அது அச்சில் வந்திலது.

## ௬௭. நப்பாலத்தனார்

ந - சிறப்புப் பொருளுணர்த்தும் இடைச்சொல். பாலத்தன் இயற் பெயர். இனிப் பாலத்தனாரெனக் கூறப்படுபவரும் இவரேயாவர். யாப்பருங்கல மேற்கோளுள் நப்பாலத்தனார் சூத்திரமெனச் சில சூத்திரங் காட்டப்படுதலின் இவர் யாப்பிலக்கணஞ் செய்துள்ளாரென்று அறியப்படு கிறது. இவர் பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; கடையெழு வள்ளலில் ஒருவனாகிய கொல்லியாண்ட வல்வில்லோரியைப் பாராட்டிக் கூறியுள்ளார்; நற். ௫உ. இப்பாலைநிலத்தைப் படைத்தோன் இதில் மெல்ல நடந்து காண்பானாகவென்று சுரத்தினருமை கூறியுள்ளார்; நற். உ௪௦. இவர் பாடியனவாக இரண்டு பாட்டுக் கிடைத்திருக்கின்றன. நற். ௫உ, உ௪௦.

## சூஅ. நம்பி குட்டுவனூர்

குட்டநாட்டை ஆட்சி புரிந்தமையின் சேரர் பரம்பரையார் குட்டுவ ரெனப்பட்டார்; ஆதலின் இவர் சேரவமிசத்தினரேயாவர். நம்பி - வீரத் தன்மை யுடையவன். இவர் நெய்தல் வளத்தைப் பெரும்பாலும் பாராட்டிப் பாடியிருப்பதொடு குறிஞ்சியையும் பாடியுள்ளார். தலைமகனது மலை மேற்பட்ட காற்றுவந்து வீசின் இறைமகளது ஆகத்துள்ள பசலை தணியும் என்று இவர் காதற் சிறப்புக் கூறியது சுவையுடையதாகும்; (நற். உ௩௬.) ஆம்பல் மலர்வது காக்கை கொட்டாவி விடுதல்போலுமென்று கூறியுள் ளார்; (நற். ௩௪௫.) இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (௧௪௫, உ௩௬, ௩௪௫.) பாடல்களும், குறுந்தொகையில் இரண்டுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.



## சூசூ. நல்லந்துவனூர்

இவர் அந்துவனாரெனவும் ஆசிரியர் நல்லந்துவனாரெனவுங் கூறப்படுவர். இவர் இயற்பெயர் அந்துவன்; "அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை" (அகம். ருகூ.) என மதுரை மருதனிளநாகனார் கூறுமாற்றானு மறிக. அந்துவனெனப் பிறருமுளராகலின் இவர் நல்லந்துவனாரெனவும், அந்தணராதலின் ஆசிரியர் நல்லந்துவனாரெனவுங் கூறப்பட்டார். ஆசிரியர் என அடைமொழிகொடுத்துக் கூறுவது அந்தணர்க்கே யன்றிப் பிறர்க்குக் கூறும் வழக்குப் பண்டில்லை. கலித்தொகை இவர் செய்ததாக அதன் பதிப்பாசிரியர் கூறுகிற்பர். இவர் அகப்பொருட்சுவையைக் கலிப்பாக்களாற் பலபடப் புனைந்து யாவரும் வியக்கப் பாடும் ஆற்றலுடையவர். பரிபாடலில் நீர்விளையாட்டணி இவர் பாடியவை. பயிலுந்தோறும் அளவிலா மகிழ்ச்சி யெய்துவிக்குந் தன்மையன. அன்றிப் பிரிந்த தலைவிகையறவுகொண்டு புலம்பும் பாடல்கள் கருதுழிக் கன்மனத்தையும் உருகச்செய்யும். (கலித்தொகை) இவர் எல்லாத்திணையையும் விரித்துப்பாடுந் திறமுடையவர். நம்மை நினைந்து குன்றமும் அழாநிற்குமென்று கேட்போ ரிரங்குமாறு கூறியுள்ளார்; நற். அஅ. நாழிகைவட்டிலாற் பொழுதறிவதல்லது ஞாயிற்றை யறியப்படாத மழைக்காலமெனக் கார்காலத்தைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்; அகம். சங. இதனைக் "காலமறி வுற்றுணர்தல் கன்னலள வல்லால், மாலைபக லுற்றதென வோர்வரிது மாதோ" என்றார் கம்பரும்: கார்காலப் படலம், செய்யுள், எஉ. கலித்தொகையை நீக்கி, இவர் பாடியனவாக நற்றிணையில் அஅ-ம் பாடல் ஒன்றும் அகத்தில் ஒன்றும் பரிபாடலில் (முதல் உஉ பாடல்களுள்) நான்கும் (சு, அ, கக, உ0) திருவள்ளுவமாலையில் ஒன்றுமாக எழு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## க00. நல்லாவூர் கிழார்

இஃது ஊர்பற்றி வந்த பெயர். இவர் வேளாளர்; இயற்பெயர் எழுதப்படவில்லை. இவர் தாம்பாடிய 'உழுந்து தலைப்பெய்த' என்னும் அகம் அசு-ம் பாட்டில் முற்காலத்து நிகழ்த்தும் வதுவைச்சடங்கை விரித்துக் கூறியுள்ளார்; குறிஞ்சித்திணையைப் புனைந்து பாடியுள்ளர்; இவர் பாடியனவாக நற்றிணையில் கருசு-ம் பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## க0க. நல்லூர்ச் சிறுமேதாவியார்

இவர் நன்பலூர்ச் சிறுமேதாவியா ரெனவுங் கூறப்படுவர்; அந்தண ரென்றூகிக்கப்படுகிருர்; முல்லைத்திணையில் நரி ஊளையிடுகின்ற பேரொலி முதைப்புனங் காவலர் ஊதுங் கொம்பினெலியோடு ஒருங்கிசைக்கு மென்று வியப்புறக் கூறியுள்ளார்; அகம். கூசு. இவர் முல்லையையுங் குறிஞ்சியையும் புனைந்து பாடியுளர். இவர் பாடியனவாக நற்றிணையில் உஅஉ-ம் பாடலொன்றும், அகத்தி லொன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கO௨. நல்விளக்கனுர்

இவர் நல்விளக்கு என்னுமூரினர்; இஃது ஊர்பற்றி வந்த பெயர். இவர் குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; இவரது பாடலிற் கூறிய உள்ளுறையும் இறைச்சியும் இனிமைதராநிற்கும். இவர் பாடியது நற். அகூ-ம் பாட்டு.

ந, நா.—௪



## கOநூ. நல்வெள்ளியார்

இவர் மதுரை நல்வெள்ளியாரெனவும் நல்லொளியாரெனவும் கூறப்படுவர். இஃது ஏடெழுதுவோர் மிகை. இவர் பெயரானே பெண்பாலரென்று தெரிகின்றது. இவர் பாடியவற்றில் குறைநேர்ந்த தோழி குறை நயப்பக் கூறியது நுண்ணுணர்வினேரை மகிழச்செய்யும்; அகம். கூஉ. இவர் குறிஞ்சியையும் பாலையையும் புனைந்து பெருஞ்சுவை பயப்பப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (எ, சஎ) பாடல்களும், குறுந்தொகையிலொன்றும், அகத்திலொன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கO௪. நல்வேட்டனுர்

இவர் மிளைகிழான் நல்வேட்டனரெனவுங் கூறப்படுவர்; வேளாண் மரபினர். மிளை - ஓரூர். இவர் பேய்க்காஞ்சியைத் தலைமகன் தனக்கு உவமை கூறியதாகப் பாடியுளர்; நற். ௩௪௧. எல்லாத் திணையையும் பாடியுள்ளார்; அடைந்தார்க்கு வருந்துன்பத்தைப் போக்குவதே செல்வமெனப் படும். ஏனைச் செல்வந் தவப்பயனு லெய்துவனவாமென்கிறார்; நற். ௨௧0. இரவு வரும் நெறியினேதத்தை விரித்துக் கூறுகிறார்; நற். ௨௩௨. இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு (௩௩, ௨௧0, ௨௩௨, ௩௪௧) பாடல் களும், குறுந்தொகையி லொன்றுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக் கின்றன.

## ௧0௫. நற்சேந்தனர்

இவர் கோடி மங்கலத்து வாதுளி நற்சேந்தனரெனவுங் கூறப்படுவர்; வாதுளியென்றதனுல் வாதுளகோத்திரத்தின ரெனவும் அந்தணர் மரபின ரெனவுங் கொள்ளப்படும். பாலைத்திணையையுங் குறிஞ்சித்திணையையும் புனைந்து பாடியுள்ளார்; இவர் பாடிய குறைநயப்பு நுண்ணுணர்விஞேரை மகிழப் பண்ணுகிற்கும்; நற். ௧௨அ. இவர் பாடியனவாக நற்றிணையில் மேற்காட்டிய பாடலொன்றும், அகத்திலிரண்டுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧0௬. நற்றங் கொற்றனர்

இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்; தலைவன் பிரிவினுலே தலைவி தன்னுடம்பிளைத்தமை யறிவுறுத்துவாள் யான் கைவளைவேண்டி னேனுக எவ்வளவு இளைத்தாலும் கழலாதபடி எந்தை சிறுவளை யணிந்தன னென்று கூறியது பெருநயம்பயக்குந் தன்மையதாகும். இவர் பாடியது நற். ௧௩௬-ம் பாட்டு.

## ௧0௭. நற்றமனர்

இவர் குறிஞ்சித்திணையைப் பாடியுள்ளார்; பிரிவிடைத் தோழியாற்றுவிப்பது இரும்பினைப் பழுக்கக்காய்ச்சிய உலையிற் கொல்லன் பனைமடற் சின்னீர் தெளித்து நெருப்பைத் தணிப்பதுபோலாகுமென்று கூறியுளர். இவர் பாடியது நற். ககுகூ-ம் பாட்டு.



## ௧௦௮. நிகண்டன்

## கலைக்கோட்டுத்தண்டனார்

மான்கொம்பை நிமிர்த்திக் கைக்கோலாகக் கொண்டமையால் இவர் கலைக்கோட்டுத்தண்டனெனப்பட்டார். இவரது இயற்பெயர் புலப்படவில்லை. நிகண்டன் என்ற அடைமொழியால் இவர் தமிழில் நிகண்டொன்று செய்தாரென்று தெரிகிறது; அதுவே கலைக்கோட்டுத்தண்டெனப்படுவது. இதனை இடுகுறிப்பெயரென்று கொண்டார் களவியலுரைகாரரும் நன்னூல் விருத்தியுரைகாரரும் (சூத். ௪௯.) அஃது இதுகாறும் வெளிவந்திலது. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௩௮௨-ம் பாட்டு.

## ௧௦௯. நெய்தல் தத்தனார்

இவர் இயற்பெயர் தத்தனென்பதே. வேறு தத்தனென்பார் பலருள ராதலானும், இவர் நெய்தற்றிணையைச் சிறப்பித்துப் பாடியிருத்தலானும் ஏனைய தத்தர்களின் இவர் வேறென்பது தெரிய நெய்தற்றத்தனு ரெனப் பட்டார். நெய்தலே யன்றிப் பாலையையும் பாடியுள்ளார். மீபடுந் துயரைத் தலைமகனார்க்குச் சென்று அவனறியும்படி கூறுவோமோவென்று தோழி தலைமகளை நோக்கிக்கூறியதாகக் கூறி மகிழ்விக்கின்றார்; நற். சக. இவர் பாடியனவாக மேற்கூறிய பாடலொன்றும், அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ககo. நொச்சிநியமங் கிழார்

இஃது ஊர்பற்றி வந்த பெயர். நொச்சிநியமம் - ஒரூர். இவர் வேளாண் மரபினர். இக்காலத்து ஆராய்ந்தறிதற்குமரிய பூக்கோட்காஞ்சி இயற்றியவர்; புறம். உகூ. குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளாராதலின் இவரூர் குறிஞ்சியினகத்ததுபோலும். மீபடுந்துயர்தான் யாதென்று வினவிய தாய்க்குத் தலைவன் யார்பணங்கென்று தவறியுரைக்கத் தொடங்கினேனென்று தலைவி கூறுவதாகப் படிப்போர்க் கின்சுவை யூட்டுகின்றார்; நற். கஎ. தலைவியின்மொழி கேட்பினுய்வேன் அன்றேலென்னுயிரோடெல்லா மொருங்கழியுமென்று தலைவன் கூறுவது இனிய சுவையதாகும்; நற். உoக. புதுவதாகப் பூத்த வேங்கை மலரைப் பெறவேண்டி மகளிர் புலிபுலியென்று பூசலிடுவதையும் அதனைக் கேட்டுப் புலிபோலுமென்று ஆடவர் வில்லம்புடன் வருவதையும் விரித்துக் கூறியுள்ளார்; அகம். ருஉ. (புலிபுலி யென்றால் வேங்கையின்கிளை தாழ்ந்து கொடுக்குமென்பது வழக்கு.) இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (கஎ, உoஅ, உoக) பாடல்களும், அகத்திலொன்றும், புறத்திலொன்றுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ககக. பரணர்

இவர் கடைச்சங்கப்புலவருளொருவர்; கபிலரொடு நட்புடையரா யிருந்தவர்; சோழன் உருவப்பஃறேரிளஞ் சென்னியைப் புகழ்ந்து பாடிய வர்; புறம். ௪. நெடுஞ்சேரலாதனும் பெருவிறற்கிள்ளியும் போர்புரிந்து மடிந்ததனையும், போர்க்களத்தின் அழிவையும் நோக்கி இரங்கிக் கூறினர்; புறம். ௬௩. வையாவிக் கோப்பெரும்பேகனைப் பாணாற்றுப் படையும் இயன்மொழியும் பாடி உவப்பித்தருளினர்; புறம். ௧௪௧, ௧௪௨. அவனால் நீக்கப்பட்ட கண்ணகி யென்பாளை மீட்டும் அவன் அழைத்துக்கொள்ளு ம்

படி பாடியருளினர்; புறம். கசச, கசகு., மகட்பாற்காஞ்சி யென்னுந் துறை, பலரினும் பலபடப் புனைந்து பாடியுள்ளார்; புறம். ௯௩௬, ௯௪௧. அம் மகட்பாற்காஞ்சியின்கட் குட்டுவனையும் அவனது முசிறியையும் புகழ்ந்து பாடினர்; புறம். ௩௪௩. "வாய்மொழித் தழும்ப னூணூ ரன்ன" எனத் தழும்பனையும் அவனது ஊணூரையும் பாராட்டிக் கூறுவாராயினர்; புறம். ௩௪௮. தித்தனையும் அவனது உறையூரையுங் கூறியுள்ளார்; புறம். ௩௫௨. சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனை எர்க்கள வுருவகம் பாடிப் பரிசில் வேட்டனர்; புறம். ௩௬௯. (சிலப்பதிகாரத்திற் கூறப்படுஞ் செங்குட்டுவனிவனே.) இச் செங்குட்டுவனைப் பதிற்றுப் பத்து ஐந்தாம்பத்துப் பாடி அவன் கொடுத்த வரிசையெல்லாம் பெற்று மீள்வாராயினர்; அகத்திலும் இவரால் அச் செங்குட்டுவன் புகழ்ந்து பாடப்பெற்றான்; அகம். ௩௯௬. வள்ளலாகிய வல்விலோரியைப் புகழ்ந்து கூறுவாராயினர்; நற். ௬. கொல்லிமலையிலமைந்த கொல்லிப்பாவையின் தோற்றமும் அதனியல்பும் ஆங்காங்கு உவமை முகத்தால் கூறியுள்ளார்; நற். ௨0௧; குறு. ௮௯; அகம். ௬௨, ௨0௮. கொண்கானத்து (கொங்கணம்—மலையாளம் சில்லா) முன்பிருந்த நன்னன் என்னும் சிற்றரசனது கொடை முதலியனவும், அவனது கொடுஞ் செயல்களும், அவனொடு சேரமான் போர்செய்ததும், சேரன் சேனபதி ஆஅய் எயினனை நன்னன் சேனபதி மிஞிலி யென்பான் கொன்றதும் பிறவும், நன்னனது பாழியில் பொருள் சேமித்துக் காவலோம்பியதும் இவரே விரித்துக் கூறுகின்றார்; நற். ௨௬௫, ௨௭0; குறு. ௭௩, ௨௯௨; அகம். ௧௫௨, ௧௮௧, ௨0௮, ௨௫௮, ௩௫௬, ௩௯௬. சேரலனது தொண்டியைப் புகழ்ந்தது; குறு. ௧௨௮. சேந்தனது உறையூர், காவிரி, அழிசியின் ஆர்க்காடு, இவற்றைப் பாராட்டிக் கூறியது; குறு. ௨௫௮. அஃதை தந்தையைப் பாராட்டியது; குறு. ௨௯௮. விச்சியர்கோன் போரும் குறும்பூரார் ஆரவாரிப்புங் கூறியது; குறு. ௩௨௮. தித்தனது உறையூருங் காவிரியும் மத்தியின் கழாருங் கூறியது; அகம். ௬. வெளியன் தித்தனது கானலம் பெருந்துறையும் பிண்டன் தோல்வியும் நள்ளியின் சோலைச் சிறப்பும் ஆஅய் கானத்துச் சிறப்புங் கூறியது; அகம். ௧௫௨. அதிகனது வேங்கை மலையைப் புகழ்ந்து கூறியது; அகம். ௧௬௨. மணல் வாயில் உறத்தூரைப் பாடியது; அகம். ௨௬௨. பேளர் என்னு மூரிலுள்ள சோழர் சேனபதி பழையனைப் புகழ்ந்தது; அகம். ௧௮௬. ஆஅய் அண்டிரனது பொதிய மலையைப் புகழ்ந்தது; அகம். ௧௯௮. மற்றும் இவர் சோழன் கரிகாற் பெருவளத்தான் மகள் ஆதிமந்தி என்பாள் தன் காதலனை யிழந்து புலம்பிய கதையை விரித்துஞ் சுருக்கியும் உவமமாக்கியும் பலவிடங்களிலுங் கூறுகின்றார்; அகம். ௧௩௫, ௨௨௨, ௨௨௬, ௨௩௬, ௩௭௬, ௩௯௬. திருவழுந்தூர்த் திதியனும் அன்னி குடி அன்னியும் பொருதகதையை விளக்கிப் பல விடங்களினும் உவமிக்

கிறார்; அகம். ௧௯௬, ௨௬௨. அதிகமானெடுமானஞ்சி திருக்கோவலூரை வென்றதனைப் பாராட்டிக் கூறினார்; அகம். ௩௭௨. அங்ஙனம் பாடியதனை யெடுத்துக்காட்டிப் "பரணன் பாடினன் மற்கொல்" என ஔவை யாராற் புகழ்ந்து பாடப்பெற்றார்; புறம். ௯௯.

இவர் பாடிய பாடல்களொவ்வொன்றினும் யாரையேனும் புகழாமலும், அக்காலத்து நிகழ்ந்த கதைகளிலொன்றைப் புகுத்தாமலும் பாடுவதில்லை; இன்னும் வாகைப்போரிற் பாண்டியன், அதிகன், கொங்கர், சேரசோழபாண்டியர், வேளிர், சேரலன் சேனபதி கணையன், இவரெல்லாம் நம்புலவர் பாடலால் நிலைபெற்று விளங்குகிறார்கள்; இவையேயன்றி அகத்துறைகளில் இவர் காட்டிய வியப்புக்களை யெடுத்துக் கூறற்கு என்னு



வியலாமையால் அவற்றைப் படிப்பவர்களே கண்டு மகிழ்வார்களாக. அகம். ௨௦௨-ல் மாதரை இவர் வருணித்திருப்பது வியக்கத்தக்கது. இவர் பாடியனவாக நற்றிணையில் பன்னிரண்டு (௬, ௧௦௦, ௨௦௧, ௨௪௭, ௨௬௦, ௨௯௯, ௨௭௦, ௨௮௦, ௩௦௦, ௩௧௦, ௩௯௦, ௩௯௬,) பாடல்களும், குறுந்தொகையில் பதினைந்தும், பதிற்றுப்பத்தில் பத்தும், அகத்தில் முப்பத்திரண்டும், புறத்தில் பன்னிரண்டும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக எண்பத்திரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௧௨. பராயனார்

இவரைப்பற்றி யாதும் விளங்கவில்லை. நெய்தலைச் சுவைமிகத் தோன்றப் பாடியுள்ளார். இவர் பாட்டில் தலைமகன் தலைமகளை ஐயுற்று வினவுவது இனிமை பயவாநிற்கும். இவர் பாடியது நற். ௧௯௯-ம் பாட்டு.

## ௧௧௩. பாண்டியன் மாறன்வழுதி

இவன் மாறன்வழுதியெனவுங் கூறப்படுவான்; மதுரைப் பாண்டியர் மரபினன். குறிஞ்சியையும் முல்லையையும் புனைந்து பாடியவன்; பூவிலே மடந்தையைக் காண்டலும் பருவவரவறிந்து தலைமகள் பிரிவிற்கிரங்குவது கேட்போரிரங்குதற்குரியதாகும்; நற். கஎ. இவன் பாடிய பாட்டு

இரண்டு; நற் கஎ, ௩0௧.

## ககச. பாரதம்பாடிய பெருந்தேவனார்

இவர் எட்டுத் தொகையுட் பெரும்பாலனவற்றுக்கும் காப்புச் செய்யுள் பாடியவர். பெருந்தேவனார் எனப் பிறருமுளராதலின் அவரின் இவர் வேறென்பது தெரியப் பாரதம்பாடிய பெருந் தேவனாரென அடைமொழி கொடுக்கப்பட்டார். வியாசபாரதத்தை வெண்பாவும் அகவலும் உரைநடையும் விரவிவரப்பாடி வெளியிட்டமையிற் பாரதம்பாடிய பெருந் தேவனாரெனப்பட்டார். இவர் பிறந்தது தொண்டைநாடு எனச் "சீருறும் பாடல் * * * பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண், மாருதம் பூவின் மணம்வீ சிடுந்தொண்டை மண்டலமே," என்று தொண்டை மண்டல சதகங் கூறுநிற்கும். இப்பொழுது பாரதவெண்பாவென அச்சிட்டு வழங்கு நூலில் முதலில் விநாயக வணக்கமும் அடுத்துத் தெள்ளாற்றிற் போர்வென்ற அரசன் சிறப்புங் கூறுவது காரணமாக இவர் தொண்டை நாட்டிற் பிறந்தவரென்று படிக்காசுப் புலவர் தமது தொண்டைமண்டல சதகத்து எழுதிவைத்தார். தெள்ளாற்றிற் போர்வென்றது கடைச்சங்கம் அழிந்த பல்லாண்டுகளுக்குப் பின்னரே யாம். அதனைக் கூறுதலின் இப்பெருந்தேவனார் கடைச்சங்கப் புலவரல்லரென்பது தேற்றம். ஆதலின் இப்பொழுது வழங்கும் பாரத வெண்பாப் பெருந் தேவனார் பாடியதன்றெனவும் பெருந்தேவனார் பாடியது உதாரணமாக எடுத்தாண்ட சில செய்யுளன்றி நூல்முழுவதும் அழிந்துவிட்டதென்றும் சில பெரியோர் கூறுவதுண்மையெனக் கொண்டு தொண்டை நாட்டின ரென ஒருதலையாகக் கொள்ளாதொழிக. அச்சிட்டு வழங்கும் பாரத வெண்பா நடையையும் உதாரணமாக முன்பெடுத்தாண்ட பாரத வெண்பா, அகவல்களி னடையையும் ஒப்பு நோக்கியறிக.

மற்றும் இந்நற்றிணைக்குக் கூறியகாப்பு விட்டுணுசகத்திர நாமத்தியான சுலோகமாகிய (பூ: பாதௌ) என்றதின் மொழிபெயர்ப்பேயாம்.

 நற்றிணை நானூறு

நற்றிணையிலும் அகத்திலும் பெருந்தேவனாரென ஒருவர் காணப்படுகிறார்; அவரின் இவர் வேறென்பது பாரதம்பாடிய என்ற அடைமொழியாற் பெறப்படும்; நற்றிணையிலே திருமாலையும் மற்றவற்றிற் சிவபிரான் முதலாயினோரையும் இவர் வணக்கங் கூறுதலால் எல்லாமதத்தினையுந் தன்வயினடக்கிக்கொண்ட அத்துவைத மதத்தினராவர்.

இவர் பாடியனவாக நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகம், புறம் ஆகிய இவ்வைந்து தொகை நூல்களின் காப்புச்செய்யுள்களைந்தும்; திருவள்ளுவமாலையி லொன்றுமாக ஆறு செய்யுள்கள் கிடைத்திருக்கின்றன.

## பாலத்தனார்

மேலே (கஎ) நப்பாலத்தனார் பார்க்க.

## ககரு. பாலைபாடிய பெருங்கடுங்கோ

இவர் சேரமான்மரபினர், சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ வெனவும் பெருங்கடுங்கோ வெனவுங் கூறப்படுவர்; பாலைத்திணையைப் பலபடியாகச் சிறப்பித்துப்பாடும் ஆற்றலுடையவர்; பெருங்கடுங்கோ வென்னுமியற்பெயருடையவர்; பாலைத்திணையொன்றனையே பாடியதனாற் பாலைபாடியவென்று அடைமொழி கொடுக்கப்பட்டார்; கொண்கான (கொங்கண)த்து நன்னனையும் அவனது ஏழில் மலையையும் பாடியுள்ளார்; நற். ருகூக. பேய்மகள் இளவெயினி என்பவளாற் பரிசில்வேண்டிப் பாடப்பெற்றவர்; புறம். கக. மிக்கவீரமும் கொடையுமுடையவர்; பிரிவச்சங்கூறுந் தலைமகன் கூற்றாக "நிற்றுறந் தமைகுவெ னாயினெற்றுறந், திரவலர் வாரா வைகல், பலவா குகயான் செலவுறு தகவே," (குறு. கருஎ.) என்றதனால் இவர் கொடைத்தன்மை இவ்வண்ணமாயிருக்குமென்பது தெரிந்துகொள்க. பாலைத்திணையை உடன்போக்கு முதலாய பலவகைத் துறைகளையுமமைத்து விரித்து விளங்கப்பாடியுள்ளார்; தலைமகளைத் தலைமகன்பெற்றமை ஒருவன் தான் வழிபடு தெய்வத்தைக் கண்ணெதிர்வரப்பெற்றாற் போன்றதென்று கூறுகின்றார்; இதில் தலைமகளை இனிதுகூறி நடத்திச்செல்வது வியக்கத்தக்கது; நற். கூ. பிரிவுணர்த்தியவழித் தோழி நாம் முன்புவந்த கொடிய சுரம் இப்பொழுதும் என்கண்ணெதிரிலுளதுபோலச் சுழலா நிற்குமென இறும்பூதுபடக் கூறுகின்றார்; நற். சஅ. பூவிலைமடந்தையைக் கண்டு பருவம் வந்தும் அவர் வந்தாரில்லையேயென்று தலைவி கூற்றாக நொந்து கூறுகின்றார்; நற். ககஅ. கோங்கம் மலர்ந்திருப்பதைக் கார்த்திகை விளக்கெடுத்தலுக்கு உவமிக்கிறார்; நற். உ0உ. கூந்தலின் சிறப்புக்கூறி அக்கூந்தலிற் கிடந்துகொள்ளும் பயனைக்கொள்ளாது பிரிவோர் அடைந்தாரைக் காப்பதை மறந்தனரோவெனத் தோழிகூற்றாக விரித்துக் கூறாநிற்பர்; நற். ருருஎ. குறு. ருஎ-ல் இவர் கூறிய உள்ளுறையை அங்ஙனமே கொண்டார் வாதவூரடிகள்; திருக்கோவையார் - உஎசு. தலைவன்வாராமையும் தன்னை முயங்காமையும் தன்னை அயலார் சுடலைபோல அகற்றலுமாகியவற்றைத் தலைவி கூறிய பகுதி இரங்குந்தன்மையதாகும்; குறு. உருக. பிரிவுண்மையறிந்த தலைவி காதலனை மயக்குந் தன்மையுடைய கோலத்தொடுவந்து அவன்மீது சாய்ந்து முயங்கி வருந்துவதாக இவர் கூறியது நீத்தாரையும் விழைவிக்குந் திறத்ததாகும்; அகம். ரு. பிரியுங் காதலர் இரும்பினாலாகிய உயிருடையரெனத் தலைவிகூற்றாகக் கூறாநிற்பர். அகம். கஅரு. பிரிவோர்

பழியுடையரல்லர் ; அவரைப் பிணிக்க அறியாத என் தோள்களே தவறுடையனவெனத் தலைவி கூறுவதாக அமிழ்தம்பொழியாநிற்பர் ; அகம். உகூஎ. மான்கொம்புமுளைத்து முதிருமளவுந் தோல்பொதிந்திருப்பது கூறுகின்றார்; அகம். உகூக. பாலைநிலத்திற் பாம்பு வாடிக் கிடப்பது பணஞ்சொரிந்த பைபோன்றதென்கிறார் ; அகம். ௩கக. இவர் பாடியனவாக நற்றிணையில் பத்துப் (கூ, ௪அ, ககஅ, உ0உ, உ௨௪, உ௯௬, ௩கஅ, ௩௩எ, ௩அ௪, ௩௬௬) பாடல்களும், குறுந்தொகையில் பத்தும், அகத்தில் பதினொன்றும், புறத்திலொன்றுமாக முப்பத்திரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ககசு. பிசிர் ஆந்தையார்

இவர் பாண்டி நாட்டுப் பிசிர் என்னுமூரிலுள்ள ஆதன் தந்தையார். உறையூரையாண்டிருந்த கோப்பெருஞ்சோழனுக்கு உயிர்த்தோழராயுள்ளவர். பரிமேலழகர் எஅ௫-ம் குறள் உரையில் 'கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர் நீங்குமுரிமைத்தாய நட்பினைப்பயக்கும்' என்றெழுதியதனாலும் இவர் நட்பின் திறமையறிக. ஒரு காலத்துக் கோப்பெருஞ் சோழன் தன் மக்களொடு பகைத்துப் போருக்கெழுதலும், புல்லாற்றூர் எயிற்றியனார் தடுத்து நன்னெறிப் படுத்தினர் ; புறம்- உகந. அவர் மொழிவழி நின்ற அரசன் தன் இராச்சியத்தைவெறுத்து ஒரு மரத்துநிழலில் வடக்கு முகமாகப் பட்டினியிருந்து உயிர்விடத் துணிந்தனன் ; புறம். உக௪. அப்பொழுது பற்பல புலவரும் அறிவுடை முதியரும் அருகிருப்ப அரசன் என் நட்பாளன் பிசிர் ஆந்தை இன்னேவருகுவன் ; (புறம். உக௫.) அவனுக்கும் என்னோடு இடமொழிப்பீராக (புறம். உகசு.) வென்னுமளவிற் பிசிராந்தையாரும் வந்து சேர்ந்தனர் ; புறம். உகஎ. வந்த இவரும் பட்டினியாகி வடக்குமுகமாவிருந்து அரசனோடு உயிர் நீத்தருளினார். இவ்விருவரும் ஏனைப்புலவரும் ஆங்குப்பாடிய பாடல்கள் கேட்போரை உருக்குந்தன்மைய. இப் பிசிராந்தையார் நரைதிரையின்றி நெடுங்காலஞ் சீவித்திருந்த முதியோர் ; புறம். கூகக. இவர் பாண்டியன் அறிவுடைநம்பியைப் பாடி மகிழ்வித்தார் ; புறம். கஅ௪. இவர் செய் தலையும் குறிஞ்சியையும் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் கூக-ம் பாடலொன்றும் அகத்திலொன்றும் புறத்தில் நாலுமாக ஆறுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ககள. பிரமசாரி

இவர் பெயரினாலேயே இவர் மணம்புரிந்து கொள்ளாது பிரமசரியம் காத்திருந்த அந்தணரென்பது தோன்றுகின்றது. "கடவுளாயினுமாக, மடவை மன்ற வாழிய முருகே," என முருகவேளை இவர் பாடலிற் கடிந்துகூறிய மனத்திட்பம் கருதத்தக்கது. இவர் குறிஞ்சியைப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். ங௪-ம் பாட்டு.

## ககஅ. பிரான் சாத்தனார்

இவர் குறிஞ்சித்திணையைப் பாடியுள்ளார்; மகளிர் விளையாடாது இல்லின்கணிருத்தல் அறனுமன்று, ஆக்கமுந்தேயுமென்று அன்னையிடங் கூறுமாறு இற்செறிக்கப்பட்ட தலைவி கூறியதாக வியப்பெய்தக் கூறியுள்ளார். இவர் பாடியது நற். ௬அ-ம் பாட்டு.



## ககசு. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான்

இவர் வேளாண் மரபினர்; கம்பூரென்னு மூரினர். வண்ணக்கன் - நாணயசோதகன், நோட்டக்காரன். புதுக்கயம் என்ற ஊரில் நோட்டக் காரராய் வந்து தங்கியவர். இவர் குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். உகச-ம் பாட்டு.

## கஉ௦. பூதங்கண்ணனார்

இவர் பூங்கண்ணனுரெனவுங் கூறப்படுவர். இவர் குறிஞ்சித் திணையைப் பலபடப் புனைந்துபாடியுள்ளார். தோழியாலே குறை மறுக்கப்பட்ட தலைமகன் தன் நெஞ்சைநோக்கி அவளருளினும் அருளாது விடினும் என் நோய்க்கு அவளன்றிப் பிறிதொரு மருந்தில்லையென்று கூறுவதாக இவர் பாடியது மகிழ்ச்சி தருவதாகும்; நற். கசO. இவர் பாடியனவாக நற்றிணையில் மேற்காட்டிய பாடலொன்றும் குறுந்தொகையி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கஉக. பூதனுர்

இவர் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். மகட்போக்கிய தாய் பாலையை வருணிப்பதாக இவர் கூறியது மிக்க சுவையுடையதாகும். இவர் பாடியது நற். உகூ-ம் பாட்டு.

## கஉஉ. பூதன்றேவனுர்

ஈழத்துப் பூதன்றேவனுரென்பவ ரொருவர் காணப்படுகிறுர்; அவர் தாமோ இவரென்றையமெய்துமாயினும், இவர் மருதத்திணையைச் சிறப் பித்துப் பாடி அத்திணையிலே களவு நிகழ்ந்ததாகவும் கூறியிருப்ப, ஈழத்துப் பூதன்றேவனுர் பாடியதெல்லாங் குறிஞ்சித்திணையே; ஆதலால் இருவரும் வெவ்வேருவரென்று கருதலாயிற்று. வைகறையில் எருமையை மேய்க்கக் கொண்டுசெல்லுஞ் சிறுவர் அம்மாட்டின் முதுகி லேறியிருந்து நடத்தாநிற்பரென்று கூறுகிறுர்; தலைமகன் நெஞ்சினை நெருங்கித் தைந்நீராடும் அத்தலைமகளல்லது யானுற்றநோய்க்குப் பிறி தொருமருந்தில்லை யென்று கூறுவதாக இவர் மொழியாநிற்பர்; நற். அO. இவர் பாடியனவாக நற்றிணையில் அO-ம் பாடலொன்றும் குறுந்தொகையி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கஉங. பெருங்கண்ணனுர்

மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனா ரெனவும், விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனாரெனவும் இருவருளர் ; அவரின் இவர் வேறென்பது தெரிய அடைமொழிகொடாது கூறப்பட்டார். இவர் பாலையையும் நெய்தலையும் புனைந்து பாடியுள்ளார் ; இவர் பாடியன வாக நற்றிணையில் கூ௭-ம் பாடலொன்றும் குறுந்தொகையிலிரண்டுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௨௪. பெருங்குன்றூர் கிழார்

இவ்வூர்பற்றி வந்த பெயர் ; இவர் வேளாண்மரபினர். இவர் தமிழ்பயின்று பெரும்புலமையுடையராய் வறுமை மேலீட்டினால் வருந்திக் குடக்கோச் சேரலிரும்பொறை யென்பா னிடஞ்சென்று பாடிப் பலநாள்

காறும் அவன்பாலிருந்தும் அவன் யாதோ பரிசில் கொடுப்பவன் போலக் காட்டிப் பின்பு கொடானாய் ஏமாற்றிவிட்டனன். புலவர் வருத்தமுற்றுத் தமது வறுமைநிலைமையும் அதனாலே தம் மனைவியும் புதல்வனும் படுந் துன்பமும் விரித்துக்கூறி, அவனையும் நீ பொய்ம்மையுடையையென்று குறிப்பாகப் பலவாறு மொழிந்து இகழ்ந்துவிட்டு (புறம். உ௪0, உ௪௧.) வையாவிக் கோப்பெரும் பேகனிடஞ்சென்றனர். அங்கு அவன் தன் மனைவி கண்ணகி யென்பாளைத் துறந்தமையறிந்து அவனைப்பாடி, நீ நின் மனைவியை மீட்டுக் கொள்வதே எமக்குப் பரிசில் கொடுத்ததாகுமென்று கூறி (புறம். ௧௪௭.) மீண்டு, சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியிடஞ் சென்று, தம் வறுமை புலப்படக்கூறி, அவனால் ஆதரிக்கப் பெற்றிருந்தனர்; புறம். உ௬௬. அங்ஙனமிருக்குநாளில் சேரமான் குடக் கோச்சேரலிரும்பொறை யிறந்துவிட, அவன் தம்பி குடக்கோ இளஞ் சேர லிரும்பொறை யென்பான் அரசாட்சி கைக்கொண்டனன். அதனை யறிந்த நம் புலவர் பெருமான் அவ்வரசனிடஞ் சென்று, அவன் விச்சிக் கோனை வென்றதும், பெருஞ்சோழனையும் பழையன் மாறனையும் போர் தொலைத்ததும் ஆகிய இன்னோரன்ன சிறப்பெல்லாம் அமைத்துப் பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தைப் பாடி, அவனால் அளவுகடந்த பரிசில் கொடுக்கப்பெற்று வாழ்ந்திருந்தனர்; (பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தின் பதிகம்.) இவர் பாடிய ஒன்பதாம் பத்தில், "நல்லிசைக்-கபிலன் பெற்ற வூரினும் பல" என்று கபிலரைப் பாராட்டிக் கூறியது அறியத் தக்கது. இவர் குறிஞ்சித்திணையைப் பலபடியாகச் சிறப்பித்துப் பாடி யுள்ளார். சந்தனமரத்துவேர் தனியே யிருந்தால் மரத்தில் வாசனை யமையாதென்றும் பிறவேர்களோடு கலந்தால் மரம் நறுமணங் கமழுமென் றும் குறிப்பிக்கிறார்; நற். ௯. உள்ளுறையும் இறைச்சிகளும் அடுக்கிவரக் கூறியுள்ளார்; நற். ௧௧௬. தலைவியின் பசலையை மணலுண்முழுகிக் கிடக்குந் தேரையொடு உவமிக்கிறார்; நற். ௩௪௭. இவர் பாடியனவாக நற்றிணையில் நான்கு (௯, ௧௧௨, ௧௧௬, ௩௪௭) பாடல்களும், குறுந் தொகையிலொன்றும், அகத்தில் ஒன்றும், புறத்தில் ஐந்தும், பதிற்றுப் பத்தில் பத்துமாக இருபத்தொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௩௨௫. பெருங் கௌசிகனார்

இவர் தொண்டைநாட்டு இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கவுசிகனு ரெனப்படுவர். தொண்டைநாட்டுப் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன்சேய் நன்னனை மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) பாடியவர் இவரே. அந்தணர் மரபினர்; "ஊரும் பெயரும்" என்ற தொல் பொரு. கூ௨0-ம் சூத்திரவுரையிற் 'பெருங் குன்றூர் பெருங்கௌசிகன் அந்தணர்க்குரியன' என்று பேராசிரியர் கூறுமாற்றானுமறிக. இவர் மலைபடுகடாத்தில் 'தீயினன்னவொண் செங்காந்தள்' (கசங) என்று பாடியதனை "நன்னனென்னும் பெயர் தீயோடடுத்தமையின், ஆனந்தக் குற்றமாய்ப் பாடினாரும் பாட்டுண்டாரும் இறந்தாரென்று ஆளவந்த பிள்ளையாசிரியர் குற்றங் கூறினாரா லெனின், அவர் அறியாது கூறினர்," என்று நச்சினார்க்கினியர் தம் உரையகத்துக் கூறியுள்ளார். அஃது ஆனந்தக் குற்றமாயினும் அன்றாயினும் பாடினாரும் பாட்டுண்டாரும் ஒருகாலத்து இறந்தனரென்றதனை மறுத்திலாமையின் அங்ஙனமே இப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் பாடி யரங்கேற்றியவுடன் இறந்தனராதல்வேண்டும். இவர் குறிஞ்சியையும் முல்லையையும் புனைந்து பாடியுள்ளார்; வினைமுடித்து மீண்டுவந்து



தலைவி யின்பந்துய்த்து அவளுடனிருந்த தலைமகன் மழையை வாழ்த்துவது இனியசுவைபயவாநிற்கும்; நற். கடுகூ. இவர் பாடிய பாட்டு இரண்டு; நற். சச. கடுகூ.

## கஉசு. பெருந்தலைச் சாத்தனார்

இவர் ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனாரெனவும், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனா ரெனவுங் கூறப்படுவர்; வேளாண்மரபினர். ஏனைய வெளிப்படை. பெரியதலையையுடைய

ராதலிற் பெருந்தலைச்சாத்தனா ரெனப்பட்டார் போலும். இவர் வறுமை மேலீட்டினால் வருந்திக் கொடைவள்ளலாகிய குமணனிடஞ் சென்றனர்; அவன் தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுசென்றன னென்பதறிந்து அவனிருக்குங் காட்டையடைந்து தாம் வறுமையால் படுந்துன்பமெல்லாங் கூறினார்; புறம். கசுச. அதனைக்கேட்ட குமணன் என்தலை கொணர்ந்தார்க்கு இவ்வளவு பொருள் கொடுப்பேனென்று தம்பி புலப்படுத்தியுளனாதலின் அவ்வாறே என் தலையைக் கொய்து கொண்டுபோய்க் கொடுத்து நின் வறுமையைப் போக்கிக்கொள்ளென்று தன் வாளை அவர் கையிற்கொடுத்தனன்; அதனைப் பெற்ற புலவர் உடனே இளங்குமணனிடஞ்சென்று நிகழ்ந்தது கூறி அவனுள்ளத்திருந்த கறையைப் போக்கி நட்பாக்குவித்தனர்; புறம். கசுரு. ஒருகால் நள்ளியென்பவனின் தம்பி இளங்கண்டீரக்கோவும், விச்சிக்கோவின் தம்பி இளவிச்சிக்கோவும் ஓரிடத்து இருந்தபொழுது அங்குச்சென்ற இப்புலவர் நள்ளியின் தம்பியை மட்டும் அணைத்து மகிழ்ந்து அளவளாவினர். இளவிச்சிக்கோ என்னைத் தழுவாதது என்னென "நீ பெண் கொலைபுரிந்த நன்னன் மருகனாதலோடு பாடுவார்க்கு யாதுங்கொடாது கதவை யடைக்கின்றனையாதலால் தழுவுதற்கு உரியையல்லை" யென்றிகழ்ந்து கூறினார்; புறம். கடுக. மற்றொருகால் கோடைமலைத் தலைவனும் பாண்டியன் சேனாபதியுமாகிய கடிய நெடுவேட்டுவனிடஞ் சென்று பரிசில்வேண்ட அவன்கொடாது தாழ்த்தனன்; புறம். உ0ரு. அதுகண்டு புலவர் வெறுத்துக்கூறிப் பின்பு அவனால் பரிசளிக்கப்பெற்றனர். பெற்றதனால், பின்பு புகழ்ந்தனர். அகம். கங. அப்பால் மூவனென்பானிடஞ் சென்று அவனும் ஈயானாக அவனையும் அங்ஙனமே கூறி மீண்டனர். புறம். உ0க. இவர் பாலையையும் முல்லையையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் உகஉ-ம் பாடலொன்றும், அகத்தில் இரண்டும், புறத்தில் ஆறுமாக ஒன்பது பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கஉஎ. பெருந்தேவனார்

பெருந்தேவனாரெனப் பலருளர். இவரின் வேறென்பது தெரிய மற்றையோர் பாரதம்பாடிய பெருந்தேவனாரெனவும் கடுகுபெருந்தேவனாரெனவும் கவிசாகரப் பெருந்தேவனாரெனவும் அடைமொழி கொடுக்கப் பட்டுளார்கள். அவர்களின் வேறுபடுத்த அடைமொழி கொடாது, இவர் பெயர் மாத்திரையாகவே கூறப்பட்டார். கூகையைநோக்கித் தலைவி கூறியதாக இவர் பாடிய செய்யுள் மிக்க சுவையுடையது; நற். ௮௩. இவர் குறிஞ்சியையும் பாலையையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௮௩-ம் பாடலொன்றும் அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.



## ௧௨௮. பெரும்பதுமனார்

மீளிப் பெரும்பதுமனார் என்றொருவருளர். இவ்விருவரும் பாடிய வெல்லாம் பாலைத்திணையே யாதலின் இருவரும் ஒருவரேயென்று கருதற் கிடனாயிற்று. மீளி – ஓரூர். ஸ்ரீவில்லிபுத்தூர்த் தாலூகாவில் 'மல்லி' என்றோரூருளது; மீளி யென்பதே மல்லியென்று திரிந்து வழங்குகிறதோ தெரியவில்லை. குறுந்தொகையில் இவர் பாடிய 'வில்லோன் காலனகழ' லென்ற பாடலும் புறத்திலிவர் புலவர்கள் பறவைக் கூட்டமாகவும் செல்வ முடையவர் ஆலமரமாகவும் வைத்துக்கூறிய பாட்டும் எவர்க்கும் இன்பம் பயப்பனவாம். இவர் பாலைத்திணையைப் பலபடப் புனைந்து பாடியுள் ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௨, ௧௦௯.) பாடல் களும், குறுந்தொகையி லொன்றும் புறத்திலொன்றுமாக நான்கு பாடல் கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௨௯. பெருவழுதி

இவர் கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதியெனவும் இளம்பெருவழுதியெனவுங் கூறப்படுவார். இவர் திருமாலிருஞ்சோலை வாசுதேவனையும் பலதேவனையும் பரவியவாருகப் பரிபாடலில் "புலவரையறியாப் புகழொடு பொலிந்து" என்னும் பாடலை யியற்றியவர். இப்பாட்டிற்கு இசைவகுத்தவர் மருத்துவன் நல்லச்சுதனர். இவர் பாடல் நற்றிணையில் தாய்கேட்பத் தோழி ஏமாற்றியதாகக் கூறும் கூற்றும் நெஞ்சம் பிரிந்துசென்று மீண்டு வந்து தன் தலைவி வேறுபாட்டை நோக்கி இவளல்லளெனப் போயிற்றேவென்று தலைவி கூறும் கூற்றும் வியப்பைத் தருவனவாம். கடலுட் சென்றவிடத்து இறந்தமையின் இவர் கடலுண்மாய்ந்த வழுதியென்று கூறப்பட்டார். குறிஞ்சியையும் பாலையையும் நயந்தரப் பாடியுள்ளார். இவர் பாடியவை நற்றிணையில் இரண்டும் (௫௫, ௫௬,) பரிபாடலில் ஒன்றும் (௧௫-ம் பாட்டு.) புறத்திலொன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௩௦. பேராலவாயர்

இவர் மதுரைப் பேராலவாயரெனவுங் கூறப்படுவார். சிவபிரான் நக்கீரரொடு வாதுதொடுக்கவேண்டி ஒரு புலவராக வந்தபொழுது நும் பெயர் யாதென்றோர்க்கு யாம் 'பேராலவாயர்' என்னும் பெயருடையோமென்று கூறியதாகப் பழைய திருவிளையாடல் கூறுநிற்கும். இவர் மதுரையையும் அதனையாளும் பாண்டியன் செழியனையும் அவனது கொற்கை நகரையும் வையையாற்றையும் சிறப்பித்துளார்; அகம். ௨௬௬. இவர் எல்லாத்திணையிலும் பயின்றுளராதலின் அவ்வவற்றைப் புனைந்து பாடியுள்ளார். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தினர். அவனிறந்தானாக அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாயப்போதலும், இவர் அதனைக்கண்டு பரிந்து ஆற்றாராய் வருந்திப் பாடியது மனத்தை நெகிழ்விக்கும்; புறம். ௨௪௭. வெட்சித்திணையில் உண்டாட்டுக்கு இவர் கூறிய பாட்டு ஆராயத்தக்கது. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௫௧, ௩௬௧.) பாடல்களும், அகத்தில் இரண்டும் புறத்தில் இரண்டுமாக ஆறு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௩௧. பேரிசாத்தனர்

இவர் வடவண்ணக்கன் பேரிசாத்தனெனவும் வடம வண்ணக்கன் பேரிசாத்தனெனவுங் கூறப்படுவார். வடக்கிலிருந்து வந்த நாணய

சோதகன் (நோட்டக்காரன்) பேரிசாத்தனென்பது. பாண்டியன் இலவந்திகைத் துஞ்சிய நன்மாறன், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரவிரும்பொறை, சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளி இவர்கள் காலத்தினர். இச் சேரனுஞ் சோழனும் போர்செய்தபொழுது சோழனுக்குத் துணையாய் நின்ற தேர்வண்மலையனைப் பாடி யுவப்பித்தார்; புறம். கஉரு. மேற்கூறிய பாண்டியன் நன்மாறனைப் பரிசில்கேட்டு அவன் கொடாளுக, இவர் வருந்திக் கூறியபாடல் ஆராயத்தக்கது; புறம். ககூஅ. நெய்தலையும் குறிஞ்சியையும் சிறுபான்மை பாலையையும் புனைந்து பாடியுள்ளார். இவர் கூறிய குறைநயப்பு நுண்ணுணர்விஞேரை மகிழ்விக்கும்; நற். உரு. இவர் பாடியனவாக நற்றிணையில் எட்டுப் (உரு, ௬எ, ௬எ, கபரு, ககூக, உகூக, ௬உ௬, ௬எஅ.) பாடல்களும், குறுந்தொகையில் நான்கும், அகத்தில் ஐந்தும், புறத்தில் இரண்டுமாகப் பத்தொன்பது. பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கரு௨. பொதும்பில் கிழார்

இஃது ஊர்பற்றிவந்த பெயர். பொதும்பில் பாண்டிநாட்டிலுள்ள தோரூர்; மதுரைத் தாலூகாவிலுளது; இப்பொழுது பொதும்பு என வழங்குகிறது. இவர் இயற்பெயர் புலப்படவில்லை. இவர் வேளாளர். இவர் கூறிய உள்ளுறை யாவரும் வியக்கத்தக்கது. இவர் குறிஞ்சியைச் சிறப்பித்துளார். இவர் பாடியது நற். ௬எ-ம் பாட்டு.

## கரு௩.

## பொதும்பில்கிழார் மகனர் வெண்கண்ணியார்

இவர் மேற்கூறிய பொதும்பில் கிழாரின் புதல்வர்; வெண்கண்ணி யென்னும் இயற்பெயருடையவர். வெண்கண்ணி யென்றதனானே இவர் பெண்பாலார் போலுமெனவுமாம்; 'கிழார் மகனார்,' 'கிழார் மகன்' என்றிருத்தலானே பெண்பாலாகக்கூற வழியில்லை. இவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைச் சிறப்பித்துப் பாடியிருத்தலானே அவ்வரசன் காலத்தினராவார்; நற். ௬அ௭. அகத்தில் (௧௩0) வெண்கண்ணன் என்றொருவர் காணப்படுகின்றார்; அவர்தாமோ இவர் என்றையப்படவுமமையும். அவரும் பாண்டியரைப் புகழ்ந்து பாடியவரே. இவ்வெண்கண்ணியார் நெய்தலையும் பாலையையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௬௭௫, ௬அ௭.) பாடல்களும் அகத்தி லொன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௩௪. பொய்கையார்

இஃது ஊர்பற்றிவந்த பெயர்; பொய்கை ஓரூர். இவர் சேரன் கணைக்காலிரும்பொறையின் அவைக்களத்தில் சிறப்புற வீற்றிருந்த புலவர் பெருமான். சேரன் கணைக்காலிரும்பொறைக்கும் சோழன் செங்கண் (கோச் செங்கட் சோழன்) னுக்கும் பகைமை மேலிட்டதனால் இருவரும் வெண்ணிப்பறந்தலை (கோயில் வெண்ணிவெளி) யில் பெரும்போர் செய்தார்கள். அப் போரிலே சேரமான் தோற்கச் சோழன் வென்று அச் சேரனைப் பிடித்துக் குடவாயிற் கோட்டத்திற் சிறையிட்டனன். இதனையறிந்த பொய்கையார் சோழனது வெற்றியைச் சிறப்பித்துக் களவழிநாற்பது என்னும் ஒரு நூலியற்றிச் சோழனவைக்களத்து விரித்துக்கூறித் தம் அரசனை மீட்டுக்கொண்

டார். இதனைக் "களவழிக் கவிதை பொய்கையுரை செய்ய வுதியன், கால்வழித் தளையை வெட்டியரசிட்ட பரிசும்" (கலிங்கத்துப்பரணி) என்பதனானறிக. சேரன்கோக்கோதை மார்பனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; புறம். ௪௮, ௪௯. புறம். ௪௮-ல் "கானலந் தொண்டியஃதெம்மூ" ரென்றதனால் இவர் மேலைக் கடற்கரையிலுள்ள தொண்டிநகருக் கணித்தாகிய வூரினரென் றூகிக்கப்படுகின்றது. மற்றும் மூவனென்பானைப் போரில் வென்று அவனது பல்லைப்பிடுங்கித் தொண்டிக்கோட்டை வாயிற் கதவிலே தைத்த சேரலன் கணைக்காலிரும்பொறையென அவனைச் சிறப்பித்துக் கூறுகின்றார்; நற். ௧௮. *"கிடங்கில்" என்னும் ஊரைச் சிறப்பித்துக் கூறியுள்ளார். †"ஆழியிழைப்ப" என்ற பாட்டினால் தொண்டைமான் இளந்திரையனைப் பாராட்டிக் கூறியுள்ளார். பாலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். யாப்பருங்கல விருத்தியுரைகாரர் நாலாயிரப் பிரபந்தத்து இயற்பா முதற்றிருவந்தாதியில் வரும் பாடல்களுள் 'பாலன்றனதுருவாய்' (௬௯) 'எளிதினிரண்டடியும்' (௫௧) என்னும் வெண்பாக்களை எடுத்துக் காட்டி "இப்பொய்கையார் வாக்கினுள்" என்று கூறியவதனால் இவரே வைணவர்கள் துவாபரயுகத்திற் பிறந்தவராகக் கூறும் பொய்கையாழ்வாரென் றறியப்படும். இவர் பாடியனவாக நற்றிணையில் ௧௮-ம் பாடலொன்றும், புறத்தில் இரண்டும், யாப்பருங்கல விருத்தியில் மேற்கோளாகக் காட்டப்படுஞ் சில பாடல்களும், வைணவரது நாலாயிரப் பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ள இயற்பா முதற்றிருவந்தாதியும், களவழி நாற்பது என்னும் நூலும் கிடைத்திருக்கின்றன.

## ௧௩௫. போதனார்

இவர் செய்தி யாதும் விளங்கவில்லை. பாலையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடல் இந்நூலில் வரும் பாட்டின் பெருமைக்குக் கூறிய பன்னீரடியின்மிக்குப் பதின்மூன்றடி யுளதா யிராநின்றது. இவர் பாடியது நற். ௧௧0-ம் பாட்டு.

## ௧௩௬ மடல்பாடிய மாதங்கீரனார்

இது பாடலால் விசேடித்து வந்தபெயர். இவர் கூறியபாடல்களில் மடலேறுதலைப்பற்றிக் கூறுகிற்பர். 'மடலேறித் தெருவில் வந்து அவமானப்படுவதினும், காமநோயா லிறந்துபோகேமோ' என்று இவர் கூறியது மிக்க நயமுடையதாயிருக்கும்; நற். ௩௭௭. இவர் குறுந்தொகையிற் கூறியதும் பெரும்பாலும் இதுவே கருத்துடையதாகும். குறிஞ்சித்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௩௭௭-ம் பாடலொன்றும் குறுந்தொகையிலொன்றுமாக இரண்டுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கரு௭. மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்

இவர் சிறுகுடிகிழான் பண்ணனைப்பாடியவ ராதலால் (புறம். ௯௮) அவனைப்பாடிய சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய. கிள்ளிவளவன், கோவூர்கிழார் இவர்களோடு ஒரு காலத்திருந்தவராவார்; ஒரோவிடத்துச் சேரலன் கொல்லிமலையையும் பாடியுள்ளார். இவர் குறிஞ்சியையும் பாலையையும் பெரும்பாலும் முல்லையையும் புனைந்து பாடினவர். இவர்

* மேலே ௩௬-ம் பக்கம் பார்க்க. † மேலே ௨௪-ம் பக்கம் பார்க்க.



பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௨௬௭, ௩௨௧.) பாடல்களும், குறுந்தொகையில் இரண்டும், அகத்தில் ஐந்தும், புறத்திலொன்றுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கரு௮. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

அறுவை வாணிகன் - புடைவைவியாபாரி. இவர் வைசியர். புலி முழங்குவதை இடிமுழக்கமாமென்றுகொண்டு குறவர் தினையைக் குவிப்ப ரென நயம்படக் கூறியுள்ளார்; நற். ௩௭௬. பெரும்பாலும் குறிஞ்சி முல்லைகளையும் சிறுபான்மை பாலையையுஞ் சிறப்பித்துப் பாடியுள்ளார். புறவொடு விளையாட்டயரும் மைந்தரை நோக்கிக் காதலி வருந்துமென்று தலைவன் கூற்றாக இவர் கூறுவது பாராட்டத்தக்கது; அகம். ௨௫௪. இவர் பாடியனவாக நற்றிணையில் ௩௭௬-ம் பாடலொன்றும், குறுந் தொகையிலொன்றும், அகத்தில், ஆறும், புறத்திலொன்றும், திருவள்ளுவ மாலையிலொன்றுமாகப் பத்துப்பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## மதுரை ஆருல்வியநாட்டு ஆலம்பேரி சாத்தனார்

மேலே (௧0) ஆலம் பேரிசாத்தனார் பார்க்க.

## ௧௩௯. மதுரை இளம்பால் ஆசிரியன் சேந்தன்கூத்தனார்

இளம்பால் - ஓரூர். ஆசிரியன் எனப்படுதலால் இவர் அந்தணர் மரபினராவர். சேந்தன் என்பது தந்தை பெயர்போலும்; கூத்தன் - இயற்பெயர். இவர் குறிஞ்சியிற் பயின்றவர்போலும்; குறிஞ்சித் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். களவிலே இரவுக்குறிக்குத் தலைவன் வந்துபோதலை நன்சுவை பயப்பப் பாடியுள்ளார், அகம். ௧0௨. இவர் பாடியனவாக நற்றிணையில் ௨௭௩-ம் பாடலொன்றும், அகத்தில் இரண்டு மாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௪0. மதுரை ஈழத்துப் பூதன்றேவனார்

இவர் ஈழநாட்டினின்று மதுரையில்வந்து தங்கிய பூதன் மகன் தேவனெனப்படுவார். ஈழம் - இலங்கை. ஏடெழுதுவோர் பிழையினல் இவர் பெயர் மதுரை ஏறத்துப் பூதன்றேவனெனவும் ஈழத்துப் பூதன் றேவனெனவும் காணப்படும். வாடை வீசுங் குளிர்காலத்தே தலைவியைப் பிரிவோர் மடமை யுடையரென்று இவர் கூறுவது நன்கறிதற்பாலது. இவர் பாலையையுங் குறிஞ்சியையும் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் நகூகூ-ம் பாடலொன்றும், குறுந்தொகையில் மூன்றும், அகத்தில் மூன்றுமாக ஏழுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசக. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

இவரது பெயரினல் இவர் பெண்பாலரென் றூகிக்கப்படுகின்றது. 'நிறையடுகாமம் சிறையடுகடும்புனலோ டொத்த'தென்றிவர் கூறியது வியக்கத்தக்கது. இவர் இமயமலையையுங் கங்கையாற்றையுங் கூறியுள்ளார்; மருதம், நெய்தல் இரண்டனையும் நயந்தோன்றப் பாடியுள்ளார். இவர் பாடியபாட்டு இரண்டு; நற். உகூ0, நஅக.



## கசஉ. மதுரை காருலவியங் கூத்தனர்

இவரைப்பற்றி யாதுந்தெரிந்திலது. பாலையில் நெறியினது ஏதங் கூறியது பாராட்டத்தக்கது. பாலையையே புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியது நற். நஉகூ-ம் பாட்டு.

## கசங. மதுரைக் கண்ணத்தனர்

இவர் கண்ணத்தனரெனவும் வழங்கப்படுவர். குறிஞ்சி நெய்தல் வளங்களை நன்ருக ஆய்ந்து பாடியுள்ளார். அந்திமாலையில் மேலைக்கடல் சங்கரநாராயண அவதாரத்தின் தோற்றம்போன்றதென்று கூறியது வியக்கத்தக்கது; அகம். ந சு0. இவர் பாடியனவாக நற்றிணையில் நகூக-ம் பாடலொன்றும் அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசுச. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்

திருத்தண்கால் பொற்கொல்லன் வெண்ணாகனாரென்பவர் இவரா யிருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது; ஆயினும் மதுரையென்றமை யின் வேறாகக் குறிக்கப்பட்டனர். இவர் குறிஞ்சியையும் பாலையையும் புனைந்து பாடியுள்ளார். இவர் தமது பாடலிற் பொன்செய்காசெனக் கூறிய அருந்தொடர் மொழியாற் பொற்கொல்லனெனத் தெளியப்படுவர். இவர் பாடியனவாக நற்றிணையில் உ௯௫-ம் பாடலொன்றும் அகத்தி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசரு. மதுரைச் சுள்ளம்போதனார்

இவர் சுள்ளம்போது என்னுமூரிலிருந்து மதுரையை யடைந்து வைகியவர்; இஃது ஊர்பற்றிவந்த பெயர். நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். மீன் கொழுப்பாலாக்கிய நெய்யால் விளக்கெரிக்கும் வழக்கம் முற்காலத்துமுளதென்று இவர் பாடலாலறியலாகும். இவர் பாடியது நற். உகரு-ம் பாட்டு.

## கசசு. மதுரைப்பள்ளி மருதங்கிழார் மகனார் சோகுத்தனார்

இவர் மருதங்கிழார் மகனார் சொகுத்தனாரெனவும், மதுரை மருதங் கிழார் மகனார் சொகுத்தனாரெனவுங் கூறப்படுவர். இவர் உடன்பிறந்தார், இளம்போத்தனார், பெருங்கண்ணனாரென இருவர், தொகை நூல்களிற் காணப்படுகிறார்கள். இச் சோகுத்தனார் பாலையைச் சிறப்பித்துப் பாடி யுள்ளார். இடைச்சுரத்துத் தலைமகன் தலைமகளது உருவெளித் தோற்றங் கண்டு மருளுவதாக இவர் கூறியது சிறப்புடையதாகும். இவர் பாடிய பாட்டு இரண்டு; நற். ருஉக, ருருஉ.

## கசஎ. மதுரைப் பூவண்டநாகன்

## வேட்டனார்

பூவண்டல் - ஓரூர். இவர் குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௩௧௭-ம் பாட்டு.



## ௧௪௮. மதுரைப் பெருமருதனார்

இவர் பாலையைப் பாடியுள்ளார். இவர் பாட்டு.

பாடியது நற். ௨௪௧-ம்

## ௧௪௯. மதுரைப் பெருமருதிளநாகனார்

இவர் பெருமருதனாருக்குப் புதல்வனார் போலும். தினையை நோக்கிக் காலம் நீட்டித்துக் கதிரீன்று விளைவாயாகவென்று அதற்குரிய காரணத்துடன் தோழி கூற்றாக இவர் கூறுவது ஆராய்ந்து மகிழவேண்டியதொன்றாகும். இவர் குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௨௫௧-ம் பாட்டு.

## மதுரைப் பேராலவாயர்

மேலே (௧௩௦) பேராலவாயர் பார்க்க.

## ௧௫௦. மதுரை மருதங்கிழார் மகனார்

## பெருங்கண்ணனார்

இவர் மேற்கூறிய சோகுத்தனாரின் உடன்பிறந்தார். நெய்தல் குறிஞ்சி முல்லைகளை நற்சுவை பயக்குமாறு பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௩அ௮-ம் பாடலொன்றும், அகத்தில் மூன்றுமாக நான்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௫௧. மதுரை மருதனிளநாகனார்

எழுதுவோர் பிழையால் இவர் பெயர் மதுரைப் பூதனிளநாகனென வும், மருதனிளநாகனெனவுங் காணப்படும். இவர் சிவபெருமான் திரிபுர மெரித்ததை விதந்து கூறியுள்ளார்; திருச்செந்தூர் முருகக்கடவுளைப் பாராட்டிக் கூறியுளர். பாண்டியன் இலவந்திப் பள்ளியிலேதுஞ்சிய நன்மாறனைச் செவியறிவுறூஉப் பாடி இடித்து நெறிநிறுத்தினவர் இவரே; புறம். ௫௫. இவர் கூறிய மகட்பாற்காஞ்சி வெகு நயமுடையதாயிருக் கும்; புறம். ௩௫௪. தும்பைத் திணையில் தானைநிலை கூறியது பாராட்டற் பாலது; புறம். ௨௭௪. நல்லந்துவனார் பரிபாடலில் திருப்பரங்குன்றைப் பாடியதனைப் பாராட்டி "தண்பரங்குன்றம், அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை" எனக் கூறியுள்ளார்; (அகம். ௫௯.) தொழுனையாற்றுள் வாசு தேவன் குருந்து முறித்ததனைச் சிறப்பித்துளார்; அகம். ௫௯. சேரமான் சேனாபதி பிட்டனைப் புகழ்ந்துளார்; அகம். ௭௭., நடுகற் சிறப்புக் கூறி யுள்ளார்; அகம். ௧௩௧, ௨௯௧, ௨௯௭, ௩௪௩, ௩௮௭. விடியற்காலத்தில் எருமை மேய்க்கச் செல்லுஞ் சிறுவர் அம்மாடுகளின் மீதேறிச் செல்வத னைக் கூறுகின்றதனோடு வேளிரது வீரைநகரையும் அருகிலுள்ள கடலை யும் விதந்து கூறுகின்றார்; அகம். ௨௦௬. திருவழுந்தூர்த் திதியனுக்குரிய செல்லூரில் பரசுராமமுனி வேள்விசெய்தது கூறுவதுடன் தழும்பனது ஊணூரும் சாயாவனமும் (திருச்சாய்க்காடு) இவராற் கூறப்பட்டுள்ளன; அகம். ௨௨௦. வழுதியின் வெற்றியைப் பாராட்டிக் கூறியுள்ளார்; அகம். ௩௧௨. இடையர் தலைவன் கழுவுளென்பானையும் அவனது காழு ரையும் புகழ்ந்து பாடியுளர்; அகம். ௩௬௫. உள்ளிவிழாவென்னுந் திரு விழா நடப்பதும் அக்காலத்துக் கொங்கர் மணிகளை அரையிற்கட்டி யாடுவ தும் இவராற் கூறப்பட்டுள்ளன; அகம். ௩௬௮. "தேர்சேணிக்கி" என்

னும் இவர் பாட்டின் (அகம். ௩௮௦.) கருத்து "நீகண்டனையெனின்" என்ற திருக்கோவையில் (அ௪) வந்துளது. பாண்டியன் நெடுஞ்செழிய னது கூடனகரை ஏனையரசர் முற்றுகை செய்ததும் அவன் வெற்றியும் கூறியுள்ளார்; நற். ௩௯. ஒருகொங்கை யறுத்த திருமாவுண்ணி என்பாள் கதையைச் சுருக்கிக் கூறுகிறார்; அது கண்ணகியின் கதைபோலுமென்று கருதற்கிடனாகிறது; செவ்வையாக விளங்கவில்லை; நற். உகசு. இவைக ளன்றி இவர் ஒவ்வொரு நிலங்களினுங் கூறுங் கற்பனைகளும் உள்ளுறை களும் வெளிப்படை யுவமங்களும் படிப்போர் மனத்தைக் கவர்வன வாகும். இவர் ஐந்நிலங்களினும் பலகாலுஞ் சென்று பழகி அவற்றி னியல்பை நன்கறிந்து சிறிதும் மாறுபாடின்றித் திணைக்கேற்ற பொருள் களைப் புலப்படுத்திப் பாடுந்தன்மையராக விளங்கினவர். இதனை விரிவஞ்சி யான் விளங்கக் கூறவில்லை. இறையனார் களவியலுக்கு இவருமோருரை யெழுதினரென்று அந்நூலுரையால் விளங்கும். இவர் பாடியனவாக நற்றிணையில் பன்னிரண்டு (௨௧, ௩௯, ௧௦௮, ௧௩௪, ௨௧௬, ௨௮௩, ௨௯௦, ௩௦௨, ௩௨௬, ௩௪௧, ௩௯௨, ௩௯௭.) பாடல்களும் குறுந்தொகையில் நான்கும் அகத்தில் இருபத்துமூன்றும் புறத்தில் மூன்றுமாக நாற்பத் திரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௯௨. மருங்கூர்ப்பட்டினத்துச் சேந்தன் குமரனார்

மருங்கூர்ப்பட்டினம் என்பது பாண்டிநாட்டிலுள்ளதோரூர். திரு வாடானைத் தாலூகாவில் மருங்கூரென்ப தொன்று காணப்படுகிறது. சேந்தனது புதல்வன் குமரனெனப்படுவார். முல்லைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியது நற். ௨௮௯-ம் பாட்டு.

## ௧௯௩. மருதம்பாடிய இளங்கடுங்கோ

இவர் சேரர் மரபினர்; பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பி யென்று ஊகிக்கப்படுகின்றார். இவர் பெயர் பாடலால் விசேடித்து வந்தது. மருதத்திணையையே சிறப்பித்துப் பாடியதால் இவ்வடைமொழி பெற்றனர். அருதை யென்பாளின் தந்தை சோழரது பருவூரைச் சிறப்பித்து ஆங்குச் சேரபாண்டியர் வந்து போர்புரிந்து தோற்ற கதையை விளக்கிக் கூறுகின்றார்; அகம். கசு. இவர் பாடலில் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனை வாயின் மறுப்பது பாராட்டற்பாலது; நற். ௫0. இவர் மருதத்திணையையே பலபடியாலும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் ௫0-ம் பாடலொன்றும் அகத்தில் இரண்டுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கருச. மலையனார்

இவர் தமது பாடலில் மலைவளம் பலபடக்கூறி "மல்லற் றம்மவிம் மலைகெழு வெற்பு" எனக்கூறிய அருந்தொடர் மொழியையே தமக்குப் பெயராகப் பெற்றவர்; இயற் பெயர் புலப்படவில்லை. குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடலிலுள்ள இறைச்சிப் பொருள் மிக்க நயமுடையது. இவர் பாடியது நற். கூஎ-ம் பாட்டு.

ந. நா.—டு



## கருரு. மள்ளனார்

இவரது இயற்பெய ரொன்றொழிய வேறியாதும் தெரியவில்லை. கள்ளூரில் இளமகளொருத்தியின் கற்பழித்தானொருவனைப் பற்றி நீற்றறையிலிட்ட கதையையும் வையைநீராடற்சிறப்பையுங் கூறுகிறார்; அகம். உகூசு. நெஞ்சைநோக்கி நின் கைப்பட்ட ஒருத்தியை நீ கைவிட்டு ஏமாந்திருக்கலாமோ வென்றது வியப்புடையதாகும்; நற். உ0௪. இவர் குறிஞ்சியையும் மருதத்தையும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் உ0௪-ம் பாடலொன்றும் அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

மேலே (கக௩) பாண்டியன் மாறன்வழுதி பார்க்க.

## மாங்குடிகிழார்

இவரே மாஙகுடி மருதனரெனப்படுபவர். இவர் மதுரைக்காஞ்சி பாடினமையிற் காஞ்சிப் புலவனெனவும் கூறப்படுவர். மேலே (௬அ) காஞ்சிப்புலவன் பார்க்க.

## கருசு. மாமூலனர்

இவர் அந்தணர் மரபினர்; முக்காலமும் அறிந்த யோகியார்; இதனைத் தொல். பொருள். எகு-ம் சூத்திரவுரையில் 'பார்ப்பனப்பக்கத்து வகையாவண' என்பதன்கீழ், நச்சினர்க்கினியர் 'யோகிகளாய் உபாயங்களால் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனைநிலைவகை யோராவார்' என்று கூறுவதனுலறிக. அறிவன் கலசயோனியாகிய அகத்தியன் என முன்னர்க் கூறியிருத்தலினல் மாமூலனர் அகத்தியரோடு அவர்வகையில் சேர்ந்தவரென்றறியற்பாலது. இவ்வளவு மேம்பாடுற்ற இவர் அகப்பொருட் சுவையை அளவுகடந்து அனுபோகமுடையாருஞ் சொல்லமாட்டாதவாறு இன்பம் பெருகத் தெளியக்கூறுவது வியப்புடையதாகும். இதற்கு "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலு, முத்தர் மனமிருக்கு மோனத்தே" என்பதொன்றல்லது வேறு காரணங் கூற யான் அறிந்திலேன்.

சைவசமயநூலாகிய திருமந்திரம் எழுதிய திருமூலர் வேறு; இவர் வேறு. இவர் அகத்திற் கூறும் பாடல்களில் யாரையேனுங் கூறுது வாளா செய்யுள் செய்திலர். அது வருமாறு: ஆவி நெடுவேள் பொதினியைப் பாராட்டியது; அகம். க, கூக. சந்திரகுப்தன் மகன் துளுவென்பவன் தாபித்த துளுநாட்டையும் (தென்கன்னடம்) நன்னனது பாழியையும் பாராட்டியது; அகம் கரு. மூவேந்தர் தமிழ்நாட்டைக் கூறியது; அகம் ருக. கரிகாற் சோழனொடு கோயில் வெண்ணிப் போர்க் களத்திற் போர்செய்த பெருஞ்சேரலாதன் தோற்றுப் புறப்புண்பட்டு நாணமுற்று உயிர்விடத் துணிந்து வடக்கு நோக்கியிருத்தலும் அதனையறிந்த அவனுக்கு நட்பாளராகிய பல சான்றோர் தாமும் உடனிருந்து உயிர் விட்டமை கூறியது; அகம். ருரு. கள்வர் கோமான் புல்லி யென்பவனது வேங்கட மலையைப் புகழ்ந்தது; அகம். கூக. பெருஞ்சோறு பயந்த உதியஞ் சேரலின் கொடையைப் புகழ்ந்தது; அகம். கூரு. குடநாட்டைப் புகழ்ந்தது; அகம். கூக. நன்னன் வேண்மான் வியலூரைச் சிறப்பித்தது; அகம். கூஎ. வடுகர் தலைவன் எருமை யென்பானது குடநாட்டைக் கூறுவதுடன் எவ்வியிறந்ததற்குப் பாணர் வருந்தியதும் அதிகமானெடுமா

னஞ்சி பகைவர்க்கஞ்சி யொளித்ததுங் கூறியது ; அகம். கசு. பெருஞ் சேரலாதன் மாந்தை முற்றத்து நிதிகொட்டி யிரவலர்க்களித்த கதை கூறியது ; அகம். கஉஎ. ஆயுதபூசை செய்யும் வழக்குக்கூறியது ; அகம். கஅக. கண்ணனெழினி கதை கூறியது ; அகம். கசுக. பாண்டியனது கொற்கையில் முத்தும் சங்கு மெடுத்தல் கூறியது ; அகம். உ0க. மத்தி யென்பவன் எழினி யென்பவனுடைய பல்லைப் பிடுங்கி வெண்மணிவாயிற் கதவிலழுத்திய கதை கூறியது ; அகம். உகக. (வெண்மணி நாகபட் டணம் தாலூகாவிலுள்ளதோரூர்.) உதியஞ்சேரல் பாரதப் போர்ச் சோறளித்தபொழுது கூளிச் சுற்றஞ் சூழ்ந்திருந்த கதை கூறியது ; அகம். உருரு. சங்கநிதியின் சிறப்பு, கோசர் பொதியமலை, மோகூரிற் புதிய மோரியரின் தேருருள் குறைத்த கதை—இவற்றைக் கூறியது ; அகம். உருக. வேங்கடத்தைப் புகழ்ந்தது ; அகம். உசுகு. வடுகர்போர்த் தமை கூறியது; அகம். உஅக. புல்லியின் வேங்கடம், வடுகரின் ஆரவாரங் கூறியது ; அகம். உகூகு. புல்லிநன்னாட்டைப் புகழ்ந்தது ; அகம். ௩கக. பாணனன்னாட்டுப் புகழ்ச்சி கூறியது ; அகம். ௩உகு. சேரலாதன் கடம்பு முதல் தடிந்தது கூறியது; ௩சஎ. நன்னனது கொடைச்சிறப்பும் அவனது ஏழிற்குன்றச் சிறப்புங் கூறியது ; அகம். ௩சக. சேரலனது வெளியம் புல்லியின்மலை—இவற்றைப் பாராட்டிக் கூறியது ; அகம். ௩ருக. புல்லி யின் வேங்கடச் சிறப்புக்கூறியது ; அகம் ௩கூ௩. வடுகர் முனையிற் கட்டி யென்பவனது நாட்டைக்கூறியது ; குறு. கக. சேரலனது கழுமலத்தைச் சோழன் வென்றகதை கூறியது ; நற். கச. சேட்படுத்தவழித் தலைவன் புலம்புவதாகக் கூறியதைக் கேட்டோரு மிரங்குவர் ; நற். எகு. இவர் பாடிய நற். எகு-ம் பாட்டு ஒன்றொழிய ஏனைய வெல்லாம் பாலைத்திணையே. இவர் பாடியருளினவாக நற்றிணையில் இரண்டு (கச, எகு) பாடல்களும், குறுந்தொகையிலொன்றும், அகத்தில் இருபத்தாறும், திருவள்ளுவ மாலையிலொன்றுமாக முப்பது பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கருஎ. மாறோக்கத்து நப்பசலையார்

மாறோக்கம் - கொற்கையைச் சூழ்ந்த தொருநாடு. பசலை - மகளிர் கணவனைப் பிரிந்தகாலத்து அவர்க்கு முன்புள்ள நெற்றியினொளி கெட்டுக் கண்ணாடியில் வாயினூதியபொழுது ஆவிபடர்ந்து ஒளி மழுங்குவது போல வேறுபட்டுக் காட்டுந்தன்மை. நற்றிணை கூ0௪-ம் பாட்டில் "மணி மிடை பொன்னின் மாமை சாயவெ, னணிநிறஞ் சிதைக்குமார் பசலை" என்று பசலையினியற்கையைத் தெளியக் கூறியவதனால் நப்பசலையா ரெனப்பட்டார். ந - சிறப்புப்பொருளுணர்த்தும் இடைச்சொல். இவர் பெண்பாலர்; இவரது இயற்பெயர் புலப்படவில்லை. இவர் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனது போர் வென்றியைப் புனைந்து பாடியுள்ளார்; புறம். ௬எ. மற்றும் அவனது கொடைமுதலாயினவற் றைச் சிறப்பித்து இயன்மொழி கூறினார்; புறம். ௬௯. பின்பு அவ னிறந்தபொழுது இரங்கிக் கூறிச் சென்றார்; புறம். உ௨௬. மலையமான் திருமுடிக்காரியிடஞ் சென்று பரிசிற்றுறைபாடிப் பரிசில்பெற்றனர்; புறம். கஉ௬. முற்கூறிய காரியின் மகன் சோழியவேனாதி திருக்கண்ண னைப் புகழ்ந்து அரசவாகை பாடினர்; புறம். கஎ௪. இவர் கபிலரைப் பெரிதும் புகழ்ந்துள்ளார்; புறம். கஉ௬, கஎ௪. குறிஞ்சியையும் பாலையை யும் புனைந்து பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் கூ0௪-ம் பாடலொன்றும், அகத்திலொன்றும், புறத்திலேழுமாக ஒன்பது பாடல் கள் கிடைத்திருக்கின்றன.



## மிளைகிழான் நல்வேட்டனார்

மேலே (க0௪) நல்வேட்டனார் பார்க்க.

## மீளிப் பெரும்பதுமனார்

மேலே (கஉஅ) பெரும்பதுமனார் பார்க்க.

## கரு௮. முக்கல் ஆசான் நல்வெள்ளையார்

முக்கல் - ஓரூர். ஆசான் என்றதனால் அந்தணராவார். இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். ஆங்கு உள்ளுறை கூறியது ஆராயத்தக்கது. இவர் பாடியது நற். உஎஉ-ம் பாட்டு.

## கரு௯. முடத்திருமாறன்

இம் முடத்திருமாறனார் இடைச்சங்கத்திறுதியிற் பாண்டிநாட்டை அரசாட்சி புரிந்தவர். இவர்காலத்துச் சங்கமிருந்த கபாடபுரம் கடல் கொள்ளப்பட்டுச் சங்கமழிந்துபோதலும் உடனே இப்பொழுதுள்ள மதுரையிற் கடைச்சங்கத்தை நிலைநிறுத்தினவராவர். இதனை இறையனார் களவியற்கு உரைசெய்த நக்கீரர் முகவுரையானும் சிலப்பதிகாரத்தின் உரைப்பாயிரத்திற்கு மேற்கோளாகக் காட்டப்பட்ட "வேங்கடங்குமரி" என்ற அகவலானுமுணர்க. இவர் பாண்டியர் மரபினர். பாலையையும் குறிஞ்சியையுஞ் சுவைமிகப் பாடியுள்ளார். குட்டுவன்சேரலைப் பாராட்டிக் கூறியிருத்தலானே அவன் காலத்தினரென்றும் அவனொடு நட்புடையாரென்றுங் கொள்க; நற். க0ௗ. இவர் 'வெறிகொள்சாபத்து' என்று வடசொல்லைக் கையாண்டிருப்பதால் வடசொல் கடைச்சங்கத் தொடக்கத்தே தமிழிற் கலந்தது தெளிக; நற்.உஉஅ. இவர் பாடியவை மேற்காட்டிய இரண்டு பாடல்களே.

## கசுo. முதுகூற்றனார்

இவர் உறையூர் முதுகூற்றனாரெனவும் முதுகூத்தனாரெனவும் படுவர். சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியின் தந்தையாகிய வீரைவேள்மான் வெளியன் தித்தனைப் புகழ்ந்து பாடியிருத்தலானே அவன் காலத்தினராகக் கருதப்படுகின்றார்; நற். ௫அ. சோழரது உறையூரையும் காவிரியையும் பாராட்டிக் கூறியுள்ளர்; அகம். கங௭. பெரும்பாலும் பாலையையும் சிறுபான்மை குறிஞ்சியையும் நெய்தலையுஞ் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் கூறிய குறைநயப்பு நுண்ணுணர்வினோரை மகிழப் பண்ணுந்தன்மையது; நற். உஅ. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (உஅ, ௫அ.) பாடல்களும், குறுந்தொகையில் நான்கும், அகத்தில் இரண்டும், புறத்தில் ஒன்றும், திருவள்ளுவமாலையில் ஒன்றுமாகப் பத்துப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கசுக. முப்பேர் நாகனார்

முப்பேர் என்பது ஓரூர். (திருவாடானைத் தாலூகாவில் முப்பையூர் என்று ஒன்றுளது.) இவர் பாலையைப் பாடியுள்ளார். நாளது சின்மை இளமைய தருமை முதலாயவற்றை விரித்துக்கூறுவர். இவர் பாடியது நற். ௩௧௪-ம் பாட்டு.



## ௧௬௨. முறுவெங்கண்ணனார்

இவர் வெங்கண்ணனாரெனவும்படுவர். குறிஞ்சித்திணையிற் பாடியுள்ளார். இவர் உள்ளுறை கூறியது வியப்புடையதாகும்; நற். ௨௩௨. இவர் பாடியனவாக நற்றிணையில் மேற்கூறிய பாடல் ஒன்றும் அகத்திலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௬௩. மூலங்கீரனார்

இவர் பாலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்; பேய்களை வருணிப்பதில் வல்லவர். முள்முருக்கின் நெற்றைப் பேயின் கைவிரலுக்கு உவமை கூறியது வியக்கத்தக்கது. சோழநாட்டின்கணுள்ள திருச்சாய்க்காட்டை (சாயாவனத்தை)ப் புகழ்ந்து பாடியுள்ளார். இவர் பாடியது நற். எ௩-ம் பாட்டு.

## ௧௬௪. மோசி கண்ணத்தனார்

மோசி என்பது ஓரூர். (திருப்பூவணந்தாலூகாவில் மோசிப்பட்டியெனவும் பரமக்குடித் தாலூகாவில் மோசுகுடியெனவும் இரண்டு ஊர் காணப்படுகின்றன.) இவ்வூர் மோசி கீரனார், மோசிசாத்தனார், முடமோசியார் எனப்படும் பலவித்துவான்களைத் தன்னிடத்தே தோற்றுவித்து அளவிலாப் புகழைப்பெற்றது. அதன்கண்ணே அவர் குழாத்தில் தோன்றிய இக் கண்ணத்தனார் நெய்தல் வளத்தைச் சிறப்பித்துப் பிரியிற் காமந்தாங்காதிறந்துபடுவதுண்மை யென்பதைக் காரணத்தோடு விளக்கிக் காட்டியிருக்கிறார். இவர் பாடியது நற். ௧௨௪-ம் பாட்டு.

இவர் மோசி யென்னும் ஊரிலே தோன்றிய கீரனென்னும் இயற்பெயருடையவர். ஒரோவிடத்துப் படுமாற்றூர் மோசி கீரனெனவுங் கூறப்படுவார். படுமாற்றூர் மதுரையைச்சார்ந்ததோரூர். சிவகங்கைத் தாலூகாவிற் படமாத்தூர் எனவொன்று காணப்படுகிறது. படமாற்றூரில் வந்து தங்கிய மோசி கீரனாரெனக் கொள்க. ஒருகாலத்துச் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை யிடத்துப் பரிசில்பெறச் சென்றிருந்த இவர், அவனரண்மனையிலிருந்து நீராட்டக் கொண்டுபோயிருந்த வீரமுரசம் மீண்டு வருமுன், அம்முரசு வைத்திருந்த கட்டிலிலேறிப் படுத்து உறங்குவாராயினார். அதனை அறிந்த அரசன் தமிழருமை யறிந்தோனாதலின் இவரை யாதோ ரூறுபாடுஞ்செய்யாது இவர் தாமே தூங்கி யெழுமளவும் அருகினின்று சாமரம் வீசிக்கொண்டிருந்தனன். இவர் விழித்தெழுந்து துணுக்குற்றஞ்சி இயன்மொழிபாடி அரசனை உவப்பித்தார்; புறம். ருO. மற்றொருபொழுது கொண்கானம் (கொங்கணம்) கிழானிடஞ்சென்று பரிசில்வேண்டி இவர் கூறிய பரிசிற்றுறையும், பாணாற்றுப்படையும், இயன்மொழியும் நற்சுவை கொடாநிற்கும்; புறம். கடுச, கடுடு, கடுசு. அரசரது கோட்பாடு இத்தன்மையதாயிருக்கற்பாலதென்று இவர் கூறிய பாடல் கவனிக்கத்தக்கது; புறம். கஅக. இவர் கூறிய குறைநயப்பு ஏனையோர் பாடல்போன்று நுண்ணுணர்வினோரை மகிழ்விக்கும்; அகம். நகூஉ. பரதவர்கோமான் அதலையென்பவனது மலையையும் ஆஅய் அண்டிரனது பொதிய மலையையும் பாராட்டிக் கூறி



யுள்ளார்; குறு. இக, அச, உஎக. இவர் நெய்தலையுங் குறிஞ்சியையுஞ் சிறப்பித்துக் கூறியவர். முகம்புகுகிளவிபாடியவரி லிவருமொருவர். இவர் பாடியனவாக நற்றிணையில் நசஉ-ம் பாடலொன்றும் குறுந்தொகையில் மூன்றும் அகத்திலொன்றும், புறத்திலைந்தும், திருவள்ளுவமாலையிலொன்றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனுர்

மேலே (கூ௯க) பேரிசாத்தனுர் பார்க்க.

கசுசு.

## வண்ணக்கன் சொருமருங்குமரனுர்

நாணய ஆய்வாளராகிய இவர் குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடலில் தலைமகன் இரவில் வருநெறியின் ஏதங்கூறிய பகுதி வியப்பைக்கொடுக்குந் தன்மையது. இவர் பாடியது நற். உ௫எ-ம் பாட்டு.

## கசுஎ. வண்ணப்புறக் கந்தரத்தனுர்

இவரது இயற்பெயர் கந்தரத்தன் என்பது. இவரை ஏனைக்கந்தரத்தனுரின் வேறுபடுத்தவேண்டி, இவரது பாடலில் "வண்ணப் புறவின் செங்காற் சேவல்" என்ற அடியில் புறவினை வண்ணப்புறவு என்ற சொற்சிறப்புநோக்கி அச்சொல்லையே இவர்க்கு அடைமொழியாகக் கொடுக்கப் பெற்றவர்; நற். ஏக. பாலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடலிற் செவிலி மனையிருந்து வருந்திய பகுதி மிக்க சுவையுடையதாயிருக்கும்; அகம். சக. இவர் பாடியனவாக முற்காட்டிய இரண்டு பாடல்களே கிடைத்திருக்கின்றன.

## கசுஅ. வன்பரணர்

இவர் கடையெழுவள்ளலி லொருவனாகிய கண்டீரக்கோப்பெருநள்ளியைப் பரிசில்வேண்டிப் பாடியவர். அந் நள்ளி வேட்டையாடுமிடத்து இவர் போனபொழுது தன்னை இன்னனென்றறிவிக்காமல் அவன் பரிசு கொடுத்ததாகச் சொல்லும் பாடல் கேட்போர் மனத்தை மகிழ்விக்கும்; புறம். கசஅ, கசக, கருo. மற்றொருபொழுது கொல்லியாண்ட வல்வில் லோரி யிடத்துச்சென்று பாடிப் பரிசில்பெற்று மீண்டனர்; புறம். கருஉ, கருக. இவர் பாடிய முதுபாலை (கணவனைக் கானகத்தேயிழந்து புலம்புவது) இரங்கத்தக்கதாகும்; புறம். உருரு. வினைமுற்றி மீள்வான் நெறியிடைக்கண்டவரை நோக்கிக் கூறியதாக ஒருதுறை புதுவதின் அமைத்தவர் இவரே. நற். ௩௭௪. இவர் பாடியனவாக மேற்காட்டிய ஏழுபாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## வாலம் பேரிசாத்தனார்

மதுரை ஆருலவியநாட்டு ஆலம் பேரிசாத்தனாரெனவும் ஆலம் பேரிசாத்தனாரெனவுமிவர் கூறப்படுவர்.

மேலே-(கo) ஆலம் பேரிசாத்தனார் பார்க்க.



கசுக. விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார்

இவர் இயற்பெயர் பெருங்கண்ணனாரென்பது. இவர் பாடலில் மான்குட்டியை விழிக்கட்பேதையென்று கூறிய சொற்சிறப்பால் அதனையே அடைமொழியாகக் கொடுக்கப்பட்டார்; நற். உசஉ. முல்லைத் திணையைப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற். உசஉ-ம் பாடலொன்றும், திருவள்ளுவமாலையி லொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## கஎ௦. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்

விற்றூற்று - ஓரூர். வண்ணக்கன் - நாணயசோதகன். தத்தன்-இயற்பெயர். இவ்வூரில் மூதெயினனென ஒரு புலவர் இருந்தனரென்று அகநானூற்றால் தெரிகிறது. இத் தத்தனார் தமது பாடலிற் பாண்டியனையும் அவனது மதுரையையும் பாராட்டிக் கூறுகின்றார். பாலைத்திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியது நற்றிணையில் உகஅ-ம் பாட்டு.

## கஎக. வினைத்தொழிற் சோகீரனார்

இவர் நெய்தல் வளத்தைச் சிறப்புறப் பாடியுள்ளார். இவர் பாடலில் இரவு நடுயாமத்தில் கடற்கரையூரின் நிலைமை கூறியது ஆராயத்தக்கது. இவர் பாடியது நற்றிணை ௩கக-ம் பாட்டு.

## கஎஉ. வெள்ளியந்தின்னனார்

இவர் நெய்தல் வளத்தைப் புனைந்து பாடியவர். கடலின் இறுமீனைப்பிடித்து உணக்குந்திறங் கூறுவது ஆராயத்தக்கது. இவர் பாடியது நற்றிணையில் ௪௦௧-ம் பாட்டு.

## கஎ௩. வெள்ளிவீதியார்

இவர் பெண்பாலார். மதுரையில் வெள்ளியம்பலத் தெருவிலிருந்த தனால் இப்பெயர் பெற்ருர்போலும். இயற்பெயர் புலப்படவில்லை. இவர் எக்காரணத்தாலோ தம் கணவனைவிட்டுப் பிரிந்து தனித்து வைகி யவர். காமமேலீட்டினால் தம் மாமைக் கவினைப் பசலையுண்டு அழிக்கக் கடவதென்று சினந்து கூறுவாராயினர்; குறு. உஎ. சினந்து கூறியும் என்னே? பிற்பட்டுத் தனியே யிருத்தலாற்ருது காமமேலீட்டினாற் பல வாறு புலம்பி 'என் காமம் பெரிதா யிராநின்றது; இதனைக் களைபவராகிய காதலரும் நீத்தகன்றன' ரெனவும் 'திங்கள் முதலாயவை வருத்தவந்தன' வெனவுங் கூறி வருந்துவாராயினர்; நற். ௩௨௫. நாரைவிடுதூது பாடிப் புலம்பியுள்ளார்; நற். ௭0. மற்றும் ஆசை தாங்காது இரவினிலையுந் தன் னிலையுங் கூறி வருந்தினர்; நற். ௩௪௮. இனித் தேடிச் சென்ருல் அகப் பட்டாரோ இவ்வாறு தேடினலென்னென்று கூறி வருந்தினர்; குறு. ௧௩0. அங்ஙனமே புறப்பட்டுச் சிறிதுதூரம் நோக்கிச்சென்று ஆற்ருராய்ப் பாடி வருந்துவாராயினர்; குறு. ௪௪. அக்காலத்து இவர்பால் நட்புடைய சிலர் வந்து தேற்றத் தேறி, 'நும்மாற் சிறிது தணிந்தேம்; இக்காமநோய் பொறுத்தற் கொவ்வாது கண்டீர்' என்று கூறினர்; குறு. ௫௮. இந்நோய் சிறிது குறைந்து நாணமீதூர்ந்துளது; நோய் தலையெடுப்பின் நாணம் கைந் நில்லாது கழியுமென அவர்கேட்பக் கூறியுள்ளார்; குறு. ௧௪௯. மாலைக் காலத்துப் புலம்பி யழுதனர்; குறு. ௩௮௬. என் காதலர் சுரநெறியே சென்றகன்றனரே; அலர் பெரிதாயிராநின்றது; ஆதிமந்திபோல வருந்து

வேனேவென்று புலம்புவாராயினர்; அகம். ௬௫. கனவிடைக் காதலனைக் கண்டு நனவாகக்கொண்டு அவனைக் கூட்டுவித்தாலன்றி யான் உயிர் வாழலே னென்றிரங்கினர்; அகம். ௩௬௨. மற்றொருகாலந் தோழியை நோக்கி நம்மூர்ச் சபை இத்தன்மையாயிருத்தலானே பிரிந்தோரை ஆங்குப் புணர்ப்பிக்கவல்ல மூதறிவாளருளரோ வென்று வினவினர்; உளரேல் தம் காதலனைக் கூட்டுவிக்கவேண்டுமென்பது கருத்து; குறு. ௧௪௬. அப்பால் தம் கணவனைச் சென்று கண்டு வருந்தி நும்மைப் பெற்றேமில்லையாயின் எம்முயிர் வீடுவதாகவென்று நொந்து கூறுவாராயினர்; குறு. ௧௬௬. இவ்வாறு இவர் கேள்வனைப் பிரிந்து வருந்தி ஆங்குச்சென்றாகிலும் அவனைக் காண்பேமென்று புறப்பட்டுப் போனதனை "வெள்ளி வீதியைப் போல நன்றுஞ், செலவயர்ந் திசினால் யானே" என ஔவையார் எடுத்துக் கூறியதனாலும் அறிக; அகம். ௧௪௭. இவ் வெள்ளிவீதியார் கூறிய பாடலினத்தினையுந் துறைப்பாற்படுத்தி எட்டுத்தொகைக்கட் பின்னுளோர் சேர்த்தார்களென்றறிக. இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று (௭0, ௩௩௫, ௩௪௮.) பாடல்களும், குறுந்தொகையில் எட்டும், அகத்தில் இரண்டும், திருவள்ளுவமாலையிலொன்றுமாகப் பதினன்கு பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௭௪. வெள்ளைக்குடி நாகனர்

இவர் சோழநாட்டில் வெள்ளைக்குடியின்கணிருந்த நாகனெனப்படுவர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலத்தினர். அக்காலத்து இவருக்குள்ள நிலங்களுக்கு வரிசெலுத்த முடியாதவராய்த் தம்மீது நிலுவைநின்றதற் கஞ்சி அரசனைச் 'செவியறிவுறூஉ' என்னும் பொருளை அகவலில் அமைத்துப் பாடி அவனது அவைக்களத்துச் சென்று அதனைப் படித்துப் பொருள்கூறித் தாம் செலுத்தவேண்டிய வரியைத் தள்ளிவிடும்படி செய்துகொண்டார்; புறம். ௩௫. இவர் பாடலிலே சந்திரனை நோக்கித் தலைவி முனிந்து கூறுவது வியப்புடையதாகும்; நற். ௧௬௬. இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (௧௫௮, ௧௬௬.) பாடல்களும், புறத்தில் ஒன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

## ௧௭௫. வெறிபாடிய காமக்கண்ணியார்

இவர் பெண்பாலார்; காமக்கண்ணி (காமாட்சி) யாரென்னும் இயற் பெயருடையவர். களவின்கண்ணே தலைவன் பிரிதலானே தலைவி வருந்தி வேறுபடலும், அதனையறியாத அன்னை கட்டினுங் கழங்கினுங் குறி பார்த்து, இவள் முருகனுல் அணங்கப்பட்டாளென்று குறியாலறிந்து, வேலனை (பூசாரியை) யழைத்து, அம் முருகனுக்குப் பூசைசெய்து கள்ளை நிவேதித்து யாட்டைப் பலி கொடுத்துத் தன் மகளுக்குற்ற தீது நீங்கும்படி வேண்டிக்கொள்வது வெறியெனப்படும். இதனை விரிவாக அகத்தில் பாடியதனுல் இவர் வெறிபாடிய காமக்கண்ணியா ரெனப்பட்டார்; அகம்: உஉ, கூஉ. புறப்பொருளிற் செருவிடை வீழ்தற்றுறையும், குதிரை மறமும் பாடியுள்ளார்; புறம். உஎக, ௩௦உ. இவர் நற்றிணையிற் பாடிய பாட்டிலும் (உசஅ) வெறியயர் வெங்களத்து வேலனை வினவுகமென்றது வெறிபாடிய பகுதியேயாம். இவர் பாடியனவாக நற்றிணையிலொன்றும் அகத்திலிரண்டும் புறத்திலிரண்டுமாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக் கின்றன.

பாடினோர் வரலாறு முற்றிற்று.

---

# பாடப்பட்டோர் வரலாறு

## க. அஞ்சி

இவன் நற்றிணை ௩௮௧-ம் பாட்டில் ஔவையாரால் புகழ்ந்து கூறப்படுகிறான். இவன் கதை வருமாறு:—

இவன் அதியமானெடுமா னஞ்சியெனவும் பெயர்பெறுவன். அதியர் மரபினனாதலின் அதியமானெனக் கூறப்படுவான். இயற்பெயர் அஞ்சி யென்பதுபோலும்—“ஆர்கலி நறவி னதியர் கோமான், போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி”; புறம். கூக. இதனை அகம். நடுஉ-ல் ‘அஞ்சி அத்தை மகனர்’ என்ற வாக்கியத்தாலும் பிறவுற்றாலும் தெளிக. கொல்லிக்கூற் றத்து மலையினின்று இவன் பெருஞ்சேரலிரும் பொறையொடு போர் செய்தவனென்று பதிற்றுப்பத்து எட்டாம் பதிகத்தா லறியப்படுதலால், இவனது நகரே கொல்லிக்கூற்றத்தின் கண்ணதெனக்கொள்க. இவன் சேரமானுக்கு உறவினனாதலால் பனைமாலையுடையவன்; குதிரைமலைக்குத் தலைவன்; இவன் முன்னோர்க்கு வரங்கொடுக்கும் பொருட்டுத் தகரேின் கண்ணே வானவர்வந்து தங்கியசோலை யொன்றிருந்தது; புறம். கூக. வேற்று நாட்டுச்சென்று அங்குள்ள கரும்பைக்கொண்டுவந்து இந்நாட்டிற் பரவச்செய்தவர் இந்த அஞ்சியின் முன்னோரே; புறம். கூக.

ஒருகாலத்து இவன் தன்பாற் பாடிச்சென்ற ஔவையார்க்கு யாதும் பரிசில் கொடாதுகி நீட்டிப்ப, அவர் வெகுண்டு மீள்வாராயினர்; புறம். உ0சு. அதனை யறிந்த அஞ்சி அஞ்சிவந்து உடையும் நெல் முதலிய பிறவும் அளவுகடப்பக் கொடுத்து அவரால் புகழ்ந்து பாடப்பெற்றான்; புறம். ௩௬0. பிறிதொருபொழுது இவன் மாற்றரசனுக்கு அஞ்சித் தன்னினத்தோடு காட்டகத்து ஒளிந்திருந்தனன்—"சினமிகு முன்பின் வயமா னஞ்சி, யினங்கொண் டொளிக்கு மஞ்சுவரு கவலை"; அகம். ககடு. அஞ்சி யொளித்ததனால் அஞ்சியெனப்பட்டான் எனவுங் கருதற்கிடனாகிறது. ஒருபோது இவனது கொடைத்தன்மையாற் பாண்மகளாகிய ஔவையார் புதியனவாகச் சிலபாடல் பாடிப் பொருள்கூறக் கேட்டு மகிழ்ந்திருந்தனன்; அதனையறிந்த இவனின் அத்தைமகனாற் புகழ்ந்து பாடப்பெற்றனன்; அகம். ௩௯உ. வேறொருகாலத்து இவன் திருக்கோவலூரை வென்றபொழுது பரணராற் புகழ்ந்து பாடப்பெற்றான்; அகம். ௩௭உ. அதனையெடுத்துக் காட்டிப் பரணராற் பாடப்பெற்ற நீயன்றோவென்று ஔவையார் சிறப்பித்துக் கூறியுள்ளார்; புறம். கக. இவனொருகால் மலைமேற் சென்றபொழுது அங்கு விடரிலுள்ள கருநெல்லியின் பழத்தைக் கண்டு அதனையுண்டார் சாவாது நெடுங்காலம் உயிரோடிருப்பரென்பதனை அறிந்ததனால் அப்பழத்தைப் பறித்துவந்து ஔவையார்க்குக் கொடுத்து உண்பித்து அப்பால் அதன் சிறப்பைக்கூறி அவராற் பாடப் பெற்றான்; புறம். கக. பெருஞ்சித்திரனா ரென்னும் புலவர் பரிசிலுக்கு வந்திருக்கிறாரென்று கேள்வியுற்றவளவிலே அவரை நேரிற் காணாமல் பரிசில் வரவிடுத்தனன். அதனை அவர் ஏற்றுக்கொள்ளாராய் வெறுத்துப் பாடப்பெற்றான்; புறம். உ0அ. ஔவையாரால் பலகால் புகழ்ந்து பாடப்பெற்றவன்; நற். ௩௮௧; குறு. ௯௧. புறம். அஎ - ௯௫.

நெடுநாட் பிள்ளைப்பேறின்றி அரியதவத்தாற் பிறந்த தன்மகனைப் பார்க்க எண்ணி அப்பொழுது வேற்று நாட்டிலே தான் செய்யும் போரை நிறுத்தித் தான் கொண்ட போர்க்கோலத்தோடு வந்து நோக்கியகாலை ஒளவையாராற் புகழ்ந்து பாடப்பெற்றான்; புறம். ௧௱. இவன் கோவலூரை அழித்துக் கைக்கொண்டதனால் அதன் தலைவனாகிய மலையமான் திருமுடிக்காரி இவனை எதிர்க்க வலியின்றித் தோற்றோடிப் போயினன். அங்ஙனஞ்சென்ற காரி தான் மூவேந்தர்க்குந் துணைபோகக் கூடியவனாதலிற் (புறம். ௧௨௨.) பேரரசனாகிய பெருஞ்சேர விரும்பொறையை யடுத்து நிகழ்ந்தது கூறி அங்கு வைகுவானாயினான். அந்நாளிற் பெருஞ் சேரவிரும்பொறை கொல்லிமலையைத் தான் பெறவேண்டுமென்னுங் கருத்துடையனாதலை யறிந்த காரி படையொடு சென்று கொல்லிமலையை அரசாண்டிருந்த வல்விலோரியைப் போரிலே கொன்று அம்மலையைச் சேரமானுக்குக் கொடுத்துவிட்டனன்; (அகம். ௨0௮, ௨0௯.) அது தேன் முதலாய மிக்க வருவாயையுடையது—"கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா" (கம்பர்) என்பதனாலறிக.

பின்பு திருமுடிக்காரியின் முயற்சியாலே சேரமான் படையெடுத்துத் தகடூரை முற்றுகை செய்தான். அதனை யறிந்த அஞ்சி தனக்கு நட்பாளராகிய பாண்டியனுக்குஞ் சோழனுக்குந் தூதுவிடுத்து அவர் வருதற்குச் சிறிதுகாலம் தாழ்த்தமையாலும் தகடூர் மிக்க வீரராற் காக்கப்படுதலாலும் தன்னூர் பகைவராற் பிடித்தற் கரியதென்று எதிர்த்துப் போர் புரியாது தகடூரினுள்ளேயே யிருந்துவிட்டான். (தொல். பொரு. ௬௨, உரை.) பாண்டியருஞ் சோழரும் படையொடு தனக்குத் துணையாக வந்தவுடன் அக் கொல்லிக் கூற்றத்திலேயே பெரும்போர் நடந்தது; (பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து, பதிகம்.) அப்போர் செய்தற்குச் சேரமான் புறப்பட்டது முதல் போர்புரிந்து வென்று மீண்டு வருமளவும் நிகழ்ந்தவற்றைக் கூறுநூல் தகடூர் யாத்திரை யெனப்படும். அப்போர் நிகழுங் காலத்து ஒளவையார் பாடின பாடல்கள் பல.

அப்போரில் அதியனெழினி யென்பான் யானையெறிந்த வேல்பாய்ந் திறந்தானென்று தெரிகின்றது. அவன் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியோவென் றையப்படுதற் கிடமாகிறது—"அதிய னெழினி யருநிறத் தழுத்திய, பெருங்களிற் றெஃகம் போல"; அகம். ௨௧௬.

பின்னர்ப் புண்பட்டு நின்று (புறம். கூரு.) ஈற்றிற் பகைவரெறிந்த வேல் மார்பிலே பாய அதனுலிறந்தான்; புறம். உருஇ. இவனுக்குத் துப்பாகிவந்த சோழனும் பாண்டியனும் தத்தங்குடையுங் கலனும் முரசும் களத்தே போட்டோடிவிட்டார்கள். (பதிற். எட்டாம் பத்து, பதிகம்.) அக்காலத்து ஒளவையார் புலம்பி யழுதபாடல் கேட்போ ரிரங்குந்தன்மை யது; புறம். உருரு. பின்பு அவனைத் தகனஞ் செய்துவிட்டு (புறம். உருக.) அவ்விடத்திலே கல்நாட்டிவிட்டார்கள்; புறம். உருஉ. அஞ்சியை வென்ற பெருஞ்சேரல் இரும்பொறை அவனது குதிரைமலையைக் கைப் பற்றித் தன் சேனுபதி பிட்டங்கொற்றனுக்கு முற்றூட்டாக அளித்தனன். இவனை நற்றிணையிற் பாடியது ஒளவையார்.

இந்த அஞ்சி மரபு கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் பின்னரும் இருந்ததாகத் தெரிகிறது; இது விடுகாதழகிய பெருமாள் சாதனமொன் றில் வரும்:



"வஞ்சியர் குலபதி யெழினி வகுத்த இயக்கர்
இயக்கியரோடு
எஞ்சிய அழிவு திருத்தி எண்குண இறைவனை
மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவரும் அவன்முதல் இகலதி கன வகன நூல்(?)
விஞ்சையர் தகைமையர் காவலன் விடுகா தழகிய பெருமாளே."

என்னுஞ் செய்யுளாற் புலப்படுகின்றது.

## உ. அருமன்

இவன் ஒரு பிரபு. சிறுகுடியென்னு மூரிலே வழிவழிச் செல்வ முடைய மரபிலே தோன்றியவன்; எக்காலத்தும் வருநர்க்கு வரையாது சோற்றுணவு கொடுப்பவன்; இவன் வீட்டில் நாள்தோறும் தெய்வத்துக்குப் படைத்துப் போடும் பலியுணவை உண்ணவேண்டிக் காக்கைகள் கூடியிருப்பதை நக்கீரர் வெகு சிறப்பாக எழுதுகிறார்; நற். ருகூஎ. இவனுடைய சிறுகுடி யென்னுமூர் மிகப் பழைமையுடையதாகக்கொண்டு மூதூரென்னும் பெயராலே கூறுவர்; கள்ளில் ஆத்திரேயனார் "ஆதி யருமன் மூதூ ரன்ன" என்றார்; குறு. உகூரு. இவனை நற்றிணையிற் பாடியவர் நக்கீரர்; நற். ருகூஎ.

## ரு. அழிசி

இவன் சோழர் மரபினனாகிய ஒரு சிற்றரசன்; மிகுந்த கொடையாளி; சோழநாட்டிலுள்ள ஆர்க்காடென்னு மூரிலிருந்தவன். இவன் ஆர்க்காட்டையும் சிலவூர்களையுங் கைக்கொண்டு ஆண்டுவருநாளில் இவனுக்குப் புதல்வனொருவன் பிறந்தனன். அவன் சேந்தனெனப் பெயரிட்டு வளர்க்க வளர்ந்து (திதலை யெஃகிற் சேந்தன் றந்தை, தேங்கமழ் விரிதாரியறே ரழிசி,...அரியலங் கழனி யார்க்காடு" நற். கஅ0) பின்பு உறையூரைக் கைப்பற்றி அரசாண்டு வந்தனன்; "ஏந்துகோட் டியானைச் சேந்தனுறந்தை"—குறு. உகூஅ. இவனை நற்றிணையிற் பாடியவர் பெயர் தெரியவில்லை.

## சு. அன்னி

இவன் சோழநாட்டுப் பாபவிநாசம் இரயில்வே நிலையத்துக்கருகிலுள்ள ஒரு கிராமத்திலிருந்த சிற்றரசன். இவன் இருந்தவூர் பிற்காலத்து இவன் பெயராலே அன்னிகுடியென்று வழங்கிவருகிறது. இவன் மாயூரத்தின் மேற்கிலுள்ள திருவழுந்தூரிலிருந்த (அகம். ௧௯௬.) வேளிர் மரபினனாகிய திதியனுக்குரியதும் நந்திபுரவிண்ணகரமென்னும் நாதன் கோயிற் கடுத்த குறுக்கையென்னு மூரிலுள்ளதும் அத் திதியனது காவன் மரமுமாகிய ஒரு புன்னைமரத்தை விரும்பி (அகம். ௪௫.) வைப்பூரிலுள்ள எவ்வி யென்பவன் அடக்கவும் அடங்காமல் (அகம். ௧௨௬.) அந்தப் புன்னைமரம் நிரம்பப் பூத்திருக்கும்பொழுது அதனை வெட்டிச் சாய்த்தனன். (அகம். ௧௪௫.) அதுகாரணமாகத் திதியனுக்கும் அன்னிக்கும் போர்மூண்டது. அப்போரும் புன்னையைவெட்டி வீழ்த்திய குறுக்கையிலேயே போர் செய்தற்குரிய ஓரிடத்தில் நடந்தது; (அகம். ௪௫, ௧௨௬.) அப்போரில் திதியன் வெற்றிகொண்டு அன்னியைப்பற்றி அவன் கண்ணைப் பிடுங்கிவிட்டான்; அகம். ௧௯௬. அன்னியின் புதல்வனாகிய மினிலி யென்பவன் கடுஞ்சினமடைந்து தனக்குப் படைத்துணை பெருகுமளவும் தான் பரிகலத் துண்ணுமலும் வெளிய உடைகளை யுடுக்காமலும் சிலகால மிருந்தான்; (அகம். ௨௬௨.) பின்பு வெற்றிமிக்க குறும்பிய னென்பவனால்



திதியனை மரபோடழியக் கொல்லுவித்து மிக்க மகிழ்ச்சியுடையவனாகித் திருவழுந்தூரிற் பெரிய ஆரவாரத்தோடு சென்றுவந்தா னென்பதாம். குறுக்கையென்பது கும்பகோணம் இரயில்வே நிலையத்துக்குத் தென்பால் இரண்டு மைல் தூரத்திலுள்ளது. வைப்பூர் நாகபட்டணந் தாலுகாவிலுள்ளதோரூர். அன்னியின் கதையைக்கூறும் நற்றிணை ௧௮௦-ம் பாட்டைப் பாடினார்பெயர் தெரியவில்லை.

## ௫. ஆஅய் அண்டிரன்

இவன் கடையெழுவள்ளலி லொருவன்; பொதியின் மலைத்தலைவன். ஆங்கு இவனிருந்த ஊரைப் பிற்காலத்தார் ஆய்குடி என்று பெயரிட்டனர். ஆஅய் எயின னென்பானொருவ னுளன்; அவன் சேரமானிடத்து நட்புடையனாயிருந்து பாரமென்னுமூரில் நடந்த போரில் மிஞிலியாற் கொல்லப்பட்டான். அவனின் இவன் வேறென்பது தெரியவேண்டி ஆஅய் அண்டிரனெனக் கூறுவர். இவனை அகத்தில் பாடியவர் உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனாரும் பரணரும். இவன் சுரபுன்னைப் பூமாலையுடையவன். கொங்குநாட்டாரொடு போர்செய்து அவர்களைப் புறங்காட்டி யோடச்செய்தவன். பாம்பு பெற்றுக்கொடுத்த நீலவுடையைச் சிவபெருமானுக்குக் கொடுத்தவன்; [சிறுபா. கூகூ - கூகூ.] கவிரம் என்னும் மலைப்பக்கம் இவனுடையதே. அண்டிரனென்பது ஆந்திரனென்னுந் தெலுங்கச் சொல்லின் திரிபாதலின் இவன் தெலுங்கநாட்டினனெனவும், அகத்தியமுனிவர் பதினெண்குடி வேளிரைக்கொணர்ந்தாரென் றிருத்தலானே இவன் அவராற் கொண்டுவரப்பட்ட வேளிர் மரபினனெனவுங் கூறுவர். அந்தணர் பெருமானாகிய ஏணிச்சேரி முடமோசியார் சோழன் முடித்தலைக்கிள்ளியைப் பாடிச் சிறந்த பரிசிலொன்றும் பெறுராய்ப் (புறம். கஙஉ.) பின்பு ஆஅய் அண்டிரனைப் பரிசிற்றுறையாகவும் வாழ்த்தியலாகவுமமைந்த (புறம். கஙடு, ௩௭டு.) பாடல்களாற் புகழ்ந்து அவனால் அளவுகடந்த பரிசில் கொடுக்கப்பெற்றனர். ஏனைப்புலவர்களுக்கும் ஆஅய் யானை முதலாகிய பலபல பரிசில் கொடுத்து ஓம்பினோனென்பது புறம். கஉகூ, கஙா, கஙௗ-ம் பாட்டுக்களா னறியப்படுகின்றது. இவனைத் துறையூர் ஓடை கிழார் என்னும் புலவர் தம் வறுமையை முற்றும் புலப்படுத்திக் கூறிய புறம். கஙகூ-ம் பாடல் நோக்குவா ரிரங்கத்தக்கது. இவன் கொடுத்த கொடை மலைப்படுமிர்தாகிய சந்தனமும் யானைமருப்பும் ஆடுநடைப் புரவியுங் களிறுந் தேரும் வாடாயாணர் நாடும் ஊருமாம்; புறம்.

கஎச, உசO.

இவன் உரிமை மகளிராகப் பல மாதரை மணந்து இசைபட வாழ்ந்து வருநாளில், மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத் தலைமிசைக் கொண்டக் குடையரெனினும் வாழுநாளுலந்தான் மாய்வது திண்ண மென்பராதலின் அங்ஙனமே இவ் ஆஅய் அண்டிரனும் புகழுடம்பை நிறுத்தி இறந்தொழிந்தான். இறந்த இவனை எரிவாயிமத் தேற்றலும் இவ னுடைய உரிமை மகளிர் பலரும் ஒருசேரக் காட்டமேறித் துறக்கஞ் சென் றனர்; புறம். உ௪0. அப்பொழுது விசும்பிலே தேவரெதிர்கொள்ளு முழ வொலி அங்குள்ளார் யாவர்க்குங் கேட்டது; புறம். உ௪௧. இவனிறந்த பின்பு புலம்பி வருந்தினவர் குட்டுவன் கீரனும், முற்கூறிய மோசி யாருமே. புறம். உ௪0, உ௪௧. மோசியார் பற்பல பாடல்கள் இவன்மீது பாடி னமையின் "மோசி பாடிய ஆயும்" என்று சிறப்பித்துக் கூறினர் பெருஞ் சித்திரனார்; புறம். ௧௫௮. இவனை நற்றிணை ௧௬௭-ல் பாடினர் பெயர் காணப்படவில்லை.



## ௬. உதியன்

இவன் சேரலர் மரபினன். பாரதப் போரில் இருபடையாளர்க்கும் போர் முடியுமளவும் உணவளித்தவனாதலிற் பெருஞ்சோற்றுதியஞ் சேர லெனவுங் கூறப்படுவான். முதற்சங்கப் புலவராகிய முரஞ்சியூர் முடிநாக ராயராற் புகழ்ந்து பாடப்பெற்றவன்; புறம். உ. தன்குலத்து முதியோ ரிறந்தார்க்குச் செய்யுங் கடன்களெல்லாம் குறைவறச்செய்து ஏனை யோரை யாதரித்துவந்தவன்—"முதியர்ப்பேணிய வுதியஞ்சேரல்"; அகம். ௨௩௩. தனது நாட்டினைத் துன்பமெய்தாதபடி பாதுகாத்துவந்தவன்— "நாடுகண் ணகற்றிய வுதியஞ் சேரல்" அகம். ௬௫. பதிற்றுப்பத்து முதற் பத்துக்குத் தலைவன் இவனேயென் றூகிக்கப்படுகின்றது; இவன் புதல் வர்கள் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் என இருவர்; இவ்விருவரும் முறையே பதிற்றுப்பத்து உ-ம் பத்துக்கும் ௩-ம் பத்துக்குந் தலைவராயினர். இவ்வுதியஞ்சேரலை நற். ௧௧௩-ல் பாடியவர் எயினந்தை மகனார் இளங்கீரனார்.

## ௭. ஓரி

இவன் கடையெழுவள்ளலி லொருவன்; வல்விலோரியெனவும், ஆதனோரியெனவும் கூறப்படுவான். கொல்லிமலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டினையும் அரசாண்டிருந்தவன்—"ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி"—அகம். உ0அ; "வல்வில் லோரி கொல்லிக் குடவரை"—குறு. க00. இரவலர்க்கு வரையாது கொடுக்கும் வண்மையன். இவன் சொல்லி மலையை ஆண்டுவருநாளில் அதியமா னெடுமானஞ்சி சென்று திருக்கோவலூரை முற்றிவென்று கைப்பற்றிக்கொண்டான். அதனை ஆண்டிருந்த மலையமான் திருமுடிக்காரி அஞ்சியொடு போரில் எதிர்நிற்கலாற்றாது தோற்றோடிச் சேரமான் பெருஞ்சேரலிரும்பொறையிடம் அடைக்கலம் புகுந்தான். அச் சேரமான் கொல்லிமலையைத் தான் பெறவேண்டுமென்னுங் குறிப்புடையனாதலை யறிந்த காரி படையொடு சென்று கொல்லிமலையில் ஓரியுடனே போர்புரிந்து ஓரியைக் கொன்று தான் மிக்க ஆரவாரத்தோடு ஓரியினது நகரினுட் புகுந்தான்; அங்ஙனம் புகுதலும் ஊர்முழுதும் ஒல்லென்னும் ஒலியுண்டாயிற்று; "ஓரிக் கொன்ற வொருபெருந் திருவிற், காரி புக்க நேரார் புலம்போற், கல்லென் றன்றா லூரே"—நற். கூஉ0. பின்னர் அக்கொல்லிமலை முதலியவற்றைச் சேரலனுக்கே கொடுத்துவிட்டனன்; "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வி, லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி"—அகம். உ0க. இவ்வோரியை நற்றிணையில் சு-ம் பாடலிலும் உசுரு-ம் பாடலிலும் சிறப்பித்தவர் பரணர்; கூஉ0-ல் சிறப்பித்தவர் கபிலர்.

## அ. காரி

இவன் மலையமான் திருமுடிக்காரி யெனவுங் கூறப்படுவன்; மலையமான் நாடாகிய திருக்கோவலூர்ப்பக்கத்தை அரசாண்டவன்; கடையெழுவள்ளலி லொருவன்; சேரசோழ பாண்டியர்களுக்குப் படைத்துணையா யிருப்பவன்; புலவர்க்குப் பலபலவாகப் பரிசுகொடுத்து ஆதரிப்பவன்; புலவர்க்குத் தேர்கொடுத்தலானே தேர்வண்மலையனெனப்படுபவன்; (நற். க00.) முள்ளூர்மலையை யுடைமையின் "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி" எனவுங் கூறப்படுபவன்; கபிலராலும் பரணராலும்

மாறேக்கத்து நப்பசலையாராலும் பாடப்பெற்றவன்; விற்போரால்வென்று நிரை கவர்பவன் ;—"பல்லா நெடுநிரை வில்லி னொய்யும், தேர்வண் மலையன்"—நற். ௧00; "மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந், தெல்வித் தரீஇய வினநிரைப், பல்லான் கிழவரின்"—நற். ௨௯௧. இவன் அரசாளுநாளில் ஆரியர் பெரும்படையொடு வடக்கிலிருந்து தமிழ்நாடுபுகுந்து திருக்கோவலூரை முற்றினர்; அதுகண்ட காரி அஞ்சாது எதிர்த்துப் போர்செய்ய அவர் ஆற்றாராய்ப் பின்வாங்கி ஓடலாயினர்: "ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்த வொள்வாண் மலையன, தொருவேற் கோடி யாங்கு"—நற். ௧௭0. இவ்வாறு இவன் வெற்றி மேன்மேலெய்தக்கண்ட தகடூர் அதியமானெடுமானஞ்சி படையொடு வந்து கோவலூரை முற்றிக் காரியைத் தோற்கச்செய்து ஓட்டிவிட்டு இவனது நாட்டினைக் கைப்பற்றிக்கொண்டான். தோற்றோடிய காரி பெருஞ்சேரல் இரும்பொறையையடைந்து அவன் கருத்துப்படி கொல்லி மலையை யாண்ட வல்வில்லோரியைப் போரிலே கொன்று அவ்வோரியினது நாட்டைச் சேரலனுக்குக் கொடுத்துவிட்டு அவனை அஞ்சிமேற் படையெடுக்குமாறு செய்வித்தான். சேரன் தகடூரை முற்றி அஞ்சியைக் கொன்றுபோக்கி அவன் கைப்பற்றியிருந்த கோவலூர்நாட்டைக் காரியிடம் கொடுத்தனன்; அவன் அதனைப் பெற்று முன்போல ஆண்டிருந்தனன். நற்றிணையில் இக் காரியைப் பாடியவர் கபிலரும் பரணரும்; ௧00, ௧௭0, ௨௯௧, ௩௨0.

## ௬. குட்டுவன்

இவன் சேரர் மரபினன். குட்டநாட்டை யாண்டமையிற் சேரமரபினர் குட்டுவரெனப்பட்டார். குட்டநாடு – மலை நாட்டின் ஒருபகுதி. கடைச்சங்க நிலையிட்ட முடத்திருமாறனைப் புகழ்ந்து பாடப்பெற்றமையின் இவன் இற்றைக்கு ௨௱0 ஆண்டின் முற்பட்டவனாகவேண்டும். இவனைப் பாடியவர் முற்கூறிய முடத்திருமாறன்; நற். ௧0௫.

## ௧0. கொல்லிப்பாவை

இது கொல்லிமலையின் மேல்பாற் செய்துவைக்கப்பட்ட பெண்வடிவமாகிய படிமை. கொல்லிமலை தவஞ்செய்வோர்க்கும் தனித்துறைவோர்க்கும் தகுதியான இடம்; தேன், பழமுதலாய உணவுப்பொருள் மிகுதியாகக் கிடைக்குமாதலால் இனிதினிருக்கக்கூடும். இதனை யெண்ணியே தேவரும் முனிவரும் அங்கு வைகுவாராயினர். இவர்கள் தங்கியிருப்பது கண்ட இராக்கதரும் அசுரரும் அங்குவந்து கூடுவாராயினர். இவ்வாறு இராக்கதாதியர் வந்து நெருங்கவே முனிவர்கள் தவத்துக்கு ஊறு சேர்வதாயிற்று. அப்பொழுது தேவரும் முனிவரும் தனியிருந்து ஆராய்ந்து அப்பகைவர் மனத்தையடக்க வல்லரல்லராதலின் அவர்கள் வருநெறியிற் கண்டு மயங்கி உயிர்விடும் வண்ணம் அழகமைந்த பெண் வடிவஞ் செய்துவைப்பதாக நிச்சயித்து விச்சுவகன்மாவுக்குக் கூற, அவனும் அம் மலையின் மேல்பால் அசுராதியர் வருநெறியிற் கல்லாற் பாவை யொன்றமைத்து உள்ளே பலவகையான சக்தியை யூட்டி நிலை நிறுத்தினன். இப்பாவை இயங்குந்தன்மையது; இராக்கதாதியர் வாடை பட்டவுடன் நகைக்குந் திறனுடையது; கண்டவரது உள்ளத்தையும் விழியையுங் கவர்ந்து அவர்க்குப் பெருங் காமவேட்கையுறுவித்து இறுதியிற் கொல்லத்தக்க மோகினி வடிவமுடையது. இப்பாவையை நோக்கி



னோர் அஃது இயங்குவதையும் நகைப்பதையுங் கண்டு மடந்தைபோலுமென்று மயங்கிக் காமநோய்கொண்டு கிடந்து மடிவரென்பதாம். இது நகைத்துயிர்வாங்குமென்பது "திரிபுரத்தைச் — செற்றவனுங் கொல்லிச் செழும்பாவையுநகைக்கக், கற்றதெல்லா மிந்நகை கண்டேயோ' (சித்திரமடல்) என்பதனாலறிக. இப்பாவை காற்று இடி மழை முதலாயவற்றாற் கெடாதென்பதை நற். உ0க-ம் செய்யுளாலறிக. இப்பாவையைக் கூறுவது நற். கஅரு, ககூஉ, உ0க-ம் செய்யுள்கள்.

## கக. சேந்தன்

இவன் அழிசியின் மகன்; இவன் வரலாற்றினை மேலே (ந) அழிசியின் வரலாற்றுட் காண்க.

## கஉ. தழும்பன்

இவன் ஒரு கொடையாளி; ஊணூர் என்னும் நகரத்தின் தலைவன். போரிற் புண்பட்ட அழகுடையவன் என்று பரணரால் சிறப்பிக்கப் பட்டவன்; நற். ௩00. அத் தழும்புடைமையின் தழும்பனெனப்பட் டான். இவன் இயற்பெயர் புலப்படவில்லை. "தூங்கல் பாடிய வோங்கு பெரு நல்லிசைப், பிடிமகி ழுறுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன், கடிநகா வரைப்பி னூணூரும் பரவி" என அகம். உஉள-ல் நக்கீரனாரற் சிறப் பித்துப் பாடப்பெற்றவன். "........... கண்ண் கொண்ட நீர்ந்தேனிரியக், கள்ளரிக்குங் குயஞ்சிறுசின், மீன் சீவும் பாண்சேரி, வாய்மொழித் தழும்ப னூணூ ரன்ன,...........வருந்தன் மன் னெவனெம் பெருந்துறை மரனே" எனப் பரணராற் (புறம். ௩௪அ-ல்) புகழ்ந்து பாடப்பெற்றவன். இவனைப் பாடியவர் பரணர்; நற். ௩00.

## கந. நன்னன்

இவன் மலையாளம் ஜில்லாவின் மேல்பால் மேலைக் கடலோரத்தி லுள்ள பூழி நாட்டையாண்ட ஒரு சிற்றரசன்; சேரர் பரம்பரையைச் சேர்ந்தவன். நன்னன் உதியன் அருங்கடிப் பாழி"—அகம். உஙூ; உதியன் - சேரன். இவன் சிற்றரசனதலின் வேள் என்னும் பட்ட மெய்தினன். "நறவுமகி ழிருக்கை நன்னன் வேள்மான்"—அகம். கஎ. (பாண்டியர் நாயக்கர்க்குக் கப்பங்கட்டத் தொடங்கியபின் ஸ்ரீவள் எனப் பட்டஞ்சூடியது இங்கு நோக்கத் தக்கது.—"சீவலவே ளெனமகுடஞ் சூடினனே".) இந்நன்னனது பூழிநாடும் பிறவுங் கொங்கண தேச மெனப்படும்; "பொன்படு கொண்கான நன்னன்"—நற். நடஅக. (கொண்கானம் - கொங்கணம்.) கடம்பின்பெருவாயில், பாரம், பிரம்பு, வியலூர்—இவை இவனுடைய ஊர்கள்; பதிற்று. ச-ம் பதிகம்; அகம். கடுஉ, கூடுசு, கஎ. இவனது மிக்க நீர்வளமுடையது; அகம். நகூக. ஏழில்மலை, பாழிச்சிலம்பு—இவனுடைய மலைகள்; அகம். கஙுஉ. [ஏழில் மலை மேலைக்கடலருகிலுள்ள கன்னனூரிலிருந்து வடக்கே கஅ மைலில் உள்ளதொரு மலை. ஏழில்மலையென்ற இரயில்வே நிலையமுமுள்ளது; இதனை சப்த சைலமெனப் பலருங் கூறுவர். பாழியை முன்பு வடுகர் கைப்பற்றி ஆண்டுவருநாளில் சோழன் நெய்தலங்கானலில் உள்ள இளஞ் சேட் சென்னியென்பவன் படையொடு சென்று பொருது வடுகர்களைக் கொன்று பாழியையும் அழித்து மீண்டான்; அதனால் இவன் செருப்

பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி யெனவுங் கூறப்படுவன்; "இளம் பெருஞ்சென்னி,........செம்புறழ் புரிசைப் பாழி நூறி, வம்ப வடுகர் பைந்தலை சவட்டி"—அகம். ௩௭௫. வம்பவடுகர் - புதியராய்த் தமிழ்நாடு புகுந்த வடுகர்.] இந் நன்னன் மிக்க கொடையாளி; இரவலர்க்கு யானை முதலாய பரிசிலளிப்பவன்; "இசை நல்லீகைக் களிறுவீசு வண்மகிழ், ............நன்னன்"—அகம். ௧௫௨; "அகவுநர்ப் புரந்த அன்பின்,...... நன்னன்"—அகம். ௯௭. இவன் ஆற்றலாற் பிண்டன் முதலானோரை வென்று மிகுந்த பொருளீட்டி அப்பொருளைப் பாழியிற் சேமித்து வேளிர் பலரைக் காக்குமாறு வைத்திருந்தனன்; அகம். ௨௫௮. முற்கூறிய பிண்டனோடும் இன்னும் பலவரசரோடும் போர்செய்து அவரைக் கொன்றவுடன் (அகம். ௧௫௨.) அப் பிண்டன் முதலானோருடைய உரிமை மகளிரைப் பற்றிவந்து அம்மகளிர் தலையைச் சிரைத்து அக்கூந்தலைக் கயிறாகத் திரித்து அக்கயிற்றினால் அப்பகையரசரின் யானையைப் பிணித்து வந்தவன்: நற். ௨௭0. இவன் பிறந்தநாட் கொண்டாட்டம் பலராலும் புகழப்படுவது; மதுரைக் காஞ்சி ௬௧௮, ௬௧௯ அடிகள். இவனது தோட்டத்திலுள்ள மரத்தின் பசுங்காய் அருகிலோடிய ஒரு கால்வாயில் விழுந்து வருவதனை அங்கு நீராடச்சென்ற ஒரு பெண்ணெடுத்துத்தின்ற தவற்றுக்காக அவளை அவள் தந்தை பலயானைகளும் அவள் நிறை பொன்னும் கொடுப்பதாக இரந்து வேண்டியும் இரங்கானாய்க் கொல்லுவித்தனன்; குறு. ௨௯௨. இவன் கொடுங்கோலனென்றே வேறெதனாலோ சேரநாட்டை அக்காலத்து அரசாண்டுவந்த களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இவனைப் போர்செய்தழிப்பது கருதித் தன் சேனாதிபதி ஆஅய் எயினனைப் பெரும்படையொடு செல்லவிடுத்தனன்.

இந்த ஆஅய் எயினன் வெளியம் என்னும் ஊரில் வேளிர் மரபிற் பிறந்தவன்; (அகம். உ0அ.) மிக்க வீரமுடையவன்; வேண்டினோர்க்கு வரையாது யானை முதலியவற்றைக் கொடுக்கும் வண்மை உடையவன். அந்நாளில் மதுரையிலிருக்கும் அகுதை யென்பவன் தான்மிக்க வீரமுடையவனாயிருந்தும் இவ் ஆஅய் எயினனுக்கு நடுங்கி யொடுங்கி யிருந்தனன்; இத்தகைய மேம்பாடுகொண்ட இவ் ஆஅய் எயினன் நன்னனது படைத்தலைவனாகிய மிஞிலி மிக்க வீரமுடையவனென்று பிறர்தடுத்துக் கூறியதையுங் கேளாமல் (அகம். ங௲.) அவனொடு பாழி யென்னுமிடத்திற் போர் தொடங்கினான். அப்பொழுது அந் நன்னன் தனது பேய்க் கூட்டருகில் (அகம். கசஉ.) நின்றுகூறிய கட்டளையை மேற்கொண்டு அவன் படைத்தலைவனாகிய மிஞிலி வந்தெதிர்நின்று போர் தொடங்கி நண்பகற்பொழுதில் வேலாலெறிந்து ஆஅய் எயினனைக் கொன்றான். விழுந்த எயினன்மேல் வெயில்படாவாறு பறவை பந்தரிட்டாற்போலச் சூழ்ந்தன; நன்னன் மனமழுங்கியிருந்தனன்; அகம். உ0அ. பிறகு அவ் எயினனது உரிமை மகளிர் திரண்டெழுந்து காவிரியாற்றுக்கு வந்து தங்கள் வழக்கப்படி சரமக்கிரியை முடித்து அலங்கரித்த எயினன்போன்ற வடிவமொன்றனை அந்நீரிற் போகட்டு நீராடிப் பெயர்ந்து போயினர்; அகம். கஅக. இப் பெரும்பூசல் கேட்டு மதுரையில் அடங்கிக்கிடந்த அகுதை அச்சம் நீங்கி மகிழ்வானாயினன்; அகம். உ0அ.

இங்ஙனம் சேனாபதி முடிந்தானென்பது கேட்ட களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் வெகுண்டு பெரும்படையொடு வந்து பெருந்துறை யென்னுமிடத்தில் நன்னனால் பாதுகாக்கப்பட்டுவந்த அவனது காவன்மரமாகிய வாகையை வெட்டிச்சாய்த்தனன். (இவ் வாகைப்பறந்தலை வாகை யென்னும் பெயரொடு இப்பொழுது முளது.) இதனை யறிந்த நன்னன்

தன் பெரும்படையொடுவந்து எதிர்நின்று பலநாள்காறும் போர்செய்ய ஈற்றில் சேரலன் படையால் நன்னன் இறந்தொழிந்தனன்; "குடாஅ, திரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற், பொலம்பூண் நன்னன் பொருகளத் தொழிய, வலம்படு கொற்றந் தந்த வாய்வாட், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேர, விழந்த நாடு தந்தனன்"—அகம். ககக. நன்னன் கதையை யாண்டும் எடுத்துக் காட்டினவர் பரணர்; நற். உ௪0, கூகக. இந் நன்னனுடைய பாழியும் பாரமும் பிறவும் சேனபதி மிஞிலியென்பவனால் முன்பு காக்கப்பட்டுவந்தன; நற். உகூ௬.

## கரு. தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

இவன், மதுரையிற் பாண்டியர் மரபிலே தோன்றிக் கல்வி கேள்வி வீர முதலாயவற்ற‌ாற் சிறந்து, கவிபாடுந் திறனுமுடையனாய் மாங்குடி மருதனார் முதலாகிய வித்துவான்களாற் புகழ்ந்து பாடப்பெற்று, இளமையிலேயே அரசவுரிமை கைக்கொண்டு, ஆட்சிபுரிந்து வருவானாயினான். அந்நாளில் சேரமான் யானைக்கட் சேய்மாந்தரஞ்சேர விரும்பொறையும், சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் வேளிர் ஐவரும் (புறம். எ௬.) இந் நெடுஞ்செழியனை இகழ்ந்து கூறிப் பாண்டி நாட்டைக் கைப்பற்றக் கருதி மதுரையை முற்றுகையிட்டார்கள். அது கண்ட நெடுஞ்செழியன் சினமிகுத்து "நகுதக்கனரே" (புறம். எஉ.) என்ற செய்யுளால் வஞ்சினங்கூறிப் போருக்கெழுந்து உழிஞைசூடிப் போர் செய்யத் தொடங்கினான்; புறம். எக. இவன் மிக்க இளையனாயிருந்தும் அஞ்சாமற் கடும்போர்புரிந்து (புறம். எஎ.) அவ்வெழுவருந் தோற்றோட வென்றான்; புறம். எ௬. தோற்ற எழுவரும் ஓடிச்சென்று சோழநாட்டிற் புகும்போதும் இவன் விடாது பின்தொடர்ந்து சென்று திருத்தலையாலங் கானத்து மறித்துநின்று பெருஞ்சமர் நடத்தி வேளிர்......

[இதனை எழுதிமுடிக்குமுன் உரையாசிரியர் உடல் நீங்கினர். பாடப்பட்டோருள் கிள்ளிவளவன் முதலிய சிலரது வரலாறும் எழுதப் படவில்லை.]



உ

கடவுள் துணை

# நற்றிணை நானூறு

## மூலமும் உரையும்



### கடவுள் வாழ்த்து

என்றது, இந்நூல் என்றும் நின்று நிலவவேண்டிக் கடவுளை வாழ்த்துவான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், மாயோனே வேதமுதல்வனென ஆன்றோர் கூறுவராதலின், யாமும் அவனையே வணங்குவோ மென்று வாழ்த்துக் கூறுநிற்பது.

பாரதம் பாடிய பெருந்தேவனார்

நேரிசையாசிரியப்பா

மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்

வளைநரல் பௌவம் உடுக்கை யாக

விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன்* என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே.

**உரை**:—பெரிய நிலம் தன் சிவந்த அடிகளாகவும், தூய நீரையுடைய சங்குகளொலிக்கின்ற கடல் ஆடையாகவும், ஆகாயம் மெய்யாகவும், திசை கைகளாகவும், தண்ணிய கதிர்களையுடைய திங்களும் ஞாயிறுமாகிய இரண்டும் இரண்டு கண்களாகவுங் கொண்டு, அமைந்துடைய எல்லாவுயிர்களிடத்தும் தான் பொருந்தியிருப்பதன்றி, நிலமுதலாய எல்லாப் பொருள்களையும் தன்னுறுப்பகத்தடக்கிய வேதத்தாற் கூறப்படு முதற்கடவுள் குற்றந்தீர

(பாடம்) * வேத முதலிவன்.





விளங்கிய திகிரியையுடைய மாயோனேயென்று ஆன்றோர் கூறுநிற்பர்; ஆதலின், யாமும் அவனையே கடவுளாகக் கொண்டு வணங்குவோமென்றவாறு.

மா - பெருமை. தூநீர் - அலையாலே தூவப்படு நீரெனவுமாம். வளை - சங்கு. நரலுதல் - ஒலித்தல். பௌவம் - கடல். திகிரி - சக்கராயுதம்.

இதனுள் ஐம்பெரும்பூதமும் மதியமும் ஞாயிறும் திசையும் துறக்கமுமாய் அமைந்த மூவுலகமும் திருமாலினொருவடிவமே யெனவும், அவன் அவ்வடிவாக விளங்குதலால் உலகமும் உலகத்துயிர்களும் அவ்வுயிர்களாலே துய்க்கப்படும் பொருளும் அவனே யெனவும், அவனியல்பை உள்ளத்தாலுணரவல்லாரே ஆன்றோரெனவும், அவரே உயிர்களின்மாட்டுப் பேரருளுடைமையான் விரித்துக் கூறுவரெனவும், பெரிதும் பயனெய்துமாறு கூறினாராயிற்று. ஏனைப்பூதமும் பிறவுங் கூறிய அடிகள் சிதைவுற்றமையின், வடமொழிச் செய்யுளைநோக்கிக் கூறலாயிற்று.

உயிர்ப்பன்மை மெய்யாற் செய்யப்படும் வணக்கம் திருவடியிடத்ததாதலின் அதனை முற்கூறினர். மனத்தாலே கருதற்குரியானன்றிக் காண்டற்கரியனென்பார் விசும்பு மெய்யென்றார். இனி நியாய நூலார் 'விசும்பு நீலநிறமுடையது' என்றலின், இறைவனது நீலமேனியை நோக்கி விசும்பு மெய்யாக என்றாரெனலுமாம். உயிர்களின் நல்வினை தீவினையறிந்து அவற்றிற்கேற்ப உதவுதற்பொருட்டு யாண்டுஞ் சான்றாகியுறைதலால் எல்லாம் பயின்றென்றார்; எனவே இறைவனது உள்ளுறையாயிருக்குந்தன்மை (அந்தர்யாமித்துவங்) கூறியதாயிற்று. ஊழி திரியுங்காலத்து எல்லாம் அழியாது அளித்தற் சிறப்புக்கூறுவார் அகத்தடக்கி யென அவனுறுப்பகத்தடக்கினமை கூறினர். இறைவனது பரத்துவங் கூறுவார் வேத முதல்வனென்றார். இங்ஙனங் கூறியவாற்றால் அவ்வுருவைத் தியானஞ் செய்கவென்றதாயிற்று. உலகத்துக்கு அவுணராலே செய்யப்படுகின்ற தீங்குகளைப்போக்கி விளங்குதலாலே, தீதற விளங்கிய திகிரியுடையோனென்றார்.

ஆக, ஆக, ஆக, ஆக, ஆகப் பயின்று அடக்கிய முதல்வனெனக் கூட்டுக. ஆன்றோர் - தோன்றா எழுவாய். இருவகைவாழ்த்தினுள் இது தனக்குப் பயன்பட வாழ்த்தியது.

---

# நூல்

## க. கபிலர்

**குறிஞ்சி:** *இது, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.*

*எ - து, தலைவன் பிரியக்கருதிய தறிந்த தோழி தலைவியிடங் கூறலும், தலைவி அவரை இன்றியமையாத என்னை வருந்தும்படி விட்டுப் பிரிகின்ற அன்னதொரு குணக்குறைபாடு இலரெனத் தலைவனைப் புகழ்ந்து கூறா நிற்பது.*

நின்ற சொல்லர்* நீடுதோன் றினியர்
என்றும் என்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை
நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்பறி யலரே.

உரை :—தோழீ, நம் காதலர் நிலைமை தவறுத வாய்மையுடையவர்; நெடிதாகத் தோன்றுகின்ற இனிமையுடையவர்; எப்பொழுதும் என்தோள் களைப் பிரியும் அன்னதொரு குணக்குறைபாடிலர்; அத்தகைய மேதக்கோ ருடைய நட்பு, தாமரையின் தண்ணிய தாதினையும் மேலோங்கிய சந்தனத் தின் தாதினையும் ஊதி, அந்தச் சந்தனமரத்தில் வைத்த இனிய தேன் போலத் திண்ணமாக மேதக்கன, ஆதலின் அவர் நீரையின்றி யமையாத உலகியல்போலத் தம்மையின்றி யமையாத நம்பால் முன்பு விருப்பமிகவைத் தருளிப் பின்பு பிரிதலால் நம் நறிய நுதல் பசலையூர்தற்கு அஞ்சிச் செய்வ தறியாராய்த் தடுமாற்றம் அடைவாரோ? அங்ஙனஞ் செய்யார்காண்; எ-று.

சாந்து - சந்தனமரம். புரை - உயர்ச்சி. சிறுமை - நோயுமாம்.

தாமரைத்தாது தலைவனுள்ளத்திற்கும் சந்தனத்தாது தலைவியுள்ளத் திற்கும் உவமையாக்கி இருவருட்கருத்தும் ஒத்த வழி சாந்திலே தீந்தேனி றுல் வைத்ததுபோலத் தலைவன் தலைவிபால் அன்புவைத்தானெனப் பொருந்தவுரைக்க. இடையிலே பலவாயசொற்களைப் பொருந்தப் பெய் துரைப்பனவெல்லாம் இசையெச்சமெனக் கொள்க. [இசையெச்சமாவது வாக்கியங்களில் அவ்வவ்விடங்கட்கு ஏற்றபடி ஒரு சொல்லும் பல சொற் களுமாக வருவித்துரைக்கப்படுவது.]

இயற்கைப்புணர்ச்சி யிறுதியின்கண் நின்னிற்பிரியேனென்றதனை இன்றுகாறும் நிலையிட்டவராதலின், இனியும் பிரியக்கருதாரென்றதை அடக்கி நின்ற சொல்லரென்றாள். யாஞேக்குந்தோறும் எனக்கு இனிய

(பாடம்) * நின்ற சொல்லொடு.

நற்றிணை நானூறு

ராய் என்னை மகிழ்விப்பவர், அம்மகிழ்வுக்கு ஊறுண்டாகப் பிரியாரென்னுங் கருத்தால் நீடுதோன்றினியரென்ற இதுவும், அதனையே நோக்கி நின்றது. 'உழையமாகவும் பனிப்பவள், பிழையலள் மாதோ பிரிதும்நா மெனினே' எனக் கொண்டவராதலின் 'என்றும் என்தோள் பிரிபறியலர்' என்ற இதுவும் பிரியாரென்பதனை வலியுறுத்திற்று. பசத்தல் - பசலைபாய்தல். இது கண்ணாடிமேல், வாயினூதிய ஆவிபட்டு அக்கண்ணாடி மழுக்கமடைவதுபோலத் தலைவியின் நெற்றியிலுள்ள ஒளி தலைவனைப் பிரிதலால் மழுங்கித் தோன்றுதல்; இதனைப் பீர் எனவும் பொன் எனவுமுரைப்பர்.

நீடுதோன்றினியரென்றும், தோள் பிரிப்றியலரென்றுங் கூறியதனால் மெய்ப்பாடு - உவகை. பயன் - ஆற்றியிருத்தல். திணை - குறிஞ்சி. கைகோள் - கற்பு. தலைவிகூற்று. கேட்போர் தோழி. (இதிற்கிடந்த நீரின்றமையா என்ற கருத்துடையது; குறள், உ௦. இடையறா தொழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல். நீரின்றமையாதுலகு என்பது எல்லாரானுந் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக்கும் வானின்றமையாமை தெளியப்படும் என்பார் "நீரின்றமையாதுலகு எனின்" என்றார்.) இப்பாட்டுக் கற்பின்வழிப் பிரிவாதலின் எற்றற்கட் டலைவி கூற்று நிகழ்ந்தது; பிரிவுணர்ந்து புலந்துரைப்பின் நாணழிவாமென்பர் நச்சினார்க்கினியர். (தொல்காப்பியம், பொருளதிகாரம், சூத்திரம் - கசஎ, உரை.)

# உ. பெரும்பதுமனார்

**பாலை :**

**இஃது, உடன்போகாநின்றாரை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.**

எ - து, தலைவனும் தலைவியும் ஒருப்பட்டெழுந்து சுரத்திடைச் செல்லக் கண்டோர் இக்கொடுஞ்சுரத்தில் இம் மெல்லியலாளைக் கொண்டு செல்லும் இவ்விளையோனுள்ளம், இடியினுங் காட்டிற் கொடிதெனக் கவன்று கூறுகிற்பது.

அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்
தோலிவல் ஈந்தின் உலவை யங்காட்
டாறுசெல் மாக்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய*
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரல் நோக்கும் இண்டிவர் ஈங்கைய சுரனே
வையெயிற் றையள்† மடந்தை
முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோ னுள்ளங்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினுங்
கொடிதே.

(பாடம்) * நெய்த்தோர் வல்லியம்; † ஐயள் மாயள், மாயள் - கரிய மேனியள்,

**உரை:**—சுரமோ; ஆழ்ந்துபடக் கிடந்த பெரிய குளிர்ச்சியையுடைய குன்றத்துத் தழைத்த வலிய ஈத்தமரங்களையுடைய காற்றுச் சுழன்று வீசும் காட்டின்கண்ணே நெறிக்கொண்டு செல்லும் மக்களுடைய தலையை மோதியதனாலே குருதிபடிந்த சிவந்த மறுப்பட்ட தலையையுடையனவும், இரத்தம்பூசிய வாயையுடையனவுமாகிய பெரிய தலையையுடைய புலிக் குட்டிகள் இம் மாலைப்பொழுதில் தாம் பதுங்கியிருக்கும் மரலின் தூறுகளை நிமிர்ந்து நோக்காநிற்கும் இண்டங்கொடியுடனே ஒருசேரப் படர்கின்ற ஈங்கையையுடையவாகும். இத்தகைய சுரத்தின்கண்ணே கூரிய பற்களை யுடைய மெல்லியளாகிய மடந்தை முன்னே செல்லவிடுத்துப் பின்னே இவ்விராப் பொழுதிற் செல்லாநிற்கும் இவ்விளைஞனுள்ளமானது; காற் றொடு கலந்த மழைபெய்யுங்காலத்திற் பெரிய துறுகற்களைப் புரண்டு விழு மாறு மோதுகின்ற இடியினுங் காட்டிற் கொடியதாயிராநின்றது; எ – று.

ஒலிதல் - தழைத்தல். உலவை - காற்று. செய்த்தோர் - இரத்தம். வல்லியம் - புலி. இவர்தல் - படர்ந்தேறுதல். வை - கூர்மை. எல் - இராத் திரி. மிளிர்க்குதல் - புரட்டுதல். ஐயள் - மெல்லியள். உற்று என்பதை உற எனத்திரிக்க. அழுந்துபடல் - ஆழ்ந்துபடல்; (தொல்-சொல்-௪0௩) "அந்நாற்சொல்லும்" என்பதன்கட் கிடந்த 'நாட்டல் வலிய' என்பதனால் குறுக்கல்விரித்தலாகிய இருவகை விகாரமுங் கொள்க.

நடத்தலாற்றுளென்பார் ஐயளென்றார். மடந்தையை முன்னே நடத் தித் தான் பின்னே செல்லுதல்; அவளது முதுகினழகையும் இளைத்த நடையையும் காணுதற்பொருட்டு. மாதர்க்குக் காலணியாகிய சிலம்பு வதுவைக் காலத்துக் கழற்றுதல் மரபு; அங்ஙனமாக இவள் சிலம்பணிந்த படி ஓராடவனுடன் செல்லக் காண்டலாற் களவினிற் கொண்டு தலைக் கழியப் பெறுவளாமென்று ஏனையோரயிர்த்துக் கூறியதாயிற்று; "சிலம்புஞ் சிறுநுதலும்" "வில்லோன் காலன கழலே தொடியோள், மெல்லடி மேலவுஞ் சிலம்பே" எனவுஞ் சான்றோர் கூறுமாற்றான் அறிக. **மெய்ப் பாடு** - அழுகை. **பயன்** - தம்மிற் கூறியாறுதல். இதனைக் கண்டோர் கூற் றுக்கு மேற்கோளாக்கினர் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-௬-௪0, உரை.)

## ௩. இளங்கீரனார்

பாலை: இது, முன்னொருகாலத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் பின்னும் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

எ - து, முன்பு பொருள்தேடச் சென்றிருந்துவந்த தலைமகன், மற்றொரு காலத்துப் பின்னும் பொருள் தேடும்படி கருதிய நெஞ்சை நோக்கி நெஞ்சே! மாலைப்பொழுது வரக்கண்டு இம்மாலைப்பொழுது நம் காதலி நம்மைக்கருதி வருந்துதற்குரிய காலமென்று முன்பு பிரிந்தவிடத்துக் கருதினேன் அல்லனோவென வருந்திக் கூறுநிற்பது.

ஈன்பருந் துயவும் வான்போரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழல்
கட்டளை அன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறுஅர் நெல்லிவட் டாடும்
ரு. வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்ச்



சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
யுள்ளினேன் அல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமாண் சுடரோடு படர்பொழு

தேனவே.

**உரை:**—நெஞ்சே, பார்ப்பையீன்ற பருந்து வருந்தியுறையாநிற்கும் ஆகாயத்தின்மேற் செல்லுகின்ற நெடிய கிளைகளையும் பொரிந்த அடியையு முடைய வேம்பினது புள்ளிபோன்ற நிழலின்கண்ணே கட்டளைக் கற் போன்ற அரங்கை வட்டினாலே கீறி ஏனைத்தொழிலொன்றுங் கற்றறி யாத சிறுவர்கள் நெல்லியங்காயை வட்டாகக்கொண்டு பாண்டி லாடா நிற் கும் விற்போரால் ஆறலைத் துண்ணும் மழவரின் வெய்ய குடியிருப்பினை யுடைய சீறூரையுடைய அழற்சுரத்தின்கண்ணே முற்பட்டுவந்த நம் வலி யனைத்தையுங் குறைக்கின்ற மாலைப்பொழுதைக்கண்டு 'இம் மாலையானது கருதிய வினையை முடித்தாற்போன்ற இனிமையுடைய நமது காதலி மனை யகத்து மாட்சிமைப்பட்ட விளக்கையேற்றி அதன் முன்னின்று அவர்தாம் இன்னும் வந்தாரில்லையேயென்று அவ்விளக்கொடு வெறுத்துத் துன்புற் றுக் கருதுகின்ற பொழுதாகும்' என்று யான் முன்னம் ஒருகாலத்து நினைத்தேன் அல்லேனோ? அங்ஙனமாக இப்பொழுதும் பொருளீட்டு மாறு ஒருப்படுத்தி என்னை வருத்தாதேகொள்; இனி யான் வாரேன் காண்; எ - று.

உயவு - வருத்தம். கட்டளை - பொன்னுரைக்குங்கல். சுரன்முதல் - சுரத்தினிடத்தில்; முதல் - ஏழனுருபு. படாதல் - நினைத்தல்.

வெப்பத்தால் இலை தழைக்காது கருகுதலிற் புள்ளிபோன்ற நிழலா யிற்று. ஏரால் உழுதுண்பார்போல வில்லால் ஆறலைத்துண்ணலின் வில் லேர் உழவ ரென்றார். வேம்பின் நீழற் சிறார்வட்டாடுஞ் சீறூரென்க. முன்பு பொருள்செயல்வினையை முடித்துப் பெற்ற மகிழ்ச்சியுளதலின், வினைமுடித்தன்ன வினியோளென்றான். இதனானே அம்மகிழ்ச்சி இவளை நோக்குழியேபெறக் கிடத்தலிற் பொருளை நச்சிவாரேனெனவுங் குறிப்பித் தானாயிற்று. அங்ஙனமாக என்பது முதற் குறிப்பெச்சம்.

**இறைச்சிப்பொருள்** :—பருந்து வருந்தியிருக்கும் வேம்பின் நிழலில் அப்பருந்தின் வருத்தத்தை எறிட்டு நோக்காது, சிறார் நெல்லிவட்டாடி மகிழாநிற்பர் என்றது, யான் இவளைப் பிரிதலால் வருந்துன்பத்திற் கஞ்சி வருந்தவும் அதனைக் கருதாத என்னெஞ்சே! நீ பொருள்மேற் சென்று மீளும் மகிழ்ச்சியை உடையையாயிராநின்றாய் என்பதாம். **மெய்ப்பாடு** - பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல். **பயன்** - இல்லத்தழுங்கல். இதனை இத்துறையிலேயே அடக்கினார் நச்சினார்க்கினியர்; (தொல் - பொ-கு-சக, உரை.) (கூ)

## ச. அம்மூவனார்

**நெய்தல் :**

இது, தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி அலர் அச் சந்தோன்றச் சொல்லி வரைவுகடாயது.

எ - து, களவொழுக்கத்து, அணித்தான ஓரிடத்திலே தலைவன் வந்திருப்பதையறிந்த தோழி, அவன் கேட்டலும் விரைய வரைந்துகொள்ளுமாற்றானே தலைவியை நோக்கி, நமக்குண்டாகிய பழிச்சொல்லை அன்னை

மூலமும் உரையும்

எ

யறிந்தால் இற்செறிப்பாளென்று தலைவர்பாற் கூறின், அவர் நம்மைத் தம் மூர்க்குக் கொண்டுபோவரோ எனக் கவன்று கூறுநிற்பது.

கானல்அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்
தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி

யங்கண் அரில்வலை உணக்குந்
துறைவனொ
டலரே, அன்னை யறியின் இவண்உறை
வாழ்க்கை
அரிய வாகும் நமக்கெனக் கூறிற்
கொண்டுஞ் செல்வர்கொல் தோழி
உமணர்
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்
மணல்மடுத் துரறும் ஓசை கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉம்
இருங்கழிச் சேர்ப்பிற்றம் உறைவின் ஊர்க்கே.

**உரை** :—தோழீ, கடற்கரைச் சோலையிலுள்ள சிறுகுடியிலிருந்து கடலின்மேற் செல்லும் பரதவர் நீலநிறத்தையுடைய புன்னையின் கொழுவிய நிழலிலேதங்கித் தண்ணிய பெரிய கடற்பரப்பிற் செல்லுதற்கு நல்ல அற்றம் பார்த்து அவ்விடத்து முறுக்குண்டுகிடந்த வலையைப் பிரித்துப் புலர்த்தா நிற்குந் துறையையுடைய நமது தலைவர்பாற்சென்று, நமக்குண்டாகிய பழிச்சொல்லை அன்னையறிந்தால் இனி இங்குத் தங்கிக் களவொழுக்கத்து வாழ்தல் அரியவாகும் என்று கூறினால்,—உப்புவாணிகர் வெளிய கல்லுப்பின் விலைகூறிக் கூட்டமாகிய ஆனிரையை எழுப்புகின்ற நெடிய நெறியிற் செலுத்தும் பண்டிகள் மணலின் மடுத்து முழங்கும் ஓசையைக்கேட்டு, வயலிலுள்ள கரிய காலையுடைய வெளிய நாரைகள் வெருவாநிற்குங் கரிய கழி சூழ்ந்த நெய்தனிலத்தின்கணுள்ள தம் உறைவிடமாகிய ஊருக்கு, நம்மை அழைத்துக்கொண்டும் போவரோ ? எ – று.

அசைதல் - தங்குதல். பதம் - கொந்தளிப்பு, காற்றுமாறியடித்தல் முதலாயின இல்லாதகாலம். இவனுறை வாழ்க்கை - புலாலுணக்கல், புள் ஓப்பல் காரணமாக ஆண்டுத் தங்கியவழி நிகழ்ந்த களவொழுக்கத்து வாழ்தல். நிரை - நெறியிற் படுத்திருக்கும் ஆனிரை. கிளர்த்தல் - எழுப்புதல். உரறுதல் - முழங்குதல். துறைவனொடு கூறில் தம்மூர்க்குக் கொண்டுஞ் செல்வர்கொலென மாறிக்கூட்டுக. அன்னையறியின் வாழ்க்கையரிய என்றது ஏதம் ஆய்தல்.

**உள்ளுறைகள் :** (க) பரதவர் புன்னையின்கீழிருந்து, கடலிற்செல்லுதற்குப் பதநோக்கி அதுகாறும் வலையை யுணக்குந் துறைவனென்றது, தலைவன் சிறைப்புறத்திலிருந்து, தலைவியைக் கூடுதற்கு யாருமில்லாத பதம் பார்த்து, அதுகாறும் ஆராய்ந்துகொண்டிருப்ப னென்றதாம்.

,, ,, (உ) சகடம் மணலில் மடுத்து முழங்குமோசைக்குக் கழனி நாரை வெருவுமென்றது, தலைவன் சான்றோரை முன்னிட்டு அருங்கலன் தந்து வரையவரு மணமுரசொலி கேட்பின், அலரெடுக்கும் ஏதிலாட்டியர்



வாய்வெருவி யொடுங்காநிற்ப ரென்றதாம். **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். இதனைத் தலைவிகூற்றாகக் கொண்டார் நச்சினார்க்கினியர். (தொ-பொ-சூ-ககஉ, உரை.) (௪)

# ௫. பெருங்குன்றூர்கிழார்

**குறிஞ்சி :**

இது, தலைவன் செலவுக்குறிப்பறிந்து வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.

எ - து, வினைவயிற்செல்லுந் தலைமகனது குறிப்பறிந்த தலைவி தனித்து உறைதற்கஞ்சிக் கலுழ்ந்து வேறுபட்டுக்காட்ட, அதனையறிந்த தோழி தலைவியைநோக்கி, நின்கண்கள் குறிப்பாகிய மாறுபட்ட ஒரு தூதுவிடுத்தன; அத்தூதையறிந்து அவர் செல்லுதலொழிந்தனராதலின், இனி முன்பனிக் காலத்தும் அவரைப்பிரிதலரிதுகாண் எனத் தேற்றிக் கூறுகிற்பது.

நிலநீர் ஆரக் குன்றங் குழைப்ப

அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால்
யாப்பக்

குறவர் கொன்ற குறைக்கொடி
நறைப்பவர்

ரு.
நறுங்காழ் ஆரஞ் சுற்றுவன அகைப்பப்
பெரும்புயல் பொழிந்த தொழில எழிலி
தெற்கேர் பிரங்கும் அற்சிரக் காலையு
மரிதே காதலர்ப் பிரிதல் இன்றுசெல்
இகுளையர்த் தரூஉம் வாடையோடு
மயங்கிதழ் மழைக்கண் பயந்த தூதே.

உரை :—தோழீ! இன்று பிரிந்து செல்லுகின்ற தோழியரை மீட்டும் நின்னை ஆற்றுவிக்குமாறு கூட்டுகின்ற வாடைக்காற்றினால் வருந்திய இமைகளையுடைய மழைபோல நீர்வடிக்கின்ற நின் கண்கள்தாம், அவர் செல்லாதவாறு ஒரு குறிப்பாகிய தூதைத் தோற்றுவித்து விடுத்தன. அங்ஙனம் விடுத்த தூதின் காரணமாக இனி மிக்கமழை பெய்தலாலே, நிலம் நீரால் நிரம்பப்பெற்று நிறையவும், மலைமேலுள்ள மரமுதலாயின தழைப்பவும், அகன்ற வாயையுடைய குளிர்ந்த சுனையில் நீர் நிறைதலால் அங்கு முளைத்தெழுந்த குளநெல்முதலிய பயிர்கள் நெருங்கிவளரவும், கொல்லையின்கண்ணே குறவர் வெட்டியழித்தலானே குறைபட்ட மிக்க நறைக்கொடி, மீண்டுந் தளிர்த்துக் கொடியாகி நறுமணங்கமழ்கின்ற வயிரமுற்றிய சந்தனமரத்தின்மீது படர்ந்து சுற்றியேறவும் பெருமழையைப் பொழிந்த தொழிலையுடைய மேகமானது தென்றிசையின்கண்ணே யெழுந்து செல்லுதலாலே பிரிந்தோர் இரங்குகின்ற முன்பனிக்காலத்தும் நீ நின்காதலரைப் பிரிந்து உறைதல் அரியதாகும்; ஆதலின் மகிழ்வொடுமுயங்கி இருப்பாயாக.

கால்யாத்தல் - நெருங்கல். நறைப்பவர் - வாசனைக்கொடி. கொடிப்பவர் - இருபெயரொட்டு. அற்சிரம் - முன்பனிக்காலம். இதழ் - இமை. காழ் - வயிரம். ஆரம் - சந்தனமரம். அகைத்தல் - உயர்ந்து படர்தல். வாடையொடு - வாடையால். எர்பு - எழுந்து, இதனைச் செயவெனெச்சத் திரிபாகக்கொண்டு எழுந்து செல்லுதலாலென ஏதுப்பொருட்டு ஆக்குக.

## மூலமும் உரையும்

சு

ஏனை மரங் கொடிகளிவற்றின்வேர் சந்தனவேரொடு முயங்காதவழி, தனித்துள மரம் நறுமணமெய்தாமை கண்கூடாகக் காண்டலால், ஈண்டு நறைக்கொடி சுற்றுவது கூறி நறுங்காழ் ஆரம் என்றார். மழைக்கண் பயந்த தூது - அழிவில்கூட்டத்துப் பிரிவாற்றாமை. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (கு)

சா. **பரணர்**

குறிஞ்சி :

இஃது, இரவுக்குறிப்பாற்பட்டு ஆற்றாளாய தோழிகேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

தலைவன்;

எ – து, இரவுக்குறி வேண்டிச் சென்றதலைவன், தோழிகேட்டு உடன்படுத்துமாறு யாம் வந்திருக்கின்றேமென்று தலைவியிடத்து ஒருவர் சென்று கூறினால் யாரோவென்னாளாய் யாம் வந்துளேமென்று மகிழ்ந்து களிப்பால் மயங்குவள்; அங்ஙனங் கூறுவாரைப் பெற்றிலேமேயென வருந்திக் கூறாநிற்பது.

நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்
நாருரித் தன்ன மதனின் மாமைக்
குவளை அன்ன ஏந்தெழில் மழைக்கண்
திதலை யல்குற் பெருந்தோட் குறுமகட்
கேய்தச் சென்று செப்புநர்ப் பெறினே,
இவர்யார் என்குவள் அல்லள், முனாஅ
தத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில் லோரி கானம் நாறி
இரும்பல் ஒலிவருங் கூந்தல்
பெரும்பே துறுவள்யாம் வந்தனம்
எனவே.

**உரை** :—நீரில் வளர்ந்த ஆம்பலின் உள்ளிற் புழையுடைய திரண்ட தண்டை நாருரித்தாற்போன்ற அழகு குறைந்த மாமையையும், குவளை போன்ற அழகு தங்கப்பெற்ற குளிர்ச்சியுடைய கண்ணையும், திதலையுடைய அல்குலையும், பெரிய தோளையுமுடைய இளமகளாகிய நம்மாற் காதலிக்கப்பட்ட தலைவியிடத்து நெருங்கச் சென்று, எமது வருகையை முன்னடிக் கூறுவாரைப்பெறின், அவரைநோக்கி இவர் யாவரென்று கேட்பாளல்லள். சுரத்திலுள்ள குமிழமரத்தின் வளைந்த மூக்கினையுடைய முற்றியகனிகள் கீழே உதிர்ந்து ஆங்குக்குதித்து விளையாட்டயர்கின்ற இளமானுக்கு வெறுப்பில்லாது உணவாகாநிற்கும் வலிய வில்லையுடைய ஓரியென்பவனது கானம்போல நறுநாற்றமுடையவாகிக் கரிய பலவாகிய தாழ்ந்த கூந்தலையுடைய அவள்தான் 'யாம் வந்திருக்கின்றேம்' என்பதைக் கேட்டவுடன் களிப்பினாலே பெரிதும் மயக்கமெய்தாநிற்பள்; அங்ஙனஞ் சென்று கூறுவாரை யாம் பெற்றேமில்லையே! எ – று.

தூம்பு – துளை. ஆம்பல் – அல்லியென்று வழங்கப்படுவது. மதன் – அழகு. மாமை – மாந்தளிரின் தன்மை. வல்சி – உணவு. ஒலிதல் – தாழ்தல். பேது – மயக்கம். முனைது – வெறுப்பெய்தாது, முனைதல் – வெறுத்தல்.



பகற்குறிக்கண்ணே தான்கண்டுவைத்து, முயங்கியவழி நீங்குதலின் இப்பொழுதும் உளதாயிருக்குமெனக்கொண்டு மாமையுடைமை கூறினன்; இதனால் அதனை நீக்கத் தோழி முயலுகவென்றானுமாம். முதலிற் கூட்டத்திற்குக் குறிப்புணர்த்தியது நோக்கமேயாதலின், அதனை மழைக்கணனச் சிறப்பித்து முற்கூறினன். அணைந்தவழி இன்பஞ்செய்தலின் திதலையல்குலென அடைகொடுத்துக் கூறினன். இடந்தலை பாங்கற்கூட்டம் பாங்கியிற்கூட்டத்து முயங்கிக்கிடந்தவழி இன்பஞ்செய்தலின் தோளையுங் கூந்தலையும் பிற்கூறினன். மதனின்மாமையென்றது பசலைபாய்தல். பெரும்பேதுறுவளென்றது கண்டவழி உவத்தல்.

**இறைச்சி** :—குமிழின் கனி மானுக்கு உணவாகுமென்றது, யாம் வந்திருக்கின்றேமென்று கூறும் அச்சொல்லானது நமது தலைவிக்கு மகிழ் வளிக்குமென்றதாம். **மெய்ப்பாடு** – அழுகை. **பயன்** – அயர்வுயிர்த்தல். (சு)

# எ. நல்வெள்ளியார்

பாலை :

இது, பட்டபின்றை வரையாது கிழவோன், நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற்பிரிய, ஆற்றாளாய தலைவிக்குத் தோழி சொல்லியது.

எ - து, அறத்தொடு நிற்றலின்பின் வரையாது தலைமகன் நெடுந்தூரம் பொருள்வயிற்பிரிந்துபோனபின்பு, ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி அவர்குறித்த கார்காலம் வந்துற்றதாதலின், இன்னேவந்து நின்னைவரைந்து கொள்வர்; அதுகாறும் வருந்தாதொழியெனத் தேற்றிக் கூறுநிற்பது.

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்
பெருவரை அடுக்கத் தருவி யார்ப்பக்
கல்லலைத் திழிதருங் கடுவரற்
கான்யாற்றுக்
கழைமாய் நீத்தங் காடலை யார்ப்பத்
தழங்குகுர லேற்றொடு முழங்கி வானம்
இன்னே பெய்ய மின்னுமால் தோழி
வெண்ணே லருந்திய வரிநுதல் யானை

தண்ணறுஞ் சிலம்பில் துஞ்சுஞ்
சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே.

**உரை :**—தோழீ! மூங்கிலின் வெளிய நெல்லைத்தின்ற வரிபொருந்திய நெற்றியையுடைய யானை, தண்ணிதாகிய நறுமணங்கமழு மலைப்பக்கத்திலே துஞ்சாநிற்கும் சிறிய இலையுடைய சந்தனமரத்தினையுடைய வாடிய பெரிய காட்டினகத்து, அச்சத்தையுடைய இடமகன்ற சுனையில் நீர் நிறையவும், பெரிய மூங்கில்களையுடைய மலைப்பக்கத்தில் அருவிகள் ஆரவாரிப்பவும், கற்களைப் புரட்டிக்கொண்டு ஓடிவருகின்ற மிக்க விசையினையுடைய கானியாற்றின்கண்ணே பற்றுக்கோடாகிய மூங்கிலும் முழுகுமாறு பெருகிய வெள்ளத்தின் அலை காட்டிற்சென்று மோதாநிற்கவும் ஒலிக்கின்ற இடியேற்றொடு முழக்கஞ்செய்து, முகில்கள் இப்பொழுதேமழைபெய்யவேண்டி மின்னுநிற்கும்; இக்காலத்தை நோக்கினவுடன் அவர் இன்னேவந்து நின்னை வரைந்துகொள்வராதலின், நீ வருந்தாதேகொள்; எ - று.

## மூலமும் உரையும்

கக

சூர் - அச்சம். நனந்தலை - அகன்ற இடம். வரை - மூங்கில். அடுக்கம் - மலைப்பக்கம். நீத்தம் - வெள்ளம். ஆல் - அசை; மூன்றனுருபின் பொருளதோரிடைச்சொல்லுமாம். சிறிய இலை - அகரம் தொகுக்கும்வழித் தொக்கவிகாரம். பெய்யவென்னுஞ் செயவெனச்சம் காரியப்பொருட்டு. இக்காலத்தையென்பதுமுதற் குறிப்பெச்சம்.

மழைபெய்து பெருக்கெடுப்பிற் காட்டில் வருதற்கியலாதாதலிற் கார்காலத்தைக் காண்டலும் வருவரென்னுங் குறிப்பால் பெருக்கெடுக்குமாறு மழைபெய்தற்பொருட்டு மின்னுநிற்குமென்றாள்.

**இறைச்சிகள்** :—(க) வாடுகின்ற பெருங்காட்டிலே அக்காடு தழைப்ப மழைபெய்யத் தொடங்குமென்றது, வருந்திய நின்மாட்டு அருள்செய்ய வேண்டி இன்னே வருவரென்றதாம்.

,, ,, (உ) நெல்லருந்திய யானை கவலைகெடத் துயிலுமென்றது, காதலனொடு இன்பநுகர்ந்த நீ கவற்சியின்றிச் சேக்கையிலே துயிலப் பெறுவாயென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (எ)

அ. ..............................

**குறிஞ்சி** :

இஃது, இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் தலைமகளை ஆயத்தொடுங்கண்ட தலைமகன் சொல்லியது.

எ - து, இயற்கைப்புணர்ச்சி இறுதியில் ஆயத்தொடு கூடிய தலைமகளை அவ்வாயத்தார் செய்யும் வழிபாடறிந்த தலைமகன், இவள் யார்மகளென வியந்து இவள் எனக்கு எய்தற்கரியளாமென ஆற்றானாகி, இத்தகைய புதல்வியைப் பெற்று எனக்குதவிய இவள் தந்தையும் தாயும் வாழ்கவென வாழ்த்தாநிற்பது.

அல்குபடர் ருழந்த அரிமதர் மழைக்கண்
பல்பூம் பகைத்தழை நுடங்கு மல்குல்
திருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்லிவள் தந்தை வாழியர்
ரு.

துயரம் உறீஇயினள் எம்மே அகல்வயல்
அரிவனர் அரிந்துந் தருவனர் பெற்றுந்
தண்சேறு தாஅய் மதனுடை நோன்தாள்
கண்போல் நெய்தல் போர்விற் பூக்குந்
திண்டேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெறுகஇவள் ஈன்ற தாயே.

**உரை**:—மிக்க துன்பமுழந்த செவ்வரிபரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்களையும், பலவாகிய பூக்களுடனே மாறுபடத் தொடுக்கப்பட்ட தழையுடையை அசையும்படி யுடுத்த அல்குலையும், அழகிய நீலமணியொத்த மேனியையுமுடைய இவ்விளமகள் யாவர் புதல்வியோ? அசையாத உள்ளத்தையுடைய எம்மையே துயரஞ்செய்தனளே; இத்திறம்வல்லவளைப்



பெற்று எனக்குதவிய இவளது தந்தை நெடுங்காலம் வாழ்வானாகுக; இவளையீன்ற தாயும் அகன்ற வயலின்கண்ணே மள்ளரால் அரியப்பட்டும் அரிச்சூட்டை எடுப்போராற் கொண்டுவரப்பட்டும் தண்ணிய சேறுபரந்து அழகுடைய வலிய தண்டினையுடைய கண்போல்கின்ற நெய்தல் நெற்போரின் கண்ணே மலருந் திண்ணிய தேரையுடைய பொறையனது தொண்டி நகர் போன்ற சிறப்பினைப் பெறுவாளாக; எ - று.

உழத்தல் - தன்போற் காட்சியிற் பெருவிதுப்புறுதல். அல்கல் - மிகுதல். உழந்த மடவோளென இயைக்க. அரிவனரென்பது முதல் நெய்தற்கு அடை. பேரார்வு - கதிர்ப்போர். பொறை - மலை; மலைநாடனாதலிற் சேரலன் பொறையனெனப்பட்டான். பெரிதுமோர் இன்பந் துய்த்தாலன்றிப் பயந்தோரை வாழ்த்தல் இயல்பின்மையின் இஃது இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட் கூறியதாயிற்று. பொறையனது தொண்டி எல்லாவளனும் பெற்றுத் திகழ்தல்போல, ஈன்றதாய் எல்லாவளனும் பெற்றுத் துய்க்க வென்றுமாம். நெய்தல் அரிவோரால் அரிந்து கொணரப்பட்டுக் கதிர்ப்போரினும் மலருமென்றதனாலே, இவள் யாண்டுச் செல்லுகினும் ஆண்டுச் சிறப்பெய்துக வென்றவாறு. **மெய்ப்பாடு** - உவகையைச்சார்ந்த மருட்கை. **பயன்** - பயந்தோர்ப்பழிச்சல். இதனைப் புணர்தனிமித்தமென்பர் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-கசு, உரை.) (அ)

# கூ. பாலைபாடியபெருங்கடுங்கோ

**பாலை** : இஃது, உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்கு உரைத்தது.

எ - து, தலைவி கருதியவண்ணம் அவளை இரவிலே அழைத்துக் கொண்டு செல்லுந்தலைமகன் விடிந்தபின் சுரமும் இடையூறுங்கடந்து போகுழித் தலைமகளை நோக்கி நெறியெங்கும் பொழிலும் ஊர்களுமாயுள்ளனவாதலின், நீ வழிவிளையாடி வருந்தாதேகு எனக்கூறி மெல்லக் கொண்டேகாநிற்பது.

- அழிவில முயலு மார்வ மாக்கள்

வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலின்
ரு.

பொரிப்பூம் புன்கி னெழில்தகை யோண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் தோறு நெடிய வைகி
மணல்காண் தோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே!
கல. மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானங்
குறும்ப லூர! யாஞ் செல்லும் ஆறே. மூலமும்

உரையும் கரு /

**உரை :**—வெள்ளிய பற்களையுடையாய், யாம் செல்லுநெறி காடெல்லாம் மாமரத்திலுள்ள அரும்பைக் கோதி மகிழ்கின்ற குயில் கூவிவிளையாடும் நறிய தண்ணிய சோலையையுடையன, அன்றியும் நெறி அடுத்தடுத்த பலவாகிய ஊர்களையுடையன, சிதைவில்லாத செயலை முயல்கின்ற ஆர்வமாந்தர் அக்காரியம் முற்றுப்பெறுமாறு தாம் வழிபடு தெய்வத்தைக் கண்கூடாகக் கண்டாற்போல, யாம் நெடுங்காலம் நின்னைப்பெற முயன்றதனுகிய சுழற்சியையுடைய வருத்தமெல்லாந் தீரும்படியாக நின் அழகிய மெத்தென்ற பருத்த தோள்களை அடைந்தனம், ஆதலின் இனி நீ, பொரியையொத்த பூக்களையுடைய புன்கினது அழகுமிக்க ஒள்ளியதளிரைச் சுணங்கு நிரம்பிய அழகிய முலையிலே அதன் வீற்றுத்தெய்வஞ் சிறப்போடிருக்குமாறு அப்பி, நிழலைக் காணுந்தோறும் நெடும்பொழுது ஆண்டுத் தங்கி, மணல்களைக்காணுந்தோறும் சிற்றில் புனைந்து விளையாடி நெறிவந்த வருத்தத்தைப் போக்கிவிட்டு மெல்லமெல்லச் செல்வாயாக; எ - று.

அலமரல் - சுழற்சி. யாழ-முன்னிலையசை. முறி - தளிர். சுணங்கு - தேமல். வண்டல் - மெல்லிய வண்டற்புழுதியாற் சிற்றில் புனைந்து விளையாடுதல். வால் - வெண்மை. நனை - அரும்பு. கொழுதுதல் - கோதுதல்.

நகைநோக்கித் தன் வழிவரல்வருத்தம் போக்கி மகிழ்தலின், வாலெயிற்றோயென விளித்தான். இனி இடையீடில்லையெனக் கொண்டமையின் தோளெய்தினம் என்றதன்றி நெடியவைகி வண்டலயர்ந்தேகென்றான். நெறி பொழில ஊரவென்றது நண்பகலும் மெல்ல மெல்ல ஏகலாமென்றுணர்த்தியதாம். நெடியவைக வென்றதுமுதல், சுரங்கடந்தனம் இனி அஞ்சாதேயென்று தெளிவித்தானுமாம். ஆர்வமாக்கள் தெய்வத்தைக்கண்டு தாம் முயன்றுவைத்த காரியத்தைப் பெறுதல்போல, யாம் நின்னைக்கண்டு நின்றோளை யெய்தினமென்க. **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - தலைமகளை அயர்வகற்றல். இதனைப் பாலைத்திணையிற் புணர்ச்சி நிகழ்வதற்கும், தலைவியிடத்துத் தலைவன் கூற்றுநிகழ்வதற்கு மேற்கோளாகக்கொண்டார் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-தகு, சக, உரை.) (கூ)

**கo.** .......... . .. ...............

**பாலை**: இஃது, உடன்போக்குந் தோழி கையடுத்தது.

எ - து, தலைவி விரும்பியவாறு தோழி இருவரையும் ஒருப்படுத்தி, வைகிருளிலே தலைவியைத் தலைவன்பாற்சேர்த்துக் கையடுத்தல் செய்து, இருவரையும் வலஞ்செய்துநின்று நின்மாறுபடாத மொழியைத் தெளிந்து புகல்புக்க இவளை முதுமையெய்தினும் கைவிடாது பாதுகாப்பாயாக வெனத், தலைமகனுக்கு ஓம்படுத்துக் கூறுநிற்பது.

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்

பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த

நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்

நீத்த லோம்புமதி பூக்கே ழூர!

ரு. இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்*

(பாடம்) * கொடித்தேர்க்.



கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்

வெண்கோட் டியானைப் பேஎர் கிழவோன்

பழையன் வேல்வாய்த் தன்னநின்

பிழையா நன்மொழி தேறிய* இவட்கே.

**உரை :**—மலர்கள்விளங்கிய பொழில்சூழ்ந்த ஊரையுடையோனே! இனிய கடுப்புடைய கள்ளுணவையும் இழையணிந்த நெடிய தேர்களை யுமுடைய வலிமிக்க சோழமன்னர் கொங்கரை யடக்கும்பொருட்டு, வெளிய கோட்டினையுடைய யானைகளையுடைய 'போஎர்' என்னும் ஊரின் தலைவனாகிய 'பழையன்' என்னுஞ் சேனாதிபதியிடத்துத் தப்பாத வேற்படையைப் பெற்று வைத்திருந்தாற்போன்ற நினது பிழைபடாத நல்ல மொழியைக் கேட்டு உண்மையெனத் தெளிந்த இவளுக்கு அண்ணாந்து உயர்ந்த அழகிய கொங்கைகள் தளர்ந்தாலும், பொன்போன்ற மேனியிலே கருமணிபோலத் தாழ்ந்த நல்ல நெடிய கூந்தல் நரையுடனே முடிக்கப்பெற்றாலும், அக்காலத்து இவள் நம்முயக்கத்துக்குப் பயன்படாது முதிர்ந்தாளென்று கைவிடாதேகொள்; பாதுகாப்பாயாக; எ - று.

அண்ணாத்தல் - நிமிர்தல். வனம் - அழகு. மதி - முன்னிலையசை. கடுங்கள் - முற்றிக் கடுப்பேறியகள். தேறுதல் - தெளிதல். பழையன் வேல் தப்பாதவாறு நின் தப்பாதசொல்.

'எஞ்ஞான்றும் மூப்புப் பிணி சாக்காடின்றி இவனும் பதினாறாட்டைப் பிராயத்தனாய், இவளும் பன்னீராட்டைப் பிராயத்தளாய், ஒத்தபண்பும் ஒத்தநலனும், ஒத்த அன்பும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியுமுடையராய்ப் பிறிதொன்றற்கு ஊனமின்றிப் போகந்துய்ப்பார்' என்றதற்கு மாறாக இவள் முதுமையெய்தும் என்று இச்செய்யுளின்கட் கூறக்கிடந்ததென்னையெனின், அஃதங்ஙன மன்றென்பதுகாட்டவே ஒருகால் 'தளரினும், முடிப்பினும்' என உம்மைகொடுத்துக் கூறினார்; அவ்வண்ணங் கூறியதும் அவன் கைவிடாது காத்தற்பொருட்டேயாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - ஓம்படுத்துரைத்தல். இதனை இத்துறைக்கே மேற்கோளாகக் கொண்டார் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-நக, உரை.) (க0)

## கக. உலோச்சனார்

**நெய்தல் :**

இது, காப்புமிகுதிக்கண் இடையீடுபட்டு ஆற்றாளாய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

எ - து, காவல்மிகுதியாலே தலைவனைக் கூடப்பெறாமல் ஆற்றாது வருந்திய தலைவியைத் தோழி நோக்கி நீ வருந்தாதேகொள், நிலவு விரிந்த தணல் அவர் இன்னே வருவரெனக் கூறுவாள் போன்று, காவல்மிகுதியால் இரவுக்குறி பிறழ்ந்ததும், அதனாலே தலைவி படுந்துன்பமும் சிறைப்புறத்திருந்த தலைவன் கேட்டு வரைவொடு புகுமாறு கூறாநிற்பது.

பெய்யாது வைகிய கோதை போல
மெய்சா யினையவர் செய்குறி பிழைப்ப

---



உள்ளி நோதும லேர்புரை தேள்ளிதின்
வாரா ரேன்னும் புலவி யுட்கோளல்
ஒழிக மாளநின் நெஞ்சத் தானே,
புணரி போருத பூமண லடைகரை
யாழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்பாய்ந் தூர
நிலவுவிரிந் தன்றாற் கான லானே.

உரை :—அவர்செய்த குறி இடையீடுபட்டுத் தவறுதலாலே சூடாது கிடந்த பூமாலைபோல நின்மெய் வாடினையாகி அயலிலெழுதலையுடைய பழிச்சொல்லைக்கருதி இனித் திண்ணமாக அவர் நம்பால் வருவாரல்லர் என்னும் புலவியை நீ உட்கொள்ளாது நின் நெஞ்சத்து அதனை ஒழிப்பாயாக; அலைவந்துமோதிய இளமணலடுத்த கடற்கரையின்கண்ணே தாம் ஊர்ந்துவருகின்ற தேரின் ஆழியிடத்துப் படாதவாறு ஞெண்டுகளை விலக்கிப் பாகன் வாரைப்பிடித்து ஆராய்ந்து செலுத்துமாறு கானலிடத்து நிலவு விரிந்ததுகாண்; எ - று.

சாயினை - இளைத்தனை. மாள-மூன்றனுருபு. வள்பு - வார். மாவின் வலப்புறத்தே தன்பொறைகொளவிருத்தலின் வலவனெனப்பட்டான்.

நொதுமல் ஏர்பு உரை - அலரறிவுறுத்தல். மெய் சாயினை யென்றது உடம்புநனிசுருங்கல். வாராரென்னும் புலவி யுட்கொளலென்றது பொய்யாக்கோடல். அவர் செய்குறி பிழைப்பவென்றது அக்குறியையறிந்து உடனேபுறம்போதாவாறு அன்னை துயிலாமைமுதலிய காப்புமிகுதி யறிவுறுத்தல். அலவனுக்கு ஊறுபடாதவாறு தேர்செலுத்தப்படுமென்றது நீ பழிச்சொல்லால் வருந்தாதபடி வரைந்து இல்லறநிகழ்த்தற்கொருப்படுவானென்றவாறு. இவற்றைக்கேட்ட தலைமகன் வரையக்கருதுமென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (கக)

# கஉ. கபமனார்

## பாலை : இது, தோழி உடன்போக்கு அஞ்சுவித்தது.

எ - து, கொண்டுதலைக்கழியுமாறு உடன்படுத்திய தோழி செவிலியுழைச்சென்று அறத்தொடு நிற்றலாலே பெரிதும் மாட்சிமைப்பட்டுக் காட்டலும், இவள் நீரில்லாத ஆற்றிடைப்போய் வருந்துங் குறை யென்னையென்று தலைமகளைச் செலவழுங்குவித்துத் தலைமகனிடஞ் சென்று 'தலைவி நின்பால் வர உடன்பட்டும் தன் சிலம்பு முதலியவற்றைக் கழற்றிவைக்கும்பொழுது இவற்றைக் காண்டலும் தோழியர் நோவரென்று ஆயத்தாரைப் பிரிதலாலே வருந்திநின்றனள்' என அவன் செலவழுங்குமாறு கூறுநிற்

பது.

விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்

பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்



வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கா
லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்
இவைகாண் தோறு நோவர் மாதோ
வளியரோ வளியரென் னுயத் தோரென
நும்மோடு வரவுதா னயரவுந்
தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன*
கண்ணே.

**உரை:**—மூடைதீர விளம்பழம் இட்டுவைத்தலானே அதன் மணங் கமழ்கின்ற நிறைந்த தயிர்த்தாழியில் கயிறுடித்தேய்த்தலாலே தேய்ந்ததண்டினையுடைய மத்திட்டு வெண்ணெய் தோன்றக் கடைதலால், தறியடியில் ஓசை முழங்குகின்ற, தங்கிய இருள் தீரும் வைகறைப்பொழுதில், தன் மெய் பிறர்க்குத் தோன்றாதபடி மறைத்துத் தன் காலிலணியும் பருக்கைக்கற் போகடப்பட்ட சிலம்பைக்கழற்றிப் பலமாட்சிமைப்பட்ட வரிந்தபுனைந்தபந் தோடு சேர ஓரிடத்தில் வைக்கச்செல்பவள், தன்னுள்ளத்து என் தோழி மார் இவற்றைக் காணுந்தோறும் நோவாநிற்பர்; அவர் இரங்கத்தக்காரல் லரோவென்று கருதி நும்மோடு தான் வருதலை மேற்கொண்டொழுகாநிற் பவும் அவள் கண்கள் தம் அளவுக்கும் அடங்காமல் அழாநின்றன; ஆத லின் நுமக்கு ஏற்றவாறு செய்ம்மின்; எ - று.

குழிசி - தாழி. இயக்கம் - அசைவு. வெளில் - தயிர்கடைதற்கு நட்ட தூண். பகற்பொழுதிற் கடைவுழி வெப்பந்தாங்காது வெண்ணெய் உருகுமாதலின் வைகறையிற் கடைதல் கூறிற்று.

ஒலிகேட்டு அன்னைமுதலானோர் விழித்தாற் போக்கிற்கியலாதென் பதுபற்றிச் சிலம்புகழற்றினமை கூறினாள். இதுகேட்டுச் செலவழுங்கி நின்றானை நீவரைந்து புகுதக; நினக்கு வரைவு மாட்சிமைப்படுமென்றலின் கேட்டதலைவன் இவள் அறத்தொடு நிற்றலான், மாட்சிமைப்பட்டதுபோலுமெனப் பிற்றைஞான்று வரைவொடு புகுவானாவது. இது "வெளிப்பட்ட பின்றையு முரிய கிளவி" (இறையனார்-உ௩) என்றதனாற் பெறப்பட்டது. தோழி சென்று அறத்தொடு நிற்றலை "காமர்கடும்புனல்' என்ற (கலி-௩௯) செய்யுளின், 'சாய்த்தார்தலை' என்றதன்காறுங் கண்டுகொள்க. **மெய்ப்பாடு**- அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - செலவழுங்குவித்தல். இதனைப் போக்குதல் தவிர்ந்ததற்கு மேற்கோளாகக் கொண்டார் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-௩௯, உரை.) (௧௨)

## ௧௩. கபிலர்

### குறிஞ்சி :

இஃது, இயற்கைப்புணர்ச்சியின் பிற்றைஞான்று தலைவியின் வேறுபாடுகண்ட தோழிக்குத் தலைவி மறைத்தற்குச் சொல்லியது.

எ - து, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த மறுநாள் தலைவியின் கண் சிவப்பு முதலாய வேறுபாடுகண்டு இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்றென்று

(பாடம்) * கலிழ்ந்தன.

கஎ

விணவிய தோழிக்கு மறைத்துக் கூறுதலானே அவள் திணைக்கதிரைக் கிளிகள் கொய்துகொண்டு போகவும் அவற்றை ஓட்ட நீ எழுந்தாயுமில்லை இனி அழாதேனு மிருவெனக் கூறுவாள்போன்று இறைச்சியால் அவளது களவொழுக்கத்தைத் தான் அறிந்துவைத்தேனெனப் பொருள்கொள்ளு மாறு தானு மறைத்துக்கூறுகிற்பது.

எழாஅ யாகலி னெழில்நலந் தொலைய
வழாஅ தீமோ நொதுமலர் தலையே
ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழி யன்ன சேயரி மழைக்கண்
நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்
எறிபொற் பிதிரிற்* சிறுபல் காய
வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே.

**உரை:**—*தினைப்புனங் காவலையுடைய மழவர் ஆண்டுத் தின்றழிக்க வந்த பன்றி முதலாய விலங்குகளையெய்து கொன்று மீட்டும் அவற்றினின்று பறித்தெடுத்த அம்புபோன்ற செவ்வரி பரந்த குளிர்ச்சியையுடைய கண்ணையும் நல்ல பெரிய தோளையும் உடையாய்! கொல்லனது உலைக்*

களத்து அடிக்கும் இரும்பின் பொறி சிதறுமாறுபோலச் சிறிய பல காயை யுடைய வேங்கையின் மலர்கள் உதிர்கின்ற உயர்ந்த மலையினுள்ள கூட்டிலி ருக்கு மயில்கள் தாம் அறிதலைப் பசிய புறத்தினையுடைய கிளிகள் அறியா வாய் நெருங்கிய தினைக்கதிர்களைக் கவர்ந்துபோகாநின்றன; அதனால் அக் கதிர்களும் அழிந்து போகின்றன காண்; அவற்றை ஓட்டவேண்டிய நீ இவ்விடத்திருந்தும் எழுந்தாயல்லை; அங்ஙனம் எழாதிருப்பினும் நின் அழகிய நலமெல்லாங் கெடும்படியாக அயலாரிருக்கும் இவ்விடத்து அழா திருத்தலையேனுஞ் செய்வாயாக; எ – று.

பிதிர் – பொறி. பிதிர்போல வீயுகுமெனக் கூட்டுக. கட்சி – கூடு. பயிலல் – நெருங்கல். மன் – கழிவு. அரத்தந் தோய்ந்த பகழி – கண்ணுக் குவமை.

அலரெழுமாதலின் அழாதியென்றாள். இங்ஙனம் அழிவனவற்றைத் தமரறியின் நின்னைக் காவலுக்கு விடாரெனப் புணர்ச்சி முட்டுப்பாடு கூறு வாள் எழுந்தாயல்லை யென்பதாற்குறிப்பித்தாள். ஒரு சிலம்பனை மயக்கிப் பாய்ந்து மீண்ட கண்ணையுடையாயென்பாள் மாவீழ்த்துப் பறித்தபகழி போன்ற கண்ணினையென உவமைமுகத்தாற் கூறினாள்.

**இறைச்சி:**—வேங்கைமலருதிரப்பெற்ற கூட்டிலிருக்கும் மயில் தினைக் கதிர்களைக் கிளிகள் கொண்டுபோவதனை யறிந்திருந்தும், 'நாம் கொய்து கொண்டுபோவதனை அம்மயில் அறியாவாகும்' என்று கிளிகள் கருதிக் கவர்ந்தேகுதல்போல அன்னை பலகாலுந் தூண்டியதனால் நின்னைக்காவல் செய்துறையும் யான் நின்களவொழுக்கத்தை யறிந்துவைத்தும் 'யான் அறிந்திலேன்' என நீ கருதி இதனை மறைத்தொழுகாநின்றாய் என்றதாம்.

---

(பாடம்) * பிதிர்வில்.

மறைத்துக்கூறியொழுகுதல்; சுனையாடியதாலே பந்தாடியதாலே இவ்வேறுபாடுண்டாயதெனக் கூறுதல். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - தோழி ஆராய்ந்தறிதல். இது, தலைவிவேறுபாடுகண்டு ஆராயுந்தோழி தன் ஆராய்ச்சியை மறைத்துக்கூறியதென்பர் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-கக௪, உரை.)

## க௪. மாமூலனார்

**பாலை :** இஃது, இயற்பழித்த தோழிக்குத் தலைவி கூறியது.

இயற்படமொழிந்

எ - து, அறத்தொடு நிற்றலின்கண் முதலிலே தலைவன் பிரிந்தமை காரணமாகத் தலைவி தன்னைத் தலைவன் இகந்தானென வருந்திப் புலம்பக் கேட்ட தோழி, அவளை ஆற்றுவிக்கவேண்டித் தலைவன் நம்மைக் கைவிட்டனனாதலின் அவனியல்பு தவறுடைத்தென்று பழித்துக் கூறலும் அது கேட்ட தலைவி அவர் நம்மைக் கைவிட்டுக் காட்டகத்துச் சென்றிருந்தனராயினும் குறித்தபருவத்து வந்து கூடித் தலையளிசெய்வரென்று, அவனது நல்ல இயல்புகளைப் பொருந்தக் கூறுநிற்பது.

தோல்கவின் தொலையத்* தோள்நலஞ் சாஅய்
நல்கார் நீத்தன ராயினு நல்குவர்
நட்டனர் வாழி தோழி குட்டுவன்
அகப்பா அழிய நூறிச்† செம்பியன்
ரு. பகல்தீ வேட்ட ஞாட்பினு மிகப்பெரி
தலரேழச் சென்றன ராயினு மலர்கவிந்து

மாமட லவிழ்ந்த காந்தளஞ் சாரலின்
ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத் தஞ்சுபிடிப் பூசல்
நெடுவரை விடரகத் தியம்புங்
கடுமான் புல்லிய காடிறந் தோரே.

**உரை:**—தோழீ, மலர் தலைகவிழ்ந்து பெரிய இதழ்விரிந்த காந்தளை யுடைய சாரலின்கண்ணே, தொங்குகின்ற வாயையுடைய களிற்றியானை பெரும்பாம்பின்வாய்ப்பட்டதாக சோராத துயரோடு அஞ்சுகின்ற பிடியானை பிளிறும் பேரொலியானது நீண்ட மலையிடத்துள்ள விடரகத்தே சென் றெதிரொலி எடாநிற்குங் கடிய குதிரையையுடைய கள்வர்கோமான் புல்லியென்பவனுடைய வேங்கடமலையிலுள்ள காட்டின்கண்ணே சென்ற நமது காதலர், என்தோளின் அழகுகெட்டுவாடிப் பழைய நலனெல்லாந் தொலையுமாறு என்னைக்கூடி இன்பங்கொடாராய்க் கைவிட்டொழிந்தாரெனக் கூறுகின்றனை; அங்ஙனங் கைவிட்டொழிந்தாராயினும் அவர், சேரலனது கழுமலத்தின் மதில் ஒருங்கழிய இடித்தொழித்துக் கிள்ளிவளவன் அற்றைப்பகலே அவ்வூரைத் தீயின்வாய்ப் பெய்த போரினுங் காட்டில் மிகப்பெரிதாகிய பழிச்சொல்லுண்டாம்படி சென்றனரெனினும், என்

(பாடம்) * தொலைந்து. † நூறியருமிளை,



பால் மிக்க நட்புவைத்தனராதலால், குறித்தபருவத்துவந்து தலையளிசெய்வர்; ஆதலின் அவர் நீடுவாழ்வாராக; எ - று.

சாய்தல் - நுணுகல்; சாய்த்தொலையவெனமாறிக் கூட்டுக. அகப்பா - மதில். ஞாட்பு - போர். விடர் - மலைப்பிளப்பு. நல்குவர் என்றது பாராட்டெடுத்தல். தொல்கவின்தொலையவென்றது, பசலைபாய்தல். தோணலஞ்சாயென்றது, உடம்புநனிசுருங்கல்.

**இறைச்சி** :—களிறு பாந்தளின்வாய்ப் பட்டதாகப் பிடி பிளிறும் பூசல் சென்று விடரகத்து ஒலிக்குமென்றது, தலைவன் பிரிவால் யான் வருந்திய வருத்தம் நோக்கி ஊரரெடுத்த அலர் சேரிசென்று பரவினும் பரவுக என்றதாம். **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - இயற்படமொழிதல். (கச)

# கரு. அறிவுடைநம்பி

**நெய்தல்** : இது வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்குச் சொல்லி

வரைவுகடாயது.

எ - து, களவின்வழி யொழுகிய தலைவன் மணஞ்செய்துகொள்ளாது காலந்தாழ்த்தலும், தோழி அவனைநோக்கிச் சேர்ப்பனே! நீ தலைவியின் நலத்தையுண்டுணர்ந்தனையாய் இப்பொழுது அத்தன்மையை இன்மையாலுண்டாகிய அலரால் யாம் நாணழியாநின்றேமென வருந்திக்கூறுநிற்பது.

முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்

நுணங்குதுகில் நுடக்கம் போலக்
கணங்கொள

ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!
பூவின் அன்ன நலம்புதி துண்டு
ரு. நீயுணர்ந் தனையே அன்மையின் யாமே
நேர்புடை நெஞ்சந் தாங்கத் தாங்கி

மாசில் கற்பின் மடவோள் குழவி
ஒய்ய வாங்கக் கைவிட் டாங்குச்
சேணும் எம்மொடு வந்த
௧௦. நாணும் விட்டேம் அலர்கவிவ் வூரே.

**உரை:**—முழங்குகின்ற அலைகொணர்ந்து கொழித்த பெரிய எக்கர் மணலை நுணங்கிய துகிலின் நுடக்கத்தைப் போலாக மிகுதிப்படக் காற்றுத் தூற்றாநிற்கும் நீர்மிக்க வலிய கடற்கரைத்தலைவனே! பூப்போன்ற எமது தலைவியின் நலத்தைப் புதுவதாக நுகர்ந்துவைத்தும் நீ அறிந்தனையல்லை யாதலின், யாம் நினக்கு உடன்படுதலையுடைய எம் உள்ளத்தில் வருத்தமுற அதனை யேற்றுக் குற்றமற்ற கற்பினையுடைய மடவாளொருத்தி தன்குழவி யைப் பலிகொடுப்ப வாங்குதலும், அவள் அதனைக் கைவிட்டாற்போல, முன்னாளின் முதற்கொண்டு எம்முடன் வளர்ந்துவந்த நாணத்தையும் விட் டொழிந்தேம்; இனி இவ்வூர் அலரெழுவதாக; எ - று.



ஒய்யுதல் - செலுத்துதல், ஈண்டுப் பலிக்கடன் செலுத்துதல். மூரி - பெருமை. உரவு - வலிமை. நெஞ்சந்தாங்கியென்றது ஆங்கு நெஞ்சழிதல். நலனுண்டு உணராமையாலே நன்றிமறந்தனை; இங்ஙனம் நன்றிமறந்த நின்னை அணுகியதன் பயன் உடனிருந்த நாண்ஒழியலாயதன்றி ஊரும்பழி கூறலாகியதென்றாள்.

**உள்ளுறை:**—கடல்கொழித்து ஒதுக்கிய எக்கர் மணலிற் சிலவற்றைக் காற்று அள்ளித்தூற்றுதல்போல நின்னால் நீக்கப்பட்ட எம்மை ஊரார் அலர்தூற்றாநிற்பர். அங்ஙனமே அலர்க என்றதாம். இவ்வுள்ளுறையில் நுடக்கம்போல என்ற ஏனையுவமம் 'கொழித்த எக்கர் ஊதை தூற்றும்' என்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்துநின்றது. அலரொழித்தல் வரைந்தன்றி யின்மையின் இது வரைவுகடாதலாயிற்று. **மெய்ப்பாடு**-பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல்.

## கசு. சிறைக்குடியாந்தையார்

பாலை :

இது, பொருள்கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செலவழுங்கியது.

தலை

எ - து, தலைவியைவிட்டுப் பிரிந்து சென்று பொருளீட்டும்படி கருதி முயன்ற தன்னெஞ்சினைத் தலைவன் நோக்கி, யான் இவளின் கண்ணுற் கட்டுண்டேன்; இவ்வின்பத்தினுங் காட்டிற் பொருள்சிறவா; அப்பொருள் எங்ஙனமாயினுமாக; இவ்விரண்டினையுமாராய்ந்து சிறந்தது ஒன்றனை நீ யெய்துதற்குரியை எனக் கூறி இல்லத்தழுங்காநிற்பது. கடைக்கூட்டல் - ஒருப்படுத்தல்.

புணரில் புணராது பொருளே பொருள்வயிற்
பிரியில் புணராது புணர்வே யாயிடைச்
சேர்பினுஞ் செல்லா யாயினு நல்லதற்
குரியை வாழியென் னெஞ்சே பொருளே
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியிற் கெடுவே யானே
விழுநீர் வியலகந் தூணி யாக
எழுமா ணளக்கும் விழுநெதி பெறினுங்
கனங்குழைக் கமர்த்த சேயரி
மழைக்கண்

௧௦. அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன்
எனைய ஆகுக வாழிய பொருளே.

**உரை :**—என் நெஞ்சமே! நெடுங்காலம் வாழ்வாயாக; நீ இப்பொழுது கருதியபொருளோ யாம் தலைவியைப்புணர்ந்து இல்லத்துத் தங்கியவழி அடையப்பெறுவதொன்றன்று; இதனைவிட்டுப் பொருள்வயிற்பிரிந்தாலோ இவளைப் புணரும் புணர்ச்சி இனி அடையப்பெறுவதொன்றன்று; ஆதலின், இவ்விரண்டினையுஞ் சீர்தூக்கிப் பொருள்வயிற் பிரிந்தாயானாலும், பிரியாதிவ்வழி யிருந்தாயானாலும் இவற்றுள் நல்லதொருகாரியத்தைச் செய்

## மூலமும் உரையும்

உ-ை

தற்குரியை ஆவாய்; ஆயினும் யான் அறிந்தவளவில் பொருள்கள் வாடாத மலரையுடைய பொய்கையிடத்து ஓடுகின்ற மீன் செல்லுநெறியேபோலத் தாம் இருந்தவிடமுந் தெரியாமற் கெடுவனகாண்; யானேனெனில், பெரிய கடல்சூழ்ந்த அகன்ற நிலனே அளக்கு மரக்காலாகக்கொண்டு ஏழுமரக்கால் வரையில் மாட்சிமைப்பட அளக்கத்தக்க பெரிய நிதியைப் பெறுவதாயினும், அந்நிதியை விரும்பேனாகி இக் கனவியகுழையையுடையாளுடைய மாறுபட்ட செவ்வரிபரந்த குளிர்ச்சியையுடைய கண்கள் பொருந்தி இனிதாக நோக்கும் நோக்கத்தாற்செகுக்கப்பட்டே னாதலின் நின்னொடுபோதற்கு வாரேன்காண்; இனி அப்பொருள், எத்தன்மையவாயினும் ஆகுக; அவை போற்றுவார்மாட்டு வாழ்வனவாக; எ - று.

தூணி - தானியமுதலியவற்றையளக்குங் கருவி; மரக்கால். நிதி - செல்வம். செகுத்தல் - அழித்தல்; ஈண்டு ஆற்றலழியப்பெறுதல். கனங்குழை - அன்மொழி; கனங்குழைக்கு - உருபுமயக்கம்.

புணர்ச்சியில் வெறுப்படையாத இளமைமுழுதும் இன்பம் நுகர்ந்திருப்பின் முதுமையிற் பொருளீட்ட இயையாதென்பான், பொருளே புணராதெனவும் பிரியின் இவள் இறந்துபடுதல் திண்ணமாதலின் இனிப் புணர்ச்சியேயெய்தப் பெருதெனவுங் கூறிப் பின்னர்ப் பொருள்நிலையாமையை மீனேடு நெறிபோலக் கெடுமென உவமையாலெடுத்துக்காட்டி, நல்லதற்குரியையெனக் குறிப்பால் இன்பத்தின்கண்ணே படுத்தானும். **மெய்ப்பாடு** - பிறன்கண்தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல். **பயன்** - செலவழுங்குதல்.

# கஎ. நொச்சி நியமங்கிழார்

**குறிஞ்சி :** இது, முன்னிலைப்புறமொழியாகத் தலைமகள் சொல்லியது.

தோழிக்குச்

எ - து, வரையாது பகற்குறிக்கண் வந்தொழுகுந் தலைமகன் ஒருபொழுது வாராதிருத்தலாலே வருத்தமுற்ற தலைவி பின்பொருநாள் வந்து ஒரு மறைவிடத்திற் கேட்டிருந்த தலைமகன் விரைவில் வரைந்துகொள்ள வேண்டித் தோழியைநோக்கி யான் அவனை எதிர்ப்பட்ட இடங்கண்டு அழுதுகொண்டிருக்கும்போது வினவிய அன்னைக்கு, மறந்து தலைவனது மார்பைப்பெருமல் வருந்துகின்றேனென இம்மறையினைச் சொல்லத் தொடங்கித் தவிர்ந்தேனென்று கவன்றுகூறுநிற்பது.

நாண்மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து
மால்கடற் றிரையி னிழிதரு மருவி
அகலிருங் கானத் தல்கணி* நோக்கித்

தாங்கவுந் தகைவரை நில்லா நீர்சுழல்
போதெழின் மழைக்கண் கலுழ்தலின் அன்னை
எவன்செய் தனையோநின் னிலங்கெயி
றுண்கென
மெல்லிய இனிய கூறலின் வல்விரைந்

(பாடம்) * அகலணி.



துயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்
துரைக்கலுய்ந் தனனே தோழி சாரற்
காந்த ளூதிய மணிநிறத் தும்பி
தீந்தொடை நரம்பின் முரலும்
வான்றோய் வெற்பன் மார்பணங்
கெனவே.

**உரை :**—தோழீ, விடியற்காலையில் மழைபெய்துவிட்ட நல்ல நெடிய மலையினின்று கரிய கடலினலைபோல இழிகின்ற அருவி, அகன்ற பெரிய காட்டினிடத்துச் சென்று தங்கியோடும் அழகைநோக்கி அஃது அவரை எதிர்ப்பட்ட இடமாதலின் அடக்கவும் தகைக்குமளவின் நில்லாமல் பெரிய அழகினையுடைய குளிர்ந்தகண்கள் நீரைப்பெருக்கி அழுதலானே, அதனைக் கண்ட அன்னை என்னைநோக்கி நீ என் அழுதலைச்செய்கின்றனையோ இனி அழாதேகொள், நின் விளங்கிய எயிற்றினை முத்தங்கொள்வனென்று மென்மையாகிய இனிய மொழிகளைக் கூறுதலானே யான் மிக விரைந்து உயிரினுங் காட்டிற் சிறந்த நாணினையும் மிக மறந்துவிட்டு,—சாரலின் கண்ணுள்ள காந்தளின் தேனையுண்ட நீலமணிபோலும் நிறத்தையுடைய வண்டு யாழிற் கட்டிய இனிய நரம்பு ஒலித்தல்போல ஒலிக்காநிற்கும் விசும்பிலோங்கிய வெற்பினையுடைய தலைவனது மார்பைப் பிரிந்தமையால் வந்த வருத்தத்திற்கு அழாநின்றேனென்று கூறத்தொடங்கி அப்பால் நினைவு வரத் தவிர்ந்துய்ந்தேன்; எ - று.

எயிறு உண்க என - பற்கள் மகிழ்ச்சியைக்கொண்டு நகுவனவாகவென வென்றுமாம். இஃது அன்னை களவறிவுற்றவாறு கூறக்கருதி அவன் மாட்டு அயன்மைதோற்றுவித்ததாயிற்று. மார்பணங்கென உரைக்கலுய்ந் தனனென்றது கலங்கிமொழிதல். ஒருகால் அரிதிற்கூடிப்பிரிந்தவர் முன்பு கூடியவிடத்தைக் காண்டலும் அங்கு முயங்கியவெல்லாங் கருதுதலியல்பா தலின், அங்ஙனந் தான்கண்டுழிக் கருதிவருந்தினமைகூறினாள். "உதுக் காண், தையால் தேறெனத் தேற்றியறனிலான், பையமுயங்கியுழி" என் றார் பிறரும்; (கலி-கசச.) மயங்கலின் மார்பணங்கெனக் கூறிவிடின் ஏதம் பயக்குமெனவும் இனி அங்ஙனெய்தாவாறு விரைவின் வரைகவெனவுங் குறிப்பித்தாளாயிற்று.

**இறைச்சி :**—காந்தளையூதிய தும்பி, இன்னும் தேனசையால் முரன்று இயங்குமலைநாடனாகி யிருந்தும் முன்பு என்னலனுண்டு துறந்தகன்றனன்; அவனுட்டஃறிணைப்பொருளினியல்பையேனும் நோக்கி யறிந்திலனென இரங்கியதாம்.

**மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயர்வுயிர்த்தல். இதனைக் களவறி வுற்றவழித்தலைவிகூற்று நிகழ்தற்கு மேற்கோளாகக்கொண்டார் நச்சினார்க் கினியர்; (தொ-பொ-ககக, உரை.)

# கரு. பொய்கையார்

பாலை :

இது, பிரிவிடையாற்ருளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

எ - து, தலைவன் பிரிந்து வேற்றுநாட்டுச் சென்றபொழுது தலைவி வருந்துவதைக்கண்ட தோழி, அத்தலைமகளை நோக்கிப் பாலைவழிச்சென்ற

## மூலமும் உரையும்

உ.கு.

தலைவர் நின்வருத்தம் நீங்கும்படி விரைவில் விப்பது.

வாராநிற்பரென ஆற்று

பருவரல் நெஞ்சமோடு பல்படர் அகல
வருவர் வாழி தோழி மூவன்
முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்
கானலந் தொண்டிப் பொருநன் வென்வேல்
ரு. தெறலருந் தானைப் பொறையன் பாசறை

நெஞ்ச நடுக்குறூஉந் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
கடாஅங் கழீஇய கதனடங் கியானைத்
தடவுநிலை யொருகோட் டன்ன
கo. ஒன்றிலங் கருவிய குன்றிறந் தோரே.

**உரை:**—தோழீ, நெடுங்காலம் வாழ்வாயாக; மூவனென்பவனைப் போரில் வென்று அவனது நிரம்பிய வலியையுடைய முட்போன்ற பற்களைப் பிடுங்கிக் கொணர்ந்துவைத்திழைத்த வாயிற்கதவினையுடைய கடற்கரைச் சோலையையுடைய தொண்டிநகரின் தலைவனாகிய வெல்லும் வேற்படையையுடைய பகைவராற் கடத்தற்கரிய சேனையையுடைய சேரலன் கணைக்காலிரும்பொறையனது பாசறையின்கண்ணேயுள்ள, நெஞ்சு நடுங்குதையாலே கண்ணுறங்காதவீரர் யாவரும் அலையோய்ந்த கடல்போல இனிதாகக் கண்ணுறங்குமாறு மதநீரொழிந்த சினந்தணிந்த யானையின் பெரிதாய் நிலைத்துள்ள ஒரு மருப்புப்போன்ற ஒன்றாகி விளங்கிய அருவியையுடைய மலைநெறியிற்சென்ற தலைவர், நீ வருத்தமுற்ற வுள்ளத்தோடு கொண்ட பலவாகிய கவலையும் நீங்க விரைவில் வருவர்காண்; ஆதலின் வருந்தாதேகொள்; எ - று.

வருவர்கொல் என்ற பாடத்திற்குக் கொல் அசையெனக்கொள்க. படர்தல் - கருதுதல். முழுவலி - நிரம்பியவலி. தடவுநிலை - பெரிதாய் நிற்றல். பகைவரை அட்டு அவர் பல்லைக்கொணர்ந்து தமது கோட்டைவாயிற் கதவில் வைத்துத் தைத்தல் பண்டைவழக்கு. இதனைக் "கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய, வன்கட் கதவின் வெண்மணி வாயில், மத்தி" என்ற (அகம்-உகஉ) செய்யுளாலுமறிக. இதனுட் பொதிந்தகதை:—பொறையனது பாசறைக்கண்ணே ஒற்றைமருப்பையுடைய களிறொன்று மதங்கொண்டு வீரர் துயிலாவாறு வருத்தி அப்பால் மதமடங்கிற்றென்பதாம். மறவர் இனிது கண்படுப்பக் கதனடங்கியானையென்க. பருவரனெஞ்சமொடு பலபடர் என்றது அழிவில்கூட்டத்துப்பிரிவாற்றாமை. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். கைகோள்-கற்பு. ()

கக. நக்கண்ணையார்

**நெய்தல்:** இது, புணர்ந்துநீங்கிய தலைவனைக் கடாயது.

தோழி, வரைவு

எ - து, பகற்குறிவைத்துத் தலைவியைக் கூடிச்செல்லுந் தலைவனைத் தோழி நோக்கி இங்ஙனஞ் செல்லுவையாயின் மீண்டு நீ வருவதற்குள்

உ.ச. நற்றிணை நானூறு

இவள் இறந்துபடுமாதலால், அதற்கேற்றது செய்யென கூறுகிறபது.

வரைவுதோன்றக்

இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பின் அன்ன
வரும்புமுதிர்பு

நன்மா னுழையின் வேறுபடத் தோன்றி ரு.
விழவுக்களங் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப !
இனமணி நெடுந்தேர் பாக னியக்கச்
செலீஇய சேறி யாயின் இவளே
வருவை யாகிய சின்னாள்
வாழா ளாதல்நற் கறிந்தனை சென்மே.

உரை :—இருமீனின் புறம்போன்ற சருச்சரைபொருந்திய பெரிய அடியையுடைய, சுறுமீனின் முகத்தில் நீண்டுள்ள கொம்புபோன்ற முட்களையுடைய இலையையுடைய தாழையானது; பெரிய களிற்றியானையின் மருப்புப்போன்ற அரும்புமுதிர்ந்து நல்ல பெண்மான் தலைசாய்த்து நிற்றல் போல வேருகத்தோன்றி விழாவெடுக்குங் களமெல்லாம் கமழாநிற்கும் வலிய நீரையுடைய கடற்பரப்புக்குத் தலைவனே! மிக்க மணிகள்கட்டிய நெடிய நினது தேரைப் பாகன் செலுத்தலாலே நின்னூர்க்குச் செல்லும் பொருட்டுப் போகாநின்றனையாதலால், நின்னைப்பிரிந்த இவள்தான் பின்பு நீ வருவாயென்று குறிப்பிட்ட சில நாளளவும் உயிர்வாழ்ந்திருக்கமாட்டாளென்பதை நன்ருக அறிந்துகொண்டு செல்வாயாக; எ - று.

தடவு - பெருமை. பிணர் - சருச்சரை. உரவு - வலிமை; வலிமையுடையார் தம்மை அடைந்தாரைக் கைவிடார்; நீயும் அத்தன்மையனுதியென்பாள் உரவு நீர்ச்சேர்ப்பனென்ருள். பிரியின்வாழாளென்றதனுனே வரைந்து பிரியாதுறையுமாறு வரைவுகடாயதாயிற்று. தேரும் யானையுங் குதிரையும் பிறவும், ஊர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப" (தொல்-பொரு-உகஉ) என்றதனுனே 'நெடுந்தேர் பாகனியக்கச், செலீஇய சேறி' என்றதாம். இஃது அவனது செல்வக்குறைபாடின்மை கூறியதாயிற்று. இப்பாட்டு ஏனையுவமமாகவே முற்றமுடிதலின் உள்ளுறையின்மை யுணர்க. வாழாளாதலென்றது சாதலெல்லையாகக்கூறிய கலக்கம். **மெய்ப்பாடு** - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். இதனைத் தலைவன் பிரியக்கருதியவழித் தோழி கூற்றுநிகழ்வதற்கு மேற்கோளாகக் கொண்டார் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-சூ-ககச, உரை.) (கக)

# உ௦. ஓரம்போகியார்

**மருதம் :**

(க) இது, பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் யாரையும் அறியே னென்றாற்குத் தலைவி சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் யாரையும் அறியே னென்றலும் தலைவி அவனைநோக்கி நின் மார்பிலே துஞ்சி இப்பொழுது அவ்வின்பத்தைப் பெறாளாய்த் தெருவிடைப்போந்த அப்பரத்தையை

மூலமும் உரையும்

உ௫

யாம் கண்டேம்; அங்ஙனமாக நீ என் வீணாகப் பொய்புகலுகின்றனையென வெகுண்டு கூறுகிற்பது.

(உ) வாயிலாகப்புக்க தோழி தலைவிக்குச் சொல்லியதூஉமாம். றது வெளிப்படை. உரை இரண்டற்குமொக்கும்.

என்

ஐய குறுமகட் கண்டிகும் வைகி
மகிழ்நன் மார்பில் துஞ்சி யவிழிணர்த்
தேம்பாய் மராஅங் கமழுங் கூந்தல்
துளங்கிய லசைவரக் கலிங்கந்
துயல்வரச்
௯. செறிதொடி தெளிர்ப்ப வீசி மறுகிற்
பூப்போ லுண்கண் பெயர்ப்ப நோக்கிச்
சென்றனள், வாழிய மடந்தை நுண்பல்
சுணங்கணி வுற்ற விளங்கு பூணள்
மார்புறு முயக்கிடை
ஞெமிர்ந்த சோர்குழைப்
௧௦. பழம்பிணி வைகிய தோளிணைக்
குழைந்த கோதைக் கொடிமுயங்
கலளே.

உரை :—ஐயனே ! நின் காதற்பரத்தை, நேற்றைப்பொழுதில் அவள் மகிழ்நனாகிய நின்னிடத்துத் தங்கி நின்மார்பிற்கிடந் துறங்கி வண்டுகள் பாயப்பெற்ற வெண்கடப்பமரத்தின் விரிந்த பூங்கொத்துக் கமழுங் கூந்தல் துளங்கிய துவட்சியோடு சிறுபுறத்து வீழ்ந்தசையாநிற்ப, இடையிற்கட்டிய உடைசரிந்து அசையாநிற்ப, நெருங்கிய வளைகளொலிக்கும்படி கைகளை வீசிக்கொண்டு நீலமலர்போன்ற மையுண்ட கண்கள்நிலைபெயர்ந்து சுழலும் படி நோக்கி எமது மறுகின்கட்சென்றனள்; அவளே இன்று நின்னைப் பிரிதலாலே விளங்கிய பூண்களுடனே நுண்ணிய பலவாய சுணங்கணியப் பெற்றவளாய் முன்பு நின்மார்பினுற்ற முயக்கத்தில் நெரிந்த சோர்கின்ற குழையையும் நீட்டித்த பிணியுற்ற இரண்டு தோள்களையும் துவண்டமாலையையுமுடைய கொடிபோன்று நின் முயக்கம் நீங்கினவளாகி எமது மறுகின்கண் சென்றனள்; அத்தகைய இளம்பிராயத்தனளாகிய பரத்தையை யாம் கண்டேம்; அவள் நின்னோடு நீடூழி வாழ்வாளாக; எ – று.

மறுகிற் சென்றனளென்பதை இரண்டிடத்துங் கூட்டுக. மகிழ்நன் – முன்னிலையிற் படர்க்கைவந்த வழுவமைதி. [இரண்டாந்துறைக்குப் படர்க்கையாகவே பொருள்கொள்க. அதற்கு ஐய என்பதனை மெல்லிய எனப் பொருள்படுத்துக.] மராங்கமழுங் கூந்தல் – பரத்தையைக் காவிற்பூச்சூட்டி விழாவயர்ந்ததுகூறிப் புலந்தவாறு. கூந்தலசைவரல் – கூழைவிரித்தலென்னுமெய்ப்பாடு. கலிங்கந்துயல்வரல் – உடைபெயர்த்துடுத்தலென்னு மெய்ப்பாடு. தொடிதெளிர்த்தல் – ஊழணிதைவரலென்னு மெய்ப்பாடு. இவை புணர்ச்சியீற்றில் நிகழ்வன; இவற்றைக்கூறவே நென்னல் நின்னைப் புணர்ந்த குறிப்பை யாம் நோக்கி யேக்கமுற அக்குறிப்புக்களோடு மறுகில் வந்தாளென்று கூறியது. இது பின்னும் புலவிநீட்டத்துக்குத் தலைக்கீடாயிற்று. வாழிய – இகழ்ச்சிக்குறிப்புமாம். தலைவன் தன்பால் வந்தமையால், இங்ஙனங்கூறிப் புலவிதீர்கின்றாளாவது கேட்ட தலைமகன் நம்மாட்டுப் பெரிதுமோர் குற்றங்கண்டும் அருளிப்பாடிட்டமையின் இனிப் பரத்தை

யைக் கருதலேமெனக் கொள்வானுவது.
புலவி தீர்ந்து புணர்ச்சியின் மகிழ்தல்.

மெய்ப்பாடு - வெகுளி. பயன் -

## உக. மருதனிள நாகனுர்

**முல்லை :** இது, வினைமுற்றிமீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

எ - து, சென்று பொருள்செயல்வினை முடித்து மீளுந்தலைமகன் தேர்ப்பாகனை நோக்கி 'வலவ, நம் மழவர் பின்னேவருவாராக; நீ விரைந்து தேரைச்செலுத்து; கானவாரணம் இரையைப்பெற்றுப் பெடையைநோக்குகின்றதனைப்பாராய்' என யாமும் அங்ஙனம் தலைவியைநோக்கி மகிழ்வேமென்னுங் குறிப்புப்படக் கூறுகிற்பது.

விரைப்பரி வருந்திய வீங்குசெலல்
இளையர்
அரைச்சேறி கச்சை யாப்பழித் தசைஇ
வேண்டமர் நடையர் மென்மெல வருக
தீண்டா வைமுள் தீண்டிநாஞ் செலற்
கேழுதி வலவ தேரே உதுக்காண்
உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன
வரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்

பெயனீர் போகிய வியனெடும் புறவிற்
புலரா வீர்மணன் மலிரக் கெண்டி
நாளிரை கவர மாட்டித்
தன்பெடை நோக்கிய பெருந்தகு நிலையே.

உரை:—பாகனே! விரைந்து செல்லுதலாலே வருந்திய மிக்க செலவினையுடைய நம் வீரர் இடையிற்செறித்த கச்சையின் பிணிப்பை நெகிழ்த்து ஆங்காங்கு தங்கித் தாந்தாம் விரும்பியவண்ணம் அமர்ந்தநடையராய் மெல்லமெல்ல வருவாராக; உருக்கலுற்ற நறியநெய்யிற் பாலைச்சிதறினாற்போன்ற கனைகின்ற குரலையுடைய மிடற்றினையுடைய அழகிய நுண்ணிய பலவாகிய புள்ளிகளமைந்த கண்டார்க்கு விருப்பம்வருந் தகுதிப்பாட்டினையுடைய கானங்கோழி மழைபெய்த நீர்வடிந்த அகன்ற நெடிய காட்டிலே சுவறாத ஈரமணலை நன்றாகப் பறித்து நாட்காலையில் இரையாகிய நாங்கூழைக் கவர்தலும் அதனைக்கொன்று தன்பெடைக்கு ஊட்டவேண்டி அப்பெடையைநோக்கிய பெருமைதக்கிருக்கின்ற நிலையை உங்கே பாராய்; ஆதலின் நாம் முன்னே விரைந்துசெல்லுமாறு இதுகாறுந் தீண்டாத கூரிய தாற்றுமுள்ளாலே குதிரையைத் தீண்டித் தேரைச் செலுத்துவாயாக; எ-று.

பரி - செலவு. உதுக்காண்-உங்கேபாராய். அரிக்குரல் மிடறு-தேரையின் குரல்போன்ற குரலையுடைய மிடறு எனவுமாம். மலிர - விளங்கவெனவுமாம். கெண்டுதல்-பறித்தல். மாட்டல்-அழித்தல். நெய்பால்விதிர்த்தல் - இணைக்கேற்றவுவமை. பெயனீர்போகிய புறவென்றதனானே மழைபெய்துவிட்டமை கூறினான். குறித்தபருவத்துத் தாழ்த்தமையின் விரைந்து ஏமதியென்றான். நாளிரைகொண்டு பெடையைநோக்குதல் காணெனவே

அதுபோலப் பொருளீட்டிவரும் யாமும் மனைவியை நோக்கவிரும்புதும் எனப் பொருள்படுதலால் இது பொருள்வயிற்பிரிவாயிற்று. **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - கேட்டபாகன் விரைந்து தேர்கடாவல். (௨௧)

## ௨௨. ..........................................

**குறிஞ்சி:** இது, வரைவு மலிந்ததோழி,
தலைமகட்குச் சொல்லியது.

எ - து, களவொழுக்கந் தவிர்ந்து வரைந்துகொள்ளவேண்டித் தலைமகன் வரக்கண்ட தோழி சென்று தலைவியைநோக்கித் தினைவிளைகாலம் வதுவைக்கேற்ற பொழுதாயினும், வம்பமாரி இடையிலே பெய்வதுகண்டு நீ வருந்த அப்பொழுது வருவனென்று யான் கூறியமொழி பொய்க்கும்படி அவன் வாரானாயினும், இப்பொழுது மெய்யாகவே மணஞ்செய்துகொள்ள வந்தனனென்று மகிழ்ந்து கூறுநிற்பது.

கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி
வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
தையூ ணிருக்கையில் தோன்று நாடன்
வந்தனன் வாழி தோழி யுலகங்
கயங்கண் அற்ற பைதறு காலைப்

பீளோடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே.

உரை:—தோழீ, மலைப்பக்கத்திற் கொடிச்சியாற் காக்கப்படும் பசிய தினைப்பயிரில் முதலிலே பறித்து முற்றிய பெருங்கதிர்களைக் கொய்து கொண்ட மந்தி, பாயுந்தொழிலன்றிப் பிற கல்லாத கடுவனொடு நல்ல வரை மீதேறி அகங்கை நிறையக் கயக்கித் தூய்மைசெய்து தன் திரைத்த அணலையுடைய வளைந்த கவுள்நிறையவுண்டு வம்ப மாரி பெய்தலாலே நனைந்த புறத்தனவாய் நோன்புடையார் தைத்திங்கட்பிறப்பில் நீராடி நோன்புமுற்றியிருந்து உண்ணுதல்போலத் தோன்றாநிற்கும் மலைநாடன், உலகத்துக் குளங்களெல்லாம் நீர்வற்றிய ஈரமற்றகாலை, சூலொடு வாடிய நெற்பயிருக்கு நடுயாமத்து மழைபெய்தாற்போல வந்தனன்; இனி விரைவிலே வதுவையயர்ந்து நெடுங்காலம் வாழக்கடவதாக; எ - று.

முற்பட விளைகுரலென்றதனாற் பிற்பட்டு எல்லாக் கதிரும் பறிந்து முற்றுமென்றும் அக்காலமே வதுவையயர்தற்குரித்தென்றுங் கூறியதாயிற்று. ஞெமிடுதல் - நிமிண்டுதலென இக்காலத்துத் திரிந்து வழங்கப்படுவது. அணல் - மோவாய். கயம் - குளம். பைது - ஈரம். பீள் - சூல். நள் - நடு. தையூணிருக்கை - தைத்திங்கட்பிறப்பில் நீராடி அன்று ஆக்கப்படு மாட்சிமைப்பட்ட உணவுண்ண விருத்தல். நோன்பியர் - ஆடிமுதலாக மார்கழியீறாகக் கிடந்த ஆறுதிங்களும் தேவர்க்கு இராப்பொழுதெனப் புரா



ணங்கூறுதலுண்மையின், இரவு பிற்றையாமங்கொண்ட

ணுதிருக்கு நோன்பியர்.

சிலபொழுதுண்

உள்ளுறை :—திணைக்கதிரைக் கொண்ட மந்தி கடுவனொடு வரையேறி நிறையத்தின்று பெயலினைந்த புறத்தவாய்த்தோன்றுமென்றது, மகிழ்ச்சி கொண்ட நீ தலைவனொடு வதுவையயர்ந்து அவனது மனையகம்புக்கு இல்லறநிகழ்த்தி இன்பந்துய்த்துத் துறவறந்தார் முதலாயினோரையும் பேணி மாட்சிமைப்பட்டுக் காட்டுதி யென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன்- தலைமகளை மகிழ்வித்தல். இதனை இத்துறைக்கே மேற்கோளாகக் கொண்டார் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-சூ-கக௪, உரை.) (உஉ)

## உரு. கணக்காயனார்

குறிஞ்சி: இது, தலைவியாற்றாமையுணர்ந்த தோழி வரைவுகடாயது.

எ - து, தலைமகன் களவொழுக்கத்து நீட்டித்து வரையாதொழுகுதலும் தலைவி அதனை ஆற்றாளாகி வேறுபட அவ்வேறுபாடறியாத தலைமகனைத் தோழி இன்ன இன்ன காரணங்களால் நினக்கு அவ்வேறுபாடு தோன்றவில்லையெனக் கூறி வரைவுகடாவாநிற்பது.

தொடிபழி மறைத்தலில் தோளுய்ந்
தனவே,
வடிக்கோள் கூழை ஆயமோ டாடலின்
இடிப்பு மெய்யதோன்
றுடைத்தே, கடிக்கோள
அன்னை காக்குந் தொன்னலஞ் சிதையக்
ரு. காண்டொறுங் கலுழ்த லன்றியு மீண்டுநீர்
முத்துப்படு பரப்பிற் கொற்கை

முன்றுறைச்

சிறுபா சடைய செப்பூர் நெய்தல்
தெண்ணீர் மலரில் தொலைந்த
கண்ணே காமங் கரப்பரி யவ்வே.

உரை :—வாரிமுடித்த கூந்தலையுடைய இவள் தன்னைப் பிறர்கூறும் பழிச்சொற்கஞ்சி விளைகளைக் கழலாதவாறு செறித்து மறைத்தலாலே தோள்கள் வாட்டந்தோன்றுவாயின; அன்றியும் தன் ஆயத்தாரொடு விளையாட்டயர்தலால் உடம்பிற்களைப்பும் அவ்விளையாட்டினு லுண்டாகியதென நினைப்பதற்குரியதா யிராநின்றது; காவன்மிகுதிப்பட அன்னையானவள் பாதுகாக்கும் இவளது பழைய நலமெல்லாம் சிதையும்படி காணுந்தோறும் அழுதலல்லாமலும், நெருங்கிய நீர்மிக்க முத்துக்கள் விளைகின்ற கடற்பரப்பினையுடைய கொற்கைநகரத்து முன்புள்ள துறையிலிருக்கும் சிறிய பசிய இலைகளையுடைய அழகமைந்த நெய்தலின் தெளிந்த நீரிலுள்ளமலர்போலக் கண்களே அழகு குலைந்தன; அவை தாம் காமத்தைக் கரத்தலரியவாய் இராநின்றன; ஆதலின் நினக்கேற்றதொன்று செய்வாயாக; எ – று.

வடித்தல் - வாரிமுடித்தல். காண்டல் – தலைவனையாதல் தன்னையாதல் காண்டல். செப்பு – செப்பம்; கடைக்குறை. இவளென்பதைத் தோன்று எழுவாயாக்கிக் கூழையையுடைய ஆயமென ஆக்கலுமொன்று. நீர்த்துறை யெனக் கூட்டுக. கண் காமங் கரப்பரியவாதலின் அயலார் அலர் தூற்றினு



ரெனவும், அதனுன் மெய்யிற் களைப்புண்டாய தெனவுங் கொள்க. டொறுங்கலுழ்தல் – துன்பத்துப் புலம்பல்.

காண்

கொற்கைநீரில் முத்துவிளையுமென்றது நும் வதுவையால் தலைவியில் லகத்தார் மகிழ்ச்சியடைவா ரென்றவாறு. மெய்ப்பாடு – அழுகையைச் சார்ந்த பெருமிதம். பயன் – வரைவு கடாதல். (உ௨)

## உ௪. கணக்காயனார்

பாலை: இது, பொருட்பிரிவுக்கு
உடன்பட்ட தோழியைத் தலைவி
உவந்து கூறியது.

எ - து, தலைவன் பொருள்வயிற்பிரிவேனென்று கூறக்கேட்ட தோழி நன்றெனக் கூறினளாக, அதனையறிந்த தலைவி தோழியைநோக்கி ஆடவர் பொருட்ககலுதல் பண்புதான் ஆகலின், அதனை மறுமலுடன்பட்டது நன்றென உவந்து கூறுகிற்பது.

பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்
டுடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்
ஆட்டொழி பந்திற் கோட்டுழக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
௫. வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடைச்
சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்
ககல்வ ராடவ ரதுவதன் பண்பே.

உரை :—சேயிழாய், நிலம் பிளவுபடுமாறு இறங்கிய வேரும், பெரிய கிளைகளும், அடியில் உடும்புசெறிந்தாற்போன்ற பொரிந்த செதில்களுமுடைய நெடிய விளாமரத்தின் கிளையில் மூக்கு ஊழ்த்து விழுந்து கம்பலத்தை விரித்தாலொத்த பசிய பயிரின்கண்ணே ஆடுதலொழிந்த பந்து கிடப்பதுபோலப் பரவியிருக்கும் அவ்விளாம்பழங்களையே உணவாகவுடைய அயனாட்டிலே செல்லுதற்கரிய பாலைவழியில் யாம் செல்லாநிற்பேமென்று தலைவர் கூறலும், அது நல்லதொரு காரியமென்று விருப்பத்தோடு கூறினை; ஆதலின் நீ நல்லதொன்றனைச் செய்தனைகாண்; ஆடவர் வினைமேற் கொண்ட உள்ளத்தராய்ப் பொருளீட்டுதற்கு அகலாநிற்பர்; அங்ஙனம் அவர் அகலும்பொழுது மறுத்துக் கூறாமல் உடன்படுவதே அதற்குரிய பண்பாகும்; எ - று.

வெள்ளில் - விளாமரம்; வெள்ளில் பயிரிலே பரவுமென்றதனால் தலைமகன் முதுவேனிற்பருவத்துப் பிரிந்தானென்க. அவன் குறித்த பருவம் வருந்துணை ஆற்றியிருத்தல் கற்புடைமகளிர் கடனாதலின், தலைவி உவந்து கூறினாளாயிற்று. இஃது அருண்மிகவுடைமை.

இறைச்சி :—விளங்கனியே உணவாகவுடையராயிருந்தும் அவை எடுப்பார் மிக்கின்மையாற் பயிரிற் பரவிக்கிடக்குமென்றது செல்லுந் தேத்து ஆண்டுள்ளாரும் பொருள்வேட்கையராயினும், ஈட்டுவார் மிக்கின்



மையின் நங்காதலர் அங்கே சென்றவுடன் விரைவிலீட்டுமாறு கிட்டுவதாகுமென்றதாம். எனவே, குறித்தபருவத்துக் காதலர் வருவராதலின் யான் வருந்தேனெனவும் இதனை யறிந்தே நீ அவரைத் தாழ்க்காது விடுத்தனை யெனவும் குறிப்பாற் கூறினாளாயிற்று. கைகோள் - கற்பு. **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - ஆற்றியிருத்தல். இதனைக் கற்பிற்பிரியாமையின் உவகைப்பாற் படுத்துவர் நச்சினார்க்கினியர்; (தொ-பொ-சூ-கசஎ, உரை.) (உ௭)

## உரு. பேரிசாத்தனூர்

குறிஞ்சி : இது, தலைமகளைத் தோழி குறைநயப்புக்கூறியது.

எ – து, பாங்கியிற்கூட்டத்துத் தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைவிபாற்சென்று ஒருதோன்றல் தினைப்புனத்து நம்மொடு கிளியோப்பித் தன்கருத்தை நிகழ்த்துமிடம் பெறானாகி அகன்றனன் ; அவனைக்கண்டு என்தொடிகழல அவற்றைச் செறித்துவந்தேனென்று அவனைத் தன்னுள்ளம் விரும்பினதுபோலத் தலைவி அதனை ஆராய்ந்து 'தன்னைவிரும்பினன்' எனக் கொள்ளும் வண்ணங் கூறுநிற்பது.

அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன
செவ்வரி யிதழ சேணுறு நறவின்*
நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்
வளமலை நாடன் நெருநல் நம்மொடு
கிளைமலி சிறுதினைக் கிளிகடிந்
தசைஇச்
சொல்லிடம் பெறாஅன்
பெயர்ந்தனன் ; பெயர்ந்த
தல்ல லன்றது காதலந் தோழி
தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா
வண்டோ ரன்னவன் தண்டாக் காட்சி

கண்டுங் கழல்தொடி வலித்தவென்
பண்பில் செய்தி நினைப்பா கின்றே.

உரை:—காதலையுடையதோழீ, அழகிய சங்கின்முதுகில் அரக்கைத் தீற்றினாற் போன்ற சிவந்த வரிபொருந்திய இதழையுடைய நெடுந்தூரம் மணங்கமழும் நறவம்பூவின் நறிய தாதையளைந்த வண்டு பசிய நிறமுள்ள பொன்னை யுரைக்குங் கட்டளைக்கற்போல நல்ல நிறத்தைப்பெறுநிற்கும் வளம்பொருந்திய மலைநாடன், நேற்றைப்பொழுது நம்மோடு இளைத்தல் மிக்க சிறிய தினையில் வீழுங் கிளிகளைக் கடிந்து அங்குத் தங்கியிருந்தும் தன் குறையைக் கூறுமிடம் பெறாளுகிப் பெயர்ந்துபோயினன்; யான் கருதுகின்றது அங்ஙனம் அவன் பெயர்ந்ததாகிய ஓரல்லலுடைமையைக் குறித்ததன்று காண்; தேனையுண்ணும் வேட்கையாலே நறுமலரின்ன தென ஆராயாது யாண்டும்போய் விழுகின்ற வண்டின் ஒருதன்மையை யொத்த அவனது கெடாத தோற்றப்பொலிவினைக் கண்டுவைத்துங்

(பாடம்) * சேணாறு பிடவின்.

மூலமும் உரையும்

கூ.க

கழன்ற தொடியை மீண்டு செறித்த எனது பண்பில்லாத செய்கையைக் கருதாநின்றது என்னுள்ளம்; இஃதென்னவியப்பு! எ - று.

அவ்வளை - அழகியவளை. வெரிந் - முதுகு. அசைதல் - தங்குதல். யான்கருதியது அவன்பட்ட அல்லலையன்று என் பண்பில் செய்தி வினைப் பாகின்று என்க. வேட்கையாற் போதுதெரிந் தூதாத வண்டோரன்ன அவனென்றது உரிமைபூணத் தகுதிப்பாடில்லாத என்பாற் கருத்துடையானென்றதாம். தண்டாக்காட்சி யென்றது அவனது தோற்றப்பொலிவு ஏனைய மகளிரும் விரும்புந் தன்மையதென்றதாம். இருவர் நோக்கும் இயையாதவழிக் காமஞ் சிறவாதாகலின் அவன் நோக்கு இயையாமையைக் கண்டுவைத்தும் என்தொடி கழன்றன என்றலின் என்பண்பில் செய்தி யென்றதாம். இனி அவனுக்கு உடன்பட்டுக் கூறாமையால் என் செய்தி பண்பில் செய்தியென்றலுமாம்.

**இது துறைநயப்பாமாறு** :—தோழி இங்ஙனம் தான் அவனைக் காமுற்றதாகக் கேட்ட தலைவி (தன்னுள்ளே) நமது காதலனை இவள், பிழைபட்ட நெறியில் இகழ்வுற ஒழுகுபவனெனக் கொண்டாள்கொலெனவும், இவளுடன் இன்று கிளிகடிந்தது என்பொருட்டென்று கொள்ளாது தன்பொருட்டென்று கொண்டாள்கொலெனவும், தன்னைக் கூடுமாறு கூற இடம்பெறாஅய் அகன்றனன் எனக் கொண்டாள்கொலெனவும் கருதும்படியாகக் கூறினளென்றாலும், அதனுள்ளே என்னைக் கூட்டுவிக்கச்சொல்லுஞ் சொல்லுக்கு இடம் பெறாமையன்றி இவளைச் சேருமாறு கூறச் சொல்லிடம்பெறாது போயினனல்லனெனவும், வண்டு இழிந்தமலரை ஊதாவாதலால் அப்படிப்போல என்னினிழிந்தாளை அவன் புல்ல விரும்பானெனவும், இவளும் நங்களவொழுக்கத்தைச் சிறிதுணர்தலாலே இக் குறைமுடிக்க மனம்நெகிழ்ந்தமையின் மெய்சோர்வடைய வளைகழன்றன வெனவும், அவனொடு கூட்ட வேண்டி என்னை உடம்படுத்தக் கருதலின் அது தன்னியல்புக் கேற்றதல்லாமையிற் பண்பில்செய்தி யெனவுங் கூறினளென, ஆராய்ச்சியாற் கொள்ளவைத்தமையிற் குறைநயப்பாயிற்று. **மெய்ப்பாடு** - இளிவரலைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - குறைநயப்பித்தல். (உ௫)

## ௨௬. சாத்தந்தையார்

**பாலை :**

இது, தலைவி பிரிவுணர்ந்து வேறுபட்டமை சொல்லித் தோழி செலவழுங்குவித்தது.

எ - து, வினைவயிற் பிரியுந் தலைமகன் குறித்தபருவத்து வரவேண்டி, 'நீயிர் பிரிகின்றனிரெனக் கேட்டலும் இத்தன்மையாளைக் கண்டு யானும் ஆற்றலேன்' என்று அவன் செலவழுங்குமாறு கூறி இப்பொழுதே இப்படியாயின் நீயிர் மீண்டுவருமளவும் எங்ஙனம் ஆற்றுமென்னுங் குறிப்புத் தோன்றக் கவன்று கூறுகிற்பது.

நோகோ யானே நெகிழ்ந்தன வளையே

செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச்,
சுடர்முழு தெறிப்பத் திரங்கிச்
செழுங்காய் —



முடமுதிர் பலவி னத்த நும்மொடு
கெடுதுணை யாகிய தவறோ
வையெயிற்றுப்
பொன்பொதிந் தன்ன சுணங்கின்
இருஞ்சூ ழோதிப் பெருந்தோ ளாட்கே.

உரை: அழகமைந்த புள்ளிகளையுடைய வெறுமையாகிய அடியையுடைய மலையொத்த அடுக்கிய நிலையமைந்த நெடிய நெற்கூட்டில் நிரம்பக் கொட்டிய நெல்லையுடைய தனது தாய்வீட்டைக் கைவிட்டு, ஆதித்தமண்டிலம் முற்றுந் தன் வெயிலை வீசுதலானே செழுங்காய்கள் திரங்கப்பெற்று முடம்பட்ட முதிர்ந்த பலாமரங்கள் நிரம்பிய கொடிய காட்டில் நீயிர் தமியராய்ச்சென்று வருந்தாது நமக்குத் துணையாகவந்த தவற்றினாலேதானே கூரிய பற்களையும், பொன்னைப் பொதிந்துவைத்தாற்போன்ற சுணங்கையும், நெருங்கிய கரிய கூந்தலையும், பெரிய தோள்களையு முடையாளுக்கு இஞ்ஞான்று நீயிர் பிரிவேனென்றமையின் உடனே மெய்சோர்தலாலே கைவளைகள் கழன்றுவிழுந்தன; இப்பொழுதே இப்படியாயின் இனி மீண்டு வருந்துணை எங்ஙனம் ஆற்றியிருப்பாள்? இதற்கு யான் நோவாநின்றேன்.

புள்ளி - குதிரின் உறைக்கிடப்பட்ட எண்ணுதலமைந்த குறியீடு. வெள்ளரை - புரி முதலிய சுற்றுத வெறிய அடிக்கண்டு; வெற்றிலையை வெள்ளிலையெனக் கூறுதலானுமறிக. கெடு துணை - உள்ளத்தெழுந்த அவாக்கெடுமாறு அருகுற்றதுணை. தோளாட்கு வளைநெகிழ்ந்தன எனக் கூட்டுக.

பிண்டநெல்லின் தாய்மனையென்றது தாய்வீடு செல்வமுதலியவற்றிற் குறைபாடில்லாதிருந்தும் அவற்றை யொருவி நும்பால்வந்தது நமது இன்பமொன்றனையே கருதியன்றோ? அதனையும் பெறுதவாறு நீயிர் பிரிவிரெனின் இவளெங்ஙனமாற்றுமென்றதாம். கெடுதுணையாகியதவறே வென்றது அழிவில் கூட்டத்துப் பிரிவாற்றாமை. நெகிழ்ந்தனவளை யென்றது உடம்புநனிசுருங்கல். கைகோள் - கற்பு. மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன்-செலவழுங்குவித்தல். (உசு)

## உஎ. குடவாயிற்கீரத்தனார்

### நெய்தல்: இது, சிறைப்புறமாகத் தோழி

செறிப்பறிவுறீயது.

எ - து, பகற்குறி வந்தொழுகுந் தலைமகன் ஒருநாட்போந்து அற்றம் நோக்கி ஒருபுறத்து மறைந்திருத்தலைக் குறிப்பாலறிந்த தோழி, களவொழுக்கம் நீட்டியாது வரைந்துகொள்ளவேண்டித் தம்மை அன்னை இற்செறித்ததாக அவன் கருதுமாற்றால், யாதொரு பிழையுஞ் செய்யாத நம்மை நெய்தன் மலர்பறிக்கச் செல்லுமினோவெனக் கூறுகின்றிலள்; அவ்வன்னை கருதியதுதான் யாதெனத் தலைவியைநோக்கிக் கூறுநிற்பது.

நீயும் யானுங் நெருநற் பூவின்

நுண்தா துறைக்கும் வண்டினம் ஓப்பி
ஒழிதிரை வரித்த வெண்மண லடைகரைக்
கழிசூழ் கான லாடிய தன்றிக்



ரு. கரந்துநாஞ் செய்ததோன்

றில்லை யுண்டெனிற்
பரந்துபிற ரறிந்தன்று மிலரே நன்றும்
எவன்குறித் தனள்கொ
லன்னை கயங்தோ
றிறவா ரினக்குரு கோலிப்பச் சுறவங்
கழிசேர் மருங்கிற் கணைக்கால் நீடிக்

கo. கண்போற் பூத்தமை கண்டு நுண்பல
சிறுபா சடைய நெய்தல்
குறுமோ சென்றெனக் கூறு தோளே.

**உரை :**—தோழீ, நேற்றைப்பொழுதில் நீயும்யானுஞ் சென்று மலரின் நுண்ணிய தாதிற் பாய்ந்துவிழுகின்ற வண்டினங்களைப் போக்கி யொழித்த திரைகொழித்த வெளிய மணலடுத்த கழிக்கரை சூழ்ந்த சோலையிடத்து விளையாடியதன்றி மறைத்து நாஞ் செய்தசெயல் பிறிதொன்றுமில்லை; அங்ஙனம் யாதேனுஞ் செய்ததொன்றுண்டென்றால் அது பரவாநிற்கும், நிற்க அதனைப் பிறர் அறிந்துவைத்தாருமிலர்; அப்படியாக, அன்னை நம்மை நோக்கிப் பொய்கைதோறும் இறுமீனைத் தின்னுங் குருகினம் ஒலிப்பச் சுறாவேறுமிக்க கழிசேர்ந்த இடத்துத் திரண்டதண்டு நீண்டு நம்முடைய கண்களைப்போலப் பூத்தமை நோக்கியும் நுண்ணிய பலவாகிய பசிய இலைகளையுடைய சிறிய நெய்தன்மலரைப் பறித்துச் சூடிக்கொண்மினெனக் கூறினாளல்லள்; ஆதலின் அவள் தான் பெரிதும் என்ன கருதியிருக்கின்றனள்போலும்? எ – று.

கானல் – கடற்கரைச்சோலை. கயம்-பொய்கை. கணைக்கால்-திரண்டதண்டு. குறுதல் – பறித்தல். நெய்தன்மலரைக் குறுமோவெனக் கூறாளெனவே இற்செறிப்பறுவுறுத்ததாயிற்று. இது காந்திடத்தொழிதல்.

நாளும் பறிக்கும்பூவைக் கொய்ம்மினென்னாளென்றதனால் அன்னை சின மிக்குடையாளெனக் குறிப்பித்ததாம். எவன் குறித்தனளென்றதனால் நங்களவொழுக்கத்தைச் சிறிது அறிந்துடைமையிற் பிற கருதாநின்றனளென்றதாம். இங்ஙனங்கூறவே இனி வரைந்தெய்தினலன்றிக் களவொழுக்க மியலாதென வரைவுடன்படுத்தியதூஉமாம். **மெய்ப்பாடு** – அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்** – செறிப்பறிவுறுத்து வரைவுகடாதல்.

## உ அ. முதுகூற்றனார்

**பாலை :**

(க) இது, பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் சொல்லியது.

தோழி

எ - து, தலைவன் பிரிவுக்காலத்து வருந்திய தலைவியை ஆற்றுவிக்குந் தோழி முன்பு தலைப்பெய்தவழி இத்தகைய அன்புடையனாதலின் அவன் அன்னதொரு குணக்குறைபாடிலன்; இன்று கரந்துபிரிந்தது ஒருசெயவின் மேலதுபோலுமென அவள் ஆற்றும்வகையைக் கருதிக் கூறாநிற்பது.

(உ) குறைநயப்புமாம்.

எ - து, முன்பு தலைவனது குறையைத் தீர்ப்பதாக உடன்பட்ட தோழி தலைவியிடஞ் சென்று அவள் ஆராய்ந்தறியுமாறு குறிப்பாற் கூறாநிற்பது.





என்கைக் கொண்டு தன்கண் ணொற்றியுந்
தன்கைக் கொண்டென் னன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியுங்
கள்வர் போலக் கொடியன் மாதோ
மணியென இழிதரும் அருவிப் பொன்னென
வேங்கை தாய வோங்குமலை யடுக்கத்து

ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்குஞ் சென்னிக்
கோடுயர் பிறங்கல் மலைகிழ வோனே.

(க) உரை :—நீலமணிபோலத் தெளிந்திழியும் அருவியையுடைய பொன்போல வேங்கைமலருதிர்ந்த உயர்ந்த மலைப்பக்கத்தில் அசைகின்ற தண்டுயர்ந்த பசிய கணுக்களையுடைய மூங்கில் விசும்பின்கண் ஓடுகின்ற முகிலைக் கீழும் உச்சியையுடைய கொடுமுடிகளுயர்ந்த பிறங்குதலாகிய மலைக்கு உரிமையுடைய நமது தலைவன் முன்பு தலைப்பெய்தநாளில் என் கைகளைத் தானெடுத்துத் தன் கண்களில் ஒற்றியும், தன் கைகளால் எனது நல்ல நெற்றியைத் தைவந்தும், அன்னைபோல இனிய பலவற்றைக் கூறியும் தலையளிசெய்து இஞ்ஞான்று கள்வரைப்போலக் கொடியனாயினான்; அவனியல்பு கொடியதாவதுகாண்; எ - று.

பிறர்பொருளைக் கைப்பற்றிக் கரத்தல் கள்வர்க்கியல்பாதலின், தலைவியினலம்வெளவிச் சென்றமைக்கு உவமைகூறினள். தலைவி கூற்றாகக் கூறியவழி அன்னைமுதலானோர் கேட்பின் ஐயுற்று ஏதமிழைப்பராதலின் அவள் கூற்றையொழித்துத் தோழி தன்கூற்றாகக் கூறப்பெறுவள்; தான் அவள் என்னும் வேற்றுமையிலளாதலின்; அங்ஙனங் கூறுதற்கு "ஒன்றித் தோன்றுந் தோழிமேன" (தொ-பொ-கூக) என்பதனால் தோழி கூற்றுந் தலைவி கூற்றாகும் எனக் கூறுவர் பேராசிரியர். (மேற்படி-சூ-௫௦௬. உரை பார்க்க.) கூறியும் என்ற எச்சம் கொடியனென்பதன் ஆக்கச்சொல்லொடு முடிந்தது. மெய்ப்பாடு - அழுகை. பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

(உ) குறைநயப்புக்கு உரை:—[பாட்டுக் குறிஞ்சி] மலைகிழவோன் ஒற்றியும் நீவியும் கூறியும் கொடியன் என்றவழி கேட்ட தலைவி (தன்னுள்ளே) நமது காதலன் வரைவின்றி இளிவந் தொழுகுபவனெனக் கொண்டாள்கொலெனவும், ஒற்றியும் நீவியும் கூறியவெல்லாம் என் பொருட்டென்று கொள்ளாது தன்பொருட்டென்று கொண்டாள்கொலெனவும் கருதும்படி கூறினளேனும் அதனுள்ளே இவள் எனக்குச் சிறந்தாளென்பதை எம்பெருமா னுணர்ந்துளனாதலின் என் வருத்தந்தீர்த்தியென இவளை நயந்தானெனவும், இவள் பிறழக்கொண்டதன்மை அவன்கணுளதாயின் இவளைக் குறிப்பறியாது ஒற்றியும் நீவியுஞ் செய்யானெனவும், எனது களவொழுக்கம் இவளுஞ் சிறிதறிதலானே இக்குறை முடித்தற் குண்டாய மனநெகிழ்ச்சியாலே அவன் ஒற்றி நீவியவழி உடன்பட்டு நின்றாளெனவும் அவளாராய்ச்சியாலே கொள்ளவைத்தமையிற் குறைநயப்பாயிற்று. கள்வர்போலக் கொடியனென்றது சிறுமைபற்றிய நகையுவமம். அன்னைபோலவென்றது சிறப்புநிலைக்களமாகப்பிறந்த பண்புவமம். **மெய்ப்பாடு** - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - குறைநயப்பு. (உஅ)

## மூலமும் உரையும்

௩௫

## உகூ. பூதனார்

**பாலை :** இது, மகட்போக்கிய தாய் சொல்லியது.

எ - து, தலைமகளைத் தலைமகன் கொண்டுதலைக்கழிந்தமை கேட்ட செவிலி புலம்பிப் பின்பு நற்றாய்க்குக்கூற அவ்வீன்றதாய் அஃது அறத்தாறெனக் கொண்டாளாயினும் பண்டு என்னைச் சிறிதுபொழுது பிரியினும் நொந்து புலக்குநள் எவ்வாறு அஞ்சாது பாலைநிலத்திற் செல்லுவள்கொலென மகளது அச்சத்தன்மை முதலாயவற்றுக் கச்சமுற்றிரங்கிக் கூறாநிற்பது.

நின்ற வேனி லுலந்த காந்தள்

அழலவிர் நீளிடை நிழலிடம் பெறாஅது
ஈன்றுகாண் மடிந்த பிணவுப்பசி
கூர்ந்தென
மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய
புலிபார்த் துறையும் புல்லதர்ச் சிறுநெறி
யாங்குவல் லுநள்கொல் தானே யான்றன்
வனைந்தேந் திளமுலை நோவ கொல்லென
நினைந்துகைந் நெகிழ்ந்த வனைத்தற்குத்
தான்றன்
பேரமர் மழைக்கண் நீரிய கலுழ
வெய்ய வுயிர்க்குஞ் சாயன்
மையீ ரோதிப் பெருமடத் தகையே.

**உரை :**—அவளுடைய தொய்யில் வனைந்து பருத்த இளைய கொங்கைகள் நோவனவோ வென்று யான் நினைந்து அணைத்திருந்த கையை நெகிழ்த்த அதனைப் பொருளாய்த் தான் தன்னுடைய பெரிய அமர்த்த குளிர்ச்சியையுடைய கண்கள் நீர்வடிவனவாய்க் கலுழ வெம்மையாகவுயிர்க்கின்ற மென்மையையும் கரிய ஈரிய கூந்தலையும் பெரிய மடப்பத்தையுமுடைய தகுதிப்பாடுடைய என் புதல்வி, எனைய பருவமெய்தாமல் வேனிற் பருவமொன்றுமே நிலைபெற்றுநின்ற காய்ந்துவாடிய காந்தளையுடைய அழல்வீசுகின்ற நீண்ட கடத்திலே நிற்குமாறு நிழலிடமும் பெறாது, குட்டிகளை யீன்று காட்டிற் காவல்செய்திருந்த பெண்புலி மிகவும் பசியுடையதென்று அதன் பசியைப் போக்கக் கருதி மயங்கிய மாலைப்பொழுதில் நெறியிற் செல்லுபவரைக் கொல்லும்பொருட்டு ஆண்புலி அந்நெறியை நோக்கியிருக்கும் புல்லிய அதராகிய சிறிய நெறியில் யாங்ஙனம் நடக்கவல்லுநளோ ?

மான்றல் - மயங்குதல். செகீஇய - கொல்லவேண்டி. மடத்தகை - அன்மொழித்தொகை. மடத்தகை நெறி யாங்கு வல்லுநளெனக் கூட்டுக. கைநெகிழ்த்தற்குக் கலுழ்தல் - பிரிதற்கு அழுதல். சிறிது பிரியிற் கலுழ்பவள் புலிபார்த்துறையுங் கானிற் செல்வதெங்ஙனம் என அவளது அச்சத் தன்மைக்கிரங்கியதாம். புல்லதர்ச் சிறுநெறி - பரலும்முள்ளும் பயின்ற சிறியவழி. இதில் யாங்ஙனம் நடக்கவல்லுநளெனத் தன்மகள் மென்மைத் தன்மைக்கிரங்கியதாம்.



**இறைச்சிகள்**:—(௧) பிணவின்பசியைப் போக்கப் புலி உணவுதேடி நெறியிற் பார்க்குங்கானமென்றது தலைவியின் அயர்ச்சியைப் போக்க வேண்டித் தலைமகன் மாலைப்பொழுதிலே தங்குமிடந்தேடி ஆங்கு இருவருந் தங்குவரென ஆற்றுவாளென்றதாம்.

„ „ (௨) ஈன்று கான்மடிந்த பிணவென்றது தலைமகள் இனி மக்களொடு மகிழ்ந்து மனையறங்காக்குமென்றாற்றுவாளென்றவாறு. **மெய்ப்பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமைநீங்குதல். (௨௯)

## ௩௦. கொற்றனார்

**மருதம்**:

இது, பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் யாரையும் அறியேனென்றாற்குத் தோழி சொல்லியது.

*எ - து, ஆடவர் வண்டுபோல்வராதலின் அவர் வரும்பொழுது எதிர் தொழுது போம்பொழுது பின்னே தொழுவதன்றி அவர் செயலைக்குறித் துப் பெண்டிர்புலத்தல் தகாதெனத் தலைவி தானேயறிந்து புலவிநீங்குமாற் ருனே தோழி பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனேடு உறழ்ந்துகூற அவன் யாரையும் அறிந்திலேனென்ருனை அப்பரத்தையர் பலர் நின்னைப்பற்றி யிழுத்ததை யான் அறிவேன் அறிந்துவைத்தும் எவன் செயற்பாலே னெனச் செயலற்றுக் கூருநிற்பது.*

கண்டனென் மகிழ்ந கண்டேவன் செய்கோ
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டின் இம்மென இமிரும்
ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கிநின்
மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்
கவலே முற்ற வெய்துவீ ழரிப்பனி
காலே முற்ற பைதரு காலைக்
கடன்மரங் கவிழ்ந்தெனக் கலங்கி
யுடன்வீழ்பு பலர்கோள் பலகை போல
வாங்க வாங்கநின் றூங்கஞர் நிலையே.

**உரை**:—மகிழ்நா! பாணன் கையிடத்ததாகிய பண்பமைந்த சிறிய யாழ் அழகிய வண்டுபோல இம்மென ஒலியாநின்ற நீ எழுந்துவருகின்ற தெருவிலே நீ வருதலை எதிர்பார்த்து நின்மார்பை முன்பு தமக்குடையராய்ப் பற்றிக்கொண்டிருந்த மாட்சிமைப்பட்ட இழையையணிந்த பரத்தையர் பலரும் நீ பிரிந்ததனாலுண்டாகிய கவற்சிமிகுதலாலே கண்களினின்று வெப்பமாய் வடிகின்ற கண்ணீருடனே, கடிய புயற்காற்றுவீசிச் சுழற்றுதலாலே துன்புற்றகாலத்துக் கடலிலே தாம் ஏறியிருக்கு மரக்கலங் கவிழ்ந்துவிட்டதாக அங்ஙனங் கவிழ்தலும் கலக்கமுற்றுத் தாமும் ஒருசேர வீழ்ந்து அவ்வழி விழுந்த பலரும் ஆண்டு மிதந்துவந்த ஒரு பலகையைப் பற்றிக்கொண்டு தாம் தாம் தனித்தனி இழுப்பதுபோல நின்கைகளைப்பற்றி அவரவர் தம்தம் கருத்துமுற்றுமாறு இழுத்தலாலே, நீ அவரிடைப்பட்டு மிக வருந்துகின்ற நிலைமையை யான் கண்கூடாகக் கண்டேன்; கண்டும் நின்னை யாது செய்



யற்பாலேன்காண்? ஆதலின் நீ யாரையும்
ணங்கொல்? எ - று.

அறியேனென்ற தெவ்வண்

பாணன் - தூதுசென்று பரத்தையைப் புணர்ப்பிப்பவன். கவலேமுற்ற - கவற்சியேமிகுதலால். கால் - காற்று. எழுறல் - வீசிமயங்குதல். கடல்மரம் - கப்பல். கண்டும் யாதுசெய்யவல்லேனென்றதனுல் கேட்டதலைவி புலவிநீங்குமென்றதாம். அவரிடைப்பட்ட அஞர் நிலையுரைத்தது தலைவி அவன்மாட்டு இரக்கங்கூர்தற்பொருட்டு. அஞர் நிலையென்றது கையாறு, இடுக்கண், நடுக்கமுதலாயின. **மெய்ப்பாடு** - வெகுளியைச்சார்ந்த அச்சம். **பயன்** - வாயின்மறுத்தல்.

## ௩௧. நக்கீரனார்

நெய்தல்: இது, தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி எதிரழிந்தது.

வன்புறை

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டு ஒருசிறைப் புறமாக வருதலையறிந்த தோழி அவன்கேட்டு விரைய வரையுமாற்றானே தலைவியைநோக்கி அவர் இன்னே வருகுவராதலின் நீ வருந்தாதேயென்று வற்புறுத்திக்கூறினாட்குத் தலைவி யான் எங்ஙனமாற்றுவேன், அவன் முயங்குமுன் இனியதாயிருந்த கடற்றுறையும் இப்பொழுது வெறுப்புடைத்தாயிற்றேயென வருந்திக்கூறுகிறப்பது.

மாயிரும் பரப்பகந் துணிய நோக்கிச்

சேயிரு வெறிந்த சிறுவெண் காக்கை

பாயிரும் பனிக்கழி துழைஇப்

பைங்கால்

தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச்

சுரக்குஞ்

ரு.

சிறுவீ ஞாழல் துறையுமா ரினிதே

பெரும்புலம் புற்ற நெஞ்சமொடு பலநினைந்து

யானும் இனையே னயின் ஆனது

வேறுபன் னாட்டிற் கால்தர வந்த

பலவுறு பண்ணியம் இழிதரு
நிலவுமணல்
நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல்
வெண்குருகு
உலவுத்திரை யோதம் வெரூஉம்
உரவுநீர்ச் சேர்ப்பனொடு மணவா
ஊங்கே.

உரை :—தோழீ, அமையாமல் வேறாகிய பல நாட்டினின்றும் கலங்களைக் காற்றுச்செலுத்தலாலே வந்திறுத்த பலவகைப் பண்டங்கள் இறக்கியிட்ட நிலாவையொத்த மணற்பரப்பின்கணுள்ள நெடிய புன்னைக்கிளையிலிருக்கின்ற முதிர்ந்தசூலையுடைய வெளிய குருகு, உலாவுதலையுடைய அலையோசைக்கு வெருவாநிற்கும் வலிய நீர்ப்பரப்பினையுடைய கடற்சேர்ப்பனொடு மணவாதமுன்பு, கரிய பெரிய நீர்பரந்த கழியிடந் தெளிதலானே அதனை நோக்கி அதிலுள்ள செய்ய இருமீனைப் பற்றுதற்குப் பாய்ந்த கழுத்தளவு சிறிது வெண்மையுடைய நீர்க்காக்கை பரவிய பெரிய குளிர்ச்சியையுடைய கழியிடத்தைத் துழாவியெடுத்துத் தான்விரும்பிய பசிய காலை



யுடைய பெடையை அழைத்து அதற்குக் கொடாநிற்கும் சிறிய பூவையுடைய ஞாழலந்துறையும் இனிதேயாயிருந்தது; அவன் என்னைக்கலந்து கைவிட்டபின்பு அத்துறையும் வெறுப்புடைத்தாயிற்று; ஆதலால் பெரிய வருத்தமுற்றவுள்ளத்தில், அவன் பிரிந்ததனாலாகிய துன்பம் பலவற்றையும் நினைந்து யானும் இத்தன்மையேனாயினேன்காண்; எ – று.

வெண்காக்கை – கருங்காக்கையுமாம். வெண்மை – கருமைமேற்று. காராட்டை வெள்ளாடென்பதுபோல மங்கலமொழியாகக் கொள்க. துணிவு – தெளிவு. பயிரிடுதல் – அழைத்தல். ஆர் – அசை. புலம்பு – வருத்தம். பண்ணியம் – பண்டம்.

**உள்ளுறை :**—புன்னையஞ் சினைக்கணுள்ள சூல் முதிர்ந்த குருகு கடலோசைக்கு வெருவுமென்றது பிறந்தகத்திருந்து காதலை மேற்கொண்டயான் அன்னையின் கடுஞ்சொல் கேட்குந்தோறும் வெருவாநின்றேனென்றதாம்.

**இறைச்சி :**—இருமீனைப் பிடித்துவந்த காக்கை தன் பெடையை விளித்து அதன்வாயில் இரையைக்கொடுக்குந் துறையையுடையவனாயிருந்தும் தலைவன் என்னையழைத்து முயங்கி இன்பமுய்த்தானிலன்; இஃதிருந்தபடியென்னையென்றதாம். **மெய்ப்பாடு** – அழுகை. **பயன்** – அயாவுயிர்த்தல். (௩க)

✓ ## ௩௨. கபிலர்

**குறிஞ்சி :** இது, தலைவிக்குக் குறைநயப்புக்கூறியது.

எ – து, பாங்கியிற்கூட்டத்துத் தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைவியை மெலிதாகச் சொல்லிக் குறையறிவுறுத்தலும் அவள் அறியாள் போறுதலின் வலிதாகக்கூறிக் குறைநயப்பிக்கத்தொடங்கி அத்தோன்றல் படுத்துயரை யான் கூற நீ தெளிந்திலை; வேறு தோழியரோடேனும் ஆராய்ந்து தக்கதுசெய்யெனப் புலந்து கூறுகிறப்து.

மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி
அம்மலை கிழவோன் நந்நயந் தென்றும்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொல்
தேருய்
௫. நீயுங் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந் தளவல் வேண்டுமறுதரற்கு

அரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே.

**உரை :—**தோழீ, வாழி; 'மாயோனைப்போன்ற பெரிய மலைப்பக்கத்து அவன் கண்ணனாயவதரித்தபொழுது அவனுக்கு முன்னவனாகத்தோன்றிய வெளிய நிறத்தையுடைய பலதேவனைப்போன்ற விளங்கிய வெண்மையான அருவிகளையுடைய அழகிய மலைக்குரிய தலைவன் நாள்தோறும் நம் புனத்தயல் வந்து நம்மை விரும்பி வருந்தாநின்றான்' என்று கூறுகின்ற எனது



ஒப்பற்ற வாய்மொழியைத் தெளிந்தாயல்லை ; என்னோடு உசாவுவதை யொழித்து நீயும் அவனைநோக்கி நின்மாட்டு அன்புடைய தோழியரோடும் ஆராய்ந்து அறிவினால் இது தகுதி இது தகாததென்பதையுமறிந்து பின்னர் அளவளாவுதல் வேண்டும்; அவன் கூற்று மறுத்தற்கரியனகாண்; அறிவுடைய சான்றோர் தம்பாலடைந்து நட்புக் கொள்ள விரும்பினார் திறத்து முன்னர் அவருடைய குணச்செய்கைகளது நன்மையை ஆராய்ந்து நட்புக்கொள்ளுவதல்லது நட்புச்செய்து பின்பு ஆராய்ந்து பாரார் ; நீ அங்ஙன் ஆராய்ந்து மலைகிழவோனை நட்புக்கொண்டாயல்லை ; முன்பு நட்டு இப்பொழுது வெறுத்தல் தகாதுகண்டாய் ; எ - று.

கவான் - மலைப்பக்கம். நீ அங்ஙன் என்பதுமுதற் குறிப்பெச்சம். வாய்ச்சொல், - வாய் - வேண்டாகூறல். நெடுமை நோக்கி மாயோனை யுவமித்தது.

அவனுந் தகுதிப்பாடுடையனென்பாள் மலைகிழவோ னென்ருள். ஈண்டியான் கூறியதனை ஆராய்கின்றனைபோலும் இவ்வாராய்ச்சி இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னரேவேண்டும் இவ்வயிற் பயனுடைத்தன்றென்பாள் பிறிதுமொழியாற் கூறினள். "நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின், வீடில்லை நட்பாள் பவர்க்கு" (குறள் - எகூக.) என்றதனானறிக. **மெய்ப்பாடு** - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். **பயன்**-வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல். (௩௨)

## ௩௩. இளவேட்டனார்

பாலை :

இது, பிரிவுணர்த்தப்பட்ட தலைமகளது குறிப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

எ - து, தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் வருந்துதலும் அதனையறிந்த தோழி வேற்றுநாட்டகல்கின்ற அவன் நீட்டியாது குறித்த பருவத்து வருதலைக்கருதி அவனை எதிர்ப்பட்டு நின்பிரிவுகேட்டு நாவெழாமற் கண்ணீர்விட்டழுமிவள் நீ வருமளவும் எவ்வாறு ஆற்றியிருப்பளென வருந்திக் கூறுநிற்பது.

படுசுட ரடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்
புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்துக்
கல்லுடைப் படுவிற் கலுழி தந்து
௫. நிறைபெய லறியாக்
குறைக்கூ ணல்லில்

துவர்செய் யாடைச் செந்தொடை

மறவர்

அதர்பார்த் தல்கும் அஞ்சுவரு

நெறியிடை

இறப்ப எண்ணுவர் அவரெனின் மறுத்தல்
வல்லுவங் கொல்லோ மெல்லிய ளெமென
விம்முறு கிளவிய ளென்முக நோக்கி
நல்லக வனமுலைக் கரைசேர்பு
மல்குபுனல் பரந்த மலரேர் கண்ணே.



உரை:—எம்பெருமானே, தலைமகள் என்னைநோக்கி மெல்லியால், மேலைத்திசையிற் செல்லுகின்ற ஆதித்தமண்டிலம் மறைந்தொழிதலாலே பரவிய மாலைப்பொழுதிற் பிளவுபட்ட நீண்ட மலைச்சார்பில் வன்னிலத் தடைமந்த சிறுகுடியின்கண் அச்சமிக்கிருக்கும் பொலிவழிந்த பொதியிலிற் கல்லையுடைய குழிகளிலுள்ள கலங்கனீரைக் கொணர்ந்து கொடுத்து நிறைந்த மழையைக் கண்டறியாத குறைந்த உணவையுடைய இராப் பொழுதிலே துவர்த்த நிறத்தையுடைய ஆடையையும் செவ்விய அம்புத் தொடையையுமுடைய ஆறலைகள்வர் நெறி நோக்கியிருக்கும் அச்சம் வரும் வழியின்கண்ணே அவர் செல்லக்கருதுவரெனின் யாம் மறுக்கவல்லேமோ வென்று வெளியிற் போதாமே விம்மிய சொல்லையுடையளாய் என்முகத்தை நோக்கலும் அவ்வளவில் அவளுடைய மலர்போன்ற கண்களிலிருந்து நல்ல மார்பின்கணுள்ள அழகிய முலைமுகட்டில் விழுந்து பரக்கும்படி மல்கிய கண்ணீர் பரந்தன; ஆதலின் நீ வருமளவும் எவ்வாறு ஆற்றியிருக்குந் தன்மையள்?

முரம்பு - வன்னிலம்; பருக்கைக்கற்கள் நிரம்பிய மேட்டுநிலமுமாம். படு - மடு. நோக்கி யென்பதை நோக்கவெனத்திரிக்க. அடைந்த பரந்த மாலை - அடைதலாற் பரவியமாலை யெனக்கொள்க. ஆதலினென்பது முதற் குறிப்பெச்சம். விம்முறு கிளவியள் என்றது தன்பத்துப் புலம்பல்.

இறைச்சி :—ஆறலைகள்வர் அதர்பார்த்து ஒளித்திருத்தல்போலத் தலைவன் பிரிவை நோக்கிப் பசலையொளித்திருக்கும்; அவன் பிரிதலும் அது பரந்து நலத்தைக் கெடுக்குமென்றதாம். மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம். பயன் - செலவழுங்குவித்தல். (௬௩)

## ௬௪. பிரமசாரி

### குறிஞ்சி: இது, தோழி தெய்வத்துக்குரைப்பாளாய் வெறிவிலக்கியது.

எ - து, களவுக்காலத்துப் பிரிவிடை வேறுபட்ட தலைவியை நோக்கி இவள் முருகனால் அணங்கப்பட்டாளென்று அன்னை வெறியெடுப்பக் கண்ட தோழி, அறத்தொடு நிற்பாளாய் வெறிவிலக்குமாறு நாடனது மார்பினால் வந்த இந்நோய் நின்னாலணங்கப்பட்டதன்றென்பதை நீ யறிந்து வைத்தும் நின்னணங்கென்று விளிப்பதற்காகப் பலியேற்க வருவையெனில் நீ யறிவில்லாதவனென்று முருகனைநோக்கி இகழ்ந்து கூறுநிற்பது.

கடவுட் கற்சுனை அடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி யொண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்
௫. அருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்

நின்னணங் கன்மை யறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி



வேலன் வேண்ட வெறிமனை வந்தோய் ௧௦.
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே.

**உரை :—** முருகவேளே, நீ நெடுங்காலம் இம்மடமையோடு வாழ்வாயாக; கடவுட்டன்மை பொருந்திய மலையிலுள்ள சுனையில் இலைகளை விலக்கி மேலே யெழுந்து மலர்ந்த கொய்யாமல் விட்டிருந்த குவளைமலரைப் பறித்து அவற்றோடு குருதிபோன்ற காந்தளின் ஒள்ளிய மலர்களை வடிவு விளங்கக்கட்டிச் சூடிப் பெரியமலையின் பக்கங்களெல்லாம் பொலிவுபெற அருவியின் ஒலியே இனிய வாச்சியமுட்டுக்களாகக் கொண்டு சூரரமகள் ஆடாநிற்கும் நாட்டையுடைய தலைவனது மார்பைப் புணர்ந்ததன் காரணமாக அம் மார்புதருதலாலே வந்த கருதுதலிற் குறைபாடில்லாத நீங்குதற்கரிய இக்காம நோயானது நின்னால் வருத்திக்கொடுக்கப்பட்ட தன்றென்பதை நன்றாக நீ அறிந்துவைத்தும் தலைநிமிர்ந்து கார்காலத்து மலர்கின்ற நறிய கடப்பமாலையைச் சூடிப் படிமத்தான் வேண்டுகையாலே வெறிக்களத்துப் பலிபெற வந்தோய், நீ கடவுட் பகுதியாருள் வைத்தெண்ணுதற்குரியையாயினுமாகுக; திண்ணமாக நீ அறியாமையுடையை காண்; எ-று.

பறியாக்குவளே - கடவுட்களே மலராதலிற் பூப்பலிக்கன்றிப் பறியாத குவளே. கடம்பு - செங்கடம்பு. மன்ற - தேற்றப்பொருள்பட்ட இடைச் சொல். படர்தல் - கருதுதல். பிள்ளையார் வேலேயேந்தியாடுதலிற் படிமத் தான் வேலனெனப்பட்டான். இவன் இக்காலத்துப் பூசாரியெனப்படு வான். வாழிய - இகழ்ச்சிக்குறிப்பு. அன்னுந்து - நினக்குத் தலேயெடுப்பும் வேண்டுமா வென்றிகழ்ந்தது.

**இறைச்சி :**—சூரரமகள் மாலேசூடி அருவியை இனியவாச்சியமாகக் கொண்டு ஆடுமென்றதனுனே தலேமகள் தலேவனே மணமாலேயணிந்து மணந்து என்னே எஞ்ஞான்றும் தனக்கு உசாத்துணேயாக நீங்காது கொண்டு இல்லறநிகழ்த்தக் கருதியிருக்குமென்றவாறு. சூரரமகளெனத் தெய்வத்தை இடையிட்டுரைத்தமையின் உள்ளுறையன்மை யுணர்க. மெய்ப்பாடு - பெருமிதத்தைச் சார்ந்தநகை. **பயன்** - குறிப்பினுல் வெறி விலக்குவித்தல். (௩௪)

## ௩௫. அம்மூவனுர்

**நெய்தல் :**

இது, மணமனேப் பிற்றைஞான்று புக்க தோழி நன் காற்றுவித்தாயென்ற தலேமகற்குச் சொல்லியது.

எ - து, வரைந்தபின் மணமனேபுக்க தோழியைப் பிரிவுக்காலத்து நன்காற்றுவித்தாயென்ற தலேமகற்குத் தலேவிபொருட்டு யாய்க்கஞ்சி யொழுகினேனே நீ விரையவந்து காத்ததன்றி யான் ஆற்றுவித்தது முளதோவெனக் கூறுவாள் சிறிது கைநெகிழிற் பண்டும் இத்தன்மையளே யெனப் பிரிவால் தலேவி வருந்துந் தன்மையுஞ் சேரக் கூறுநிற்பது.

போங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கால் நாவற் பொதிப்புற இருங்கனி

பல்கா லலவன் கொண்டகோட் கூர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை யெய்திய விடுக்குந்
துறைகெழு மாந்தை யன்ன இவள்நலம்
பண்டும் இற்றே கண்டிசின் தெய்ய
உழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய
ஞெகிழ்ந்த கவினலங் கொல்லோ

மகிழ்ந்தோர்

கட்கழி செருக்கத் தன்ன
காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே.

உரை :—பொங்கியெழுகின்ற அலைமோதிய நேரிதாகிய மணலடுத்த கடற்கரையின்கண்ணே உதிர்ந்த புல்லிய காம்பையுடைய நாவலின் களி பொருந்திய புறத்தினையுடைய கரிய கனியைத் தம்மினமென்று கருதி மொய்த்த வண்டுகள், அதனைக் கனியென வோர்ந்து பலவாகிய கால்களை யுடைய ஞெண்டு கைக்கொண்ட கோட்பாட்டினால் அஞ்ஞெண்டை விலக்கித் தாம் வலிந்துகொள்ளப்படாதனவாய் யாழோசைபோல மிக்கு ஒலிக்கும் பெரும்பூசலை ஆண்டு இரையைத்தேடுகின்ற நாரை வரக்கண்ட ஞெண்டு கைவிட்டகலாநிற்குங் கடற்றுறை விளங்கிய மாந்தைபோன்ற இவ ளுடைய நலமானது, பண்டும் இத்தன்மையதேயாகும்; நீ காண்பாயாக: இவள்பால் நின்றும் களவுக்காலத்து விலகாமலிருந்து தலையளிசெய்தா லும், இவள் கண் பசப்புற்றதன் காரணம் சிறிதளவு முயக்கம் கைநெகிழ்ந் ததனாற் கெட்ட அழகின்மிகுதியோ? கள்ளுண்டார்க்குக் கள் அறாஉங் காலத்துப் பிறந்த வேறுபாடுபோன்ற காமவேறுபாடோ? அவ்விரண்டு மல்லவே; எ - று.

புன்கால் - மெல்லியகாம்பு. செத்து - கருதி. இசின் - முன்னிலை யசை. தெய்ய - அசைநிலையிடைச்சொல். அளிப்பினும் இவள் கண்பசந் தமை கவினலமோ? காமவேறுபாடோ? அவ்விரண்டுமல்ல. பிரிவினாலே பசந்தனகாணென இயைக்க.

எனவே இஃது ஓரமளிக்கண்ணே துயிலப்பெற்றும் வேதவிதிபற்றிக் கூட்டம் நிகழாமையாற் பிறந்தவேறுபாடன்றோ? இதனை நீயேமுயங்கி ஆற்றுவிக்குமாறன்றி, யான் ஆற்றுவிக்குமாறென்னை யென்றாளென்ப தாம். வேதவிதி - கரணத்தினமைந்து முடிந்தகாலை முதல் மூன்றுநாளும் முறையே தண்கதிர்ச்செல்வற்கும், கந்தருவற்கும், அங்கியங்கடவுட்கும் அளித்து நான்காநாள் அங்கியங்கடவுள் தலைமகனுக்களிப்ப அவன் துய்ப் பானாக வென்பது.

உள்ளுறை :—கனி தலைவியாகவும், தும்பி தோழியாகவும், அலவன் தன்மேலே தவறிழைக்குந் தமராகவும், இரைதேர் நாரை தலைவனாகவுங் கொண்டு கனியைத் தும்பிமொய்த்தலும் அலவன் கைப்பற்றிக்கொள்ள நாரை வரக்கண்டு விட்டதுபோலத் தலைவியைத் தோழி சார்ந்திருப்பவும், தமர் முதலாயினர் இற்செறிப்பத் தலைவன் வரலும் அவர் மகட்கொடை நேர்ந்து இற்செறிப்பொழித்தாரென்றதாம். மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்தபெருமிதம். பயன் - பிரியற்கவெனக்கூறுதல். (௩௫)

## மூலமும் உரையும்



## ௩௬. சீத்தலைச்சாத்தனார்

### குறிஞ்சி: இஃது, இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

எ - து, தலைமகன் இரவுக்குறிவந்து ஒரு மறைவிடத்தில் நிற்பதை யறிந்த தோழி அவன் விரைவில் வரையவேண்டித் 'தலைவன் சொல்லைத் தெளிந்த யாம் எம்முடையநலத்தை யிழந்தேவிட்டேம், அதனாற் கண் துயின்றிலேம்; அலரெடுத்த இவ்வூர் நம்மைப்போல எதனையிழந்தது? இன்னுந் துயின்றிலதே' என அவன் வருந்தொழிற்கருமைகூறி வரைவு கடாவா நிற்பது.

குறுங்கை* யிரும்புலிக் கோள்வல் ஏற்றை
பூநுத லிரும்பிடி புலம்பத் தாக்கித்
தாழ்நீர் நனந்தலைப் பெருங்களி றடூஉங்
கல்லக வெற்பன் சொல்லில் தேறி

ரு. யாமெங் நலனிழந் தனமே யாமத்து
அலர்வாய்ப் பெண்டிர் அம்பலொ
டொன்றிப்
புரையில் தீமொழி பயிற்றிய
வுரையெடுத்து
ஆனுக் கெளவைத் தாகத்
தானென் இழந்ததில் அழுங்க லூரே.

உரை:—குறிய முன்னங்காலையுடைய கொல்லவல்ல பெரிய ஆண் புலி, பொலிவுபெற்ற நெற்றியையுடைய கரிய பிடியானை புலம்புமாறு நீரற்ற அகன்ற காட்டினிடத்துப் பெரிய களிற்றியானையைத் தாக்கிக் கொல்லாநிற்கும் மலையிடத்தையுடைய சிலம்பன் 'நின்னிற் பிரியேன்' என்று கூறிய பொய்ம்மொழியை மெய்யெனத் தெளிந்து, யாம் எங்கலத்தை இழந்தேவிட்டேம், ஆதலின் இந் நடுயாமத்துக் கண்டுயிலா தொழிந்தனம்; பழிதூற்றும் வாயையுடைய எதிலாட்டியராற் கூறப்படும் அம்பலொடு சேர ஒலிமிக்க இவ்வூர், மேன்மையில்லாத தீயசொற்களைக் கூறுதற்கு வேண்டிய உரைகளை எறட்டெடுத்துக்கொண்டு அமையாத பழிமொழியை யுடையதாக எம்மைப்போல எதனையிழந்தது, இந் நடுயாமத்திலுந் துயின்றிலதே.

எற்றை – விலங்கினுண்பாற்பெயர்.
பழிச்சொல். அழுங்கல் – ஒலி.

புரை – மேன்மை. கெளவை ·

தலைவன் ஒரு சிறைப்புறத்தானென அறிந்த தோழி அவன் குறித்த பொழுது வாராமையாலே தலைவி நலனிழந்தமையும், ஏதிலாட்டியர் அல ரெடுத்தமையும், ஊரார் பழிதூற்றுதலும், ஊர் கண்ணுறங்காமையால் இ வுக்குறியின் முட்டுப்பாடுங் கூறி வரைவுகடாய தறிக. ஊருறங்காமை கூறியது முட்டுவயிற்கழறல். நலனிழந்தனமென்றது பசலைபாய்தல்.

உள்ளுறை :—பிடி புலம்புமாறு புலியானது களிற்றைத் தாக்கிக் கொல்லாநிற்கும் நாடனென்றதனால் இரவு இந்நெறியின்கண் வரின்

---

(பாடம்) * குறுக்கை.



யாம் புலம்புமாறு எமர் நின்னை ஏதஞ்செய்யாநிற்பர் என்றதாம்; இதனா லும் இரவுக்குறி மறுத்து வரைவுடம்படுத்திய தறிக. **மெய்ப்பாடு** - அழு கையைச் சார்ந்த அச்சம். **பயன்** - வரைவுகடாதல். (௯௬)

## ௯௭. பேரிசாத்தனார்

**பாலை :** இது, வரைவிடைவைத்துப் பிரிவின்கண் தோழி சொல்லி யது.

எ - து, வரைவிடைவைத்துப் பிரியுந் தலைமகன் யான் வருமளவும் தலைவியை ஆற்றியிருவென்றற்கு நீ இவளையும் உடன்கொண்டு செல்வா யாக, அன்றிப் பிரிந்துசென்றால் கார்காலத்து மாலைப்பொழுதில் இவள் படுந் துன்பம் என்னா லாற்றுவிக்குந் தரத்ததன்றெனத், தோழி மறுத்துக் கூறாநிற்பது.

பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை

உணங்கூ ழியத் தோரான் தெண்மணி

பைய விசைக்கும் அத்தம் வையெயிற்று
இவளொடுஞ் செலினோ நன்றே குவளை
நீர்சூழ் மாமல ரன்ன கண்ணழக்
கலையொழி பிணையிற் கலங்கி மாறி
அன்பிலிர் அகறி ராயி னென்பரம்
ஆகுவ தன்றிவள் அவலம் நாகத்து
அணங்குடை யருந்தலை உடலி

வலனேர்பு

ஆர்கலி நல்லேறு திரிதருங்
கார்செய் மாலை* வரூஉம் போழ்தே.

உரை :—ஒன்றோடொன்று சிக்குண்ட சிறுதூறுகளும், பழைமையான நல்ல தோற்றமும் வாடிய அகன்ற இடத்தையுடைய, உணவின்றி வாட்டமுற்ற நிரையிலுள்ள ஓராவினது தெளிந்த மணியோசை மெல்லெனவந்து ஒலியாநிற்கும் அத்தத்தில் நீயிர் பொருள்நசையாற் செல்லுகின்ற இப்பொழுது கூரிய பற்களையுடைய இவளோடுஞ் செல்வீராயின் அது மிக்க நல்லதொரு காரியமாகும் ; அங்ஙனமின்றிக் கலைமானைப்பிரிந்த பெண்மான்போல இவள் கலக்கமுற்றுக் குவளையின் நீர்நிரம்பிய கரிய மலர்போன்ற கண்களில் அழுகின்ற நீர்வடிய மாறுபட்டு அன்பில்லாதீராய் நீயிர் இவளைப் பிரிந்து செல்லுவீராயின், பாம்பினது வருத்துகின்ற அரிய தலை துணிந்து விழும்படி சினந்து வலமாக எழுந்து மிக்க முழக்கத்தையுடைய நல்ல இடியேறு குமுறித் திரியாநின்ற முகில்சூழ்ந்துலாவுங் கார்ப்பருவத்து மாலைக்காலம் வரும்பொழுது இவள் படுகின்ற அவலம் என்னாலே தாங்கப்படுவ தொன்றன்று காண்மின் ; எ - று.

பழவிறல் - பழையதன்மை. திரிதரல் - மேகத்தில் யாண்டுமோடி முழங்குதல். நனந்தலை யத்தமென இயைக்க. வரைவிடைவைத்துப்

(பாடம்) * கார்செய்காலை.

௪௫

பொருள் வயிற் பிரிதல் ஒரு பருவகாலத்தளவேயாமாதலிற் கார்ப்பருவத் தாற்றுளெனவே ஆனித்திங்கள்முதற் செல்வானென்பது பெறப் பட்டது.

அத்தத்து ஊணின்றி வாடுங்காலத்தும் ஆவினைப் பெற்றம் அணையா நிற்குங்கண்டீர்; அங்ஙனம் அணையும்பொழுது எழுகின்ற மணியோசைக்கு நீயிர் வருந்துவீராதலின் இவளையும் உடன்கொண்டு சேறல் நன்றென்றாள். இடிமுழக்கத்துக்கு அஞ்சுழி அணைத்துக்கொளற் கின்மையான் இறந்துபடுமாதலின் இவளவலம் என்னுலே தாங்கப்படுவதன்றென்றாள். **மெய்ப்பாடு** – அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** – செலவழுங்குவித்தல். "ஓம்படைக் கிளவிப் பாங்கின்கண்ணும்..........தோழி மேன" (தொ-பொ-௧௪௪) என்றதனால் வரைவிடைவைத்துப் பிரிகின்றான் ஆற்றிக்கொண் டிருவென்று கூறத் தோழி மறுத்துக்கூறினாளாயிற் றென்பது நச்சினார்க்கினியம்.

## ௬௮. உலோச்சனார்

**நெய்தல்:** இது, தலைவி வன்புறையெதிரழிந்து சொல்லியது.

எ – து, தலைவன் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதலாலே தலைவி வருந்தியதுகண்ட தோழி, நீ வருந்துவது புறத்தார்க்குப் புலனாயின் அலராகுமென்று வற்புறுத்துவது கேட்ட தலைவி; நம்மூர் இனிமையுடையதாயினும் நமது தலைவன் பிரிந்தவுடன் வெறுப்பாகத் தோன்றுகின்றதாதலின் யான் எங்ஙனம் வருந்தாதொழிவனென அழுங்கிக் கூறு

நிற்பது.

வேட்டம் பொய்யாது வலைவளஞ்
சிறப்பப்
பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும்பனந் தீம்பிழி யுண்போர் மகிழும்
ஆர்கலி யாணர்த் தாயினுந் தோடுகெழு
மெல்லம் புலம்பன் பிரியிற் புல்லெனப்
புலம்பா கின்றே தோழி கலங்குநீர்க்
கழிசூழ் படப்பைக் காண்ட வாயில்
ஒலிகா வோலை முள்மிடை வேலிப்
பெண்ணை யிருவ மாங்கண்
வெண்மணற் படப்பையெம் அழுங்க
லூரே.

உரை :—தோழீ, கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த தோட்டங்களையுடைய 'காண்ட வாயில்' என்னு மூரிலுள்ள தழைந்த முற்றிய பனையோலையோடு முட்களைச் சேர்த்துக் கட்டப்பட்ட வேலியகத்துப் பனைமரங்க ளுயர்ந்த வெளிய மணல்மேட்டினை யுடைய பக்கஞ்சூழ்ந்த ஒலிமிக்க எம்மூரானது, கடலிடத்து மீன்வேட்டைமேற் சென்றார்க்கு ஆங்குத் தப்பாது பெறவேண்டி மழைபொய்யாது பெய்தலானே வலைவளஞ்சிறப்ப அவ்வலைவளத்தால் வந்த பொருளைப் பிறநாட்டிற்சென்று பரதமாக்கள் விலைக்கு விற்று வர அப் பொருளையீந்து கரியபனையின் இனிய கள்ளைப் பெற்றுண்

றுபவராய் மகிழ்ந்திருக்கும் நிரம்பிய ஒலியையுடைய புதுவருவாயினை யுடைய தாயினும் தொகுதி விளங்கிய நமது மெல்லிய கடற்சேர்ப்பன் நம்மைவிட்டுப் பிரிந்த காலத்தில் நம்மூரானது பொலிவழிந்தாற்போல வருத்தமுடையதா யிராநின்றது ; ஆதலின் யான் எங்ஙனம் வருந்தாது ஆற்றியிருப்பேன் ? எ - று

பாட்டம் - மேகம் ; "வெண்பாட்டம் வெள்ளந்தரும்" என்றூர், (எக) பழமொழியினும். "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி, தானல்கா தாகி விடின்." (குறள்-கஎ) என்பதனாலும் கடற்பொருளுக்கு மழை இன்றியமையாமை யறிக. தோடு-படைமுதலியவற்றின்தொகுதி. ஆங்கண் - அவ்விடம் ; அசையுமாம். காவோலை முற்றிய ஓலை; முற்றிக் காய்ந்த ஓலையுமாம். 'தோழீ, ஊர்யாணர்த்தாயினும் புலம்பன் பிரியிற் புலம்பாகின்று' எனக் கூட்டுக. ஆதலின் என்பதுமுதற் குறிப்பெச்சம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கூஅ)

## ௩௯. மருதனிள நாகனர்

குறிஞ்சி: இஃது, இரண்டாங்கூட்டத் தெதிர்ச்சியில் சொல்லியது.

தலைவன்

எ - து, தெய்வப்புணர்ச்சி புணர்ந்து நீங்கி இடந்தலைப்பாடுற்றுச் சென்று முன்றுறக்கண்ட தலைமகன் அந்தத் தலைமகளைநோக்கி நீ நாணுகின்றனை, யானுற்றகாமம் தாங்குத லெளியதொருகாரியமோ; நின் கண்களேயன்றி நின் தோள்களும் என்னை வருத்துகின்றன காணென்று மெய்தொட்டுப்பயிறன் முதலானவற்றை யுள்ளடக்கிக் கூறுகிற்பது.

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்

திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகின் தாங்குதல் எளிதோ
கொடுங்கேழ் இரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப் பேய்ப்பக் கடைமணி
சிவந்தநின்
கண்ணே கதவ அல்ல நண்ணார்
ஆண்டலை மதில ராகவும்* முரசுகொண்டு
ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூடல் அன்னநின்
கரும்புடைத் தோளும் உடையவா
லணங்கே.

உரை:—நங்காய், யான் நின்னைத் தழீஇக்கொண்டு சில கூறின் அவற்றை எதிரேற்றுக் கொள்ளாயாய் நின் அழகிய முகம் இறைஞ்சிநின்று கண் புதைத்து நாணுகின்றனை; விரைவாக, காமமானது கைகடந்து மிகுமாயின் அதனை யான் தாங்கியிருத்தல் எளியதொரு காரியமாகுமோ? புலி நடுங்குமாறு அதன் விளைந்த கரிய நிறமுள்ள வரிகளையுடைய பெரிய முதுகிலே

---

(பாடம்) * மதிலராக.

குத்திவீழ்த்தி விளையாட்டயர்ந்த புலவுநாற்றத்தையுடைய களிற்றின் இனிய நுனியையுடைய மருப்புப்போலக் கடைமணிசிவந்த நின் கண்கள்தாமோ சினவாநின்றன? அவைமட்டுமல்ல; பகைவர் அரண்மிக்க மதிலிடத்திற் போந்தாராகவும் உடனே மேல்வீழ்ந்து வென்று அவரது முரசைக் கைக்கொண்டு அவரால் பாதுகாக்கப்படுகின்ற அரணையுங் கைப்பற்றிய போரிற் கொல்லுவல்ல பாண்டியனது பெரிய புகழையுடைய மதுரையையொத்த நின்னுடைய தொய்யிலாலெழுதப்பட்ட கரும்பையுடைய தோள்களும் என்னைவருத்துதலையுடையனகாண்; எ - று.

கரும்பு - காமனதுவில்; தொடர்புடைமையில் தழீஇக்கொண்டு கூறப்பட்டது.

முகமிறைஞ்சி நாணக்காண்டலிற் றன்கூற்றை ஏற்றுக்கொண்டிலள் போலுமெனக் கொண்டு எதிர்கொள்ளாது வெறுத்தனை யென்றான். தாங்குதலெளிதோ என்றது நீ வெறுத்தனையெனினும் காமந்தாங்குத லெளிதன்றாதலின் மேல்வீழ்ந்து முயங்குவேனென்றதாம். கண்ணுந் தோளுங் கதத்தன வென்றது அவை என்னைவருத்தாவாறு கண்ணால் நயந்துநோக்கித் தோளாணைத்து முயங்குகவென்றதாம். மற்றும் இதனுள் தழீஇக்கொண்ட தென்றது மெய்தொட்டுப்பயிறலும், சில கூறில் என்றது பொய்பாராட்டலும், நாணுதி யென்றது இடையூறுகிளத்தலும், தாங்குதலெளிதோ வென்றது நீடுநினைந்திரங்கலும், புலியிடைத்தோய்ந்து சிவந்த மருப்புப்போல என்னிடைத்தோய்ந்து காமக்குறிப்பினாற்சிவந்தகண்ணென்றது கூடுதலுறுத்தலுங் கூறியவாறறிக. மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றாமையுணர்த்தல். (நகூ)

## சுo. கோண்மா நெடுங்கோட்டனர்

**மருதம்:** இது, தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் வியது.

பரத்தை சொல்

எ - து, தலைமகன் பரத்தையிற் பிரிந்த காலத்துத் தலைவி பொறை யுயிர்த்து விடுத்த வெள்ளணிகண்டு பெயர்ந்து தலைவிபாற்செல்லக்கண்ட பரத்தை தலைவியின் பாங்காயினர்கேட்பத் தனக்கு மகன் பிறந்தானென்னு மகிழ்ச்சியால் ஊரன் கள்வனைப்போல மெல்ல நுமது இல்வயினுற்றான் போலு மென்று நகையாடிக் கூறுநிற்பது.

நெடுநோ வொண்மணி கடிமனை இரட்டக்
குரையிலைப் போகிய விரவுமணற்
பந்தர்ப்
பெரும்பாண் காவல் பூண்டென
ஒருசார்த்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
ரு.. வெறியுற விரிந்த அறுவை மெல்லணைப்
புனிறுநாறு செவிலியொடு புதல்வன்
துஞ்ச
ஐயவி யணிந்த நெய்யாட் டீரணிப்
பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த

கо. நள்ளென் கங்குற் கள்வன் போல
அகன்துறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே.

உரை:—காவலையுடைய மாளிகையிடத்து நெடிய நாவையுடைய ஒள்ளிய மணி ஒலியாநிற்ப ஒலிக்கின்ற தெங்கங்கீற்றான் மிடைந்து புனைந்த மணல்பரப்பிய பந்தரின் கண்ணே, முன்பு பரத்தையிற்சென்றவழிப் பெரிய பாணர் தலைவனைச்சூழ்ந்து காவலை மேற்கொண்டாற்போலத் திருந்திய கலனணிந்த மகளிர் இப்பொழுது நன்னிமித்தமாக நிற்ப, நறுமணமிக விரிப்ப விரிந்த மெல்லிய அணையின்மீது செவிலியுடனே ஈன்ற அணுமைவிளங்கிய புதல்வன் துயிலாநிற்ப, வெண்கடுகையப்பிய எண்ணெய்தேய்த்து ஆடும் நீராட்டினால் ஈரிய அணியையுடைய குளிர்ந்த நெய்பூசிய மிக்க மென்மையாகிய உடம்பினையுடைய அழகுவிளங்கிய மனைவிதான் தன் ஈரிமையொன்றோடொன்று பொருந்த வுறங்காநிற்ப அகன்ற நீர்த்துறையையுடைய வூரனும் சிறந்த தந்தையின் பெயரனாகிய தன்மைந்தன் பிறந்ததனால் இடையாமத்திருளிலே கள்வனைப்போல வந்துற்றான்; எ - று.

விரிச்சி - நிமித்தம். அறுவை - ஆடை. ஐயவி - வெண்கடுகு. குரை - அசையெனக்கொண்டு இலையான் வேய்ந்த பந்தரெனக் கூறினும் அமையும். ஐயவி - காவலாக அணிவது; அணங்குகள் அணங்காமைக்கு. மாறு மூன்றனுருபின் பொருள்படுவதோரிடைச்சொல். கள்வன்போல என்றது சிறுமைபற்றிய நகையுவமம். மற்றுமிது கிழக்கிடுபொருளாக முதலொடு முதலேவந்த வினையுவமமுமாம். இனி இப்பாட்டு முன்பு வருங்காலத்து வாராது மைந்தன் பிறந்ததனால் வந்தானெனத் தோழிகூறியதாக வுரைப்பினுமமையும்.

மணி கடிமனை யிரட்டவென்றது தலைமகனது செல்வமிகுதி கூறியதாயிற்று. பரத்தையர்காணிற் பலர்கொள்பலகைபோலப் பற்றி யீர்த்தலும் ஈர்ப்பரென அவர் காணுமை நள்ளிருளிற் கள்வன்போல வந்தனனென்றதாம். மெய்ப்பாடு - பிறன்கண்தோன்றிய எள்ளல்பொருட்டாக வந்த நகை. பயன் - தலைமகனை இயற்பழித்தல். (௪о

# சுக. இளந்தேவனார்

**பாலை:**

இது, பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி உலகியல்கூறி வற்புறுத்தியது.

எ - து, தலைவனாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைவி வருந்தியபொழுது முன்னாள் நின் குறுநடைக் கூட்டம் விரும்பிப் பிரியாதிருந்தவர் இப்பொழுது பொருளீட்டுமாறு சேணிடைச்சென்று வருந்துவதானது, பின்னர் நின்னொடு இல்லறம் வழுவாது நடத்தற்பொருட்டன்றேவென இவள் விருந்தெதிர்கொள்ளும் உலகியலையெடுத்துக்காட்டித் தோழி வற்புறுத்திக் கூறுநிற்பது.

பைங்கண் யானைப் பரூஉத்தா ளுதைத்த
வெண்புறக் களரி விடுநீ றாடிச்
சுரன்முதல் வருந்திய வருத்தம் பைபயப்

. மூலமும உரையும

சுக

பாரம் மலிசிறு கூவலில் தணியும்
ரு. நெடுஞ்சேண் சென்று வருந்துவர் மாதோ
எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்

கிளரிழை அரிவை நெய்துழந் தட்ட
விளரூன் அம்புகை எறிந்த நெற்றிச்
சிறுநுண் பல்வியர் பொறித்த
௧௦. குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே.

உரை:—விளங்கிய கலனணிந்த அரிவையே, இரவின்கண் வந்த நல்ல ...ழையுடைய விருந்தினர் உண்ணவேண்டி நீ நெய்யை அளாவவிட்டுக் ...காழுவிய தசையைச் சமைத்ததனாலாகிய புகைபடிந்த நெற்றியின்கண் ...றிய நுண்ணிய பலவாய வியர்வைநீர் தோன்றப்பெற்ற குறுகிய நடை... ...பாடுசென்ற நின் புணர்ச்சியை அக்காலத்து விரும்பினவர், பசிய கண் ...ளையுடைய யானை தன் பருத்தகாலா லுதைத்தலிற் பொடிபட்ட வெளிய ...மலிடத்தையுடைய பாழ்நிலத்திலுள்ள விடுபுழுதி மூழ்கப்பெற்றுச் சுரத்... ...ன்கண் வந்து வருந்திய வருத்தமெல்லாம் மெல்லநடந்து பருத்திகள் சூழ ...ளைத்திருக்கின்ற சிறிய கிணற்றிற் சென்று தணித்துக்கொள்ளாநிற்கும் ...நடிய மிக்க சேணிடத்தேகி வருந்தாநிற்பர்போலும். அங்ஙனம் போய் ...ருந்துவதும் பின்னர் நின்னொடு இல்லறம் வழுவாது நடத்தற்பொருட் ...ன்றோ? இதனையாராயாது நீ வருந்துவதென்னை? எ - று.

...பாரம் - பருத்தி; இது பருத்திவாணிபர் அந்நெறியிற் சென்று கூவ... ...ருகில் தங்குழி ஆண்டு அவ்வித்துதிர்ந்து முளைத்திருப்பது. விளர் - ...காழுப்பு. விருந்தெதிர்கொண்டமை கூறலின் உலகிய லாயிற்று; இஃது ...புறவெனவும்படும். மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம். ...பன் - தலைவியை ஆற்றுவித்தல். (௪௧)

## ௪௨. கீரத்தனார்

முல்லை: இது, வினைமுற்றிமீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

எ - து, சென்று வினைமுடித்து மீண்டு குறித்தபருவத்து வருகின்ற லைமகன், பாகனைநோக்கிப் பாகனே! மழைபெய்தலும் தவளைகளொலித்த னாற் செல்லுகின்ற தேரின் மணியொலியை நமது காதலி யறிந்திலதனால், நீயிர் போய்த் தெரிவிப்பீரென இளையரைவிடுத்தலும் அவர்சென் றிவித்தனராக, உடனே அவள் நீராடித் தன்னைப் புனைந்துகொள்ளுங் றவாயில், யான்சென் றுட்புகாநிற்ப ஆங்கு என்னையணைத்து மகிழுநிலை றத்தற்கரிதுகாணென முன்பொருகால் நிகழ்ந்ததனைக் கூறாநிற்பது.

மறத்தற் கரிதால் பாக! பன்னாள்

✓ வறத்தொடு பொருந்திய உலகுதொழிற் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீ ரவல*
நாநவில் பல்கிளை கறங்க நாவுடை

(பாடம்) * புதுநீரரவத்து.





மணியொலி கேளாள் வாணுதல் அதனால்
ஏகுமின் என்ற இளையர் வல்லே

இல்புக் கறியுந ராக மேல்லேன
மண்ணுக் கூந்தல் மாசறக் கழீஇச்
சில்போது கோண்டு பல்குரல் அழுத்திய
கு0. அந்நிலை புகுதலின் மெய்வருத் துரூஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலையே.

**உரை** :—பாகனே! நீரின்மையாலே கோடையில் பலநாளாக வறட்சி யுற்ற உலகத்து உயிர்கள், மகிழ்ச்சியோடு தத்தந்தொழிலை மேற்கொண்டு நிகழ்த்துமாறு தொன்றுதொட்டுப் பெய்யும் வழக்குப்போல மழைபெய்தத னுலாய புதிய நீர்நிரம்பிய பள்ளங்கடோறும் நாவினு லொலிக்கின்ற பல வாய கூட்டத்தையுடைய தவளைக ளொலித்தலானே, நாம் செல்லுகின்ற தேரிற்கட்டிய நாவினையுடைய மணிகளினொலியை ஒள்ளிய நுதலையுடைய நமது தலைவி கேட்டறிந்திலள்; ஆதலின் நீயிர் முன்னேசென்று கூறுமி னென்றபடி அக்கட்டளையை யேற்ற இளையோர் விரைந்து நமது மாளிகை யிற் புகுந்து அறிவித்தனராக, உடனே மெல்ல அதுகாறுஞ் சீவிக் கைசெய் யாத கூந்தலின் மாசுபோகத் தூநீராடிச் சிலவாய மலரைக்கொண்டு பலவாய கூந்தலிலே முடிக்கின்ற அத்தறுவாயில், யான் உள்ளேபுகுதலும் என்னை நோக்கித் தன்மெய் துவள வந்து அவிழ்ந்துகுலையு முடியினளாய் என்னை யணைத்துக்கொண்ட மடப்பத்தையுடைய சிறந்த நமது அரிவை மகிழ்ந்து கொண்டாடுந்தன்மை, யாம் மறத்தற்கரியதுகாண்; அத்தகையா ளின்றும் மகிழ்ந்தணைக்குமாறு விரைவிலே தேரைச் செலுத்துவாயாக; எ – று.

உலகு – உயிர். அவல் – பள்ளம். அறியுநர் – அறிவிக்குநர் என்பதன் விவ்விகுதிதொக்கது. என்ற – ஏதுப்பொருட்டில்வந்த பெயரெச்சம். குரல் – கூந்தல். கவைஇய – அணைத்த.

முன்னிகழ்ச்சி கூறு முகத்தாலே இன்றும் மழைபெய்யாதின்றதெனத் தான் தலைவிக்குக் குறித்த பருவத்தைக் குறிப்பித்தான். கற்பு மிகுதிகூறு வான் மண்ணுக்கூந்தலென்றான்; தம் வனப்பைக்கண்டுமகிழும் ஆடவர் இல்வழிக் கற்புடைமகளிர் தம்மைப் புனையாராகலின். மெய்வருத்துறு என அவளது காமமிகுதி கூறினன். இவ்வளவு காமமிகுதியுடையவள் மண்ணுக்கூந்தலளெனவே அவளது நிறையுடைமை கூறினனுமாம். கவைஇய என அன்பின்மிகுதியு முடன்கூறினன். அத்தகையாள் என்பது முதற் குறிப்பெச்சம். மெய்ப்பாடு - உவகை. பயன் - கேட்டபாகன் விரைந்து தேர்கடாவல். (சஉ)

## சங. எயினந்தையார்

பாலை :

இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தது.

எ - து, தலைவன் தான் வினைவயிற் பிரிதலை அறிவிப்பக்கேட்ட தோழி, நீயிர் பிரிந்து சுரம்போகுதல் நமக்கு உவகையுடைத்தாயிரின்

## மூலமும் உரையும்

நிக

றது, அங்ஙனம் பிரிதலைக் கேட்டவுடன் இவட்குப் பெரியதோ ரழிவு வாராநின்றது, ஆதலின், எற்றது செய்ம்மினெனச் செலவழுங்கக் கூறு நிற்பது.

துகில்விரித் தன்ன வெயிலவிர் உருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்
ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை
தொலைச்சி ஆர்ந்தன வொழிந்த மிச்சில் சேய்நாட்டு
அருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சி யாகும்
வெம்மை யாரிடை இறத்தல் நுமக்கே
மெய்ம்மலி யுவகை யாகின்று இவட்கே
அஞ்சல் லென்ற இறைகை விட்டெனப்
பைங்கண் யானை வேந்துபுறத்
திறுத்தலில் களையுநர்க் காணது கலங்கிய உடைமதில்
ஓரெயில் மன்னன் போல
அழிவுவந் தன்றால் ஒழிதல் கேட்டே.

**உரை:**—வெளிய ஆடையை விரித்தாற்போன்ற வெயில்விளங்கிய வெப்பத்தையுடைய கோடைநீடிய மலைப்பக்கத்தில் நுணுகிய பசியை யுடைய செந்நாய், வாடிய மரையாவைக் கொன்றுபோகட்டுத் தின்றொழித்த மிச்சில், நெடுந்தூரத்திலுள்ள வேற்றுநாட்டினின்று செல்லுதற்கரிய பாலைநிலத்தின்கண்ணே செல்லுகின்ற மாந்தர் உண்ணுமுணவாயிருக்கும் வெப்பமுற்ற அரியவழியிலே செல்லுதல், நுமக்கு உடம்புநிறைவுற்ற மகிழ்ச்சியுடைத்தா யிராநின்றது; இவட்கோவென்றால் நீயிர் பிரிந்து போதலைக் கேட்டவுடன் 'அஞ்சாதேகொள்' என்ற துணைவயின்வந்த அரசன் கைவிட்டானாக, அப்பொழுது பைங்கண்ணையுடைய யானைப்படையை யுடைய பகைவேந்தன் தன் மதிற்புறத்துவந்து தங்கலுந் தனக்குவந்த துன்பத்தைப் போக்குபவரைக் காணாமல் கலக்கமுற்ற உறுப்புக்களமைந்த உடைந்த ஒரு மதிலையுடைய அரசனைப்போல அழிவுவாராநின்றது. ஆதலின் ஏற்றதொன்றனைச் செய்ம்மின்; எ - று.

உருப்பு - வெப்பம். ஏன்றாழ் - கோடை. ஒய்பசி - நுட்பமாகியபசி. ஆரிடை - அரியவழி. ஆகின்று - ஆகிற்று. எயில் - மதிலுறுப்பு. துணையரசன் காதலனாகவும், அவன் கைவிட்டவுடன் பகையரசன்புகுதல், தலைவன் பிரிந்தவுடன் காமந்தலையெடுத்துப் புகுதலாகவும், ஒருடைமதில் ஏனைய கழிந்து எஞ்சிய நாணமொன்றே அதுவுஞ் சிதைந்து நின்றதாகவும், மன்னன் தலைவியாகவும் உவமையும் பொருளு மொத்தவாறறிக.

**இறைச்சி:**—செந்நாய்தின்ற மரையாவின் தசை நெறியிற் செல்வோர்க்கு உணவாகுமென்றதனானே, நீயுண்டெஞ்சிய தலைவியினது நலனைப் பசலை யுண்டொழிக்கு மென்றதாம். எனவே முற்பட இறைச்சியாற் பொருள்கொள்ளுமாறு கூறக்கேட்டும் தலைவன் பிரிதலே மேற்கோடலின் வெளிப்படை யுவமத்தானுங்கூறிச் செலவழுங்குவித்தாளாயிற்று. **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்**-செலவழுங்குவித்தல். (சங)



## சசு. பெருங்கௌசிகனார்

குறிஞ்சி :

இஃது, இற்செறிப்பிற் பிற்றைஞான்று தலைமகன் குறியிடத்துவந்து சொல்லியது.

எ – து, தலைமகன் பகற்குறிவந்தொழுகுநாளுள் யாதொரு காரணத்தாற் பிரிதலும் அவ்வழி வேறுபட்ட தலைவியின் வேறுபாடறிந்த செவிலி அவளை இற்செறித்தபின் மற்றைநாட் குறியிடத்து வந்த தலைவன் தன் நெஞ்சை நோக்கி நீ மலைநாடன்மகளை முன்னரே கருதித்துய்த்து மகிழாமல் மனைவயிற்செறிக்கப்பட்ட பின்பு கருதிய நின்னாலோ அவள் அறியத்தக்கவளென வருந்திக் கூறுகிற்பது.

பொருவில் ஆயமோ டருவி யாடி
நீரலைச் சிவந்த பேரமர் மழைக்கண்
குறியா நோக்கமொடு முறுவல் நல்கி
மனைவயிற் பெயர்ந்த காலை நினைஇய
நினக்கோ அறியுநள் நெஞ்சே புனத்த
நீடிலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்
கொழுங்குரல் கோடல் கண்ணிச் செழும்பல
பல்கிளைக் குறவர் அல்கயர் முன்றில்

குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய
பன்மர உயர்சினை மின்மினி
விளக்கத்துச்

செல்மழை யியக்கங் காணும்
நன்மலை நாடன் காதன் மகளே.

**உரை:**—நெஞ்சே! கொல்லையிலுள்ள நீண்ட இலையையுடைய முற்றிய கதிரைத் தாங்கமாட்டாமே சாய்ந்த தினையின் வளைந்த தாள் நிமிர்ந்து நிற்குமாறு அவற்றின் கொழுவிய கதிர்களைக் கொய்துகொண்டு போதலைக் கருதிச் செழுவிய மிக்க பல கூட்டமுடைய குறவர்கள், சிறார் கூடித் தங்கி விளையாட்டயர்கின்ற முன்றிலின்கணிருந்து குடம்போன்ற காயையுடைய ஆசினிப்பலாவையுடைய தோட்டத்தில் நீண்ட பலவாய மரங்களினுயர்ந்த கிளைகளிலுள்ள மின்மினியை விளக்கமாகக்கொண்டு விசும்பிற் செல்லுகின்ற மழைமுகிலி னியக்கத்தை யறியாநிற்கும் நல்ல மலைநாடனது அன்புள்ள புதல்வி, ஒப்பில்லாத் தோழியர் கூட்டத்துடன் அருவியினீராடி அங்கு நீரான் அலைக்கப்படுதலாலே சிவந்த பெரிய அமர்த்த குளிர்ச்சியையுடைய கண்களின் குறிக்கப்படாத பார்வையையும், புன்னகையையும் நமக்குத் தந்து தனது மனையிடத்துச் சென்றுவிட்டபிற்பாடு கருதிவந்த நின்னாலோ அவளறியத்தக்காள்? முன்னரேயன்றோ கைப்பற்றிக்கொண்டிருக்கவேண்டும்? எ - று.

கால் - தாள். குரல் - கதிர். இயக்கம் - சஞ்சாரம். நினக்கு - உருபு மயக்கம். இதனால் ஆண்டுப்போந் தின்பந்துய்த்தாயில்லை; பின்னர்வந்து புலம்புதி யென்றவாறு. குறவர் தினைகொய்தலைக் கருதி யுறையு முன்றி லென்னுங் குறிப்பால் தினைகொய்யப்பட்டதும் தலைவி பின்னர்ச் சுனையாடி மனையிற்புக்கதுங் கூறியவாற்றால் இற்செறிப்புண்ட பின்னர்த்

மூலமும் உரையும்

௫௩

தலைவன் கூற்று நிகழ்ந்ததெனக் கூறினல் மனையிற்புக்கபின் இரவுக்குறி வேண்டற்பாற்றேயன்றி யிதுநிகழாதெனவும், அலரானும் பிறவற்றானு மறிந்துழிச் செவிலி இற்செறிக்குமெனவும், அவ்வயின் இக்கூற்று நிகழ்ந்ததெனவுங் கூறிவிடுக்க.

துய்க்குந்தோறும் புதுமை பயத்தலின் முன்பு நுகர்ந்தன கனவே போலுமெனக் கருதித் தான் துய்த்திலனேபோலக் கூறினான்; நோக்கும் முறுவலுமட்டுமே நல்கினாளென்றமையின்.

உள்ளுறை :—குறவர் மின்மினியை விளக்காகக் கொண்டு மழையியக் கத்தை நோக்கியிருத்தல்போல நீயும் தோழிகூற்றால் தலைவியி னியக்கத் தைக் காண முயலுகின்றனைபோலு மென்றதாம். மெய்ப்பாடு - பிறன் கட்டோன்றிய அவலம்பற்றிய இளிவரல். பயன் - அயாவுயிர்த்தல். (சச)

சரு ......................

நெய்தல்: இது, குறைவேண்டிய தலைவனைத் தோழி சேட்படுத்தது.

எ - து, பாங்கியிற் கூட்டத்துத் தன்குறை கூறிச்சென்றிரந்த தலை வனைத் தோழி நோக்கி நீ உயர்குலத்தரசன் மகனாதலின் தாழ்ந்த பரதவர் குலத்தாளை மணக்கற்பாலையல்லை, எமக்கு நலன் என்ன வேண்டிக் கிடந்தது? நாற்றத்தேமாகலின் அகன்றுநில்; எம் வாழ்க்கை நும்மோ டொத்ததன்றெனக் குலமுறை கூறி மறுத்துச் சேட்படுத்தாநிற்பது.

சேட்படுத்தலென்பது - தோழியானவள் தலைமகளது பெருமையும் தனது முயற்சியினருமையும் தோன்றுதல் காரணமாகவும், இவ்வளவருமை யுடையாள் இனி நமக்கு எய்துதற் கருமையுடையாளென இக் களவுப் புணர்ச்சி நீட்டியாது விரைய வரைந்துகோடல் காரணமாகவும், தலை மகனுக் கியைவதை மறுத்துக் கூறாநிற்பது.

இவளே, கானல் நண்ணிய காமர்

சிறுகுடி

நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு

மீனெறி பரதவர் மகளே

நீயே, நெடுங்கோடி

நுடங்கும் நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே
நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஒப்பும் எமக்குநலன் எவனோ
புலவு நாறுதும் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரில் செம்மலு முடைத்தே.

உரை :—நின்னாற் காதலிக்கப்படு மிவள்தான், கடற்கரைச் சோலையிற் பொருந்திய அழகிய சிறுகுடியின்கண்ணே யிருக்கின்ற, நீலநிறத்தை யுடைய பெரிய கடலுங் கலங்குமாறு அதன்மேற் சென்று வலைவீசி மீனைப் பிடிக்கின்ற பரதவர் புதல்விகண்டாய்; நீதானும் நெடிய கொடிகள் காற்றுலசைந்து நுடங்குங் கடைத்தெருக்களையுடைய பழைய ஊரின்கணுள்ள



கடிய செலவினையுடைய தேரையுடைய செல்வமன்னனது காதலிற் பெற்று வளர்த்த புதல்வனாயிரா நின்றனை; ஆதலிற் குலத்துக்கே பொருத்த மில்லை ; அங்ஙன மணப்பதாயினும், நிணத்தையுடைய சுறாமீனை யறுத்திட்ட தசைகளைக் காயவைத்தல்வேண்டி வெயிலிற்போகட்டு அத்தசைகளைக் கூட்டமாகிய காக்கைகள் கவராதவாறு அவற்றை ஓட்டிப் பாதுகாக்கின்ற எமக்கு நின் சிறந்தநலந்தான் யாது வேண்டிக்கிடந்தது? ஒன்றும் வேண்டா ; சுறாநிணத்தைத் தடிந்து பரப்புதலானே யாம் புலவு நாற்றம் நாறுகின்றேம்; இந் நாற்றம் நீ பொறாயாதலின் எம்மருகில் வாராதேகொள் ; அகன்றுபோய் நிற்பாய்மன் ; கடனீரை விளைவயலாகக் கொள்ளுகின்ற எமது சிறிய நல்ல வாழ்க்கையானது நும்மோடொக்க உயர்வுடைத்தன்று ; எம்போன்ற பரதவரில் நின்போன்ற செல்வமாக்களையும் எங்கண்மர புடைத்தாயிராநின்றது; எ - று.

புள் - காக்கை.

கடலைக் கலக்கும் வன்மையரென்றது எமர் மூர்க்கராதலின், நின்னைக் காணின் ஏதமிழைப்பரென அஞ்சியச்சுறுத்தியதாம். மீனெறிவார் மகள் என்றது இரக்கமின்றி மீனையெறிந்து கொல்லும் பரதவர்மகளாதலின் நீ படுந்துன்பத்துக் கிரங்காளெனக் கூறியதாம். உணக்கல் வேண்டிப் புள்ளோப்புவே மென்றது நீ இங்ஙனம்வரி னுடம்பட வொட்டாது போக்குவேமென்றதாம். இது தோழி தனது காவலொடு மாறுகொள்ளாமை கருதியென்க. புலவு நாறுதுமென்றது எம்போலப் புலவு நாற்றத் தொடுவரின் இமையுமென்றதாம்; இது, முன்பு கூறியவற்றைக் கேட்ட தலைவ னாற்றுகை, அவனாற்றுதல் வேண்டிக் கூறப்பட்டது. செலநின்றீ யென்றது குறியிடமிது தகுதியுடையதன்றென மறுத்ததாம்.

இதனுட் 'கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே' என்றது அவன் தன்னை அரியனாகச் செய்துகொண்டு இவர்களைச் சின்னாள் மறந்திருத்தலானே அவனை இகழ்ச்சிக் குறிப்பாற் றலைவனாகக் கூறினளெனவுமாம். **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - செவ்விபெறுதல்.

சு௪௫. .......................

**பாலை :** இது, பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது.

எ - து, பொருள்வயிற்பிரியுந் தலைமகனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனை நோக்கி ஐயனே! இவள் கிடந்து வருந்தாநிற்ப யாம் பொருள்வயிற்பிரிதும் என்ற நும்மைத் தெருட்டி இளமைதருமையும் அன்பினதகலமுங் காட்டற்கியலுமோ, ஆதலின் நீயிரே பேணற்பாலிரென மறுத்துக் கூறாநிற்பது.

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்

காணீர் என்றலோ அரிதே யதுநனி
பேணீர் ஆகுவிர் ஐயவென் தோழி
ரு. பூணணி யாகம் புலம்பப் பாணர்
அயிர்ப்புக்கோண் டன்ன கோன்றையங்
தீங்கனி
பறையறை கடிப்பின் அறையறையாத்
துயல்வர

மூலமும உரையும
ருரு

வெவ்வளி வழங்கும் வேய்பயில்
அழுவத்து
எவ்வ மிகூஉம் அருஞ்சுரம் இறந்து
௧௦. நன்வாய் அல்லா வாழ்க்கை
மன்னுப் பொருட்பிணிப் பிரிதும்யா
மெனவே.

உரை:—ஐயனே, எனது தோழியின் கலன்களணிந்த மார்பகம் தனியே கிடந்து வருந்தாநிற்பக் கொன்றையி னினிய சுவையையுடைய கனிகள், பாணர் ஐயங்கொள்ளும்படியவாய் அவர் தமது பறையை முழக்குங் குறுந்தடிபோலப் பாறையில் விழுமாறு கிளைகள் மிகத் துவண் டாடக் கொடிய காற்று வீசாநின்ற மூங்கில்மிக்க இடத்தையுடைய துன்ப மிக்குள்ள செல்லுதற்கரிய சுரத்திற்போய், நன்மைவாய்த்தவில்லாத வாழ் விற்குரிய நிலையற்ற பொருளீட்டுதலிற் பிணித்தவுள்ளத்தோடு 'யாம் பிரிதும்' என்று நீயிர் கூறுதலானே இவ்வுலகத்து நாள்தோறும் வில்லி னின் றெய்யப்படுங் கணை சென்று குறியிலே தைக்கப்படுமளவையின் அக் கணை செல்லுநிழல் எவ்வண்ணம் விரைவிற் சென்றழியுமோ அவ்வண்ணம் இன்பமும் இளமையுங் கழியாநிற்கும், அவற்றைக் கண்டிலீரோவென்றல் அரிதேயாகும்; அவை, யாவர்க்குந் தெரிந்திருத்தலாலே; ஆதலின் அந் நிலையாமை யொன்றனையே விரும்பி ஆராய்ந்து அவ்வின்பமும் இளமை யுங் கழியுந்துணை இவளைப் பிரியீராய் உறைவீராக; எ - று.

புலம்பு - தனிமை. கடிப்பு - குறுந்தடி. மன்னுமை - நிலையாமை.

இன்பத்தா விளமைசிறத்தலின் இன்பத்தை முற்கூறினள். இளமையு மின்பமும் வாளா கழியப் பொருள்வயி னுள்ளந்துரப்பலால், நன்வாய்அல்லா வாழ்க்கையென்றாள். இளமையைக் கெடுத்தபின் பொருளாற் பயனில்லை யாதலின் மன்னுப்பொருளென் றிகழ்ந்துகூறினள். கைக்குவருமின்பத்தை விட்டு நிலையாப் பொருளீட்டுதிரோ வென்றாளுமாம். **மெய்ப்பாடு** - பெரு மிதம். **பயன்** - செலவழுங்குவித்தல். (சசு)

## சஎ. நல்வெள்ளியார்

**குறிஞ்சி :**

இது, சிறைப்புறமாகத் தோழி தலைமகளுக் குரைப்பாளாய்ச் சொல்லியது.

எ - து, பிரிந்து நீட்டித்துச்சென்ற தலைவன் மீண்டுவந்து சிறைப்புறத்தானாதலை யறிந்த தோழி, அவன்கேட்டு விரைய வரைந்துகொள்ள வேண்டித் தலைவியைநோக்கி அன்னையெடுத்த வெறி நின் பசலையைத் தீர்த்திலதே, இதனைக் கானகநாடனுக்குச் சொல்லுதுமோவென உள்ளுறையால் தாங்கள்படுந் துன்பமுஞ் சேரக் கூறுகிற்பது.

பெருங்களிறு உழுவை அட்டேன இரும்பிடி
உயங்குபிணி வருத்தமோடு இயங்கல்செல்லாது
நெய்தற் பாசடை புரையும் அஞ்செவிப்
பைதலங் குழவி தழீஇ ஒய்யென
அரும்புண் ணுறுநரின் வருந்தி வைகுங்
கானக நாடற் கிதுவென யானது



கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து
அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி
வெறியென உணர்ந்த உள்ளமோடு மறியறுத்து
அன்னை அயரும் முருகுநின்
பொன்னேர் பசலைக் குதவா மாறே.

**உரை** :—தோழீ! தலைவனைப் பிரிந்ததனாலாகிய நின் மெய்வேறுபாட்டைப் பிறிதொன்றாகக் கருதித் தெய்வத்தான் அறியப்படுகின்ற கழங்கில் அம்மாறுபாட்டைக் காட்டுதலாலே வெறியெடுத்தவழித் தீருமென்றறிந்த வுள்ளத்துடனே யாட்டையறுத்து அன்னையால் வணங்கப்படாநின்ற முருகவேள் நினது பொன்போன்ற பசலையைப் போக்குதற்குப் பயன்படாமையினாலே புலியானது பெரியகளிற்றியானையைக் கொன்றதேயென்று அதன் கரிய பிடியானை வாடியதுன்பத்தொடும் வருத்தத்தொடும் இயங்கமாட்டாமே நெய்தலின் பசிய இலையையொக்கின்ற அழகிய செவியையுடைய துன்புற்ற தன் கன்றினை யணைத்துக்கொண்டு விரைவாகத் தீர்த்தற்கரிய புண்ணுற்றாரைப் போல வருத்தமுற்றிருக்குங் கானகநாடனை நெருங்கி 'நீதலையளிசெய்யாமை காரணமாக இப்பசலை தோன்றிற்றுக்கண்டாய்,' என்று யான் அதனைக்கூறின் அதனால் ஏதேனுங் குற்றப்பாடுளதாமோ? உளதாயிற் கூறிக்காண்; எ - று.

உழுவை - புலி. அஞ்செவி - அகஞ்செவியுமாம். பைதல் - வருத்தம். ஒய்யென - விரைவாக. கோட்டம் - மாறுபாடு. காட்டி - காட்டவெனத் திரிக்க. முருகு - பண்பாகுபெயர். கழங்கு - கழற்சிவித்துப் பலவற்றை முருகன்முன் போகட்டு வேலன் தன்தலையில் ஆடைசூடிக் கையிற் பல தலைகளிற் சிறுபைகளைக்கட்டிய கோலொன்றேந்தி அக்கோலாற் கழங்கு வித்துக்களை வாரியெடுப்புழிக் குறிப்புக்காணுகின்ற ஒருவகைக்குறி. இதனை "அருஞ்சுரம்" என்ற (அகம்-கஅ௬) செய்யுளாலறிக.

அன்னை வெறியெடுத்தாளெனத் தலைவன் பிரிந்ததனானுய தலைவியின் வேறுபாடுகூறினாள். வெறியெடுப்புப் பசலையைத் தீர்த்திலதென்றதனால் அவனுக்குப் பசப்புத்தோன்றினமை யறிவுறுத்தினாள். நாடனுக்குச் சொல்லுவாமென இதுகாறும் அவன் தம்மைக் கருதாதிருந்தமை யறிவுறுத்தினாள்.

**உள்ளுறை** :—களிற்றைப் புலிகொன்றதனாலே பிடியானை தன்கன்றொடுநின்று உயங்காநிற்குமென்றது நம் பெருந்தகைமையை அலர்கெடுத்தலாலே வருந்தி யான் நின்னுடன் சேரநின்று உயங்காநிற்பே னென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - வரைவுடன்படுத்தல். (சஎ)

## சஅ. பாலைபாடிய பெருங்கடுங்கோ

**பாலை** : இது, பிரிவுணர்த்திய தலைவற்குத் தோழி

சொல்லியது.

எ - து, கற்பினுட் பிரிவுணர்த்திய தலைவனைத் தோழி நோக்கி முன்பு நீயிர் தலைவியை உடன்கொண்டு வரும்நெறியில் எதிர்த்தாரைப் போர் தொலைத்துச் செல்லுங்காலை என் ஐயன்மார் பின்தொடர்ந்துவருதலும் எம்மைக் கைவிட்டு மறைந்துகொண்டகாடு இப்பொழுதும் என்கண்ணெதிரி விருப்பதுபோலச் சுழலாநிற்கும்; அதனுள் எங்ஙனம் ஏகற்பாலீரென மறுத்துக் கூறாநிற்பது.

## மூலமும் உரையும்

௫௭

அன்றை யனைய வாகி இன்றுமெம்
கண்ணுள் போலச் சுழலும் மாதோ
புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நினையத் தோன்றிப்
புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடினென இடிக்குங் கோற்றொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது
அமரிடை உறுதர நீக்கிநீர்
எமரிடை உறுதர ஒளித்த காடே.

உரை:—புல்லிய புறவிதழையுடைய கோங்கினுடைய மெல்லிய இதழ்மிக்க குடைபோன்ற மலர்களெல்லாம் வைகறைப்பொழுதிலே விசும்பின்கண் விளங்குகின்ற மீன்களாமெனக் கருதும்படி தோன்றுகின்ற காடெங்கும் அழகமைந்த மலர்மணம்வீசும் கன்னெறியிலே 'கிடின்' என்னும் ஓசையுண்டாக மோதாநின்ற அழகிய வீரவளையணிந்த மறவர் கூர்மை பயின்ற அம்பினாற்செய்யுங் கொடுந்தொழிலையுடையராய் அஞ்சாது நும்பால் அமர்செய்ய வந்தபொழுது அவரை வென்று போக்கி, அப்பால் எம் ஐயன்மார் எங்களைத்தேடிப் பின்தொடர்ந்துவருதலும் அதனை நோக்கிய நீயிர் எம்மைக் கைவிட்டுத் தமியராய்ச்சென்று மறைந்து கொண்டகாடு, (க) அற்றைநாளில் அத்தன்மையவாய்த் தோன்றியவன்றி, இற்றைநாளினும் எம் கண்ணெதிரிருத்தல்போலச் சுழலாநிற்கும்; அக்காட்டின்கண் எங்ஙனம் ஏகற்பாலீர்? எ - று.

புறவு - காடு. வடி - கூர்மை. தொடி - வீரவளை.

ஆறலைகள்வராகிய மறவர் அமரைநீக்கியென்றது அவர் யாதும் தலைவற்குப்பகைமையுடையரல்லராதலின் அவரைக்கொல்லாமல் வென்றுநீக்கினமை கூறுவாள்போன்று தலைவனது அருளுடைமைகூறினாள். அத்தகைய அருளுடையீர் நும் வரைப்பினளாய இவளைக் கைவிடற்பாலீரல்லீரென்றதாம். மறைந்தமைகூறியது போர்தொடங்கின் எம்பெருமானுக்கு ஏதம்நிகழுமோவெனக் கவன்று தலைவி யிறந்துபடுமாதலின், அவள் கவலாதவாறு மறைந்தமை கூறியதாம்.

**இறைச்சி**:—கோங்கம்பூ மலர்ந்து காடு அழகுகொண்டவென்றது நீயிர் தலைவிபால் முகமலர்ந்துறைதலால், இல்லறம் அழகாக நடைபெறுகின்றதென்றதாம். **மெய்ப்பாடு** - அச்சத்தைச்சார்ந்தபெருமிதம். **பயன்** - செலவழுங்குவித்தல். (சுஅ)

## சுகூ. நெய்தல்தத்தனார்

**நெய்தல்:** (க) இது, தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது.

எ - து, தலைவன் இரவில்வந்து கூடுதற்கு உடன்பட்டதோழி, தலைமகளை நின்வருத்தந்தீரத் தலைவனூர்க்குப்போய் அவனிடத்து நமது துறையின் தனிமையையும் எமர் அங்குவாராது தாழ்த்ததனையுங் கூறினல் குற்றமுளதாமோவென உள்ளுறையால் அவள் தலைவனைக் கூடுதற்கு இரவுக்குறி விரும்பும்படி கூறுகிறபது.



(உ)

சிறைப்புறமாகத் தோழி ஆற்றாமை வியந்ததூஉம்ஆம்.

எ - து, தலைவன்வந்து ஒருசிறைப்புறத்தானுக அவன்கேட்டு விரைய வரையுமாற்றானே, தலைவியினாற்றாமைக்கு வியந்து கூறுவாள்போன்று துறை தனிமையுடைத்தென்று அவனூர்க்குச்சென்று கூறி யழைத்து வருதுமோவெனக் கூறுகிறபது.

படுதிரை கொழீஇய பால்நிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறைபுலம்
பின்றே
முடிவலை முகந்த முடங்கிறுப் பாவைப்
படுபுள் ஓப்பலிற் பகன்மாய்ந் தன்றே
கோட்டுமீன் எறிந்த உவகையர்
வேட்டமடிந்து
எமரும் அல்கினர் ஏமார்ந் தனமெனச்

சென்றுநாம் அறியின் எவனோ தோழி
மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழுந்
தெண்கடற் சேர்ப்பன்வாழ் சிறுநல்
லூர்க்கே.

உரை :—தோழீ! பரதவர்முன்றிலின்கணுள்ள பலர்கூடுகின்ற மன்றம்போலமைந்த புன்னையின் கரிய கிளைகளிலுள்ள நறியமலர் அயலிலுள்ள தாழைமடலோடுகூடி நறுமணம்வீசாநிற்கும் தெளிந்த கடற்றுறைவன் வாழ்கின்ற சிறிய நல்ல ஊரின்கட்சென்று (க) அவன்பால், 'கடலிலுள்ள பெரிய அலைகளாலே கொழிக்கப்பட்ட பால்போலும்வெளிய நிறத்தை யுடைய எக்கராகிய மணல்மேட்டில் விளையாட்டயரும் வளையுடைக்கையராய பரத்தியர் யாவரும் தத்தம் மனையகத்துத் துயில்கின்றமையாலே துறை தனிமையுடையதா யிராநின்றது; முடியிட்ட வலையால் முகக்கப்பட்ட முடங்குதலையுடைய பாவைபோன்ற இருமீன்களைக் காயவிட்டு அவற்றில்வந்து விழுகின்ற காக்கைகளை ஓப்புதலானே பகற்பொழுது கழிந்துவிட்டது; எம்முடைய ஐயன்மாரும் திரண்ட கோடுகளையுடைய சுறாமுதலிய மீன்களைப் பிடித்தலானாகிய உவகையராய்ப் பின்னும் வேட்டைமேற்செல்லாதொழிந்துத் தம்தம் மனையகத்தே தங்கிவிட்டனர்காண்; யாமும் நீ இல்லாமையால் மயக்கமுடையேமாய் இராநின்றேம்' என்று கூறி அவன்கருத்தை ஆராய்ந்தறியின் அதனாலேதேனுங் குற்றப்பாடுளதோ? உளதாயிற் கூறிக்காண்; எ - று.

அல்குதல் - தங்குதல். எமார்த்தல் - மயங்குதல். மன்றம் - சபை.

இருமீன் கைமுதலாய உறுப்புக்கள்போலு முள்முதலியவற்றை யுடைத்தாகிப் பாவைபோறலிற் பாவையென்றார். 'துறைபுலம் பின்று' என்றதனால் அந்நெறியே வரற்பாலனெனவும், முன்றில் தாழையும் புன்னையுங் கமழுமென்றதனால் நமது முன்றிலின்கணுள்ள தாழைசூழ்ந்த புன்னையின் கீழிடமே கூடுதற்காகுங் குறியிடமெனவும், எமரும் அல்கினரென்றதனால் தமரால் ஏதநிகழ்த்தப்படானெனவும் தலைவி இரவுக்குறியில் விருப்பமுறக் கூறினளாயிற்று.

உள்ளுறை :—புன்னைமலர் தாழைமடலோடுசேர மணங்கமழாநிற்கு மென்றதனால், நீ தலைவனொடு முன்றிற் சோலையுட்கூடி இன்பந்துய்ப்பா

மூலமும் உரையும்

ரு௪

யாக என்றதாம். மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த இளிவரல். பயன் - தலைமகளை இரவுக்குறிநயப்பித்தல். தலைவியின் ஆற்றாமை வியந்ததற்கும் ஏற்றபடி உரைகொள்க. (சக)

## ரு௦. மருதம்பாடிய இளங்கடுங்கோ

**மருதம் :** இது, தோழி பாணற்கு வாயின்மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிவின்கண்ணே சிறைப்புறத்தானாகிய தலைமகனால் விடுக்கப்பட்டு வாயில்வேண்டிச்சென்ற பாணனை மறுக்கின்ற தோழி அத்தலைமகன் கேட்குமாறு தலைவியைநோக்கி ஊரன் துணங்கையாடுங் களவைக் கைப்படுக்க யான்சென்றபொழுது அவன் மகளிர்வடிவந்தாங்கித் தெருக்கடைவரக்கண்டு வினவ அவன் தான்மகளிரெனக் கொள்ளுமாறு கூறிப்போயினான் ; என்னறியாமையால் யானும் அவனை இகழ்ந்துவந்தேனெனக் கூறுநிற்பது.

அறியா மையின் அன்னை யஞ்சிக்

குழையன் கோதையன் குறும்பைந்

தொடியன்

விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல
நெடுநிமிர் தெருவிற் கைபுகு கொடுமிடை
நொதும லாளன் கதுமெனத் தாக்கலின்
கேட்பார் உளர்கொல் இல்லைகொல் போற்றென
யாணது பசலை யென்றனன் அதனெதிர்
நாணிலை எலுவ என்றுவந் திசினே
செறுநரும் விழையுஞ் செம்ம லோனென
நறுநுத லரிவை போற்றேன்
சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே.

உரை:—அன்னாய், நறியநுதலையுடையதலைவீ! என் அறியாமையாலே நின்னையஞ்சிக் குழைபெய்து மாலைசூடிக் குறிய பசிய தொடியணிந்தவனாகி விழாக்களத்து அவன் துணங்கையாடுதலைக் கையகப்படுப்பேமாகி யாங்கள் செல்லாநிற்கையில், நமக்கு அயலானாகிய அவன் தான் அவ்வணிகளை யுடையனாய் நெடிய நிமிர்ந்த தெருமுடிந்த வேறொரு வழிவந்துபுகுந்த வளைந்த விடத்தே விரைவின் வந்து எதிர்ப்பட்டானாக, 'இங்ஙனம்செய்யும்நின்னைக் கேட்போருண்டோ இல்லையோ? அறிந்துகொள்' என்று யான்கூற அவனும் அவ்வறியாமையுடையான்போல என்கட் பசலை அழகுடையதென்றனன்; அதனுக்கெதிர்மொழிகொடுத்தற்காக அவன் பகைவராலும் விரும்பப்படுஞ் செம்மாப்புடையானெனக்கொண்டு வணங்கிச்செல்லாது என் சிறுமைபெரிதாகலான் ஆராயாதே துணிந்து 'எலுவ, நீ நாணுடையையல்லை' என்று கூறிவந்தேன்; எ - று.

நொதுமலாளன் என்றது பாணன்கேட்டு நீங்குதற்கு. பசலை யாணது என்றது தலைவன் தன்னைப் பெண்பாலொருத்தி இவளெனத் தோழி கருதுதற்பொருட்டு. துணங்கை ஆடியதையும் மகளிர் வடிவம்பூண்டதையுங் கூறியது சினமாறுளெனப் பாணன் கருதுதற்பொருட்டு. தலைவியின்



முன்னிலையில் தலைவனது கொடுந்தொழிலைக் கூறுதல் வாயில்கட்கில்லையாயினும், புலந்த தலைவியை அவன்கூடுதற்கு மருந்தாயமையப்பெறுதலில் தோழிகூற்றமைந்ததென்க; (தொ-பொ-சூ-௧௬௬) தலைமகன் சிறைப்புறத்தானாகக் கூற்றமைந்ததற்குவிதி (தொ-பொ-சூ-௧௭௧) **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்**-வாயின் மறுத்தல். (௫௦)

# ௫௧. பேராலவாயர்

**குறிஞ்சி :**

இஃது, ஆற்றது ஏதமஞ்சி வேறுபட்டாள் வெறியாடல் உற்றவிடத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, அறத்தொடு நிற்றலின்கண்ணதாகிய வெறியெடுக்கும் பொழுது சிறைப்புறமாகத் தலைமகன் வந்திருப்பதையறிந்த தலைவி, அவன் கேட்குமாற்றானே தோழியை நோக்கி மழை இடியொடு பெய்யாநின்றதெனத் தான் நெறியினது ஏதமஞ்சியதும், படிமத்தான் வந்ததனாலே முச்சி அளித்தலமையாதென வெறியயர்வதுஞ்சொல்லி இங்ஙனம் வெறியெடுத்தலானே, நமது தலைவன்திறத்து நாம் செயற்பாலது யாதென அழுங்கிக் கூறுநிற்பது.

யாங்குச்செய் வாங்கோல் தோழி, யோங்குகழைக்
காம்புடை விடரகஞ் சிலம்பப் பாம்புடன்று

ஓங்குவரை மிளிர வாட்டி வீங்குசெலல்
கடுங்குரல் ஏறோடு கனைதுளி தலைஇப்
பெயலா னாதே வானம் பெயலொடு
மின்னுநிமிர்ந் தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி அளிப்பா னாதே
பெருந்தண் குளவி குழைத்த பாவடி
இருஞ்சே றாடிய நுதலகொல் களிறு
பேதை ஆசினி ஒசித்த
வீதா வேங்கைய மலைகிழ வோற்கே.

உரை:—தோழீ! மேகமானது உயர்ந்த அடித்தண்டினையுடைய மூங்கில்கள் நிரம்பிய மலைப்பிளப்பிடமெல்லாம் எதிரொலியெடுப்பப் பாம்புகள் வருத்தமுற்று உயர்ந்த துறுகல்மீது புரளுமாறு துன்புறுத்தி விரைந்தசெலவையுடைய கடிய முழக்கமிக்க இடியேற்றுடனே மிக்கதுளியைப் பெய்யத்தொடங்கி அப்பெயலை நிறுத்துகின்றிலது; அத்தகைய பெயலைக்கண்டு ஆற்றாது ஏதம்அஞ்சி வேறுபட்ட என்னை உற்றதறியாது நற்றிறம்படர்ந்த அன்னை வெறியெடுத்தலும் அதற்காக மின்னலைச்செய்தமைத்தாற்போன்ற வேலைக்கையிலுடைய படிமத்தான் வந்தானாதலின் இனிப் பின்னிவிடுத்தற்குரிய கொண்டையிற் பூவைக் குலையாது காத்தலு மரியதாயிராநின்றது; ஆதலாற் பெரிய குளிர்ச்சியையுடைய பச்சிலைமரத்தை முறித்துழக்கின பரந்த அடிகளையுடைய கரிய சேற்றையப்பிய நெற்றியையுடைய கொல்லவல்ல களிற்றியானை அறியாமையால் ஆசினியைமுறித்து மலருதிர்ந்து பரவிய வேங்கைமரத்தின்கீழே தங்காநிற்கும் மலைகிழவோனுக்கு யாம் என்ன செய்யமாட்டுவேம்? கூறாய்; எ - று.

யாங்கு - என்னவண்ணம். கழை - மூங்கிலின் துண்டு. காம்பு - மூங்கில். குளவி - காட்டுமல்லிகையுமாம். மிளிர்தல் - புரளுதல். இடிமோதி மழைபெய்யும் நெறியில், காதலன்யாங்ஙனம் வருவனோவென்ற ஏக்கத்தினால் உடம்பு வேறுபட்டதை அன்னை முருகணங்கெனக் கொண்டனளென்க.

வேலன் வருதலும் தலைவியை முன்னிறுத்தி அவள் கூந்தலிற் பூவையெடுத்துப்போகட்டுப் பரவுக்கடன்கொடுத்தல் இயல்பாதலின் முச்சியளிப்பானோதென்றாள்; இதனை "நெடுவேலேந்திய நீயெமக் கியாஅர், தொடுதலோம்பென அரற்றலும் அரற்றும், கடவுள் வேங்கையுங் காந்தளு மலைந்த, தொடலைக் கண்ணி பரியல மென்னும்" (தொல்-பொ-சூ-கசுடு, மேற்கோள்.) என்பதனாலுமுணர்க.

**உள்ளுறை:**—குளவியைக் குழைத்த களிறு தலைவியை நலனுண்டு வாடவிட்ட தலைவனாகவும், அது சேற்றை நெற்றியிலணிந்தது ஊரார் தூற்றும் பழிச்சொல்லைத் தலைவன் மேற்கொண்டதாகவும், அறியாமையால் ஆசினியை ஒசித்தது அவன் அறியாமையால் இதுகாறும் வரைந்தெய்து நெறியைக் கைவிட்டதாகவும், களிறு வேங்கையின்கீழே தங்கியிருப்பது தலைவன் ஒருசிறைப்புறமாகவந்து தங்கியிருப்பதாகவுங்கொள்க. இது வினையுவமப் போலி. **மெய்ப்பாடு**-அழுகையைச்சார்ந்த அச்சம். **பயன்** - அயாவுயிர்த்தல். (௫௧)

## ௫௨. பாலத்தனார்

**பாலை :** இது, தலைமகன் செலவழுங்கியது.

எ - து, பொருள்வயிற்பிரியுந் தலைமகன் பிரிதற்கு உள்ளம் எழானாகி நெஞ்சைநோக்கி நெஞ்சமே! யாம் இவளது முயக்கத்தைக் கைவிடக் கருதுகில்லேம்; நீதானும் முயற்சியை மேற்கொண்டு பிரிந்துபோதலைக் கருதியமைகின்றிலை; இவளது முயக்கத்தினும் பொருள் மென்மையதாதலின் நீயே போவாயெனக் கூறிச் செலவழுங்காநிற்பது.

[illegible] மாக்கோடி அதிரல் பூவொடு பாதிரித்
தூத்தகட்டு எதிர்மலர் வேய்ந்த கூந்தல்
மணங்கமழ் நாற்றம் மரீஇ யாமிவள்
சுணங்கணி ஆகம் அடைய முயங்கி

வீங்குவர்க் கவவின் நீங்கல் செல்லேம்
நீயே, ஆள்வினை சிறப்ப எண்ணி நாளும்
பிரிந்துறை வாழ்க்கை புரிந்தமை
யலையே
அன்பிலை வாழியெம் நெஞ்சே
வெம்போர்
மழவர் பெருமகன் மாவள் ஓரி
கைவளம் இயைவ தாயினும்
ஐதேகு அம்ம இயைந்துசெய்
பொருளே.

உரை:—எமதுநெஞ்சமே, கரிய கொடியையுடைய காட்டுமல்லிகைப் பூவுடனே தூய பொற்றகடுபோன்ற பாதிரிமலரையுஞ் சேர எதிரெதிர் வைத்துத் தொடுத்துக்கட்டிய மலர்மாலையைச் சூடிய கூந்தலின் மணங்கம

மும் நாற்றத்தைப்பெற்று யாம் இவளுடைய சுணங்கமைந்த மார்பிற் கொங்கையை ஒருசேர அணைத்துக்கொண்டு மிக்க இன்சுவையையுடைய இவள் கையாலணைத்திருத்தலினின்றும் நீங்கமாட்டுகிலேம்; நீதானும் முயற்சியை மேம்படக்கருதி நாள்தோறும் எம்மைப்பிரிந்து தனித்துறைகின்ற வாழ்வினைவிரும்பிச் சிறிதுபொழுதும் ஓய்கின்றனையல்லை; ஆதலின் நீ என் மாட்டு அன்பினையுடையையல்லைமன்; இங்ஙனமே நெடுங்காலம் வாழ்வாயாக; நீ உட்கொண்டு உடன்பட்டு ஈட்டும்பொருள்தான், வெய்ய போர் செய்யவல்ல போர்வீரர் தலைவணங்கிய சிறந்த கொடையையுடைய ஓரியென்பவனது கைவண்மைக்குப் பொருந்திய செல்வமே நீ ஈட்டும்பொருளாக நினக்குக் கிடைக்கப்பெறினும் அப்பொருள் இவளது முயக்கத்தினுங்காட்டிற் சிறந்ததன்று கண்டாய்; அது மிகமென்மையுடையதன்றோ? அதனால் வேண்டுமெனில் நீயே ஏகுவாய்; யாம் வாரகில்லேம்; எ - று.

கவவு - அகத்திடுவது. உவர் - இனியசுவை. அம்ம - வியப்பு. ஐது - மெல்லிது; நுண்ணிதுமாம். ஆள்வினை - முயற்சி. யாம்வாரகில்லேம் - குறிப்பெச்சம்.

உள்ளுதோறு மகிழ்ச்சிநல்குமுறுதியுடைய இவளின்பத்தினும் நிலைக்கும் வன்மையுடையதன்றென்பான் மெல்லிதென்றான். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - செலவழுங்கல்.

# ௩ரு. நல்வேட்டனார்

**குறிஞ்சி :**

இது, வரைவுநீட்டிப்பத் தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, வரையாது நீட்டித்த தலைமகன் ஒருகால்வந்து ஒருசிறைப் புறத்தானாதலை யறிந்த தோழி அவன் கேட்டு விரைய வரைந்தெய்துமாற்றானே தலைவியை நமது அன்னை நின்னோய் அகலுமாறு கான்யாற்றிலாடிவரக்கூறினாளாதலால் நங் களவொழுக்கத்தை அறிந்தாள்கொல் அன்றி அருளினாலேவினள்கொல் அவள்கருதியது யாதுகொல்லென மருண்டு கூறுகிறபது.

யானஃது அஞ்சினென் கரப்பவுந், தானஃது
அறிந்தனள் கொல்லோ அருளினள் கொல்லோ
எவன்கொல் தோழி அன்னை கண்ணியது
வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்
ஆர்கலி வானந் தலைஇ நடுநாள்
கனைபெயல் பொழிந்தெனக் கானக் கல்யாற்று
முளியிலை கழித்தன முகிழிண ரோடுவரு*
விருந்தில் தீநீர் மருந்து மாகும்
தண்ணென உண்டு கண்ணின் நோக்கி
முனியா தாடப் பெறினிவள்
பனியுந் தீர்குவள் செல்கென் றோளே.

(பாடம்) * முகிழ்மலரொடு வரு.

**உரை :** தோழீ! தலைமகன் கைவிடுதலானே நீ துன்புற்றிளைத்ததனை 'இன்னகாரணத்தால் நீதான் இங்ஙனமாயினை' என்று கூறாமல் யான் அஞ்சி அதனை மறைத்திருப்பவும் அன்னை என்னைநோக்கி 'ஆகாயத்தில் மிகவுயர்ந்த பெரிய மலைப்பக்கத்தில் மிக்க இடியோசையையுடைய மேகம் மழைபெய்யத்தொடங்கி நள்ளிருளில் மிக்க மழைபொழிந்ததனாலே, கற்கள் நிரம்பிய காட்டின்கணோடும் யாற்றிலே மரங்கள் காய்ந்த சருகுகளோடு கழித்தனவாகிய முகிழ்த்த பூங்கொத்துக்களையும் அடித்துக்கொண்டு வருகின்ற புதிய இனிய நீரானது இவளுக்குற்ற நோயைத் தீர்க்கு மருந்துமாகும்; அதனைக் குளிர்ச்சிபெறப் பருகி ஆண்டுள்ள காட்சிகளைக் கண்ணால் நோக்கி நீராட்டத்து வெறுப்பின்றி ஆடப்பெற்றால் இவள் மெய்யின் நடுக்கமுந் தீர்குவள்; ஆதலால் ஆங்குச் செல்வீர்களாக' என்று கூறினாள்; ஆதலின் அவள்தான் நமது ஒழுகலாற்றை முன்னமே யறிந்துவைத்தனள் கொல்? அன்றி அருளினாற் கூறினாள்கொல்? நம் அன்னைகருதியது வேறு யாதுகொல்? ஆராய்ந்துகாண்; எ - று.

முளியிலை - காய்ந்தசருகு. இணர் - பூங்கொத்து. மருந்து - காமநோய்க்கு மருந்து. பனி - அதனாலுண்டாய நடுக்கம்.

வரைவு நீட்டித்தமையால் இவையுண்டாயினவெனவும், அன்னையும் அறியலாயிற்றெனவே இற்செறித்து வெறியெடுக்குமெனவுந் தலைவன் கொள்ளும்படி கூறியவாறறிக. நோயுடைத் தென்றஞ்சி நீராடற்கு வெறாமே யாடுக வென்னுங்குறிப்பால் முனியாதாடப்பெறி னென்றாள். **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த அழுகை. **பயன்** - வரைவுகடாதல். ()

## நிச. சேந்தங்கண்ணனார்

### நெய்தல்: இது, காமமிக்க கழிபடர்கிளவி.

எ - து, இருவகைக் குறியானும் வந்தொழுகும் தலைமகன் இடையீடுபட்டு வாராதொழியக்கண்ட தலைவி வரைதல் வேட்கையளாய் வேட்கை பெரிதுஞ்சிறப்பச் சிந்தித்து நாரையை நோக்கி நாராய்! நும் துறைவனுக்கு யான் மாலைப்பொழுதில் வருந்துகின்றதனை அவனுணருமாறு சொல்லுதி யென இரந்துகூறாநிற்பது.

வளைநீர் மேய்ந்து கிளைமுதற் செலீஇ
வாப்பறை விரும்பினை ஆயினுந்
தூச்சிறை

௫.

இரும்புலா அருந்துநின் கிளையோடு சிறிதிருந்து
கருங்கால் வெண்குருகு எனவ கேண்மதி
பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை
அதுநீ அறியின் அன்புமார் உடையை
நோதுமல் நெஞ்சங் கொள்ளாது
என்குறை
இற்றுங்கு உணர உரைமதி தழையோர்
கோய்குழை அரும்பிய குமரி ஞாழல்
தெண்டிரை மணிப்புறந் தைவருங்
கண்டல் வேலிநும் துறைகிழ
வோற்கே.

உரை :—கரியகாலையுடைய வெளியநாரய், நீ நின் சுற்றமுதலாயவற்றோடு சென்று விளைந்த நீர்ப்பரப்பிலுள்ள இரையை யருந்தித் தாவிப் பறந்துவருதலை விரும்பினையாயினும் மிக்க புலவைத் தின்னுகின்ற தூய சிறகுகளையுடைய நின்சுற்றத்தோடு சிறிதுபொழுது ஈண்டுத் தங்கியிருந்து என்னுடைய சொற்களைக் கேட்பாயாக; சிறிய புல்லிய மாலைப்பொழுதானது எனக்குப் பெரியவருத்தஞ் செய்தலை உடையதாயிரா நின்றது; அதனை நீ அறியின் என்மாட்டுப் பெரிதும் அன்புடையையாதலால், வேறுபட்ட மனங்கொள்ளாமல் என்குறை இத்தன்மையதென்று, தழையுடுப்பவர் கொய்தற்குரிய குழைதழைந்த இளையஞாழல் தெளிந்த திரையின் கரியபுறத்தைத் தடவாநிற்குங் கண்டல்மரவேலிகளையுடைய நுங் கடற்றுறைச் சேர்ப்பனிடஞ் சென்று அவனுணருமாறு உரைப்பாயாக; எ - று.

புலம்பு - வருத்தம். வாப்பறை - தாவிப்பறத்தல்; வாவும் என்னும் செய்யுமென்னெச்சத் தீற்றுயிர்மெய்கெட்டு வலிக்கும்வழி வலித்தல் பெற்றது. ஆர் - அசை. மதிஇரண்டும் முன்னிலையசை. கண்டல் - நெய்தனிலத்திலுள்ளதொருமரம். எனவ, அ - விரித்தல்விகாரம்; எழுத்துப்பேறுமாம்; பின்னுள்ளோர் பன்மையுணர்த்தும் விகுதியென்ப. இது, அதுமுனிவின்மை.

சிறிதுபொழுதகத்துள்ளே தோன்றிமறையினும் அதனிடை ஆடவரில்வழி மகளிரை வருத்துந்தன்மை நோக்கிச் சிறுபுன்மாலையென்றாள். ஒன்று மறப்பினும் ஒன்று நினைப்பூட்டுமாதலிற் கிளையோடிருந்து கேட்டியென்றாள். ஞாழலந்தழை திரைப்புறந்தைவரு நாடனென்றது அவன் என்னைமுயங்கி முதுகைத்தைவர யான் புலம்பொழிவ னென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கச)

## ருரு. பெருவழுதி

குறிஞ்சி :

இது, வரைவிடை மெலிவாற்றுவிக்குந் தோழி தலைவற்குச் சொல்லியது.

எ – து, வரைபொருட் பிரிந்துவந்த தலைவனைத் தோழி நீ முன்னர் இரவின்வந்து முயங்கியதனாலாய குறிப்புக்களைக்கண்ட அன்னை வினவலும் இவள் விடைகூற அறியாளாய் என்னை நோக்கினளாக, யான் சந்தனவிறகின் கொள்ளியைக் காட்டி இதனாலுண்டாயினவென் றய்வித்தேனெனத் தானாற்றுவித்திருந்த அருமைதோன்றக் கூறுநிற்பது.

ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை

காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
உறுபகை பேணாது இரவின் வந்திவள்
பொறிகிளர் ஆகம் புல்லத் தோள்சேர்பு

ரு.

அறுகாற் பறவை அளவில மொய்த்தலிற்
கண்கோ ளாக நோக்கிப் பண்டும்
இனையை யோவென வினவினள் யாயே
அதனெதிர் சொல்லா ளாகி அல்லாந்து
என்முக நோக்கி யோளே அன்னாய்

மூலமும் உரையும்

சஉரு

கo. யாங்குணர்ந் துய்குவள் கொல்லென

மடுத்த

சாந்தம் ஞெகிழி காட்டி
ஈங்கா யினவால் என்றிசின் யானே.

**உரை :**—ஓங்கிய மலைநாடனே! நீ கூறும் வாய்மைகளெல்லாம் இப்படியே பொய்த்தொழிவனவாக; மூங்கில்கள் நெருங்கிய கற்பாறை நெறியாகிய சிறியவழியில் இரைதேடியுழலுகின்ற வேங்கை முதலாய மிக்க பகையைப் பொருட்படுத்தாது இரவிடைவந்து இவளது திருவிளங்கிய மார்பை முயங்கி மகிழ, அதனாலுண்டாகிய புதுமணத்தைக் கருதி இவளுடைய தோளைச் சார்ந்து வண்டுகள் அளவில்லாதன மொய்த்தலினாலே, எம் அன்னை தன் கண்களாலே கொல்லுபவள்போல நோக்கி 'நீ இதன் முன்னும் இப்படி வண்டுகளால் மொய்க்கப்பெற்ற தோளினையுடையையோ' என்று வினவினள், அங்ஙனம் வினவலும் இவள் அதற்கு எதிர்மொழிசொல்ல அறியாளாய் வருத்தமுற்று என்முகத்தை நோக்கி நின்றாள்; அதனையறிந்த யான் 'இவள் எப்படி ஆராய்ந்து மறைத்துக் கூறியுய்குவள்' என்றெண்ணி அன்னையை நோக்கி அடுப்பிலிட்ட சந்தனவிறகின் கொள்ளியை யெடுத்துக்காட்டி அன்னாய்! இவ்விறகினை அடுப்பிலிடுதலும் இதிலுள்ள சுரும்புகள் இவளுடைய தோளில் மொய்க்கின்றனகாணென மறைத்துக் கூறினேன்; இங்ஙனம் எத்துணைநாள் நீ வரைந்துகொள்ளுதல் காரணமாகப் பொய்கூறி யுய்விப்பது? எ - று.

காம்பு - மூங்கில். ஞெகிழி - கொள்ளி. கோள் - கொலை. வாய்மை - இகழ்ச்சிக்குறிப்பு; குறித்தபருவங்கடந்து வருதலின். இஃது அழிவில் கூட்டத் தவன்புணர்வு மறுத்தல்.

புதுமண நோக்கி வண்டுமொய்த்தலை அன்னை யறிந்துடையளாதலிற் கண்கோளாக நோக்கி எனக்கூறினாள். களவொழுக்கம் நீட்டித்திருக்குங்கொலென்னும் ஐயமுடையாளாதலிற் பண்டும் இனையையோவென வினவினளென்றாள். இவை படைத்து மொழிகிளவி; விரைவில் வரைந்து கொள்ளவேண்டு மென்க. பின்னது செவிலி தோழியை வினயதைக் கொண்டு கூறியது. **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௩௫)

## ௫௬. பெருவழுதி

பாலை :

இது, வரைவிடை மெலிவாற்றுவிக்குந் தோழிக்குத் தலைவி சொல்லியது.

எ - து, வரைபொருட்பிரிந்தோன் வருமளவும் மெலியாவண்ணம் ஆற்றுவிக்குந் தோழியைத் தலைவிநோக்கி யான் ஆற்றுவேனாயினும் என்னுள்ளம் என்பாலில்லாது வரைபொருட்குப்பிரிந்த அவர்பாற்போகியது தான் இனி அவருடன் வருகின்றதோ? அவர் அருளாமையால் மீண்டு வந்து அப்பொழுதைக்குள் வேறுபட்ட என்னுடம்பை நோக்கி இவள் அயலிலுள்ளாளெனப் போயொழிந்ததோ என்று நொந்து கூறுகிறபது.

குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ

வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉங் கவின்பெறு காலை





எல்வளை ஞெகிழ்த்தோர்க் கல்லல்

உறீஇயர்

ரு. சென்ற நெஞ்சஞ் செய்வினைக் குசாவாய்

ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ
அருளா னாதலின் அழிந்திவண் வந்து
தொன்னலன் இழந்தவென் பொன்னிற நோக்கி

ஏதி லாட்டி இவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே.

**உரை**:—குறிதாக நிற்றலையுடைய குராமரத்தின் சிறிய அரும்புகள் முதிர்ந்த நறியமலரில் வண்டுவிழுதலா னெழுந்த மணத்தைத் தென்றற்காற் றுப்புகுந்து கலந்துவீச, கண்கள் அவற்றைநோக்கி மகிழ்வடைகின்ற அழ கமைந்த அத்தறுவாயில், ஒளிபொருந்தியவளையை நெகிழ்வித்தோரைக்கரு தித் துன்பமுறுதலின் அவர்பாற்சென்ற என்னெஞ்சமானது ஆண்டு அவர்செய்யும் வினைக்குச் சூழ்ச்சிசொல்லுந்துணையாயிருந்து முற்றுவித்து அவருடன் ஒருசேர வருதற்கு விருப்பமுற்று வருந்தியிருக்கின்றதோ? அன்றி அவர் அருள்செய்யாமையாலே கலங்கி இங்குவந்து அஃது என்னைப் பிரியுமுன்னிருந்த நலன் இழந்துவிட்டதனாலாகிய எனது பொன்னிறமான பசலையை நோக்கி, 'இவள் அயலிலாட்டியாகும்,—என்னைவிடுத் தவளைக் காண்கிலேன்மன்' என்றெண்ணி நோய்மிகக்கொண்டு என்னைத் தேடிச்சென்றொழிந்ததோ? அறிகிலேன்; ஆதலின் யான் எங்ஙனமாற்று கிற்பேன்? எ - று.

எல் - ஒளி. உசாத்துணை - சூழ்ச்சிவினாவுந்துணை. அருளான்-பன்மை ஒருமைமயக்கம். இனி அவ்விடத்துச் சினைமுனாதலின் ஒருமையாக விழித் துக் கூறினனுமாம். போயின்றுகொல் என்றது ஆங்குநெஞ்சழிதல்.

செய்வினைக்கென அவன் பொருள்வயிற்சென்றதும், ஒருங்குவரல் நசைஇயென இன்னும் அவன்வாராமையும், வளைநெகிழ்த்தோரென அவன் பிரிவாலுண்டாகிய மெய்வாட்டமும், அல்லலுறீஇயர் சென்ற நெஞ்சமெனத் தன்னெஞ்சழிந்தமையும், என்பொன்னிறமெனப் பசலை பூத்தமையுங்கூறி வருந்தியதுகாண்க. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௫௬)

## ௫எ. பொதும்பில்கிழார்

### குறிஞ்சி: இது, செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, பகற்குறிவந் தொழுகாநின்ற தலைமகனைத் தோழி புனத்திலே தினைகொய்யுங்காலம் அணுகியதாதலின், இனித் தலைவி மனையகம்புகுதா நிற்கும், அங்ஙனம் புக்கபின் நீ ஆண்டெய்துதற் கியலாமையின் அவள் தன்னலந்தொலைந்து வருந்துமென்று யான் மருளுகின்றேனெனவும் உள்ளுறையால் அவன் விரைவில் வரைந்துகொள்ளுமாறுங் கூறுநிற்பது.

தடங்கோட் டாமான் மடங்கல் மாநிரைக்

குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்
துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி

மூலமும் உரையும்

சுஎ

கல்லென் சுற்றங் கைகவியாக் குறுகி
௫. வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்
கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்
மாமலை நாட! மருட்கை யுடைத்தே
செங்கோற் கொடுங்குரற் சிறுதினை
வியன்புனம்
கொய்பதங் குறுகுங் காலையெம்
௧௦. மையீர் ஓதி மாணலந் தொலைவே.

**உரை :**—சிங்கமுதலாய விலங்கின் கூட்டம் நெருங்கிய மலையின்கணுள்ள வேங்கைமரத்தின்கீழ் வளைந்த கொம்பினையுடைய ஆமான் தன் கன்றோடு தங்கியுளதாக அவை துயில்வதனைக்கண்ட பஞ்சுபோன்ற தலையையுடைய மந்தி, கல்லென வொலிக்குந் தன் சுற்றத்தை அவை ஒலியாவாறு தன்கையாலமர்த்திவிட்டு அருகிலேசென்று ஆமானின் பால்சுரந்த மடியை அழுந்தும்படி பற்றியீர்த்து இனிய பாலைக்கறந்து தன்தொழிலையுங் கல்லாத வலிய குட்டியின் கையில் நிறையப் பிழியாநிற்கும் பெரிய மலைநாடனே, சிவந்த தாளையும் வளைந்த கதிரையுமுடைய சிறிய தினையின் பெரிய கொல்லைமுற்றும் கதிர்கொய்யும்பதம் வந்துற்றது. வரவே தலைமகள் மனையகம் புகுதாநிற்கும்; புக்கபின் நீ அங்கேவருதற்கியலாமையின் எமது கரிய ஈரிய கூந்தலையுடையாளது மாட்சிமைப்பட்ட நலங்கெட்டொழியுங்கண்டாய்; அங்ஙனங் கெடுவதைநோக்கி என்னுள்ளம் மருளுதலையுடையதா யிராநிற்கும், ஆதலின் நீ ஆய்ந்து ஏற்றபெற்றிப்பட ஒழுகுவாயாக; எ – று.

துய் – பஞ்சு. ஞெமுங்குதல் – அழுந்துதல். இஃது அவன்புணர்வு மறுத்தல.

**உள்ளுறை :**—மந்தி கொடிய விலங்கிற்கஞ்சாது பதம்பெற்றுச்சென்று பாலைப்பிழிந்து ஊட்டிப் பறழைக் காக்குமாறு, நீயும் கொடிய சுரநெறியிற் சென்று பொருளீட்டிக்கொணர்ந்து கொடுத்து இவளை மணந்து பாதுகாப்பாயாகவென்றதாம். **மெய்ப்பாடு** – பெருமிதம். **பயன்** – வரைவுகடாதல்.

## ருஅ. முதுகூற்றனார்

**நெய்தல் :**

இது, பகற்குறிவந்து நீங்குந் தலைமகன் போக்குநீக்கித் தோழி மாவின்மேல்வைத்துச் சொல்லியது.

எ - து, பகற்குறியின்கண்ணே தலைமகளை ஆயத்துய்த்த தோழி, தலைமகன்பாற்சென்று அவனை இற்றைநாள் இங்குத் தங்கிப்போவாயென்றலும், அவன் உடன்படாமைகண்டு அவனது செலவைநீக்குமாறு மாலைப் பொழுதிலே தனித்துவருந்தும்படி எம்மைக் கைவிட்டுப்பெயருஞ் சேர்ப்பன் ஏறுகின்ற தேர்க்குதிரைகள் ஒறுக்கப்படுவனவாகவென்று குதிரைகளின்மேல்வைத்து வரைவுடன்படக் கூறுநிற்பது.

பெறுமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்



கோல்கோண் டலைப்பப் படீஇயர் மாதோ
வீரை வேள்மான் வெளியன் தித்தன்
முரசுமுதற் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோ டியம்ப நுண்பனி அரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை
நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுதேர் நுண்ணுகம் நுழைத்த மாவே.

உரை :—உறையூரின்கண் அரசாண்ட விரைவேள்மான் வெளியன் என்னுந் தித்தனுடைய முரசு முதலியவற்றோடு வெளியசங்குகளொலியா நிற்பச் சிறியபனியுண்டாக வரிசையாக எடுக்கப்பட்ட விளக்குகளுடனே சென்று எதிர்கொள்ளுகின்ற, பிரிந்துறை மகளிர் செயலறும்படிவந்த மாலைப்பொழுதிலே மெய்சோர்ந்து வருந்தியமனத்தேமாகிப் பெயர்ந்து போகும்வண்ணம், ஓங்கியெழுகின்ற அலைகளையுடைய நீண்ட நீர்வடிவாகிய கடலின் குளிர்ந்த துறையையுடைய சேர்ப்பனது ஓடுகின்றதேரின் நுண்ணிய நுகத்திற்பூட்டப்பட்டுச்செல்லுகின்ற குதிரைகள்தாம், முற்செய்த தவத்தாற்பெற்ற முதிர்ந்த செல்வரின் பொன்னணிகளையுடைய புதல்வர் சிறிய தோளில் மாட்டிய செவ்விதின் ஒலிக்கும் பறையின்கண்ணிலெழுதிய குருவி அடிபடுதல்போலக் கோலைக்கொண்டடிக்க அதனாலே துன்பப்படுவனவாக; எ - று.

பெருமுதிரென்ற பாடத்திற்குப் பெரிய முதிர்ந்த என்றவாறு.

கோயிலகத்து மாலையில் வாச்சியமொலிப்பித்தலை அம்மாலையை எதிர் கோடலாக உபசரித்தார். நுண்பனியரும்புமாலையெனவே கூதிர்ப்பொழுதெனக் கருதலானே, இரவிடை மூயக்கம் இன்றியமையாதாயிற்று. இரவில் வெளிப்படையாகத் தங்கவேண்டின் வரைந்தன்றி இயலாமையின் வரைவுதோன்றக் கூறியதாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - குறிப்பினால் வரைவுகடாதல். (௱௮)

## ௱௯. கபிலர்

முல்லை : இது, வினைமுற்றிமீள்வான் யது.

தேர்ப்பாகற்குச் சொல்வி

எ - து, சென்று வினைமுடித்துமீள்வோன் தன் தேர்ப்பாகன்கேட்டு விரைந்து தேரைச் செலுத்துமாற்றானே நமதுதலைவியுறையும் மூதூரானது காட்டகத்ததாயிராநின்றது, அத்தகைய புறவத்திடத்தனாய்ப் பொறுத்தலை மேற்கொண்டிருப்பினும் குறித்தபருவத்துப் புகுதாவிடின் அவள் துன்புறுமாலென வருந்திக் கூறுநிற்பது.

உடம்பு கோரீஇ* வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி

(பாடம்) * கொலீஇ,

## மூலமும் உரையும்

எல்லுமுய லெறிந்த வேட்டுவன் அம்சுவல்
பல்வேறு பண்டத் தொடைமறந்
தில்லத்து
இருமடைக் கள்ளின் இன்களி
செருக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே
அன்புகலந்து
நம்வயிற் புரிந்த கொள்கையொடு
நெஞ்சத்து
உள்ளினள் உறைவோள் ஊரே முல்லை
நுண்முகை யவிழ்ந்த புறவில்
பொறைதலை மணந்தன்று உயவுமார்

இனியே.

**உரை :**—அன்புமிகுதலாலே உள்ளங்கலந்து நம்பால் விரும்பிய கொள்கையுடனே என்றுந் தன்னெஞ்சிலே எம்மை நினைந்துறையுங் காதலியினூர், பகற்பொழுதெல்லாம் சூழ ஆடைபரப்பிநின்று கலைத்தவழி வெளிவந்த உடும்பை ஈட்டியாலேகுத்தி, மண்ணின்முழுகி மறைந்துகிடக்கும் வரிகளையுடைய நுணலையை மண்வெட்டியாலே பறித்தெடுத்து, நெடுகிய கோடுகளையுடைய புற்றுக்களைவெட்டிப் புகைமூட்டியைவைத்துழி வெளிவந்த ஈயலைத் தாழியிலே பெய்துகொண்டு, வளைதடியாலே முயலையெறிந்து பற்றிய வேட்டுவன் இரவிடை அழகியதோளிலே சுமந்துவந்த பலவேறு வகையாகிய அப்பண்டங்களைப்பொதிந்த மூடையுடனே ஏனையகருவிகளையு மனையகத்தே போகட்டுமறந்து ஆங்கு மிகுதியாகப்பருகிய கள்ளின் இனிய மயக்கத்தாலே செருக்குண்டு கிடவாநிற்கும் வன்புலத்ததாகிய காடுசூழ்ந்த நாட்டின்க ணுள்ளதாயிராநின்றது; அங்ஙனம் முல்லையின் நுண்ணிய அரும்புமலர்ந்த புறவின்கண்ணதாகிய ஊரிலிருந்தாலும் அவளுள்ளம் இதுகாறும் பொறுமையுடையதாயிராநின்றது; இன்று செல்லாவிடில் நனிவருந்தாநிற்கும்; எ - று.

* கொருவுதல் - குற்றுதல்; குத்துதலென்றுவழங்குகின்றது. கெண்டுதல் - வெட்டுதல். சுவல் - தோள்மேல். மடை - மடுக்கப்படுவது. உயவும் - வருந்தும். ஆடைசூழவிரிப்பது கலைக்கப்பட்ட உடும்பு ஆடைமேலோடினால் அதன் வளைந்த உகிர் துகிலிலேசிக்கிக்கொண்டு விழுமாதலிற் பற்றுதற்கெளிதாதல்பொருட்டு. ஈயல்பிடிப்பது :—கோடுகளை ஒழுங்குபெறச் சிதைத்து மேலேவிழலால் மூடிமீது சேற்றைப்பூசி ஒருதுளை வைத்து அதில் புகை மூட்டியைவைத்தூதினால் உள்ளிருந்த ஈயல்வெளிவரும், அங்கே வேறொரு புழைசெய்து புகைபோகும்வழியுண்டாக்கி அதில் ஒரு தாழியைவைத்திருந்தால் வந்த ஈயவெல்லாம் தாழியிலே படியுமென்றதாம். ஏனையபற்றுதல் வெளிப்படை.

**உள்ளுறை :**—உடும்புமுதலாயவற்றைக் கொண்டுவந்த வேட்டுவன் அவைகளை இல்லின்கண்ணே போகட்டுக் கள்ளின்செருக்கினால் மயங்கிக்

* கொரீஇ என்பது இக்காலத்து அருகிய சொல்; பொருள் விளங்கவில்லை. கன்றுகளுக்குப்போடும் இருப்புமுள்ளாலாகிய வாய்க்கூட்டுக்குக் 'கொரி' என்று திருநெல்வேலியை அடுத்த ஊர்களில் வழங்கப்படுகிறது; மாட்டுமடியில் ஊட்டச்சென்றால் அம்முள் மடியில் குத்துந்தன்மையாயிருத்தலால் அந்தப் பொருளைக்கொண்டு குத்திப்பிடிப்பதாக உரையெழுதினேன். குத்தாமலேபிடித்து வாலைக் கழுத்திற்பிணித்து வளையமாகக் காவிக் கொணர்தலுமுண்டு; கொரீஇ என்பதற்கு வேறுபொருள் விளக்கமாகத் தெரிகிறவரையில் குத்து என்பதைக் கொள்க.



கிடக்குமென்றது, அயல்நாடுசென்று பலவகையாலே பொருளீட்டிவந்த யான் அவற்றை இல்லின்கணிட்டு நமது காதலிநலனையுண்டு காமக்களியாலே செருக்கெய்தி மயங்கிக்கிடப்பேனென்றதாம். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - பாகன்தேர்கடாவல். (௫௯)

## ௬0. தூங்கலோரியார்

**மருதம்:**

இது, சிறைப்புறமாக உழவற்குச் சொல்லுவாளாய்த் தோழி செறிப்பறிவுறீஇயது.

எ - து, சிறைப்புறமாக வந்திருந்த தலைமகன் தலைமகளை இல்வயிற் செறித்தமையறிந்து விரைவில் வரையுமாற்றானே தோழி உழவனைநோக்கிச் சொல்லுவாள்போன்று உழவனே, நீ நாற்றுநடுமாறு உழச்சென்ற வயலிலுள்ள கோரையையும் குவளையையும் அழித்துவிடாதேயுழுவாய், அவற்றை இவள் வளையாகவும் உடையாகவும் கொள்ளுமெண இல்வயிற் செறித்தமை தோன்றக் கூறுகிறபது.

மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்

பெருநெற் பல்கூட் டெருமை உழவ!
கண்படை பெறாது தண்புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்தடி
மிளிர்வையொடு

ரு. புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீருறு செறுவில்* நாறுமுடி யழுத்தநின்
அடுநோ ரோடுநீ சேறி யாயின்வண்
சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மின்
க0. மாயிருங் கூந்தல் மடந்தை
ஆய்வளைக் கூட்டும் அணியுமார்
அவையே.

உரை :—மலையைச் செய்துவைத்தாற்போன்ற நிலைபொருந்திய உயர்ச்சியையுடைய மிக்க செற்களையுடைய பலபெரியசேர்களைக்கட்டிவைத்திருக்கின்ற எருமையைப்பூட்டி யுழுகின்ற உழவனே! நீ இரவிலே தூங்காது குளிர்ச்சியையுடைய இருள்நீங்கும் வைகறைப்பொழுதிலே கரியகண்களையுடைய வரால்மீனைப் பெரியனவாகத் தடிந்த தசையாகிய ஆணத்திலே பிறழவிட்ட மிளிர்வையுடனே உணவுக்குரிய அரிசியாலாக்கிய மிக்க சோற்றுத்திரளையை விருப்பமிக்க கையையுடையையாய் நிறைய மயக்க மேறவுண்டு நீர்மிக்க சேற்றிலே நாற்றுமுடிகளை நடுதற்கு நின் உழத்தியரோடு உடன் செல்லுவையாயின், நீ உழுகின்ற வயலிலுள்ள வளமிக்க கோரைகளையும், நெய்தல்களையும் களையெனக் களையாது பாதுகாப்பாய்; அங்ஙனம் பாதுகாத்துவைப்பதுதான் எற்றிற்கோவெனக் கேட்டியாயின் எங்களுடைய மிக்க கரியகூந்தலையுடைய தலைவி இப்பொழுது இற்செறிக்கப்பட்டாள், மற்றொருபொழுது காப்புச்சிறைநீக்கப் பெறுவளேல் அவள்

(பாடம்) * நீலச்செறு. † மடந்தைக்கு.



அவற்றுள் அழகிய கோரையை வளையமாகப் பூண்டுகொள்ளுவள், நெய்தலந்தழையை உடையாக அணிந்துகொள்ளுவள்காண்; எ - று.

பல்கூடு - பலகுதிர்களுமாம். மிளிர்வை - ஆணத்திலிடப்படுவது; இஃது இக்காலத்தில் 'தான்' என வழங்கப்படுகின்றது. சாய் - கோரை. புகர்வு - உணவுக்குரியபண்டம். நாறு - நாற்று. சாய் வளைக்கும் நெய்தல் உடையணிக்கும் நிரனிறையாகக்கொள்க. நீர்ச்சோற்றையுண்ணிற் சிறிது மயக்கமுண்டாமாதலிற் கழுமமார்தியென்றார். தொழின்மேற்செல்வார்க்கு மிக்க வன்மையளித்தலின் இன்றியமையாதாயிற்று. தாஞ் சென்று பறித்தற்கியலாது உழவனை யோம்புமதியென்றதனால் தலைவி இற்செறிக்கப்பட்டதை யுணர்த்தியதாம். வெய்யிலேறின் உழவெருமை மயங்குமாதலின் இரவிடைத்துயில்பெறாது விரைந்துசெல்வது குறித்தாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - இற்செறிப்புரைத்து வரைவுகடாதல். (சுo)

# ௯௧. சிறுமோலிகனார்

குறிஞ்சி: இது, தலைவன் வரவுணர்ந்து தலைவிக்குச்
ளாய்த் தோழி சொல்லியது.

சொல்லுவா

எ - து, தலைவன் இரவுக்குறி வருதலையறிந்த தோழி, தலைவியை நோக்கி இரவெல்லாம் காமவேட்கையால் நோய்கொண்டு புலம்பியதறிந்த நமது அன்னை நீ என் தூங்குவாயல்லையோ வென்றாட்கு மெல்ல என்னெஞ்சினுள்ளே கானகநாடனைக் கருதினோர்க்குத் தூக்கமும் வருமோ வென்று கூறினேனெனத் தங்களுடைய துன்பத்தை அவனுணர்ந்து விரைய வரையுமாற்றாற் கூறாநிற்பது.

கேளாய் எல்ல தோழி! அல்கல்

வேணவா நலிய வெய்ய உயிரா
ஏமான் பிணையின் வருந்தினே னாகத்
துயர்மருங் கறிந்தனள் போல அன்னை
துஞ்சா யோவென் குறுமக ளென்றலிற்
சொல்வெளிப் படாமை மெல்லவென் நெஞ்சிற்
படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்

கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்
௧௦. கண்ணும் படுமோ என்றிசின் யானே.

**உரை** :—ஏடீ, தோழீ, யான் கூறுகின்ற இதனைக் கேட்பாயாக; நேற்றிரவில் வேட்கைமிகுதியாலுற்ற ஆசைப்பெருக்கமானது துன்புறுத்தலாலே வெப்பமாகப் பெருமூச்செறிந்து அம்புபட்ட மான்பிணைபோல வருத்தமுற்றேனாக, அப்பொழுது அன்னை யானுற்ற துன்பமிகுதியை அறிந்தாள்போல என்னைநோக்கி 'என்னிளமகளே, நீ தூங்குவாயல்லையோ' என்றலும், யான் சொல்வது வெளியிலே தெரியாதபடி மெல்ல என்னெஞ்சினுள்ளே, மிக்க மழைபொழிந்த கற்பாறையருகிலே பூத்த சிச்சிலிப்பறவையின் வாய்போன்ற அரும்புகளையுடைய முல்லையும்



பரல்கள் நிரம்பிய பள்ளங்களுமுடைய விளங்கிய காடுசூழ்ந்த நாட்டையுடைய தலைமகனைக் கருதியிருப்போர்க்குக் கண்ணுறக்கமும் வாராநிற்குமோ என்றேன்காண்.

எல்ல - இருபாற்பொதுச்சொல். அல்கல் - இரவு. வேணவா - வேட்கையாலுண்டாகிய அவா; 'வேட்கை, அவா' என்னுமிருசொல்லும் "செய்யுண் மருங்கின்" (தொ-எழு-சூ-௨௮௮) என்ற சூத்திரவிதிப்படி கெட்டு மருவி முடிந்தது. ஏ - அம்பு. படர்தல் - நினைத்தல். இது தலைவியைத் தோழி தானாகக் கொண்டு கூறியது, தான் அவள் என்னும் வேற்றுமையிலளாதலின்; இதற்கு முன்பு (௨௮) ஆஞ்செய்யுளுரையிற்கூறிய விதியை ஈண்டுரைத்துக்கொள்க. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவறிவுறுத்தல். (௬௧)

## ௬௨. இளங்கீரனார்

பாலை :

இது, முன்னொருகாலத்துப் பொருள்வயிற் பிரிந்துவந்த தலைவன், பின்னும் பொருள்வலிக்கப்பட்ட நெஞ்சிற்குச் செலவழுங்குவித்தது.

எ - து, பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் யான் முன்பு சுரத்தின்கட் சென்றபொழுது விசும்பிலெழுந்த திங்களைநோக்கி மலைமீது எம் காதலியிடத்து நிரம்பியதிங்களொன்று எம்முடையதென நினைத்திருந்தேனல்லேனோவென்று முன்பு பொருள்வயிற்பிரிந்ததையும், நிலத்தின் கொடுமையையும், அங்கே சென்றபொழுது காதலியைக் கருதுங் கவற்சியையுங் கூறிச் செலவழுங்காநிற்பது.

வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யானை அயர்வுயிர்த் தன்ன
என்றூழ் நீடிய வேய்பிறங் கழுவத்துக்
குன்றூர் மதியம் நோக்கி நின்றுநினைந்து
ரு. உள்ளினேன் அல்லனோ யானே
முள்ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்

எமது முண்டோர் மதிநாள் திங்கள்
உரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழற்பல
உலவை யாகிய மரத்த
கo. கல்பிறங்கு மாமலை உம்பரஃ தெனவே.

**உரை:**—வேர்கள் ஒன்றோடொன்று பிணிப்புண்ட மூங்கில்களிலே காற்றுமோதுதலாலுண்டாகிய ஒலிக்கின்றவோசையானது, தறியிலே கட்டப்பட்ட யானை வருந்தி நெட்டுயிர்ப்பெறிந்தாற்போன்ற கோடைநிலை பெற்ற மூங்கில் பிறங்கிய சுரத்துநெறியில் மலைவாய்ச்செல்லுந் திங்களை நோக்கிநின்று சிறிதுகருதி முட்போன்ற பற்களையும் திலகமிட்ட மணங் கமழ்கின்ற அழகிய நெற்றியையுமுடைய நாள்நிரம்பிய மதித்திங்களென்பதொன் றெம்முடையதுமுண்டு, அத்திங்கள் இப்பொழுது யாண்டையதோ வெனில், 'முழங்குகின்ற ஓசையையுடைய வெவ்விய காற்றானது வீசுத



லாலே இலையுதிர்ந்து நிலையுடைய பலவாகிய வெறுங்கொம்புகளாய் நிற்கின்ற மரங்களையுடைய கற்கள்விளங்கிய கரிய மலைமீதுள்ளதாயிராநின்றது' என்று யான் நினைத்திருந்தேனல்லேனோ? எ - று.

வேர்பயில் என்றும் பாடம்.

என்றூழ் - கோடை. உரறுதல் - முழங்குதல். உலவை - காய்ந்தகிளையுமாம். உள்ளினேனென்பது முன்பு பொருள்வயிற்பிரிந்தது. என்றூழ் நீடிய அழுவமென்பது நிலத்தின்கொடுமைகூறியது. திருநுதல்முதலாயின காதலியைக்கருதிய கவற்சி. **மெய்ப்பாடு**-அழுகை. **பயன்** - செலவழுங்கல். (சுஉ)

சுந. உலோச்சனார்

**நெய்தல்:** இஃது, அலரச்சத்தாற் றோழி
பறிவுறீ இயது.

சிறைப்புறமாகச் செறிப்

எ - து, தலைமகன் ஒருசிறைப்புறமாக வந்திருப்பதறிந்த தோழி அவன்கேட்டு விரைவில் வரையுமாற்றானே, ஊரார்தூற்றிய பழிச்சொல் லால் அன்னை இல்வயிற்செறித்ததும் தலைவிநலன் பசலையாலுண்ணப்பட் டழிவதும் அறிவுறுத்துவாளாய்த் தலைவன் தொடர்பானது இற்செறித்த லால் இப்படிப் பசலையாகி யழியக்கடவதுதானோவென வருந்திக் கூறா நிற்பது.

உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்
மிகுமீன் உணக்கிய புதுமண லாங்கண்
கல்லென் சேரிப் புலவல் புன்னை
விழவுநாறு விளங்கிணர் விரிந்துடன் கமழும்
அழுங்க லூரோ அறனின் றதனால்
அறனில் அன்னை யருங்கடிப் படுப்பப்
பசலை யாகி விளிவது கொல்லோ
புள்ளுற வொசிந்த பூமயங் கள்ளற்
கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை இவுளி
திரைதரு புணரியிற் கழூஉம்
மலிதிரைச் சேர்ப்பனோ டமைந்தநங்

தொடர்பே.

**உரை** :—வலிமையுடைய கடலிலேசென்று மீன்பிடித்தலில் வருந்திய பெரிய வலைகளையுடைய பரதவர், மிக்கமீன்களைக் காயப்போகட்ட புதிய மணற்பரப்பாகிய அவ்விடத்துக் கல்லெனவொலிக்குஞ் சேரியையடுத்த புலவுநாற்றத்திடத்துள்ள புன்னையின் விழாவுக்குரிய மணமுடைய விளங்கிய பூங்கொத்து ஒருசேரவிரிந்து மணங்கமழாநிற்கும் அலரெடுக்கின்ற பேரொலியையுடைய இவ்வூரோவெனில் அறமுடையதில்லை; அதனால் புட்கள்வந்திருத்தலா லுதிர்ந்த பூக்கலந்த சேற்றினையுடைய கழியாகிய இடத்தின்மீதோடும் தேரிற்பூட்டிய பெரிய பிணிப்பையுடைய குதிரைகள் அலையெழுந்துவருங் கடனீராலே கழுவப்படுகின்ற மிக்க கடற்சேர்ப்பனோடு பொருந்திய நமது தொடர்ச்சியானது, அறனில்லாத அன்னை இற்



செறித்து அரியகாவலிற் படுத்தலாலே இங்ஙனம் பசலையாகி விளிந்தொழியக்கடவதுதானோ? எ - று.

சுரம் - இடம். நிவத்தல் - ஓடுதல். புலவல், அல் - சாரியை.

தன்னொழுகலாற்றைப் பொருது அலர்தூற்றலால் ஊர் அறனின்றென்றாள். கேள்வனைக்கூடாதவாறு இற்செறித்தமையால் அன்னையும் அறனிலளென்றாள். களவொழுக்கம் எண்வகைமணத்தினு ளொன்றாதலின் அஃதறனேயாம்; அதனுக்கு ஊறுசெய்தல் அறனின்மையென்றவாறு. பசலையாகிவிளிவதோ என்றது பசலைபாய்தல்.

**உள்ளுறை** :—கழிச்சேற்றிலோடுங் குதிரைகளினுடம்பிலே பட்ட சேறு கடல்நீரால் கழுவப்படுமென்றது, களவொழுக்கத்தை மேற்கொண்ட தலைமகள்மேலும் தலைமகன்மீதுமேறிய அலர் அவ்விருவரும் வரைந்து கொள்ளுதலால் நீக்கப்படவேண்டு மென்றதாம்.

**இறைச்சி** :—மணற்பரப்பிலே பரதவர் மீனுணக்கலாகிய புலவு நாற்றத்தைப் புன்னைமலர் மணம்வீசுதலாற் போக்கிக் கமழாநிற்குமென்றது, சேரியிடத்தே தலைவிக்காக எமர்பெறக்கருதிய பொருளாசையைத் தலைவன் சான்றோரைமுன்னிட்டுத் தரும் அருங்கலமுதலியவற்றாலே போக்கி வரைவுமாட்சிமைப்பட முடிப்பானாகவென்றதாம். **மெய்ப்பாடு** - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - செறிப்பறிவுறுத்து வரைவு கடாதல். (௬௩)

## ௬௪. உலோச்சனார்

### குறிஞ்சி :

*இது, பிரிவிடைத் தலைவியதருமைகண்டு தூதுவிடக் கருதிய தோழிக்குத் தலைவி சொல்லியது.*

எ - து, தலைமகன் பிரிந்தவிடத்துத் தலைமகள் வருந்தியதறிந்த தோழி அவன்பால் தூதுவிடக்கருதுதலும் அதனையறிந்த தலைவி தோழியைநோக்கி நம்மைக்கைவிட்ட அவரைக்கருதாதொழிக; உள்ளம் அவர்பாற்சென்றமையால் என்னுடம்பு வறிதாயிராநின்றது; இனிவரினும் நமது நோய்க்குமருந்தாகமாட்டார்; ஆதலின், அவர் அங்கேயே இருப்பாராக; நம்நோயை நமர் காணுதொழிவாராகவென வருத்தமிகுதிதோன்றக் கூறாநிற்பது.

என்ன ராயினும் இனிநினை வொழிக

அன்ன வாக இனையல் தோழியாம்

இன்ன மாகநத் துறந்தோர் நட்பெவன்

மரனு ருடுக்கை மலையுறை குறவர்
அறியா தறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற் றூர முருக்கிப் பையென
மரம்வறி தாகச் சோர்ந்துக் காங்கென்
அறிவும் உள்ளமு மவர்வயிற் சென்றென
வறிதால் இகுளையென் யாக்கை யினியவர்
வரினும் நோய்மருந் தல்லர் வாராது



அவண ராகுக காதல் இவண்நங்
காமம் படரட வருந்திய
நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே.

**உரை :**—தோழீ! நமது காதலர் எவ்வளவு சிறப்புடையராயினும் அவர் பால் அதுவிடக் கருதுவதனை இனி நீ ஒழிப்பாயாக; நம்மைக் கைவிட்டா ரென்று அத்தன்மையவாக வருந்தாதேகொள்; நாம் இத்தன்மையேமாகி வருந்தும்வண்ணம் நம்மைத்துறந்த அவர் நட்புத்தான் இனி நமக்கு யாது பயன்படாநிற்கும்? மரற்பட்டையி னாலே பின்னிய உடையினையுடைய மலையிலிருக்கிற குறவர் தாம் அறியாமையினாலே மேற்பட்டையையறுத்த சிறிய இலையையுடைய சந்தனமரத்தில் வற்றல்தொடங்கி மிகக்கெடுத்து மெல்லென அந்தமரம் வறிதாமாறு, அதன்கணுள்ளநீர் அறுபட்டவாயின் வழியே சோர்ந்துவடிந்தாற்போல என் அறிவும் உள்ளமும் அவரிடத்துச் சென்றொழிந்தனவாதலின் இகுளாய், என்னுடம்பு உள்ளில் யாதுமில்லையாய் நின்றதுகாண்; இனி அவர் இங்குவந்தாலும் என்னோய்க்குரிய மருந்தாகார் ஆதலிற், காதலர் வாராது அங்கேயே உறைவாராக; இங்குக் காமமும், அதனாலுண்டாகிய நினைவும் நம்மை யொறுத்தலாலே வருந்தியநோய் மிக்க ஏதப்பாட்டினை நமது சுற்றத்தார் காணுதொழிவாராக; எ - று.

நத்துறந்தோர் - நம்மைத்துறந்தோர்; இரண்டன்றொகை. நம்துறந்தோர் என்பது (தொ-எழு-கிளை) சூத்திரத்தில் அன்னபிறவுமென்றதனல் வலிந்துநின்றது. காணன்மார் - இது மாரீற்று எதிர்மறைவியங்கோள். அல் - எதிர்மறையுணர்த்தியது. மேற்பட்டை சீவியதன்வழியாலே நீர் வடிந்து சந்தனமரம் படுவதுபோலப் புணர்ச்சிநசையின்வழியாலே என்னறிவும் உள்ளமும் அங்கேசெல்ல உடம்பு இறக்குந்தன்மையையுடையதென உவமையோடு பொருளைப் பொருத்திக்காண்க. இஃது அழிவில் கூட்டத்துக் காதல் கைம்மிகல்.

ஆற்றுமைமிகுதியால் இருகால்விளித்தாள். நோய்முற்றி இறந்துபடுந்தன்மைவந் துற்றதெனக்கொண்டு வரினு நோய்மருந்தல்ல ரென்றாள். சுற்றத்தார் கண்டுவைத்துப் பழியேற்றுதபடி இறப்பதே நலனெனக் கொண்டு எமர் காணுதொழிகவென்றாள். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (சுஅ)

## சுரு. கபிலர்

குறிஞ்சி:

இது, விரிச்சிபெற்றுப்புகன்ற தோழி, தலைமகட்குச் சொல்லியது.

எ - து, தலைவன் குறித்தபருவத்துவாராமையால் வருந்திய தலைவியைத் தோழி, யானுங்கவலுகையில் நம் அயலகத்து மாது தான் வேறொருத்தியிடம் உரையாடும்பொழுது 'அவன் இப்பொழுதே வருகுவன்' என வாய்ச்சொற்கூறினளாதலின் அவள் அமிழ்தமுண்பாளாகவெனத் தான் பெற்ற நன்னிமித்தங்கூறித் தேற்றுகிறப்பது.

அமுதம் உண்கநம் அயலில் ஆட்டி
கிடங்கில் அன்ன விட்டுக்கரைக் கான்யாற்றுக்
கலங்கும் பாசி நீரலைக் கலாவ

ஒளிறுவெள் அருவி யொண்டுறை*
மடுத்துப்
புலியொடு பொருத புண்கூர் யானை
நற்கோடு நயந்த அன்பில் கானவர்
விற்சுழிப் பட்ட நாமப் பூசல்
உருமிடைக் கடியிடி கரையும்
பெருமலை நாடனை வரூஉமென் றோளே.

**உரை** :—விட்டுவிட்டுக் கரைத்துச் செல்லுதலையுடைய கான்யாற்றின் கண்ணே கலங்கும்பாசியை நீர் அலைத்தலானே, அவை யாண்டுங்கலப்ப விளங்கிய வெள்ளிய அருவியினது ஒள்ளிய துறையின்கண்ணே பாய்ந்து புலியுடனே போர்செய்தலானாகிய புண்மிக்கயானையின் நல்ல தந்தத்தை விரும்பிய அன்பற்ற வேடரின் வில்லினின்றுவிடும் அம்புபட்டதனாலாகிய சுழன்ற அச்சத்தைத்தருகின்ற பிளிற்றலின்பேரொலியானது, இடியிலுண்டாகு மிக்க முழக்கத்தைப்போல ஒலிக்கும் பெரியமலைநாடன் குறித்தபருவத்து வாராமையால் அவனை நாம் கருதியிருக்கும்பொழுது நம் அயல்வீட்டு மாதொருத்தி வேறொருத்தியிடம் உரையாடுகின்றவள் நமக்கு நன்னிமித்தமாக, 'கிடங்கில்' என்னும் ஊர்போன்ற சிறந்த இனியசொல்லால் 'அவன் இன்னே வருகுவன்' எனக் கூறினள்காண்; அவ்வார்த்தை அசரீரியெனப் படுதலால் நம்மலைநாடன் இன்னேவருமென யான் கருதுகின்றேன்; நீ வருந்தாதேகொள்; இங்ஙனம் நமக்கு நன்னிமித்தமாகக்கூறிய அவ் அயல்வீட்டு மாது தேவருணவாகிய அமுதத்தினை ஈண்டுக் கைவரப் பெற்று இப்பொழுதே உண்பாளாக; எ - று.

கிடங்கில் - ஓரூர்; பொய்கையாராற் பாடப்பெற்றசிறப்புடையது. விரிச்சி - நன்னிமித்தம். கான்யாற்றருவியென இயைக்க. விட்டுக்கரை - மலையொத்தகரையெனினுமமையும். சுழி - சுழற்சி.

**உள்ளுறை** :—புலிபொருதலாலே புண்மிக்கயானை காமநோய்பொருதலால் வருத்தமுற்றதலைவியாயும், வேடர் யானையின்மருப்புப்போக அம்புவிடுவது ஏதிலாட்டியர் தலைவியினுயிருக்கே ஏதமுண்டாம்படி அலரெடுத்ததாகவும், அம்புபட்ட யானை பூசலிடுவது அலரைப்பொருளாய தலைவி வருந்துவதாகவும், அப்பூசல் மலையிற்சென்று மோதுதலானது அவ்வருத்தச்செய்தி தலைவன்மாட்டுஞ் சென்றுவிட்டதாகவும், அத்தகைய மலைநாடனுதலின் இன்னேவருகுவனெனவுங் கொள்க. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியையாற்றுவித்தல். (சுகு)

## சாசா : இனிசந்தநாகனார்

### பாலை : இது, மனைமருட்சி.

எ - து, தலைவன் கொண்டுதலைக்கழிதலும் அவ்வுடன்போக்கினையறிந்த நற்றாய் உண்மகிழ்வோடு அஃது அறனெனக்கொண்டிருந்தும் தனிமையில் வெஞ்சுரஞ்சென்றமைகருதி ஆற்றாளாய் என் மெல்லிய இளமகள் தன்னைவிரும்பும் நல்லகாதலனைப் பெற்றனளாயினும், கொடியசுரத்திற் செல்லுதலாலே மலர்போன்ற அவளுடைய கண்கள், சிவந்து ஒளி

(பாடம்) * உண்டுறை.

மூலமும் உரையும்

என

மழுங்கி யலமருங்கொல்லென மனையகத்து மருண்டு கிறபது.

வருந்திக் கூறு

மிளகுபெய் தனைய சுவைய புன்காய்
உலறுதலை உகாஅய்ச் சிதர்சிதர்த் துண்ட
புலம்புகொள் நெடுஞ்சினை யேறி நினைந்துதன்
பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப்

புன்புறு உயவும் வேந்துகள் இயவில்
நயந்த காதலற் புணர்ந்தன ளாயினுஞ்

சிவந்தொளி மழுங்கி அமர்த்தன கொல்லோ
கோதை மயங்கினுங் குறுந்தொடி நெகிழினுங்
காழ்பெய் அல்குற் காசுமுறை திரியினும்
மாணலங் கையறக் கலுழுமென்
மாயக் குறுமகள் மலரேர் கண்ணே.

**உரை :**—மிளகினை யிட்டுவைத்தாற்போன்ற சுவையுடைய காய்ந்த கிளைகளையுடைய உகாய்மரத்தினுள்ள புல்லியகாயை வண்டுகள் நெருங் காதபடி போக்கி யுண்டதனாலாகிய வருத்தமிக்க புல்லியபுறா, நெடிய கிளைமேலேறித் தான் தின்ற தவற்றைக்கருதி வரைகள்விளங்கிய தன் பிடரிசிலிர்த்துத் தின்ற வெறிப்பினால் மறுக்கமுற்று வருந்தாநிற்கும் வெப் பங்கொண்ட புழுதிமிக்க நெறியின்கண்ணே, தன்னைவிரும்பிய காதலனைக் கூடிச்சென்றனளாயினும் சூடிய பூமாலைசிக்குண்டாலும், குறியவளை கையி னின்று நழுவினாலும், காஞ்சியணிந்த அல்குலின்மேல் நாலுகின்ற பொற் காசினம் முறைபிறழ்ந்துகிடந்தாலும் அவற்றைத் திருத்துதற்குத் தெரிந் திலளாய்த் தனது மாட்சிமைப்பட்ட அழகானது அழிந்தொழியுமாறு கலுழாநிற்கும் எனது அழகிய இளம்புதல்வியின் மலர்போன்றகண்கள், வெய்யசுரத்திற் செல்லுங்கடுமையாலே சிவந்து ஒளிமழுங்கிக் கலக்க மடைந்தனவோ? இவ்வொன்றற்கே வருந்தாநிற்பேன் ; எ - று.

உலறுதலை - காய்ந்தகிளை. சிதர் - வண்டு. இயவு - நெறி. காழ் - எட்டுக் கொத்துக்களையுடைய அரைப்பட்டிகை. புலம்புகொள்புன்புறா வென இயைக்க. மாயம் - அழகு. குறுமகள் - இளமகள். மனைமருட்சி - இல்லகத்து மருண்டிருத்தல். 'நயந்த காதலற் புணர்ந்தன ளாயினும்' எனத் தான் அதனை அறத்தாறெனக் கருதியதுகூறினாள். நெகிழினும் திரியினும் கையறக்கலுழுமென்றது மிக்க இளமைப்பருவத்தைக் குறித்தது. இவ் வளவு இளம்பருவத்தாள் ஓராடவனைப்பெற்றுச் சென்றனளென அவளறி வுக்கும் ஒழுக்கத்துக்கும் வியந்து மகிழ்ந்தனளாம். கண்கலங்காமற்சென் றுழி முற்றுமே மகிழ்வாளாவது.

**இறைச்சி :**—புறா தின்னத்தகாத காயைத் தின்று கிளையிலேறி மறுக்க முற்று வருந்தாநிற்றல்போல, என்மகள் ஏதிலாளனது மாயவின்பத்தினை நன்றெனக்கொண்டு சென்று பின்பு மறுக்கமுற்று வருந்தாநிற்குமோ வென்றதாம். **மெய்ப்பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமை நீங்குதல். (சுசு)

## சூஎ. பேரிசாத்தனார்

**நெய்தல்:** இது, பகற்குறிவந்து நீங்குந் தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

எ - து, பகற்குறிவந்து புணர்ந்துநீங்குந் தலைமகனைத் தோழி நோக்கி மாலைப்பொழுதாயிற்று, நெறி எதமுடைத்து, எமரும் வேட்டைமேற்சென் றனராதலால், எம்மூரின்கண்வந்து இன்றிரவுதங்கிச் செல்வாயாகவெனப் பிரிவாற்றாமை கூறுவாள்போன்று, குறிப்பினால் வரைவுதோன்றக் கூறி நிற்பது.

சேய்விசும் பிவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்
மால்வரை மறையத் துறைபுலம் பின்றே
இறவருந்தி யெழுந்த* கருங்கால் வெண்குருகு
வெண்குவட்டு அருஞ்சிறைத் தாஅய்க் கரைய
கருங்கோட்டுப் புன்னை இறைகொண் டனவே
கணைக்கால் மாமலர் காப்ப மல்குகழித்
துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை
எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கோளீஇ

எமரும் வேட்டம் புக்கனர் அதனல்
கஶ. தங்கின் எவனே தெய்ய பொங்குபிசிர்
முழவிசைப் புணரி எழுதரும்
உடைகடற் படப்பையெம் உறைவின்
ஊர்க்கே.

**உரை :**—சேய்மைக்கண்ணே ஆகாயத்திலேறிவந்த செழுவிய கிரணங்களையுடைய ஆதித்தமண்டிலம் பெரிய அத்தமென்னுஞ் சிலம்பினூடு சென்று மறைதலானே யாருமின்றி நமது கடற்றுறை தனிமையாயிராநின்றது; இருமீனைத் தின்றெழுந்த கரிய காலையுடைய வெளிய நாரைகள் வெளிய உப்புக்குவட்டின்மேலாக அரிய சிறகைவீசிப் பறந்துசென்று கரையிலுள்ள கரியகிளைகளையுடைய புன்னைமரங்களிலே தங்குதல்கொண்டன; திரண்ட தண்டினையுடைய நெய்தல்மலர் மறையும்படியாக நீர் பெருகுங் கழியின்கண்ணே துணையோடு சுறுமீன் இயங்குதலுஞ்செய்யும்; அவ்விடத்தில் இரவில் ஒலிக்கின்ற குளிர்ச்சியையுடைய கடலில் மிக்க விளக்கங்களைக் கொண்டு எமது சுற்றத்தாரும் மீன்வேட்டையாடச் சென்றுவிட்டனர்; ஆதலால் பொங்குகின்ற பிசிரையும், முழவுபோல ஒலித்தலையுமுடைய அலையெழுந்து உடைந்துவிழுகின்ற கடற்கரையிலுள்ள நெய்தனிலத்தில் யாங்களுறைதலையுடைய எம்மூரின்கண் இன்றிரவிலே தங்கிச்செல்லின் என்னகுறைபாடுண்டாகுமோ? எ – று.

வெண்குவடு – வெளியமணற்குன்றுமாம். இறைகொள்ளல் – தங்குதல். வழங்கலும் வழங்கும், முழுவதூஉங்காரியவாசகமாயேநின்றது. ஊர்க்கு – ஊரின்கண்; உருபுமயக்கம்.

துறைபுலம்பின்று என மக்களியங்காமையும் இயங்காதவழி ஆறலைப் போரால் ஏதநிகழுமென்பதுங் குறிப்பித்தாள். தலைவியோடுறைகவென்

(பாடம்) * அருந்தெழுந்த.

பாள், குருகுகள் மனையிலே தங்குதல்கொண்டன காணுதிரென்றுள். நெறியிலே தன்கொம்பா லூறிழைக்குஞ் சுறுமீன் துணையோ டியங்கலுமாமென இதுவும் நெறியினது ஏதங்கூறித் தலைவியொடு தலைப்பெய்திருக்கப் பணித்ததாம். எமரும் வேட்டம்புக்கனரெனத் தமரா லேதநிகழாமைகூறினவள் செல்லுதிரேல் நெறியில் அவர்கண்டு ஊறிழைப்பினும் இழைப்பரென அச்சுறுத்தினளுமாம். இரவில் தலைவியின் மனையகத்துத் தங்குவதனை விரும்புதற்கு வரைந்தன்றி வெளிப்படையாகத் தங்க வியலாதாதலா லிது வரைவுகடாதலாயிற்று. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (சுஎ)

## சுஅ. பிரான்சாத்தனர்

**குறிஞ்சி :** இது, சிறைப்புறமாகத் தோழி
செறிப்பறிவுறீஇயது.

தலைவிக்குரைப்பாளாய்ச்

எ - து, சிறைப்புறத்தானாகிய தலைமகனுக்கு இற்செறிப்புணர்த்தி அவன் வரையுமாற்றுனே, அவர்மலையில் மழைபெய்து வெள்ளம்வாராநின்றது, நம்மை இல்வயிற்செறித்திருப்பதை விட்டுவிடும்படியாக யாரேனுஞ் சென்று கூறினல், அன்னை விடுவளோ ? விடுவளாயின் நமதுநோய் நீங்கும்படி ஆடுகிற்பேம் ; அங்ஙனங்கூறுவாரைப் பெறுமையின் அது கழிந்ததெனத் தோழி தலைவியைநோக்கி வருந்திக் கூறுநிற்பது.

விளையா டாயமோடு ஓரை யாடாது

இளையோர் இல்லிடத் திற்செறிந்

திருத்தல்

அறனும் அன்றே ஆக்கமுந்

தேய்ம்மெனக்

குறுநுரை சுமந்து நறுமலர் உந்திப்
பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண ஆடுகம்
வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே.
செல்கென விடுநள்மன் கொல்லோ எல்லுமிழ்ந்து
உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்
கொடிநுடங் கிலங்கின மின்னி
ஆடுமழை இறுத்தன்றவர் கோடுயர் குன்றே.

**உரை**:—அவரது சிகரமுயர்ந்த குன்றம் ஒளியை யெங்கும்பரப்பி வலிய இடிமுழங்குகின்ற இரவிருளில் நடுயாமத்திலே கொடிநுடங்கினாற் போன் றிலங்கினவாய்மின்னி இயங்குகின்ற முகில் தங்கி மழையைப்பெய் யாநின்றது ; இப்பொழுது 'இளமங்கையர் தாம் விளையாடுகின்ற தோழியர் கூட்டத்தோடு ஓரையாடாமல் வீட்டில் இற்செறிக்கப்பட்டிருத்தலானது அறநெறியன்று, அன்றிச் செல்வமுந் தேய்ந்துவிடும்' என்று விரைந்து சென்று அன்னையை வணங்கிச் சொல்லுபவரை நாம் பெறுவேமாயின் அவ்வன்னை நம்மைநோக்கி நீயிர் செல்வீராகவென்று விடுப்பாளோ ? அங் ஙனம் விடுப்பின் அவர்மலையிற் பெய்யுமழை குறியநுரைகளைச் சுமந்து கொண்டு நறியமலர்களுடனே யாற்றிற்பொங்கிவருகின்ற புதுநீரை உள் ளம் மகிழ யாம் ஆடாநிற்போம் ; அங்ஙனங் கூறுவாரைப் பெற்றிலேமாத லால் யாங்கொண்ட அவா வீணேகழிந்தது ; எ - று.



ஓரை - பஞ்சாய்ப்பாவைகொண்டு மகளிராடும் விளையாட்டு. உந்தி - யாறு. ஆக்கம் - செல்வம். குன்றம்முகில் மழையிறுத்தன்று என இடத்து நிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. மன் - கழிவுப்பொருளது. எல்லுமிழ்ந்து மின்னியெனக்கூட்டுக. நறுமலருடனே பொங்கிவருமெனக் கூட்டுக.

இளையோர் ஆடவரெனக்கொண்டு இளையோரில்லாதவிடத்திருத்தல் அறனுமன்று என்றவழி அங்கருத்துத் தலைவி காதலனை முயங்கவேண்டினும் பாதுகாப்பாரில்லாதவிடமென்று அன்னை கொள்ளுதற்பொருட்டெனவுமாம். வரைவுநீட ஆற்றாத தலைவியின் வேறுபாடு புறத்தார்க்குப்புலனாகாமை மறையுமென்னுங்கருத்தால், அவர் மலையினின்றுவருகின்ற நீரினுடகமென்றாள். இற்செறிந்திருத்த லென்றதனால் செறிப்பறிவுறுத்தியதாயிற்று. மெய்ப்பாடு - அழுகை. பயன் - தலைவியையாற்றுவித்தல். (சு அ)

## சுகூ. சேகம்பூதனார்

முல்லை : இது, வினைவயிற்பிரிதலாற்றாளாய தலைவி சொல்லியது.

எ - து, வினைவயிற் பிரிந்துபோன தலைவன் குறித்தபருவத்து வாராமையால் அதனை யாற்றாத தலைவி மாலைப்பொழுதுவருதலும் மிகத்துன்புற்று இம் மாலைப்பொழுது அவர்சென்றநாட்டும் இத்தன்மையதாய் வருத்திப்புகுமாயின் அவர் தாமெடுத்துக்கொண்ட வினைமேற்செல்லும் பற்றுள்ளம் விடுத்து இன்னேவருகுவர்; அப்படியில்லைப்போலுமென வருந்திக் கூறுநிற்பது.

பல்கதிர் மண்டிலம் பகல்செய் தாற்றிச்
சேய்உயர் பெருவரைச் சென்றவண் மறையப்
பறவை பார்ப்புவயின் அடையப் புறவின்
மாயேருத்து இரலை மடப்பிணை தழுவ
ரு. முல்லை முகைவாய் திறப்பப் பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல்விளக் குறூஅ

மதர்வை நல்லான் மாசில் தெண்மணி
கோடுங்கோற் கோவலர் குழலோ
டொன்றி
ஐதுவந் திசைக்கும் அருளில் மாலை
க0. ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்
இனைய ஆகித் தோன்றின்
வினைவலித் தமைதல் ஆற்றலர் மன்னே.

உரை:—பலகதிர்களையுடைய ஆதித்தமண்டிலம் பகற்பொழுதைச் செய்துமுடித்து மிகவுயர்ந்த பெரிய அத்தமயமலையிற் சென்று அங்கே மறையவும், பறவைகள் தம் பிள்ளைகளிருக்குங் கூட்டிற்சென்று தங்கியிருப்பவும், காட்டின்கண்ணே கரிய பிடரியையுடைய கலைமான் இளைமையையுடைய தன்பெண்மானைத் தழுவியிருப்பவும், முல்லையரும்புகள் மலரவும், பலவிடங்களிலுமுள்ள புதர்தோறும் காந்தள் தழைத்துத் தன்மல





ராகியவிளக்கேந்திநிற்பவும் செம்மாப்பையுடைய நல்ல பசுவின் குற்றமற்ற மணியின் தெளிந்தவோசை வளைந்த கோலையுடைய ஆயர்தங் குழலோசையோடு சேர்ந்து மெல்விதாகவந்து ஒலியாநிற்கும் அருளில்லாத இம்மாலைப்பொழுதானது பொருளீட்டுமுயற்சியால் நம்மைக் கைவிட்டகன்ற தலைவர் சென்றநாட்டிலும் இத்தன்மையாகத் தோன்றுமாயின் அவர்தாம் ஏறட்டுக் கொண்ட செயலின்கண்ணே உறுதிகொண்டு தங்கியிருப்பாரல்லர்; அப்படியில்லாமற்கழிகின்றது; எ - று.

பார்ப்பு - இளம்பறவை. உரு - உடன்பாட்டெச்சம். தெண்மணி-மாலையிற்போதரும் பசுக்களை ஏறுசென்று புணர்தலாலே அப்பசுவின் கழுத்திட்ட மணி விரைந்தொலிக்குந் தெளிந்த ஓசை. ஐது - மெல்லிது. மன் - கழிவு.

மண்டிலம் ஆற்றி மறையவென்றது பகலின் வெம்மையடங்கியதும் காமக்களியாட்டயர்தற்குரிய பொழுது போதருகின்றதுங் குறிப்பித்தது. பறவை யடையவென்றது குடம்பையிற் பிரிந்துசென்ற புள்ளினம் மீண்டு வந்து புகும்பொழுதத்துங் காதலர் வந்திலரேயென மாலைநோக்கி யிரங்கியதாம். இரலை பிணையைத் தழுவுங்காலம் அதுவேயாதலின் இங்ஙனம் காதலர்வந் தென்னைத் தழுவினாரிலரேயென இதுவும் அம்மாலையைநோக்கி வருந்திக்கூறியதாம். முல்லை முகைவாய்திறப்பவென்றது நறுமணங் கொடுக்கும் முல்லைமலருங்காலம் மாலையாதலின் இதுவும் அம்மாலையை நோக்கியதாயிற்று. காந்தள் புதவில்விளக்கெடுப்பவென்றது மாலைமறையின் விளக்கொடாயினும் போதரினலனெய்துவேனென இதுவும் அதனையே நோக்கிற்று. ஏனையவெளிப்படை. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (சுகூ)

# எ0. வெள்ளி வீதியார்

**மருதம் :** இது, காமமிக்க கழிபடர்கிளவி.

எ - து, இருவகைக்குறியானும் வந்தொழுகுந் தலைமகன் இடையீடுபட்டு வாராதொழியக்கண்ட தலைமகள், வரைதல்விருப்பினளாய் வேட்கை பெரிதுஞ்சிறப்பச் சிந்தித்து நாரையைநோக்கிச் சிறியவெளியநாராய், தலைவர்க்கு யான்படுந் துன்பத்தைச் செப்பாதோய், எம்மூரின் இரையை அருந்தியபின் அவரூர்க்கேனுஞ்செல்; அதனையு மறப்பையோவென வருந்திக் கூறுநிற்பது.

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே

துறைபோகு அறுவைத் தூமடி அன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
எம்மூர் வந்தெம் ஒண்டுறைத் துழைஇச்
ரு.

சினைக்கெளிற் *றார்கையை அவரூர்ப் பெயர்தி
அனையஅன் பினையோ பெருமறவியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்

---

(பாடம்) * கெடிறு.





கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே.

உரை :—சிறியவெளியகுருகே, சிறியவெளியகுருகே, நீர்த்துறையிலே கழுவிய வெள்ளாடையின் மாசற்ற மடிபோன்ற நன்னிறம்விளங்கிய சிற கினையுடைய சிறியவெளியகுருகே, அவ்விடத்துள்ள இனிய புனல் இவ்வூ ரின்கண்ணேவந்து பரக்கின்ற கழனியையுடைய நல்லவூரினையுடைய எனது காதலர்பாலேகி என்னுடைய கலன்கள் கழலுகின்றதுன்பத்தை இதுகாறுஞ்சொல்லாதோய்; நீ எம்மூரினையடைந்து எமது ஒள்ளிய பொய் கையினது துறையிலேபுகுந்து தூவிச் சிறையுள்ள கெளிற்றுமீனைத் தின்றனையாகி அப்பால் அவருடையவூர்க்குச் செல்வாயாக; எம்மூர்வந் துண்ட நன்றிமறவாமல் இனி அவரிடங்கூறுதற்குத்தக்க அனைய அன் பினையுடையையோ? அன்றேல் பெரியமறதியையுடையையோ? ஒன் றினை ஆராய்ந்து கூறிக்காண்; எ - று.

குருகு - நாரை; கொக்குமாம். அறுவை - ஆடை. தூவி - சிறகு. மறவி - மறதி. பருவரல் - துன்பம். வெள்ளாங்குருகு, ஆம் - சாரியை. இஃது அழிவில்கூட்டத்தின்கண்ணதாகிய தூதுமுனிவின்மை.

ஆங்கண் தீம்புனல் ஈங்கண்பரக்கும் கழனி என்றது அவரூரிலுள்ள இனியபுனலே இங்குவருதலால் நீசென்றக்கால் அங்கும் இரையைப்பெறு தற் கியலுமென்றும் கழனியின்புன லீண்டுவருதலால் ஊரும் அணித் தேயாமாதலின் வருந்தா தேகுதற்கியலுமென்றுங் கூறியதாம். அனையஅன் பினையோவென்றது எம்மூர்வந்துண்ட நன்றிமறவாமல் இனி அவரிடங் கூறுதற்குத்தக்க அத்தகைய அன்புடையையோவென்றதாம். மெய்ப்பாடு- அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (எ0)

## எக. வண்ணப்புறக் கந்தரத்தனார்

பாலை: இது, தலைவனைத் தோழி; செலவழுங்குவித்தது.

எ - து, தலைவன் தான் பொருள்வயிற் பிரிவதைத் தலைவிக்குணர்த்தும்படி வேண்டத் தோழி, நும்பாலுள்ள கண்ணோட்டத்தால் அவள் விடுப்பினும் புறுக்கள் ஒன்றனையொன்று புணர்ச்சிக்கு அழைக்கின்ற குரலைக் கேட்டு அவள் பெரிதும் ஆசையாலழிந்து தேயுமாறு அவளைத் தைவந்து விடுத்துப் போதற்கும் வன்மையுடையீரோவென்று அவன் செலவழுங்கக் கூறுநிற்பது.

மன்னுப் பொருட்பிணி முன்னி, இன்னதை
வளையணி முன்கைநின் இகுளைக்கு உணர்த்தெனப்
பன்மாண் இரத்தி ராயிற் சென்மென
விடுந ளாதலும் உரியள் விடினே
கண்ணும் நுதலும் நீவி முன்னின்று
பிரிதல் வல்லிரோ ஐய செல்வர்
வகையமர் நல்லில் அகஇறை உறையும்
வண்ணப் புறவின் செங்கால் சேவல்



வீழ்துணைப் பயிருங் கையறு முரல்குரல்
நும்மிலள் புலம்பக் கேட்டொறும்
பொம்மல் ஓதி பெருவிதுப் புறவே.

உரை :—ஐயனே ! நிலையில்லாத பொருளைத்தேட ஆசைபிணித்த லானே அதன்கண்ணே கருத்தைச்செலுத்தி இக்காரியத்தை வளையணிந்த முன்கையையுடைய நின்தோழிக்குக் கூறுவாயாகவென்று பலவாக மாட்சிமைப்பட இரந்துகூறுகின்றனிராதலால், யான் சென்றுகூறின் 'நீயிர் செல்லுவீராக' என்று உம்மை விடுத்தலுஞ்செய்வாள்; அங்ஙனம் அவள் நும்மைவிடுப்பினும் செல்வருடைய பலகட்டுக்களமைந்த வீட்டின்கண்ணே உள்ளிறப்பிலிருக்கும் அழகிய சிவந்த கால்களையுடைய சேவற்புறா தான் விரும்பிய பெண்புறாவைப் புணர்ச்சிக்கு அழையாநிற்கும் காமத்தாற் செயலறவுகொண்டொலிக்கின்ற அக்குரலோசையை, நும்மைப்பிரிந்து தனிமையாயிருந்து கேட்குந்தோறும் எம் பொலிவுபெற்ற கூந்தலையுடைய தலைவி பேரவாவால்நடுங்கி வருந்துமாறு அவளுக்குமுன்புநின்று நீயிர் அவளுடைய கண்ணையும் நெற்றியையும் தைவந்து பிரிந்துபோதற்கு வன்மையுடையீரோ? உடையீராயின் சென்று சொல்லுவேன்; எ – று.

செல்வரக இறையுறையும்புறவு-செல்வமாந்தரால் வளர்க்கப்பட்டு அகரது உள்ளிறப்பில்விளையாட்டயரும்புறவு. பயிர்தல்-புணர்ச்சிக்கழைத்தல் பலபடிபயிர்தலால் கையற்றமுரல்குரலுமாம். விதுப்பு - ஆசையினுள் வருந்துகின்றவருத்தம்.

இன்னேநிலையுற்ற இவளது காமவின்பத்தை இகந்து நிலையில்லாத பொருளை விரும்பிய நும்மறிவிருந்தபடிதா னென்னையென்பாள் மன்னும் பொருட்பிணிமுன்னினிரென்றாள். புறாக்கள் இடைவிடாது புல்லிப் புணருமியல்பின. அவற்றைநோக்குவார்க்குக் காமவின்ப மீதூருமாதலின் அதன்பொருட்டும் புறாவளர்ப்பது மக்களுக்கியல்பு. மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - செலவழுங்குவித்தல்

## எஉ. இளம்போதியார்

நெய்தல் :

இது, தோழி சிறைப்புறமாகத் தலைவிக்குரைப்பாளாய்ச் சொல்லியது.

எ - து, சிறைப்புறத்தானாகிய தலைவன் கேட்டு வரையுமாற்றானே தலைவியைநோக்கி முன்பு யான் அன்னைக்கு அஞ்சுவேனாதலிற் பெயர்ந்து போவாயென்றுகூறினும், நம்மைவிட்டு நீங்காத தலைவன் இப்பொழுது நட ஆயம் அறியினும் என்னஏதம்வருமோவென்று நடுங்குகின்றனனாதலின் நம்பால் அவன் வைத்தநட்பு இனி ஒழியுமென யானஞ்சுகின்றேனென்று தோழி கவன்றுகூறாநிற்பது.

பேணுப பேணார் பெரியோர் என்பது
நாணுத்தக் கன்றது காணுங் காலை
உயிரோர் அன்ன செயிர்தீர் நட்பின்
நினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரிது
ரு. அழிதக் கன்றால் தானே கோண்கன்



யான்யாய் அஞ்சுவல் எனினுந் தானே
பிரிதல் சூழான், மன்னே இனியே

கானல் ஆயம் அறியினும் ஆனாது

அலர்வது அன்றுகொல் என்னும்

அதனால்

௧௦. புலர்வது கொல்லவன் நட்பெனு

அஞ்சுவல் தோழிஎன் நெஞ்சத் தானே.

உரை :—தோழீ! பெரியோர் தாம் விரும்பியொழுக வேண்டுவனவற்றில் அங்ஙனம் விரும்பியொழுகாரென்று கூறுவதுதான் அதனை ஆராய்ந்து நோக்குமிடத்து எனக்கே வெட்கமுடைத்தாயிராநின்றது; உயிர் ஒன்றாயிருந்தாலொத்த குற்றமற்ற நட்பினையுடைய நினக்கு யான் மறைப்பதானது எவ்வளவு பெரிய மானக்கேடாயிராநின்றது? முன்பு 'யான் அன்னைக்கு அஞ்சுவேனாதலின் நீ அகன்றுபோவாய்' என்றாலும் அக்காலத்து நமது கொண்கன் நம்மைவிட்டுப்பிரியக் கருதுபவனல்லன்; அதுகழிந்தது; இப்பொழுதோவெனின் இக் களவொழுக்கம் கானலின்கண் விளையாட்டயர்கின்ற தோழியர்கூட்டம் அறிவதாயினும் அடங்காமல் எங்கேவெளிப்படுமோவென்றஞ்சிக் கூறாநிற்பன்; ஆதலின் அவனது நட்பு இல்லையாய் விடுமோவென்று என்னெஞ்சத்தில் அஞ்சாநிற்பேன்; எ - று.

மன் - கழிவு. 'பேணுப...தக்கன்று' என்றது நம்பால்விரும்பியொழுகுந் தலைமகன் இப்பொழுது அப்படியொழுகவில்லையென்று நான் நினக்குச் சொல்லவருவது எனக்கே வெட்கமுடைத்தென்றவாறு. இது பிறிது மொழிதலணி. அன்னையறியின் ஏதம்பயக்குமென்றறிந்துவைத்தும் நம்மை நீங்காமை காதல்மிகுதிபற்றி. இப்பொழுது தோழியர்கூட்டம் அறியினும் அஞ்சியகல்வது அக் காதல்குறைந்தமைபற்றி. இனி அவனட்பு அஃகியது போலுமென்றதாம். கேட்டிருந்ததலைமகன் இதனைத் தலைவியறியின் இறந்துபடுமோவென்று பிறழ்ந்தொழுகி வரைவொடுபுகுவானாவது. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் - வரைவுடன்படுத்தல். (௭௨)

## ௭௩. மூலங்கீரனார்

பாலை: இது, செலவுக்குறிப்பறிந்து வேறுபட்ட லியது.

தலைவி சொல்

எ - து, தலைமகன் வினைவயிற் பிரிந்துபோதலையறிந்த தலைவி; அவன் கேட்டுச் செலவழுங்குமாற்றானே தோழியைநோக்கித் தலைவரோடு முயங்கிக்கிடப்பினும் கொடிய மாலைப்பொழுதில் அஞ்சுகின்ற யான் இங்கே தனிமையிற்றங்கி வாடும்படி அவர் நம்மைக் கைவிட்டுச்செல்லுகிற்பரெனச் சொல்லுவராதலின் இனி யான் எங்ஙனமாற்றுவேனென வருந்திக் கூறுகிறபது.

வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன
மாணா விரல வல்வாய்ப் பேஎய்

மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய
மன்றம் போழும் புன்கண் மாலைத்

மூலமும் உரையும் அரு

ரு. தம்மோடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச்
செல்ப என்ப தாமே செவ்வரி
மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்

செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்

பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்
கo. நுதல்கவின் அழிக்கும் பசலேயும்
அயலோர் தூற்றும் அம்பலும் அளித்தே.

உரை :—வேனிற்காலத்துச் செம்முருக்கின் பூங்கொத்தில் காய்த்துப் பழுத்து முற்றிய நெற்றுப்போன்ற மாண்பில்லாத விரல்களையுடைய பூச விடுகின்ற வலிய வாயையுடையபேய், வளப்பத்தையுடைய பழைமையாகிய ஊரின்கண்ணே தெய்வத்தின் முன்னிடப்படும் அருச்சனையுடனாகிய ஊன் மிடைந்த பலிச்சோற்றை யுண்ணவேண்டித் தான் நிலைபெற்றிருக்கின்ற பாழ்மன்றத்தை மோதியெழுகின்ற பிரிந்தாரைத்துன்புறுத்து மாலைப் பொழுதிலே நமது தலைவரொடு முயங்கிக்கிடப்பினும் அஞ்சுகின்ற நாம், தனியே இங்குத் தங்குமாறு நம்மைக் கைவிட்டுச் செல்லிய ஐதாகியமயிரை நிரைத்துவைத்தாற்போன்ற நீண்ட திரட்சியையுடையனவாய் விளைந்த செந்நெற் கதிர்களையுடைய வயல்களில் அன்னப்பறவை துஞ்சாநிற்கும் பொலிவுபெற்று விளங்கிய கொல்லைகளையுடைய திருச்சாய்க்கானத்தைப் போன்ற எனது நெற்றியினழகையழிக்கும் பசலையையும், அதனைநோக்கி அயலிலாட்டியர் தூற்றும் பழிச்சொல்லையும் எனக்குக்கொடுத்துத் தாம் செல்லுகிற்பரென்று உழையர் கூறுநிற்பர்; இனி யான் எங்ஙனம் ஆற்று வேன் ? எ - று.

மயிர் - நெல்வாலுக்குவமை. கோல் - திரட்சி. இனியான் என்பது முதற் குறிப்பெச்சம்.

இறைச்சிகள் :—(க) பேய் மலர்ப்பலியுண்ணவேண்டி மன்றத்தைப் புடைத்தெழுமென்றது, பசலையானது என்னலத்தை யுண்ணவேண்டி நெஞ்சைப் புடைத்து நெற்றியிலெழுமென்றதாம்.

" " (உ) செறுவில் அன்னந்துஞ்சுமென்றது, யானும் சேக்கையின்கண்ணே அவர் மார்பிற்றுஞ்சியிருந்தேன்; இப்பொழுது அஃதில்லைபோலுமென்றிரங்கியதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயா வுயிர்த்தல்.

# எச. உலோச்சனார்

**நெய்தல் :** இது, தலைவி பாணற்கு வாயின் மறுத்தது.

எ - து, தலைவி புதல்வனைப்பெறுங்காலத்துப் பரத்தையிற் பிரிந்த தலைவன், அவள் நெய்யாடியபின்வந்து புலவிநீக்கவேண்டிப் பாணனை விடுப்ப அப்பாணனைநோக்கித் தலைவன் ஏதிலாளனாயினன், காதற்பரத்தை மனைவியேயென்றிவ்வூரறிந்துவிட்டது இனிமாறாது; ஆதலின் அதனை மறைத்து ஈண்டுக் கூறாதொழியெனத் தலைவி புலந்துகூறாநிற்பது.



வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை
இடிக்குரல் புணரிப் பௌவத் திடுமார்
நிறையப் பெய்த அம்பி காழோர்
சிறையருங் களிற்றிற் பரதவர் ஒய்யுஞ்
ரு. சிறுவீ ஞாழல் பெருங்கடற் சேர்ப்பனை
ஏதி லாளனும் என்ப போதவிழ்
புதுமணற் கானல் புன்னைநுண் தாது

கோண்டல் அசைவளி தூக்குதோறுங்
குருகின்

கo.

வெண்புறம் மோசிய வார்க்குந் தெண்கடல்
கண்டல் வேலிய ஊர்அவன்
பெண்டென அறிந்தன்று பெயர்த்தலோ
அரிதே.

உரை :—திருத்தமாகச் செய்யப்பட்ட கதிரிட்டுமுறுக்கிய வலிய கயிற்றாற்பின்னிய பெரியவலையை இடிபோலமுழங்குகின்ற அலைகளையுடைய கடலிலிடும்பொருட்டு, நிறைய ஏற்றப்பட்ட தோணியைப் பரிக்கோற்காரர் பிணித்துச் செலுத்துகின்ற அடக்குதற்கரிய களிற்றியானையைப் போலப் பரதவர் செலுத்தாநிற்கும் சிறியமலரையுடைய ஞாழல்மரங்களையுடைய பெரிய கடற்கரைக்குத் தலைவனைக்குறித்து 'அவன் நுமக்கு நட்புடையனல்லன்; ஏதிலாளனுமாயினன்' என்று பலருங்கூறுநிற்பர்; அதற்கேற்ப மலர் விரிகின்ற புதிய மணற்பரப்பையுடைய சோலையிலுள்ள புன்னையின் நுண்ணிய மகரந்தப்பொடி ஓடுகின்ற கீழ்காற்றுவந்து மோதுந்தோறும் குருகின் வெளிய முதுகில் நெருங்கத் தூர்க்காநிற்கும் தெளிந்த கடற்கரையிலுள்ள கண்டல் மரம் நிரம்பிய வேலியையுடைய இவ்வூரானது 'அவனால் விரும்பப்படும் பரத்தையானவள் அச்சேர்ப்பனுக்கு மனைக்கிழத்தியாயினள்' என்று கூறுகின்றது ; அங்ஙனமுண்டாகிய வார்த்தையைப் பெயர்த்தொழித்தல் இனி யாவர்க்கும் அரியதொன்றாகும் ; ஆதலிற் பாண ! ஈண்டு வராதேகொள் ; எ – று.

அம்பி - தோணி. ஒய்யும் - செலுத்தும். தூக்குதல் - அசைத்தலுமாம். மோசிதல் - நெருங்கல். இனி ஒசியவெனப்பிரித்துத் தாழவென்றுரைப்பினுமாம். போதவிழ்புன்னை யெனவும் ஆர்க்குமூரெனவுமியைக்க. ஆதலினென்பதுமுதற் குறிப்பெச்சம்.

உள்ளுறை :—பரதவர் தாம்திரித்த பெருவலையைக் கடலிலிட்டு மீன் பிடிக்கவெண்ணித் தோணியிலேற்றிச் செலுத்துவரென்றதனாலே தலைவன் தான்கற்ற சூழ்ச்சியை ஒருதூதுவழியேவிடுத்து என்னைவயமாக்கவெண்ணி அச்சூழ்ச்சியை நினக்குக்கற்பித்து நின்னைவரவிடுத்தானென்றதாம். களிற்றின் என்ற வினையுவமம் பரதவர் வலையைத்தோணியிலேற்றிச் செலுத்து மென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்துநின்றது. இது வினையுவமப்போலி.

இறைச்சி :—கீழ்காற்று மோதுதலாலே புன்னை நுண்டாது குருகின் மேலுதிர்ந்து அதனைமறைக்குமென்றது தலைவன்பிரிதலினாகிய காமநோயாலே பசலைதோன்றி என்மெய்முழுதுமூடி மறைத்து வேறுபடுத்திய தென்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின்மறுத்தல். (எ௪)

## மூலமும் உரையும்

அள்

## எரு. மாமூலனார்

குறிஞ்சி : இது, சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுகிய
கேட்பச் சொல்லியது.

தலைமகன் தோழி

எ - து, தலைவி கிடைத்தற்கரியளாமென அவளைச் சேட்படுத்திக் கூறுந்தோழி நகையாடிக் கூறக்கண்டதலைமகன் அந்நகைபொழுது அவளை நோக்கி இதுதகாதுகண்டாய்; அத்தலைமகளுடைய நோக்கம்பட்ட என்னுள்ளமுய்யுமாறு நகைசெய்யாதுரைப்பாய்; அன்றேல் என்னெஞ்சுடையுமெனப் புலம்பிக்கூறுநிற்பது.

நயனின் மையிற் பயனிது வென்றது

பூம்பொறிப் பொலிந்த அழலுமிழ்
அகன்பைப்
பாம்புயி ரணங்கி யாங்கும் ஈங்கிது
தகாஅது வாழியோ குறுமகள் நகாஅது
உரைமதி உடையுமென் உள்ளஞ் சாரல்
கொடுவிற் கானவன் கோட்டுமா
தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த ஆயிழை மழைக்கண்
உறாஅ நோக்கம் உற்றஎன்
பைதல் நெஞ்சம் உய்யு மாறே.

உரை:—இளமகளே, நீ நெடுங்காலம் வாழ்வாயாக; உன்னிடத்திற் சிறிதும் நன்மையில்லாமையால் இதுதான் பயனென்று கருதாமல், பொலிவுபெற்ற புள்ளிகளமைந்த அழல்போன்ற நஞ்சையுமிழ்கின்ற அகன்ற படத்தையுடைய பாம்பு உயிர்களைக்கொல்லும்பொருட்டுக் கடித்து வருத்தினாற்போலும் இங்கு நகைத்துரைப்பதாகிய இது தகுதியுடையதொன்றன்றுகாண்; மலைச்சாரலின்கண்ணே வளைந்த வில்லையுடைய வேட்டுவன் கோட்டினையுடைய பன்றியையெய்துகொன்று அதன்பசியதசையிற் பாய்ச்சியதனாலே சிவந்த அம்பைப்போலச் செவ்வரி பரந்த ஆராய்ந்த இழையையணிந்த தலைவியின் குளிர்ச்சியுற்ற கண்களினுடைய பொருந்தாப் பார்வையுற்ற எனது வருந்தியநெஞ்சம் உய்யும்வண்ணம் இங்ஙனம் நகைசெய்யாதுரைப்பாயாக; அன்றி நகைத்துக்கூறின் என்னுள்ளங் கலங்காநிற்கும்; எ - று.

கோட்டுமா - பன்றி. பயனிதுவென்னாது நகையாடிக்கூறுமிது பாம்பு அணங்கியதுபோலுமெனவுமாம். வாழி - இகழ்ச்சிக்குறிப்புமாம். உறாஅ நோக்கம் - செவ்வனேபாராது கடைக்கண்ணானோக்கும் நோக்கம். பைதல் -

வருந்துதல்.

அவன்படுந்துன்பத்தை யாற்றுவித்தற்கின்றி யசதியாடலின் நய னுடையையல்லையென்றான். இரக்கங்கூருதற்பொருட்டு வாழியோவென் றான். என்வருத்தமறியுந் திறத்தினையல்லைபோலுமென்பான் குறுமக ளென்றான்; இளமையோர் பிறவுயிர்படுந்துன்பத்தைக் கருதுமறிவுவாய்ந் திலராதலின். உறுநோக்கந் தன்னுயிரை வாட்டலின், கோட்டுமா தொலைச்சி ஊன்பெய்த பகழியை உவமித்தான். மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றுதுரைத்தல். (எ௬)

அஅ நற்றிணை நானூறு

# எசு. அம்மூவனார்

பாலை:

இது, புணர்ந்துடன் போகாநின்ற தலைவன் துத் தலைவிக்குரைத்தது.

இடைச்சுரத்

எ - து, உடன்கொண்டுசெல்லுந் தலைவன் தலைவியைத் தன் ஆயத் தொடு செல்வாள்போல ஆற்றுவித்துக்கொண்டு செல்கின்றான் நின் அடி கள் நோவாதிருத்தல்பொருட்டு ஆலமரத்தின்கீழேதங்கி இளைப்பாறி அஞ் சாது எங்கேதங்கவிரும்பினும் அங்கேதங்கி வருந்தாதேகெனக் கூறி மெல் லக்கொண் டேகாநிற்பது.

வருமழை கரந்த வால்நிற விசும்பின்

நுண்துளி மாறிய உலவை அம்காட்டு
ஆல நீழல் அசைவு நீக்கி
அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ
ஞ்.

வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள்
இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை
வீமலர் உதிர்ந்த தேனுறு புலவின்
கானல் ஆர்மணல் மரீஇக்
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி உயற்கே.

**உரை** :—தூய கலன்களையணிந்த இளமடந்தாய்! இந்த மெல்லிய பெரிய பழிச்சொல்லைத் தூற்றுதலையுடைய நினது ஊரின்கணுள்ள புன்னையின் காம்பிற்ற மலர் மிகுதியாக வுதிர்ந்ததனாலே தேன்மணம்வீசுகின்ற புலவினையுடைய கழிக்கரைச் சோலையின் மிக்க மணலிலேநடந்து, இப்பொழுது கற்கள்பதிதலாலே சிவந்த நின்னுடைய மெல்லிய அடிகள் வருந்தாதிருத்தற்பொருட்டு, வருகின்றமழை பெய்யாதொழிந்த வெளிய நிறத்தையுடைய விசும்பினின்று விழுகின்ற நுண்ணிய துளிகளும் இல்லையாகிய காற்றுச் சுழன்றுவீசும் அழகிய காட்டு நெறியகத்து ஆலமரத்தின் நிழலிலேதங்கி இளைப்பாறி அஞ்சுமிடங் காணினும் ஆங்கு அஞ்சாது மற்றும் எவ்வெவ்விடத்தே தங்கவேண்டினும் அவ்வவ்விடத்தே தங்கிச் சிறிதும் வருத்தமுறாமல் ஏகுவாயாக; எ - று.

வானிறவிசும்பு - மேகம்போன்ற கரியநிறமுடைய விசும்புமாம். உலவை - காற்று. அசைதல் - தங்குதல். அஞ்சுவழியென்றது மறவர் குழாம், ஆளி, எண்கு முதலிய காணுதன கண்டவிடத்தஞ்சுதல்.

தன்விறலைத்தெரிப்பான் அஞ்சுவழியஞ்சாதென்றான். நெடுந்தூரம் போந்தனமாதலி னினித் தமர்தொடர்ந்துவருவர்கொலென்னும் அச்ச மில்லை யெனக்கொண்டு அசைவழி யசைஇ யென்றான். புன்னைமலர்ப் பரப்பி னியங்கிய அடிகளாதலிற் கல்லினிடத்துச் சிவந்தவேயென் றிரங்கி வருந்தாதேகென்றான். இது நெய்தலிற்களவு. மெய்ப்பாடு - உவகை. பயன் - அயர்வகற்றல். (எசு)



## எஎ. கபிலர்

குறிஞ்சி: இது, பின்னின்றதலைவன்

நெஞ்சிற்குரைத்தது.

எ - து, தோழியை மதியுடம்படுக்கச்சென்ற தலைமகன், அவள்பாற் குறையுற்றுநிற்றலைக்கண்டு இவனொரு குறையுடையான்போலுமென அத்தோழி ஆராயுங்காலத்து அதுவரையும் பொறாத தன்னெஞ்சைநோக்கி நெஞ்சே, நமது காதலியினேக்கமே நம்மை இவள்பா லிரந்துபின்னிற்கும் படி செலுத்துகின்றதாதலின், இவள் உடன்படுங்காறும் நீ வருந்தாதே யென்று அஃது ஆற்றுமாறு கூறுநிற்பது.

மலையமா ஊர்ந்து போகிப் புலையன்

பெருந்துடி கறங்கப் பிறபுலம் புக்கவர்
அருங்குறும்பு எருக்கி அயாவுயிர்த்

தாஅங்கு

ரு.

உய்த்தன்று மன்னே நெஞ்சே செவ்வேர்ச்
சினைதொறுந் தூங்கும் பயங்கெழு பலவின்

சுளையுடை முன்றில் மனையோள் கங்குல்
ஒலிவெள் ளருவி ஒலியில் துஞ்சும்
ஊரலஞ் சேரிச் சீறூர் வல்லோன்

வாளரம் பொருத கோண்ஏர் எல்வளை
கo. அகன்தொடி செறித்த முன்கை

ஒண் ணுதல்

திதலை அல்குல் குறுமகள்
குவளை யுண்கண் மகிழ்மட நோக்கே.

உரை:—நெஞ்சே! சிவந்த வேர்களையுடைய கிளைகடோறுந் தூங்கும் பழங்கண்மிக்க பலாவின்சுளைகளையுடைய முன்றிலின்கண் மனைவியான வள் இரவில் நெருங்கிவிழுகின்ற வெளிய அருவியிளுெலியைக்கேட்டு உறங்காநிற்கும் பேரூரல்லாத சிலவாய சேரிகளையுடைய சீறூரின் கண்ணே, கைவல்வினைஞன் வாளரத்தா லராவிய வளைந்த அழகிய ஒளியை யுடைய வளையும் அகன்ற தொடியுமணிந்த முன்னங்கையையும், ஒள்ளிய நெற்றியையும், தித்திபடர்ந்த அல்குலையும், இளமையையுமுடைய நமது காதலியின் குவளைபோன்ற மையுண்ட கண்களின் மகிழ்ச்சியையுடைய இளம்பார்வையானது, மலைபோன்ற யானைமீதேறி நடத்திச்சென்று புலைய ளுல் முழக்கப்படும் பெரியதுடியானது ஒலிக்க வேற்றுநாட்டிற்புகுந்து அப்பகைவரது கடத்தற்கரிய அரணையழித்து அயர்வுயிர்த்தாற்போல நம்மை இவள்பால் மிகச் செலுத்தாநின்றது; ஆதலின் இவள் உடன்பட்டுக் கூறுங்காறும் நீ முயன்று வருந்தாதேகொள்; எ – று.

குறும்பு – அரண். எருக்குதல் – அழித்தல். மன் – மிகுதி. வேரின் பகுப்புக்கடோறும் பழந்தூங்குமென்றனுஉ மாம். மலை, அம், மா–மலையமா; அம் – சாரியை. சீறூர்க்குறுமகளென இயைக்க. பல வீடுகள் சேர்ந்திருப் பது – சேரி. மடநோக்கு – உள்ளொன்றுகொள்ளாத நோக்குமாம்.

எனவே அரிய அரணையழித்து இளைத்ததுபோல யாமும் இவளது மனத்தி னிலையை நெகிழ்த்தி யிளைத்தனம், தலைவியின்கண்ணேக்கம் நம் மைச் செலுத்துகின்றமையான் இனி யெய்தவும்பெறுமாதலின் நீ வருந் தற்கவென்றதாயிற்று. மெய்ப்பாடு – அழுகை. பயன் – ஆற்ருதுரைத்தல்.

## எஅ. கீரங்கீரனார்

நெய்தல்: இது, வரைவுமலிந்தது.

எ - து, வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்தோன் குறித்தபருவத்து வாராமையால், தலைமகள் வருந்தியிருக்கும்பொழுது அவன் வரைவொடுவருகின்ற குறிப்பறிந்த தோழி அவளைநோக்கி நிதியுடன் அவர் வருகின்ற தேரினொலியைக் கேட்பாயாக, இனி நாம் படுகின்ற துயரம் நீங்குகிற்போங்காணென உவந்து கூறுகிறபது.

கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி
மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்
பொன்னேர் நுண்தாது புன்னை தாஅம்
வீழ்தாள் தாழைப் பூக்கமழ் கானல்
படர்வந்து நலியுஞ் சுடர்செல் மாலை
நோய்மலி பருவரல் நாமிவண் உய்கம்
கேட்டிசின் வாழி தோழி தெண்கழி
வள்வாய் ஆழி உள்வாய் தோயினும்
புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக்

கலிமா

வலவன் கோலுற அறியா
உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே.

உரை :—தோழீ! வாழி; தெளிந்த கழியின்கணுள்ள நீரிடத்துப் பெருமைவாய்ந்த நேருருளின் உள்வாயளவு அழுங்கப்பெறினும் பறவை பறந்துசென்றாற்போன்ற பொன்னாற்செய்யப்பட்ட கலமுதலியவற்றை யுடைய மனஞ்செருக்கிய குதிரை தேர்ப்பாகன் தன் தாற்றுக்கோலாலே தூண்டப்பட்டறியாத பரவிய கடனீர்ச்சேர்ப்பனது தேரின் மணியொலிக் குங் குரலைக்கேட்பாயாக; கொல்லுந்தன்மையுள்ள சுறாமீன் இயங்குகின்ற ஒள்ளிய நிறத்தையுடைய பெரிய கழியிடத்து மலர்ந்த நீலமணிபோன்ற நெய்தலின் கரியமலர் நிறையுமாறு புன்னையின் பொன்போன்ற நுண்ணிய தாது பரக்கும் வீழ்ஊன்றிய அடியையுடைய தாழைமலர் கமழ்கின்ற கடற் கரையிலுள்ள சோலையின்கண்ணே துன்பம்வந்து மேன்மேல் வருத்து கின்ற ஆதித்தமண்டிலம் மறையுமாலைப்பொழுதிற் காமநோய்மிகுதலானு கிய மிக்க துன்பத்தினின்றும் நாம் இனி இங்கு உய்ந்துவாழ்துங்காண்; எ - று.

கலிமா கோலுறஅறியாத் தேரெனக்கூட்டுக. நலியுமாலை தேர்மணிக் குரல் பிறக்குக் கேட்குமாறு வருதல் களவுக்காலத்தியைவதன்றாதலின் வரையவருகின்றனனெனக்கொண்டு வரைவுமலிந்ததாயிற்று.

இறைச்சிகள் :—(க) இருங்கழியின் நெய்தல்மலர் நிறைய நுண்ணிய தாதைப் புன்னை பரப்பாநிற்குமென்றது, சேரியிடத்து நமர் கையேற்ப நிரம்பிய பொற்குவியலைச் சேர்ப்பன் நம்மை வரைதற்பொருட்டுக் கொடா நிற்குமென்றதாம்.

" " (உ) தாழம்பூவின் மணம் கானலெங்குங் 'கமழுமென் றது நின்வரைவு நாடெங்கும் மாட்சிமைப்படுமென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (எஅ)

# எக. கண்ணகனார்

பாலை: இது, பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

தோழிக்குச்

எ - து, தலைவன் வினைவயிற்பிரிவதறிந்து உடம்புவேறுபட்ட தலைவி தோழியைநோக்கி நாம் தலைவர்பாற்சென்று பிரியாதிருக்கும்படிகூறி நமது காமத்தன்மையையுஞ் சொல்லுகிற்போம், அவர் பிரியின் யானிறந்துபடுவது திண்ணமாதலின் அங்ஙனஞ் சொல்லி அவர் செலவை மாற்றுவதன்றி வேறெவ்வகைச் சூழ்ச்சியாலே தடுப்பதென வருந்திக் கூறுநிற்பது.

சிறைநாள் ஈங்கை உறைநனி திரள்வீ
கூரை நன்மனைக் குறுந்தொடி மகளிர்
மணலாடு கழங்கின் அறைமிசைத் தாஅம்
ஏர்தரல் உற்ற இயக்கருங் கவலைப்
பிரிந்தோர் வந்துநப் புணரப் புணர்ந்தோர்
பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ
என்றுநாங் கூறிக் காமஞ் செப்புதுஞ்
செப்பாது விடினே உயிரொடும் வந்தன்று
அம்ம வாழி தோழி
யாதனில் தவிர்க்குவங் காதலர் செலவே.

உரை :—தோழீ! வாழி; இதனைக் கேட்பாயாக; 'ஈங்கையின் மூடியிருக்கின்ற தேன்றுளிமிகத்திரளும் மலர்களானவை, கூரையையுடைய நல்ல மனையின்கணுள்ள குறிய தொடியையுடைய மகளிர் தம் முன்றிலின் மணவிடத்து விளையாடுதற்கிட்ட கழங்குபோலக் கற்பாறையின்மே லுதிர்ந்து பரவாநிற்கும் அழகுபொருந்திய மக்களியங்குதற்கரிய கவர்த்தநெறியிலே பிரிந்துபோயினீரெனினும் இப்பருவத்துவந்து எம்மைக் கூடி முயங்கியுறையவேண்டியிருக்க எம்மைக் கூடியிருந்தநீவிர் இப்பொழுது பிரிந்துபோதற்கு நினைந்திருப்பதினுங்காட்டில் அரியகொடுமை பிறிதுமொன்றுண்டோ' என்று நாம் அவர்பாற்சென்றுகூறி நமது விருப்பத்தைச் சொல்லுகிற்போம்; சொல்லாதிருப்பின் அவர் அகலினும் அகன்று போவார்காண்; அங்ஙனம் அகல்வாராயின் திண்ணமாக என்னுயிருக்கே ஏதம்வந்துற்றது, ஆதலின், நாம் நேரிற்கூறி நிறுத்துவதன்றி நமது காதலருடைய செலவை வேறெத்தகைய சூழ்ச்சியாலே தவிர்க்கிற்போம்? ஆராய்ந்துகாண்; எ - று.

உறை - தேன்றுளி. அறை - பாறை. ஏர்-அழகு. வந்தன்று-தெளிவு பற்றியகாலவழுவமைதி. பிரிந்தோர், புணர்ந்தோர்- இடவழுவமைதி.

பிரிவுணர்தலும் உடம்புவேறுபட்டதாதலிற் பிரியின் இறந்துபடுவது திண்ணமெனக்கொண்டு உயிரொடும்வந்தன்றென்றாள்.

இறைச்சி :—தேனிறைந்தமலர் கற்பாறைமிசைத் தாம் என்றது வேட்கைநிறைந்த என்னெஞ்சம் அவர்வயிற் சென்றொழிந்ததென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (எகூ)



# அ௦. பூதன்தேவனார்

**மருதம் :** இது, சேட்படுக்கப்பட்டு ஆற்றுனைய கேட்பத் தன்னெஞ்சிற்குரைத்தது.

தலைவன், தோழி

எ - து, குறையைப்பித்தபின் தனது அருமையும் தலைவியின் பெருமையுமறிந்து நீட்டியாது வரைதல் காரணமாகத் தலைமகனுக்கு இயையாமல் தோழி மறுத்துக்கூறக்கண்ட அவன் ஆற்றுளுகி அத்தோழி கேட்டு விரைந்து கூட்டுவிக்குமாறு தன்னெஞ்சைநோக்கி அத்தன்மையளாகிய இளமகளல்லது யானுற்றநோய்க்குப் பிறிதொரு மருந்தில்லைகாணெனக் கவன்று கூறுகிறப்பது.

மன்ற எருமை மலர்தலைக் காரான்

இன்தீம் பால்பயங் கொண்மார்

கன்றுவிட்டு

ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்

பெரும்புலர் விடியலின் விரும்பிப்

போத்தந்து

ஞ. தழையுந் தாருந் தந்தனன் இவனென

இழையணி ஆயமொடு தகுநாண்

தடைஇத்

தைஇத் திங்கள் தண்கயம் படியும்

பெருந்தோள் குறுமகள் அல்லது

மருந்துபிறி தில்லையான் உற்ற நோய்க்கே.

உரை :—தொழுவத்துள்ள அகன்ற தலையையுடைய காரெருமையின் மிக இனியபால் நிரம்பக் கறந்துகொள்ளும்பொருட்டு அவற்றின் கன்றுக ளைத் தொழுவத்து நிறுத்திவிட்டு ஊரிலுள்ள மாடுமேய்க்கும் இளஞ்சிறு வர்கள் அவ்வெருமைகளின்மீ தேறிக்கொண்டு தனியே மேய்த்துவருதற் கேகாநிற்கும் பெரிய இருள்நீங்கும் விடியற்காலத்து விருப்பத்தோடு வந்து உடுக்குந்தழையும், சூடுமாலையும் இவன்தந்தான் என்று கலனணிந்த ஆயத் தொடு தகுதியுடைய நாணம் தன்னைவளைக்கப்பட்டு என்னைப்பெறுமாறு தான் எடுத்துக்கொண்ட நோன்பின்பயனைத் தைத்திங்களிலே தண்ணிய நீரிலாடுகின்ற பெரிய தோளையுடைய அவ்விளமகளே யானுற்ற நோயை நீக்குமருந்தா யமைந்துளாள்; அவளல்லது பிறிதொருமருந்து மில்லை காண்; எ - று.

மன்றம் - தொழுவம். தடவு - வளைவு; தடைஇ - வளைந்து. எருமைக் காரான் - இருபெயரொட்டு. விடியலிற்கயம்படியுமெனக்கூட்டுக.

அவளளித்தநோயாதலின் அதற்கு அவளேமருந்தென்றான்; "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை, தன்நோய்க்குத் தானே மருந்து" என்றார் (ககo௨.) குறளினும். நோன்பின் பயன்கருதி தைத்திங்க ளாடுபவளாத லின் யான் தழையுந்தாருங் கொடுத்த உதவிமறப்பவளல்லள்; உடன்படு மென்றவாறு. நோன்பின் பயனெய்தத் தைத்திங்கட்பிறப்பி னீராடுதலும் தைத்திங்கள் முழுவதும் வைகறையினீராடுதலுமாம்; இதனை "தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ" எனக் (ருக) கலியிற்கூறுமாற்றானுமறிக. வைகறையிற் புலஞ்சென்று மேய்ந்துவந்த எருமை நிரம்பப்பால்கறத்த லியல்பு.



இறைச்சி :—குறுமாக்கள் தலைவியாகவும், எருமையின்பால் மிகுதியா கக் கறக்கவிரும்புதல் நோன்பின் பயனை மிக விரும்புதலாகவும், அவற்றை ஊர்ந்துசெல்லுதல் தைத்திங்கள் விடியலி னீராடச்செல்லுதலாகவும் அதற் கேற்றவாறுகொள்க. மெய்ப்பாடு - தன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - ஆற்றாதுரைத்தல். இது மருத்துக்களவு. (அ0)

## அக. அகம்பன் மாலாதனார்

**முல்லை :** *இது, வினைமுற்றிய தலைவன்*

*தேர்ப்பாகற்குரைத்தது.*

*எ – து, சென்று வினைமுடித்த தலைவன் தேர்ப்பாகனை நோக்கி நம் அரசன் பகையைத் தணித்துவிட்டனனாதலால், நீ தேரைப்பூட்டிச் செலுத்துவாயாக ; வருந்தியுறையும் நம் காதலி நம்மைநோக்கி விருந்தயர் விருப்பாலாகிய இன்னகையைக் காண்பேமென்று உவந்து கூறுகிற்பது.*

இருநிலங் குறையக் கோட்டிப்
பரிந்தின்று
ஆதி போகிய அசைவில் நோன்தாள்
மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி
கோய்ம்மயிர் எருத்தில் பெய்ம்மணி
ஆர்ப்பப்
ரு. பூண்கதில் பாகநின் தேரே பூண்தாழ்
ஆக வனமுலைக் கரைவலம் தெறிப்ப
அழுதனள் உறையும் அம்மா அரிவை
விருந்தயர் விருப்போடு வருந்தினள்
அசைஇய
முறுவல் இன்னகை காண்கம்
கo. உறுபகை தணித்தனன் உரவுவாழ்
வேந்தே.

உரை :—பாகனே! வலிமைபொருந்திய நம்மரசன் மிக்க பகையைத் தணித்துவிட்டனன், இங்கினிக் காரியம் யாதுமில்லையாதலின், அகன்ற நிலங் குழியும்படி தன்காலாலேகொட்டிநடந்து விரைந்து நேராக ஓடுகின்ற களைப்பில்லாத வலிய கால்களையுடைய அரசரால் நன்குமதிக்கப்படுகின்ற மாட்சிமைப்பட்ட நடைத்தொழிலையுடைய குதிரையைக் கொய்யுமயிரையுடைய பிடரியிற்கட்டிய மணிகளொலிப்ப நின்தேரிலேபூட்டிச் செலுத்துவாயாக; பூண்கள்தாழ்ந்த மார்பிலுள்ள அழகிய கொங்கைமுகட்டிலே கண்ணீர் தெறித்து விழும்படியாக அழுதனளாகியுறையும் அழகிய மாமைநிறத்தையுடைய காதலி எமக்கு விருந்துசெய்யும் விருப்பினளாய் அட்டிற்சாலை புகுந்து விருந்துணவை வருந்தியமைத்துக் களைப்படைந்துடைய மகிழ்ச்சியோடமைந்த இனிய நகையைக்கண்டு மகிழ்வோமாக; எ – று.

ஆதி - நெடியசெலவுமாம். அசைவு - களைப்பு. ஆகம் - மார்பு. கரைவலம் - முகட்டினிடம். உறுபகை - மிக்கபகை. உரவு-வலிமை. தில்-விழைவின்கண்வந்தது. வேந்து பகைதணித்தன னென்றதனாலே தலைமகன் வினைவலபாங்காயினனெனக்கொள்க.

காதலியின் அழுதமுகத்தி னுடனே நகைகாண்டலின் காதலனுக்கு அளவையிலின்பந் தோன்றுமாதலின் அதனையிவன்கருதலும் மகிழ்ச்சிமிக்குத்தன்வயங்கடந்து பாகன்பாலுங்கூறினனையிற்று. மெய்ப்பாடு-உவகை. பயன் - கேட்டபாகன் தேர்கடாவல்; மகிழ்தலுமாம். (அக)



## அஉ. அம்மள்ளனார்

குறிஞ்சி: இது, தோழியிற்புணர்ச்சிக்கண் தன்னிலைக்கொளீ இயது.

எ – து, பாங்கியிற் கூட்டத்தின்கண்ணே குறியிடத்துத் தலைவியைக் கூடிய தலைவன் தன்னெஞ்சிற்கிடந்த கருத்தைக் கூறத்தொடங்கிக் கொடிச்சீ, முருகனொடு வள்ளிநாச்சியார் சென்றதுபோல நீ எஞ்சிறுகுடிக்கண் வந்திருக்குமாறு என்னொடு வருகின்றனையோ எனப் பரிவுற்று மெலிந்து கூறுகிறபது.

கோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப்பு உற்ற தோளை நீயே
என்னுள் வருதியோ, நல்நடைக் கொடிச்சி,
முருகுபுணர்ந்து இயன்ற வள்ளி போலநின்
உருவுகண் எறிப்ப நோக்கலாற் றலனே,
போகிய நாகப் போக்கருங் கவலைச்
சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
சேறுடு இரும்புறம் நீறுடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்புஅழீஇக்
கோள்நாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே.

உரை :—யான்கொண்ட காமநோயும் அதனலாய மெய்யின் தளர்ச்சியும் ஒழியுமாறு முயங்கிக்கிடந்த சிறப்புற்ற மூங்கில்போலும் அழகமைந்த தோளையுடையையாதலின் நல்ல நடையையுடைய கொடிச்சீ, உயர்ந்த நாக மரங்களையுடைய செல்லுதற்கரிய கவர்த்தவழியினிடத்திலே சிறிய கண்ணும் பெரியசீற்றமுமுடைய ஆண்பன்றி சேற்றிலுழலுதலானே அச் சேறு பூசப்பெற்ற கரியமுதுகு புழுதிபடிந்திருப்ப அப்புழுதியுடனே விளங்கச் சென்று சுருக்குவார்வைத்த வெறும்பிளப்பில் விழுந்துபட்டதாக, அங்ஙனம் படுதலும் வாரையழித்து மொய்த்தனவாய்க் கொன்று நாய்கள்பற்றிக் கொண்ட மிகுதிப்பட்ட தசைகளை அவைகள் கொண்டுபோகாதபடி கானவர்சென்று அவற்றைவிலக்கிப் பன்றியிறைச்சியைக் கொணராநிற்குஞ் சிறுகுடியின்கண்ணே, முருகவேளைக் கலந்துடன்சென்ற வள்ளிநாச்சியாரைப்போல நீ என்னுடன் வருகின்றனையோ? நின்வடிவிலெழுளி கண்ணில் வீசுதலானே யான் நின்னை நோக்கலாற்றலாகாதே ழயினேன்; அதனல் வேறொன்றனையும் எண்ணுதேகொள்; எ - று.

நீறு - புழுதி. வசி - பிளப்பு. வெள்வசி - வெறும்பிளப்பு; வெற்றிலை வெள்ளிலையென்பதுபோல. தோலையாதலால் யானென்றுமுய்யவேண்டி என்னுள் வருதியோவென்றானென்க. தோள் உய்வித்தலை "உறுதோ றுயிர் தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக், கமிழ்தி னியன்றன தோள்." என்ற (ககOசு) குறளானுமறிக. முருகு - இளமை; வேளுக்குப் பண்பாகு பெயர். பிளப்புக்களிலே சுருக்குவார்வைத்து விலங்குகளைப்பிடிப்பது வழக்கு. வள்பு - வார். கொள்ளை - மிகுதி. மொய்த்தனவாய் நாய்கொண்ட கொள்ளையென்க. முருகு தலைமகனுக்கும் வள்ளி கொடிச்சிக்கும் உவமை. இது



சிறப்புநிலைக்களமாக முதலொடு முதல்வந்த வினையுவமம்; தன்னுடன் வர விளிப்பான் உடன்சென்றவள்ளியாரை யுவமித்தலின்.

உள்ளுறை :—பன்றி தலைவியாகவும், வாரினகப்படுதல் தலைவி காமநோயி லகப்பட்டதாகவும், பன்றியின்தசையை நாய்பற்றுதல் தலைவியினலத்தைப் பசலைபற்றிக் கெடுத்ததாகவும், கானவர் பெயர்க்குதல் தலைவன் அப்பசலையை நீக்குவானாகவுங்கொள்க. இது வினையுவமப் போலி. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தன்னிலைமையை அவள்மனங்கொள்ளும்படி கூறல். (அஉ)

## அங. பெருந்தேவனார்

குறிஞ்சி: இஃது, இரவுக்குறிவந்த தலைவன் தோழிசொல்லியது.

சிறைப்புறத்தானாகத்

*எ - து, தலைமகன் இரவுக்குறியின்கண் ஒருபால் வந்திருப்பதைக் குறிப்பினாலறிந்ததோழி கூகைகுழறிச் சேரியிலுள்ளாரைத் துயிலெழுப்புதலையும், அதனா விடையீடுபடுமென்பதையும் அறிவுறுத்தப்பட்டு அவன் வரைந்துகொள்ளவேண்டிக் கூகையைக் கூறுவாளாய்க் கூகாய், நினக்கு ஊனுணவுதருகிற்பேம், எங் காதலர் வருகின்றதனைவிரும்பித் துஞ்சாது யாம் வருந்தியிருக்குங்காலை அஞ்சும்படி நீ கத்தி ஊராரை யெழுப்பாதேயென இரந்துகூறாநிற்பது.*

எம்மூர் வாயில் ஒண்டுறைத் * தடைஇய
கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவால் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கைஎங் காதலர்
வரல்நசைஇத்
துஞ்சாது அலமரு பொழுதின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றாதீமே.

உரை :—எமது ஊர்முகத்தி னுள்ளிய பொய்கைத்துறை யருகிலே பருத்த கடவுளேறியிருக்கும் முதியமரத்தின்மீதிருந்து எம்மருகு ஒருசேர உறைதலானே பழக்கமுற்ற தேயாத் வளைந்தவாயையும், தெளிந்த கண்ணை யும், கூரிய உகிரையுமுடைய வாயாகிய பறையோசையாலே பிறரை வருத்தாநிற்கும் வலிமைமிக்க கூகையே, யாம் யாட்டினிறைச்சியுடனே ஆய்ந்தமைத்த நெய்யைக்கலந்த வெள்ளிய சோற்றினை வெள்ளெலியின் சூட்டிறைச்சியோடு சேரவிட்டு நின்னைவிரும்பி நிரம்பக்கொடாநிற்பேம் ; எம்பால் அன்பிற் குறைவுபடாத கோட்பாட்டுடனே எமதுகாதலர் வருதலை விரும்பி யாம் இரவிலே துயில்கொள்ளாது உள்ளஞ் சுழன்று வைகும் பொழுது, யாவரும் அஞ்சி விழித்துக்கொள்ளும்படியாக நின் கடியகுரலை யெடுத்துக் குழறி எம்மை வருத்தாதேகொள் ; எ - று.

(பாடம்) * லுண்டுறைத்



தடைஇய - பருத்த. கூகைக்கு எலியிறைச்சியில் விருப்பமிகுதி ; "இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை" என்றார் அகத்தினும் (கஉஉ.) மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய அசைவுபற்றிய அழுகை. பயன் - வரைவு கடாதல். (அ௩)

## அச. ..............................

பாலை : இது, பிரிவிடையாற்றாளாய தலைவி, தோழிக்குச் சொல்லி யது.

எ - து, தலைவனைப்பிரிந்து ஆற்றாளாகிய தலைவி; தோழியைநோக்கி நீ ஆற்றுவித்தலாலே யான் ஆற்றியிருப்பேனாயினும் என்னைப் பலபடியாகப் பாராட்டி நேற்றைப்பொழுதும் இங்கிருந்த தலைவர் இன்று சுரஞ் செல்வரென்பராதலின், யான் எங்ஙனமாற்றித் தனித்திருப்பேனென வருந்திக் கூறுகிறது.

கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும்
திதலை அல்குலும் பலபா ராட்டி
நெருநலும் இவணர் மன்னே இன்றே
பெருநீர் ஒப்பிற் பேஎய் வெண்டேர்
மரனில் நீளிடை மான்நசை உறாஉஞ்
சுடுமண் தசும்பின் மத்தந்தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பிடத் தன்ன
உவரெழு களரி ஓமையங் காட்டு
வெயில்வீற் றிருந்த வெம்பலை அருஞ்சுரம்
ஏகுவர் என்ப தாமே தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்றா
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே.

உரை :—தம்பால் வந்திரந்தவர் விரும்பிய பொருளைக் கொடுத்து அவரது நசையை யொழித்தற்கரிய இல்வாழ்க்கையிலே பயின்றறியாத நமது தலைவர் என்கண்ணையும், தோளையும், தண்ணறியநறிய கூந்தலையும், திதலை பரந்த அல்குலையும் பலபடியாகச் சிறப்பித்துக்கூறி நேற்றைப்பொழுதிலும் இங்குள்ளவராயிருந்தார், அதுகழிந்தது ; இற்றைப்பொழுது பெரிய நீர்ப் பரப்பையொத்த வெளிய பேய்த்தேரை மரங்களில்லாத நீண்டவிடத்தில் மான்கூட்டம் நீரெனவிரும்பிச் செல்லாநிற்கும்,—மண்ணாற்செய்து சுடப் பட்ட தயிர்த்தாழியில் மத்தாற் கலக்கியகாலத்து வெண்ணெய் வெப்பத்தாற் கைகூடாது சிதறிக்கிடந்தாற்போன்ற உப்புப்பூத்த களரையுடைய ஓமை மரங்கள் நெருங்கிய காட்டகத்து வெயில் நிலைபெற்றிருந்த வெம்மை யுடைய செல்லுதற்கரிய பாலையிலே தாம் தமியராய்ச்செல்லுவரென உழை யர் கூறுநிற்பர் ; யான் எங்ஙனம் ஆற்றுகிற்பேன் ? எ – று.

உழையர் – அவாய்நிலை. மன் – கழிவு. வெம்பல் – வெம்மை. ஐ – சாரியை. இரந்தோர்......வல்லாதோரென்றது பெரியகுடியிற்றோன்றிப் பெரிய இல்வாழ்க்கையிற் பயின்றவரென்றவாறு. அத்தகையவர் புகல்புக்க

## மூலமும் உரையும்

கூள

என்னைக் கைவிட்டுப் பொருள்வேட்கையிற் சென்றனரேயென்றிரங்கிய தாம். பிரிபவன் இனி என்று முயங்குவலென்னுங் கவற்சியாலே கண் முதலியவற்றைப் பலவாகப்பாராட்டி முழுவித் தழுவலியல்பு. அக்குறிப்பு யான் அறிந்திலேனென அவன் இங்கிருந்து பிரிவுழித் தன்கூற்றின்மை யும் உழையராலறிந்தமையுங்கூறி யயர்ந்தாளாயிற்று.

இறைச்சி :—கானலை நீரெனக்கருதி மான் நசைகொள்ளுமென்றது, அருளில்லாத தலைவரை அறவரெனக்கருதி யான் மயங்கினேனென்ற தாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (அசு)

# அரு. நல்விளக்கனார்

குறிஞ்சி : இது, தலைவன் வரவுணர்ந்ததோழி தலைவிக்குரைத்தது.

எ - து, தலைமகன் இரவுக்குறி வருவதறிந்த தோழி அவன் கேட்டு விரைவின் வரைந்துகொள்ளுமாற்றானே தலைவியைநோக்கி, நீவருந்துவ தறிந்தவூரார் அலர்தூற்றினும், மலைநாடன் நின்பாலுள்ள விருப்பினாலே இரவில்கொடியநெறியில் வருதல் ஏதமுடைத்தாதலின் வாராதொழிவானாக வென்று கடிந்துகூறாநிற்பது.

ஆய்மலர் மழைக்கண் தெண்பனி யுறைப்பவும்
வேய்மருள் பணைத்தோள் விறலிழை நெகிழவும்
அம்பன் மூதூர் அரவ மாயினுங்
குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்
ஆரிருள் கடுகிய அஞ்சுவரு சிறுநெறி
வாரற்க தில்ல தோழி சாரல்
கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகோடு
காந்தளஞ் சிறுகுடிப் பகுக்கும்
ஓங்குமலை நாடன்நின் நசையி னானே.

உரை:—தோழீ, அழகிய குவளைமலர்போன்ற குளிர்ச்சியையுடைய நின் கண்களினின்று தெளிந்த நீர் மிகவடிந்துவிழவும், மூங்கிலையொத்த பருத்ததோளிலணிந்த ஏனைய கலன்களை வெற்றிகொள்ளும் வளை நெகிழ்ந்து விழவும், அவற்றைநோக்கிப் பழிகூறும் இப்பழையவூர் மிக அலர்தூற்றுமாயினும், மலைச்சாரலிலே கானவனெய்துகொணர்ந்த முட்பன்றியின் கொழுவிய தசைத்துண்டத்தைத் தேன்மணங்கமழும் கூந்தலையுடைய கொடிச்சி மகிழ்ந்தேற்றுக்கொண்டு காந்தண்மிக்க சிறுகுடியிலுள்ளார் பலர்க்கும் பகுத்துக்கொடாநிற்கும் உயர்ந்த மலைநாட்டையுடைய நமதுகாதலன் நின்பாலுள்ள விருப்பத்தாலே, குறுகிய வரிகளையுடைய நரியபுலிக்கு அச்சமுற்று விரைந்துசெல்லாத நடையையுடைய தன்கன்றைப் பிடியானை ஆண்டு நின்று காத்துத் தங்காநிற்கும் நீங்குதற்கரிய இருண்மிக்க கண்டார்க்கு அச்சத்தைத் தோற்றுவிக்கின்ற சிறிய நெறியின் கண்ணே வாராதொழிவானாக; எ-று.

ந. நா.—7



உறைப்ப - மிகவிழ. விறல் - வெற்றி. இதனை "அருந்தவமாற்றியார் என்னும்'(கூ0) பாலைக்கலியுள் 'விறலிழையவர்' என்பதற்கெழுதிய வுரையானுமறிக. குறிய என்பதன் அகரம் தொகுக்கும்வழித்தொக்கது. தில் - ஒழியிசை. முளவுமான் - முட்பன்றி. இஃது இவில்கூட்டத் தவன் புணர்வு மறுத்தல்.

கண்ணீர்வடிதலென்ற தன்னாலே தேற்றத்தெளியாமை கூறினள். பிரிந்த வக்கத்தால் உடம்புவாடித் தோள்வளைநெகிழ்ந்தமை கூறுவாளாய் இனி இங்ஙனமிருப்பி னிறந்துபடுமெனவுங் குறிப்பித்தாளென்பது.

உள்ளுறை:—கானவன் தலைவனாகவும், கொடிச்சி தலைவியாகவும் பன்றித்தசை தலைவன்வரைந்துகொண்டு பொருளீட்டித் தலைவிபா லளிப்பதாகவும், சிறுகுடிப்பகுத்தல் அப்பொருளைக்கொண் டில்லறம் நடத்தற்பாலளாகவுங்கொள்க. இது வெளிப்படை.

இறைச்சி :—புலியையஞ்சிப் பிடியானை தன்கன்றைக்காத்துத் தங்குமென்றது பிரிவினாலே தலைவிக்குவரும் ஏதத்தையஞ்சி யான் அவளைக் காத்திருக்கின்றேனென்றதாம். கண்ணீர்வடிதலென்றது துன்பத்துப் புலம்பல். தோள்வளைநெகிழ்தலென்றது உடம்புநனிசுருங்கல். வாரற்க வென்றது அச்சத்தினகறலும், அவன்புணர்வு மறுத்தலுமாம். ஏனை **மெய்ப்பாடு** - அச்சத்தைச்சார்ந்த வெகுளி. **பயன்** - வரைவுடன்படுத்தல். (அ௫)

அசுஉ. நக்கீரர்

பாலை : இது, குறித்தபருவத்தின் வினைமுடித்து வந்தமைகேட்ட தோழி தலைவிக்குரைத்தது.

ஏ - து, தலைவன் இளவேனிற்பருவத்து வருவேனெனக் குறித்துச் சென்று வினைமுடித்து மீண்டுவந்ததைக் கேள்வியுற்றதோழி, தலைவியை நோக்கி, நாம் முன்பனிக்காலத்து நடுங்கும்படி நம்மைப் பிரிந்துசென்று இளவேனிற்பருவத்தைக் கருதிவந்த தலைவர்தாம் அறநெறியுடையார்கா ணென உவந்து கூறுநிற்பது.

அறவர் வாழி தோழி மறவர்

வேலென விரிந்த கதுப்பின் தோல
பாண்டில் ஒப்பின் பகன்றை மலருங்
கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தகக்
௫. கைவல் வினைவன் தையுபு சோரிந்த

சுரிதக உருவின வாகிப் பெரிய
கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை
நற்றளிர் நயவர நுடங்கும்
முற்றா வேனின் முன்னிவந் தோரே.

**உரை**:—தோழீ, வீரர்கையிலுள்ள வேற்படைபோல விரிந்த மேற் கதுப்பாகிய தோலையுடைய சிவதை வெள்ளிவட்டிலைப்போல மலராநிற்குங் கடிய முன்பனியையுடைய அற்சிரக்காலத்து, நாம் நடுங்குமாறு பிரிந்து

## மூலமும் உரையும்

சுகூகூ

பின்பு அழகுபொருந்தக் கைத்தொழிலில்வல்ல கம்மியன் அரதனக்கற்களை இட்டிழைத்த பொன்னாலாகிய சுரிதகமென்னும் அணிபோன்ற வடிவின வாகிப் பெரிய கோங்கமரத்தினது குவிந்த முகைகள் மலர ஈங்கையின் நல்ல தளிர்கள் கண்டார்க்கு விருப்பம்வருமாறு நுடங்காநிற்கும் முதிராத இளவேனிற்காலத்து இன்று நம்மைக் கருதிவந்தாராதலின் நமது தலைவர் அறநெறி தவறுநரல்லர்காண்; அவர் நெடுங்காலம் வாழ்வாராக; எ - று.

பாண்டில் - வட்டில். பகன்றை - சிவதை. அற்சிரம் - முன்பனிக் காலம். சுரிதகம் - திருகுபூப்போல அக்காலத்துப் பயின்றதோரணி. கதுப்பின், இன் - அல்வழிச்சாரியை. ஆகிக்குவிமுகையவிழவென்க. சிவதைமலர் வெள்ளிவட்டில்போன்றதென்பதனை "அகன்றுறை" என்னும் (எஉ) கலியகத்து "பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை, கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தால்" என்பதனுலுமறிக. பிரிந்து என ஒருசொல்வருவித்து நடுங்கப்பிரிந்து என்க.

ஒன்றினேம் யாமென் றுரைத்தாரைத் தோள்நெகிழவிடாது குறித்த பருவத்து வந்தமையால் அறவரென்றாள். அறவர்வாழியென்றதனால் 'வாழ்த்தல்' என்னு மெய்ப்பாடுதோன்றிற்று. ஏனை மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். கைகோள் - கற்பு. (அசு)

# அஎ. நக்கண்ணையார்

## நெய்தல் :

*இது, வரைவிடைவைத்துப் பிரிய ஆற்ருளாய தலைவி கனுக்கண்டு தோழிக்குரைத்தது.*

*எ - து, தலைவன் பிரிதலானே ஆற்ருது கனவுகண்டெழுந்த தலைவி தோழியைநோக்கி வெளவால் தான் துயிலும்பொழுது அங்குக்கிட்டப் பெருத நெல்லியம்புளிச்சுவைக்குக் கனவுகண்டாற்போல அவர் நாட்டுப் பரதவர் மகிழ்ச்சியுங் கானலும் நினைந்த அப்பொழுதிலேயே யானுங் கனவுகாண அஃதொழிதலாயிற்றெனை வருந்திக்கூறுநிற்பது.*

உள்ளூர் மாஅத்த முள்ளேயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசியம்
பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு
ரு. அதுகழிந் தன்றே தோழி அவர்நாட்டுப்
பனியரும்பு உடைந்த பெருந்தாள்
புன்னை
துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து
உறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்

பெருந்தண் கானலும்
நினைந்தவப் பகலே.

உரை :—தோழீ! அத்தலைவரது நாட்டின்கணுள்ள பெரிய அடியையுடைய புன்னையின் குளிர்ந்த அரும்புகள் மலர்ந்து அவற்றின்பராகம் கடலின் துறையிடத்து மேய்கின்ற இப்பியின் ஈரியபுறத்து மிகவிழாநிற்கும் சிறுகுடியிலுள்ள பரதவர் மகிழு மகிழ்ச்சியையும், பெரிய தண்ணிய கழிக்கரையிலுள்ள சோலையையும் நான் நினைந்த அப் பகற்பொழுதின்கண்ணே



ஊரினுள்ளதாய மாமரத்திலிருக்கின்ற முட்போன்ற எயிற்றினையுடைய வெளவால் உயர்ந்தவொரு கிளையிற்சென்று பற்றித் தூங்காநின்று துயிலுற்றபொழுதிலே, தனக்குக் கிட்டப்பெறாத வெல்லும் போரையுடைய சோழர் குடியிற்பிறந்த ஆர்க்காட்டினுள்ளாகிய அழிசியென்பவனது பெரிய காட்டின்கணுள்ள நெல்லிப்பழத்தின் இனிய புளிச்சுவையைத் தான்பெற்றதாகக் கனவுகண்டாற்போல யானும் அவரொடு முயங்கினதாகக் கனவு காண அவ்வின்பமெல்லாம் விழித்தவுடன் ஒழிந்துபோயிற்றுமன்; எ - று.

நெடுந்தாள்புன்னையெனவும் பாடம்.

அது - அக்கனவின் முயங்கியவின்பம். உள்ளூர் - ஊருளென்க. பரதவர் மகிழ்ச்சியைக் கருதுதலும் எனக்கு மகிழ்ச்சியுண்டாயிற்று. விழைவு விடுத்த விழுமியோரையும் விழைவுறுத்தும் பொழிலாதலின் அதனைக் கருதுதலும் எனக்கு மகிழ்வுண்டாயது. மகிழ்ச்சி கனவுண்டாய்க்கழிதலானே அவர்முயக்கம் இனிக் கனவினுமரியதுபோலாமென் றிரங்கியதென்பது.

இப்பியின்புறத்தைப் புன்னையின்தாது மூடிக்கொள்ளுதல்போலப் பசப்பு என்மெய்யைக் கரந்துகொண்டதென்றவாறு. இது கனவொடு மயங்கல். ஏனை மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (அஎ)

## அஅ. நல்லந்துவனார்

குறிஞ்சி: இது, சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

தலைவிக்குரைப்பாளாய்ச்

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைவிபடுந் துன்பமனைத்துங் கேட்டு விரைய வரையுமாற்றானே தோழி தலைவியைநோக்கி நமது முன்னைவினையாலே நாம் துன்புறுவதாயிருக்க நீ ஏன் மயங்குகின்றனை? இதனை அவர்பாற்சென்று கூறுவோம் வா, நீ வாடுதற்கு யான் அஞ்சாநிற்பேன்; நாம்படுந் துன்பத்தைக்கண்டு அவர் குன்றமும் அழாநின்றதுகாண்; அவர்மட்டும் இரங்குவாரல்லரென வருந்திக் கூறுநிற்பது.

யாஞ்செய் தொல்வினைக்கு எவன்பேது உற்றனை

வருந்தல் வாழி தோழி யாஞ்சென்று

உரைத்தனம் வருகம் எழுமதி

புணர்திரைக்

கடல்விளை அமுதம் பெயற்கேற் ருஅங்கு
ரு. உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி
நயம்பெரிது உடைமையின் தாங்கல்
செல்லாது
கண்ணீர் அருவி யாக
அழுமே தோழிஅவர் பழமுதிர் குன்றே.

உரை:—தோழீ! நாம் செய்த பழவினை அங்ஙனமாயிருக்க அதனை ஆராயாது நீ எதன்பொருட்டு மயங்குகின்றனை? அவ்வண்ணம் வருந்



தாதேகொள்; நீடுவாழ்வாயாக; இத்துன்பத்தை அவர்பால் நாம் சென்று கூறிவிட்டு வருதும், என்னுடனெழுவாயாக; பொருந்திய அலைகளையுடைய கடல்நீரால் விளைந்த உப்புக்குவடு மழையின்கண் அகப்பட்டாற் கரைந் தொழிதல்போல நீ உள்ளமுருகியொழிதலுக்கு யான் அஞ்சாநிற்பேன்; தன் தலைவன் நம்மிடத்துச் செய்த கொடுமையை நினைந்து, அவரது பழங்களுதிர்கின்ற குன்றானது நம்பாற் பெரிதும் அன்புடைமையாலே தன் வருத்தத்தை அடக்கிக்கொள்ளமாட்டாதே தன் கண்ணீர் அருவியாகப்பெருகும்படி அழாநிற்கும்; அதனை உவ்விடத்தே பாராய்; அவர்மட்டும் இரங்குபவரல்லர்; எ – று.

கடல்விளையமுதம் - ஈண்டு உப்பு. நம்வயின் ஏற்றி, ஏற்றல் - நினைதல்; "ஏற்றம் நினைவுந் துணிவு மாகும்" என்பது (தொல்-சொல்-கு-ஙஙஎ) தம்மோன்–தம்மான், தமது தலைவன்; "தம்மானை யறியாத சாதியா ருளரே" என்றார் தேவாரத்தினும்.

ஊழ்வினை யூட்டாது கழியாதாகலான் அதனைத் துய்க்குங்காறும் அவரின்பத்தை நாம் அடைதலரிதென்பாள் தொல்வினைக் கெவன்பேதுற்றனை யென்றாள். குன்றமும் அழாநின்றதென்றது அதனினும் அவர்நெஞ்சு வன்மையுடையதெனலுமாம். எவன் பேதுற்றனையென்றது துன்பத்துப் புலம்பல். உருகியுகுதலென்றது ஆங்குநெஞ்சழிதல்.

கொடுமையுடையோன் குன்றுயிருந்தும் பசித்தவுயிர்களின் பசிகெடப் பழங்களை உதிர்க்கின்றன; இஃதென்ன வியப்போவெனப் பொருட்புறத்தே இறைச்சிதோன்றிற்று. **மெய்ப்பாடு**-அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (அஅ)

# அகூ. இளம்புல்லூர்க்காவிதி

**முல்லை :**

இது, பொருண்முற்றி மறுத்தந்தானெனக்கேட்ட தலைவிக்குரைத்தது.

தோழி

எ - து, பொருள்வயிற் சென்ற தலைவன் மீண்டுவந்ததைக் கேள்வியுற்ற தோழி தலைவியைநோக்கி, முன்பு நாள்தோறும் மாலைப்பொழுதில் வருத்தத்தைக்கொடுத்து நம்மைத் துன்புறுத்தும் வாடையானது அவர் வந்தபிறகும் யானையுயிர்த்தாற்போல வருமோ அங்ஙனம்வரினும் யாதொரு தீங்குஞ் செய்யாதென உவந்துகூறுகிறப்பது.

கோண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
திரைப்பிதிர் கடுப்ப முகடுகந் தேறி
நிரைத்துநிரை கொண்ட கமஞ்சூன் மாமழை
அழிதுளி கழிப்பிய அழிபெயற் கடைநாள்
இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்
அகலிலை அகல வீசி அகலாது
அல்கலும் அலைக்கும் நல்கா வாடை
பருமயானை அயாவுயிர்த் தாஅங்கு
இன்னும் வருமே தோழி வாரா
வன்க ணாளரோடு இயைந்த
புன்கண் மாலையும் புலம்புமுந் துறத்தே.

உரை :—தோழீ! கீழ்காற்றுச் செலுத்துகையினாலே ஆகாயத்திற் செறிவுற்று, அலையிலுள்ளபிசிர்போல மலையினுச்சியை விருப்பத்தோடேறி ஒழுங்காக அமைந்து நிறைவுற்ற நிரம்பியசூலையுடைய கரியமேகம் மிக்க மழையைப் பெய்தொழிந்த மழையழிந்த கார்ப்பருவத்தினிறுதியில், மிக்க முன்பனிப்பருவத்தில் மயிர்களமைந்த காய்களையுடைய உழுந்தின் அகன்ற இலைகளெல்லாஞ் சிதையும்படி வீசி நம்மைவிட்டு நீங்காது நாள்தோறும் வருத்துகின்ற அன்புசெய்யாத வாடைக்காற்றானது இதுகாறும் வாரா திருந்த வன்கண்மையுடைய தலைவரோடு ஒருபடியாயமைந்த துன்பத்தைச் செய்யும் மாலைப்பொழுதையும், வருத்தத்தையும் முற்படவிட்டுக்கொண்டு பருமம்பூண்ட யானையானது தன் அயர்ச்சியாலே பெருமூச்சுவிட்டாற் போல அவர்வந்தபிறகு இன்னும் வாராநிற்குமோ? அங்ஙனம் வந்தாலும் யாதொரு தீங்கையுஞ் செய்யாதுகாண்; எ - று.

கொண்டல் - கீழ்காற்று. பிதிர் - சிறுதுளிகளாகியபிசிர். கமம் - நிறைவு. கார்ப்பருவத்தினிறுதியில் வீசி வருத்துகின்ற வாடையெனக் கூட்டுக. யானை அயர்வுயிர்த்தது சினையொடு முதல்வந்த வினையுவமம். பருமம் - யானை முதுகிலிடுந்தவிசு.

இதுகாறும் பிரிந்து வாடையால் வருந்தவிட்டமையின் வன்கணாள ரென்றாள். அவர்பிரிந்து துன்புறுத்தியதுபோல மாலைபுகுந்து துன்புறுத்த லின் வன்கணாளரோடியைந்த மாலையென்றாள். மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைவியை மகிழ்வித்தல். கைகோள் - கற்பு. (அக)

# கூ௦. அஞ்சிலஞ்சியார்

மருதம் :

இது, தோழி தலைமகளுக்குரைப்பாளாய்ப் பாணனை நெருங்கி வாயின் மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்த தலைமகனால் விடுக்கப்பட்டு வாயில்வேண்டி வந்த பாணன் கேட்பத் தோழி தலைமகளைநோக்கி நின்காதலன் முயங்கும் பரத்தையருள் பெண்டன்மையறியாப் பெதும்பைப்பருவத்தாளொருத்தி ஊசலாடாது அழுதுநிற்பதை ஆற்றுவித்து, மீட்டும் ஆடச்செய்யாத அவனது அவை பயனுடையதன்று; அவளழுதாடினமையின் இங்குவந்தான் போலுமென வெகுண்டு கூறாநிற்பது.

ஆடியல் விழவின் அழுங்கன் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
௫. வாடா மாலை துயல்வர ஓடிப்
பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்
பூங்கண் ஆயம் ஊக்க வூங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி

நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
௧0. ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா
நயனின் மாக்களொடு குழீஇப்
பயனின்று அம்மவிவ் வேந்துடை
அவையே.

உரை :—கூத்தயர்கின்ற விழாவிளைவியையுடைய இம்மூதூரின் கண்ணே ஆடைகளையாராய்ந்து கழுவுந்தன்மையிற் பெரிதும் தன்கை யொழியாத வறுமையில்லாத ஆடையொலிப்பவள் இரவிலே தோய்த்த சோற்றின் கஞ்சியிட்டுப் புலர்த்திய சிறிய பூத்தொழிலையுடைய ஆடையு டனே பொன்னரிமாலையும் அசைந்தாட ஓடிச்சென்று, கரிய பனைநாரி னாலே திரித்த கயிற்றைப்பிணித்துத் தொங்கவிட்ட ஊசலிலேறிப் பூப்போ லுங் கண்களையுடைய தன் ஆயத்தார் அதனை ஆட்டவும் தான் ஆடாளாய் அழுதுமீளுகின்ற அழகிய சிலவாகிய கூந்தலையுடைய பெண்தன்மையில் குறைவுபட்ட சிலவாய வளைகளையணிந்த பரத்தையாகிய பெதும்பைப் பரு வத்தாளோரிளமகளை மீட்டும் ஊசலாடுகிற மிக்க தொழிலின் ஆரவாரத்திற் செய்யாத விருப்பமற்ற மக்களொடுசேர்ந்து இவ்வேந்தனது அவைக்களந் தான் பயனின்மையுடையதா யிராநின்றது ; இது மிக்க வியப்பு ; அவளை ஆடச்செய்திருந்தால் அவளுடாள்; தலைமகனும் அவளை நீங்கான்; ஆண்டு அவளுடினமையால் இறைமகன் இங்குவந்தான்போலும் ; இனி இங்கு வாராதொழிவானாக ; எ - று.

உடை ஓர் பான்மை - ஆடையை ஆராய்கின்ற பகுதி. கைதூவாமை- கையொழியாமை. புலத்தி - ஆடையொலிக்குந் தொழிலி ; வண்ணாத்தி யென்ப. புகா - உணவு ; சுண்டுச்சோறு. புகர் - கஞ்சி. ஊக்கல்-அசைத் தல். நல்கூர்பெண்டு - பெண்தன்மையில்லாள் ; பெண்தன்மை - நாண முதலியன. மாக்கள் - பாணன் முதலானோர். நயனின்மை - தூதாடலின் பயனைப் பெறுமை ; பெதும்பையாதலின். பயனின்று என்பது இகழ்ச்சிக் குறிப்பு. அவளை ஆடவென்பதுமுதற் குறிப்பெச்சம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயின்மறுத்தல். (௧0)

நெய்தல்: இது, தோழி தலைமகட்கு வரைவு மலிந்துரைத்தது.

எ - து, வரைபொருட்பிரிந்த தலைமகன் பகற்பொழுதையில் வெளிப் படையாக வருதலானே, வரையக்கருதினன்போலுமென் றுணர்ந்ததோழி, தலைவியை நோக்கிச் சேர்ப்பன் பகற்காலத்திலே பலருங்காண இங்கு வருதலை நீ யறிந்தனையன்றோவெனக் குறிப்பால் வரைவுமலிதலை மகிழ்ந்து கூறுநிற்பது.

நீயுணர்ந் தனையே தோழி வீயுகப்

புன்னை பூத்த இன்னிழல் உயர்கரைப்

பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு

உடங்கிரை தேருந் தடந்தாள் நாரை

ரு. ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்

மேக்குயர் சினையின் மீமிசைக்
குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச்
சோரியும்
கானலம் படப்பை ஆனா வண்மகிழ்ப்
பெருநல் ஈகைநம் சிறுகுடிப் பொலியப்
புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர்
மணித்தார்க்
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீர்ச் சேர்ப்பன் பகல்இவண்
வரவே.

*உரை :—தோழீ! மலர்களுதிரும்படி புன்னை பூத்திருக்கின்ற இனிய நிழலையுடைய உயர்ந்த கரையையுடைய ஓசை முழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடலின்கண்ணே, துழாவித் தன் பெடையோடு ஒருசேரச்சென்று இரையைத் தேடுகின்ற நீண்டகாலையுடைய நாரை, மெல்லிய சிவந்த சிறிய கட்கடையையுடைய சிறிய மீன்களைப் பிடித்து, மேலோங்கிய கிளையின் மேலுள்ள கூட்டின்கணிருந்து தாயைக் கூவியழைக்கின்ற தன் பிள்ளையின் வாயிற்படக் கொடுக்கின்ற கடற்கரைச் சோலையையும், கொல்லையையும், கெடாத வளவிய மிக்கவுணவையும், பெரிய நல்ல கொடையையுமுடைய நமது சிறுகுடியெங்கும் பொலிவுபெறப் புள்ளொலித்தாற்போன்ற சுழற்சியையுடைய பெரிய ஒலியையுடைய மணிகள் பிணைத்த மாலையணிந்த கடிதாகச் செல்லுங் குதிரைபூட்டிய நெடிய தேரின்மேல் நீண்ட கடற்கரைத் தலைவனாகிய நமது காதலன் பகற்பொழுதையிலே பலருங்காண இங்கு வருவதனை நீ உணர்ந்தனையோ? இங்ஙனம் வெளிப்படையின் வருதலானே வரைவுகருதிப் போந்தனன்போலும்; எ - று.*

*ஐது - மெல்லிது. பயிர்தல் - அழைத்தல். பிள்ளை - பறப்பவற்றிளமைப்பெயர். வள்ளுயிர் - பேரொலி. இங்ஙனமென்பதுமுதற் குறிப்பெச்சம்.*

தமர் மருது மகட்கொடை நேர்வரென்றதையடக்கிப் பெருநல்லீகை நம் சிறுகுடியெனக் குறிப்பித்தாள்.

உள்ளுறை:—பெடை பாகன் முதலாயினோராகவும், நாரை தலைவனாக வும், கடலிற்சென்று இரைதேடுதல் வேற்றுநாட்டுச் சென்று பொருளீட் டியதாகவும், பிள்ளை தலைவியகத்தராகவும், சொரிதல் அவர்க்கு இருநிதி யளிப்பதாகவுங்கொள்க. **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - தலைவியை மகிழ்வித்தல். (கக)

கஉ. ..................

**பாலை: இது, பிரிவிடை வேறுபட்ட கிழத்திக்குத் தோழிசொல்லியது.**

எ - து, தலைவன் பிரிதலால் வருந்தி வேறுபட்ட தலைவியைத் தோழி நோக்கி, ஆனிரையுண்ணவிட்ட நீர்ப்பத்தரைத் திறந்து களிறு தன் கன்றும் பிடியுமுண்ணக் கொடாநிற்குஞ் சுரத்தின்கண்ணே சென்ற தலைவர், நம்மைக் கருதினாரில்லைபோலும், ஆதலின் அவர் திறத்து வருந்தி யாவதென்னையென அவள் ஆற்றும்வண்ணம் தெளியக் கூறாநிற்பது.

உள்ளார் கொல்லோ தோழி துணையொடு
வேனில் ஓதிப் பாடுநடை வழலை

வரிமரல் நுகும்பின் வாடி அவண
வறன்பொருந்து குன்றத்து உச்சிக்
கவாஅன்
௫. வேட்டச் சீறூர் அகன்கண் கேணிப்
பயனிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்தலை மடப்பிடி கன்றோடு ஆர
வில்கடிந்து ஊட்டின பெயரும்
கொல்களிற்று ஒருத்தல சுரன்இறந்
தோரே.

**உரை:**—தோழீ! *முதுவேனிற்காலத்து வருந்திய நடையையுடைய ஓந்தியாகிய வழலை தன் துணையோடு வரிகளையுடைய மரலின் இளமடல் போல வாட்டமுற்று, அவ்விடத்திற்கிடத்தலையுடைய வறட்சியுற்ற குன்றத்துச்சியின் பக்கத்திலுள்ள வேட்டுவச்சேரியையடுத்த அகன்ற வாயையுடைய கிணற்றினின்று, பயனைத்தருகின்ற ஆனிரையுண்ணுமாறு எடுத்து வைத்த தெளிந்த நீர்ப்பத்தரைப் புல்லிய தலையையுடைய இளம்பிடி தன் கன்றுடனே நீருண்ணவேண்டி அப் பத்தரின்வாயை மூடிய விற்பொறியை முறித்துப்போகட்டு அவற்றையுண்பித்துச் செல்லாநிற்கும் கொல்லுந் தொழிலையுடைய களிற்றொருத்தலையுடைய சுரத்தின்கண்ணே சென்ற தலைவர் தாம் சென்றிறுத்தவிடத்தும் நம்மைக் கருதினாரில்லைபோலும்; அவர்திறத்து வருந்தியாவதென்? எ – று.*

ஓதி - ஓந்திக்கோருபெயர்; இடைக்குறைவிகாரமன்று; குறைக்க வேண்டாதவழியும் இங்ஙனம் வருதலின். வழலை - ஒருவகைப் பாம்பு; அதனைப்போறலின் ஓந்திவழலையென்றார்போலும். களிறு - யானைக்குச் சாதிப்பெயர். ஒருத்தல் - விலங்கின் ஆண்பாற் பெயர். மரல்நுகும்பு - மரலின்முற்றாத இளமடல். கேணி நீரைப் பக்கத்துள்ள மிடாவிலிட்டுப் பிறவுண்ணாதபடி ஒரு வில்லைவைத்து மூடிபோடப்படுவது; அதனை வலிந் திழுப்பிற் றிறந்துகொள்ளும்; அங்ஙனமிழுக்காமல் அவ்வில்லினை முறித் தது களிறென்க.

கருதின் இன்னே வந்திருப்பராதலின் உள்ளார்கொலென்றாள். இனி தங்கட்குப் புரையேறல், தும்மல்முதலாய குறிப்புக்களிலொன்றேனும் நிக ழாமையால் உள்ளார்கொலெனவுமாம்.

மடப்பிடியுங் கன்றும் நீருண்ணுமாறு, களிறு பத்தரையுடைத்து உண் பிக்குங் கானத்திற்சென்று நோக்கியகாதலர் நானும் நீயு மகிழும்படி மீண்டு வந்து நம்மை ஆதரித்தாரிலரே, இஃதென்ன கொடுமையென்றிரங்கியது காண்க. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம். பயன் - தலை வியை ஆற்றுவித்தல். (கஉ)

## கூங. மலையனார்

குறிஞ்சி: இது, வரைவுகடாயது.

எ - து, தலைவன் வரையாது களவொழுக்கத்துப் பலகாலும் பகற்குறி வந்தொழுகுதலைவிலக்கித் தோழி யாம் சேரியின்கண்ணே செல்லுகின்றேம்; நீ வாழ்க; நின்னைப் பிரிதலின் லாற்றாளாயதலைவியின் மெய் முன்னமே மாமையுடையவாதலின், இனிநின் மணமுரசொலி கேட்குமுன் இறந்து



படுமதுகாணெனை அவன் வரையுமாற்றானே வெளிப்படையாக அவலித்துக் கூறுமிற்பது.

பிரசந் தூங்கப் பெரும்பழந் துணர
வரைவேள் அருவி மாலையின் இழிதரக்
கூலம் எல்லாம் புலம்புக நாளும்
மல்லற்று அம்மஇம் மலைகெழு வெற்பெனப்
பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாட!
செல்கம் எழுமோ சிறக்கநின் ஊழி
மருங்கு மறைத்த திருந்திழைப் பணைத்தோள்
நல்கூர் நுசுப்பின் மெல்லியல் குறுமகள்
பூண்தாழ் ஆகம் நாணட வருந்திய
பழங்கண் மாமையும் உடைய தழங்குகுரல்
மயிர்க்கண் முரசின் ஒருமுன்
உயிர்க்குறி எதிர்ப்பை பெறலருங் குரைத்தே.

உரை :—கிளைதோறுந் தேனிறால் தொடுத்தன தூங்காநிற்ப, பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுக்க, வரையின்கணுள்ள வெளிய அருவி மாலை போல இழிந்துவர, சாரலிலுள்ள கொல்லைகள்தோறும் வரகு சாமை முத லாகிய பதினறுவகைக் கூலமும் விதைக்கப்பட்டுப்பொலிய, எக்காலத்தும் சிறு குன்றுகள்பொருந்திய இவ்வெற்பு வளப்பமுடையதென்று அதனை விட்டுப் பிரிந்துசெல்பவர் இரங்காநிற்கும் பெரிய மலைநாடனே! யாம் செல்லுகின்றோம் ; எழுந்துபோவாயாக ; நின்வாழ்நாள் நீடுவாழ்வதாக ; பக்கங்கள் மறையப்பூண்ட திருந்திய கலன்களையுடைய முன்பு பருத்த தோளையும் நுணுகிய இடையையும் மெல்லிய சாயலையுமுடைய இவ்விள மகளுடைய பூண்தாழ்ந்த கொங்கைகள் நாண் துன்புறுத்தலாலே வருத்த முற்ற பழங்கண்கொண்ட பசலையையுமுடையனவாதலால் ஒலிக்கின்ற குரலையுடைய மயிர்சீவாத தோல்போர்த்த இடமகன்ற நின் மணமுரசொலி கேட்டலினாலே நம்மைக் காதலன்வரைய வந்தனன் போலுமென்று கருதா நிற்கும் ; அந்நாளளவைக்குள் இவளுக்கு உயிரிருக்கும்படியான குறியைக் காணுதல் இனிப் பெறுதற்கரிய தொன்றாகுங்காண் ; எ - று.

கூலம் கசு :—நெல்லு, புல்லு, வரகு, சாமை, தினை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, துவரை, கடலை, மொச்சையென்ப ; சோளமும் கம்பும் சேர்ப்பதினெட்டெனவுமுரைப்ப ; "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" என்றார் பிறரும். மயிர்க்கண்முர சம்-மயிர்சீவாத தோலாற்கட்டிய முரசம்.

பணைத்தோள் - முன்புபருத்தோளென்றவாறு. தோள் நெகிழ்ச்சி நீயறியாவாறு கலன்கள் மறைப்பனவென்பாள் மருங்குமறைத்த இழைத் தோளென்றாள், தான்கொண்டகாதலை நின்பாற்கூறுதற்கு நாண் தன்னை வருத்துதலாலே பழங்கண்கொண்டன குறுமகளாகமெனவுமாம்.

நின்னைப் புகல்புக்கேமைக் கைவிடுகின்ற நினது மலையாயிருந்தும் பிரிந்தோ ரிரங்குமாறு இன்னும் இங்ஙனம் வளனுடைத்தா யிராநின்றது ;

இஃதென்ன வியப்போவெனப் பொருட்புறத்தே இறைச்சிதோன்றியது காண்க. மெய்ப்பாடு - அவலத்தைச்சார்ந்தபெருமிதம். பயன் - வரைவு கடாதல். (கூஙு)

## கூச. இளந்திரையனார்

**நெய்தல்:** இது, தலைமகன் சிறைப்புறமாகக் குரைப்பாளாய்ச் சொல்லியது.

தலைவி தோழிக்

ஏ - து, களவொழுக்கத்தின்கண் எந்நாளும் இடையீடுபடாது தலைமகன் கூடுதலால் இன்பமுற்றதலைமகள் ஒருநாள் அவன் சிறைப்புறத் தானாகக் கேட்டுமகிழ்ந்து விரையவரையுமாறு யான் எனது புணர்ச்சிநல னைப் புலப்படாது மறைத்துக்கொள்ளும்படியாக இங்ஙனம் தன் மார்பால் வருந்துமென்னியல்பை யறியாச்சேர்ப்பன் என்னமகனெனக் கூறப்படுவா னென்று தோழியைநோக்கி வருந்திக் கூறுகிறப்பது.

நோயலைக் கலங்கிய மதனழி பொழுதில்

காமஞ் செப்பல் ஆண்மகற்கு அமையும்

யானேன், பெண்மைதட்ப நுண்ணிதில்

தாங்கிக்

கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ

ரு. மண்ணுப் பசுமுத்து ஏய்ப்பக்

குவியிணர்ப்

புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்

என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வ முடைய ராகி
மார்பணங்கு உறுநரை அறியா தோனே.

உரை: தோழீ! காமநோயானது நிலைகுலைத்தலாலே கலக்கமுற்ற வலியழிந்தபொழுதில், அன்போடுவந்து அருகிருந்து நயமொழிகூறி ஆற்றுவித்தல் ஆண்மகனுக்குரிய சிறந்த பண்பாகும்; அங்ஙனம் யான் காமநோயால் வருந்தியபொழுது, நமதுகாதலன் அருகுவந்திருந்து ஆற்றினானுமல்லன்; கைத்தொழில்வல்ல கம்மியன் அழகுபொருந்தக் கழுவித் தூய்மை செய்யாத பசியமுத்து தனது மிக்க ஒளியை மறைத்துக் காட்டினாற்போல, யானும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்கநலனைப் புலப்படாமல் அரிதாகத்தாங்கி என் பெண்டன்மையாலே தகைத்துக்கொள்ளும்படியாக, அலராமற்குவிந்த பூங்கொத்துக்களையுடைய புன்னையின்கண்ணே புலவுநாற்றத்தையுடைய நீர்தெறித்தலான் மலர்ந்த கடற்கரைத்தலைவனாகிய, முன்னமே அவன்பால் ஆர்வமுடையேனாகவேண்டி அவனதுமார்பால் வருத்தமுற்ற என்னியல்பை யறியாத காதலன் என்னமகனெனக்கூறப்படுவனோ? எ - று.

மண்ணாப் பசுமுத்தேய்ப்ப நுண்ணிதிற்றாங்கிப் பெண்மைதட்பவென மாறிக்கூட்டுக. தலைவியை முத்தோடொப்பக்கூறியது சிறப்புநிலைக்களமாக முதலொடு முதலேவந்த பண்புவமம். சேர்ப்பனாகிய அறியாதோன் என்ன மகன்கொலென மாறிக்கூட்டுக. களவாதலின் நலனைப் புலப்படாமல் மறைக்கவேண்டியதாயிற்று. ஆண்மகனருகிருந்து காமஞ்செப்புதல் கற்புக்கண்றிப் பெறப்படாமையின், வரைவுவிரும்பியவாறாயிற்று. என்ன மகன் என்றது காதல்கைம்மிகல். இஃது அழிவில்கூட்டத்திற்குத் தலைக்கீடு.

௧௦௮ நற்றிணை நானூறு

உள்ளுறை :—அலராமற் குவிந்த பூங்கொத்தையுடைய புன்னையின் கண்ணே புலவுநாற்றத்தையுடைய நீர்தெறித்தரும்பிய சேர்ப்பனென்றது, புன்னையிடத்துத் தோன்றிய புலவுநாற்றத்தைப் பூவிரிந்துகெடுக்குமாறு போல வரைந்துகொண்டு களவின்கண் வந்தகுற்றம் வழிகெடவொழுகுவானாகவென்றதாம். மெய்ப்பாடு - வருத்தம்பற்றியஇளிவரல். பயன் - வரைவுடம்படுத்தல். (கூசு)

## கூரு. கொட்டம்பலவனார்

குறிஞ்சி : இது, தலைமகன் பாங்கற்கு இவ்விடத்து தென வுரைத்தது.

இத்தன்மைத்

எ - து, பாங்கற்கூட்டத்துத் தோழன் அஃது எவ்விடத்து எவ்வியற்றென்றாற்குத் தலைமகன் குன்றகத்தது சீறூர், அச் சீறூர்க்கண்ணுள்ளாளொரு கொடிச்சி, அவள்கூந்தல் நறுநாற்றத்தது; அத்தகையாள்கையில் என்னெஞ்சு சிக்குண்டது; அஃது அவளன்றிப் பிறரால் விடுத்தற்கரியதுகாணென வருந்திக்கூறுநிற்பது.

கழைபாடு இரங்கப் பல்லியங் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி
நோன்கயிற்று
அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
ரு. கழைக்கண்* இரும்போறை ஏறி

விசைத்தெழுந்து

குறக்குறு மாக்கள் தாளங் கொட்டுமக்
குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
கூ0. விடுத்தற் காகாது பிணித்தவென்
நெஞ்சே.

உரை :—பக்கத்திலே குழலொலிப்பப் பலவாச்சியங்களுமுழங்க ஆடுகின்ற கழைக்கூத்திடநந்த முறுக்குண்ட புரியையுடைய வலியகயிற்றின் மீது, இனிய அத்திப்பழம்போன்ற சிவந்தமுகத்தையும் (பஞ்சபோன்ற தலையையுமுடைய குரங்கினது வலியகுட்டி பற்றித் தூங்காநிற்ப, அதனைக் கண்ட குறச்சாதியரின் இளமகார் பெரியபாறையின்கணுள்ள மூங்கிலின் மேல் விசைத்தெழுந்தேறிநின்று தாளங்கொட்டாநிற்கும் அந்தக் குன்றின் இடத்துளதாகும் கொழுவிய காவற்காடுசூழ்ந்த சீறூர் ; என்னாற்காதலிக்கப் பட்ட நறுமணங்கமழுங் கூந்தலையுடைய கொடிச்சி அச்சீறூரின்கண் இருப்பவளாவாள்; அவளாலேபிணிப்புண்ட என்னெஞ்சமும் அக்கொடிச்சியின் கையகத்ததாயிராநின்றது ; அவளிரங்கிவிடுத்தாலன்றி என்னெஞ்சம் பிறரால் விடுவித்தற்கும் இயலாதாகுங்காண் ; எ – று.

அதவம் - அத்தி. துய் - பஞ்சு. மிளை - காவற்காடு. சீறூர் - இவ்விடம் என்றவாறு. நாறுமயிர் - இவ்வியற்றென்றவாறு. நெஞ்சம்பிணித்ததும் ஆகாததும் தன்னிலே.

---

(பாடம்) * பறைக்கண்

நீசெல்லுதற்கியலாதென்பான் குன்றகத்தது குழுமிளைச்சீறூரென்றும், அங்ஙனஞ்சென்ருலும் என்னெஞ்சம் நின்ஞற் காண்பதற்கியலாதவாறு கொடிச்சிகையகத்துப் பிணிப்புண்டதென்றும், ஒருவழி நீகாணினும் அவள் அருள்செய்து விடுத்தாலன்றி நின்போல்வார் விடுத்தற்கரிதென்றுங் கூறினும். தாளங்கொட்டுமென்ற சொற்சிறப்பானே ஆசிரியர் கோட்டம்பலவனுரெனப் பெயர்பெற்றனர்போலும்.

இறைச்சி :—கூத்திநடந்த கயிற்றின்மேல் மந்தியின்பறழ் எறியாடக் கண்ட குறமாக்கள் தாளங்கொட்டாநிற்குமென்றது, காப்பனகாத்துக் கடிவனகடிந்து மன்பதை யோம்புதலை மேற்கொண்ட என்னுள்ளத்து ஒரு கொடிச்சிசென்று தங்குவதனை யறிந்தநீ கைகொட்டி நகையாடி யழுங்கச் செய்தனையென்றதாம். மெய்ப்பாடு – வருத்தம்பற்றிய இளிவரல். பயன் – பாங்கனிடத்துரைத்தல். (கூ௫)

# கூசு. கோக்குளமுற்றஞர்

நெய்தல்: இது, சிறைப்புறமாகத் தோழி தலைவிக் குரைப்பாளாய் வரைவுகடாயது.

எ – து, சிறைப்புறத்தானுகிய தலைமகன் கேட்டு வரையுமாற்றுனே தோழி, தலைவியைநோக்கி அவர் நம்மைப்புணர்ந்தசோலை இதுவேயென்றும், ஆடிக் கூந்தலைத் துவட்டினதுறை உதுவேயென்றும், தழையுடுப்பித்துச்சென்றகானல் அதுவேயென்றுங்கூறி யுருகிப்பசந்தனையே; இனி எவ்வாறுய்குவாயென்று வருந்திக்கூருநிற்பது.

இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை தைதந்த வெண்மணல்
ஒருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே உதுவே
பொம்மல் படுதிரை நம்மோடு ஆடிப்
புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல்
ஐம்பால்
துவரினர் அருளிய துறையே அதுவே
கொடுங்கழை நிவந்த நெடுங்கால்
நெய்தல்
அம்பகை நெறித்தழை அணிபெறத்
தைஇத்
தமியர் சென்ற கானல் என்றாங்கு
உள்ளுதோ றுள்ளுதோ றுருகிப்
பைஇப் பையப் பசந்தனை பசப்பே.

உரை:—தோழீ! நறுமணங்கமழ்கின்ற பூவையுடைய ஞாழலின்சிறந்த மலரும் புன்னையின்சிறந்தமலரும் உதிர்ந்து பரவிநெருங்கிய வெளியமணற் பரப்பினொருபால் என்னைப் புதுவதாக இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தசோலை இதுவேயென்றும், பொலிவுபொருந்திய கடலில் நம்மோடுநீராடி என்முது கிலே தாழ்ந்திருண்ட விளங்கிய ஐம்பாலாகவகுக்குங் கூந்தலைப்பிழிந்து துவட்டினராயருளிய துறை உதுவேயென்றும், வளைந்ததண்டுயர்ந்த நீண்ட காம்புடைய நெய்தலின் அழகிய ஒன்றோடொன்று மாறுபடத் தொடுத்த நெறிப்பையுடைய தழையை அழகுபெற எனக்கு உடுப்பித்துத் தமியராய்ச்

சென்றுவிட்ட கழிக்கரைச்சோலை அதுவேயென்றும் அவ்வண்ணம் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் உள்ளமுருகி மெல்லமெல்லப் பசப்பை மேற்கொண்டு பசந்துகாட்டினை ; இனி எவ்வாறுய்குவாய் ? எ - று.

பொம்மல் - பொலிவு. துவருதல் - துவட்டுதல். கழை - தண்டு.

புணர்ந்தபொழிலிது என்பதுமுதலாய மூன்றுந் துன்பத்துப்புலம்பல். உள்ளுதோறுருகியென்றது ஆங்குநெஞ்சழிதல். பசப்புப்பசந்தனையென்றது பசலைபாய்தல். ஏனை மெய்ப்பாடு - அவலத்தைச்சார்ந்தபெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கசு)

## கூஎ. மாறன்வழுதி

முல்லை : இது, பருவங்கண் டாற்றாளாய தலைவி தோழிக் குரைத்தது.

எ - து, வினைவயிற் பிரிந்துசென்ற தலைமகன் குறித்தபருவத்து வாராமையால் அக்காலத்துண்டாகிய கருப்பொருண்முதலாயவற்றைக் கண்டு வருந்தியதலைவி, ஆற்றுவிக்குந் தோழியைநோக்கிக் குயில்கூவு மோசையும், யாற்றுநீர்ப்பெருக்கும், நறுமலர்விற்குமகளும் எனக்குக் காமநோயைத் தோற்றுவித்துக் கொடுமைசெய்தலின், யான் எவ்வாறுய்வேனென வருந்திக் கூறுமிற்பது.

அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத்து எஃகெறிந் தாங்குப்
பிரிவில புலம்பி நுவலுங் குயிலினுந்
தேறுநீர் கெழீஇய யாறுநனி கொடிதே

ரு. அதனினுங் கொடியாள் தானே மதனின்
துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீ
ரோவென
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவர் தனிமட மகளே.

உரை:—தோழீ! நெடுங்காலமுன்னுண்டாகி, ஆழ்ந்த பெரிய புண்ணின் வாய்நிணங் காயாத துன்பத்தையுடைய மார்பினிடத்தில் வேற்படையைக் குத்திப் பாய்ச்சினாற்போல என்னருகிலிருந்து பிரியாதனவாய் வருந்திக் கூவுங் குயிலினுங்காட்டில் நன்றாகத்தெளிந்த நீர்கெழுமிவருகின்ற யாறு மிகக்கொடிதாயிராநின்றது; அழகுடைய பஞ்சுபோன்ற மேலே புறவிதழையுடைய பசிய குருக்கத்திமலருடனே விரவிய சிறுசண்பகமலரையும் விலைக்குக் கொள்வீரோவென்று அம்மலர்களை யிட்டுவைத்தலால் வண்டுகள் சூழ்கின்ற கடகப்பெட்டியைக் கைக்கொண்டு திரியாநிற்கும் சோலையின்கணுள்ள உழுதுண்ணுமாக்களின் ஒப்பற்ற இளமகளாவாள்தான் அவ் யாற்றினுங்காட்டில் மிகக் கொடியளாயிராநின்றாள்; இங்ஙனமாகையில் யான் எவ்வாறு ஆற்றியுய்குவன்? எ – று.

வழும்பு – நிணம். மதன் – அழகு. பித்திகை – சிறுசண்பகம். வட்டி – கடகப்பெட்டி. தலைவன்குறித்தகாலம் குயில்கூவி; யாற்றில்நீர்பெருகி,

குருக்கத்தி சிறுசண்பகமுதலாயின மலருங்கார்ப்பருவத்தில் வருவேனெனன்றுனென்பது. குயிலோசைக்கு எஃகெறிந்ததைக்கூறியது கிழக்கிடுபொருள் நிலக்களமாக முதலுஞ்சினையும்விராய்வந்த பண்புவமம். குயிலோசை முதலியன—இன்பத்தை வெறுத்தலுந் துன்பத்துப் புலம்பலுமாம்.

குயிலோசை செவியளவே யின்பஞ்செய்ய, ஏனைப்புலன்க ளின்பம் பெறுமையிற் குயில்கொடிதென்றாள். யாற்றுநீர் குளிர்ச்சிசெய்தலின் அக் குளிருக்குத் தனிக்கிடைவருத்துவதேயென யாறுகொடிதென்றாள். ஆடவனது மெய் தோயப்பெற்று அம் மெய்ம்மணம் நுகர்ந்தவழி நறுமலரின் மணஞ் சிறக்குமாதலின் அதுகாரணமாகப் பூவிலைமடந்தை கொடியளென்றாள். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். **(கஎ)**

## கஅ. உக்கிரப்பெருவழுதி

**குறிஞ்சி :**

**இஃது, இரவுக்குறிவந் தொழுகுந் தலைவனைத் தோழி வரைவுகடாயது.**

எ - து, இரவுக்குறி இடையீடின்றி வருகின்ற தலைமகனைநோக்கித் தோழி, காவன்மிகுதியையும், அதனாலே தலைமகள் துயிலாது வருந்துதலையும், அவளது நெஞ்சம் தலைவனைவிட்டுப் பிரியாத அன்பினிலையையுங் கூறுவாளாய், நாடனே! நீ இரவில் வருதலைக்காட்டிலும் தூங்காத என் கண்ணுங்கொடிது, மீளாத என்னெஞ்சமுங் கொடியதுகாணென வருந்தி வரைவுகடாதல் தோன்றக்கூறுநிற்பது.

எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தில்
செய்ம்ம்மேவல் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர்

நூழை நுழையும் பொழுதில் தாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்
கல்லளைப் பள்ளி வதியும் நாடன்
எந்தை ஓம்புங் கடிப்புடை வியல்நகர்த்
துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி
இரவின் வரூஉம் அதனினுங் கொடிதே
வைகலும் பொருந்தல் ஒல்லாக்
கண்ணொடு வாராஎன் நாரில் நெஞ்சே.

**உரை :**—*முள்ளம்பன்றியின் முட்போன்ற பருத்த மயிரையுடைய பிடரும் சிறியகண்ணும் வயலிற்சென்றுண்ணும் விருப்பமுமுடைய பன்றி உயர்ந்த மலையிடத்துள்ள இடமகன்ற தினைக்கொல்லையிலேசென்று மேயும் பொருட்டுப் பெரிய இயந்திரமமைந்த புழைவழியிலே சென்றுபுகும் பொழுது தாழாது விரைந்து நல்லபக்கத்திருந்து பல்லியடித்தலும், அதனையறிந்து ஆங்குச்சென்றால் ஊறுநிகழுமென்றஞ்சி மெல்லமெல்லப் பின்னே மீண்டுவந்து தன் கல்முழையிலுள்ள பள்ளியிடத்தே தங்காநிற்கு மலைநா*

டனே! எந்தையாலே பாதுகாக்கப்படுகின்ற காவலையுடைய அகன்ற மாளிகையிடத்துத் துஞ்சாமற் காக்குங் காவலர்தாம் சிறிது அயர்ந்திருக்கும் பருவமறிந்து நீ இரவின்கண்வந்து முயங்கிச்செல்லும் அதனினுங்காட்டில், நாள்தோறும் நீ வருநெறியின் ஏதத்தைக் கருதுவதனலே துயிலப்பெருத என்கண்ணுங் கொடிதாயிராநின்றது; அன்றியும் நின்பாற்சென்றுவாராத என்பால் அன்பற்ற என்னெஞ்சமும் கொடிதாயிராநின்றதுகாண்; எ - று.

எய் - முட்பன்றி. மேவல் - விரும்புதல். நூழை - துவாரம். கடிப்பு - காவல். நார் - அன்பு. நகர் - மாளிகை. கொடிதென்னுங்குறிப்புமுற்றைக் கண்ணுக்கும் நெஞ்சுக்குந் தனித்தனிகூட்டுக. நாடன் - அண்மைவிளி. எந்தையோம்புநகர் - காவன்மிகுதி. பொருந்தலொல்லாக்கண் - கண்டுயில் மறுத்தல். வாராவென்னெஞ்சு - அன்பினிலை. இது தலைவிகூற்றைத் தன் கூற்றாகத் தோழிகொண்டுகூறியது.

அஃறிணையாகிய பன்றியும் கரவிற்சேறற்கஞ்சி மீளுநாடனுயிருந்தும் நீ அஞ்சாதுபுகுதலின் என்கண்ணுறங்கிலதென் றிரங்கினள்.

**உள்ளுறை:—**பன்றி தினையையுண்ணவேண்டி இயந்திரமமைத்த புழையிற்புகும்போது பல்லியடிப்பக்கேட்டு ஏதமுடைத்தென்று மீண்டு தன் அளைபுகுமென்றது, தலைமகன் தலைமகளது இன்பந்துய்ப்பக் காவன் மாளிகையுட் கரவிற்புகும்பொழுது நிலவுவெளிப்பட்டின்முதலாய இடையீடு நிகழக்கண்டு ஏதமுடைத்தாமென்று மீண்டு தன்பதி புகுதவும் அமையு மென்றதாம். இதனுன் இடையீடின்றித் துய்க்கவேண்டி வரைந்தெய்துகவென்றதாயிற்று. **மெய்ப்பாடு** - அவலத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கூஅ)

## கூகூ. இளந்திரையனார்

**முல்லை:**

இது, பருவங்கண்டாற்றுளாய தலைவியைத் தோழி பருவமன்றென்று வற்புறுத்தியது.

எ - து, வினைவயிற்சென்றதலைவன் குறித்த கார்ப்பருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழி, இது கார்ப்பருவமன்று, அறியாமையாலே கடனீரையுண்டமுகில் மழையைப் பெய்யக்கண்டு கார்காலமாமெனப் பிடவுங் கொன்றையுங் காந்தளு மலர்ந்தன; அவற்றைநோக்கி நீ மயங்காதேகொள்ளென வற்புறுத்திக் கூறுகிற்பது.

நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில்விரித்து அன்ன வெயிலவிர் உருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
தாம்வரத் தெளித்த பருவங் காண்வர
இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று
மறந்துகடல் முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
காரென்று அயர்ந்த உள்ளமோடு தேர்வில
பிடவுங் கொன்றையுங் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே.

உரை:—மடந்தாய்! தண்ணிதாகிய நீர்மை முற்றும் இல்லாத சென்று கடக்கமுடியாத நீண்டநெறியில் வெளிய ஆடையை விரித்தாற்போன்ற வெயில் வீசுகின்ற வெப்பத்தாலே நோக்குவார் அஞ்சும்படியாக நடுக்கத் தைச்செய்யுங் கொடியகாட்டின்கண்ணே சென்ற காதலர் தாம் வருவே மென்று அழகுபொருந்தத் தெளியக்கூறிய பருவம் இதுதானோவென்று வினவாநின்றனை, இஃதன்று; அறிவில்லாது பருவகாலத்தை மறந்து கடனீரையுண்டதனாலாகிய நிறைந்தசூலையுடைய கரியமேகம் தான் தாங்கமாட்டாமே பெய்தொழித்த வளவிய மழையைநோக்கி இது கார்காலமென மறதியுற்றவுள்ளத்துடனே அறியாதனவாய்ப் பிடவும், கொன்றையுங், காந்தளும், இன்னும்பலவும் அஃறிணையாகிய அறிவில்லாப்பொருளவாதலின் மிகமலர்ந்துவிட்டன; அவற்றைக்கண்டு நீ கார்காலமென மயங்காதேகொள்.

நீர் - ஈரப்பண்பு. உருப்பு - வெப்பம். கமம் - நிறைவு. இறுத்தல் - பெய்தொழித்தல். கோடல் - காந்தள். மடவ - அறியாதன. இது பருவமன்றெனவே அவர் பொய்யுரையார் குறித்தபருவத்து வருவரெனத் தெளிவித்தனளாயிற்று. மெய்ப்பாடு - மருட்கை. பயன் - தலைவியைத்தெளிவித்தல்.

## கOO. பரணர்

மருதம்: இது, பரத்தை தலைவிக்குப்
குடம்படச் சொல்லியது.

பாங்காயினூர்கேட்ப விறலிக்

எ - து, பரத்தையானவள் தன்னைத் தலைவன்பிரிந்து செவ்வணிகண்டு மனைவயிற்புக்கானென்பதையறிந்து, தன்பால் அவன்செய்ததனைத் தலைவி கேட்டு வெறுப்படையவேண்டி, அத்தலைவிக்குப் பாங்காயுள்ள தோழி முதலானோர் கேட்குமாறு தன்தோழியாகிய விறலியைநோக்கி ஊரன் என்னைப்பற்றி வளையைப்பறித்தலாலே நான் உன்மனைவிக்கு இதனைச் சொல்லுவேன் என்றலும் அவன் நடுங்கியநிலைமையை நினைக்குந்தோறும் நகுகிற்பேனென இகழ்ந்துகூறுகிறபது.

உள்ளுதோறும் நகுவேன் தோழி வள்ளுகிர்

மாரிக் கொக்கின் கூரலகு அன்ன
குண்டுநீ ராம்பல் தண்துறை யூரன்
தேங்கம ழைம்பால் பற்றி யென்வயின்
வான்கோல் எல்வளை வெளவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட்கு உரைப்பல் என்றலின்
முனையூர்ப்
பல்லா நெடுநிறை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்னர் ஆளன் நடுங்கஞர் நிலையே.

உரை:—தோழீ! பெரிய உகிரையுடைய கார்காலத்து உலாவுங்
கொக்கினது கூரிய மூக்குப்போன்ற ஆழ்ந்த நீரின்முளைத்த ஆம்பற்பூவை,

ந. நா.—8

புடைய தண்ணிய துறையையுடைய ஊரன், நெய்ம்மணம்வீசுகின்ற என் கூந்தலைப் பற்றியீர்த்துவைத்து என்கையிலுள்ள வெளிய கோற்றொழி லமைந்த ஒளியையுடைய வளையைக் கழற்றிக்கோடலினுகிய பூசலாலே சினமுற்றமுகத்தோடு அவனைநோக்கி 'இனியான் இங்ஙனம் சினவாது சென்று நின்மனைக் கிழத்திபால் இங்கு நிகழ்ந்ததனைக் கூறுநிற்பேன்' என்றவுடன் ஊர்முனையிலுள்ள பல நெடிய ஆனிரைகளை விற்போரால் வென்று செலுத்திக்கொண்டு வருகின்ற இரவலர்க்குத் தேர்கொடுக்குங் கைவண்மையுடைய மலையமான் திருவோலக்கத்தின்முன்பு வேற்றுநாட்டிருந்து வந்த பெரிய இசையையுடைய கூத்தர் நன்மையைவிரும்பி முழக்குகின்ற மத்தளத்தின் மார்ச்சனைவைத்த பக்கம் அதிர்வதுபோலும் அதிர்ச்சியோடு நன்மையைமேற்கொள்ளும் அவன்தான் நடுங்கிய வருத்தத்தையுற்றநிலையை நினைக்குந்தோறும் நகைதோன்றுதலாலே யான் நகாநிற்பேன்காண்; எ - று.

வள்ளுகிர் - நீண்டநகமுமாம். குண்டு - ஆழம். தேன் - நெய். ஒய்யும் - செலுத்துகின்ற.

இதனை மனைவி கேட்பின் 'அவன்யார்மாட்டும் வரம்பின்றியொழுகுபவன்' என்று வெறுப்புத்தோன்றும்; வெறுத்தவழி அவனை மீட்டும் தான் அடையலாமென்றுகருதி யிங்ஙனம் கூறினாள். சினங்கொண்டுகூறின் உரை புலப்படாவாதலால் சினவாதுசெல்வேனென்றாள். தனது அன்பு தலைப்பிரியாக் கொள்கைதோன்ற நன்னர் ஆளன் என்றாள். **மெய்ப்பாடு** - எள்ளல்பொருளாகப்பிறன்கட்டோன்றிய இளிவரல். **பயன்** - பரத்தை தலைவனைத் தான் அடையச் சூழ்ந்துரைத்தல். (௧௦௦)

## ௧௦௧. வெள்ளியந்தின்னனார்

**நெய்தல்:** இது, பின்னின்றதலைமகன் யது.

தோழிகேட்பச் சொல்லி

எ - து, குறையுறவுணர்தல் முதலாய மூன்றனுலும் இவனொரு குறையுடையான் போலுமென்று தோழி உய்த்துணரநிற்குமிடத்து இரந்து பின்னின்ற தலைமகன் தான் தலைவியிடத்துவைத்த காதலினுலே படுந்துன்பத்தைத் தோழி அறியுமாற்றுனே அவள்கேட்பப் பரதவர்மடமகளுடைய கண்களை யான் பார்க்குமுன்பு புலவுநாற்றத்தையுடைய பாக்கமும் எனக்கு இனிதாகவேயிருந்தது; இப்பொழுதோவெனில் அஃது அங்ஙன மின்மையா லிரங்கத்தக்கதாயினதேயென்று வருந்திக் கூறுகிற்பது.

முற்று மஞ்சள் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி இறவின்
கணங்கொள் குப்பை உணங்குதிறன் நோக்கிப்
புன்னையங் கொழுநிழல் முன்றுய்த்துப் பரப்புந்
துறைநணி யிருந்த பாக்கமும் முறைநணி
இனிதுமன் அளிதோ தானே துனிதீர்ந்து
அகன்ற அல்குல் ஐதமை நுசுப்பின்





மீனெறி பரதவர் மடமகள்
மானமர் நோக்கங் காணு ஊங்கே.

உரை :—வருத்தமின்றி, அகன்ற அல்குலையும் மெல்லிதாயமைந்த இடையையுமுடைய மீன்பிடிக்கின்ற பரதவர்தம் இளமகளின் மான்போலும் ஒன்றோடொன்று தொழிலின் மாறுபட்ட பார்வையைக் காணப்பெறு தமுன், உவ்விடத்தே முற்றாத இளமஞ்சட்கிழங்கின் பசிய புறத்தைப்போலச் சுற்றியிருக்கின்ற சருச்சரையையுடைய சூழ்ந்த கழியிடத்துள்ள இறுமீனின் கூட்டங்கொண்ட குவியல் காயுப்வகையை ஆராய்ந்து புன்னையினது அழகிய கொழுவிய நிழலினெதிரே போகட்டுப் பரப்புந் துறைக்கு அணித்தாயிருந்த பாக்கமும் முறையே மிக இனிமையுடையதா யிருந்தது, அஃது இற்றைநாளால் அப் பரதவர்மகளின் நோக்கங் காணப்பெற்றமையாலே கழிந்துபோகியதாதலின் இரங்கத்தக்கதா யிராநின்றது; எ - று.

பாக்கம் - கடற்கரையிலுள்ள ஊர். ஐது - மெல்லிது. ஊங்கு - உவ்விடம். பிணர இறவென்க. துறையேயன்றிப் பாக்கமு மினிதாயிருந்ததென்க.

பாக்கமுமென்ற இழிவுசிறப்பும்மையால் மீன்புலர்தலினுற்ற மிக்குளதாயிருந்தும் தோற்றப்பொலிவா லினிமையாயிருந்ததெனவுமாம். காணுமுனினிதாயிருந்தது கண்டபின் இன்னாமையதாதலின் அவ்வின்னாமையொழியுமாறு கருதுகவென்றானும். ஒருநோக்கு நோய்நோக்கும், மற்றது அன்னதன் மருந்துமாதலின் தொழில்மாறுபட்ட நோக்கங்களாயின. புன்னைமுன் பரப்புதல் நிழலிலிருந்து புள்ளோப்புதற்பொருட்டு.

இறைச்சி :—இறவு காயுந்திறனோக்கிப் புன்னைநிழலின்முன்பு பரப்புமென்றது யானும் என்போன்ற பெருவேட்கையளாகிய பரதவர்மகளுங் கொண்ட காமநோயைப் போக்குமாறு பகற்குறியிடனோக் கருதத்தரும் புன்னைநிழலின்முன் இருவோமையும் தோழி கூட்டுவிப்பாளாவதென்றதாம். கேட்போர் - தோழி. காலம் - நிகழ்காலம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - தோழிகேட்டுக் குறைமுடிப்பாளாவது. (கப௧)

## க0௨. செம்பியனார்

**குறிஞ்சி:** இது, காமமிக்க கழிபடர்கிளவி.

எ – து, இருவகைக்குறியானும் வந்தொழுகுந் தலைமகன் இடையீடுபட்டு வாராதொழியக்கண்ட தலைமகள் வரைதல்விருப்பினளாய் வேட்கை பெரிதுஞ் சிறப்பச் சிந்தித்துக் கிளியைநோக்கிக் கிள்ளாய்! என் தலைவரது நாட்டிலுள்ள நின் சுற்றத்தாரிடஞ் சென்றகாலை ஆங்கு என்காதலரை நோக்கி இம் மலைக்குறவர்மகள் மீட்டும் தினைப்புனங்காவல்செய்யுமாறு வந்தனளென இவ்வொன்றனைமட்டுஞ் சொல்வாயாகவென்று இரந்து கூறா நிற்பது.

கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி

அஞ்ச லோம்பி ஆர்பதங் கொண்டு

நின்குறை முடித்த பின்றை என்குறை



செய்தல் வேண்டுமால்* கைதொழுது

இரப்பல்

ரு. பல்கோட் பலவின் சாரல் அவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயின்
அம்மலை கிழவோர்க்கு உரைமதி

இம்மலைக்

கானக் குறவர் மடமகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே.

உரை :—விளைந்த தினைக்கதிர்களைக் கொய்துகொண்டு போகாநின்ற சிவந்தவாயையுடைய பசியகிளிகாள்! அஞ்சாதேகொள்; நீ இக்கதிர்களைக் கொய்தல் காரணமாக யாரேனும் நின்னை அச்சுறுத்துவார்கொல்லோவென்னும் ஐயத்தைப்போக்கி வேண்டியவுணவைக்கொண்டு நின்குறையெல்லா முடித்தபின்பு ஒழிவெய்தியகாலத்தில் என்னுடைய குறைபாட்டைச் செய்து முடிக்க வேண்டும்; இது நின்னையான் என்கைகளைக் குவித்துத் தொழுது இரந்துகேட்கின்றேன்; அக் குறைபாடுதான் யாதோவெனில், பலவாய காய்களைக் காய்க்கின்ற பலாமரங்கள்மிக்க சாரலையுடைய அவர் காட்டின்கணுள்ள நின்சுற்றத்தினிடத்து நீ ஒருபொழுது செல்லுவையேயாயின் அம்மலைக்கு உரியாராகிய எனது காதலரை நோக்கி இந்த மலையைச் சூழ்ந்த காட்டின்கணுள்ள குறவருடைய இளமகள் முன்போலவே தினைக் கொல்லைக் காவலுக்கு அமைந்து ஆண்டிருக்கின்றாளென் றிவ்வொன்றனைமட்டு முரைத்து என் இவ்வொருகுறையைச் செய்து முடிப்பாயாக; எ - று.

குரல் - கதிர். ஆர்பதம் - உணவு. கோள் - காய்.

சொல்லென ஏவியவழி மறுக்குங்கொல்லோ, உடன்படுங்கொல்லோவென்னும் ஐயுறவால் கிளைமருங்கிற் சேறியாயினென்றாள். அது மறுமற் செய்தற்பொருட்டு இரப்பலென்று தன்னைத்தாழ்த்தியும் தொழுதென அதனையுயர்த்தியுங்கூறினாள். ஆயினளெனவுரையென்றது தூதுமுனிவின்மை.

இறைச்சி :—என்னைக் கைவிட்ட கொடுமையையுடையவர் சாரலாயிருந்தும் அச்சாரலின்கணுள்ள பலாமரங்கள் பிறர்க்குப் பயன்படுமாறு காய்க்கின்றனவே; இஃதென்னவியப்போவெனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றியதறிக. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௧0௨)

## ௧0௩. மருதனிள நாகனார்

பாலை: இது, பொருள்வயிற்பிரிந்த தலைவன் ஆற்றாதாகிய நெஞ்சினைக்கழறியது.

இடைச்சுரத்து

எ - து, பொருளீட்டுமாறு தலைவியைப் பிரிந்துசெல்கின்ற தலைமகன் சுரத்தினிடைத் தன்காதலியைக்கருதிக் கவன்ற நெஞ்சைநோக்கி யாம் காட்டின்கண்வந்து வருந்துகின்றேம்; இவ்விடத்துப் பொருள்கசைக்காகச் செல்வோமெனினும் அன்றி மீள்வோமெனினும் என்னலோ ரிடையூறும்

(பாடம்) * சொல்லல் வேண்டுமார்.

மூலமும் உரையும் ஆகள்

இல்லையாதலின் நீ இவ்விரண்டனு

சொல்லென வருந்திக் கூறுகிற்பது.

லொன்றனை ஆராய்ந்து எனக்குச்

ஒன்றுதேரிந்து உரைத்திசின் நெஞ்சே

புன்கால்

சிறியிலை வேம்பின்* பெரிய கோன்று

கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பில்

களிறுநின்று இறந்த நீரல் ஈரத்துப்,

பால்வீ தோல்முலை அகடுநிலஞ் சேர்த்திப்
பசியட முடங்கிய பைங்கண் செந்நாய்,
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபில் பிணவுநினைந்து
இரங்கும்
விருந்தின்வெங் காட்டு வருந்துதும் யாமே
ஆள்வினைக்கு அகல்வாம் எனினும்
மீள்வாம் எனினும் நீதுணிந் ததுவே.

**உரை:**—என் நெஞ்சமே! புல்லிய காம்பையுடைய சிறிய இலையையுடைய வேப்பமரத்தின் பெரிய கிளைகளை முறித்துத்தள்ளி மதத்தாற் செருக்குண்ட கடியசினமும் வலிமையுமுடைய களிற்றியானை நின்றுகழித்ததன்ற நன்னீரல்லாத இழிந்த நீரிலாகிய ஈரத்துப் பால்வற்றிய தோலாகிய முலையையுடைய வயிற்றைப் பொருத்தி, பசி வருத்துதலானே வருந்தி முடங்கிக்கிடந்த பசிய கண்ணையுடைய செந்நாய்ப்பிணவினது கெடாத வேட்டைமேற்சென்ற கணவனாகிய செந்நாயேற்றை தான் உண்மையாகத் தன் பிணவை முன்பு புணர்ந்த தன்மையைக் கருதி வருந்தாநிற்கும் இதுகாறும் புக்கறியாத புதுவதாகிய கொடியகாட்டின்கண்ணே வந்துபுகுந்து யாம் வருந்துகின்றோம்; பொருள்செய்முயற்சி தலைக்கீடாகச் செல்வோமென்றாலும், அங்ஙனஞ்செய்யாது, மீண்டு ஊர்புகுவோமென்றாலும் யான் தடுப்பதொன்றுமில்லையாதலின் அவ்விரண்டனுள் நீ துணிந்தவொன்றனை ஆராய்ந்துரைப்பாயாக; எ - று.

முன்பு - வலிமை. விருந்து - புதுமை. நீரல்லாநீர் - மூத்திரம்.

உள்ளுறை :—நீரல்லாத ஈரத்துப் பிணவு பசியால் வருந்த வேட்டை மேற்சென்ற அதன்கணவனாகிய செந்நாயேற்றை தான் சென்றவிடத்துந் தன் பிணவைக்கருதி வருந்துமென்றது படுக்கைகொள்ளாது, வேற்றிடத்தும்போய்க் காமவெப்பந்தாங்காது நம் காதலி தளிர்மேலே கிடந்து காமத்தால் வருந்தப் பொருள்வயிற்போந்த நாம் ஈண்டு அவளைக்கருதிப் புலம்பாநின்றேமென்றதாம். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இடைச்சுரத்தழுங்கல். (க0௩)

## க0௪. பேரிசாத்தனார்

குறிஞ்சி : இது, தலைவி ஆறுபார்த்துற்ற அச்சத்தாற் சொல்லியது.

எ - து, தலைமகன் இடையீடின்றிக் கொடிய காட்டுநெறியாக இரவுக் குறிவந்தொழுகக்கண்டஞ்சிய தலைமகள் இங்ஙனமன்றி வரைந்தெய்தின்,

(பாடம்) * சிறியிலைவேலம்.



இவ்வச்சம் இல்லையாகுமெனக் கருதி அதனைத் தோழிகேட்டுத் தலைமகனுக் கறிவுறுத்தும்வண்ணம் தலைவனது மார்பை விரும்பியுறையும் யானேயல்லது அவன் வருகின்ற கொடியநெறியைக் கருதுவார் பிறர் யாவருளரென வருந்திக் கூறாநிற்பது.

பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை
தேங்கமழ் சிலம்பில் களிற்றொடு பொரினே
துறுகல் மீமிசை உறுகண் அஞ்சாக்
குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது
பைந்தாள் செந்தினைப் படுகிளி ஓப்பும்
ஆர்கலி வெற்பன் மார்புநயந்து உறையும்
யானே அன்றியும் உளர்கொல் பானாள்
பாம்புடை விடர ஓங்குமலை மிளிர
உருமுச்சிவந்து எறியும் பொழுதொடு
பெருநீர்
போக்கற விலங்கிய சாரல்
நோக்கருஞ் சிறுநெறி நினையு மோரே.

**உரை:**—அழகிய வரியையும், அகன்ற வாயையுமுடைய புலியேற்றை இடமகன்ற மலையின்கண்ணே களிற்றியானையோடு போர்செய்கையில் அவற்றாலுண்டாகுந் துன்பத்துக்கஞ்சாத குறவரின் இளமைந்தர்கள், ஆண்டுள்ள பெரும்பாறையினுச்சியிலே மனச்செருக்கோடேறித் தமது கையிலுள்ள சிறிய தொண்டகப்பறையை ஒலிப்பிக்கு மோசையானது பக்கத்திலுள்ள பசிய அடித்தண்டினையுடைய செவ்விய தினைக்கதிர்களைக் கொய்ய வந்திறகுகின்ற கிளிகளை அச்சுறுத்தி யோட்டாநிற்கும் நிரம்பிய ஒலியையுடைய மலைநாடனது மார்பை விரும்பித் தனித்துறைகின்ற யான் ஒருத்தியேயல்லாமல், இரவு நடுயாமத்திலே பாம்பு உறையும் பிளப்புக்களையுடைய உயர்ந்த கொடுமுடிகள் புரண்டுவிழும்படியாகச் சினந்து, இடிமுழங்கி மோதுகின்ற இருட்பொழுதையும், நடந்துசெல்லக் கூடாதவாறு பெருவெள்ளங் குறுக்கிட்டோடுகின்ற சாரலின்கண்ணே நோக்குதற்கரிய சிறிய நெறியையுங் கருதுகின்றவர் பிறர் யாவரேனுமுளரோ? உளராயின் நமது காதலரை இரவுக்குறிமறுத்து வரைவிடைப்படுத்தாநிற்பர்; எ - று.

தேம் - இடம். கமழ்தல் - விளங்குதல். புகற்சி - மனச்செருக்கு. தொண்டகம் - குறிஞ்சி நிலத்துக்குரிய சிறிய பறை. ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி வரைதல் வேட்கைப்பொருளது (இறை-௩௰) என்றமையானும் "போக்கும் வரைவு மனைவிக்கட்டோன்றும்" (தொல். பொ. உ௨ ௫) என்றமையானும் வரைதல் வேட்கைக்கிளவி முற்றும் தலைவிகூற்றாதலின், ஈண்டுத் தலைவிகூற்றென்க. கேட்போர்-தோழி. எனவே யான் படுங் கவலையை நீயறியாது அவனைக் களவொழுக்கத்து இரவுக்குறி வருமாறு செய்கின்றனை, வராதபடி தடுத்தாயல்லையெனத் தோழியைச்சுட்டி யுரைத்ததாயிற்று. நயந்துறையும் யானென்றது அவன்பாலுள்ள அன்பின்மிகுதி காட்டியதாம். இஃது, அழிவில் கூட்டத்து அவன் புணர்வுமறுத்தல்.

உள்ளுறை :—புலி யானையொடு போர்செய்யக் கண்ட குறக்குறுமாக்கள் துறுகல்லேறி முழக்குந் தொண்டகப் பறையினொலியானது தினைக் கொல்லையிலே பயில்கின்ற கிள்ளையை வெருட்டாநிற்கும் என்றது (இங்ஙனம் வரையாது வந்தொழுகுங்காலை வேற்று வரைவு நேரினும் நேரும், நேர்ந்தவழி) வேற்றுவரைவுக்குப் புகுந்தாரொடு எமர் அளவளாவி யுடன்படக்கண்ட ஆயத்தார் கூடி மகிழ்ந்து என்பால்வந்து கூறும் மாராயவுரையானது என்னுடம்பின்கணுள்ள உயிரைப் போக்காநிற்குமென்றதாம்.
**மெய்ப்பாடு** - அச்சம். **பயன்** - வரைவுடம்படுத்தல். (க0௪)

## க0ரு. முடத்திருமாறன் பாலை :

இஃது, இடைச்சுரத்து மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.

தலைமகன்

எ - து, பொருள்வயிற்பிரிந்து சுரத்தின்கட்சென்ற தலைமகன் தலைவியைக்கருதி மீளலுற்ற நெஞ்சினைநோக்கி, நெஞ்சமே, நீ முதலிலே காடு கடுமையதென்னாமல் எம் காதலி அங்கு வருந்தும்படி புறப்பட்டு நெடுந்தூரம் வந்துற்றனை; இன்று மீளலுறுவையாயின் நின்முயற்சி நன்றுகண்டாய்; இங்ஙனமே நீ வாழ்வாயாகவென இகழ்ந்து கூறுகிற்பது.

முளிகொடி வலந்த முள்அரை இலவத்து
ஒளிர்சினை அதிர வீசி விளிபட
வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கில்
கடுநடை யானை கன்றொடு வருந்த
நெடுநீர் அற்ற நிழலில் ஆங்கண்

அருஞ்சுரக் கவலைய என்னை
நெடுஞ்சேண்
பட்டனை வாழிய நெஞ்சே, குட்டுவன்
குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்
௧௦. அஞ்சில் ஓதி அரும்படர் உறவே.

உரை:—நெஞ்சே, காய்ந்த கொடிகள் சுற்றிய முட்கள்பொருந்திய அடியையுடைய இலவமரத்தின் விளங்கிய கிளைகள் நடுங்கும்படி வீசி அவை முறியுமாறு கோடைக்காற்று மோதியடிக்கின்ற மூங்கிற்புதர் நெருங்கிய இடங்களிலே கடியசெலவினையுடைய பிடிகள் தத்தங் கன்றுகளுடனே சேரவருந்தாநிற்ப, நெடிய நெறிமுழுதும் நீரில்லாதொழிந்த நிழலற்ற செல்லுதற்கரிய சுரத்தின்கணுள்ள கவர்த்த நெறிகளையுடைய அவ்விடமென்றெண்ணாயாய், குட்டுவன் சேரலது குடமலைச் சுனையிலுள்ள கரிய இதழையுடைய குவளையின் வண்டுமொய்க்கும் பெரியமலரைச் சூடுதலானே மணங்கமழ்கின்ற அழகிய சிலவாய கூந்தலையுடைய நம் காதலி நீங்குதற்கரிய துன்பத்தாலே வருந்தவிட்டு, நீதான் நெடுந்தூரம் வந்துற்றனை; இங்குப் போந்தபின்பு கருதி மீளலுறாநின்றனையாயின் நின்முயற்சி கனிநன்றாயிராநின்றது; இத்தகைய முயற்சிகளோடு நீ நீடுவாழ்வாயாக; எ - று.



முளிதல் - காய்தல். வலத்தல் - சுற்றுதல். வழங்குங்கவலைய ஆங்கணெனக் கூட்டுக. கவலைய ஆங்கணென்னைப் பட்டனை யென்றதனாலே மீளக் கருதாநின்றனையெனக் கொள்ளக்கிடந்த தறிக.

காதலி படருறுமாறு விட்டுச் சேட்பட்டனை யென்றது ஒன்றினேம் யாமென்றுரைத்தாரைத் தோள் நெகிழவிட்டதன் பயனாக நீ இக்கொடிய காட்டில் வந்து துன்புறுகின்றனை யென்றானென்பது.

**இறைச்சிகள்** :—(க) இலவத்தின் கிளை முறியுமாறு காற்றுவீசி மோதா நிற்குமென்றது, நீ கருதியவெல்லாம் கெடும்படியாகக் காமந் தலையெடாநின்றதென்றதாம்.

(உ) யானை கன்றொடு வருந்துமாறு நீரற்ற சுரமென்றது, யான் நின்னொடு சேர வருந்துந்தன்மைத்து இவ்விடமென்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கண் தோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - இடைச்சுரத் தழுங்கல். (கபஞ)

# கOசு. தொண்டைமான் இளந்திரையன்

## நெய்தல் :

**இது, பருவவரவின்கண் பண்டு நிகழ்ந்ததோர் குறிப் புணர்ந்த தலைவன், அதனைக்கண்டு தாங்ககில்லானாய் மீள் கின்றான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.**

எ - து, வினைமுற்றி மீளுந்தலைவன் விரைவிலே தனது தேரைச் செலுத்தவேண்டி முன்பு ஊரினின்று போதரும்பொழுது தலைவி வருந்திய நிலையைக் குறித்துக்காட்டுவான் பாகனைநோக்கிப், பாக! யான் காதலிபாற் சென்று என்கருத்தினைச் சொன்னபொழுது, விடைகூறவியலாது முறியைத் திமிர்ந்ததிர்த்த கையொடு துன்புற்று அவள் நின்றநிலையை நீ அறிதலும் அறிந்திருப்பாயோவெனக் கவன்று கூறுகிற்பது.

அறிதலும் அறிதியோ பாக பெருங்கடல்

எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள
ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது
அசைஇயுள் ஒழிந்த வசைதீர்

குறுமகட்கு

௫. உயவினென் சென்றியான் உள்நோ*

உரைப்ப

மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞர் உறுவி ஆய்மட நிலையே.

உரை:—பாகனே! பெரியகடலின் மோதுகின்ற திரையாலே கொழிக்கப்பட்ட மணன்மேட்டில் நறுமணம் வீசாநிற்ப விளையாடுகின்ற புள்ளிகளையுடைய ஞெண்டைப் பிடிக்குமாறு சென்றவழி அஞ்ஞெண்டு ஓடுமிடத்தே பின்தொடர்ந்துசெல்ல ஆற்றாது, களைப்புற்று அதன்மீது சென்ற விருப்பம் நீங்கியிருந்த குற்றமற்ற இளமையுடையாளிடத்து இப்பொழுது

(பாடம்) * உண்ணோய்.

வருந்துகின்றேனாகிய யான் சென்று என்னுள்ளத்தின்கண்ணேயுள்ள வினைவயிற் செல்லவெண்டிய கவற்சியைக் கூறியவளவிலே, மறுமொழி கூறுதற்கு நாவெழாமையால் ஆற்றாளாய், நறியமலரையுடைய ஞாழலினது தாழ்ந்த அழகிய கிளையிலுள்ள பூங்கொத்தைக் கொய்து அதனோடு இளந் தளிரையுஞ் சேரப் பிசைந்து உதிர்த்த கையையுடையளாகி அறிவுமயக்க முற்றவளின் அழகிய மடப்பத்தினிலைமை நீ அறிந்திருத்தலையு முடை யையோ? உடையையாயின் அதற்கேற்றபடி கடாவுவாயாக; எ - று.

உயவு - வருத்தம். அறிதலும் அறிதியோ வென்றது காரியவாசகம். வரி - புள்ளி. கொழுதல் - கொய்தல். திமிர்தல் - பிசைதல். அஞருறுவி - மயககமுற்றவள்.

அலவன் பின்னுஞ் செல்லலாற்ற நடையளென்றதனால், மென்மைத் தன்மையளெனவும் அத்தகையாளிதுகாறும் ஆற்றியிருத்தல் அரியளெனவுங் கூறினன். வசைதீர் குறுமகளென்றதனாலே அவள் குற்றமில்லாளன்றே அத்தகையாள் பிரிவுநோயென்னுங் குற்றத்தா லிறந்துபடுமோவென் றிரங்கினனும். விரைந்து தேர்கடாவிச் சென்று காணவேண்டுவான் யானும் உயவினேனென்றான். கொழுதித் திமிர்ந்துதிர்த்தது - செய்வதறி யாது மயங்கினர் செய்யுஞ்செய்கை. இது - காதல் கைம்மிகல். **மெய்ப் பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - பாகன் தேர்கடாவல். (௧௦௬)

## ௧௦௭. ..................

## பாலை: இது, பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குச் சொல்லியது.

எ - து, தலைவன் பிரிதலால் மெலிவுற்ற தலைவி தோழியை நோக்கி எம் காதலர் பின்சென்று வழிபட்டொழிந்த என்னெஞ்சம் நல்வினையின் பாலதாயிற்று; ஊரார் பழிதூற்றும்படி யானொருத்தியே இங்கு நோயுடை யேனு யிராநின்றேன்; இதனை நினைக்குந்தோறும் நகைதோன்றுதலானே யானே என்னை நகைசெய்துகொள்ளாநிற்பேனென அவலித்துக் கூறா நிற்பது.

உள்ளுதோறு நகுவேன் தோழி வள்ளுகிர்ப்

பிடிபிளந் திட்ட நாரில்வெண் கோட்டுக்

கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலைச்
செல்வளி தூக்கலின் இலைதீர் நெற்றம்
கல்லிழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்
புல்லிலை ஓமைய புலிவழங்கு அத்தஞ்
சென்ற காதலர் வழிவழி பட்ட
நெஞ்சே நல்வினைப் பாற்றே ஈண்டொழிந்து
ஆனாக் கௌவை மலைந்த
யானே தோழி நோய்ப்பா லேனே.

உரை :—தோழீ! பெரிய உகிரையுடைய பிடியானை தின்னுதற் பொருட்டு மேலுள்ளதோலைப் பறித்துக்கொண்டதனால், நாரில்லாத வெளிய கிளைகளையும் பற்றுக் குறடுபோன்ற காய்களையுமுடைய வெளிய பூங்கொத்



துக்களையுடைய வெட்பாலையினுடைய, ஓடுகின்ற காற்று அசைத்தலினால் இலையுதிர்ந்த கிளையிலுள்ள நெற்றுக்கள் மலையினின்று விழும் அருவியைப் போல ஒல்லென்னும்படி ஒலியாநிற்கும் புல்லிய இலையையுடைய ஓமையை யுடைய புலி இயங்குகின்ற சுரத்து நெறியிலே சென்ற என் காதலர்பால், அவரை வழிபட்டுப் பின்னே சென்றொழிந்த என்னெஞ்சம் முன்புசெய்த நல்வினையின் பயனை இப்பொழுது துய்ப்பதாயிராநின்றது; அந்த நெஞ்சு போல நல்வினை செய்திலாதேனாகலின், இங்கே தங்கி ஊரார் தூற்றும் அடங்காத பழிச்சொல்லைச் சூடப்பெற்ற யானே தோழீ, தீவினையின் பாலேனாகி அதன் பயனை நுகராநின்றேன்; இங்ஙனம் இருவினைப் பயனையும் நுகருமாறு பெற்றதனை நினைக்குந்தோறும் நகைதோன்றுத லானே யானே என்னை நகுவதுசெய்யாநிற்பேன்காண்; எ - று.

வள்ளுகிர் - பெரிய நகம். கொடிறு - குறடு என்று வழங்குவது; இங்கு பற்றுக்குறடென்றது ஈயம்பூசுங் குறட்டினை. அவலத்தால் மீட்டும் விளி தோன்றியது. நோய்ப்பாலேனென்றது துன்பத்துப் புலம்பல்.

வழிபட்டதென்றது அவரருளிப்பாடிட்டுக்கொள்ளவேண்டி யென்ற வாறு. ஆனுத கௌவையினும் இறந்துபடாமையின் பெருந்தகைமை யழியவும் உயிர்வாழ்தல் மருந்துபோலுமென உள்ளுதொறும் நகுவே னென்ருள்.

உள்ளுறை :—பிடி தலைவனுகவும், பாலை தலைவியாகவும், புலி அன்னை முதலாயினோராகவும், அத்தம் தோழியாகவுங்கொண்டு பிடி தோலைப் பொளித்துக்கொண்டதுபோலத் தலைவியினலத்தைத் தலைவன் பெற்றுண்டு போகலும் அந்தப் பாலையின் இலைதீர்ந்த நெற்று ஒலிப்பதுபோல நெஞ் சழிந்த தலைவி புலம்ப அருகிருந்த தோழி புலி வழங்குதல்போல அன்னை முதலானோர் இடையே இயங்கப்பெறுதலாலே, தலைவியைத் தேற்றவு மியலாதிருந்தனளெனக் கொள்க. **மெய்ப்பாடு** - அழுகை பற்றிய நகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கoஎ)

## கoஅ. ..................

## குறிஞ்சி :

**இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுகலாற்ருளாய தோழி தலைமகளது ஆற்ருமைகூறி வரைவு கடாயது.**

எ - து, தலைவன் களவொழுக்கத்து நீட்டித்தலாலே, அது பொருத தோழி களவில் அருகிவருதலை யொழித்து வரைந்துகொள்ளுமாறு குறிப் பாற் கூறுகின்ருள், பசப்பூரப்பெற்றுத் தலைவிவருந்த அவளை நீ யாத னலோ கைவிட்டொழித்தனை, அதற்கு யான் நோகின்றேனென வருந்திக் கூருநிற்பது.

மலையயல் கலித்த மையார் ஏனல்

துணையில் தீர்ந்த கடுங்கண் யானை
அணையக் கண்ட அங்குடிக் குறவர்
கணையர் கிணையர் கைபுனை கவணர்
ரு. விளியர் புறக்குடி யார்க்கும் நாட
பழகிய பகையும் பிரிவின் ருசேர்ந்த



முகையோ் இலங்கெயிற்று இன்நகை மடந்தை
சுடர்புரை திருநுதல் பசப்பத்
தொடர்பியாங்கு விட்டனை நோகோ

யானே.

உரை :—மலைப்பக்கத்து முளைத்துத் தழைத்த கரியநிறமுடைய தினைப் புனத்தைத் தின்னக்கருதித் தன் பிடியைவிட்டு நீங்கிய கொடிய களிற்றி யானை வந்து புகுந்ததைநோக்கிய அழகிய குடியிலுள்ள குறவர் கணையு டையவரும், கிணைப்பறையுடையவரும், கைவிரலிலே கோத்த கவணுடைய வரும், கூவிப் பேரிரைச்சலிடுபவருமாகிக் குடியிருப்பின் புறமெல்லாஞ் சென்று ஆரவாரித்துச்சூழு மலைநாடனே! பழகியிருந்த பகைவராயினும் அருகிலிருந்து பிரிவரென்றால் அப்பிரிவுதான் முன்பு பழகினர்க்கு இன் னாமையைத் தருவதொன்றாகுமன்றோ? அங்ஙனமாக நின்னையின்றியமை யாத முல்லையரும்புபோன்ற இலங்கிய எயிற்றையும் இனிய நகையையு முடைய மடந்தையினது சுடர்போன்ற ஒளியையுடைய அழகிய நெற்றி யிலே பசலையூருமாறு நீ அவளது தொடர்ச்சியை எவ்வண்ணம் கைவிட் டனை? இதனைக்கருதியே யான் வருந்தாநின்றேன்காண்; எ - று.

கவித்தல் - முளைத்தல், தழைத்தல், செழித்தலுமாம். உயிரொன் றுளமுமொன்றாயிருந்த நும்மில் நீயிர் பிரிவுறி னிவளிறந்துபட்டொழியு மன்றோவென்றறிவுறுத்துவாள் பகையும் பிரியினின்னாது காண்மினென் றாள்.

உள்ளுறை :—ஏனல் தலைவியாகவும், யானை தலைவனாகவுங்கொண்டு தினைப்புனத்துப் புகுந்து உண்ணவந்த யானையைக்கண்ட குறவர் அதனை யொறுக்கும்படி படையினராய் ஆர்த்தல்போல நீ களவொழுக்கத்துத் தலை வியை முயங்கவருவதைக் குறவர் அறிந்தால் நின்னை ஏதஞ்செய்யுமாறு படையினராய்ச் சூழ்ந்துகொள்ளுவராதலின், வரைந்தெய்துகவென்றதாம். திருநுதல்பசப்ப என்றது பசலைபாய்தல். பழகியபகையும் பிரிவின்னா தென்றது எம்மெய்யாயினு மொப்புமைகோடல். ஏனை மெய்ப்பாடு - அச் சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௧௦௮)

## ௧௦௯. மீளிப் பெரும்பதுமனார்

பாலை :

இது, பிரிவிடை யாற்றாளாய தலைமகளது
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

நிலைகண்ட

எ - து, வினைவயிற்பிரிந்த தலைமகன் குறித்தபருவத்து வாராமை யாலே வருந்திய தலைவியை வினவியதோழிக்கு அவள் என் காதலர் வாராமையால் வாடைவீசும் மாலைப்பொழுதானது யான் தனித்து வருந்தியொழியுமாறு செல்லாநின்றது; இவ்வழி யான் எங்ஙனம் தனியிருந்தாற்றுகிற்பேனெனப் புலம்புவதன்றி வேறில்லைக்காணென வருந்திக் கூறாநிற்பது.

ஒன்றுதும் என்ற தோன்றுபடு நட்பின்

காதலர் அகன்றெனக் கலங்கிப் பேதுற்று
அன்ன வோவிந் நன்னுதல் நிலையென
வினவல் ஆனாப் புனையிழை கேளினி



உரைக்கல் ஆகா எ.வ்வும் இம்மென
விரைக்கும் வாடை இருள்கூர் பொழுதில்
தோளியுடைத் தொழுவில் துணிதல் அற்றத்து
உச்சிக் கட்டிய கூழை ஆவின்
நிலையென ஒருவேன் ஆகி
உலமரக் கழியுமிப் பகல்மடி பொழுதே.

உரை :—'நின்னைப் பிரியேமாகி எப்பொழுதும் ஒன்றியிருத்தும்' என்று கூறிய பழைமையாகிய நட்பினின்றும் காதலர் பிரிந்தகன்றதனாலே கலங்கி மயங்குற்று இந் நல்ல நுதலையுடையாளுடைய நிலைமை அப்படிப் பட்டனவோவென்று வினவுதலொழியாத அலங்கரித்த அணிகலனையுடையாய் ! யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; இப்பொழுது கூறுதற்கியலாத துன்பம் விரைந்துபற்ற, ஒலிக்கும் வாடைவீசுதலையுடைய ஆதித்தமண்டிலம் மேற்கே மறைகின்ற இம்மாலைக்காலமானது இருண்மிக்க இராப்பொழுதிலே சேற்றையுடைய தொழுவத்தினின்று வேற்றிடத்திலே கட்டவேண்டுமற்றத்து அங்ஙனஞ்செய்யாது, அத்தொழுவத்துள் கீழினும் படுக்க விடாது நின்றநிலையிலே நிற்குமாறு தலைக்கயிற்றையிழுத்து உச்சியிலே தூக்கி மேற்கைம்மரத்தி விறுகப்பிணித்த குறுமையாகிய பசுவினது நிலைமையைப்போல யான் ஒருத்தியாகியே நின்று உள்ளஞ்சுழன்று வருந்தும் வண்ணம் மெல்லமெல்ல நீங்காநிற்கும்; இவ்வேளை யான் எங்ஙனம் ஆற்றியிருப்பேனென்று புலம்புவதன்றி வேறில்லைக்காண்; எ - று.

இரைக்கும் வாடைப் பகன்மடிபொழு தெனக்கூட்டுக. இருள்கூர் பொழுதுமுதற் கூழைஆவினுக் கடைமொழிகள். ஒருவேன் - ஒருத்தியாகிய யான். துணிதல் அற்றம் - பெயர்த்து வேறிடத்துக் கட்டுங்காலம். காமநோய் கைகடந்து பரத்தலான் இயக்கமின்றி நிற்றலின் அசையாது பிணித்த ஆவை யுவமித்தாள். இஃது அவலவுவமை.

ஆவினை ஓம்புவார்க்கு நல்லறனுளதாமன்றே அவ்வண்ணம் தூதால் அவரைக் கொணர்ந்து என்பாலுய்த் தெனது ஏதங் களையின் நினக்கு அறனுவதென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல்.

(க0க)

## ககம. போதனார்

**பாலை :** (க) இது, மனைமருட்சி.

எ - து, உடன்போயினாள் மகளெனக்கேட்ட நற்றாய் இளமையின்கண் அறிவுமுதிர்ந்தமை நோக்கி வியந்தனளாயினும், இதுகாறும் பிரிந்தறியாதாள் பிரிதற்காற்றாளாய் முன்பு உணவுண்ணவும் வெறுக்குஞ் சிறுவிளையாட்டினையுடையாள் அறிவும் ஆசாரமும் எப்படியறிந்தனள்? தந்தை சோற்றைக் கருதாளாய் மறுத்துண்ணுஞ் சிறுவன்மையளாயினளேயென வருந்திக் கூறாநிற்பது.

(உ) மகள்நிலையுரைத்ததூஉமாம்.

எ - து, வரைந்தபின் இல்வாழ்க்கையின் மணமனைச் சென்றுவந்த செவிலி, பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குணர்த்துகின்றாள், முன்பு உணவுண்ணமறுத்த சிறுவிளையாட்டினையுடையாள் அறிவும் ஒழுக்கமும் எப்படியறிந்தனள்? தந்தைசோற்றைக் கருதாது மறுத்துண்ணும் வன்மையளாயினளேயென வியந்து கூறாநிற்பது. இஃது உரிப்பொருளால் மருதமாயிற்று.



பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொன்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென்று ஓக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொன்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று

அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந்தொழியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்
தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவறன்
உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு
உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணுஞ் சிறுமது
கையளே.

உரை :—தேன் கலந்தாலொத்த நல்ல சுவையையுடைய இனிய வெளிய பாலுணவை விரிந்த ஒளியையுடையபொன்னுலாகிய கலத்திலிட்டு அதனை யொருகையிலேந்தி நின்று புடைப்பாகச் சுற்றிய பூவொத்த மெல்லிய நுனியையுடைய சிறியகோலை ஓச்சி 'நீ உண்ணுவாய்' என்றெறிதலும் தெளிந்த ஒளியையுடைய முத்திக்கலை உள்ளே பரலாகப் போகட்டப்பட்ட பொன்னுலாகிய சிலம்பு ஒலிக்குமாறு பாய்ந்து மெல்லியவாய நரைத்த கூந்தலையுடைய செவ்விய முதுமையடைந்த செவிலியர் பின்றொடர்ந்து ஓடிப் பற்றமுடியாமல் மெலிந்தொழியுமாறு தான் முன்றிலின்கணுள்ள பந்தரின் கீழோடி 'நீ உண்ணுவாய்' என்றதன் விடையாக 'யானுண்ணேன்காண்' என்று மறுத்து உரையாடுஞ் சிறிய விளையாட்டினையுடைய என் மகள் நல்ல அறிவும் ஆசாரமும் எப்படி யுணர்ந்தனளோ? தன்கைபற்றிய கொழுநன்குடி வறுமையுற்றதாகத் தன்னை யீன்று உதவிய தந்தையினது செல்வமிக்க உணவை நினைகிலாளாகி ஓடுகின்ற நீரிலே இடையிட்டுறுக்கிடக்கும் நுண்ணிய மணல்போல ஒருபொழுதின்றியொருபொழுதுண்ணுஞ் சிறிய வன்மையுடையளாயினளே, இஃதென்ன வியப்பு! எ - று.

அரி - பருக்கைக்கல். அரிநரை - மெல்லியநரை. பரிதல் - ஓடுதல்.

பாலுணவையும் வெறுப்பவள் பொழுதுமறுத்துண்பாளாயது அதனினும் கேள்வனின்பஞ் சிறந்ததுபோலுமென் றிரங்கினள். விளையாட்டியாண்டுணர்ந்தனளென்றது நம் ஏவலை மறுத்துவிளையாடுபவள் காதலன் ஏவலும் அவனுக்கேற்றபடி நடத்தலு மாகியவற்றுக்கேற்ற அறிவும் ஆசாரமும் எவ்வாறு பெற்றனளென்று வியந்ததாம். **மெய்ப்பாடு - உவகைக் கலுழ்ச்சி.** பயன் - ஆற்றுமை நீங்குதல். இஃது உரிப்பொருளாற் பாலை.



(உ) உரை மேற்கூறியதே யொக்கும்.
மகிழ்தல்.

௧௧௧. ...............

நெய்தல்: இது, விரிச்சிபெற்றுப் புகன்றதோழி தலைவிக்குரைத்தது.

எ - து, தலைவன் பிரிதலாலே தலைமகள் வருந்துவதறிந்த தோழி அவன் வருதற்கறிகுறியாகிய நன்னிமித்தந்தோன்ற அதுகொண்டு தலைவியைநோக்கி நமதுபாக்கம் கல்லென்றொலிக்கும்படி கொண்கனது தேர் வருமாதலின் நீ வருந்தாதேகொள்ளென அவள் தெளிந்து ஆற்றியிருக்குமாறு கூறுவிற்பது.

அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவோடு தொகைமீன் பெறீஇயர்
வரிவலைப் பரதவர் கருவினைச் சிறுஅர்
மரன்மேற் கொண்டு மான்கணந் தகைமார்
௫. வெந்திறல் இளையவர் வேட்டெழுந் தாங்குத்
திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி
வாள்வாய்ச் சுறவோடு வயமீன் கெண்டி

நிணம்பெய் தோணியர் இகுமணல்

இழிதரும்

பெருங்கழிப் பாக்கங் கல்லென

க0. வருமே தோழி கொண்கன் தேரே.

**உரை** :—தோழீ! சுரத்தின்கணுள்ள இருப்பைப்பூப்போன்ற மெல்லிய தலையையுடைய இறுமீன்களுடனே ஏனைத்திரளாயுள்ள மீன்களையும் பெறுமாறு பின்னிவரிந்த வலையையுடைய பரதவர்தம் வன்மைமிக்க தொழிலையுடைய சிறுமக்கள், மரங்களின்மேலேறிநின்று மானினங்களைத் தகைக்கும்பொருட்டு வெய்ய வலியையுடைய வேட்டுவச்சிறுவர் விரும்பி யெழுந்தாற்போல மீன்பிடிக்கும் படகின்மேலேறிக்கொண்டு கடற்பரப் பின்கண்ணே கடந்துசென்று ஈர்வாள்போன்ற வாயையுடைய சுறுமீனை யும் மற்றும் வலிமையுள்ள பிறமீன்களையும் பிடித்து அவற்றைத் துண் டித்து இறைச்சிகளை நிரப்பிய தோணியராய் மீண்டுவந்து காற்று வீசிப் பரப்பிய மணற்பரப்பி லிறக்கியிடும் பெரிய கழிசூழ்ந்த பாக்கம் கல்லென ஒலிக்குமாறு கொண்கனது தேர் வாராநிற்குமாதலின் நீ வருந்தாதே கொள்; எ - று.

வரிவலை - கட்டியவலை. கருவினை, கருமை - வன்மை; ஈண்டுப் பாவ வினையன்று; மரபுக்குரிய தொழிலைச் செய்வதனால். கெண்டுதல் - வெட்டு தல். இகுதல் - சொரிதல். சுறுமீன் கொம்பைவெட்டி ஆண்டே கடலிற் போகடலானும் ஏனைப் பெருமீன்களைத் தறித்துக்கொணர்தலானும் வழக் குண்மை யறிக. சிறார் திமில்மேற்கொண்டெனக. திமில் - மீன்பிடிக் கும் படகு. விரிச்சி - நிமித்தம்.

**இறைச்சி** :—சிறார் திரைச்சுரத்திற்சென்று பிடித்துகொணர்ந்த மீனி னங்களை மணலின்கண் இறக்கியிடுமென்றது தலைவர் வேற்றுநாட்டிற்

சென்று ஈட்டிக்கொணர்ந்த பொருளெல்லாம் நமதில்லகத்தே பரப்பாநிற்பர்காணென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைமகளை யாற்றுவித்தல். கைகோள் - கற்பு (ககக)

## ககஉ. பெருங்குன்றூர் கிழார்

குறிஞ்சி :

இது, பருவவரலின்கண் ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

எ - து, வினைவயிற்பிரியுந் தலைவன் குறித்துச்சென்ற பருவம் வருதலும் அவன் வாராமையறிந்து ஆற்றாததலைவியை ஆற்றுவிக்குந்தோழி அவன் வருதலையறிந்து கடலினீரை ஆவிவடிவாகவாங்கிப் பருகி மின்னி யிடித்துப் பெய்யத்தொடங்கிய மழைக்கு யான் யாது கைம்மாறு செய்ய வல்லேனென வலியுறுத்திக் கூறாநிற்பது.

விருந்தெவன் செய்கோ தோழி சாரல்
அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கைச்
சுரும்பிமிர் அடுக்கம் புலம்பக் களிறட்டு
உரும்பில் உள்ளத்து அரிமா வழங்கும்
பெருங்கல் நாடன் வரவறிந்து விரும்பி
மாக்கடல் முகந்து மணிநிறத் தருவித்
தாழ்நீர் நனந்தலை அழுந்துபடப் பாஅய்

மலையிமைப் பதுபோல் மின்னிச்
சிலைவல் ஏற்றேடு செறிந்தஇம் மழைக்கே.

உரை:—தோழீ! மலைச்சாரலில் அரும்புமுழுதும் ஒருசேர மலர்ந்த கரிய கிளைகளையுடைய வேங்கையின்கண்ணே சுரும்பு முரலுகின்ற பக்க மலையி லுள்ளவெல்லாம் அஞ்சும்படியாகக் களிற்றைக் கொன்று அச்ச மற்ற உள்ளத்தையுடைய சிங்கம் இயங்காநிற்கும் பெரிய மலைநாடன் கார்ப் பருவத்தின்கண் வருவேனென்றுகூறிச் சென்றபடி மீண்டு வருகின்ற னென்பதையறிந்து விருப்பமுற்றுக் கரிய கடலின்கண்ணே சென்று நீரையுண்டு மணிபோலும் நிறத்தினையுடைய அருவியினிழிகின்ற நீரை யுடைய அகன்ற இடமெல்லாம் மறைபடுமாறு பரவி மலையானது கண் விழித்து இமைத்தாற்போல மின்னி ஒலிக்கின்ற வலிய இடியேற்றுடனே கலந்துவந்த இந்த மழைக்கு யான் யாது கைம்மாறு செய்யமாட்டுவேன்? எ - று.

விருந்து - புதுவதாகச்செய்யு முகமனுமாம். உருப்பு - அச்சம்; எது கைநோக்கி மெலிக்கும்வழி மெலித்தது. நனந்தலை - அகன்றவிடம். அழுந்துபடல் - மூடப்படுதல்.

பகுத்தறிவில்லாத முகிலும் அவன் வருவதறிந்து விரும்பி வருதலைக் கண்டுவைத்தும் எல்லாவறிவுமுடைய நீ அவன் வருகையை யறியாது புலம்புகின்றனையேயென்று இரங்கியவாறுயிற்று.

இறைச்சி:—அடுக்கம் புலம்பக் களிற்றுயானையைக் கொன்று சிங்கம் இயங்குமென்றது நினது பசப்பு வருந்திக்கெட உனக்குண்டாகிய காம

நோயைப்போக்கி நின் தலைவன் நின் மாட்டு அகலாது பலகாலு முயங்கா நிற்கு மென்றதாம். கைகோள் இரண்டற்கும் பொது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (கக௨)

# கக௩. இளங்கீரனார்

பாலை : இஃது இடைச்சுரத்து ஆற்றானாயதலைவன் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்சென்ற தலைவன், இடைச்சுரத்து ஆற்றானாகித் தலைவியின் உருவெளித்தோற்றம் நோக்கி முன்பு நான் விடைபெறும் பொழுது கூந்தலைவிரித்து அதனுண்மறைந்து அழிந்தேங்கித் தன்புற்று நின்ற நமது காதலியின் வருந்திய நோக்கம் இப் பெருங்காட்டினைக் கடந்தும் என்னெதிரி லெய்தவந்தனவே இஃதென்னேயென்று அழுங்கிக் கூறுநிற்பது.

உழையணந்து உண்ட இறைவாங்கு உயர்சினைப்
புல்லரை இரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்காடு இறந்தும் எய்தவந் தனவால்
௫. அருஞ்செயல் பொருட்பிணி முன்னி யாமே
சேறும் மடந்தை என்றலின் தான்தன்
நெய்தல் உண்கண் பைதல கூரப்
பின்னிருங் கூந்தல் மறையினள்

பெரிதழிந்து

உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பலங் குழலின் ஏங்கிக்
கலங்கஞர் உறுவோள் புலம்புகொள்

நோக்கே.

உரை :—'மடந்தாய்! எம்முள்ளம் அருமையாக ஈட்டப்படும் பொருளவாவினாலே பிணிக்கப்பட்டதை எண்ணி யாஞ் செல்லுகின்றோம்' என்றவுடன் அவள்தான் தன்னுடைய நெய்தல் மலர்போலும் மையுண்ட கண்கள் வருத்தமிக, பின்னுகின்ற கூந்தலைவிரித்து அதனுள்ளே மறைந்து நின்று பெரிதுங் கலக்கமடைந்து, உதியஞ்சேரல் சினந்துசென்ற ஒலிக்கின்ற இடத்தையுடைய போர்க்களத்தின்கண்ணே, களம்பாடுநருடன் வாச்சியம் வாசிப்போர் விரைவாக ஊதுகின்ற ஆம்பலென்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழல் இசையெடுத்தாற்போல வாய்விட்டழுது கலங்கிய வருத்தமுறுகின்றவளினுடைய துன்பங்கொண்ட பார்வைகள் தாம் மானினம் நிமிர்ந்து தழையுண்ணுதலினாலே சிறிது வளைந்த உயர்ந்த கிளைகளையும் புல்லிய அடியையுமுடைய இலந்தைமரங்களின் மேலே கனியையுடைய பசியகாய் பரல்பொருந்திய சிறிய நெறியின்கண் உதிர்ந்து நிறையப் பரவாநிற்கும் பெரிய சுரத்தைக்கடந்தும் ஈங்கு எம்முன்னே அடையவந்தன; இஃதென்ன வியப்பு? எ - று.

அணத்தல் - அண்ணாத்தல்; நிமிர்தல். இறை - சிறிது. இரத்தி - இலந்தை. இம்மெனல் - விரைவுக்குறிப்பு. ஆம்பல் - ஒரு பண்; இனி

வெண்கலத்தால் ஆம்பற்பூவடிவாக அணைசுபண்ணி பட்ட புல்லாங்குழலெனவுமாம்.

நுணியில் வைக்கப்

நன்னிமித்த மன்மையின் அழுகையைப் புலப்படுத்தாது கூந்தலான் முகத்தை மறைத்தனளாதலின், கூந்தலின் மறையினளென்றான். புலம்பு மூந்துறுத்தலின் மொழிபகர நாவெழாது கலங்கிநின்றமை கருதியே பெரி தழிந்தெனென்றான். கைகடத்தலின் அழுகையுங் கூறினான். அழும்பொழு தேயும் ஆம்பலங்குழலோ டொத்தலின் மகிழ்ந்து நுவல்வாளாயின் அவ ளது மொழி அளவில் சுவையுடையதென்பது போதராநின்றது. இஃது எதிர்பெய்து பரிதல்.

**இறைச்சி :**—இலந்தை மானினத்தால் இலையுண்ணப்பட்டதாயினும் நிரம்பியகனிகளை நெறியிடை யுதிர்க்குமென்றது, தலைவி பசலையால் நல னுண்ணப்பட்டவளாயினும் யாம் இன்னேசெல்லின் மிக்க இன்பம் பயவா நிற்பளாதலி னியைந்தவாறு செய்வேமென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - இடைச்சுரத்தழுங்கல். (கக௩)

## ககச. தொல்கபிலர்

### குறிஞ்சி :

இஃது, ஆறுபார்த்துற்ற அச்சத்தால் தோழி, தலைவிக் குரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, இரவுக் குறிவந்தொழுகுந் தலைமகனை நெறியினது குற்றங் கூறி மறுத்து வரைவொடு வருமாறு கருதியதோழி சிறைப்புறத்தானாய அவன் கேட்குமாற்றானே தலைவியைநோக்கித் தோழீ, மழைபெய்தலின் இடிதாக்கி ஒரு களிற்றைக்கொன்றது. அதன்கோட்டினை நமர்கொணர்வதாகவும் உகிரை யடக்குவதாகவும் பேசிய ஆரவாரங்கேட்டு வருந்தியிருப்பேன்முன் நம் காதலனும் வந்தனன்; அவன் வருநெறியிற் கான்யாற்றையும் அஞ்சுகிற்பேனென வருந்திக் கூறுநிற்பது.

வெண்கோடு கொண்டு வியலறை வைப்பவும்
பச்ஞுன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்
மறுகுதொறு புலாவஞ் சிறுகுடி அரவம்
வைகிக் கேட்டுப் பையாந் திசினே
ரு. அளிதோ தானே தோழி அல்கல்
வந்தோன் மன்ற குன்ற நாடன்
துளிபெயல் பொறித்த புள்ளித் தொல்கரை
பொருதிரை நிவப்பின் வரும்யாறு அஞ்சுவல்
ஈர்ங்குரல் உருமின் ஆர்கலி நல்லேறு
கய. பாம்புகவின் அழிக்கும் ஓங்குவரை பொத்தி
மையின் மடப்பிடி இனையக்
கையூன்றுபு இழிதரு களிறெறிந் தன்றே.

உரை :—தோழீ! ஈரிய குரலின்மிக்க ஓசையையுடைய இடியேறு பாம்பின் அழகைக் கெடுக்கின்றதாகி உயர்ந்த மலைமேல் மோதிக், கரிய

நிறத்தையுடைய இளம்பிடி வருந்துமாறு தனது துதிக்கையையூன்றி இறங்குகின்றகளிற்றின்மேலே பாய்ந்து அதனைக் கொன்றொழிந்தது; அங்ஙனமிறந்த யானையை நம் ஐயன்மார், பிளந்து அதன் வெளிய கோடுகளை யெடுத்து அகன்ற பாறையின்கண்ணே ஊன் காயுமாறு போகடுவதாகவும், அதன் பசிய ஊனை அழித்து மிகப் பெரிய உகிர்களைப் புதைப்பதாகவும் பேசிக்கொள்ளுகின்ற இவற்றாலே, புலவு மணங்கமழ்கின்ற சிறு குடியிலுள்ள தெருவுதோறு முண்டாகும் ஆரவாரத்தை இரவுமுழுதுந் துயிலாதிருந்துகேட்டு வருந்தினேன்; அத்தகைய இரவிலே குன்றநாடனும் திண்ணமாக இரவுக் குறி கூடும்படி கருதி வந்தனன்காண்; அவன் வருநெறியில் மழையின் துளி பெய்தலாலே பொறிக்கப்பட்ட புள்ளிகளையுடைய பழைமையாகிய கரையை மோதுகின்ற உயர்வையுடைய அலைகளோடு வருகின்ற கான்யாற்றினைக் கருதி யான் அஞ்சாநின்றேன்; ஆதலின், அவன் இரவுக்குறிவருதல் இரங்குவதற்குரிய தொன்றாயிராநின்றது; எ - று.

வைத்தல் - போக்குதல்; விடுத்தல். முணக்கல் - அடக்குதல். கெண்டுதல் - வெட்டுதல். பையாத்தல் - வருந்துதல். அல்கல் - இரவு. வந்தோன் - முற்று. இடியோசைகேட்ட பாம்பு நடுங்கியொடுங்கல் வெளிப்படை. பொத்தல் - மோதல்.

நாடன் வந்ததறிந்தும் குறியிடத்து இறைவியைக் கொண்டுசெல்லாதது ஊர்துஞ்சாமையானென அறிவுறுத்துவாள் அரவங்கேட்டுப் பையாந்திசினென்றாள். தலைமகன் வெறுதபடி அவன்பால் அன்புடைமை காட்டுவாள் அளிதோதானே யென்றாள். யாறஞ்சுவலெனவும் இடிகளிறெறிந்ததெனவும் ஆறுபார்த்துற்ற அச்சங்கூறினாள். இவற்றான் இரவுக்குறி இடையீடுபட்டமையின் வரைந்தெய்துக வென்றவாறு. **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - இரவுக்குறி விலக்கி வரைவுடம்படுத்தல். (கசுச)

ககரு. ...............................................

பாலை :

*இது, பிரிவிடையாற்றாளாய தலைமகளைத் தோழி, பருவங் காட்டி வற்புறுத்தியது.*

*எ - து, வினைவயிற் பிரிந்து சென்ற தலைமகன் குறித்தபருவத்து வாராமையால் வருந்திய தலைவியைத் தோழிநோக்கி அவர் குறித்த கார்ப் பருவம் இப்பொழுதுதான் தொடங்குகின்றது; காதலர் செய்மைக்கண்ணே அயல்நாட்டி விருப்பவராயினும், நம்மீது மிகுபேரன்புடையராதலின் தவி ராது வருவர் நீ வருந்தாதே யென வலியுறுத்திக் கூறுநிற்பது.*

மலர்ந்த பொய்கைப் பூக்குற்று அழுங்க
அயர்ந்த ஆயங் கண்ணினிது படீஇயர்
அன்னையுஞ் சிறிதுதணிந்து உயிரினள்
இன்னீர்த்
தடங்கடல் வாயில் உண்டுசில் நீரேன
மயிலடி இலைய மாக்குரல் நொச்சி
மனைநடு மௌவலொடு ஊழ்முகை
அவிழக்



காரெதிர்ந்து அன்றாற் காலை காதலர்

தவச்சேய் நாட்டர் ஆயினும் மிகப்பேர்
அன்பினர் வாழி தோழி நன்புகழ்

௧௦. உலப்பின்று பெறினும் தவிரலர்

கேட்டிசின் அல்லனோ விசும்பின்று

அகவே.

உரை :—தோழீ, வாழி ; அகன்றுவிரிந்த பொய்கையின்கண்ணுள்ள மலர்களைக் கொய்துவந்த தவட்சியால் வருந்திய தோழியர்குழாமெல்லாம் தம் மெய்ந்நோவொழிந்து இனிதாகவுறங்கவேண்டி, அன்னையும் நம்மீது கொண்ட சினம் சிறிதுதணிந்து உயிர்ப்புடையளாயினள் ; அவள் அங்ஙனமாகிய பொழுது முகிலும் இனியநீரையுடைய பெரிய கடலினீர் சில வென்னும்படியாக வாயினாலுண்டு மயிலினடிபோன்ற இலையுடைய கரிய கதிராகிய பூந்துணரையுடைய நொச்சிவேலியின்மீது இல்லின் நடுமுற்றத்தில் முளைகொண்டெழுந்த முல்லை கூரைமேலாலே சென்று படர்ந்து அவ்விரண்டும் முறையே அரும்பவிழ்ந்து மலருமாறு, இன்று நாட்காலை எதிர்போந்து தன்னுடைய கார்ப்பருவஞ் செய்யலாகியது கண்டாய் ; அஃது அங்ஙனமாக, இப்பொழுது நம் காதலர் மிக்க சேய்மையின்கண்ணதாகிய நாட்டிலுறைபவராயினும் நம்பால் மிகப்பெரிய அன்புடையராதலின் அங்கே தாம் கொண்ட வினை முடித்தலால் அளவில்லாத புகழையடைவதாயினும் குறித்த பருவவரவின்கண் வாராது ஆண்டுறைபவரல்லர் ; அவர் வருமளவும் நீ வருந்தாதேகொள் ; இன்றுதான் பருவந் தொடங்குகின்றதென்பதன் குறியாக அம்மேக முழங்குமிடியோசையை யான் கேளாநின்றேனல்லேனோ ? எ - று.

மலர்தல் - விரிதல். குறுதல் - பறித்தல். உயிரினள் - சினமடங்குழிப் பெருமூச்சுவிடுதலுடையளாயினள்.

நமது நிலையிலா இன்பத்தை மேற்கொண்டு விரும்புகிலரெனத் தவப்பேரன்பினரென்பதனை

நிலைத்த புகழையும் வலியுறுத்தினளென்பது.

**இறைச்சி :**—புறத்துள்ள நொச்சிவேலியின்மீது மனையகத் தெழுந்த மௌவல் சென்றுபடர்ந்து இரண்டும் மலராநிற்குமென்றது, அயனாட்டு அரசகுமாரனாகிய நின்காதலனொடு ஈண்டிம் மனையகத்துப்பிறந்த நீ சென்று கூடி மணந்து இருவரும் ஒருதன்மையான மகிழ்ச்சியீராய் மக்களொடு மகிழ்ந்து மனையறங்காத்து வைகுவீர் என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (௧௧௫)

## ௧௧௬. கந்தரத்தனார்

**குறிஞ்சி :**

இது, வரைவுநீட்டிப்ப ஆற்றளாய தலைவி, தோழிக்கு வன்பொறை எதிரழிந்து சொல்லியது.

எ - து, தலைவன் மணஞ்செய்துகொள்ளாது நீட்டித்ததனாலே தலைவியது ஆற்றாமையறிந்து அவர் வந்தெய்துவராதலின் நீ வருந்தாதே வலிந்து பொறுத்திருவென்ற தோழியைநோக்கி, அவன் நம் காதலன் நம்பால் வைத்த நட்பானது தொடர்பின்றி அறவொழிந்த பின்னும் அயன்மாதர்

என்னை அலர்கூறுவ தொழிந்தாரிலர்; அஃதனை னென்று எதிரழிந்து கூறுகிற்பது.

யெங்ஙன மாற்றுவே

தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப மாதோ
வழுவப் பிண்டம் நாப்பண் ஏமுற்று
இருவெதிர் ஈன்ற ஏற்றிலைக் கொழுமுளை
சூன்முதிர் மடப்பிடி நாண்மேயல் ஆரும்
மலைகெழு நாடன் கேண்மை பலவின்
மாச்சினை துறந்த கோள்முதிர் பெரும்பழம்
விடரளை வீழ்ந்துக் காங்குத் தொடர்பறச்
சேணுஞ் சென்றுக் கன்றே அறியாது
ஏகல் அடுக்கத்து இருண்முகை யிருந்த
குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர்
இன்னும் ஓவார் என்திறத்து அலரே.

**உரை** :—கொடிய தீத்தொழிலைச் செய்பவரிடத்து அச்செயலை நேரிலே கண்டுவைத்தும் உள்ளத்தா லாராய்ந்து அத்தொழில் செய்வோர் இனி அதனைச் செய்யாதொழிவாராக என்று பலபடியாக நுவன்று பெரியோர் பொறுத்திருப்பர்; அங்ஙனமுமாகாது சூல்முதிர்ந்த இளம்பிடியானை அறியாமையாலே தன் வயிற்றிலுள்ள சூல் அழிந்து புறம்போந்து விழுமாறு பெரிய மூங்கிலில் முளைத்தெழுந்த இலையில்லாத கொழுவிய முளையை விடியலிலே சென்று தின்னுநிற்கும்மலைவிளங்கிய நாடன் என்னைக் கைவிட்டமை அவனுடைய கேண்மையானது பலாவின் கரியகிளையினின்று கனிந்து கீழே விழுகின்ற காய்முதிர்ந்த பெரியபழம் பிறருண்ணுதபடி மலையின் பிளப்பாகிய அளையினுள் விழுந்தொழிந்தாற்போலே தொடர்ச்சியறப் பன்னாளின் முன்னே சென்றொழிந்தது; அதனையறியாது பெரிய மலைப்பக்கத்திலுள்ள இருள் செறிந்த குவட்டிலிருந்த குறிஞ்சியிலுள்ள நல்ல ஊரின்கணிருக்கும் பெண்டிர்தாம் என்னிமித்தமாக இன்னும் பழிகூறுதலை யொழிந்தாரிலர்; இனியான் அதனை எவ்வண்ணம் ஆற்றுவேன்? எ - று.

பிண்டம் - கருப்பம். வழுவல் - வெளிப்படல். எமுறல் - மயங்குதல். ஈண்டு அறியாமை மேனின்றது. வெதிர் - மூங்கில். கோள் - காய். ஏ - பெருமை. கேண்மை பழம் வீழ்ந்துக்காங்குச் சென்றுக்கன்று எனக் கூட்டுக. முகை - துறுகல்; மரமிகுதியால் இருளடர்ந்த முகையென்றவாறு. கேண்மை பலவின்கனியாகவும், அக்கேண்மை தனக்குப் பயன்படாமை கனி அளையிலே விழுந்தழிந்தாற்போல்வதாகவும் உவமையோடு பொருத்திக் கொள்க; இது, சிறப்புநிலைக்களமாகச் சினையொடு சினைவந்த பயவுவமம்.

தீங்குசெய்தாரையும் பொறுக்கிற்பவர் நம்மைத் துறத்தலின் நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினர் போலுமெனத் தன் வயி னுரிமையும் அவன்வயிற் பரத்தமையுங் கூறினள். அலர் ஓவார் என்றது துன்பத்துப் புலம்பல்.

**உள்ளுறை :**—சூன்முற்றிய பிடியானை, மூங்கிலின் முளையைத் தின்றால் அதன்கொடுமையால் தனதுசூல் பிண்டமாகி விழுந்தொழியு மென்பதை யறியாமல் அம்முளையைத் தின்று பின்பு தன் சூல் வழுவுத லால் வருந்துவதுபோல, நாண் முதலியவற்றால் மேம்பட்ட யான் இங்ஙனந் தொடர்பறுங் கேள்வனை நயந்தால் பின்பு ஏதிலாரெடுக்கும் அலர்காரணமாக நமது பண்புமுதலாயின அழியுமென்பதனை யறியாமல், உடன்பட்டு இப்பொழுது அலரா லெல்லா மிழந்தே னென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கககூ)

# ககஎ. குன்றியனார்

**நெய்தல் :** (க) இது, வரைவுநீட ஆற்றாளாய யெதிரழிந்து சொல்லியது.

தலைவி வன்பொறை

எ - து, தலைமகன் மணஞ்செய்துகொள்ள நீட்டித்தலாலே தலைமகள் வருந்துவதை அறிந்ததோழி அவர் விரைவில் வருவராதலின் அதுகாறும் நீ வருந்தாதே யென்றலும் அவள், பொருளாகி இவ்வண்ணமாய் வருகின்ற மாலைப்பொழுதையும் கருதாது நீங்கினாராதலின், அதனால் யான் அடைந்தநோய் முருகணங்கியதால் வந்ததென ஊரார் கூறுவர்; அவ்வலர்மொழியை எய்தியும் வாழ்தல் பண்பன்றாதலின் யான் உயிர் வாழலேனென் றழிந்து கூறாநிற்பது.

(உ) சிறைப்புறமுமாம்.

எ - து, தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்டு விரைவிலே வரையும்வண்ணம் முன்னே கூறியபடி கூறாநிற்பது. (உரை இரண்டற் கும் ஒக்கும்.)

பெருங்கடல் முழங்கக் கானல் மலர

இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர
வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேரச்
செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்
கல்சேர்பு நண்ணிப் படரடைபு நடுங்கப்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்னர் உன்னார் கழியிற் பன்னாள்
வாழலேன் வாழி தோழி யென்கண்
பிணிபிறிது ஆகக் கூறுவர்
பழிபிறிது ஆகல் பண்புமார் அன்றே.

**உரை :**—*தோழீ! நீ வாழி; பெரிய கடல் முழங்காநிற்கவும், கடலருகிலுள்ள சோலை ஒருங்கே மலர்தலைச்செய்யவும், கரிய கழியின் நீர்வெள்ளம் நமது மனையெல்லை கடந்து நிறைந்துவாராநிற்பவும், பெரிய இதழையுடைய நெய்தன்மலர் குவியவும், காக்கைகள் ஒருசேர மணம் வீசும் பூஞ்சோலையிலுள்ள தம்தம் கூடுகளிலேசென்று தங்காநிற்பவும், விளைந்த*

ஆதித்தமண்டிலம் சிவந்துதோன்றி அத்தமனக்குன்றைச் சென்றடைந்து எங்கும் முன்பு பரவிய சுடர் மழுக்கமடையவும் அவற்றைநோக்கித் துன்பங்களெல்லாம் ஒருங்கே யான் அடைந்து நடுங்கும்படி அதனை யுடன்கொண்டுவந்த புன்கண்செய்யும் மாலைப்பொழுதில் அத்தலைவர் தாம் என்னை நினையாராகி யகன்றொழிந்தால், அதனுலெனபாலுண்டாய காம நோயாலாகிய வேறுபாடு, முருகு அணங்கியதால் வந்ததாகுமென்று ஊரிலுள்ளார் கூறுவர்; யான் எய்தியநோயை வேறொன்றன்மேலிட்டு அங்ஙனம் பழி பிறிதொன்ருக அயலார் கூறுதல் பண்புடையதன்ருதலின் இனி யான் நெடுநாள்காறும் உயிரோடு வாழ்ந்திரேன்காண்; எ - று.

மலிர்தல் - நிறைதல். புள் - காக்கை. கட்சி - பறவைக்கூடு. ஆர் - அசைநிலை.

புணர்ந்தார்க்கன்றி இன்பஞ்செய்யாமையாலே தனக்குத் துன்புறுத்துங் கடலை முன்னேகூறினுள். சேக்கையிலே சேவலும் பெடையும் புகுதக் காண்டலின் அங்ஙனம் யானும் ஆயினேனில்லையே யென்பாள், புள்ளுடன் கட்சிசேர வென்ருள். புல்லியுறையுமாறு வெப்பநீங்கித் தட்பஞ்செய்தற் கேதுவாயிருத்தலிற் சுடர் மழுங்கினமை யுடன்கூறினுள். ஆற்ருமை மீதூர்தலின் இம்மாலையில் இனி வாழலேனென இறந்துபடுதல் கூறினுள். இவையனைத்தும் துன்பத்துப்புலம்பல். உன்னுமெரன்றது ஐயஞ்செய்தல். எனை **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கக௭)

# கக௮. பாலைபாடிய பெருங்கடுங்கோ

**பாலை:** இது, **பருவங்கண்** டாற்ருளாய தலைவி சொல்லியது.

எ - து, வினைவயிற்சென்ற காதலன் குறித்தபருவத்து வாராமையால் அதனை ஆற்ருததலைவி, இவ் விளவேனிற்காலத்தை நோக்குந்தோறும் தலைவர் நம்மை மறந்தாரென நாம் வருந்துவதன்றி மெல்லிய பாதிரிமலர் விற்பவளை நோக்கியும் என்னெஞ்சு வருந்துகின்றதாதலின், யான் எங்ஙனம் ஆற்றுவேனென் றழிந்து கூருநிற்பது.

அடைகரை மாஅத்து அல்குசினை ஒலியத்
தளிர்கவின் எய்திய தண்ணறும் பொதும்பில்
சேவலொடு கெழீஇய செங்கண்
இருங்குயில்
புகன்றெதிர் ஆலும் பூமலி காலையும்
அகன்றோர் மன்றநம் மறந்திசி னோரென
இணருறுபு உடைவதன் தலையும் புணர்வினை
ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய
துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவுதொறு நுவலும்
நொதுமலாட்டிக்கு நோமென் நெஞ்சே.

**உரை** :—பாற்றை யடுத்த கரையின்கணுள்ள மாமரங்கள் நெருங்கிய கிளையெல்லாந் தழையும்படி தளிரீன்று அழகமைந்த தண்ணிய நறிய சோலையின் கண்ணே, சேவலுடனே பொருந்திய சிவந்த கண்ணையுடைய கரியகுயில் ஒன்றனையொன்று விரும்பி எதிரெதிரிருந்து ஆரவாரிக்கும் பூங்கொத்தினையுற்று மலர்கள் மலரும் இளவேனிற்காலத்தும், முன்பு பிரிந்தகன்ற காதலர் திண்ணமாக நம்மை மறந்தனரென வருத்தமுறுவதன் மேலும் தம் தொழிலில் வல்ல ஓவியர் ஒள்ளிய அரக்கினையூட்டிய எழுதுகோல்போன்ற தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரியின் வெளிய இதழையுடைய மலர்களை வண்டுகள் மொய்க்கும்படி வட்டியிலேந்தி அப்புதியமலரைத் தெருவுகள்தோறும் விலைகூறிச் செல்வாநின்ற எதிலாட்டியாகிய பூவிலைமடந்தையை நோக்குந்தோறும் என்னெஞ்சு நோவாநின்றது ; ஆதலின் யான் இனி எவ்வண்ணம் ஆற்றியுளேனாவேன்? எ – று.

மா அத்து, அத்து - அல்வழிச்சாரியை. அல்கல் - நெருங்கல். ஓவமாக்கள் - சித்திரவேலைசெய்வோர். இணருறுபு பூமலிகாலையுமெனமாறிக்கூட்டுக. அலரியாகிய புதியமலரென இயைத்து இருபெயரொட்டாக்கினுமமையும். பாதிரிமலரைக் கூறுதலானே பாலைத்திணையும் வேனிற்பருவமுமாமெனக் கொள்க. பாதிரியின் நறுமணம் இன்பம் விளைத்துப் பிரிந்தாரைத் துன்புறுத்தலின், பூவிலைமடந்தைக்குத் தன்னெஞ்சு நோமென்றாள்.

சேவலொடு குயில் கெழீஇ ஆலுமென்றது, யான் அங்ஙனம் தலைவனொடு கெழீஇ ஆலப்பெற்றிலேனேயென் றிரங்கியதாம். உடைந்ததும் நெஞ்சுநோதலும் அழிவில்கூட்டத்துப் பிரிவாற்றாமை. ஏனை **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கஃஅ)

## கககூ. பெருங்குன்றூர்கிழார்

**குறிஞ்சி** : இது, சிறைப்புறமாகத் தோழி

செறிப்பறிவுறீஇயது.

எ - து, தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியின் இற்செறிப்பும் உள்ளுறையால் வேற்றுவரைவு நேர்ந்தமையும் தோழி அறிவுறுத்தி வரைவுடன்படுத்துவாளாய் மலைநாடன் யார்தரவரினும் மாலையனாகி வாராநிற்பன்; வந்தும் யாதுபயன், முயங்கப் பெறுபவனல்லன், புலந்து போயினும் போவானாக வென்று வெகுண்டு கூறாநிற்பது.

பாடல்

தினையுண் கேழல் இரியப் புனவன்
சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்
ஒண்கேழ் வயப்புலி படூஉம் நாடன்
ஆர்தர வந்தனன் ஆயினும் படப்பை
இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்
பன்மலர்க் கான்யாற்று உம்பர்க்
கருங்கலை
கடும்பாட்டு வருடையொடு தாவன
உகளும்
பெருவரை நீழல் வருகுவன்
குளவியொடு



கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்
முயங்கல் பெறுகுவன் அல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும்
பெரிதே.

**உரை** :—தினைப்புனத்துவந்து மேயும்பன்றி பட்டொழியுமாறு அத் தினைப்புனத்துக்குத் தலைவன் சிறிய இயந்திரமாக அமைத்துவைத்த பெரிய கல்லின்கீழால் ஒள்ளிய நிறத்தையும், வலியையுமுடையபுலி புகுந்து படுகின்ற மலைநாடன் யாராலே தரப்பட்டு வந்தவனாயினும்,—கொல்லையின் கண் இனிய முசுவின் பெரியகலை நல்ல உணவை யுண்ணுநிற்கும் பலவாய மலரையுடைய கான்யாற்றின்மேலுள்ள கரையின்கண்ணே பெரிய கலைமான், கூட்டமாகிய மலையாட்டினத்துடனே தாவித்துள்ளிக் குதியாநிற்கும் பெரிய மூங்கிற்புதர் நிழலில், அவன் குளவியுடனே கூவிளமலரிடையிட்டுக்கட்டிய நெருங்கிய மாலையுடையனாகி வாராநிற்பன்; வந்தும் யாது பயன்? தலைவியின் முயக்கத்தை இனி எவ்வளவேனும் அடைபவனல்லன்; அதுகாரணமாகத் தன் மலையினுங்காட்டிற் பெரிதாகப் புலந்துகொள்ளினும் புலந்துகொள்வானாக; எ - று.

அடார் - கருங்கற்பலகையை ஒருபால் சாய்வாக நிமிர்த்திக் கீழே முட்டுக்கொடுத்து உள்ளால் உணவுவைப்ப அவ்வுணவை விலங்குசென்று தொடுதலுங் கல்வீழ்ந்துகொல்லும் பொறி. முசுப்பெருங்கலை - ஆண் குரங்கு. கடும்பு - சுற்றம். குளவி - மலைப்பச்சை; காட்டு மல்லிகையுமாம். கூவிளம் - வில்வம். முயங்கல் பெறுகுவனல்லன் என்றது அவன் புணர்வுமறுத்தல்.

**உள்ளுறை** :—கேழல் அகப்படுமாறு வைத்தபொறியுள்ளே புலிபடுமென்றது, இத்தலைவன் ஏற்றுக்கொள்ள விரும்பியும் இவன் பாணித்தமையின் இவனினுஞ் சிறந்த தோன்றலொருவன் வரையக்கருதி வந்துளனென வேற்றுவரைவுகூறி அறிவுறுத்தியதாம்.

**இறைச்சிகள்** :—(க) கலைமான் யாட்டினத்தோடு தாவுகளுமென்றது, வேற்றுவரைவுநேரினும் அதுகலையொடு யாடுசேர்ந்தாற்போலன்றிப் பிறிதில்லையெனத் தலைவனுற்றுமாறு கூறியதாம்.

(உ) முசுக்கலை நன்மேயலாருமென்றது வரைந்துகொள்ளின் இடையீடின்றித் தலைவி இன்பந் துய்க்கலாகுமென்றதாம். முயங்கல் பெறுகுவனல்லனென்றது இற்செறிப்பு அறிவுறுத்தியதாயிற்று. **மெய்ப்பாடு** - வெகுளி பற்றியபெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கககூ)

# ௧௨௦. மாங்குடிகிழார்

**மருதம் :** இது, விருந்து வாயிலாகப்புக்க தலைவன் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்தவன் தலைவியின் ஊடலைத் தணிக்கப்பெருஞய் விருந்தொடு புகுதக்கண்டு அவள் தன்னூடலையடக்கி விருந்தெதிர் கொண்டாளாக, அதனைநோக்கிய அத்தலைமகன் இவள்பரிகலந்திருத்தி அட்டிவிடத்தாளாயினள்; இதற்குக்காரணம் இவ்விருந்தேயாதலின் இஃதென்ஞான்றும் வந்துதவுவதாக, வந்தால் இவளின் முயக்கத்தைப் பெறுதற்குரிய இனிய முகத்தைப் பார்ப்பேமென்று மகிழ்ந்து கூறுகிற்பது.

மூலமும் உரையும் குறள்

தடமருப்பு எருமை மடநடைக் குழவி
தூண்தோறும் யாத்த காண்தகு நல்லில்
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேதை*
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
வாளை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண்டு அமர்த்த கண்ணள் தகைபெறப்
பிறைநுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்
அந்துகில் தலையில் துடையினள் நப்புலந்து
அட்டி லோளே அம்மா அரிவை

எமக்கே வருகதில் விருந்தே சிவப்பாள் அன்று
சிறியமுள் எயிறு தோன்ற

முறுவல் கொண்ட முகங்காண் கம்மே.

**உரை :**—விளைந்த கொம்பினையுடைய எருமையின் இளநடையையுடைய கன்றுகளைத் தூண்கள்தோறுங் கட்டியிருக்கின்ற காட்சிமிகுதியால் யாவருங் காணத்தக்க நல்ல மனையின்கண் விளைந்த குண்டலத்தைக் காதிலணிந்த செழுவிய செய்ய பேதைமையுடைய காதலி, சிறிய மோதிரஞ் செறித்த மெல்லிய விரல் சிவக்கும்படியாக வாழையிலையைக் கொய்துவந்து அடிக்காம்பு பருத்திருத்தலின் அதனைவகிர்ந்து பரிகலமமைத்து அடிசிலாக்குதலாலே புகைபடிந்து அமர்த்த கண்களுடையளாய் அழகுபெறப் பிறை போன்ற நுதலினுண்டாகிய சிறியநுணுகிய பலவாய வியர்வைநீரை அழகிய முன்றானையி னுனியாலே துடைத்துக்கொண்டு நம்மீது புலவிமிக்கு அடிசிற்சாலையிடத்தளா யிராநின்றாள்; இப்பொழுது விருந்தினராய் வருபவர் எம்முடன் விரும்பிவருவாராக; அங்ஙனம்வரின், இந்த அழகிய மாமைநிறத்தையுடைய அரிவை சினங்கொண்டு ஒருபொழுதுங் கண் சிவப்பதில்லை; அன்றியுங் குறுமுறுவல்கொண்ட முகத்தினளாயிருப்பள்; ஆதலின் நமது முயக்கத்துக் கின்றியமையாத இவளது சிறிய முட்போன்ற எயிறு சிறிது தோன்றுமாறு நகைகொண்ட முகத்தை யாம் காண்பேமாகியிராநிற்போம்; எ - று.

செழுஞ்செய் பேழையென்னும் பாடத்துக்கு குழைபெய்து போகட்ட செய்பேழையையுடைய காண்டகு நல்லிலென மாறிக்கூட்டுக.

தாழ் — மோதிரம். எமக்கு — உருபுமயக்கம். தில் — விழைவு. அரிவை அட்டிலோளென்றது புரையறத்தெளிதல். நப்புலந்து — நம்மைப்புலந்து இரண்டன்றொகை; நம்புலந்தெனற்பாலது 'அன்னபிறவும்' (தொல் எழுத்து. கஙஎ) என்றதனால் மெல்லெழுத்துப் பெறுதற்குரிய விரவுப் பெயர் வல்லொற்றுப் பெற்றுநின்றது.

ஒப்புரவுக்கு ஒல்காளாதலின் விருந்து வருகவென்றான். முக திரிந்து நோக்காது இன்னகையொடு நோக்கல் விருந்தோம்பற்கு வாய லாதலின் அஃது அவள் கண்ணதேயாம். அவ்வாயில்வழியே தானுமுய் வின் முகங்காண்கவென்றான். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - வாயி பெற்றுமகிழ்தல். (௧௨௦

(பாடம்) * பேழை.



## ௧௨௧. ஒருசிறைப்பெரியனார்

**முல்லை:** இது, வினைமுற்றி மறுத்தரும் தலைமகற்குத் தேர்ப்பாகன் சொல்லியது.

எ - து, சென்று வினைமுடித்து மீண்டு வரும்பொழுது காதலியை நினைந்துகவன்ற தலைமகனைத் தேர்ப்பாகன் நோக்கி மனைவியினுடைய தோளிலே துயிலுவதை விரும்பினோய், வருந்தாதேகொள்; நின் கண்ணி வாழ்க; நீ விரும்பிய காதலியினூர் இப் புறவத்துளிருக்கின்றதாதலின், விரையச்சென்று காணுமாறு இன்னே தேரைச்செலுத்துகிற்பேன் காணெனத் தெருட்டிக் கூறுநிற்பது.

விதையர் கொன்ற முதையற் பூழி

இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
அரலை அங்காட்டு இரலையோடு வதியும்
புறவிற்று அம்மநீ நயந்தோள் ஊரே
எல்லிவிட் டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்குசெலல் கலிமா
வண்பரி தயங்க வழீஇத் தண்பெயல்
கான்யாற் றிடுமணற் கரைபிறக் கொழிய
வெவ்விருந் தயரும் மனைவி
மெல்லிறைப் பணைத்தோள் துயிலமர்
போயே.

**உரை:**—அழகுபொருந்த விரிந்த தலையாட்டமமைந்த விரைந்த செலவினையும், கனைத்தலையுமுடைய வளவிய பரிமா விளங்க,—எழுந்து தண்ணிய மழைபெய்தலாலே பெருகிய கான்யாற்றி னருகிலிடப்பட்ட மணலானகிய கரைபின்னே செல்லும்படி போந்து நின் புதியவரவை விரும்பியேற்று மகிழு மனைவியினுடைய மென்மையாயுயர்ந்து பருத்த தோளின் கண்ணவாகிய துயிலை விரும்புகின்ற இறைவனே, நம் அரசன் நேற்றிரவுதான் போரை முடித்து நின்னைச் செல்லுமாறு விடைகொடுத்தானென்று கூறி வருந்தாதேகொள்; நின் மாலை வாடாது நீடுவாழ்வதாக; நீ விரும்பிச்செல்லுங் காதலியினூர்,—விதைவிதைக்கும் ஆயர் பலபடியாக உழுது புரட்டிய பழங்கொல்லைப் புழுதியில் நிறைவுற முறையே விதைக்கப்பட்டுள்ள ஈரிய இலைநிரம்பிய வரகின் கவைத்த கதிர்களைத்தின்ற கண்டார்க்கு விருப்பம் வருகின்ற இளைய பிணைமான் மரல்வித்துக்க ளுதிர்ந்து கிடக்கும் அழகிய காட்டின்கண்ணே கலையொடு மகிழ்ந்து விளையாடாநிற்கும் இப்புறவத்தின்கணுள்ளது கண்டனை யாதலின் விரையச்சென்று இன்னே காணுமாறு கதுமெனத் தேரைச் செலுத்துகிற்பேன் காண்; எ - று.

முதையல் - பழங்கொல்லை. அரலை - மரல்விதை.
நிலை யிடைச்சொல். 'வேந்துவிட்டன்று' என்றதனாலே

பிறக்கு - அசை
தலைவன் வினை

## மூலமும் உரையும்

கா.நா.கூ.

வலயாங்க ஞாயினமையறிக.
பெச்சம்.

கண்டனையாதலினென்பதுமுதற் குறிப்

**இறைச்சி** :—கவைக்கதிர்கறித்த பிணை காட்டின்கண் இரலையொடு வதியுமென்றது, நின் செல்வத்தைத்துய்க்குந் தலைவி நின்னொடுகலந்து மனையகத்து இனி இன்புற்று வதியாநிற்கு மென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - பாகன் தேற்றத்தேறுதல். (கஉக)

## கஉஉ. செங்கண்ணனார்

**குறிஞ்சி** : இது, சிறைப்புறமாகத் தோழி தலைவன்கேட்பச் சொல்லியது.

தலைவிக்குரைப்பாளாய்த்

*எ - து, சிறைப்புறத்து வந்திருந்த தலைமகன் கேட்டு விரைய வரையுமாற்றானே தோழி தலைவியைநோக்கித் தினைகொய்யலாயின; முல்லையரும்பின; நாடன் வருவானென்பது உண்டோவில்லையோவென ஆராய்ந்து அன்னையும் அமராமுகத்தளாயினள்; ஆதலின் இனி நமது களவொழுக்கம் பொருந்தி நிகழுமோவென்பதனை நீயே ஆராய்ந்தறிகவெனக் கவன்று கூறாநிற்பது.*

இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத
கருங்காற் செந்தினை கடியும் உண்டன
கல்லக வரைப்பில் கான்கெழு சிறுகுடி
மல்லன் மருங்கின் மௌவலும் அரும்பின
நகையுரும் உரறும் நாம நள்ளிருள்*
வரையக நாடன் வரூஉம் என்பது
உண்டுகொல் அன்றுகொல் யாதுகொல்
மற்றென
நின்று, மதிவல் உள்ளமோடு மறைந்தவை ஆடி
அன்னையும் அமரா முகத்தினள் நின்னோடு
நீயே சூழ்தல் வேண்டும்
பூஎய் கண்ணியது பொருந்து மாறே.

**உரை :**—நீல மலர்போலுங் கண்ணையுடையாய்! பெரிய மலையின் பக்கத்தில் என்னையன்மார் உழுது விதைத்த கரிய அடித்தண்டினையுடைய செவ்விய தினைக்கதிரெல்லாங் கொய்யப்பட்டன; மலைசூழ்ந்த விடத்திலிருக்கின்ற கானகத்தே பொருந்திய சிறுகுடியின் வளப்பத்தையுடைய பக்கங்களிலுள்ள மல்லிகையும் அரும்புண்டாயின; இன்னதொரு காலையில் மின்னொளியுடன் கூடிய இடிமுழங்குகின்ற அச்சத்தையுடைய இரவு நடுயாமத்திருளில் மலைசூழ்ந்த நாட்டையுடைய தலைவன் வருவானென்பது உண்மையோ இல்லையோ வேறுயாதோ என நின்று ஆராயவல்ல உள்ளத்துடனே அயலார்க்குத் தெரியாதபடி அவற்றைக் கூறிக்கொண்டு அன்னையும் விரும்பாத கொடுமைதோன்றிய முகத்தினளா யிராநின்றனள்; ஆதலால் அவனோடுண்டாகிய களவொழுக்கம் இனி நிகழுமோவென்பதை நின்னுள்ளத்தாலே நீயே ஆராய்ந்தறியவேண்டுங்காண்; எ - று.

---

(பாடம்) * நல்லிருள்



கடியுணல்கூறவே இனிப் பகற்குறி நிகழாதென்றதாம். மௌவலரும்புதல் கார்காலத்தாதலின் அதுவுந் தினைகொய்தற்கு அடையாயிற்று. அஃது அரும்பியதுகூறவே அரும்பு மலருங்காலம் வரைதற்குரியதென்று குறிப்பித்ததாம். உருமுரறு நள்ளிருளென்றது, தலைவன்வருநெறியினேதத்துக்கஞ்சி இரவுக்குறியுமறுத்ததாம். அமராமுகத்தளன்னையென்றது, களவொழுக்கம் புலப்பட்டு அலரெழுந்தமையும் தலைவியை யில்வயிற்செறித்தமையுங் குறிப்பித்ததாம். இவ்வினைத்துங்கூறி இருவகைக்குறியுமறுத்ததால் வரைவுடன்படுத்தியதாயிற்று. அமராமுகத்தளென்றது, முட்டுவயிற்கழறல். உருமுரறுமென்றது, ஏதம் ஆய்தல். கடியுண்டனமுதலியவை, அவன் புணர்வுமறுத்தல். எனை **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுடன் படுத்தல். (கஉஉ)

## கஉ௩. காஞ்சிப்புலவனார்

நெய்தல்:

இது, தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

எ - து, களவொழுக்கத்திலே காணும்பொழுதினுங் காணாப் பொழுது பெரிதாகலாற் பிரிந்துறையுந்தலைவி ஆற்றாளாகித் துன்புறுவதை யும் தலைவன் சிறைப்புறத்து வந்திருப்பதனையும் அறிந்ததோழி அவன் விரைய வரைந்து கொள்ளுமாற்றானே கூறுவாளாய்த் தலைவியைநோக்கி நீ அணிந்து, ஓடிப் பார்க்கும் விளையாடலு மில்லையாம்படி நினக்குற்ற நோயை எனக்குரையாயென ஆராய்ந்து கூறுநிற்பது.

உரையாய் வாழி தோழி இருங்கழி
இரையார் குருகின் நிரைப்பறைத்
தொழுதி
வாங்குமடற் குடம்பைத் தூங்கிருள்
துவன்றும்
பெண்ணை ஓங்கிய வெண்மணல்
படப்பைக்
ரு. கானல் ஆயமொடு காலைக் குற்ற
கட்கமழ் அலர தண்ணறுங் காவி
அம்பகை நெறித்தழை அணிபெறத்
தைஇ
வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடிப்
புலவுத்திரை உதைத்த கொடுந்தாள்
கண்டல்

௧0. செம்பேர் இரணை* அலவற் பார்க்குஞ்

சிறுவிளை ஆடலும் அழுங்க
நினக்குப்பெருந் துயரம் ஆகிய நோயே.

**உரை:**—தோழீ! வாழி; கரிய கழியின்கணுள்ள மீனாகிய இரைகளைத் தின்ற குருகுகளின் நிரையாகிய பறவைக்கூட்டம் விளைந்த பனைமடலின்கண்ணே கட்டிய குடம்பைகளில் நிறைந்த இருட்பொழுது நெருங்கியுறையாநிற்கும் பனைமரங்களுயர்ந்த வெளிய மணற்கொல்லையைச்சூழ்ந்த கானலிடத்து நின் ஆயத்தாரோடு காலையிலேசென்று கொய்துகொணர்ந்த தேன்மணம் வீசு மலரையுடைய ஈரிய நறிய நெய்தலின் அழகிய ஒன்றோடொன்று மாறுபட்ட நெறிப்பையுடைய தழையை அழகு பொருந்த

---

(பாடம்) * சேர்ப்பேர் ஈரளை.

மூலமும் உரையும்

௩௬௩

உடுத்து, கோலமிடுதலை யுற்ற சிற்றில்புனைந்து, சிறப்ப விரைந்தோடி விளையாடி, புலவுநாற்றத்தையுடைய அலைமோதிய வளைந்த அடியையுடைய கண்டல்மரத்து வேரின்கீழாகச் செல்லுகின்ற சிவந்த பெரிய இரட்டையாக நெருங்கியிருக்கின்ற ஞெண்டுகளை நோக்கிமகிழாநிற்குஞ் சிறிய விளையாட்டுமில்லையாம்படி வருத்தமெய்துமாறு நினக்குத்தானுற்ற பெரிய துயரமாகியநோயை நீ கூறாய்; எ - று.

நிரைப்பறைக் குருகின் தொழுதியென மாறி நிரையாகப் பறத்தலையுடைய குருகின் தொழுதியெனவுமாம். நெறி - சுருள். தைஇ - உடுத்து. வரி - வரித்தல்; கோலமிடுதல். இரணை - இரண்டு; ஈண்டு ஆண் பெண்ணாகிய இரண்டு ஞெண்டுகள்.

சிற்றிற்புனைந்து பரிசிறந்தோடி யென்றது தலைவி சிற்றில்புனைந்த அறியாப்பருவத்தே தலைவன் விருந்தாய் வந்தேனென ஆங்கே பூழிப் போனகமளித்த காலந்தொட்டு அவனை மணமகனாகக் கருதியிருந்தமை யறி வுறுத்தியதாம். கானலிலே தழையுடுத்ததைக் கூறியது தலைமகன் கொடுத்த தழையுடுத்துப் பகற்குறியிற் களவொழுக்கத்துப் பயின்றமை அறிவுறுத் தியதாம். இரணையலவற் பார்க்குமென்றது களவொழுக்கத்தைவிட்டுக் கற்பிற்பட்டுத் தலைவனுந்தலைவியுங் கூடியின்புறுமாட்சியைப் பெற வில்லையே யென்றதாம். பெருந்துயரமாகிய நோயென்றது தலைவியின் துன்பமிகுதி யறிவுறுத்தியதாம். இவற்றைக் கேட்டிருந்த தலைமகன் நம் பிரிவால் தலைவி துன்பெய்தினள்போலாமெனப் பிற்றைஞான்றே வரை வொடு புகுவானாவது. **மெய்ப்பாடு** – பெருமிதம். **பயன்** – வரைவுடன் படுத்தல். (கஉ௩)

## கஉ௪. மோசி கண்ணத்தனார்

**நெய்தல்** : இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவற் குரைத்தது

எ – து, தலைவனாலே பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனை நோக்கி ஐயனே! தலைவி தனியேயிருப்பதை யான் ஆற்றகிலேன் ஆயினும் தானே வந்தெய்தியதேயென்று வருந்துவளாதலின் இனி, நீ பிரியா துறைவாயாக வென அழிந்து கூறுமிற்பது.

ஒன்றில் காலை அன்றில் போலப்
புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை
யானும்ஆற் றேனது தானும்வந் தன்று

நீங்கல் வாழியர் ஐய ஈங்கை
முகைவீ அதிரல் மோட்டுமணல் எக்கர்
நௌவி நோன்குளம்பு அழுந்தென எள்ளி
உருக்குறு கோள்கலங் கடுப்ப விருப்புறத்
தெண்ணீர்க் குமிழி இழிதருந்
தண்ணீர் தகைஇ நின்ற பொழுதே.

**உரை:**—ஒன்று பிரிந்தகாலத்து மற்றொன் அன்றிற்பறவை ஆற்றா திற
தொழிதல்போலத் தனிமையுற்றுறையும் புன்கணமைந்த வாழ்க்கை



யானும் ஆற்றாமலிறந்து படுவேனாவேன்; அங்ஙனம் ஆற்றாமைக்குக் காரணமாகிய, ஈங்கையின் அரும்பும் புனமல்லிகைமலரும் உயர்ந்த மணலாலமைந்த திடரிலுதிர்ந்து மான்களின் வலிய குளம்பினால் மிதிபட்டழுந்து கையினாலே வெள்ளியைமூசை (குகை) யிலிட்டு உருக்கிச் சாய்த்தாற்போல விருப்பமுறும்படி அவற்றினின்று தெளிந்த நீர்க்குமிழியாக வடியுந் தண்ணீரைப்பெற்றுநின்ற கூதிர்ப்பருவமாகியவஃதானும் வந்திறுத்துவிட்டது; ஆதலின் ஐயனே, என்னைக் கைவிட்டு நீங்கா துறைவாயாக, நீ நெடுங்காலம் வாழ்வாயாக; எ - று.

புலம்பு - தனிமை; வருத்தமுமாம். நௌவி - மான். நோன்மை - வலிமை. தகைஇ - பெற்று. அதிரல் - புனமல்லிகை. ஒன்றுதல் - சேர்தலெனக் கொண்டு சேராத காலத்து அன்றிற்பறவை இறந்துபடுதல்போலெனவுமாம். இது தலைவிகூற்றைத் தோழிகூற்றாகக் கூறுதற்கு முன்பு கூறிய விதியை யிங்குக்கொள்க; மேல்வருவனவற்றிற்கும் இஃதொக்கும். யானும் ஆற்றேனென்றது துன்பத்துப் புலம்பல்.

முயங்கி யுறையாதவழிக் கூதிர்வாடையா லெய்துநோயினு மிறப்பது கொடிதன்றென்பாள் ஆற்றுதிறந்துபடுவேனென்றாள். **மெய்ப்பாடு** - அவலத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - தலைவனைச் செலவழுங்கு வித்தல். (கஉச)

## கஉரு. ......................

**குறிஞ்சி :** இது, வரைவுநீட்டிப்ப
வற்புறுத்தியது.

வாற்றாளாய தலைவியைத் தோழி

எ - து, தலைவன் வரையாது இரவுக்குறிவந் தொழுகுவதனை யறிந்த தலைவி வருந்துதலும் அதுகண்ட தோழி நீ வருந்தாதேகொள், அவர் இரவில் வருவதனை யஞ்சி யாம்வரைந்து கொள்ளுவீரென்று கூறினால் நீட்டியாமல் மணந்து, நம்மையுமுடன்கொண்டு தமது நாடெய் துவரெனத் தெளியக் கூறுமிறப்பது.

இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை
கோடுவரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி
நல்லரா நடுங்க உரறிக் கொல்லன்
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அகழும்
ரு. நடுநாள் வருதல் அஞ்சுதும் யாமென
வரைந்துவரல் இரக்குவம் ஆயின்

அம்மலை

நன்னாள் வதுவை கூடி நீடின்று
நம்மொடு செல்வர்மன் தோழி மெல்ல
வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்
நிலங்கண்டு அன்ன அவன்கண் பாசறை
மென்திணை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்புந்தம் பெருங்கல் நாட்டே.



கஎரு

**உரை**:—தோழீ! தனக்கு வேண்டுமிரையை நாடுகின்ற அகன்ற வாயையுடைய ஆண்கரடி வளைந்த வரிகளையுடைய புற்றுக் கிடைத்தலும் அதனைப் பெயர்த்து அதன்கண்ணே யுறைகின்ற நல்லபாம்பு நடுங்குமாறு முழங்கி இரும்புசெய் கொல்லன் ஊதுகின்ற உலைமூக்கேபோல உள்ளே பெருமூச்செறிந்து பறிக்காநிற்கும் இரவு நடுயாமத்தில் நீயிர் வருதலை யறிந்து யாம் அஞ்சுகின்றேமென்றுகூறி இனி வரைந்தெய்தும்படி இரந்து கேட்போமாயின், நமது மலையின்கண்ணே நாள் நீட்டியாது நல்லநாளில் நம்மை மணம்புரிந்துகொண்டு,—வேங்கைமலர்மாலை சூடுகின்ற குறவர் எருதையோட்டிக் கதிர்ப்போரடிக்கு மருதநிலமாந்தர் களஞ்செப்பஞ் செய்தாற்போன்ற அகன்ற இடத்தையுடைய பசிய கற்பாறையிலே மெல்லிய தினையைத் துவைத்து அதன்றாளை நெடியபோராக விடும்பொருட்டு வைகறையிலெழுமாறு துஞ்சுகின்ற களிறு முழங்கி எழுப்பாநிற்கும் தமது பெரிய மலைநாட்டகத்தே நம்மொடு மெல்லச் செல்வார்காண்; எ - று.

எண்கினேற்றை - ஆண்கரடி. உரறல் - முழங்கல். குருகு - உலை மூக்கு. மன் - ஆக்கம். நெற்களத்தே சேரலாற் களமரென்றூர். நடுநாள் வருதலஞ்சுது மென்றது அவன் புணர்வுமறுத்தல்.

நீடின்று வரைந்து மெல்லச் செல்வரென்றது, நின் துயர்தீர இன்னே மணம்புரிந்து சின்னுளளவும் நின்னைப் பன்முறை முயங்கிய பின்பு செல்வரென்றதாம்.

**உள்ளுறை :**—தினைக்கதி ரடிக்கவெண்ணி யுறங்குகின்ற குறவரை யானை யெழுப்புமென்றது, வரைந்துகொள்வோமென்று கருதியுறையுந் தலைமகனை யாம் விரைந்து வரைவாயாகவென்று இரப்போமென்றதாம்.

**இறைச்சி** —கரடி இரையுண்ணுமாறு புற்றிலேகிடந்த பாம்பு நடுங் கும்படி அகழ்ந்துண்ணுமென்றது, அங்ஙன மணம்புரியுந் தலைவர் நம்மை முயங்குகையில் நம்பா லுண்டாய்க்கிடந்த பசலை நடுங்கியொழிய இனிது புணர்ந்து நலனுகர்வ ரென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (௩௨௫)

## ௩௨௬. ..................

**பாலை :**

இது, பொருள்வலித்த நெஞ்சினைத் தலைவன் நெருங்கிச் செலவழுங்கியது.

எ – து, "ஒன்றாத் தமரினும்" என்ற (தொல். பொரு. சக) சூத்திரத்துக் கூறப்பட்ட 'உடைமைய துயர்ச்சி' கருதிப் பொருள்சேர்த்தற்பொருட்டுப் பிரிய வலித்த நெஞ்சினைத் தலைவன் நெருங்கி மற்றும் அதன்கண்ணே கூறப்பட்ட பொருள்செயல்வகைப் பாலவாகிய 'நாளதுசின்மையும், அன்பினதகலமும்' இன்பத்தின் பாலவாகிய 'இளமைய தருமையும், அகற்சிய தருமையும், பிறவுங்' கூறி வருந்திச் செலவழுங்காநிற்பது.

பைங்காய் நல்லிடம் ஒரீஇய செங்காய்க்

கருங்களி ஈந்தின் வெண்புறக் களரி

இடுநீறு ஆடிய கடுநடை ஒருத்தல்



ஆட் பெறல் நசைஇ நாட்சுரம் விலங்கித்

துனைதரும் வம்பலர்க் காணாது அச்சினம்
பனைக்கான்று ஆறும் பாழ்நாட்டு அத்தம்
இறந்துசெய் பொருளும் இன்பந் தருமெனின்

இளமையின் சிறந்த வளமையும் இல்லை
இளமை கழிந்த பின்றை வளமை
௧௦. காமந் தருதலும் இன்றே அதனால்
நில்லாப் பொருட்பிணிச் சேறி
வல்லே நெஞ்சம் வாய்க்கநின் வினையே.

**உரை :**—நெஞ்சே! நல்ல மேலிடமெல்லாம் பசுங்காய் நிறமாறிச் செங்காயாகிப் பின்னர்க் கருங்கனியா யுதிர்கின்ற கனியையுடைய ஈத்த மரங்கள் மிக்க வெளிய புறத்தினையுடைய களர்நிலத்திலேபட்ட புழுதி படிந்த கடியநடையையுடைய களிற்றியானை நெறியிலே செல்லுபவரைக் கண்டு கொல்லுவதற்கு விரும்பி விடியற்காலத்தில் சுரத்தின்கண்ணே குறுக்கிட்டுச் சென்று ஆங்கு விரைவில் வரும் அயலார் யாரையுங்காணாது தான் கொண்டிருந்த அச்சினத்தைப் பனைமரத்தின் மோதி அப்பால் அடங்குகின்ற பாழ்த்த நாட்டினையுடைய பாலை நிலத்திலே சென்று ஈட்டப்படும் பொருளும் ஓரின்பத்தைத் தருமெனில் அதுதானும் இளமையில் நுகரும் காமவின்பத்தினுங்காட்டிற் சிறந்த இன்பமாமோ? இல்லையே; அங்ஙனமாக அவ்வின்பத்தைத்தரும் வளமை சிறந்ததாகுமோ? இல்லையன்றே; அத்தகைய காமவின்பந்தான் இளமையிலேயே துய்க்கலாவதன்றி, முதுமையின்கண்ணே துய்க்கப்படுவ தொன்றாகுமோ? இல்லையே; இளமைப்பருவத்தைப் பொருளீட்டுதலிலே கழித்துவிட்டாலோ அப்பொருள் வளம் முதுமையின்கண்ணே காமவின்பத்தைத் தருதற்கும் இயையுமோ? இல்லையே; ஆதலின் இவற்றை ஒருசேர ஆராய்ந்து நிலைநில்லாப் பொருளாசை நின்னைப் பிணித்தலாலே இக்காமவின்பத்தினைக் கைவிட்டு விரையச் செல்லாநின்றனை; ஆயிற்சென்று காண்; நின்செயல் நினக்கு வாய்ப்புடைத்தாவதாக; எ - று.

களரி - உப்புப்பூத்த பாழ்நிலம். நீறு - புழுதி. வல்லே - விரைவாக.

ஈந்தின் பசுங்காய் பின்னர்ச் செங்காயாய்ப் பின்பு களியாயகனியாகு மென்றது, நமது யாக்கையின் இளமைபோய்ச் சிறிது முதிர்ந்துபின்பு தளர்ந்து திரையுமென்றதாம். யானை ஆட்பெறல்நசையாலே பனையை மோதுமென்றது, ஊழ்வினை யுருத்துவந்து ஒருகால் நம்மையு மொறுக்கு மென்றதாம். இவ்**விறைச்சியால்** 'நாளதுசின்மை' கூறியதாயிற்று. போர்தரும்பொழுது வெளிப்படையாகக்கூறினுற் சொகினத்தின் மாறுமாத லால் இறைச்சியாலே பொருள்கொள்ளவைத்தனனும். 'இளமையிற் சிறந்த வளமையுமில்லை' என்றது, இளமையதருமை கூறியதாயிற்று. 'நில்லாப் பொருட்பிணிச் சேறி' என்றது, பொருள் நிலையற்றவாதலிற் செல்லாது ஈண்டே துய்த்திடுமென 'அன்பினதகலமும், அகற்சிய தருமையும்' கூறிய தாயிற்று. ஏனையவும் உய்த்துணர்க. **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - இல்லத்தழுங்கல். (கஉ௬)



# கஉஎ. சீத்தலைச்சாத்தனார்

## நெய்தல்: இது, பாணற்குத் தோழி வாயின் மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனுலே தூதாக விடுக்கப்பட்ட பாணன் தலைவியி னூடலைத் தணிக்கும்படி வந்ததறிந்த தோழி, அவனை நோக்கி எங்கள் தலைவி அவனையல்லாமலே தன் பாவையை வைத்து விளை யாடுதற்குக் கழிக்கரைச் சோலையின்கண்ணே செல்லுவாமென்கின்றுளாத லால், அவன் இனி நமது பாக்கத்தில் வருதலால் யாதுபயனென மறுத்துக் கூறுநிற்பது.

இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை

இறகெறி திவலையிற் பனிக்கும் பாக்கத்து

உவன்வரின் எவனோ பாண பேதை
கொழுமீன் ஆர்கைச் செழுநகர் நிறைந்த
கல்லாக் கதவர் தன்னையர் ஆகவும்
வண்டல் ஆயமொடு பண்டுதான் ஆடிய
ஈனாப் பாவை தலையிட்டு ஓரும்
மெல்லம் புலம்பன் அன்றியுஞ்
செல்வாம் என்னுங் கான லானே.

உரை :—பாணனே, எம் பேதையானவள் கொழுவிய மீனையுண்ணுதலையுடைய செழுமையுற்ற மாளிகையில் நிறைந்த தன் ஐயன்மார் தமது தொழிலன்றி எனைய ஒன்றுங் கல்லாத சினமுடையவராயிருப்பவும் பண்டு தோழியரோடு தான் வண்டல் விளையாட்டயர்தற்குத் தான் ஈனாது வைத்த பாவை தலைக்கீடாகக்கொண்டு அந்த மெல்லிய கடற்கரைச் சேர்ப்பனை யல்லாமலும் கழிக்கரைச் சோலையின்கண் விளையாடச் செல்வோமாக என்று கூறுகிற்பள்; அதனால் கரிய கழியிலே இரைதேடித் துழாவிய ஈரிய புறத்தையுடைய நாரை தன் சிறகை உதறுகின்ற திவலையாலே குளிர்ந்து நடுங்குகின்ற நமது பாக்கத்தில் அந்த மெல்லம்புலம்பன் வருதலால் யாதுபயனோ? ஆதலின் அவன் இனி வரற்பாலனல்லன்காண்; எ - று.

வண்டல் - வண்டற்புழுதியாலே சிற்றில்கோலிச் சிறுசோறட்டு மகளிர் விளையாடும் விளையாட்டு. ஈனாப்பாவை - தான்பெறாது கோரையாலே செய்துவைத்துத் தன்மகவென முறைமை பாராட்டும் பாவை. ஓரும் - அசை. ஐயர் கதவராகவுமெனமாறிக் கூட்டுக.

ஈனுப்பாவை தலையிட்டெனவே விளையாட்டயரு மங்கைப்பருவமும் நீங்காத தலைவியைக் கைவிட்டகன்றமை குறிப்பித்து மறுத்ததாம். தன் ஐயன்மார் கல்லாக்கதவரென்றது அவரிடை அகப்பட்டிருந்தும் பண்டு களவிலே தலைவனுக்குச் செய்த நன்றியை மறந்தனனென்பதுங்காட்டி மறுத்ததாம்.

**உள்ளுறை** :—கழியிலுளைந்த நாரை இறகையுதறுதலாலுண்டாகிய நீர்த்துளி பாக்கத்தின்கண்ணே சென்று தெறித்துக் குளிர்ச்சியால் நடுக்கஞ் செய்யுமென்றது பரத்தையிற் புணர்ந்த தலைவன் 'யான் அங்கவர்





யாரையு மறியேன்' என்று கூறிய பொய்ம்மொழி எம் பாக்கமெங்கும் பரந்து எமக்கு நடுக்கத்தை யுண்டாக்கியதென்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயின் மறுத்தல். (௧௨௭)

## ௧௨௮. நற்சேந்தனார்

குறிஞ்சி : (௧) இது, குறைநேர்ந்த தோழி தலைவி குறைநயப்பக் கூறியது.

எ – து, பாங்கியிற்கூட்டத்தின்கண்ணே தலைமகனது குறைதீர்க்க உடன்பட்டதோழி தலைமகளைநோக்கி, 'நின்மேனிவாட நெற்றியொளி கரப்பவும் எனக்கு உரைத்தாயல்லை, நான் அவற்றின் காரணத்தை யறிவேன்' என்று கூறி என்மீது தவறேற்றி வருந்தாதே கொள்; தினைப் புனத்தில் ஒரு தோன்றல்வந்து என்முதுகையணைத்துக் கொண்டனன், அதனை நினைந்து இங்ஙனமாயிற்றென்று, தான் கூறுவதனாலே தலைவி ஆராய்ந்து 'தலைவனது குறையைக் கூறவந்தாள்' என்றறியும்படி கூறு நிற்பது.

(உ) தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றதூஉமாம்.

எ – து, தலைவி இக்களவொழுக்கத்தினைத் தமர்க்கு அறிவுறுத்தி வேற்றுவரைவுக்குடன்படாதபடி செய்யவேண்டுங் கருத்தினளாகி அதனைத் தன் தோழியிடத்துக் கூறிப் புலப்படுத்தச் செய்ததூஉமாகும்.

பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்
எனக்குநீ உரையா யாயினை நினக்கியான்
உயிர்பகுத் தன்ன மாண்பினேன் ஆகலின்
அதுகண் டிசினால் யானே என்றுநனி
அழுதல் ஆன்றிசின் ஆயிழை ஒலிகுரல்
ஏனல் காவலின் இடையுற் றேருவன்
கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்
சிறுபுறங் கவையினன் ஆக அதற்கொண்டு
அஃதே நினைந்த நெஞ்சமொடு
இஃதா கின்றியான் உற்ற நோயே.

(க) உரை:—'ஆயிழாய்! பகற்பொழுதில் எரிகின்ற விளக்கு ஒளி மழுங்கிக் காட்டுதல்போல நின்மேனி வாடவும், இராகுவினலே கவர்ந்து கொள்ளப்பட்ட திங்களின் ஒளி கெடுதல்போல நெற்றியினொளி மறைபடவும், அக்காரணத்தை நீ எனக்கு உரைத்தாயல்லை; நினக்கு யான் ஒருயிரை இரண்டுடம்பின்கண்ணே பகுத்துவைத்தாற் போன்ற நின்னேடு தொடர்ச்சியுற்ற மாட்சிமையுடையேனதலால், நீ இப்பொழுது மறைத்தொழுகுமதனை யான் அறிந்துளேன்' என்று நீ கருதி யான்

## மூலமும் உரையும்

கசஎ

நினக்கு அதனை யுரையாததன் காரணமாக மிக அழுது வருந்தாநின்றனை; இனி இங்ஙனம் அழாதேகொள்; தலைசாய்ந்த கதிரையுடைய தினைப் புனத்தே காவல்செய்யுமிடத்து கண்ணிசூடிக் கழலணிந்து மாலை வேய்ந்துளனாகி ஒருவன் வந்துற்று உள்ளங் குளிர்ப்பூறும்படி என் முதுகை யணைத்துப் புல்லினனாக, அதுமுதற்கொண்டு அதனையே கருதிய உள்ளத்துடனே இப்பொழுது யானுற்ற நோய் இத்தன்மையதாய் இரா நின்றதுகாண்; எ - று.

சாய்தல் - குறைதல். இசின் - தன்மைக்கண்வந்தது. பின்னையது - ஏவலின்கண்ணது. ஒலிதல் - தழைதல். குரல் - கதிர். சிறுபுறம் - முதுகு. 'பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பு' என்றது கிழக்கிடுபொருளே நிலைக்களனாக முதலுஞ்சினையும் மயங்கிவந்த வினையுவமம்.

இப்பாட்டினுள் நிகழ்ந்ததை நினக்கு மறைத்தே ஒழுகுகின்றேன் என்று வருந்தாதேகொள். ஒருவன் கண்ணி முதலியவற்றையுடையனாய்த் தினைக்கொல்லையுள்வந்து என்னையணைத்துக்கொண்டான். அதனை நினைந்த நெஞ்சத்துடனே யானுற்ற காமநோய் இத்தன்மையதேயென்று தோழி கூறினாள். இங்ஙனம் என் காதலனைப் புறத்தொழுக்குடையானெனக் கொண்டாள்கொல்லெனவும், அவன் இவளைப் புல்லியது என்பொருட்டென்று கொள்ளாது தன் பொருட்டென்று கொண்டனள்கொல் லெனவும் தலைவி கருதும்படி கூறினளாயினும், அதனுள்ளே இவள் என் உயிர்த்தோழி யென்பதைக் காதலன் உணர்தலால் அவன் தனது வருத்தந் தீர்க்கின்றிலையே யென்று அதற்கு முகமனாக இவளைத் தழுவிக்கொண்டதன்றி இவள் பிறழக்கொண்ட தன்மை அவனிடத்தளதாயின் இவளைக்குறிப்பறியாது புல்லானெனவும், நமது களவொழுக்கம் இவளுஞ் சிறிதுணர்ந்தன ளாதலின், இக்குறை முடித்தற்கு மனம் நெகிழ்ந்ததனால் அவன் தழுவ வாளா இருந்தன ளெனவும் தலைவி கருதுவதனால் அவளது நாணம் நீங்காதிருத்தற்குக் காரணமாகிய பொருளை உள்ளடக்கிப் புணர்த்துக் கூறியவாறறிக. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - குறையயப்பித்தல்.

(உ) **உரை** :—நிகழ்ந்ததை நினக்கு மறைத்தேனென்று வருந்தாதே; ஒருவன்வந்து என்னைப் புனத்தின்கண்ணே முயங்கலாலே யான் காம நோயால் வருந்துகின்றே னென்றவாறு. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - அறத்தொடு நிற்றல். (கஉஅ)

## கஉகூ. ஔவையார்

குறிஞ்சி : இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகளை முகம்புக்கது.

எ - து, தலைவனாலே பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவியை நெருங்கிப் பெரிதும் நகைத்தற்காகிய செயலொன்றனை நீ கேள்; காதலர் நம்மை இங்கே கைவிட்டுத் தமியராய் வினைவயிற் செல்வாரெனவும், அவர் மீண்டுவருமளவும் நாம் மனையின்கண்ணே வருந்தியிருக்க வேண்டுமெனவுங் கூறுநிற்பரென்று தலைவியி னுள்ளம் தன்பால் மீண்டு இவளது முகத்தை நோக்கிக் கேட்கும் வண்ணங் கூறுநிற்பது.



பெருநகை கேளாய் தோழி காதலர்
ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்
பொம்மல் ஓதி நம்மிவண் ஒழியச்
செல்ப என்ப தாமே சென்று
தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை
வாழ்தும் என்ப நாமே அதன்தலைக்
கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்
படுமழை உருமின் உரற்றுகுரல்
நடுநாள் யாமத்துந் தமியங் கேட்டே.

உரை :—தோழீ ! காதலர் ஒருநாள் நின்னைப்பிரியினும் நின் உயிரின் தன்மை வேறுபடுகின்ற பொலிவுற்ற கூந்தலையுடையாய் ! யாவரு பெரிதும் நகைக்கவல்ல வொருசெய்கையை நீ கேட்பாயாக ; நம்மை அவ இங்கு நீங்குமாறு கைவிட்டுத் தாம் ஒருவரே தமியராய் வினைவயி செல்லக் கருதியுள்ளாரென்று உழையர் கூறுகிற்பர் ; அவர் தனிே சென்று தமது வினைமுடித்து வருமளவும் நிறம் விளங்கிய படப்பொறியை யுடைய அரவினது தலைநடுங்கும்படி பெய்கின்ற மழையிடையிட்ட இடியினது முழங்குகின்ற முழக்கத்தை இரவு நடுயாமத்துந் தமியமா இருந்து கேட்டு நமது மனையின்கண்ணே நாம் அதன்மேலும் உயி வாழ்ந்திருக்கக் கடவேமென்றுங் கூறுகிற்பர் ; இஃதென்ன கொடுமை காண் ! எ – று.

பொம்மல் - பொலிவு. உத்தி - படப்பொறி. உரற்றுதல் - முழக்குதல்

பிரிந்தால் நாம் வாழ்கலமென்பதை அறிந்தும் பிரிவரெனில் இத பெருநகைக் கிடமெனக் கூறினாள். அணைத்திருப்பவரையும் அச்சுறு தும் இடிமுழக்கத்தை யாம் தனித்திருந்துகேட்டு உயிர்வாழ்தல் இயல தென்பதை அவர் அறிந்திலரே யென்பதுபட வாழ்துமென்று கூறுகிற் ரென இரங்கிக்கூறினாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைமகளை தன்முக மாக்கல். (கஉக

## கநo. நெய்தற்றத்தனார்

**நெய்தல் :** இது, பிரிவிடைமெலிந்த தலைவி, வன்பொறை எதிரழிந்து சொல்லியது.

எ - து, தலைவன் பிரிதலான் மெலிவடைந்த தலைவி தன்னை வ திலே பொறுத்திருவென்று தெளிவிக்கும் தோழியைநோக்கி, நம் காத இல்வாழ்க்கையி விருப்பதினுங் காட்டில் இனியபொருள் வேறொன்று தெனக் கருதிச்சென்றனர் போலும் ; அங்ஙனமாக அவர் என்னை பிரிந்ததன்றி எத்தன்மையளாயினளென வினவியறிந்தாருமில நோயோ கைகடந்தன ; உசாத்துணையுமில்லேன் ; எவ்வா றுற்றியுளே ஆவேனென் றெதிரழிந்து கூறுகிற்பது.

வடிவின்று நிறைந்த மான்தேர்த் தெண்கண்
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்பக்
கோலின் எறிந்து காலைத் தோன்றிய

மூலமும் உரையும்

கசக

செந்நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்
ரு. தமதுசெய் வாழ்க்கையின் இனிய
துண்டோ
எனைவிருப் புடையர் ஆயினும் நினைவிலர்
நேர்ந்த நெஞ்சும் நெகிழ்ந்த தோளும்
வாடிய வரியும் நோக்கி நீடாது
எவன்செய் தனளிப் பேரஞர்
உறுவியென்று
க0. ஒருநாள் கூறின்றும் இலரே விரிநீர்
வையக வரையளவு இறந்த
எவ்வ நோய்பிறிது உயவுத்துணை இன்றே.

உரை :—தோழீ ! தெளிந்த ஓசையை யுடைய இடமகன்ற தோலை மடித்துப் போர்த்த வாயையுடைய தண்ணுமை இடையிலொலிப்பக் குற்றமின்றி எல்லா இலக்கணமும் நிறைந்த குதிரைகள் பூட்டிய தேரைக் கோலாலெறிந்து செலுத்தி விடியற்காலையிலே புறத்தே தோன்றிச் சென்ற செம்மையாகிய நீர்மையையும் பொதுவாகிய செயலையு முடைய நம் காதலர் பழமையாகிய இவ்வூரின்கண்ணே தமதாகச் செய்யப்படுகின்ற இல்வாழ்க்கையினுங் காட்டில் இனியதொரு பொருளு முண்டோ ? அதனையறியாராய் வேறொரு பொருளுண்டென அகன்று விட்டனர் ; எவ்வளவு விருப்புடையவராயினும், இப்பொழுது எம்மை நினையாதவராயினர் ; அன்றியும், அவருக்கு உடன்பட்ட என்னெஞ்சும், நெகிழ்ச்சியுற்ற தோளும், வாடிய எனது நிறமும் பார்த்துப் பாணித்த லின்றி, இப்பெரிய துன்பமுற்றவள் என்ன காரியஞ் செய்துகொண்டனளோவென்று ஒருநாளேனுங் கூறினாரிலர் ; யானடைந்த துன்ப நோயோ விரிந்த கடனீர்சூழ்ந்த நிலத்தின் எல்லை யளவையுங் கடந்தன ; உசாவுந்துணை வேறியாதுமில்லை; இனி எவ்வண்ணமுய்வேன் ? எ – று.

வரி - நிறம். அஞர் - துன்பம். தண்ணுமை – ஏழுச்சிக்குரிய வாச்சியம். தோன்றியது - வினைவயிற் செல்லப் புறப்பட்டது. பொதுவினை- அறப்புறங்காவல், நாடுகாவல், பிறவுமாம். செம்மலை மூதூர்க்கு அடையாக்கிக் காதலரைத் தோன்றூ எழுவாயாக்கி யுரைப்பினு மமையும்.

தனக்குத் தும்மல், புரையேறுதல் முதலாயின தோன்றாமையாலே தன்னை அவர் கருதிலரென்றாள் ; அன்புடையார் நினைந்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் முதலாயின தோன்றுமென்பது மகளிர்வழக்கு. வரினும் தன்னைத் தணித்தற்கியலாது தானிறந்துபடுவது திண்ணமெனக் கொண்டு எவ்வநோய் வையகவரை யளவிறந்ததென்றாள். மெய்ப்பாடு – அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கரு௦)

## கருக. உலோச்சனார்

நெய்தல்: இது, மணமனையிற் பிற்றை ஞான்று புக்க தோழியைத் தலைவன் வேறுபடாமை யாற்றுவித்தாய் பெரியைகாண் என்றற்குத் தோழி சொல்லியது.

எ - து, தலைவன் மணம்புரிந்துகொண்ட மறுநாள், ஆங்குச் சென்ற தோழியை அவன் இன்றளவும் தலைவி வருந்திவேறுபடாமல் நன்றாகப்



பாதுகாத்தனை, நீ பெரியையென்றலும் தோழி யென்னைப் புகழ்வதினாலாய தொன்றுமில்லை; நீ மறவாதிருத்தற்பொருட்டு யாம் தொழிலும், பொழிலும், உயவுநெஞ்சமும், ஊடுதலுமுடையே மில்லை; ஆதலின் எங்களைக் கருதியிருந்த நீயே பெரியைகாணெனப் புகழ்ந்து கூறுநிற்பது.

ஆடிய தொழிலும் அல்கிய பொழிலும்
உள்ளல் ஆகா உயவு நெஞ்சமொடு
ஊடலும் உடையமோ உயர்மணற் சேர்ப்ப
திரைமுதிர் அரைய தடந்தாள் தாழைச்
ரு. சுறவுமருப்பு அன்ன முள்தோடு ஒசிய

இறவார் இனக்குருகு இறைகொள இருக்கும்
நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன்
கள்கமழ் பொறையாறு அன்னவென்
நற்றேள் நெகிழ மறத்தல் நுமக்கே.

உரை:—உயர்ந்த மணற்பரப்பினையுடைய நெய்தனிலத் தலைவனே! திரைத்தல் முதிர்ந்த அரையையுடையவாய வளைந்த அடிமரத்தையுடைய தாழையினது சுறுமீன் கொம்புபோன்ற இருபுறமும் முள்ளையுடைய இலை முறிந்து சாயும்படி, - இறுமீனை இரையாகத்தின்ற நாரையின் கூட்டம் தங்குதல்கொள வீற்றிருக்கும், கள்ளுணவை யுண்டவான் மகிழ்ந்திருத் தலையுடைய நல்ல தேரையுடைய பெரியனென்பானது கள்ளின் மணங் கமழும் 'பொறையாறு' என்னும் ஊர்போன்ற என்னுடைய நல்ல தோள் கள் நெகிழும்படி நீயிர் எம்மை மறப்பதற்கு யாம் நும்மையின்றி வேறு விளையாட்டயர்தற்குத் தொழிலையும், நும்மையின்றி வேறு பிரிந்துசென்று தங்கியிருப்பதற்குச் சோலையையும், நும்மை நினைக்கலாகாத வருந்துகின்ற நெஞ்சினையும், நும்மால் ஊடுதலையுமுடையேமோ? அங்ஙனமாயின் நீயிர் மறந்திருப்பீர்; இல்லையே; ஆதலின் நீயிர் மறவாமையால் நுமது உள் ளத்தேயுள்ளே மன்றே? அதனால் இவள்தோள் நெகிழ்ந்து வேறுபட்டில; அவ் வேறுபடாமையை யான் ஆற்றினேனென்பது மிகையன்றே? எ-று.

மறத்தல் நுமக்கு என்பதன் உருபுபிரித்து மாறிக்கூட்டுக. ஆதலின் என்பதுமுதற் குறிப்பெச்சம். ஏனைய இசையெச்சம். இசையெச்ச மாவது இரண்டு முதலிய சொற்கள் எஞ்சி நிற்கப்பெறுவது.

நும்மையின்றி விளையாட்டயர்தல் முதலாயின செய்திலேமெனவும், நும்மைக் கருதியிருந்த நெஞ்சினேமெனவும், ஊடலிலேமெனவுங் கூறிய தனால் நும்மையே நினைந்திருந்தேமென்றும் அங்ஙனம் நீயிருங் கருதி யிருந்ததனால், ஒருவரையொருவர் பிரிந்திலிரென்றுங் கூறி உள்ளுறை யாலும் புலப்படுத்தி மகிழ்வித்தாள்.

உள்ளுறை:—தாழையின் தோட்டின்மீது இறவு ஆர்ந்த குருகு இறை கொள இருக்குமென்றது, எம் தலைவி மனமகிழ்ந்து தழையும்படி அவளுள்ளத்தில் செல்வம் நிரம்பிய நீயிர் வீற்றிருக்கின்றீரென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (கருக)

மூலமும் உரையும்

கடுக்

## கருஉ. ..............................

நெய்தல்:

இது, காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி சொல்லியது.

எ - து, இற்செறிக்கப்பட்ட தலைமகள் காவன் மிகுதியாலே தலைவனை அடையமுடியாமையைக் கருதிய தோழி, தலைவி கூறியதுபோலக் கூறுவாளாய்த் தலைவியை நோக்கி ஊருந்துயிலாநின்றது; யாருமில்லை; இக் காலத்து அவரை அடையப்பெறாதபடி இற்செறிப்புற்று அயலிலுங் காவலுடையதாகியதன்றி ஊர்காவலர்மணியும் ஒலியாநிற்குமாதலின், யான் பொன்றுநாள் இன்றுதானேவென அழுங்கிக் கூறாநிற்பது.

பேரூர் துஞ்சும் யாரும் இல்லைத்

திருந்துவாய்ச் சுறவம் நீர்கான்று ஒய்யெனப்
பெருங்தெரு உதிர்தரு பெயலுறு தண்வளி
போரமை கதவப் புரைதோறும் தூவக்
கூரெயிற்று எகினம் நடுங்கும் நன்னகர்ப்
பயில்படை நிவந்த பல்பூஞ் சேக்கை
அயலும் மாண்சிறை யதுவே

அதன்றலைக்

காப்புடை வாயில் போற்றோ என்னும்
யாமங் கோள்பவர் நெடுநா ஒண்மணி

ஒன்றெறி பாணியின் இரட்டும்
இன்றுகோல் அளியேன் போன்றும் நாளே.

உரை :—பெரிய இவ்வூரின்க ணுள்ளார் யாருந் துயிலாநிற்பர்; விழித் தியங்குபவர் ஒருவருமில்லை; இக்காலத்து நாம் அவரை யடையப் பெறாத படி, திருந்திய வாயையுடைய சுறாமீன் நீரைக் கக்குதலாய் அந்நீர் விரைவிலே பெரிய தெருவின்கண் உதிர்கின்ற மழையாக அம்மழை யோடு பொருந்திய தண்ணியகாற்று தம்மின் ஒன்றோடொன்று பொருந் துதலமைந்த வாயிற்கதவிலுள்ள துளைகள்தோறும் அந்நீரைக் கொணர்ந்து தூவாநிற்ப அத்தூவலாலே கூரிய பற்களையுடைய நாய்கள் நடுங்குகின்ற இவ் இராப்பொழுதில் நல்ல மாளிகையின்கண்ணே துயிலுமாறு உயர்ந்த பலவாய மலர்களாலமைந்த படுக்கையின் பக்கத்திலும் மாட்சிமைப்பட்ட சிறைப்படுத்திய காவலையுடையதாயிராநின்றது; அதன் மேலும் 'காவலை யுடைய தலைக்கடை புழைக்கடைவாயில்களைப் பாதுகாத்துக்கொள்ளுங் கோள், ஓ' என்று கூறுகின்ற யாமந்தோறும் காவல்செய்தலை மேற் கொள்ளுங் காவலரின் நெடிய நாவமைந்த ஒள்ளியமணி ஒன்றுகின்ற தாளத்தில் மோதியெழுப்பும் ஒலிபோல ஒலியாநிற்கும்; ஆதலின் யாவராலு மிரங்கத்தகுந்த யான் இறந்தொழியு நாள் இன்றுதானோ? எ-று.

காலுதல் - கக்குதல். எகினம் - நாய். நகர் - வீடு. பாணி - தாளம்.

புரைதொறுந் தூவுகின்ற நீர்த்துளி தன் சேக்கையில் வீசுவது கண்டு அதனால் நடுங்குவதனை முதலிலே கூறினாள். அதனினின்றுய்யு மாறு முயங்கவருங் காதலனைத் தடுக்குமேயென்பாள், நாய் நடுங்கி விழித் திருப்பதனைக் குறிப்பித்தாள். அவன் வரினும் தான் புறம்போகாவாறு



தன்னைக் காக்கும் உட்காவலி னிலைமை கூறுவாள், அயலும் சிறை யதுவே யென்றாள். உட்காவலுறங்கும்வழிப் புறஞ்செல்ல நினைப்பினும் அதற்கியலாதவாறு மணியிரட்டி ஊரெழுப்புவதனைக் கூறினாள். வேறு தோன்றாமையின் இனித் தானிறந்துபடுநாள் இதுவேயாமென்றிரங்கிக் கூறினாள். இது - துன்பத்துப் புலம்பல். மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றாதுரைத்தல். (கஙஉ)

## கஙங. நற்றமனார்

## குறிஞ்சி :

இது, வரைவிடைவைத்துப் பிரிவாற்றாளாய தலைவி வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

*எ - து, தலைமகன் மணம்புரியவேண்டிப் பொருளீட்டுதற்குப் பிரிந்து சென்று நீட்டித்தலும் அதனையாற்றாது தலைவி வருந்துவதுகண்ட தோழி அவர் விரையவருவராதலின் நீ வருந்தாதே யென்றாளை நோக்கி நீ கூறுகின்ற மொழியினால், என்னெஞ்சின்கணெழுந்த காமத்தீயானது சிறிது தணிவதுண்டுபோலுமென வருந்திக் கூறாநிற்பது.*

தோளே தொடிகொட்டு ஆனா கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே
நுதலும் பசலை பாயின்று* திதலைச்
சில்பொறி அணிந்த பல்காழ் அல்குல்
மணியேர் ஐம்பால் மாயோட் கென்று
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற
நாமுறு துயரஞ் செய்யலர் என்னும்
காமுறு தோழி காதலம் கிளவி
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
தோய்மடற் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாஞ் சிறிதே.

உரை:—என்பால் விருப்பமிக்க தோழீ! 'தித்தியின் சிலவாய புள்ளிகளமைந்த பலவாய வடங்களையுடைய காஞ்சியணிந்த அல்குலையும் நீலமணி போன்ற கூந்தலையுமுடைய இம் மாமைநிறமுடையாட்குத் தோள்கள் தாம் அணியப்பெற்ற வளை சுழன்று கழலுதலை நீங்கிற்றில; கண்களும் வாளாற் பிளந்த மாவடுப்போன்ற வடிவையிழந்தன; நெற்றியும் பசலை பரவியது' என்று கொடிய வாயையுடைய ஏதிலாட்டியர் பழிச்சொல்லெடுத்துத் தூற்றுநிற்கும்படி நம் காதலர் அச்சமிகுகின்ற துன்பத்தை நமக்குச் செய்குபவரல்லராதலால் அவர் விரைய வருகுவரென்று நீ என்னைத் தேற்றிக்கூறுகின்ற என்பால் அன்புமிக்க இச் சொல்லானது, இரும்புவேலை செய்கின்ற கொல்லன் தான் வெய்ய உலையிலே தெளித்த பனைமடலாலே தோய்த்தலையுடைய சிலவாயநீர் அவ் வுலைநெருப்பைச் சிறிது அவிக்குமாறு போலக் காமநோய் மிக்க எனது நெஞ்சில் அந்நோயைச் சிறிது தணித்து எனக்குப் பாதுகாவலா யிராநின்றதுகாண்; எ – று.

(பாடம்) * பசலையாகின்று.

## மூலமும் உரையும்

கருரு

கொட்பு - சுழற்சி. வடி - மாவடுவுக்கொருபெயர். காழ் - இருநான்கு கொத்துக்கொண்ட காஞ்சியென்னும் அணியுமாம். நாம் - அச்சம். மடல் - பனைமட்டைக்காம்பு. ஏமம் - காவல். பசலை பாயின்று என்றது, பசலை பாய்தல். தோள் தொடி கொட்பானுவென்றது, உடம்பு நனிசுருங்கல். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கருரு)

## கருச. ..................

குறிஞ்சி :

இஃது, இற்செறிப்பாரென ஆற்றாளாய அஃதிலரென்பதுபடத் தோழி சொல்லியது.

தலைவியை,

எ - து, பகற்குறியின்கண்ணே தலைவன் பிரிந்து நீட்டித்தலால் அது பொறாது வேறுபட்ட தலைவி நமது வேறுபாட்டையறிந்து இல்வயிற் செறிப்பார்போலுமென் றஞ்சியவிடத்து அதனையறிந்த தோழி, அன்னை தினைப்புனங்காவலுக் கேகென என்னை ஏவினாள்; நுந்தையும் ஏவினமை யானே யான் உடன்படேன்போல வுரையாடி வந்தேன்; ஆதலின், மீண்டு தினைப்புனங்காவலுக்கு நாம் போதலுமமையும்; தலைவனைக் கூடுதலுமாகு மென்று அவளாற்றும்படி கூறாநிற்பது.

இனிதின் இனிது தலைப்படுதும் என்பது

இதுகோல் வாழி தோழி காதலர்
வருகுறி செய்த வரையகச் சிறுதினைச்
செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி
அவ்வாய்த் தட்டையோடு அவணை
யாகென
ஏயள்மன் யாயும் நுந்தை வாழியர்
அம்மா மேனி நிரைதொடிக் குறுமகள்
செல்லா யோநின் முள்ளெயிறு உண்கென
மெல்லிய இனிய கூறலின் இனியானஃது
ஒல்லேன் போல உரையா வேலே.

உரை:—தோழீ! வாழ்வாயாக; நம் காதலர் வருதற்குக் குறிசெய்த மலையிடத்துள்ள சிறிய தினைப்புனத்தே விழுகின்ற சிவந்த வாயையுடைய பசுங்கிளியின் கூட்டங்களை ஓட்டும்பொருட்டு என்னைநோக்கிக் 'கொடிச்சீ! நீ அழகமைந்த கிளிகடி கருவியாகிய தட்டையைக் கைக்கொண்டு அத் தினைப்புனத்துக்குச் செல்வாயாக' என்று அன்னையும் பலமுறை மிகுதி யாக ஏவினள்; அன்றியும் நுந்தை என்னைக்கூவி அழகிய மாந்தளிர் போன்ற மேனியையும் நிரைத்த வளையையுமுடைய இளமடந்தாய், நீ புனத்தின்கண்ணே சென்றிலையோ விரைவிலேசென்று காண்; நின் மூள் ளெயிற்றை முத்தங்கொள்வல் என்று மெல்லியவாகிய இனிய வார்த்தை கூறுதலினால் யான் இன்னும் பலகால் நம்மைவேண்டி அவர்களே புனத் தின்கண்ணே கொண்டுசென்று காவலின் உய்க்குமாறுகருதி அங்ஙனம் காவலுக்குச் செல்லமாட்டேன்போலச் சில வார்த்தையாடுவே னாயினேன்; ஆதலின், இனித் தினைக்கொல்லையிலேசென்று காதலனைக் கூடியிருப்பா மென்பதற்கு அறிகுறி இதுதானோ? இங்ஙனம் நிகழ்ந்த இஃது இனிய வொரு பொருளினுங் காட்டி னியதா யிராநின்றது; எ - று.



தலைப்படுதல் - சென்று அடைதல். வாழியர் - அசை. பாசு - கிளி; பண்பாகுபெயர். தட்டை-மூங்கிற் பிளாச்சைச் சிறிது பிளந்து அப்பிளப் பிலே சிறு கல்லைவைத்துச் சுழற்றிவீசுங் கருவி; ஒலிபடப் புடைக்குங் கருவியுமாம். புனத்திலேசென்று அடைதுமெனவே அங்குக் காதலரைக் கூடுதல் திண்ணமென்பதாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (கஙச)

## கஙரு. கதப்பிள்ளையார்

நெய்தல்: இது, வரைவுநீட்டிப்ப அலராமெனக் சிறைப்புறமாகச் சொல்லியது.

கவன்ற தோழி,

எ - து, தலைவன் வரையாது நீட்டித்தலானே ஊரார் பழிதூற்றுவர் என்பதறிந்த தோழி சிறைப்புறத்தானாகிய அவன் கேட்டு வரையுமாற்றானே தலைவர் நம்மொடு நகைப்ப அவரது நகையை மெய்யெனக்கொண்டு கூடி இப்பொழுது அவர் அருகிலின்மையாலே சீறூர் வருத்தமுடைய தாய்த் தோன்றாநின்றது, அங்ஙனம் அவர் நகுவதன்முன் சீறூரினியதாயிருந்ததென வருந்திக் கூறாநிற்பது.

தூங்கல் ஓலை ஓங்குமடற் பெண்ணை
மாவரை புதைத்த மணன்மலி முன்றில்
வரையாத் தாரம் வருவிருந்து அயருந்
தண்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர்
இனிதுமன்று அம்ம தானே பனிபடு
பல்சுரம் உழந்த நல்கூர் பரிய
முழங்குதிரைப் புதுமணல் அழுந்தக்
கோட்கும்
வாலுளைப் பொலிந்த புரவித்
தேரோர் நம்மோடு நகாஅ ஊங்கே.

உரை :—குளிர்ச்சி பொருந்திய பலவாய கடத்தற்கரிய நிலத்து வருந்திவருதலானுண்டாகிய குறைந்த செலவினையுடையவாய்,—ஒலிக்கின்ற அலைமோதிக் கொழிப்பக்கிடந்த புதிய மணலிலே தேருருள் அழுந்துதலானே செல்லமாட்டாது சுழலாநிற்கும் வெளிய பிடரிமயிர் பொலிவுபெற்ற புரவிபூட்டிய தேரினையுடைய தலைவரொடு மகிழ்ந்து ஊடாடாதமுன் உவ்விடத்தே,—தொங்குகின்ற ஓலையையும் நீண்ட மடலையுமுடைய பனையினது கரிய அடிமரம் புதைபடுமாறு மூடப்பட்ட மணல் மிக்க முற்றத்தின்கணிருந்து அளவுபடாத உணவுப்பொருளை வருகின்ற விருந்தினர்க்குப் பகுத்துக்கொடாநிற்கும் மெல்லிய குடிவாழ்க்கையுடையா ரிருக்கின்ற அழகிய குடியிருப்பையுடைய சீறூர் மிக இனிமையாயிருந்தது; அவரொடுமகிழ்ந்து ஊடாடியபின் அவர் நமது அருகிலின்மையாலே சீறூர் வருத்தமுடையதாய்த் தோன்றாநின்றது; எ-று.

தாரம் - உணவுப்பொருள். சுரம் - கடத்தற்கரிய நிலம். பரி-செலவு. கொட்குதல் - சுழலுதல். உளை - பிடரிமயிர். ஊங்கேயுள்ள சீறூரெனக் கூட்டுக. நகை - மகிழ்ந்து உடன்படுதல்.

## மூலமும் உரையும்

கஙஙு

ஊரார் அலரெடுத்தலால் இனிமை கழிந்ததென்றாள். தன்னூராரைப் போல நீயிரும் மணஞ்செய்துகொண்டு இல்லறநிகழ்த்தற்பாலிரென்னுங் குறிப்பால் தன்னூர் வருவிருந்தயருங் குடியென்றாள். **மெய்ப்பாடு**-அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - வரைவுடன்படுத்தல். (கஙுஙு)

### கஙுசு.

## நற்றங்கொற்றனார்

**குறிஞ்சி:** இது, சிறைப்புறமாகத் தலைவி,

தோழிக்குரைத்தது.

எ - து, களவொழுக்கம் மேற்கொண்ட தலைமகன் பிரிவுக்காலத்துத் தலைமகள் தான் வேறுபடுவதைச் சிறைப்புறத்தானாகிய அவனறிந்து இனிப்பிரியாது வரைந்துறையுமாற்றானே தோழியை நோக்கி, யான் தோள்வளை வேண்டிக் கேட்டலும் என் காதலன் பிரிவால் என்னுடம்பு தனிசுருங்கினுங் கழலாவாறு எந்தைசிறிய வளை செய்தணிந்து விடுத்தனன் ஆதலின் அவன் வாழ்கவென வருந்திக் கூறுநிற்பது.

திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும்
அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல

என்ஐ வாழிய பலவே பன்னிய
ரு. மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரிவு உண்மை அறிவான் போல
நீப்பநீங் காது வரின்வரை அமைந்து
தோட்பழி மறைக்கும் உதவிப்
போக்கில் பொலந்தொடி செறீஇ

யோனே.

உரை :—திருந்திய கோற்றொழில் அமைந்த ஒளி பொருந்திய தோள் வளையை விரும்பி அது பெறாமையாலே யான் அழுதலும், என் தந்தை தீர்த்தற்கரிய நோயையடைந்தவர்க்கு அவர் விரும்பியதைக் கொடாது ஆராய்ந்து, அந்நோய்க்குத் தக்க மருந்து கொடுத்த அறவாளன்போல, யாவராலும் புகழப்படுகின்ற மலையையுடைய நாட்டையுடைய நம் காதலனும் நாமும் ஒருவரையொருவர் இடையிடை விட்டுப்பிரிகின்றத னுண்மை சிறிதளவு தானும் அறிந்தவன்போல யான் வேண்டா மென்று கழற்றினும் கழன்று நீங்காது ஒருபொழுது கழன்றாலும் தன்னெல்லைகடவாமே தங்கி எனக்குண்டாகிய தோளின் பழியை மறைக்கின்ற உதவியையுடைய கெடாத பொன்னாலாகிய தோள்வளை செய்து தந்து செறிக்கச்செய்தனன்; ஆதலின், அவன் நெடுநாள்காறும் வாழ்வானாக; எ – று.

ஐ – தலைவன். என் ஐ – என்தந்தை. தலைப்பிரிவு – விட்டுப்பிரிவு. அறவோன் – மருத்துவன்; சிறிய தலைப்பிரிவென்பதை நேராக்கொண்டு சிலகாலம் விட்டுப்பிரிந்ததை என்றலுமாம்.

பிரிதலாலே தோள்மெலிந்தும், வளைமறைத்தலால் அலர்தூற்றும் நொதுமலாட்டியர்க்குப் புலனாயிற்றில்லையென்றதாம். இஃது உடம்பு நனிசுருங்கல். மெய்ப்பாடு – அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் – வரைவுடன்படுத்தல். (கஙசு)



## கஙஎ. பெருங்கண்ணனார்

பாலை : இது, தலைவன் செலவழுங்கியது.

*எ - து, வினைவயிற்செல்லுந் தலைமகன் தன் நெஞ்சை நோக்கிச் சுரத்திற்செல்லக் கருதிய நீ நம் காதலியைக் கைவிடக் கருதினை போலும் ; அங்ஙனமாயின் இவளினுங்காட்டில் அரியதொன்றனையடைந் தனைமன்னென வருந்தி இகழ்ந்து கூறுகிற்பது.*

தண்ணிய கமழுந் தாழிருங் கூந்தல்
தடமென் பணைத்தோள் மடநல்
லோள்வயின்
பிரியச் சூழ்ந்தனை ஆயின் அரியதொன்று
எய்தினை வாழிய நெஞ்சே செவ்வரை
அருவி ஆன்ற நீரில் நீளிடைக்
கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைத்த முடத்தாள்
ஓமை
அருஞ்சுரஞ் செல்வோர்க்கு அல்குநிழல்
ஆகும்
குன்ற வைப்பின் கானம்
சென்றுசேண் அகறல் வல்லிய நீயே.

**உரை** :—நெஞ்சே! செவ்விய மலையருவியின்கண்ணே அமைந்த நீரில்லாத நீண்ட நெறியிடத்தில், மெல்லிய தலையையுடைய இளைய பிடியானையின் வருந்திய பசியைப் போக்குமாறு பெரிய களிற்றியானை முறித்துத்தள்ளிய வளைந்த அடியையுடைய ஓமைமரம் செல்லுதற்கரிய சுரத்தின்கண்ணே செல்லுபவருக்குத் தங்குநிழல் ஆகாநிற்கும் குன்றங்களை இடையிடையே கொண்ட கானத்துட்புகுந்து நெடுந்தூரம் அகன்று போதலைக் கருதியநீ மெல்லியவாய்க் கமழ்கின்ற பிடரியிலே தாழ்ந்த கரிய கூந்தலையும், அகன்ற மென்மையாகிய பருத்த தோளையும், மடப்பத்தையுமுடைய நல்ல நம் காதலியைக் கைவிட்டுப் பிரிதற்கு எண்ணுகின்றனை; அதனை ஆராயுமிடத்து இதுகாறும் அடைதற்கரியதும் இவளினுங்காட்டிற் சிறந்ததுமாகிய வொருபொருளை அடைந்து விட்டனமன்; நீ அங்ஙனம் அடைந்த பொருளோடு நீடுவாழ்வாயாக; யான் இவளொழிய வாரலேன் காண்; எ - று.

தண்மை - மென்மை. ஆன்ற - அமைந்த. அல்குதல் - தங்குதல். வாழிய - இகழ்ச்சிக்குறிப்பு. யான் இவளொழிய வாரேன் என்றது சொல்லெச்சம். சொல் எச்சமாவது ஒரு சொல் எஞ்சி நிற்பது.

இவளின் தண்ணியகமழூர் தாழிருங்கூந்தலை வெறுக்கின்றதன் பயன் அருவிநீரில்லாத நீளிடைச் சேறலாகியதென்றான். மென்பணைத் தோளை வெறுத்ததன் பயன் இருக்கவும் இடனின்றி ஓமையினிழலிலே குன்றவைப்பின் கானத்தின்கண்ணே சென்றுதங்கி அழியலாயினை என்றான். இது மேலோர்க்கு ஒரு நீதிமைப்பின் அதனை மூன்று நாளினுள்ளே துய்ப்பரென்னும் வழக்கு. நீ சென்று ஆங்கு வைகுமிடனும் பிடியின்பசியைப் போக்குமாறு களிறுவீழ்த்திய ஓமைநிழல்கண்டாய்;



அந்நிழலே நின் காதலியை நீ கைவிட்டமை கொடிதெனவும், களிறு பிடிபசியைப் போக்கியதுபோல நீ அவளது காமவின்பத்தைத் தணிக்கற்பாலையென அறிவுறுத்துமெனவும் உவமைமுகத்தாற் குறிப்பித்தானுமாம்.

உள்ளுறை :—பிடியானையினிமித்தம் களிறு முறித்துச்சாய்த்த ஓமை மரம் சுரஞ்செல்வோர் தங்குதற்குரிய நிழலாகுமென்றது பொருளின் நிமித்தமாக உன்னாலே பிரித்து நீக்கப்பட்ட தலைவி பசலை பாய்ந்து நலனை உண்டு தங்காநிற்ப அவ் ஓமை வாடுவதுபோல வாடாநிற்கும் என்றதாம். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய எள்ளல்பற்றிய இளிவரல். பயன் - இல்லத்தழுங்கல். (கஙஎ)

## கஙஅ. அம்மூவனார்

நெய்தல் :

இஃது, அலராயிற்றெனை ஆற்றாளாய தலைமகட்குத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

எ - து, தலைமகன் பிரிந்தமையால் வேறுபட்டுக் காட்டியதலைவியின் மெய்யை நோக்கி ஊரார் அலர்தூற்றுதலும் அதனை ஆற்றாளாயினாளைத் தோழி சிறைப்புறமாகக் கேட்டுநின்ற தலைவனுக்கு அறிவுறுத்து மாற்றானே முன்பு தலைவன் நினக்கு மாலைசூட்ட அதனைக் கண்ணாலே கண்டதல்லது இவ்வூரறிந்தது பிறிதொன்றன்று; அதற்கு நீ ஆற்றுதவாறு என்னையெனக் கவன்று கூறுநிற்பது.

உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலையுய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்
கணங்கோள் உமணர் உயங்குவயின்
ஒழித்த
ரு.

பண்ணழி பழம்பார் வெண்குருகு ஈனும்
தண்ணந் துறைவன் முன்னாள் நம்மோடு
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்
கண்ணறிவு உடைமை அல்லது நுண்வினை
இழையணி அல்குல் விழவாடு மகளிர்
முழங்குதிரை இன்சீர் தூங்கும்
அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே.

**உரை** :—உவர்நிலத்து விளைகின்ற குன்றுபோலும் உப்பின் குவியலை மலைநாட்டகத்தே கொண்டுபோய் விலைகூறி விற்கின்ற ஓரிடத்திலும் நிலைத்தலில்லாத வாழ்வினையுடைய கூட்டங்கொண்ட உப்புவாணிகர் தங்கள் பண்டி முறிந்தவிடத்திலே போகட்டொழிந்த இயல்பழிந்த பழைய பாரின்கண் வெளியநாரை தன்சினையை ஈனாநிற்கும் தண்ணிய கடலினது துறையையுடைய தலைமகன், முன்னைநாளிலே பசிய இலையிடைநின்றும் வெளியில்வந்த திரண்ட தண்டினையுடைய நெய்தன்மலருடன் நெறிக்கின்ற இலையை இடையிடையிட்டுத் தொடுத்த மாலையை நினக்குச்சூட்ட அதனைக் கண்ணால் அறியக்கிடந்த தொன்றன்றி,—நுண்ணிய கம்மத்தொழிலான் ஆக்கிய கலனையணிந்த அல்குலையுடைய விழாக்களத்துத்



துணங்கையாடும் மகளிரினுடைய இனிய தாள அறுதி முழங்குங் கடலோசைபோலே பரவாநிற்கும் ஒலியையுடைய இவ்வூர் பிறிதொன்றனையும் அறிந்ததில்லை; அங்ஙனமாக நீ ஆற்றாது வருந்துகின்றதென்னையோ? எ - று.

உமணர் - உப்புவாணிகர். கலித்தல் - மூளைத்துத் தோன்றுதல். தொடலை - மாலை. சீர் - தாளவறுதி. போல்குப்பை - வினைத்தொகை. தண்ணந் துறைவன் - விரிக்கும்வழி விரித்தல். தைஇ என்னுஞ் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரிக்க. பார் - வண்டிப்பார்.

ஊர் கண்ணுலேநோக்கிய தென்றதனுல், ஊரார் பார்த்தவளவே அலர் கூறுவாராயினரென அலரறிவுறுத்தினள். அழுங்கன்மூதூர் என்றது, அவரெடுக்கும் பழிச்சொல்லாகிய ஒலியையுடைய மூதூரென்றதாம். பிறிதொன்றனையும் அறிந்ததில்லையென்றது, இயற்கைப்புணர்ச்சி முதலாகிய நால்வகைப் புணர்ச்சியையும் இடையீடுகளையு மறிந்திலதென்றதாம். இதுகாறும் அவன் மணம்புரிந்துகொண்டன னில்லையே யென்பாள் 'அறிந்தன்றோ இன்றே' என, ஊர்மேல்வைத்துக் கூறினளாயிற்று.

உள்ளுறை :—உமணர் ஒழித்துப்போகட்ட பழம்பாரில் வெண்குருகு ஈனுமென்றது, தலைவனுலே கைவிடப்பட்ட தலைவிமேல் ஊரார் அலர் தூற்றாநிற்ப ரென்றதாம்.

இறைச்சி :—தாளஅறுதி கடலோசைபோலப் பரவுமென்றது, பழிச்சொல் கடலோசைபோ லெழுந்ததென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுடன் படுத்தல்; தலைவியை ஆற்றுவித்தலுமாம். (கஙஅ)

## கஙகூ. பெருங்கௌசிகனார்

முல்லை :

### இது, தலைவன் வினைமுற்றிவந்து பள்ளியிடத்தானுகப் பெய்த மழையை வாழ்த்தியது.

எ - து, செய்தவினை முடித்து மீண்டுவந்து தலைவியுடனிருந்த தலைவன் கார்ப்பருவத்திலே பெய்தமழையை நோக்கி மேகமே, உதவியை உடையாய், நீ உலகத்துக்கு ஆதாரமாக யாவருந் தொழுமாறு கொடுமுடிகளிலே பொருந்தி உலாவுவாயாக வென வாழ்த்தாநிற்பது.

உலகிற்கு ஆணி யாகப் பலர்தொழப்
பலவயின் நிலைஇய குன்றிற் கோடுதோறு
ஏயினை உரைஇயரோ பெருங்கலி எழிலி
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு

எழீஇ அன்ன உறையினை முழவின்
மண்ணார் கண்ணின் இம்மென இமிரும்
வணர்ந்தொலி கூந்தல் மாஅ யோளொடு
புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்லூர்
விரவுமலர் உதிர வீசி
இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே.

உரை :—பெரிய ஓசையையுடைய மேகமே! மத்தளத்தின் மார்ச்சனை வைத்த கண்போல இம்மென முழங்குகின்ற இடிகளுடனே கடை குழன்று தாழ்ந்த கூந்தலையுடைய மாமைநிறத்தையுடைய காதலியுடனே முயங்கி அவளது நலனை இனிதாக நுகர்ந்து யானுறைகின்ற சாரலி லுள்ள நல்ல ஊரின்கண்ணே, கலந்த மலர்களுதிரும்படி மோதி இரவில் மழைபொழிந்த வுதவியையுடையாய், நீ நிலைபெறுதலையுடைய நல்ல யாழின் முறுக்கிய நரம்பினின்று 'படுமலை' என்னும் பண்ணினை எழுப் பினாற் போன்ற ஒலியொடுபெய்யு மழையினையுடையையாகி இவ்வுலகத் துக்கோர்ஆதாரமாக யாவருந் தொழுமாறு ஆங்காங்குள்ள நிலைகின்ற பலவாகிய குன்றின் கொடுமுடிகள்தோறும் பொருந்தி உலாவுவாயாக; எ - று.

வணர்தல் - நுனி சுருண்டிருத்தல். உரைஇயர் - வியங்கோள்; உலா வுக என்னும் பொருளது. படுமலைப்பாலை - பெரும்பாலை எழனுள் ஒரு பண்; அது செம்பாலையுட்பட்ட குரலிற் பாகத்தையும், இளியிற் பாகத்தை யும் வாங்கிக் 'கைக்கிளை, உழை, விளரி, தாரம்' இவைகளுக்கு ஒரோ வொன்றைக்கொண்டு சேர்க்கத் துத்தங் குரலாய்ப் படுமலைப்பாலையாகும்; இக்காலத்து அருகிய வழக்காதலின் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

மழையாலே குளிர்ப்புள் ளூறுதலானே அணைத்துக்கிடந்தனன் ஆதலின், மழைபொழிந்த வுதவியோ யென்றான்; உதவிபெற்றோர் வாழ்த்து தல் இயல்பு. உயர்ந்த தவிசினிருந்தாலே பலருங்காண இயையுமாதலின் யாவரும் யாண்டையும் நின்னை நோக்கித் தொழுமாறு குன்றின் கண்ணுள்ள கோடுதோறும் உலாவுதி யென்றான். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - தலைவியி னின்பந்துய்த்து மகிழ்ந்திருத்தல். (கநகூ)

## கசுo. பூதங்கண்ணனார்

**குறிஞ்சி:** இது, குறைமறுக்கப்பட்டதலைவன் நெருங்கியது.

தன் நெஞ்சினை

எ - து, பாங்கியிற் கூட்டத்தின்கண்ணே தோழிபால் தன்குறை கூறலும், அவள் மறுத்தனளாக, அதுபொறாத தலைமகன் மீண்டும் அவள் கேட்டுத் தன்குறைமுடிக்குமாற்றானே தன் நெஞ்சைநோக்கி நெஞ்சமே பந்துவிளையாடியேகுமவள் நமக்கு அருள் செய்யினும் அருளாது விடினும் நீ முனியாதேகொள்; யானுற்ற நோய்க்கு அவளன்றிப் பிறிதொரு மருந்து இல்லையென வருந்திக் கூறுநிற்பது.

கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத்து உதிர்த்த துகள்படு கூழைப்

ரு.

பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவுமணன் முற்றத்துப்

பந்தொடு பெயரும் பரிவி லாட்டி



அருளினும் அருளாள் ஆயினும்

பெரிதழிந்து கO.

பின்னிலை முனியல்*மா நெஞ்சே என்னதூஉம்
அருந்துயர் அவலந் தீர்க்கும்
மருந்துபிறிது இல்லையான் உற்ற
நோய்க்கே.

உரை:—எனது பெருமையுற்ற நெஞ்சமே! நீரை முகந்துகொள் ளுதலையுடைய கரியமேகம் மேல்பாலுள்ள மலையிலே யெழுந்து மழை பெய்து தழையச்செய்தசிறியகிளைகளிலே பூங்கொத்துக்களையுடைய பெரிய குளிர்ச்சிபொருந்திய சந்தனமரத்தின் குறையோடு பலவாய பொருள்களை யுஞ் சேர்த்து அமைக்கப்பெற்ற சாந்தம்பூசிய கூந்தலை அழகுபெறவாரி அச்சாந்தம் காய்ந்தவழி உதிர்க்கப்பட்ட துகள்பொருந்திய ஐவகையாக வகுக்கப்பட்ட கூந்தலையும் பெரிய கண்ணையுமுடைய தோழியர் மகிழு மாறு தன் தந்தையின் நெடியதேரியங்குகின்ற நிலவுபோன்ற வெளிய மணல் பரவிய முன்றிலின்கண் விளையாடும் வண்ணம் பந்தோடு செல்லு கின்ற நம்பால் அன்பில்லாத இளமகள் நம்மை அருள்செய்தாலும், அங்ஙனம் அருள்செய்யாளாய் அகன்றுபோனாலும், நீ பெரிதும் மனமழிந்து இரந்து வழிபட்டுநிற்றலை வெறாதே கொள்; யான் அடைந்துடைய காம நோயொடு கலந்த துன்பமாகிய அவலத்தை ஒழிக்குமருந்தாவாள் அந்த அன்பில்லாத இளமகளொருத்தியேயன்றி வேறொன்று சிறிதளவேனும் மருந்தாகுந் தன்மையதில்லைகாண்; எ - று.

கொண்டல் - கொள்ளுதல் என்னும் பொருளது. ஏர்பு - எழுச்சி. குழைத்தல் - தழையச்செய்தல். ஐம்பால் - கூந்தல். என்னதூஉம் - எவ்வளவும். பின்னிலை - வழிபாட்டு நிலை.

பலபடியாகவும் தான் தோழியை இரந்து குறைகூறுவதை அறிந் திருந்தும் அறியாள்போன்று பந்தொடுசெல்லுதலானே பரிவிலாட்டி என்றான.

தோழியர்மகிழ இடையே செல்லுதலாலே பரிவிலள்போல் ஆயினளன்றி வேறில்லையாதலின் இனி அருளுதலையுஞ் செய்யுமென்பது கொண்டு பின்னிலை முனியாதே என்றான். அவளால் வந்த நோயாதலின் அந்த நோயின்மருந்து அவளே என்றான். 'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து" (குறள் - கக0உ) என்றதனானும் அறிக. மெய்ப்பாடு - பிறன்கண்தோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - தானே புலம்பி ஆறுதல். (கசo)

## கசக. சல்லியங்குமரனார்.

**பாலை:** இது, பொருள்கடைக்கூட்டிய
சொல்விச் செலவழுங்கியது.

நெஞ்சிற்குத் தலைவன்

எ - து, பொருள்தேடும்படி ஒருப்படுத்திய நெஞ்சினைத் தலைமகன் நோக்கி நினக்கு அருஞ்சுரம் மிக எளியவாயிருக்கும்; யான் இவளுடைய கூந்தலிலே துயிலுவதை யொழிய விடுகலேன்; ஆதலின் வேண்டுமாயின் நீயே சென்றுகாணென்று அழுங்கிக் கூறுகிறது.

---

(பாடம்) * முன்னிலை முனியல்.

மூலமும் உரையும்

கசுக

இருஞ்சேம் முடிய கோடுங்கவுள் கயவாய்
மாரி யானையின் மருங்குல் தீண்டிப்
பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை
நீடிய சடையோடு ஆடா மேனிக்
குன்றுறை தவசியர் போலப் பலவுடன்
என்றூழ் நீளிடைப் பொற்பத் தோன்றும்
அருஞ்சுரம் எளியமன் நினக்கே பருந்துபடப்
பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
ஏந்துகோட்டு யானை இசைவெம் கிள்ளி
வம்பணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த
அரிசிலந் தெள்ளறல் அன்ன இவள்
விரியோலி கூந்தல் விட்டமை கலனே.

உரை :—நெஞ்சமே! பெரிய செவ்விய மத்தகத்தையுடைய வளைந்த கவுளையும், அகன்ற வாயையுமுடைய கரியமேகம்போன்ற யானையின் விலா உரிஞ்சுதலானே பொரிந்துள்ள அடிபரந்த உள்ளே துளை பொருந்திய காய்களையுடைய கொன்றை மரங்கள், குன்றின்கண்ணே யுறைகின்ற நீண்ட சடையையும் அசையாத மெய்யையுமுடைய தவஞ்செய்பவர்போலே பலவும் வெயில் நிலைபெற்ற இடங்களில் அழகுபெறத் தோன்றாநிற்கும் செல்லுதற்கரியசுரம், நினக்கு மிக எளியவாகும்; ஆதலின் நீயே சென்று காண்; கொல்லும் பிணங்களிலே பருந்து விழுந்து அலைக்குமாறு பகைவருடைய தேர்ப்படையோடு போர்செய்து வென்ற பலவாய சருச்சரையுடைய நீண்ட கையையும், தலையேந்திய கோட்டினையுமுடைய யானைப் படையையுடைய புகழ்விரும்பிய கிள்ளிவளவனது புதுவதாக அலங்கரித்த உயர்ந்த கொடிகட்டிய அம்பர் நகரைச்சூழ்ந்த அரிசிலாற்றின் தெளிந்த கருமணல்போன்ற இவளுடைய விரிந்த தழைந்த கூந்தலின்கண்ணே துயிலுவதனைக் கைவிட்டுச் சிறிது பொழுதேனும் அமைகுவேன் அல்லேன்; எ - று.

பாண்டில் - குதிரைபூட்டியதேர். வம்பு - கொடியை வரிந்துகட்டுங் கச்சுமாம். ஞெமிர்தல் - பரத்தல். ஆடாமேனி - அசையாது தியான நிலையிருக்குமுடம்பு. தீண்டி - தீண்டவெனத்திரிக்க. கொடுங்கவுள்கயவாய் இருஞ்செம்முடியவென மாறிக்கூட்டினு மமையும். பிணர் - சருச்சரை. ஆடவர் நெஞ்சைநோக்கிக் கூறுமிடமெல்லாம் அந் நெஞ்சினை ஆண்பாலாகக்கொண்டு கூறப்பெறுபவென்பது மரபாதலின் ஈண்டு நெஞ்சினை ஆண்பாலாகக் கூறிக்கொள்க. இது மறுத்துரைப்பதுபோல நெஞ்சொடு புணர்த்துக் கூறியது. மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இல்லத்தழுங்கல். (கசக)

## கசஉ. இடைக்காடனார்

**முல்லை :** இது, வினைமுற்றிமீளுந் தலைமகன் சொல்லியது.

தேர்ப்பாகற்குச்

எ - து, சென்று வினைமுடித்து மீளுந் தலைமகன், உடனே தலைவியைக் காணுமாசையாலே தேரை விரைவிலே செலுத்தவேண்டுமென்னுங் குறிப்புடனே தேர்ப்பாகன் கேட்குமாறு கற்பினையுடைய நம் காதலி உறையுமூர் ஈண்டுள்ள காட்டகத்ததா யிராநின்றதென உவந்து கூறாநிற்பது.

வானிகுப்பு சொரிந்த வயங்குபெயல் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல்லுறி
ஞெலிகோல் கலப்பை அதளோடு சுருக்கிப்
பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்
நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்பத்
தண்டுகோல் வைத்த ஒடுங்குநிலை மடிவிளி
சிறுதலைத் தொழுதி ஏமார்த்து அல்கும்
புறவி னதுவே பொய்யா யாணர்
அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே.

உரை:—இராப்பொழுதாயிருப்பினும் வந்த விருந்தைக்கண்டு மகிழா நிற்கும், யான் கூறிய சொற்பிழையாதபடி இல்லிலிருந்து நல்லறஞ் செய்யுங் கற்பினையும் மென்மையாகிய சாயலையுமுடைய இளமை மாறாத நம் காதலி உறைகின்ற பொய்யாத புதுவருவாயினையுடைய ஊரானது, மழை காலிறங்கிப் பொழிந்த விளங்கிய பெயலின் இறுதிநாளிலே, கையிற் கொண்ட பலவாகிய காலிட்டுப் பின்னிய மெல்லிய உறியுடனே தீக்கடைகோல் முதலாய கருவிகளை யிட்டுவைத்த தோற்பையை ஒருசேரச் சுருக்கிக்கட்டிப் பனையோலைப்பாயோடு முதுகிற்கட்டியிட்ட பால்விலைகூறியேகும் இடையன் நுண்ணிய பலவாய மழைத்துளி தன்னுடம்பி லொருபுறம் நனைத்தலைச்செய்யக் கையின்கோலையூன்றி அதன்மேல் ஒருகாலை வைத்த ஒடுங்கிய நிலையோடுநின்று வாயைக் குவித்தூதும் 'வீளை' எனப்படுகிற அழைத்தலாகிய குறிப்பொலியையறிந்து சிறியதலையையுடைய யாட்டின் தொகுதி பிறபுலம்புகுதாது மயங்கி அவ்வண்ணமே தங்காநிற்கும் ஈண்டுள்ள புறவின்கண்ணதாயிராநின்றது; ஆதலின் நமது தேர் விரைந்து செல்லின் அவளை இன்னே மகிழ்ந்து முயங்கலாகும்; எ - று.

பாணி - கை. இகுதல் - விழுதல். ஞெலிகோல் - தீக்கடைகோல். கலப்பை - உபகரணம். அதள் - தோற்பைக்கு ஆகுபெயர். பறி - பனையோலைப்பாய். தொடை - விலை. சிறுதலை - யாட்டுக்கு அடையடுத்த சினையாகு பெயர். ஏமார்த்தல் - மயங்குதல். யாணர் - புதுவருவாய். யாணருூர் புறவினதெனக் கூட்டுக.

அறம்புரிவார் நாடு ஆக்கம் மேம்படூஉம் என்பான் விருந்துவரின் உவக்கு முகத்தானே பொய்யாயாணரதென்றான்.

உள்ளுறை :—பிறபுலம்புகுதும் யாட்டினம் இடையன் நின்று விளித்தலானே மீண்டு தங்காநிற்குமென்றது, சோர்வடைந்தொழியும் என துள்ளம் பாகன் விரைவிலே தேர்விடுதலால் அங்ஙனஞ் சோராதபடி தங்காநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன்-பாகன் தேர்கடாவல். (கசஉ)

## மூலமும் உரையும்

கசங — கசங.

## கண்ணகாரன் கொற்றனார்

**பாலை : இது, மனைமருட்சி.**

*எ - து, தலைவி தலைவனுடன்கூடி உடன்போயினளென்று செவிலி கூற அதனையறிந்த ஈன்ற தாய், அஃது அறநெறிதானென்று கருதினளாயினும் அவளது ஆயமும், பயில்இடமும், கிளிகூவுதலுங் கண்டு துயர் தாங்ககில்லாளாய் என்மகள் வழுவிலள், அவள்கொண்ட காமம் வியப்புடையதே, அவள் காரணமாக முன்னமே அயலார்கூறும் பழிமொழியை அறிந்திருந்தும் அறியாதேன்போல இருந்தொழிந்தேனாகலால், யானே வழுவுடையேனென் வருந்தி மனையின்கணிருந்து மருண்டு கூறாநிற்பது.*

ஐதே காமம் யானே ஒய்யெனத்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை ஆயமும் நொச்சியுங் காண்தோறும்
நீர்வார் கண்ணேன் கலுழும் என்னினும்
கிள்ளையுங் கிளையெனக் கூஉம்
இளையோள்
வழுவிலள் அம்ம தானே குழீஇ
அம்பன் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்
அறியேன் போல உயிரேன்
நறிய நாறுநின் கதுப்பேன் றேனே.

உரை :—உழையர் கொணர்ந்த மணல் பரப்பிய அழகிய மாளிகை முன்றிலின்கண், ஓரையாடுகின்ற தோழியர் கூட்டத்தையும் ஆடிடமாகிய நொச்சிவேலியையுங் காணுந்தோறும் யான் விரைய நீர்வடிகின்ற கண்ணை யுடையேனாகி அழுகின்ற என்னினுங் காட்டில் அவள் வளர்த்தகிளியும் 'அன்னாய், துயிலுணர்தி' எனக் கூவாநிற்கும்; இவை நிற்ப என் இளம் புதல்விதானும் குற்றமே யுடையளல்லள்; அவள் கொண்ட காமம் மிக வியப்புடையதா யிராநின்றது; அம்பல் மிக்க இப் பழைய ஊரின்கணுள்ள அலர்தூற்றும் வாயையுடைய ஏதிலாட்டியர் பலரும் ஒருசேரக்கூடிக் கூறுகின்ற கொடிய இனியவுரை கேட்ட சிலநாளளவும் யாதொன்றனையும் அறியாதேன்போல மூச்சுவிட்டேனு மில்லேன்: பின்னும் மிக அலரெழுதலாலே ஒரோவொருகால் என்மகளைநோக்கி நின்கூந்தல் பண்டைமணமின்றி வேறு புதுமணங் கமழாநின்றதே அஃதென்ன காரணமென்று வினவினேன்; அவள் தகுதியான விடை கூறினாளுமல்லள்; முன்னரே அவளது இயல்பை அறிந்துவைத்தும் பாதுகாவாமையின் யானே வழுவுடையேனாயினேன்மன்; எ - று.

ஓரை - மகளிர் பாவைகொண்டு விளையாடுவது. ஞெமிர்தல் - பரவுதல். கிளைத்தல் - விளித்தல். ஐது - வியப்புடையது.

கூழைக்கற்றைக் குழவிப்பிராயத்திலே பூத்தந்தானைத் தொடர்ந்து 'உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர்' எனக்கொண்டு இவ்விளம்பிராயத்தே சென்றமைகருதி இவள்கொண்ட காமம் வியப்புடையதென்றாள். இன்னானுடன் இவள் களவொழுக்கமுடையாளெனப் பிறர் கூறுதலைக்



கேட்டலால் இன்னாவுரை யென்றாள். பூவேபுனலே களிறே யென்றிவையேதுவாகத் தலைப்பெய்துபோகிய அஃது அறத்தாறாதலின் இனியவுரை யென்றாள். தலைமகன் வேற்றுநிலத்து மலரைக் கொணர்ந்து முடித்தலின் நின்கதுப்புப் புதுமணம் நாறுமென்றேனென்றாள். **மெய்ப்பாடு** - உவகைக் கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமை நீங்குதல். (௧௪௩)

# கசச. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்

குறிஞ்சி: இஃது, ஆற்றது ஏதத்திற்குக் கவன்று தலைவி சொல்லியது.

சிறைப்புறமாகத்

*எ - து, இரவுக்குறி வாராநின்ற தலைமகன் சிறைப் புறத்தானாக அவன்கேட்டு வரையுமாற்றானே தலைவி தோழியை நோக்கி நம் காதலர் கான்யாற்றின்கண்ணே தமியராய் நீந்திவருவதுகருதி அறியாமையே னுடையகண்கள் கலுழவும் நெஞ்சம் கவலையால் வருந்தவும் என் நிலைமை இவ்வாறாகியது காணென அழிந்து கூறாநிற்பது.*

பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடிக்
கருவிமா மழையின் அரவம் அஞ்சுபு
போதேர் உண்கண் கலுழவும் ஏதில்
பேதை நெஞ்சம் கவலை கவற்ற
ஈங்கா கின்றால் தோழி பகுவாய்ப்
பிணவுப்புலி வழங்கும் அணங்கருங் கவலை
அவிரறல் ஒழுகும் விரைசெலற் கான்யாற்றுக்
கரையருங் குட்டந் தமியர் நீந்தி

விரவுமலர் பொறித்த தோளர்
கம. இரவில் வருதல் அறியா தேற்கே.

உரை:—தோழீ! பிளந்த வாயையுடைய பெண்புலி இரைதேடி இயங்குகின்ற துன்பம் நீங்குதற்கரிய கவர்த்த வழியில் விளங்கிய விரைந்த செலவையுடைய நீரோடுகின்ற கரைகாண்பதரிதாகிய கான்யாற்றில் ஆழமுடைய புனலின்கண்ணே தமியராய் நீந்தி அந்நீரிலே கலந்த மலர்கள் பொருந்திய தோளொடு நம் காதலர் இரவில் இங்கு வருவதனையெண்ணி அறியாமையுடையேனாகிய எனக்கு அந் நெறியின்கண்ணே புலி பெரிய களிற்றியானையை மோதிக்கொல்லுதலால் அதனையறிந்த கரியபிடியானை மின்னல் முதலாகிய தொகுதியையுடைய கரியமேகம் முழங்குவது போன்று பிளிற்றுகின்ற ஓசையைக் கேட்டு நடுங்கி நீலமலர்போன்ற மையுண்டகண்கள் நீரை வடியவிடவும், யாதுமில்லாத பேதைமையுடைய என்னெஞ்சம் கவலையால் வருந்தவும் என்னிலைமை இவ்வண்ணமாயிராநின்றதுகாண்; எ - று.

ஏங்கு - இவ்வண்ணம். அறல் - நீர். குட்டம் - ஆழம். கவற்றவும் என்பதன் உம்மை தொக்கது.

மூலமும் உரையும்

கசரு

தோளின்கண்ணே தங்கிய மலரொடு வரக்கண்டமையால் யாற்றிடை நீந்திவந்தமை யறிந்து வருந்தினள். குறிஞ்சியாதலின் பிடிமுழக்கம் அருகில் முழங்கியது அறிந்தாளாயிற்று. கவலை - ஆற்றது ஏதமஞ்சிய கவலை. இஃது அழிவில்கூட்டத் தவன்புணர்வு மறுத்தல்.

உள்ளுறை :—உழுவையாலே களிறுதாக்கப்படப் பிடி புலம்புமென்றது, ஆற்றது ஏதத்தாலே தலைவன் தாக்கப்படுவனேவெனயான் புலம்பாநின்றே னென்றதாம். மெய்ப்பாடு – அழுகை. பயன் – வரைவுடன்படுத்தல்; அயாவுயிர்த்தலுமாம். (கசச)

# கசரு. நம்பிகுட்டுவன்

நெய்தல் :

இஃது, இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி வரைவுகடாயது.

எ - து, இரவுக்குறிவந்து சிறைப்புறத்தானாகிய தலைமகன் கேட்டு அஞ்சி விரைய வரையுமாற்றானே தோழி, தலைவியைநோக்கி அன்னை நமது களவொழுக்கத்தை யறிந்தவள்போல 'அவன் யாங்குளன்!' என்று கூறாநிற்பள்; அன்றி நீ என்னாலுங் காப்பதற்குரியை; நமது சேரியின்கண்ணே இரவில் அவருடைய தேர்மணியோசையு மொலிக்கும்; இதற்கு யாதுசெய்வேனென வருந்திக் கூறாநிற்பது.

இருங்கழி பொருத ஈர வெண்மணல்
மாக்கொடி அடும்பின் மாயிதழ் அலரி
கூந்தன் மகளிர் கோதைக் கூட்டுங்
காமர் கொண்கன் நாமவெங் கேண்மை
ரு. அமைந்தே தில்லா ஊங்கு நம்மோடு
புணர்ந்தனன் போல உணரக் கூறித்
தான்யாங் கென்னும் அறனில் அன்னை

யானெழில் அறிதலும் உரியள் நீயுநம்
பராரைப் புன்னைச் சேரி மெல்ல
௧௦. நள்ளென் கங்குலும் வருமரோ
அம்ம வாழியவர் தேர்மணிக் குரலே.

உரை :—தோழீ! நெடுங்காலம் வாழ்வாயாக; யான் கூறுகின்றதனைக் கேள்; கரிய கழியின்கணுள்ள நீர் அலையினால் மோதுதலானே ஈரமாகிய வெளிய மணலிலே படர்ந்த வலிய கொடியடும்பின் பெரிய இதழையுடைய மலர் மகளிரின் கூந்தலிலிடுகின்ற மாலைக்குக் கூட்டாநிற்கும் கண்டோர் விரும்புந்தன்மையுடைய கடல் நாடனாகிய நம் காதலனுடைய அச்சந்தரும் வெய்யகட்டானது, பண்டு பொருந்தியிருந்து இப்பொழுது யாதொரு தொடர்பும் நம்பாலில்லாதிருந்தும் நம் அறனில்லாத அன்னையானவள், நம்மொடு அவன் புணர்ந்தனன்போல வெளிப்படையாகச்சொல்லி 'அவன் தான் இப்பொழுது எங்குளன்' என்று கூறாநிற்கும்; அன்றி நீயும் நின் னெழுச்சி முதலியன என்னாலறிதற்கும் உரியள்; நம்முடைய பருத்த அடியையுடைய புன்னைமரங்களையுடைய சேரியின்கண் இரவில் நடுயாமத்



திடையிருளிலும் அவர் தேரிலுள்ள மணியினோசை மெல்லவந் தொலியாநிற்கும்; இதற்கு யான் யாதுசெய்யவல்லேன்? இனி யாதாகி முடியுமோ?

எ - று.

மா - வன்மை, பெருமை. அலரி - பூ. எழுச்சி.

நாமம் - அச்சம். எழில் -

கேட்டு அஞ்சிக் களவொழுக்கங் கைவிட்டு வரைவுடன்படுத்துவாள் அவனஞ்சியகலுமாறு அன்னை தேடித்திரிவது கூறினள். தன் காவலொடு மாறுகொள்ளா திருக்கவேண்டுமென்பதை யறிவுறுத்துவாள், யானெழி லறிதலு முரியளென்றாள். மணியொலி கேட்டலானே தேடிய அன்னை தன் ஐயன்மார்க்குணர்த்த அவர்கண்டு ஏதம் இழைப்பாரென இன்னே அகன்று செல்க என்றாள். இதுகேட்ட தலைமகன் இவள் நம்பால் அன்புடைமையினன்றே நம் ஏதத்துக்குக் கவன்று கூறினளென ஆற்றியகன்று பிற்றைஞான்று வரைவொடு புகுவானுவது. இஃதழிவில் கூட்டத் தவன்புணர்வு மறுத்தல்.

உள்ளுறை :—அடும்பின் அலரி மகளிர் கூந்தலிலே சேர்க்கப்படுமென்பது, நீ இவளைப் பலருமறிய மணந்து பூச்சூட்டிப் பெறுவாயென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கசஅ)

## கசகூ. கந்தரத்தனார்

குறிஞ்சி : இது, பின்னின்ற தலைவன்
தோழிகேட்பச் சொல்லியது.

முன்னிலைப்புறமொழியாகத்

எ - து, தோழியை இரந்து குறைபெறாது வருந்தி மடலே பொருளென மதித்த தலைமகன் மீட்டும் தோழிகேட் டிரங்கிக் குறைமுடிக்குமாற்றானே தன்னெஞ்சை நோக்கி மாயோளால் வருந்திய நெஞ்சே, மடற்பரியுடையாய், கதிர்வெயில் எறியொழியுமளவும் இம் மரத்தின் கீழே சிறிதுபொழுது இறங்கியிருந்து பின்பு செல்வாயாகவென்று வருந்திக் கூறுநிற்பது.

வில்லாப் பூவின் கண்ணி சூடி
நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரும்

நெடுமாப் பெண்ணை மடல்மா னேயே
கடனறி மன்னர் குடைநிழல் போலப்
பெருந்தண் என்ற மாரன்நிழல்

சிறிதிழிந்து

இருந்தனை சென்மோ வழங்குக சுடரென
அருளிக் கூடும் ஆர்வ மாக்கள்
நல்லேம் என்னுங் கிளவி வல்லோன்
எழுதி யன்ன காண்டகு வனப்பின்
ஐயள் மாயோள் அணங்கிய
மையல் நெஞ்சம் என்மொழிக் கொளினே.

மூலமும் உரையும்

த்கா்னி

உரை :—அன்போடு நெருங்கிய மகிழ்ச்சியையுடைய மாந்தர் நெருங்கிக் கூறு மீக்கூற்றால் யாம் நல்லேமென்னும் புகழ்ச்சொலடையப்பெற்ற சித்திரம் தீட்டுவதில்வல்ல ஓவியன் எழுதிவைத்தாலொத்த காட்சி தக்க அழகினையுடைய மெல்லியளாகிய மாமை நிறத்தையுடையவளால் வருத்தம் ஏறட்டுக்கொண்ட மயக்கத்தையுடைய நெஞ்சமே, விலைக்கு விற்றற்கியலாத பூளைமலரையும், உழிஞைப்பூவையும், எருக்கம்பூவையும், ஆவிரம் பூவோடு கலந்துகட்டிய மாலையைச்சூடி யான் நல்ல பித்தேறினேனென்னும்படி பல ஊர்களினுஞ் சென்று திரிகின்ற நெடிய கரிய பனைமடலாலே கட்டிய குதிரையை யுடையாய், நீ என் வார்த்தையை ஏற்றுக்கொள்ள விரும்புவையாயின் ஞாயிறுதான் வெயில் வீசி யொடுங்குவதாகவென்று அவ்வெயிலின் வெம்மையடங்குமளவும், முறைதெரிந்து உலகைப் பாதுகாக்கும் அரசரின் குடைநிழல் குளிர்ச்சியுறு மாறுபோலே பெரிய தண்ணென்ற மரத்தினிழலின்கண்ணே குதிரையினின்றிழிந்து சிறிது பொழுது தங்கியிருந்து பின்பு செல்வாயாக ; எ - று.

வில்லாப்பூ - விலைப்படுத்தற்காகாத பயனற்றபூ ; அவை பூளை, ஆவிரை, உழிஞை, எருக்கம் என்பன. “ அணியலங் காவிரைப் பூவோ டெருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து ” (கலி - கஙஎ) எனவும், “பூளை பொலமலர் ஆவிரை வேய்வென்ற, தோளா னெமக்கீத்த பூ” (கலி - கஙஅ) எனவும், “ பூவல்ல பூளை யுழிஞையொ டியாத்த ” (கலி - கசுO) எனவும் வருவனவற்றாலறிக.

மடலேறியவழி தோழியாலும் பிறராலும் அறிவுறுத்தப்பட்ட தமர் மகட்கொடை நேரவேண்டுதல் மரபாதலின் தான் மடலேறிவந்ததனைத் தோழிக்கு அறிவுறுத்தினான். மாயோளால் அணங்கப்பட்டமையால் அவளையின்றித் தீராதென்னுங் குறிப்பால் மாயோள் அணங்கிய நெஞ்சமென்றான். “ அணியிழை தன்னோய்க்குத் தானே மருந்து ” ஆதலின், நெஞ்சம் தன்மொழிக்கடங்காது ஒருபொழுது வரைபாயவுந் துணியுமென்னுங் குறிப்பால் என்மொழிக்கொளினெனத் துணியாது ஐயுற்றுக் கூறினான். இப்பாட்டுக் கந்தருவத்துட்பட்டு வழீஇய பெருந்திணை. **மெய்ப்பாடு** - அசைவுபற்றிய அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கசுசு)

## கசுஎ. கொள்ளம்பக்கனார்

குறிஞ்சி: இது, சிறைப்புறமாகத் தோழிசொல்லியது.

எ - து, பகற்குறியின்கண் வரையாது வந்தொழுகுந் தலைமகன் ஒருநாள் சிறைப்புறமாக வருவதறிந்த தோழி, அவன் கேட்டு விரைய வரையுமாற்றானே தலைவியை நோக்கி நம் அன்னை நின்னை எதிர்ப்பட்டுத் 'தினைக்கொல்லையைக் காவாது யாங்குச்சென்றனை' என்று கடிந்து கேட்டலும் அதற்குத் தக்கவாறு மறைத்துக்கூறாமல் 'யான் நாடனைக் கண்டதுமில்லேன், சுனையாடியதுமில்லேன்' என்று மறந்து உண்மைதோன்றக் கூறினையே இனி எப்படியாவோமோ வென்றுபடைத்துமொழி கிளவியால் மருட்டிக் கூறாநிற்பது.

யாங்கா குவமோ அணிநுதற் குறுமகள்
தேம்படு சாரல் சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவர நீமற்று
எவ்வாய்ச் சென்றனை அவணெனக் கூறி



ரு. அன்னை ஆனுள் கழற முன்னின்று
அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை
அறியலும் அறியேன் காண்டலும்
இலனே
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக்
கொய்து
சுனைபாய்ந் தாடிற்றும் இலனென
நினைவிலை
கo. பொய்யல் அந்தோ வாய்த்தனை

அதுகேட்டுத்

தலையிறைஞ் சினளே அன்னை
செலவொழிந் தனையால் அளியைநீ

புனத்தே.

உரை:—தோழீ! அன்னையானவள் நின்னைநோக்கி 'அழகிய நெற்றியை யுடைய இளமகளே, இடமகன்ற மலைச்சாரலின்கணுள்ள சிறிய தினை யின் பெரியகதிரைச் சிவந்தவாயையுடைய பசியகிளி கொய்துகொண்டு போகின்ற அளவும் நீ அதனைக் காவாது ஆங்குநின்று எவ்விடத்திற்குச் சென்றனை' என்று கூறி அமையாளாகிப் பலபடியாக வினவுதலும், நீ அச்சமுற்று அவள் முன்நின்று மூங்கிற்பிளவாற்செய்த கிளிகடி கருவி யாகிய தட்டையையுடையயான் அருவியொலிக்கும் பெரிய மலைநாடனைக் காதாலே கேட்டறிதலுஞ்செய்திலேன், கண்ணாலே காண்டலுஞ் செய்தி லேன், மலர்ந்த பூக்களைப் பறித்து அவனோடு சுனையிலே பாய்ந்தாடியதுஞ் செய்திலேன் என்று நினைவில்லாத பொய்யுஞ் சொல்லாயாய் ஐயோ! உண்மையை யுரைத்துவிட்டனையே? அதனைக்கேட்டு அன்னை சினத் தோடு வெள்கித் தலையிறைஞ்சி நின்றனள் கண்டாய்; ஆதலின் நீ தினைப் புனத்தின்கண்ணே செல்லுதலைப் போக்கிக் கொண்டனைமன்; இவ்வளவு அறியாமையையுடைய நீ இனி எங்ஙனம் குடிமை பூண்டொழுகவல்லாய் என்றெவரும் இரங்கத்தக்கனையாயினை; அவளது முனிவினுள்ளே படுதலால் இனி யாம் எவ்வண்ணம் உய்யவல்லேமோ?. எ – று.

தேம்—இடம். அறிதலும் அறியேனென்றது காரியவாசகம்.

தட்டை – கிளிகடிகருவி. இஃது மறுத்தல்.

அழிவில்கூட்டத் தவன்புணர்வு

தலைவனையே நினைவிலுடைமையால் வழுவியுரைத்தனையென்பாளாய் அவனையே தலைவி கருதியிருக்கும் அன்பின் நிலைமை புலப்படுத்தினள். தலையிறைஞ்சினளென்றது நமதுகுடி மாசூர்ந் தலர்கொள்ளலாயதென வெள்கினளாதலின் அதற்கேற்றதோர் ஊறிழைப்பளென அஞ்சியச்சுறுத்தியதாம். செலவொழிந்தனை யென்றது இற்செறிப்பறிவுறுத்தியதாம். இப்படைத்துமொழிகிளவி தோழிகூற்று வழுவாயினும் வரைதல் வேட்கையாலே கூறுதலின் வழுவமைதியாயிற்று. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுடன்படுத்தல். (கசஎ)

## கசஅ. கள்ளம்பாளனார்

**பாலை :**

இது, பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறீஇயது.

எ - து, தலைமகன் வினைவயிற் பிரியக்கருதியது அறிந்த தலைவி ஆற்றாளாய் வேறுபட்டுக்காட்டலும் அதனையறிந்த தோழி, 'நீ மெல்லியலாதலின்



வினைவயிற்செல்லுகின்ற தம்மோடு சுரம்போதற் கியலாயென்று தமியே செல்வராதலால் யான் அவர்செலவுகருதி வருந்தினேனல்லேன், நீயும் வருந்தாதேகொள், அவர்செல்லுங்காரியங் கைகூடுவதாக' என வாழ்த்துவாளாய் வற்புறுத்திக் கூறுகிற்பது.

வண்ணம் நோக்கியும் மென்மொழி கூறியும்
நீயவண் வருதல் ஆற்றாய் எனத்தாம்
தொடங்கி ஆள்வினைப் பிரிந்தோர் இன்றே
நெடுங்கயம் புரிந்த நீரில் நீளிடைச்
செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது
கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்
இன்புனிற் றிடும்பை தீரச் சினஞ்சிறந்து
செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை
உயர்மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்
அருஞ்சுரம் இறப்ப என்ப
வருந்தேன் தோழி வாய்க்கஅவர் செலவே.

உரை :—தோழீ! நின்னுடைய நிறத்தின் மென்மையைப் பார்த்தும் மெல்லிய இனிய சொல்லால் யாஞ் சென்று வினைமுடிக்குஞ் சுரத்தின் கண் நீ வருதற்கு ஆற்றாயெனப் பலபடக்கூறியும், தாம் தொடங்கிப் பொருளீட்டுமுயற்சியை மேற்கொண்டு அதனிற் பொருந்தியொழுகுபவர் இற்றை நாளால் நெடிய பொய்கையின்கண்ணே பொருந்திய நீரில்லாத நீண்ட வழியிலே சிவந்த அடியினையுடைய மராமரத்தின் அழகிய பக்கத்திலே பொருந்தி வளைந்தவில்லையுடைய வீரர் மிக்கிருக்கின்ற நிலைமையை நோக்கியும் அச்சங்கொள்ளாது மலைமுழையிலேகிடந்த பெரிய உகிரையுடைய பெண்புலியின் இனிய குட்டிகளையீன்றதனாலாகிய நோயும் பசியுந் தீரும்படியாகச் சினம்மிகுத்துச் சிவந்த கண்ணையுடைய கொல்லவல்ல பெரிய புலியேற்றை ஓங்கிய கொம்பினையுடைய களிற்றியானையின் புள்ளியமைந்த முகத்திலே சென்று பாயாநிற்கும், செல்லுதற்கரிய சுரத்தின்கண்ணே செல்லாநிற்பர்; அவர் செல்லுவதனையறிந்த யான் சிறிதும் வருந்துவேனல்லேன்; நீயும் அவ்வண்ணம் வருந்தாதேகொள்; அவர்செல்லுங்காரியம் அவர்க்குக் கைகூடுவதாக : எ – று.

ஆள்வினை – முயற்சி; இறைச்சியாலே பொருள்வயிற்பிரிந்தமை தோன்றுதலின் பொருளில்முயற்சிகொண்டதெனக் கூறப்பட்டது. என்ப – அசைநிலை.

சுரத்தின்கண் உடன்வரின் ஆற்றவல்லளோவென்னுங் கருத்தால் வண்ணம்நோக்கினன் என்றாள். நின்னைப் பிரிதலாற்றாது அவனும் அழுங்கி உரையாட வல்லனல்லனென்பாள் மென்மொழி கூறியுமென்றாள்.

இறைச்சி :—பிணவின்பசியும் நோயுந் தீர்க்கவேண்டி மறவர்க்கும் அஞ்சாது ஆண்புலி களிற்றின் முகம்பாயுமென்றது, நின்னொடு முட்டின்றி இல்லறநிகழ்த்தக் கொடிய சுரத்தினையு மஞ்சாது சென்று



பொருளீட்டிவரச் செல்லாநிற்பரென்றதாம். மெய்ப்பாடு – பெருமிதம். பயன் – தலைவியை ஆற்றுவித்தல். கைகோள் – கற்பு. (௧௪௮)

## கசகூ. உலோச்சனார்

நெய்தல்: (க) இது, தோழி தலைவியை உடன்போக்குவலித்தது.

எ - து, தலைவியை உடன்போகுமாறு ஒருப்படுத்தக் கருதியதோழி அவளைநோக்கி ஊரார் அலர்தூற்றுதலாலே, அதனை உண்மையென்று கருதி அன்னை ஒறுத்தலால் யான் வருந்துகின்றேன்; ஆதலால் இனி நீ இங்கில்லாதபடி கொண்கனொடு செல்லுமாறு அவன்பால் உன்னையுய்க்க வந்தேன்; நீ எழுவாயாக, நீ சென்றபிறகு இவ்வூர் யாதுசெயற்பாலது? வேண்டுமேல் அலர்தூற்றிக்கொண்டே யொழியக்கடவதாகவென வலியுறுத்திக்கூறுநிற்பது.

(உ) சிறைப்புறமாகச் சொல்லியதூஉமாம்.

எ - து, தலைவன் சிறைப்புறத்தானாதலையறிந்ததோழி, அவன்கேட்டு உடன்கொண்டுசெல்லலாவது வரைந்துகொள்ளலாவது கருதும்படியாகத் தலைவியைநோக்கி ஊரார் அலர்தூற்றலாலே அதனையறிந்த அன்னை ஒறுப்ப யான் வருந்துகின்றேனாதலால் கொண்கனொடு நீ செல்லுமாறு கருதுகின்றேன்; அங்ஙனம் சென்றபிறகு இவ்வூர் யாதுசெயற்பாலது வேண்டுமேல் அலர்கொண்டொழிகவென வருந்திக்கூறுநிற்பது. (உரை இரண்டற்குமொக்கும்.)

சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப
அலந்தனென் வாழி தோழி கானல்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவல்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க்
கொண்கனொடு

சேலவயர்ந் திசினல் யானே
கo. அலர்சுமந்து ஒழிகவிவ் அழுங்கல் ஊரே.

உரை :—தோழீ ! வாழி ; நம்மூர்த் தெருவிலுள்ளமாதர்களுள் ஒரோவோரிடத்திற் சிற்சிலரும், ஒரோவோரிடத்திற் பற்பலரும் இப்படியாக ஆங்காங்குத் தெருக்களிலே கூடிநின்று கடைக்கண்ணாலேசுட்டி நோக்கி வியப்புடையார்போலத் தம்தம் மூக்கினுனியிலே சுட்டுவிரலைவைத்துப் பழிச்சொற்கூறித் தூற்றாநிற்கவும்; அப் பழிமொழியை நம் அன்னை கேட்டறிந்து மெய்ம்மையாகுமெனக்கொண்டு சிறிய கோலொன்றனை யேந்தி அது சுழலும்படிவீசி அடிப்பவும் இவையிற்றால் யான் மிக்க துன்பமுடையேனாயினேன்காண் ; ஆதலின் இத்துன்பமெல்லாந்தீரும்படி கழியருகின் கண்ணதாகிய சோலையிலுள்ள புதியமலர்தீண்டிய பூமணம் வீசுகின்ற நல்ல நிறம்பொருந்திய பிடரிமயிரையுடைய விரைந்துசெல்லுங் குதிரைபூண்ட

மூலமும் உரையும்

சஎக

நெடியதேரைச் செலுத்தி இரவு நடுயாமம் நள்ளிருளில் வருகின்ற இயன்ற தேரையுடைய கொண்கனெடு நீ செல்லுமாறு யான் உடன்படாநின்றேன், நீ எழுவாயாக; அங்ஙனஞ்சென்றொழிந்தால் பேரொலியையுடைய இவ்வூர் யாதுதான் செய்யற்பாலது ? வேண்டுமேல் அலர்தூற்றிக்கொண்டு போகக் கடவதாக ; எ – று.

இப்பாட்டுப் பலபடியாகப் பிறழ்ந்திருத்தலானே பாடபேதத்துக்குத் தக்கபடி உரை கூறிக்கொள்க.

வலந்தனள் – சுழற்றினளாகி ; வினையெச்சமுற்று. அலந்தனென் – துன்புற்றேன். சுவல் - பிடரிமயிர். அம்பல் – சிலரறிந்தபழிச்சொல்.

தலைவி எட்டியுஞ்சுட்டியுங் காட்டப்படுங் குலத்தினளல்லளாதலால் வாயினுற்கூறலும் எறிட்டுப்பார்த்தலுங் குற்றமாமென்றஞ்சிக் கடைக்கண்ணால் நோக்கிக் குறிப்பாகக்கூறுவது குறிப்பித்ததாம். அங்ஙனம் பெருங்குடியிலேபிறந்து பெருநாணமும் உடையளாயினளொரு சிறுமி காமந்தலைக்கொண்டு உடன்போயினளென்னையென வியப்பெய்தலின் மூக்கினுனியின்கண்ணே சுட்டுவிரல் சேர்த்தினமை கூறியதாம்; இதுவும் வாயினலேகூற அஞ்சினமை குறிப்பித்ததாயிற்று. "அலரிற் றோன்றுங் காமத்திற் சிறப்பே" (தொ-பொ-கசுக) என்றபடி களவிடை யலராலே காமஞ்சிறக்குமாயினும் அன்னையலத்தலானஞ்சி உடன்போகப்படுதலின் ஊர் அலர் சுமந்தொழிகவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - போக்கு உடன்படுத்தல். இரண்டாந்துறைக்கு மெய்ப்பாடு-அது. பயன் - வரைவு உடன்படுத்தல். (கசுக)

## கடுO. கடுவனிளமள்ளனார்

**மருதம் :**

*இது, தலைநின்றொழுகப்படாநின்ற பரத்தை, தலைவனை நெருங்கிப் பாணற்குரைத்தது.*

எ - து, தலைமைகொண் டொழுகும் பரத்தையொருத்தியைக் கலந்து பின்பு அவளைக் கைவிட்டு வேறொருபரத்தைபாற்சென்ற தலைவனை அம்முதற்பரத்தை நெருங்குதலும் அவளது வெகுளி தணிக்கும்படி அவன் பாணனைவிடுப்ப அப்பாணனைநோக்கிப் பாணனே, நுந்தலைமகன் எமது சேரியில்வந்து காட்டி எங் நெஞ்சங் கொண்டமை விடாதுகண்டாய்; எம் அன்னை சினமுடையள் இரங்காளாதலின் அவளாலொறுக்கப்படுவது முண்டு, அதனால் அவன் யாவராலும் நகைத்தற்குரியன் என இகழ்ந்து கூறுநிற்பது.

நகைநன் குடையன் பாணநும் பெருமகன்
மிளைவலி சிதையக் களிறுபல பரப்பி
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வழுதி வாழிய பலவெனத் தொழுதீண்டு

மன்னெயில் உடையோர் போல அஃதுயாம்
என்னலும் பரியலோ இலமெனத் தண்ணடைக்
கலிமா கடைஇ வந்தெம் சேரித்
தாருங் கண்ணியுங் காட்டி ஒருமைய



நெஞ்சம் கொண்டமை விடுமோ வஞ்சக்
கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்
கதம்பெரிது உடையள்யாய் அழுங்கலோ இலளே.

உரை:—பாணனே, நம் பெருமகனாவான் பலராலும் நகுதற்படுதலை நன்றாகவுடையனாயிராநின்றான், 'காவலரண் சிதையும்படி பலவாய யானைப் படைகளைப் பரக்கவிட்டுச்சென்று பலபல அரணங்களை வென்றுகொண்ட வலிமைமிக்க சேனைகளையுடைய பாண்டியன் மாறன்வழுதி பன்னெடுநாள் வாழ்வானாக என்று வணங்கியடைகின்ற நிலைபெற்ற மதில்களையுடைய குறுநிலமன்னர்போல அதற்காக யாம் சிறிதேனும் வருந்துதலைச்செய்யேம்' என்றுகூறி மென்மையான நடையையுடைய கனைக்கின்ற குதிரையைச் செலுத்தி எமது சேரியின்கண்வந்து கொண்டைமாலையையும் அழகுக் கிடுங் கண்ணியையுங்காட்டி ஒருமைப்பாட்டையுடைய எமது நெஞ்சத் தைக் கவர்ந்துகொண்டமை இனிவிடுவதமையுமோ? அமையாதுகாண்; நீ அஞ்சுமாறு எம் அன்னை நெருங்கிய கணுக்களையுடைய சிறியமூங்கிற் கோலைக் கையிலேந்தி வெகுளிபெரிதும் உடையளாயிராநின்றாள், சிறிதும் வருந்துகிலள், அவளாலொறுக்கப்படுவதுண்டுபோலும்; ஆதலின் நீ இங்கே வாராதேகொள்; எ - று.

பிணை - காவலரண்; காவற்காடுமாம். தண்ணடை - மெல்லியநடை. கண் - மூங்கிற்கணு. அன்னைசினம் தன்னையொறுக்குமெனவும் பொருள் பயப்பநின்றது.

பரத்தையர்க்குரிய பரியப்பொருளை இனைத்தென அவரது ஏவற்சில தியர்மாட்டளித்து அவராலே தெருவின்கண்ணே கூறப்படுமாலையை வாங் கிப் பரத்தையரிடங்கொடுத்து முயங்குதல் வழக்காதலின் ஈண்டுத் தாருங் கண்ணியுங் காட்டியென்றாள். நெஞ்சங்கொண்டமை விடுமோவென்றது பிற போகாவியல்பினேனுடைய நெஞ்சம்கொண்டு கைவிட்ட தீவினை அவனைவிடாது சூழுங்காணென்றதாம். முன்பும் இப்பாணனே இவளை அவன்பாற் புணர்ப்பித்தவனாதலின், தீவினை முன்னின்ற பாணனை விடா தென்றாளெனவுமாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - பாணனைக் கடிதல். (௧௫0)

## ௧௫௧. இளநாகனார்

குறிஞ்சி: இஃது, இரவுக்குறிச் யது.

சிறைப்புறமாகத் தோழி சொல்லி

எ - து, இரவுக்குறிவந்து சிறைப்புறத்தானாகிய தலைமகன்கேட்டு நீட்டியாது வரைதல்வேண்டித் தோழி, தலைவியைநோக்கி நினது நுதல் பசந்தாலும் பெரியதோள் நெகிழ்ச்சியுற்றாலும் மலைநாடன் நின்பொருட்டு இராப்பொழுதிலே கொடிய சாரல்நெறியில் வாராதொழிவானாகவென்று கடிந்து கூறுகிற்பது.

நன்னுதல் பசப்பினும் பெருந்தோள்
நெகிழினும்
கோன்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை
கன்மிசை அருவியில் கழூஉஞ் சாரல்

மூலமும் உரையும்

கஎரு.

ரு. வாரற்க தில்ல தோழி கடுவன்
முறியார் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்
கறிவளர் அடுக்கத்தில் களவினில்
புணர்ந்த

செம்முக மந்தி செல்குறி கருங்கால்
பொன்இணர் வேங்கைப் பூஞ்சினைச்
சேவீஇயர்

கO. குண்டுநீர் நெடுஞ்சினை நோக்கிக்
கவிழ்ந்துதன்
புன்றலைப் பாறுமயிர் திருத்துங்
குன்ற நாடன்* இரவி னானே.

உரை :—தோழீ, மிளகுக்கொடி வளர்ந்து படருகின்ற மலைப்பக்கத்திலே களவுப்புணர்ச்சியிற் கடுவனால் முயங்கப்பட்ட சிவந்த முகத்தையுடைய பெண்குரங்கு தனக்குப் புணர்ச்சிவேறுபாட்டானுண்டாகிய குறியைத் தளிர்களைத் தின்னுகின்ற தன் பெரிய சுற்றம் அறியுமேயென்று அஞ்சிக் கரிய அடியையும் பொன்போல்கின்ற பூங்கொத்தினையுமுடைய வேங்கைமரத்தின் அழகிய கிளைமீது சென்று ஆழமாகிய சுனைநீரைநோக்கித் தலைகவிழ்ந்திருந்து தன் மெல்லிய தலையில் முன்பு புணர்ச்சியாலே குலைந்த முச்சிமயிரை அக்குலைவு தோன்றாதபடி திருத்தாநிற்கும் மலைநாடன்,—நினது நல்லநெற்றி பசலையூர்ந்து பசந்துகாட்டினும், பெரிய தோளின்வளை நெகிழ்ந்தவாயினும் கொல்லுகின்ற வலிய கரியபுலியை நுழைதற்கரிய முழையருகில் மோதிக் கொன்றுபோகட்டு அதனிரத்தம் பூசுதலானே சிவந்தமருவைக்கொண்ட வெளியகோட்டினையுடைய களிற்றியானை மலைமேனின்றுவருகின்ற அருவியின்கண்ணேசென்று கழுவாநிற்குஞ் சாரல்நெறியில் இரவில் எஞ்ஞான்றும் வாராதொழிவானாக; எ - று.

தில் - காலத்தின்மேலது. முறி - தளிர். கறி - மிளகு. குண்டு-ஆழம். பாறுதல் - சிதைதல். பசப்பானும் நெகிழ்ச்சியானும் உண்டாயதுன்பத்தேர்டு ஆற்றதேதத்துக்கும் அஞ்சவேண்டுதலின் வாரற்கவென்றதாம். நுதல்பசப்பினுமென்றது பசலைபாய்தல். தோள்நெகிழினுமென்றது உடம்பு நனிசுருங்கல். வாரற்கவென்றது அழிவில்கூட்டத்து அவன்புணர்வு மறுத்தல்.

உள்ளுறை:—களவினிற் புணரப்பட்ட மந்தி அப் புணர்குறியைத் தன் சுற்றம் நோக்குமென்றஞ்சிப் பாறுமயிர் திருத்துமென்றது, களவொழுக்கத்தாலே புணரப்பட்ட தலைமகள் அப்புணர்ச்சிவேறுபாட்டைத் தன் சுற்றத்தாரறிவரென்றஞ்சி நாள்தோறும் மெய்யை முன்போலாகும்படி திருத்திக் கொள்ளவேண்டியவ ளாகின்றனள்; ஆதலின் இவ் அச்சந்தீர வரைக வென்றதாம்.

இறைச்சி:—புலியை யானைசென்றழித்துத் தன் கோட்டைக் கழுவுமென்றது, ஏதிலாட்டியர் எடுத்த பழிச்சொல்லைக்கெடுத்து ஊரையும் நாளும் நோக்காது கலந்ததனாலாகிய ஏதத்தை வரைந்து போக்கிக்கொள்வானாகவென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - இரவுக்குறி மறுத்து வரைவுகடாதல். (கரு௧)

(பாடம்) * குன்றகநாடன்.



## கருஉ. ஆலம்பேரிசாத்தனார்

நெய்தல்:

இது, மடல்வலித்த தலைவன் முன்னிலைப்புறமொழியாகத் தோழிகேட்பச் சொல்லியது.

எ - து, இரந்துகுறைபெறாது மடலேறுமாறு கருதிய தலைமகன் தோழியின் முன்னிலையில் வேறொருவருடன் கூறுவான்போன்று காமம் மடலைத்தந்தது; அலர் பலமிடைந்த எருக்கலரைத்தந்தது; ஞாயிறு துன்பைத்தந்தது; இரவு கையறவைத்தந்தது; ஆதலின், யான் இனி எவ்வண்ணம் உய்குவேனென அத்தோழி கேட்டுத் தன்குறைமுடிக்கும்படியாக அழிந்து கூறுகிறது.

மடலே காமந் தந்தது அலரே

மிடைபூ எருக்கின் அலர்தந் தன்றே
இலங்குகதிர் மழுங்கி எல்விசும்பு படரப்
புலம்புதந் தன்றே புகன்றுசெய் மண்டிலம்
ரு. எல்லாந் தந்ததன் தலையும் பையென
வடந்தை துவலை தூவக் குடம்பைப்
பெடைபுணர் அன்றில் இயங்குகுரல் அளைஇக்
கங்குலும் கையறவு தந்தன்று
யாங்கா குவென்கொல் அளியேன்
யானே.

உரை:—யான்கொண்ட காமமோ இந்தப் பனங்கருக்காலேகட்டிய பரியைத்தந்தது; ஊராரெடுக்கும் அலரோ 'ஆவிரை, பூளை, உழிஞை' என்று இன்னமலர்களை இடையிட்டுக்கட்டிய எருக்கம்பூமாலையைத்தந்தது; எல்லாம் விரும்புதலைச் செய்கின்ற ஆதித்தமண்டிலமோ தன்னொளி விசும்பின் மேலே செல்லும்படி விளங்கிய கதிர்கள் மழுக்கமடைந்து எனக்குத் துன்பத்தைத்தந்தது; முற்கூறியயாவும் எல்லாவற்றையுந் தந்தவற்றின்மேலும் மெல்லென வாடைக்காற்றுப் பனித்துளியைத்தூவுதலாலே கூட்டிலேதன் பெடையைப் பிரியாதுபுணர்ந்திருக்கும் அன்றிற்பறவையின் இயங்குகின்ற குரலுடனே அளாவிக்கொண்டு இராப்பொழுதென்பதும் என்செயலெல்லாம் அழியும்படி கையறவைத்தந்தது; கண்டோர்யாவராலும் இரங்கும்படியாகிய நிலைமையையுடைய யான் இவ்வளவு துன்பஞ்சூழ்ந்துகொள்ள இவற்றிடையே இனி எவ்வண்ணம் உய்குவேனோ? எ - று.

எல் - ஒளி; இயக்கமுமாம். புலம்பு - துன்பம்; தனிமையுமாம். வடந்தை - வடக்கினின்றுவருங்காற்று; வாடையென்பதுமது. கையறவு - செயலறவு.

காமங்காழ்கொண்டமையால் மடலேறுதலும் வரைபாய்தலுமன்றிப் பிறிதொன்று செய்யக்கிடந்ததில்லையென மடற்பரிகொண்டமையின், காமம் மடலைத்தந்ததென்றான். ஞாயிறுமறைய மாலையெய்தலும் தனித்திருக்க ஆற்றாது புலம்புமேற்கொள்ளுதலானே மண்டிலம் புலம்புதந்ததென்றான். இரவுமுற்றும் தனிமையிலே புலம்பிக்கிடந்தமையாற் கையறவு தந்ததென்றான்.. இவையனைத்துமில்லையேல் யான் கருதுகிலேனென்றவாறு. துன்புற்றுத் தஞ்சமென்றாரைக் காக்கும் மரபினனாதலின் யான்

## மூலமும் உரையும்

களறு

படுந்துன்பம் இத்தன்மையதென் றறிவுறுத்தி னென்பால் இரங்குவளெனத் தோழிகேட்பக் கூறினுளயிற்று. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கடுஉ)

## கருரு. தனிமகனர்

பாலை: இது, பிரிவிடைமெலிந்த தலைவிசொல்லியது.

எ - து, தலைவன் பிரிதலால் மெலிவுற்ற தலைவி தன்னெஞ்சம் எப்பொழுதும் அவன்பாற்சென்றமையும் தன் தனிமையும் குறிப்பாற்கூறுவாள் எழிலிசென்றாற்போல என்னெஞ்சம் அவர்பாற்சென்றொழிந்ததனலே தனிமகன்போன்று என்னுடம்பு இங்கிருக்கலாகியதென வருந்திக் கூறுகிறப்து.

குணகடல் முகந்து குடக்கோ்பு இருளி
மண்திணி ஞாலம் விளங்கக் கம்மியர்
செம்புசோரி பானையின் மின்னிஎவ் வாயும்
தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி
ரு. தென்புல மருங்கிற் சென்றற் றாங்கு
நெஞ்சம் அவர்வயின் சென்றன
ஈண்டொழிந்து
உண்டல் அளித்தென் உடம்பே
விறற்போர்
வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி

வாழ்வோர் போகிய பேரூர்ப்
பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே.

உரை :—கீழ்கடலிலே சென்றிறங்கி நீரைமுகந்தெழுந்து மேல்பாலேகி யாங்கும் இருளடையும்படி இருண்டு அணுத்திணிந்த இவ்வுலகம் அவ் இருளினின்றுபுலப்படுமாறு கருமகாரர் செம்பினாலேசெய்தபானையைக் கடைந்தாற்போல மின்னி எங்குந் தனது பெய்யுந்தொழிலை மேற்கொண்ட இனிய இடிமுழங்குதலாகிய குரலையுடையமேகம் அங்ஙனம் பெய்யுந் தொழில்முடிந்தவுடன் எழுந்து தென்பாலேகியொழிந்தாற்போல, என் னெஞ்சம் இங்கு வைகுவதொழிந்து அவரிடஞ்சென்று அங்குவைகி அவ் வண்ணமே ஒழிந்துபோனதனாலே வலிய போர்செய்யவல்ல வெய்ய சினத்தையுடைய பகைவேந்தனது படை அலைத்தலாலே கலங்கி ஊரில் வாழுங் குடிமக்களெல்லாங் குடியோடி அகன்றுவிட்ட பெரிய பாழ்நகரத் தைக் காவல்செய்திருந்த ஒரு தனிமகனைப்போன்று உண்ணுதலாலே என்னுடம்பு இங்குக் காக்கப்படுந்தன்மையதாயிராநின்றது; எ - று.

செம்புசொரிபானை - செம்பாற்செய்து கடைந்துவைத்தபானையுமாம். ஏர்பு - எழுச்சி. மண் - அணு. வாழ்வோர்போகியவூர் - பிறபெயரெஞ்ச நின்றது. இஃது ஆங்குநெஞ்சழிதல். ஏனை **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். **கைகோள்** - இரண்டற்கும்பொது. கேட்போர் யாருமின்மையாலே தானேசொல்லியாறுதல். பாழ்காத்திருந்த தனிமக னென்னும் அடைச்சிறப்பாலே இதுபாடிய ஆசிரியர் தனிமகனெனப் பட்டார்போலும். (௧௫௩)



## ௧௫௪. நல்லாவூர்கிழார்

குறிஞ்சி : இஃது, இரவுக்குறித்

கடாயது.

தலைவன்சிறைப்புறமாக வரைவு

எ - து, இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறத்தானாக ஆற்றது ஏதங் கூறி இரவுக்குறிமறுத்து வரைவுடன்படுத்தவேண்டித் தோழி தலைவியை நோக்கி எடீ, இம்மழைமுழக்கத்தும் புலிமுழக்கத்தும் அயர்ந்துதுங்காநின்றனைபோலும்; இவ்விரவு அவர்வாராதிருப்பின் நல்லதாகும்; மலைநெறியை நினைக்குந்தோறும் என்னெஞ்சம் அங்கே இயங்காநின்றதென்று சோர்ந்து கூறுநிற்பது.

கானமுங் கம்மென் றன்றே வானமும்
வரைகிழிப்பு அன்ன மையிருள் பரப்பிப்
பல்குரல் எழிலி பாடோ வாதே
மஞ்சுதவழ் இறும்பில் களிறுவலம் படுத்த
வெஞ்சின உழுவைப் பேழ்வாய் ஏற்றை
அஞ்சுதக உரறும் ஓசை கேளாது
துஞ்சுதி யோஇல தூவி லாட்டி
பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்
நீரடு நெருப்பில் தணிய இன்றவர்
வாரா ராயினோ நன்றே சாரல்
விலங்குமலை யாராறு உள்ளுதோறும்
நிலம்பரந்து ஒழுகும்என் நிறையில்
நெஞ்சே.

உரை:—ஏடி, வலியிலாதாய், காடு கம்மென்றொலியடங்குவதாயிற்று; ஆகாயமும் மலைமுழைபோன்ற கரிய இருளைப்பரப்பிப் பலவாய இடி முழக்கத்தையுடைய மேகம் முழங்குவதும் நீங்குகின்றிலது; மேகந் தவழுங் குறுங்காட்டினிடத்திலே களிற்றை வலத்தேவிழக்கொன்ற வெய்ய சினத்தையும் அகன்ற வாயையுமுடைய புலியேறு யாவரும் அஞ்சுமாறு முழங்காநிற்கும்; இவ்வோசையனைத்தையும் செவியில் ஏறட்டுக்கொள்ளாது நீ தூங்குகின்றனையோ? பெரியதுன்பம்வந்து மோதுதலானே குற்றப்பட்ட நெஞ்சத்தின் கொதிப்பானது நீர்பெய்த நெருப்புப்போலத் தணியும்படி இன்று அவர் வாராதுவிட்டாலோ நல்லதாகும்; சாரலிலே குறுக்கிட்ட மலையின்கண்ணே செல்லுநெறியை நினையுந்தோறும் நிலையில்லாத என்னெஞ்சமானது அந்த நிலத்தின்கட்பரந்து செல்லாநிற்கும்; யான் யாதுசெய்யமாட்டுவேன்? எ – று.

கம்மெனல் - ஓசையடங்குங்குறிப்பு. கிழிப்பு - குகை; பிளப்புமாம். பாடு – ஓசை. இறும்பு - சிறுகாடு; மலையுமாம். வலம்படுத்தல் - வலப்புறத்து விழும்படிகொன்றுசாய்த்தல். அடிபட்டபொழுது வலப்பக்கத்தில் விழுந்ததனையே புலிதின்னுமென்ப; "இடம்படின் மிசையாப் புலி" என்றார், (உக) அகத்தினும். புகர் - குற்றம். இல-ஏட என்னும் விளிப்பெயர். "எவன்இல குறுமக ளியங்குதி" என்பது அகம். (கஉ) தூ-வன்மை.

## மூலமும் உரையும்

களள

உராறுதல் - முழங்குதல். விலங்குதல் - குறுக்கிடுதல். இஃதழிவில்கூட்டத்தவன்புணர்வு மறுத்தல். வானமும் எழிலிபாடோவாதென்றது இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது.

அஞ்சவேண்டுவழியஞ்சா துறங்குதலாலே துஞ்சுதியோவென்றாள். மெல்லியலாதவின், தூவிலாட்டியென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கஇச)

# கருரு. பராயனர்

**நெய்தல் :**

(க.) இஃது, இரண்டாங்கூட்டத்துத் தலைவியை எதிர்ப்
பட்டுத் தலைவன் சொல்லியது.

எ - து, இடந்தலைப்பாடுகொண்டு கூடுமாறுசென்று தலைமகளை வினவிய தலைமகன் தன்னெஞ்சைநோக்கி, யான் இங்குநின்றுளை எடீ, நின்றோய், நின்னைவணங்கி வினவுகின்றேம்; நீதானொரு தெய்வமகளோ பிறளொருமடந்தையோ கூறுயென வினவியபொழுது நகைதோன்றியது, கண்பனி பரந்தனவாதலின் முயங்குங்குறிப்புடைய மக்கட்பகுதியள் காணென மகிழ்ந்து கூறுகிற்பது.

(உ) உணர்ப்புவயின் வாரா வூடற்கட்டலைவன் சொற்ற

தூஉமாம்.

எ - து, பரத்தையிற்பிரிந்துறைகாலை மனைவி பொறையுயிர்த்தமை வெள்ளணியாலறிந்துபோந்து பள்ளியிடத்தானுகிய தலைமகன் ஆங்குவூடிய தலைமகளை இரந்துபணிந்து பலவாறுணர்த்தலும் உணராளாய் வூடனீட அவ்வழி தலைமகன் தன்னெஞ்சைநோக்கி யான் இங்குநின்றுளை 'நீயார், நின்னைவணங்கி வினவாநின்றேம், நீதானொரு தெய்வமகளோ பிறளொரு மடந்தையோ' வென வினயபொழுது நகையுங் கண்ணீருந் தோன்றின வாதலின் முயங்குங்குறிப்புடையள்காணென ஆற்றிக்கூறுகிற்பது.

ஒள்ளிழை மகளிரோடு ஓரையும் ஆடாய்

வள்ளிதழ் நெய்தல் தொடலையும்

புனையாய்

விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்

யாரை யோநின் தொழுதனம் வினவுதும்
கண்டோர் தண்டா நலத்தைத் தெண்டிரைப்
பெருங்கடல் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை என்றனென் அதனெதிர்
முள்ளெயிற்று முறுவலுந் திறந்தன
பல்லித ழுண்கணும் பரந்தவால் பனியே.

உரை :—ஒள்ளிய அணிகலங்களையுடைய ஆயமகளிருடன் கூடிப் பாவையைக்கொண்டு விளையாடும் விளையாட்டையும் ஆடாது பெரிய இதழையுடைய நெய்தன்மலர்மாலையையும் புனையாது விரிந்தபூவையுடைய கடலருகுள்ள சோலையின்கண்ணே ஒருபானின்றமாதே, நோக்கினோராலே

கெடாத நலத்தினையுடையாய், மடந்தாய், நின்னை வணங்கி வினவுகின்றேம்; 'தெளிந்த அலையையுடைய பெரிய கடற்பரப்பின்கண் விரும்பியுறைகின்ற நீரரமகளோ, கரியகழியருகிலுள்ள இங்கு நிலைமைகொண்டுறைகின்ற வொருமாதோ, வேறியாவளோ இப்பொழுது சொல்லுவாயாக' என்று கூறினேம்; அங்ஙனங் கூறுதலும் அதற்குவிடையாக முட்போன்ற கூரிய பற்களினின்று நகையுமுண்டாயின; ஈரிமைகளையுடைய மையுண்ட கண்களும் பனிபரந்தன; ஆதலின் யாம் முன்புமுயங்கிய இவளே இப்பொழுதும் அம்முயங்கற்குறிப்புடையள்காண்: எ - று.

ஓரை - பஞ்சாய்க்கோரையாலே பாவைசெய்துவைத்து விளையாட்டயர்வது. வள்ளிதழ் - பெரிய இதழ். தொடலை - மாலை. கண்டோர்தண்டா நலன் - பார்ப்போராலே கெடாதநலன், கண்ணெச்சில். (திருட்டிதோடம்.) பல்லிதழ், இதழ் - இமை.

தொழுதனம் வினவுதுமென்றதனலே தலைமகன் இளிவந்தொழுகுதல் காரணத்தோடு முயங்குதற்குறிப்பு முணர்த்தவேண்டி நகையெழுதலின் முறுவல்திறந்தமைகூறினன். பெருநாணினளாதலின் அதனலாய அச்சத்தாலே கண்ணீர்தோன்றியவாறு. மெய்ப்பாடு, முறுவல்திறந்தமை ஐந்தாங்காலத்து மெய்ப்பாட்டின்கண்ணதாகிய கண்டவழியுவத்தலின்பாற்படுத்தின் அதுதானும் புறத்தார்க்குப் புலனுகி அலரெழக்கண்டு இற்செறிக்கப்பட்டபின்னர் ஒருநாட்கண்டவழிக் கழியுவகைமீதூர்தலின் நிகழ்வதாதலின் ஈண்டைக்கேலாததாகும்; அதனைக்கடியின் இரண்டாங் கூட்டத்துக்கு நிகழ்ச்சி ஆசிரியர்கூறிற்றிலராதலின் முதன்மைப்பாட்டின் கண்ணதாகிய நகுநயமறைத்தலின் ஒருபுடையொப்புமைநோக்கி அதன்பாற்படுத்துக. பயன் - தலைமகன்தேறல்.

(உ.) (உரைஒருபுடைஒக்கும்) ஒரேகாலத்து நகையும் அழுகையும் தோன்றுதலின் முயங்குதற்கண் விருப்பும் பரத்தையிற்பிரிந்ததனல் அழுகையும் உடனுண்டாயதெனக்கொள்க. மெய்ப்பாடு - உவகை. பயன் - வாயில்பெற்றுய்தல். (கருரு)

## கருசு. கண்ணங் கொற்றனர்

துறிஞ்சி: இஃது, இரவுக்குறி மறுத்தது.

எ - து, இரவுக்குறிவந்ததலைவனை வரைவுடன்படுத்தவேண்டி அவனை நோக்கி, நீ இரவுவாராநின்றனை; எமர்சீற்றத்திற்பெரியர்; மழைவந் திருண்டதுகாண்; யாம் நாளைமுதலாகத் தினைப்புனங்காவலுக்குச் செல்லுகிற்பேம்; அதனால் நமது துன்பந்தீர ஆண்டுப் பகற்பொழுது வருவாயாகவென இரவுக்குறிமறுத்துக் கூறுகிற்பது.

நீயே, அடியறிந்து ஒதுங்கா ஆரிருள்
வந்தேம்
கடியுடை வியனகர்க் காவல் நீவியும்
பேரன் பினையே பெருங்கல் நாட
யாமே, நின்னுநின் மலையும் பாடிப்
பண்ணுள்
ரு. சிறுதினை காக்குவஞ் சேறும் அதனால்
பகல்வந் தீமோ பல்படர் அகல

மூலமும் உரையும்

கஎ௬

எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி
அரியல் ஆர்ந்தவ ராயினும் பெரியர்

பாடிமிழ் விடர்முகை முழங்க
கo. ஆடுமழை இறுத்ததெங் கோடுயர்
குன்றே.

உரை:—பெரியமலைநாடனே! நீதானும் இரவில் வருநெறிதவறின் அந்நெறியை மெல்ல அடியைத்தறிந்து ஒதுங்கிச் செல்லுதற்குங் கூடாத நிரம்பிய இருட்பொழுதில்வந்து காவலையுடைய எமது அகன்றமாளிகையினுள்ளின்கண்ணதாகிய காவலையுங்கடந்து வந்துகூடிப் பெரிய அன்பினையுடையையா யிராநின்றனை; கொறுக்கச்சிமுளைத்தடர்ந்த பெரியமலைப் பக்கத்துள்ள சிறுகுடியின்கண் எமர் கள்ளைமிகுதியாகவேபருகி மயங்கினவராயினும் அவர்தாம் வெகுளியில் மிகப் பெரியவராயிராநின்றார்; அன்றியும், இயங்குகின்றமேகம் தான் முழங்குகின்ற இடியினொலி பிளவுபட்ட மலைமுழையின்கண்ணும் எதிரொலிமுழங்கும்படி எமது கொடுமுடியுயர்ந்த குன்றின்கண்ணேவந்து தங்கியிராநின்றது; இரவின்கண்ணே முயங்கி நலனுகருமாறு கருதி வாராதேகொள்; மற்றும் யாம் நின்னையும் நின் மலையையும்பாடிப் பற்பலநாளளவும் சிறிய தினைப்புனத்தைக் காக்கும் பொருட்டு நாளையே செல்லாநிற்பேம்; அதனால் எம்முடைய பலவாய துன்பமெல்லாந் தீரும்படியாக நீ பகற்பொழுதிலே ஆங்குவந்து முயங்குவாயாக; எ — று.

எருவை - கொறுக்கச்சி; கொறுக்காத்தட்டை யென வழங்கப்படுகிறது. அரியல் - கள். விடர் - மலைப்பிளப்பு. முகை - முழை; குகை. கோடு - கொடுமுடி. நீவியும் என்னும் எச்சம் அன்பினையென்னுங் குறிப்புமுற்றிணுக்கத்தைக்கொண்டது.

தங்களை அவன் பிரிதற்கு உள்ளம்பொருந்தாமையைப் பேரன்பினையென்றதனாலும் அவனைத் தாங்கள் பிரிதற்கு உள்ளம்பொருந்தாமையை நின்னும் நின்மலையும் பாடி யென்றதனாலுங் குறிப்பித்தாள். எமர் சீற்றத்திற்பெரியரெனவே அவர் எதமிழைப்பரென்றஞ்சி யச்சுறுத்தி அச்சமிக்க வழி இன்பஞ்சிறவாதாகலின் வரற்பாலையல்லையென் றறிவுறுத்தினள். ஆரிருளும் காவலும் மழைமிகுதியுங்கூறியது இரவுக்குறி மறுத்ததாயிற்று. முன்பு பகற்குறி இடையீடுபட்டமையானும் இரவுக்குறி மறுத்தமையானும் வரைவொடுபுகுவாயாக என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கஇக)

## கடுஎ. இளவேட்டனார்

பாலை: இது, பொருள்வயிற்பிரிந்த தலைவன், பருவமுணர்ந்த நெஞ்சிற் குரைத்தது.

எ - து, பின்னர் இளவேனிற்பருவத்து வருவேனென்றுகூறிப் பொருள்வயிற்பிரிந்துபோன தலைமகன் சென்றுவினைமுடிக்குமுன்னம், கூறிய பருவம்வருதலும் அதனையறிந்து தன்னெஞ்சினை நெஞ்சமே, இளவேனில் நாளிலே குயில்கூவும்பொழுதெல்லாம் அவ்வோசையை நம் காதலி கேட்டுக்கேட்டு மாறாது கலுழாநிற்குமேயென் றழுங்கிக் கூறாநிற்பது.



இருங்கண் ஞாலத்து ஈண்டுதொழில் உதவிப்
பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்துப்
பல்பொறி அரவின் செல்புறங் கடுப்ப
யாற்றறல் நுணங்கிய நாட்பத வேனில்

இணர்துதை மாஅத்த புணர்குயில் விளித்தோறும்
நம்வயின் நினையும் நெஞ்சமொடு கைம்மிகக்
கேட்டோறுங் கலுழுமால் பெரிதே
காட்ட
குறும்போறை அயல நெடுந்தாள்
வேங்கை
அம்பூந் தாதுக்கு அன்ன
நுண்பல் தித்தி மாஅ யோளே.

உரை :—பெரிய இடமகன்ற இவ்வுலகின்கண் உயிர்களுக்குரிய நெருங்கிய தொழிலைக்கொடுத்துப் பெருமழைபெய்துவிட்ட பிற்றைநாட் காலையிலே, பல புள்ளிகளமைந்த பாம்பு ஓடும்போது அதன் முதுகுநெளியு மாறுபோல யாற்றுநீர் நுணுகியோடாநின்ற செவ்வியமைந்த இளவேனிற் பருவத்திலே பூங்கொத்துக்கள் நிரம்பிய மாமரத்தின்கண்ணவாகிய பெடையொடுபுணர்கின்ற குயில் கூவும்பொழுதெல்லாம் காட்டின்கணுள்ள சிறிய மலையின்பக்கத்தவாகிய நீண்ட அடியையுடைய வேங்கைமரத்தின் அழகிய பூந்தாது உதிர்ந்தாற்போன்ற நுண்ணிய பலவாய் சுணங்குபரந்த மாமை நிறத்தையுடையாள் நம்பால் நினைந்துவிடுத்த நெஞ்சுடனே அக்குயில் ஒன்றனையொன்றழைக்கின்ற ஓசையைக் கேட்குந்தோறும் காமமானது தன் வரம்புகடந்து மிக அதனாலேபெரிதும் அழுது துன்பமுழவா நிற்குமே; எ - று.

மழையில்லாவிடில் தொழில்யாதும் நிகழாதாதலால் தொழிலுதவிப் பெயல்பொழிந்தவென்றார். "ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும், வாரி வளங்குன்றிக் கால்," (குறள் கச) என்றதனாலும் மழையில்லையேல் தொழிலின்மைதெளிக. உண்டேல் தொழிலுண்மையுமாம். குயிலோசையாலே செவிப்புலன் இன்பமெய்துதல்போல ஏனைப்புலன்களும் ஒரே பொழுதகத்து இன்பமெய்துதல் மயங்கிக்கிடந்தாலன்றி யின்மையின் அதுகருதிக் கேட்டொறுங் கலுழுமேயென் றிரங்கினன். கைகோள் - கற்பு. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கடுஎ)

# கருஅ. வெள்ளைக்குடி நாகனார்

**குறிஞ்சி :** இஃது, ஆறுபார்த்துற்ற அச்சத்தாற் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, இரவுக்குறிவந்து சிறைப்புறத்தானாகிய தலைவன்கேட்டுத் தன்னாலே தலைவியுந்தோழியும்படும் துன்பமறிந்து விரைய வரையுமாற்றானே தோழி தலைவியைநெருங்கி, மலைநாடன் வருநெறியை யான் காணாதிருப்பினும் அதுமறைந்துவந்து என்னையும் என்கண்ணையும் துன்பஞ்செய்வ தொன்றாயிராநின்றதென அழிந்து கூறாநிற்பது.

மூலமும் உரையும் கஅக

அம்ம வாழி தோழி நம்வயின்
யானோ காணேன் அதுதான் கரந்தே
கல்லதர் மன்னுங் கான்கோல் லும்மே
கனையிருள் மன்னுங் கண்கோல் லும்மே

௫.

விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி
புகர்முக வேழம் புலம்பத் தாக்கிக்
குருதி பருகிய கோழுங்கவுள் கயவாய்

வேங்கை முதலோடு துடைக்கும்

ஓங்குமலை நாடன் வரூஉம் ஆறே.

உரை :—தோழீ! வாழி; யான்கூறுகின்ற இதனைக்கேட்பாயாக; மலையின்கணுள்ள பிளந்தமுழையிலே பதுங்கியிருந்த வெய்ய சினத்தையுடைய கரியபுலியானது, புள்ளிகளமைந்த முகத்தையுடைய யானை வருந்தும்படி மோதி அதன் இரத்தத்தைப்பருகிய கொழுவியகவுளையுடைய பெரிய வாயை வேங்கையின் அடிமரத்தில் உரிஞ்சித் துடைக்கின்ற உயர்ந்த மலைநாடன் வருகிறநெறியை இன்றளவும் நான்கண்டதேயில்லை; அங்ஙனமிருந்தும் அந்நெறியானது மறைவாக என்பால்வந்து மலைவழியிலே பொருந்தியிருக்கின்ற காட்டின் வடிவங்கொண்டு என்முன்னின்று இதுதான் அவன்வருகின்ற காடென்பதனை நீ காணென்று என்னைக் கொல்லாநிற்கும்; மிக்க இருள்வடிவமாய்நின்று இதுதான் அவன்வருகின்ற இருட்பொழுதென்று என்கண்களைக் கொல்லாநிற்கும்; இத்தகைய காட்டின்கண் இருட்பொழுதில் அவன் வருவதனைக்குறித்து யான் யாது செய்யமாட்டுவேன்? எ - று.

கனை - மிகுதி. கயவாய் - பெரியவாய்.

நெறியும் அதிலுள்ள காடும் தன்னைக்கொல்லாநிற்குமென்றது அத் தகையகொடிய நெறியின்கணுள்ள காட்டில் வரற்பாலனல்லனென இரவுக்குறி மறுத்து வரைவுடன்படுத்தியதாயிற்று. இஃது அவன்புணர்வு மறுத்தல்.

உள்ளுறை :—புலி வேழத்தின்குருதிபருகி வேங்கைமரத்திலே சென்று துடைக்குமென்றது, ஊராரெடுக்கும் அலரானது என்னை வருத்தி அன்னைகாதினுஞ் சென்றுவிட்டதென்பதாம். மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் - இரவுக்குறிமறுத்து வரைவு கடாதல். (கடுஅ)

## கடுகூ. கண்ணம்புல்லனார்

**நெய்தல்:** இது, தலைவியின் ஆற்றாமையும் உலகியலுங் கூறி வரைவுகடாயது.

எ - து, பகற்குறிவந்தொழுகுந் தலைமகனைத் தோழி வரைவுகடாவு வாளாய், யாம் பகற்பொழுதினை இங்குப்போக்கி மாலையிலே பாக்கம் போகுவமாயின் ஆங்குவருவதற்குத் தலைவி வருந்தாநிற்குமென அவளது ஆற்றாமையும், யாமும் வருதியென்றழைக்கும் வலியிலேமாதலின் நினது

*தேர் எம் பாக்கத்தார்மகிழ்ந்து கொண்டாடும்படி ஆங்குவந்து தங்குவதாக என்று தலைவன் தங்கும்வழி எதிர்கொண்டு தமர் வருவிருந்தயர்வதாகிய உலகியலுந் தெளியக் கூறுநிற்பது.*

மணிதுணிந்து அன்ன மாயிரும் பரப்பின்
உரவுத்திரை கெழீஇய பூமலி பெருந்துறை
நிலவுக்குவித்து அன்ன மோட்டுமணல் இடிகரைக்
கோடுதுணர்ந்து அன்ன குருகொழுக்கு எண்ணி
எல்லை கழிப்பினம் ஆயின் மெல்ல
வளிசீத்து வரித்த புன்னை முன்றில்
கொழுமீன் ஆர்கைச் செழுநகர்ச் செலீஇய
எழுவெனின் அவளும் ஒல்லாள் யாமும்
ஒழியென வல்ல மாயினம் யாமத்து
உடைதிரை ஒலியில் துஞ்சு மலிகடல்
சில்குடிப் பாக்கங் கல்லென
அல்குவது ஆகநீ அமர்ந்த தேரே.

உரை:—நீலமணி களங்கமறத் தெளிந்திருந்தாற்போன்ற கரிய பெரிய கடனீர்ப்பரப்பின் வலிய அலையோங்கி மோதுகின்ற புன்னைமலர்மிக்க பெரிய துறையின்கண்ணே நிலவைக் குவித்துவைத்தாற்போன்ற உயர்ச்சியையுடைய மணன்மேடு இடிந்துசரிந்த கரையின்கண்ணே நின்று சங்குகளைக் குலையாகத் தொடுத்தாற்போன்ற குருகுகளின் வரிசையை யெண்ணிப் பகற்பொழுதை நின்னெடுபோக்குவேமாயின் மெல்லக்காற்றடித்துப் பெருக்கிக் கோலஞ்செய்த புன்னைமரம்பொருந்திய வாயிலையுடைய கொழுவிய மீனுணவையுடைய வளப்பமிக்க மனையகத்துச் செல்லும்பொருட்டு நீ எழுந்து வருவாயாகவென்றால் அதற்கவளுடன்படுவாளல்லள்; யாமும் அத் தலைவியைநோக்கி 'நீ கொண்ட உள்ளக்கருத்தை யொழிப்பாயாக' என்று கூறுந் தகுதிப்பாடுடையேமல்லேம்; ஆதலால் சேர்ப்பனே, நடுயாமத்து முரிந்துவிழுகின்ற அலையினொலியைக்கேட்டும் துயிலாநின்ற நிரம்பிய கடற்கரையின் கண்ணதாகிய சிலவாகிய குடியிருப்புக்களையுடைய எம்மூரில் யாவருமெதிர்கொள்ளுமகிழ்ச்சியாலே கல்லென்னு மொலியுண்டாம்படி நீ விரும்பியதேர் தங்குவதாக; எ - று.

துணிவு - தெளிவு. வரித்தல் - கோலஞ்செய்தல்.

நீ போயபின் இங்கு நின்னொடு முயங்கிய இடனையும், ஆடியதுறையையும் நோக்கி நோக்கி மெலிந்திரங்காநிற்குமாதலி னெழுகவெனின் ஒல்லாளென்றாள். தான் குற்றேவல் மகளாதலின், அவள் கருதியவழியொழுகுமியல்பினேனென்பாள், ஒழியெனவல்லமாயினமென்றாள். நீ பாக்கம்புகுந்தனை யென்பதறிவளேல் இரவிடைமுயங்கி மகிழ்தலுமாகுமென்றுகருதி எழுகவெனுமுன் வருவளாதலின் தேர் பாக்கத்து அல்குவதாக என்றாள். எதிர்கொள்ளுமாறு வருதல் வரைந்தாலன்றி இன்மையின் வரைவுகடாயதாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

(கனிக)



கசுO. ....................

குறிஞ்சி : இது, கழற்றெதிர்மறை.

எ - து, பாங்கற்கூட்டத்துக், கற்றறிபாங்கன் தலைவனை நீ ஒருமடமகளாலே நின்னுள்ளமழிதலின் நினக்கு நயனும், நண்பும், நாணும், பயனும், பண்பும், பிறவுமமைந்திலவாலோவென்றற்கு அவன் என்னெஞ்சினுள்ளாளாகிய இவ்வொருத்தியினது கண்ணைநோக்குமுன் நீ கூறியவெல்லாம் உடையேனுயிருந்தேன்காணெனை அழிந்து கூறுநிற்பது.

நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினும் உடையேன்* மன்னே
கம்மென
எதிர்த்த தித்தி ஏரிள வனமுலை
௫. விதிர்த்துவிட் டன்ன அம்நுண்
சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தல் செம்பொன்
திருநுதற் பொலிந்த தேம்பாய் ஓதி
முதுநீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர்மலர்ப் பிணையல் அன்னவிவள்
௧௦. அரிமதர் மழைக்கண் காணா வூங்கே.

உரை :—மேன்மேலே தோன்றியதித்தியையும், எழுச்சியையுடைய இளைய அழகிய கொங்கையின்மேலே அள்ளித்தெளித்தாற்போன்ற அழகிய நுண்ணியதேமலையும், ஐம்பகுதியாகப் பகுக்கப்பட்ட சிவந்த விளங்கிய நெற்றிமேலே பொலிவுபெற்ற தேன்பரவிய கூந்தலாகிய ஓதியையும் உடைய இவளுடைய நாட்பட்ட நீர்பொருந்திய பொய்கையிலே மலர்ந்த குவளையின்மலரை ஒன்றோடொன்று எதிர் எதிர் வைத்துத் தொடுத்தாற் போன்ற செவ்வரிபரந்த மதர்த்தகுளிர்ச்சியையுடைய கண்ணையும் யான் காண்பதன்முன் உவ்விடத்தே யாருடனும் விளங்கின கலந்த உறவையும், சுற்றந்தழுவலும் பகைவரை வசித்தலுமாகிய இருவகை நட்பையும், தன்னோடொவ்வாத தாழ்ந்தார்மாட்டு ஒன்றும் இரவாதவாறு பெற்றநாணம் நன்குடைமையையும், பிறர் இரந்தவழி நன்னெறியிலே கரவாமலீயுங் கொடையையும், தீயசெயல்கண்டவிடத்து அச்செயலில் உள்ளஞ்செல்லாதவாறு மீட்டு நன்னெறிக்கண்ணே நிறுத்தும் பண்பையும், உலகவொழுக்க மறிந்தொழுகுவதனையும் நும்மினுங்காட்டில் ஆராய்ந்து அவற்றை யானுடையனாகியிருந்தேன்; இப்பொழுது இவள் கண்ணைநோக்கியவழி அவையாவும் என்மாட்டு அவ்வண்ணம் இல்லையாகிக்கழிந்து வேறு வண்ணமாயுண்டாயின; இங்ஙனம் வேறுவகையெய்தியபின் நீ இரங்கியாவதென்னைகொலாம்; எ - று.

மன் - கழிவு. விதிர்த்தல்-உதிர்த்தல். கூந்தலோதி-இருபெயரொட்டு. இவள் என்றது தன்னுள்ளத்திடத்தாளென்பதைச் சுட்டியது. தித்தி - வயிற்றின்மேலே தோன்றுவது. தேமல் - கொங்கை முதலியவற்றிலே தோன்றுவது.

---

(பாடம்) * நும்மினும் அறிகுவேன்.

அவையாவும் வேறுவண்ணமாயுண்டாயினவென்றான். வேறுபவாறு:— இனி இவளையன்றிப் பிறருறவு இன்பஞ்செய்யாமையின் அவ்வுறவு வேண்டாமை, இது - நயன். இருவகைநட்பும் அவண்மாட்டன்றியின்மை, இது - நண்பு. தாழ்ந்தபிறப்பாயபெண்பால்மாட் டிரத்தற்குத் துணிதலாலே தான் கோடற்குரிய நாணமின்மை, இது - நாண். பிறர்பாலன்றி இவள் விரும்பின் தன் உயிரையுங்கொடுக்குங்கொடைமை, இது - பயன். களவு தீதென்றறிந்துவைத்தும் அவ்வழியிலேயொழுகும் நன்மக்கட்பண்பின்மை, இது - பண்பு. உலகவொழுக்கம் அறிந்துவைத்தும் அதனைக் கைவிட்டு இணைவிழைச்சு மேற்கொண்டுழக்குந்தன்மை, இது - பாடறிந்தொழுகல். மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றாமையுரைத்தல். (கசo)

கசுக. ..................

முல்லை :

இது, வினைமுற்றிப்பெயருந் தலைவன் தேர்ப்பாகன்கேட்பச் சொல்லியது.

எ - து, போர்முடித்துமீளுந் தலைவன் தான் கூறுவதனைத் தேர்ப்பாகன் கேட்டு விரையத் தேர்செலுத்தியதன்பொருட்டு மகிழவேண்டி அவனை நோக்கி நமதுவருகையைக் காக்கைப்புள்ளினம் கரைந்து தெரிவித்தனவோ நம் காதலி மகிழ்தற்குக் காரணந்தான் யாதென உவந்து கூறுகிற்பது.

இறையும் அருந்தொழில் முடித்தெனப்

பொறைய

கண்போல் நீலம் சுனைதொறும் மலர

வீதா வேங்கைய வியனெடும் புறவின்

இம்மென் பறவை ஈண்டுகிளை இரிய
நெடுந்தெரு அன்ன நேர்கோள் நெடுவழி
இளையர் ஏகுவனர் பரிப்ப வளையெனக்
காந்தள் வள்ளிதழ் கவிகுளம்பு அறுப்பத்
தோள்வலி யாப்ப ஈண்டுநம் வரவினைப்
புள்ளறி வுறீஇயின கொல்லோ

தெள்ளிதில்

காதல் கெழுமிய நலத்தள் ஏதில்
புதல்வற் காட்டிப் பொய்க்குந்

திதலை யல்குல் தேமொழி யாட்கே.

உரை:—நம்முடைய அரசனும் செய்தற்கரிய போர்த்தொழிலை முற்று வித்ததனுலே, மலையிலுள்ள சுனைகள்தோறும் மாதர்கண்போலுங் குவளை மலராநிற்ப, மலருதிர்ந்து பரவுகின்ற வேங்கைமரங்களையுடைய அகன்ற நெடியகாட்டின்கண்ணே இம்மென ஒலிக்கின்ற வண்டுகளினெருங்கிய கூட்டம் இரிந்தோடாநிற்ப, சோணாட்டின்கணுள்ள 'நெடுந்தெரு' என்னும் ஊர்போன்ற அழகுபொருந்திய நெடியவழியிலே நம்முடையவீரர் ஆங்காங்குத் தங்கிச்செல்லாநிற்ப, வெண்காந்தளின் வளவிய இதழ்கள் சங்கு உடைந்துகிடந்தாற்போலக் கிடக்குமாறு குதிரையின் கவிந்தகுளம்பு மிதித்து அறுக்காநிற்பத், தோள்களிலே வலி பிணித்துநின்றாற்போல மிக நெருங்கிவருகின்ற நம்முடைய வருகையை, நம்பால் ஆசைமிக்க நலத்தை

யுடையளாய் யாதுமில்லாத வேறொன்றனைத் தன் புதல்வனுக்குக்காட்டிப் பொய்ம்மொழிகூறி ஆற்றுவித்து மகிழாநிற்கும் தித்திபரந்த அல்குலையும் இனிய மொழியையுமுடைய நம் காதலிக்கு நிமித்தங்காட்டுங் காக்கை யாகிய புள்ளினங்கள் கரைந்து அறியும்படி தெரிவித்தனவோ? இங்ஙன மகிழ்ந்திருப்பதற்கு வேறுகாரணமில்லையே; எ – று.

" எங்கில மருங்கிற் பூவும்" (தொ-பொ-கக) என்றதனாலே முல்லையிற் காக்கைகொள்க. முடித்தென ஈண்டு நம் வருகையை மொழியாட்குப் புள்ளறிவுறீஇயினவோவெனக் கூட்டுக. இறையென்றதனாலே தலைவன் வினைவல பாங்கனென்க.

அவள் மகிழ்ச்சியுற்றுப் புதல்வனைக்காட்டி ஆற்றுவித்ததுகருதி மகிழ்ச் சிக்குக் காரணம் புள்ளறிவுறீஇயினவோவென்றான்; தன் வருகையை இளையர்வந்து கூறுமுன்னே தேர் விரைந்துவந்தமையால் இது பாகனை மகிழ்வித்தவாறு. பறவையின்கிளை இரியவென்றது, தேர் விரைந்துவரு கின்ற ஆரவாரத்தால். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (கசுக)

கசுஉ. .................. பாலை:

இஃது, உடன்போதுவலென்ற தலைவிக்குத் சொற்றது.

தலைவன்

எ – து, தலைவனுடன் பின்வருவேனென்ற தலைவியை நோக்கி 'நீ மாலைப்பொழுது தனியிருப்பதற்காற்றேனாதலின் நும்மொடுவருவேன்' என்கின்றனை, கொடிய பாலைநெறியின்கண்ணே செல்லுகின்ற வன்மை உடையையாதல் நினக்குப் பொருந்துவதொன்றாமோ, ஆகாதன்றே ? ஆதலின் நீ வரற்பாலையல்லைகாணெனத் தெளியக் கூறாநிற்பது.

மனையுறை புறவின் செங்கால் பேடைக்
காமர் துணையொடு சேவல் சேரப்

புலம்பின்று எழுதரு புன்கண் மாலைத்
தனியே யிருத்தல் ஆற்றேன் என்றுநின்
பனிவார் உண்கண் பைதல கலுழ
நும்மோடு வருவல் என்றி எம்மோடு
பெரும்பெயர்த் தந்தை நீடுபுகழ் நெடுநகர்
யாயொடு நனிமிக மடவை முனாஅது

வேலின் இற்றித் தோயா நெடுவீழ்
வழிநாள் ஊசலின்* கோடை தூக்குதோறும்
துஞ்சுபிடி வருடும் அத்தம்
வல்லை யாகுதல் ஒல்லுமோ நினக்கே.

உரை:—பெரிய சீர்த்தியையுடைய தந்தையினது நீண்ட புகழ் பொருந்திய நெடிய மாளிகையின்கண்ணே ஈன்றதாயொடு பிரியாது வைகும் மிக்க இளமையுடையாய், முன்பு 'மனையிடத்து உறைகின்ற

---

(பாடம்) * வழிநாளூசல்.

சிவந்தகாலையுடைய புறவின்பேடையாகிய அழகிய தன் துணையொடு அதன் ஆண்புறவாகிய சேவல் கூடி மகிழாநிற்ப, அவற்றைநோக்கி வருத்தமுடையதாகும்படி எழுகின்ற துன்பஞ்செய்யு மாலைப்பொழுதிலே தனியே இருப்பதற்கு ஆற்றேனவேன்' என்று நின் நீர்வடிகின்றமையுண்டகண்கள் துன்புற்றனவாய்க் கலுழாநிற்ப எம்மைநோக்கி 'யான் நும்முடனே நீயிர் செல்லுமிடத்து வருகிற்பேன்' என்று கூறுகின்றனை; வேற்படைபோலும் இலையையுடைய இத்திமரத்தினுடைய நிலத்திலே படாது தொங்குகின்ற நெடியவிழுது வைகறையில் மேல்காற்று வீசுந்தோறும் ஊசலாடுதல்போன்று கீழே துயிலுகின்ற பிடியானைமீது புரளாநிற்கும் பாலையின்கண்ணேசெல்லுதல் நினக்குப் பொருந்துவதொன்றாகுமோ? ஆகாதன்றே, ஆதலின் நீ வரற்பாலையல்லைகாண்; எ - று.

இற்றி - இத்திமரம். இச்சிமரமென இக்காலத்து வழங்கப்படுவது. முனாது - முன்பு; யான் புறப்படுமுன்பு வருவலென்றி யென்க.

புறவின் சேவலும் பெடையுங் கூடக்காண்டலின் வேட்கை தாங்காது தானுங் கூடக்கருதித் தனியிருத்தலாற்றேனென்றாள்; அதனைத் தலைமகன் கொண்டுகூறினனாயிற்று. நீரும் நிழலுமின்றி முள்ளும்பரலும் நிரம்பிய பாலையாதலை நீபுறம்போந்து அறிந்திலையென்பான் தாய்மருங்ககலாத நனிமிக இளமையையென்றான்.

இறைச்சி: —கோடைதூக்குதொறும் இத்திவீழ் பிடியைவருடாநிற்குமென்றது, யான்சென்று மீண்டுவருமளவும் நினக்கு இடையே ஆற்றுமையுண்டாகியவழி தோழி நின்னை ஆற்றுவியாநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - மருட்கை. பயன் - தலைவியை ஆற்றுவித்தகலுதல். (கசுஉ)

## கசுந. ...............

## நெய்தல்: இது, வரைவுமலிந்து சொல்லியது.

எ – து, தலைமகன் வரைந்துகொள்ளும்வண்ணம் வருகின்றதனை யறிந்த தோழி, கழிபேருவகையளாய்த் தலைவியைநெருங்கி நம் துறைவனுடைய குதிரைகள் நாள்தோறும் வந்துவந்தலைதலால் அவற்றை நோக்கி என்னெஞ்சம் வருந்தாநிற்கும்; அதுகழிந்தது; இனி மணம்புரிதல் காரணமாக அவற்றுக்குத் துன்பமின்மையால் அவை இளைப்பொழிவனவாகவென்று மாவின்மேல்வைத்து மகிழ்ந்து கூறுநிற்பது.

உயிர்த்தன வாகுக அளிய நாளும்
அயிர்த்துகள் முகந்த ஆனு ஊதையோடு
எல்லியும் இரவும் என்னாது கல்லெனக்
கறங்கிசை இனமணி கைபுணர்ந்து
ஒலிப்ப
ரு. நிலவுத்தவழ் மணற்கோடு ஏறிச் செல்வர
இன்றேன் நெஞ்சம் போலத்
தோன்றுநனி
வருந்துமன் அளிய தாமே பெருங்கடல்
நீல்நிறப் புன்னைத் தமியோண் கைதை
வானம் மூழ்கிய வயங்கொளி நெடுஞ்சுடர்க்

கo. கதிர்காய்ந்து எழுந்தகங் கனலி ஞாயிற்று

வைகுறு வனப்பிற் றோன்றும்
கைதையங் கானல் துறைவன் மாவே.

உரை :—பெரிய கடலருகிலுள்ள கரியநிறத்தையுடைய புன்னையின் பக்கத்தவாகிய தனிமையினிருக்கின்ற தாழையின் ஒள்ளியமடல் நெடிய சுடரையுடையகதிரினாலே இருளைப்போக்கியெழுந்து உள்ளேகொதித்து ஆகாயத்திலேசென்ற விளங்கிய ஒளியையுடைய ஆதித்தனது பாடுசாய்கின்ற அழகுபோலத் தோன்றாநிற்கும்; அத்தகைய தாழஞ்சோலை சூழ்ந்த துறைவனுடைய குதிரைகள், நாள்தோறும் நுண்மணலாகிய துகளை முகந்தெழுந்த அமையாது வீசும் ஊதைக்காற்றின்கண்ணே இது பகலென்றும் இஃது இரவென்றுங் கருதாமல் ஒலிக்கின்ற இனிய ஒலியையுடைய ஒருநிரலாகிய மணிகள் ஒருசேரக் கோத்துக் கழுத்திலேபூட்டப்பட்டுக் கல்லென வொலிக்கும்படியாகத் தன் வெண்மைநிறத்தினால் நிலவுபரந்தாற் போன்ற மணற்குன்றுகளி லேறிச் செல்லுதலானே, என்னெஞ்சம் இப்பொழுதுபோல முன்பே மிக வருந்தியதாயிருந்தது; அந் நெஞ்சின் தன்மையைக் காணின் மிக இரங்கத்தக்கதாகும்; இன்று துறைவன் வரைவொடு புகுந்ததன் காரணமாக அவனுடைய குதிரைகள்தாம் இனி நாள்தோறும் வருந்துவனவல்ல; ஆதலின் முன்னர் இரங்கத்தக்கனவாகிய அவைகள் இப்பொழுது களைப்பாறுவனவாக; எ - று.

துறைவன்மா, என்னுது ஒலிப்பச் செல்வர என்னெஞ்சம் வருந்துமன்; அவைதாம் அளிய உயிர்த்தனவாகுக வெனக்கூட்டுக. கனலியென்னும் செய்தெனெச்சம் மூழ்கிய என்னும் பெயரெச்சத்தைக்கொண்டது. மூழ்கிய ஞாயிறென்க. புன்னை அத்தமனக்குன்றம்போலவும் தாழை மடல் கதிர்மழுங்கிய ஆதித்தன்போலவுமெனக்கொள்க. மன் - கழிவின் கண்ணது.

இறைச்சி :—புன்னையுந் தாழையும் ஒருசேரவிருக்குந் துறைவ னென்றது, அவ் விரண்டன் மணமும் ஒருசேரக் கமழ்ந்து விளங்குதல் போலத் தலைவனுந் தலைவியுமாகிய நீங்களிருவீரும் வதுவையயர்ந் தில்லற நிகழ்த்திப் புதல்வரையீன்று விளங்குவீரென்றதாம். ஏனையுவமம் ஆயினும் ஞாயிற்றுப்புத்தேளை உவமித்தலினிஃது தள்ளுறையன்மையுணர்க. மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைவியை ஆற்றியுவப்பித்தல். (கசுஙு)

## கசுச. ................

பாலை : இது, பொருண்முடித்து வந்தானென்பது வாயில்கள்வாய்க் கேட்ட தோழி, தலைவிக்குரைத்தது.

எ - து, தலைவன் பொருள்வயிற்பிரிந்து மீண்டுவந்ததனை ஏனைய உழையர்முதலாயினோராலறிந்த தோழி, தலைவியைநெருங்கி அவர் கடுங் கோடையிலே சென்றனராயினும், நல்லதேசெய்தாரென்றுகூறி நான் முன்பு தெளிவிப்ப நீ தெளிந்தாயல்லை; அங்ஙனம் நீ வருந்துவதனைப் போக்குமாறு அவர்குறித்தபருவத் திற்றைநாளா லிங்குவந்தனர்காணென அறியக் கூறாநிற்பது.



உறைதுறந்து இருந்த புறவில் தனாது
செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக
உலகுமிக வருந்தி அயாவுறு காலைச்
சென்றனர் ஆயினும் நன்றுசெய் தனரெனச்

சொல்லில் தெளிப்பவுந் தெளிதல்
செல்லாய்

செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர்
வம்ப மாக்கள் உயிர்த்திறம் பெயர்த்தென
வெங்கடல் தலைமுதல் படுமுடை தழீஇ
உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது
மாறுபுறக் கொடுக்கும் அத்தம்

ஊறிலர் ஆகுதல் உள்ளா மாறே.

உரை :—தோழீ! மழைபெய்யாதொழிந்த பாலைநிலத்தின்கண் அந்நிலத்தின் தெய்வமாகிய சிவந்தகதிர்களையுடைய ஆதித்தன் காய்தலானே நிலம்பிளவுபட, அதனால் உலகம் மிகவருந்தித் துன்புற்றகாலத்துத் தலைவர் பொருள்வயிற்பிரிந்து அந்நிலத்துள்ள நெறியின்கண்ணே சென்றனராயினும், அவர் பொருண்மேற்சென்றாராதலின் நல்லதொருகாரியத்தையே செய்தனரென்று என்னுடைய சொற்களால் நின்னைத்தெளிவித்தகாலையும், வளைந்தவில்லையுடைய ஆறலைகள்வர் செம்மையுற்ற கோல்வடிவாகிய அம்பினாலே நெறியின்கண்ணே செல்லும் ஏதிலாளரைக்கொன்று உயிரைப் போக்கினமையால் இறந்துகிடந்த பிணங்கள் கொடிய மலைநெறியின் மருங்கே இலைகளால்மூடப்பட்டு முடைநாற்றமிகுதலும், அவற்றைத் தின்னவந்த மிக்கபசியையுடைய குறியநரி அம் முடைநாற்றம் பொறாமையால் அவ்விடத்து நெருங்காது பின்னே மீண்டுசெல்லாநிற்கும் சுரத்தின்கண் யாதுமோர் ஊறுபாடிலராய் வருதலை நினையாமையாலே நீ யான்கூறிய வார்த்தைகளினாலே தெளிவடைந்தாயில்லை; அவ்வண்ணம் நீ வருந்தியிருப்பது அறிந்தனர்போலும், அவர்குறித்த இப்பருவத் திற்றை நாளால் இங்குவந்தனர்காண்; எ - று.

உறை - மழை. உவகு - பாலைநிலமுமாம். வாளிக்குச்செம்மை குருதி படிதலால். கோல்வாளி - இருபெயரொட்டுமாம். தழீஇ யென்பதனைத் தழுவவெனத் திரிக்க. கூறுவோர் தோழியெனவும் கேட்போர் தலைவி யெனவுங் கொள்ளவைத்தலின் "இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரிய ரென், றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம்" (தொ-பொ-௬௰) என்றபடி இது முன்னமென் னும் உறுப்புப்பெற்றுவந்ததாயிற்று.

இறைச்சி:—வேடர் கொன்றொழித்த பிணத்தைத் தின்னவந்த நரி, அதன்கட்பட்ட முடைநாற்றத்துக்கு அஞ்சி உண்ணாது பெயர்ந்தேகும் என்றது, தலைவர் நின்னைப்பிரிந்தவிடத்து வருந்தியிருந்த நின்னலனை யுண்ணவந்த பசப்பு, அவர் விரைவின் மீண்டுவந்து நினக்குச்செய்யுந் தலையளியை நோக்கியவுடன் நினது நலனையுண்ணாது அஞ்சிக் கரந் தொழியுமென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (கசு௪)

மூலமும் உரையும்

கஅசு

கசுரு. ...............

குறிஞ்சி:

(க) இது, ஞெதுமலர்வரையும் பருவத்துத் தோழி விக்கு அறத்தொடு நிலைபயப்பச் சொல்லியது.

தலை

•

எ - து, தலைவன் வரைவுநீட்டித்தலும் அயலோர் மணந்துகொள்ளுதற்குத் தூதுவிடக்கண்ட தோழி தலைவியைநோக்கிக் குன்றநாடன் இங்கு வரும்போதெல்லாம் நின்னருமையை அவனுக்குரைத்ததனால் நீ அவனை வெறுப்பதுபோல அவன் நின்னை வெறுத்திலனாதலின், வருந்தாது என்னை அன்னையர்வினவும்போது நீ என்பால் அறத்தொடுநின்றுவிடு; நின்னை விரும்பிய அயலவர்தூது மிகவருகின்றன; அவ்வேற்றுவரைவு நமக்குத் தகுதியன்றெனக் கூறுவதுடன் இறைச்சியாலே, தெய்வம்பொறைகொளச் செல்குவமெனவும் கூறாநிற்பது.

,, ,, (உ) வரைவுமலிந்ததூஉமாம்.

எ - து, தோழி தலைவியைநோக்கிக் குன்றநாடனுக்கு நின் அருமையை உணர்த்தவினால் அவன் வெறுப்பின்றி ஏற்றனன்; இடையே வேற்றுவரைவு நேரும்போலத் தோன்றுவதால் நீ அறத்தொடு நின்றுவிடு; நமக்கு இருமணங்கூடுதல் இயல்போவன்றெனத் தெளியக் கூறாநிற்பது. (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது
பணைத்த பகழிப் போக்குநினைந்து
கானவன்
அணங்கொடு நின்றது மலைவான்
கொள்கெனக்
கடவுள் ஓங்குவரை பேண்மார்
வேட்டெழுந்து
௫. கிளையோடு மகிழுங் குன்ற நாடன்
அடைதருந் தோறும் அருமைதனக்கு
உரைப்ப

நப்புணர்வு இல்லா நயனி லோர்நட்பு
அன்ன ஆகுக என்னுன்
ஒல்காது ஒழிமிகப் பல்கின தூதே.

உரை :—தோழீ, அமர்த்தகண்ணையுடைய ஆமானின் அரியநெஞ்சிலே பாய்ந்துதங்காது குறிதவறியொழிந்துபோன அம்பின்போக்கைக்கருதிக் கானவன் தன்னுள்ளத்து 'இம்மலையில் தெய்வம் வெளிப்போந்துநின்றது, மழைபெய்தாலோ அதன்வீறுதணியுமாதலின் மலையை மழைவந்துசூழ்க' என்று அக்கடவுளை உயர்த்த அம்மலைமேலேசென்று வழிபடும்பொருட்டு விரும்பியெழுந்து தன் சுற்றத்தாரொடுபோய் அதற்குப் பலியையிட்டு நீர் வளாவியபின்னர் அப்பலியையுண்ணுநிற்கும் மலைநாட்டினையுடைய நம் தலைவன், இங்குவரும்பொழுதெல்லாம் நினது அருமையை அவனுக்கு உரைத்தலால், 'நம்மைப் புணர்தலில்லாத அன்பற்றவரது நட்பு அப்படியே அன்பில்லாமலொழிவதாக' என்று நீ வெறுத்துக் கூறுவதுபோல அவன் கூறுகின்றிலன்; ஆதலின் நின்பால் மிக்க அன்புடைமையின் இன்னே வரையுமாறு விரையவாராநிற்பன்; அதன்முன் அன்னையர் என்னைவினவும்பொழுது நீ வருந்தாது என்பால் அறத்தொடுநிற்பாய்காண்; அயலார் நின்னை மணஞ்செய்துகொள்ளுமாறு விடுக்கின்ற தூது மிகப்பலவாயின; வேற்றுவரைவு நமக்குத் தகுதியன்றுகண்டாய்; எ - று.



பணைத்தல் - தவறுதல். முள்கல் - தங்குதல். மழைபெய்தால் தெய்வ வீறுதணியுமென்பதுவழக்கு. இனி இதன் இறைச்சியாலே தெய்வம் பொறைகொளச் செல்குவமென்னும் அறத்தொடு நிற்றலின் உட்பகுதி யொன்று கூறியவண்ணம் வருமாறு,—

இறைச்சி :—கானவர் ஆமான்மீது எய்த அம்புபிழைத்தலால் வரையிலே கடவுளின் குறையுண்டென்று பலியூட்டி மகிழாநிற்பரென்பது, நாம் குறித்துக்கூடிய தலைமகளைக் கூடவொட்டாது தவறுபடுத்தலால் அவ்வூழ் அளிக்குந் தெய்வம் பொறைகொள்ளும்வண்ணம் அதற்குப்பலிக்கடன் கொடுக்கிற்பாமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - அறத்தொடுநிற்றல். (கசுபு)

## கசுசு. ....................

**பாலை :** இது, செலவுக் குறிப்பினால் வேறுபட்ட தலைவன் சொல்லியது.

கிழத்திக்குத்

எ - து, தலைவன் வினைவயிற்செல்லுங் குறிப்பறிந்து தலைவி வேறுபடக்கண்டு அவளைத் தேற்றுகின்றான்.; மடந்தாய், நின் வடிவழகுகண்டு அகமகிழ்ந்து யானும் அறத்தினிலை கைவரப்பெற்றோர் போன்றேன்; புதல்வனும் விளையாடல் பயிலுகின்றான்; நுங்களை எதிர்நோக்கி மகிழ்வதினும் சிறந்த பொருளில்லையாதலின், வேறுவினை யாதுமில்லேன்; இங்ஙனமாக எற்றினாற் பிரிகிற்போம்; பிரிவதேயில்லைக்காணெனத் தெளியக்கூறாநிற்பது.

பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறிருங் கதுப்பும்
போதும் பணையும் போலும் யாழநின்
மாதர் உண்கணும் வனப்பின் தோளும்
ரு. இவைகாண் தோறும் அகமலிந்து

யானும்

அறநிலை பெற்றோர் அனையேன்

அதன்தலைப்

பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல்

கற்றனன்

வினையும் வேறுபுலத்து இலனே

நினையின்

யாதனிற் பிரிவாம் மடந்தை

க0. காதல் தானுங் கடலினும் பெரிதே.

உரை :—மடந்தாய், பொன்னைப்போலும் ஒளிவீசுகின்ற நினது நல்ல வடிவும், நீலமணியைப்போலும் மணங்கமழும் நின்கரிய கூந்தலும், குவளை மலரைப்போலும் அழகிய மையுண்ட நின்கண்களும், மூங்கிற்போத்தினைப் போலும் அழகையுடைய நின்தோள்களும் ஆகிய இவற்றைக்காணும் பொழுதெல்லாம், யானும் உள்ளமகிழ்ந்து அறத்தின்கண்ணே நிலைபெற்றோரடையும்பயனை யடைந்தேனாகின்றேன்; அதன்மேலும் பொன்னாலாகிய தொடியணிந்த புதல்வனும் விளையாட்டயர்தல் கற்றிருக்கின்றனன்; நுங்களைக் கண்டு மகிழ்வதினுங்காட்டிற் சிறந்ததொன்றும் இல்லாமையால் வேற்றிடஞ்சென்று செய்யுஞ்செயல் யாதுமில்லாதேனாகி இராநின்றேன்;



நின்பால் எனக்குண்டாகிய ஆசையோ கடலினும் பெரியதாயிராநின்றது; இவற்றை ஆராயின் எக்காரணத்தை முன்னிட்டு நாம் ஒருவரையொருவர் பிரிகிற்பம்? பிரியகில்லமாதலின், நீ வேறுபட்டுக்காட்டி என்னைவருத்தாதேகொள்; எ - று.

யாழ - முன்னிலையசை. மாதர் - காதலுமாம். ஓரனையேன்-ஒருதன் மையேன். முதல் இவ்விரண்டடிகளிரண்டும் நிரனிறையணி. யானும் என் றதன் உம்மை இறந்ததுதழீஇயஎச்சவும்மை, நீ என்பால்வைத்திருக்குங் காதலேயன்றி யெனப்பொருள்படுதலின்; அது வேறுபட்டுக்காட்டலால். நீ வேறுபட்டெட்ன்பதுமுதற் சொல்லெச்சம். **மெய்ப்பாடு** - மருட்கை. **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். **கைகோள்** - கற்பு. பிரிவறிந்து வருந் துழித்தேற்றலிற் பாலையாயிற்று. (கசுசு)

**கசுஎ.** ................

## நெய்தல்:

## (க) இது, தோழி பாணற்கு வாயின்மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் தன்பால் மனைவி ஊடிய தறிந்து ஊடல் நீக்குமாறு தேற்றவேண்டிப் பாணனைவிடுப்ப வந்தானை நோக்கித் தோழி, பாண! நீ கூறும் பொய்ம்மொழிகள் நலனிழந்த தலைவியி னது நுதலினெழுந்த பசலையை நீக்கவல்லன அல்லகண்டாயாதலின், மீண்டுசெல்வாயாகவென வெகுண்டு கூறுநிற்பது.

,, ,, (உ) தூதொடுவந்த பாணற்குச் சொல்லியதூஉமாம்.

எ - து, வினைவயிற்சென்ற தலைமகன் தன் வருகையை முன்னரே தெரிவிக்குமாறு தூதாகவிடுத்த பாணனைத், தோழி 'தலைவர்வந்து தலையளி செய்தாலன்றி நீ கூறும் இனியமொழி நலனிழந்த தலைவியினது நுதலின் எழுந்த பசலையை நீக்குமோ'வெனக் கவன்று கூறுநிற்பது.

கருங்கோட்டுப்

புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்
வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்
தண்ணந் துறைவன் தூதோடும் வந்த
பயன்தெரி பனுவல் பைதீர் பாண

நின்வாய்ப் பணிமொழி களையா பன்மாண்
புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணங்கமழ் கானல் மாண்நலம் இழந்த
இறையோர் எல்வளைக் குறுமகள்
பிறையேர் திருநுதல் பாஅய பசப்பே.

உரை :—புன்னையினது மேலோங்கி வளைந்த கரிய அடித்தண்டினை யுடைய பெரியகிளையிலே புதுவதாகவந்து தங்கிய வெளிய நாரை நரலுதல், கடையெழுவள்ளலுள்ளானாகிய ஆஅய் அண்டிரனது பெரிய மகிழ்ச்சியை

உடைய நாளோலக்கத்திலே இரவலர் பரிசிலாகப்பெற்ற அலங்காரமமைந்த நெடியதேரினது ஒலிபோல ஒலியாநிற்குங் குளிர்ச்சியையுடைய துறையை உடைய கடற்கரைத்தலைவனுகிய காதலன், நின்னைத் தூதாகவிடுத்தலினாலே வந்த நீ பெறும் பயனுக்குத்தக்கபடிகூறும் பனுவலையுடைய வருத்தமில்லாத பாணனே! நின்வாயினாலே கூறப்படுகின்ற மெல்லிய பொய்ம்மொழிகள், பல மாட்சிமைப்பட்ட புதிய ஞாழன்மலரொடு புன்னைமலரும் உதிர்ந்து பரவிய மணங்கமழ்கின்ற கடற்கரையிலுள்ள சோலையின்கண்ணே முன்பு நுகரப்பட்டுப் பின்பு தனது மாட்சிமையுடைய நலத்துடனே கையிலுள்ள அழகியவளையும் இழந்த இளமைமாறாத மடந்தையினது பிறைபோன்ற அழகிய நெற்றியிலுண்டாகிய பசலையை நீக்குவனவல்லகாண்; ஆதலின் நீ இங்கு நில்லாது மீண்டுசெல்வாயாக; எ - று.

பணிமொழி - மெல்லியமொழி; இது துனிதீர்க்கவேண்டி இல்லாதன வற்றைப் புனைந்துகொண்டு வணங்கிக்கூறும் பொய்ம்மொழி. பாணி - ஒலி. கோடு - அடித்தண்டு. வண்மகிழ்-பெரியமகிழ்ச்சி. நலனும் வளையும் இழந்தவெனமாறிக்கூட்டுக. ஏர் - உவமவுருபு. ஒடு - அடைமொழிப் பொருளது. சினத்தொடு வந்தானென்பதுபோலக் கொள்க. ஆர்ப்பின், இன் - அல்வழிச்சாரியை. தண்ணந்துறைவன், அ - சாரியை. ம் - விரிக் கும்வழிவிரித்தல்.

தலைமகன் முயங்கித் தலையளிசெய்தவழி நீங்குவதன்றி நின்மொழி யாலே பசலை நீங்காதென்றாள். அவனளிக்குங் கொடையளவுக்குரிய சொல்லுடையையெனக் கொண்டு பயன்தெரி பனுவலையுடையையென் றாள். இவளது வருத்தத்திற்குப் படுங்கவற்சி தலைவற்கில்லையென்பது தோன்றப் பாணன்மீதேற்றிப் 'பைதீர்பாண' என்றாள்.

இறைச்சிகள் :—(க.) நாரை கத்துதல் தேர்ப்பாணியின் ஒலிக்குமென் றது, பாணன் நயந்துகூறுமொழி எமக்கு இடி இடிப்பதுபோலிருக்கும் எனபதாம.

,, ,, (உ.) ஞாழலொடு புன்னைப்பூப்பரவி மணங்கமழுங் கானலென்றது, துறைவனுக்குத் தலைவியொடொப்பப் பரத்தைகருதலாயி ஞளென்பதாம். அன்றி இனி கானல் இருவகைமலரையும்பெற்றுக் கமழ்தல்போலத் தலைவன் தலைவியையும் பரத்தையையும் ஒப்பக்கருதி ஏற்று மகிழாநிற்குமெனவுமாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின்மறுத்தல். ஏனைத்துறைக்கும் பொருளொக்கும். அதற்கு மெய்ப் பாடு - பெருமிதம். பயன் - தலைவியின் ஆற்றுமை கூறுதல். (கசுஎ)

## கசுஅ. .........

## குறிஞ்சி: இது, தோழி இரவுக்குறிமறுத்தது.

எ - து, தலைமகன் இரவுக்குறி வருதலானே ஏதப்பாடுண்டாமாதலின் அதனை விலக்கி மணம்புரிந்துகொள்ளுமாறு கருதிய தோழி, தலைவனை நெருங்கி நாடனே, இவளுயிர் வருந்தும்வண்ணம் இரவிலே நீ இங்கு வருதல் பண்புடையதன்றுகாணென மறுத்துக் கூறுநிற்பது.

மூலமும் உரையும்

கசாநிட

சுரும்புண் விரிந்த கருங்கால் வேங்கைப்
பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண்
இறுஅல்
புள்ளுற்றுக் கசிந்த தீந்தேன் கல்லலைக்
குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்

புன்தலை மந்தி வன்பறழ் நக்கும்
நன்மலை நாட பண்பெனப் படுமோ
நின்நயந் துறைவி இன்னுயிர் உள்ளாய்
அணங்குடை அரவின் ஆரிருள் நடுநாள்
மைபடு சிறுநெறி எஃகுதுணை ஆக
ஆரங் கமழும் மார்பினை
சாரல் சிறுகுடி ஈங்குநீ வரலே.

உரை :—வண்டுகள் உண்ணுமாறு மலர்விரிந்த கரிய அடிமரத்தை உடைய வேங்கையின் பெரியகிளையிலே தொடுத்த கொழுவிய கண்களை உடைய தேனடையிலே தேனீக்கள் மொய்த்தலாலே கசிந்து கல்லின்குழிகளில் வடிந்த இனியதேன் குறவரின் இளமகார் வழித்துண்டெஞ்சியதை மெல்லிய தலையையுடைய மந்தியின் வலியகுட்டிகள்சென்று உண்ணுநிற்கும் நல்ல மலைநாடனே! நின்னை விரும்பியுறையும் இவளது இனிய உயிர் படுகின்றதுன்பம் மின்னதென்று கருதாமல்,—வருத்துந்தன்மை உடைய பாம்புகள் இயங்குகின்ற வருதற்கரிய இரவின் நடுயாமத்தில் மயக்கந்தருகின்ற சிறியவழியின்கண்ணே நின்கையிலேந்திய வேற்படையே நினக்குரிய துணையாகக்கொண்டு சந்தனம்பூசுதலால் அதன் நறியமணங்கமழ்கின்ற மார்பினையுடையையாய்ச் சாரலின்கணுள்ள சிறுகுடியாகிய இவ்விடத்து நீ தனியேவருதல் தகுதிப்பாடுடையதாமோ? ஆதலின் இனி இங்கு இரவில் வரற்பாலையல்லைமன் ; எ - று.

நீ தனியே வருநெறிகருதிய தலைவி இறந்துபடுமென்பாள் உயிருள்ளாய் என்றாள். நறுநாற்றங்கண்டு அணங்குகள் அணங்குமென்பதனைக் குறிப்பிப்பாளாய் ஆரங்கமழுமார்பினையென்றாள். அணங்குடை அரவு நெறியென வருநெறி ஏதத்துக் கஞ்சுவதுகூறினாள். இவற்றால் நீ வரற்பாலையல்லைமன்னென எதிர்மறை ஓகாரங்கொடுத்து அறிவித்தாளாயிற்று. இஃது அழிவில் கூட்டத்து அவன்புணர்வுமறுத்தல்.

உள்ளுறை :—வேங்கை தலைவியாகவும், கரும்புணவிரிந்தது எதிலாட்டியர் பழிச்சொற்கூறுமாறு பொருந்தியதாகவும், அதனிடத்துள்ள இருவின்தேன் தலைவியினின்பமாகவும், புள்மொய்த்தல் தமர்சூழ்ந்திருப்பதாகவும், கசிந்துவந்ததேனைக் குறக்குறுமாக்களுண்பது மிக்கநலனைப் பசலை யுண்டொழிப்பதாகவும், எஞ்சியதைப் பறழுண்ணுதல் எஞ்சியநலனை ஒரோவொருகால் தலைவன் துய்ப்பதாகவுங் கொள்க. **மெய்ப்பாடு** - பெருமிதம். பயன் - இரவுக்குறிமறுத்து வரைவுகடாதல். (கசுஅ)

கசுகூ. . . . . . . . . . . . . . . .

முல்லை : இது, வினைமுற்றி மறுத்தராநின்றான் நெஞ்சிற்கு உரைத்தது.





எ - து, சென்று வினைமுடித்து மீளுந்தலைவன் நெஞ்சைநெருங்கி யாம் பிரிந்ததனாலுண்டாகிய தலைவியினது துன்பந் தீரும்வண்ணம் இப்பொழுது நாம் வருவதனை நம்முடையமாளிகையின் சுவரின்கணுள்ள பல்லி, பலபடியாக இயம்பி அறிவுறுத்தாநிற்குமோவெனக் கருதிக் கூறாநிற்பது.

முன்னியது முடித்தனம் ஆயின்

நன்னுதல்

வருவம் என்னும் பருவரல் தீர்ப்
படுங்கோல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி
மீமிசைக் கலித்த வீநறு முல்லை
ஆடுதலைத் துருவின் தோடுதலைப்
பெயர்க்கும்
வன்கை இடையன் எல்லிப் பரீஇ
வெண்போழ் தைஇய அலங்கலந்
தொடலை
மறுகுடன் கமழும் மாலைச்
சிறுகுடிப் பாக்கத்தெம் பெருநக ரானே.

உரை :—நெஞ்சமே! வினைவயிற் பிரிந்துசெல்லும்பொழுது என்று வருவீர்கொலாமென வருந்திவினவிய தலைவியைநெருங்கி, 'நல்லநுதலையுடையாய்! யாம் சென்று கருதியதை முடித்தனமாயின் அன்றே வருகின்றேம்' என்று கூறியவுடன் உண்டாகிய அவளுடைய துன்பமெல்லாந் தீரும்படி இன்று நாம் வருகின்ற வருகையை,—பரல்மிக்க பாலைநிலத்தின்கண் வளர்ந்தோங்கிய சிச்சிலிப்பறவைபோன்ற தலையையுடைய கள்ளியின் மேலே படர்ந்து தழைந்த முல்லையின் நறியமலரை ஆடுகின்ற தலையையுடைய யாட்டின்தொகுதியை மேய்க்கச் செலுத்துகின்ற வலியகையையுடைய இடையன் இரவிலேகொய்து வெளிய பனங்குருத்தின் போழுடனேசேர்த்துத் தொடுத்த அசைகின்ற மாலையின் நறியமணம் தெருவில் ஒருங்கு கமழாநிற்கும் இன்று மாலையம்பொழுதிலே சிறியகுடிகளையுடைய பாக்கத்தின்கண் உள்ள எமது பெரிய மாளிகையிடத்து நெடிய சுவரின்கணிருக்கின்ற பல்லி அறிகுறியாக அடித்துத் தெரிவிக்குங் கொல்லோ? எ - று.

சிரல் - சிச்சிலி. மீமிசை - மேலிடம். துரு - யாடு. தோடு - கூட்டம். பல்லிபடுதல் - பல்லியடித்தல்; (பல்லிசொல்லுதல்) "வாய்மாண்டபல்லி படும்" என்றார் கைந்நிலை 18-ம் பாடலினும்.

இறைச்சி :—இடையன்தொடுத்த கண்ணி போழுடனே கமழு மென்றது, பல்லியடிப்பக்கண்டதலைவி தன்புதல்வனுடன் மகிழ்ந்து நம் வரவினாலே களிப்பெய்தியிருக்கு மென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - நெஞ்சுடனுசாவுதல். (கசுசு)

## கஎ0. ....................

மருதம் : இது, தோழி விறலிக்கு வாயின் மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்த தலைவனாலே தலைமகளது புலவியைத் தீர்க்குமாறு விடப்பட்ட விறலியைக் கண்ட தோழி, அதனை அறிந்து

# மூலமும் உரையும்

கசுரு

வைத்தும் இவ்விறலியே தூதாகநடந்து தலைவனைப் பரத்தையிடத்துச் சேர்ப்பித்தனளாகுமென்னுங் கருத்தாலே ஆயத்தாரைநோக்கி ' இவ்விறலி நம் தலைவனை மற்றுமொரு பரத்தைபாலுய்க்க வந்தனளாதலின், நாம் அவனைக் காத்துக்கொள்வோம்; எழுவீராக, இவள்கருத்து முற்று மெனின் நாமிருந்தாவதென்னென வெகுண்டு கூறுநிற்பது.

மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்

வார்ந்தவால் எயிற்றுச் சேர்ந்துசெறி

குறங்கில்

பிணையல் அம்தழைத் தைஇத்

துணையிலள்

விழவுக்களம் பொலிய வந்துநின்

றனளே

௫. எழுமினோ எழுமின்எங் கொழுநற்கு

ஆக்கம்

ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்குநம்
பன்மையது எவனோஇவள்

நன்மைதலைப் படினே.

உரை:—மடப்பத்தையுடைய கண்பார்வையையும், மயிர்ச்சாந்தணிந்த கூந்தலையும், பருத்ததோளையும், நேர்மையாகிய வெளியபற்களையும், திரண்டு நெருங்கிய துடைகளையுமுடைய ஒப்பில்லாத இவ்விறலி பிணைத்த அழகிய தழையுடையையுடுத்து திருவிழாச்செய்யும் இவ்விடனெங்கும் பொலிவெய்துமாறு வந்துநிற்றலாயினள் காணுங்கோள்; நம்காதலனை இன்னும் வேறொரு பரத்தைபால் இவள் தூதுசென்று செலுத்தாதபடி நாம் பாதுகாக்கற்பாலம் எழுங்கோள்; எழுங்கோள்; இவள் கொண்ட காரியம் கைகூடுமாயினோ,—ஆரியர் நெருங்கிச்செய்த போரின்கண்ணே பெரியபுகழையுடைய முள்ளூர்ப்போர்க்களத்துப் பலருடன்சென்று உறையினின்று உருவிய ஒள்ளிய வாட்படையையுடைய மலையனது ஒப்பற்ற வேற்படையை அஞ்சி அவ் ஆரியப்படை ஓடியதுபோலப் பலர்கூடிய நம்முடைய கூட்டமும் ஒழியவேண்டியதன்றி வேறுயாது பயன்படுங் கண்டீர்? எ - று.

விறலி - விறல்படப்பாடியாடும் மகள்; விறல் - சத்துவம். சேர் - திரட்சி; உரிச்சொல். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின் மறுத்தல். (கஎ0)

## கஎக. ........................

பாலை: இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட் குரைத்தது.

எ - து, தலைமகனாலே பிரிவறிவுறுத்தப்பட்ட தோழி தலைமகளை நோக்கி நம்காதலன் வினைவயிற் பிரிகின்றான் நம்மைக்கைவிட்டுச் சுரத்தின்கண்ணே சென்றக்கால் முன்பு அவனது மார்பிலே கிடந்து துயிலுங் கண்கள் இனி வேறெவ்வாறு உறங்கவல்லனகொல்லென அழுங்கிக் கூறுகின்றது.



நீர்நசைக்கு ஊக்கிய உயவல் யானை
வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
நிலஞ்செலச் செல்லாக் கயந்தலைக் குழவி
சேரியம் பெண்டிர் நெஞ்சத்து எறிய
ஊரான் கன்றொடு புகுதும் நாடன்

பன்மலை அருஞ்சுரம் இறப்பின் நம்விட்டு
யாங்கு வல்லுநம் மற்றே ஞாங்கர்
வினைப்பூண் தெண்மணி வீழ்ந்தன நிகர்ப்பக்
கழுதுகால் கொள்ளும் பொ.ழுதுகொள்

பாணாள்

௧௦. ஆர்வ நெஞ்சமொடு அளைஇ
மார்புறப் படுத்தல் மரீஇய கண்ணே.

உரை:—நீருண்ணும் நசையை மேற்கொண்ட வருத்தத்தையுடைய பிடியானை வெப்பமிக்க சிறுகுன்றுகளைச் சூழவுடைய வெவ்விய மலைப்பக்கத்திலுள்ள நிலத்தின்கண்ணே செல்லுதலும் அதனுடன் செல்லமாட்டாத மெல்லியதலையையுடைய யானைக்கன்று சேரியிலுள்ள மாதர் தம்முள்ளத்தே துண்ணெனும்படி ஊரிலுள்ள பசுவின்கன்றோடு சேர்ந்து அச்சேரியின் கண்ணே புகுதாநிற்கும் மலைநாடன், நம்மைக் கைவிட்டுப் பலவாகிய மலைகளிடைப்பட்ட கடத்தற்கரிய சுரநெறியிலே செல்லின்,—கட்டிய கம்மத் தொழிலையுடைய தெளிந்த ஓசையையுடைய மணிகளைக் களையப்பட்ட வேற்படையொப்பப் பேய்கள் நிலைகொண்டு உலாவுகின்றபொழுது அமைந்த நடுயாமத்தில் ஆசையோடு நெஞ்சுகலந்து அவனுடைய மார்பின் மேல் நெருங்கப்படுத்தலைப் பொருந்தின கண்கள், இனி எவ்வாறு துயிலல் வல்லனவாகும்? எ - று.

ஞாங்கர்:—வேல். நிகர்ப்ப மரீஇய கண்ணெனக் கூட்டுக.

உள்ளுறை:—யானை மலைப்பக்கம் போதலும் அதன்கன்று சேரியம் பெண்டிர் நடுங்கும்படி ஊரான் கன்றொடு புகுமென்றது, தலைவன் பொருள்வயிற் பிரிந்துபோதலும், ஏவல்மாந்தர்தாம் இறைமகள் எவ்வண்ணம் ஆற்றுங்கொலென்று வருந்தாநிற்ப, தலைவி என்னொடு வைகுதலாவா னென்றதாம். மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்திருத்தல். (௧௭௧)

௧௭௨. ....................

நெய்தல்: (க) இது, பகற்குறிவந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

எ - து, பகற்குறிவந்தொழுகுந் தலைமகனைத் தோழி வரைவுகடாவுங் குறிப்புத்தோன்றத் தலைவனே! இப்புன்னையை யாம் வளர்த்துவந்ததை அன்னை இஃது உங்களுடன்பிறந்த தங்கையென்று கூறினளாதலின் இப் புன்னையின் முன்னர் நும்மொடு நகையாடவும் அஞ்சுகின்றேம்; வேண்டு மெனில் வேறுநிழலுமுண்டன்றே என்று பகற்குறி மறுத்துக்கூறு நிற்பது.

" " (உ) குறிபெயர்த்திடுமோம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

மூலமும் உரையும் கசுள

விளையாடு ஆயமோடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
ரு. அன்னை கூறினள் புன்னையது சிறப்பே

அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்
நிறைபடு நீழல் பிறவுமா ருளவே.

**உரை**:—புதியராய்வந்த பாணர் பாடுகின்ற இளைதாய (மெல்லிய) இசைப்பாட்டுப்போல வெளிய வலம்புரிச்சங்கு ஒலியாநிற்கும் விளங்கிய நீரையுடைய துறைபொருந்திய நெய்தனிலத்தலைவனே! யாம் எம்மொடு விளையாடுகின்ற தோழியரோடுசென்று ஒருநாள் வெள்ளிய மணலிலூன்றினேமாகி மறந்தொழிந்த புன்னைவிதையானது வேரூன்றி முளைத்து முளைதோன்றுதலானே மீண்டும் அதனைநோக்கி மகிழ்ந்து நெய்கலந்த இனிய பாலைநீராகவார்த்து இனிமையொடு வளர்க்குநாளில் எம் அன்னை எம்மைநோக்கி 'நீயிர் வளர்த்துவரும் புன்னையானது நும்மினுஞ் சிறந்த தன்றோ, அது நும்முடன்பிறந்த தங்கையாந் தகுதியையுடையதுகண்டீர்' என்று இதன் சிறப்பினை விளங்கவுரைத்தனள்; ஆதலின் எம் தங்கையாகிய இப்புன்னையின் எதிரில் நும்மொடு நகைத்து விளையாடி மகிழ்வதற்கு யாம் வெட்கமடையாநின்றோம்; அம்மையோ? நீ இவளை அணைந்து நல்குவையோ? நல்குவையாயின் நிறைந்த மரத்தினிழல் பிறவும் ஈங்குள்ளன காண்; அவ்வயிற் செல்லுதல் நல்லதொன்றாகும்; எ - று.

விளர் - இளமை; மென்மையின்மேலது. வான் - வெண்மை. ஆர் - அசை. காழ் - விதை; ஈண்டுப் புன்னைக்கொட்டை. அகைத்தல் - தோன்றுதல். நுவ்வை - நும் தங்கை.

உடன்பிறந்தார் சுற்றத்தார் முதலானோர் அயலிலேயிருக்கும்பொழுது தன் காதலனொடு அளவளாவுதல் தகுதியுடையதன்றாதலின், 'வெள்கி அஞ்சுதும்' என்றாள். நும்மொடு நகையாடுதற்கு நாணுதுமென்றதனால் பகற்குறிக்கு உடன்படாமையும், பிறர்காணுதற்கு நாணுதுமென்று போதரலால் களவுக்கு அஞ்சினமென்றமையுங் குறிப்பாற்கூறி மறுத்து வரைவு கடாயது. மெய்ப்பாடு - மருட்கை. பயன் - வரைவுகடாதல். (கஎ௨)

கஎ௬. ..................

குறிஞ்சி:

(௯) இது, தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, அன்னை வெறியெடுக்கின்றாளென்று தலைமகனுக்கு அறிவுறுத்தி அவனை வரைந்தெய்துமாறு உடன்படுத்தவேண்டிச் சிறைப்புறமாகவந்த அவன் கேட்குமாற்றானே தோழி தலைவியைநோக்கி வெறி

ககஅ நற்றிணை நானூறு

அயருங்களத்து வருகின்ற முருகவேள் 'என்னுமெய்தியதன்று, ஒரு தோன்றலாலெய்தியது இந்நோய்' என்று அன்னைபால் முன்னிலையானுங் கனவானும் அறிவுறுத்தின் அதனால் அவன் ஏதேனும் ஏதமெய்துமோ வென நொந்து கூறுகிறபது.

,, ,, (௨) வெறியச்சுறீஇத் தோழி அறத்தொடுநிலை பயப்பித் ததூஉமாம.

எ - து, அன்னை வெறியெடுக்கின்றாளெனத் தோழி தலைவியை அஞ்சுவித்து வெறியயருங்களத்தின்கண் அறத்தொடு நிற்குமாறு கூறியதுவும் ஆகும். (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்
மலைச்சேங் காந்தள் கண்ணி தந்தும்
தன்வழிப் படூஉம் நம்நயந்து அருளி
வெறியென உணர்ந்த அரிய
அன்னையைக்
ரு. கண்ணினுங் கனவினுங் காட்டி
இந்நோய் என்னினும் வாராது
மணியின் தோன்றும்
அம்மலை கிழவோன் செய்தனன்
இதுவெனில்
படுவண்டு ஆர்க்கும் பைந்தார் மார்பின்
நெடுவேட்கு ஏதம் உடைத்தோ
க0. தோடியோய் கூறுமதி வினவுவல்
யானே.

உரை :—தொடியினையுடையாய்! யான் நின்னையொரு செயலைவினவுகின்றேன்; அதுதான் யாதெனிலோ? கேள்; சுனையின்கணுள்ள மலர்கொய்தும், அவைகளை மாலையாகத்தொடுத்தும், மலையிலுள்ள செங்காந்தண்மலர் கொய்து அம்முருகவேள் போர்க்குச்சூடுங் கண்ணியாக அமைத்தும் சார்த்தி அவனை வழிபாடுசெய்கின்ற நம்மை ஆதரஞ்செய்யுமாறு விரும்பியருளி,—நாம் இப்பொழுது கொண்டிருக்கிற காமநோயை 'முருகணங்கியது காரணமாக வந்த இவள்மேனியின் வேறுபாடுதான் வெறியயர்ந்தால் நீங்கும்' என மாமுருகனினைந்துடைய அம்மாறுபாடு எவ்வழியினுனும் நீங்கரிய நம் அன்னைக்குக் கண்ணாலே குறிப்பாகக் காட்டுவதனோடு உறங்கும்பொழுது அவளது கனவின்கண்ணும் வந்துதோன்றி தன்வடிவுபுலப்படக்காட்டி இக் காமநோய் என்னாலும் வேறு பிற அணங்குகளாலும் எய்தியதொன்றன்று கண்டாய், வேறுயாவன் இதனைத் தோற்றுவித்தனன்கொல் என வினவின் 'நோக்குவோர்க்கு நீலமணிபோலத் தோன்றாநிற்கும் அழகிய மலையையுடைய ஒருதோன்றலே இதனைச்செய்தனன்' என்று கூறுவானெனின் அதனாலே பொருந்திய வண்டுகளாரவாரிக்கும் பசிய மாலைபயணிந்த மார்பையுடைய அந் நெடியமுருகவேளுக்கு ஒரு குற்றமுமுண்டாகுமோ? அதனை ஆராய்ந்துகூறிக்காண்: எ - று.

அன்னையை - உருபுமயக்கம். கண்ணி - போர்க்குச்சூடும்பூ. தெய்வமாதலின் கனவினுங்காட்ட அமையும். ஞாயிற்றின் வெம்மையாலே வறளாது மழைபெய்து நிறம்பெறுதலின் மணிபோலத் தோன்றும் என்றவாம.

## மூலமும் உரையும்

கஎக.

இறைச்சி :—ஒன்றினேம்யாமென்று புகல்புக்க எம்மைக் கைவிட்ட அன்னோன் மலையாயிருந்தும், நீலமணிபோலத் தோன்றி விளங்காநிற்கும் இஃதென்ன வியப்போவெனப் பொருளின்புறந்தே தோன்றியதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கஎங)

## கஎச. ..................

பாலை:

இது, வினைமுற்றிவந்தெய்திய காலத்து ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறீஇ நின்றாட்கு அவள் சொல்லியது.

எ - து, சென்று வினைமுடித்துவந்த தலைமகன் பரத்தையொடு முயங்கியதறிந்து நொந்துபுலந்த தலைவியைத் தோழிநெருங்கி நீ தலைவனோடிருந்தும் வருந்துவதென்னென்றாட்கு அவள் அறியாதார்க்கு அங்ஙனமே தோன்றுமாயினும் அவன் பரத்தை மார்பின்கண்ணே தன்னைமடுப்பானாயினன்; என்னை அன்பின்றி முயங்குவானாதலின், அவன்முயக்கந்தான் யாது பயனுடையதாகுமென்று வருந்திக் கூறுநிற்பது.

கற்றை ஈந்தின் முற்றுக்குலை யன்ன
ஆளில் அத்தத் தாளம் போந்தைக்
கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல்
விளிப்பிற்
புலியெதிர் வழங்கும் வளிவழங்கு
ஆரிடைச்
சென்ற காதலர் வந்தினிது முயங்கிப்
பிரியாது ஒருவழி உறையினும்
பெரிதழிந்து

உயங்கினை மடந்தை என்றி தோழி
அற்றும் ஆகுமஃது அறியா தோர்க்கே
வீழாக் கொள்கை வீழ்ந்த கொண்டி
௧0. மல்லல் மார்பு மடுத்தனன்
புல்லுமற் றேவனோ அன்பிலங்
கடையே.

உரை:—தோழீ! 'ஈந்தினது திரட்சியையுடைய முற்றிய குலை போன்ற மக்களியங்காத நெறியின்கணமைந்த தாளிப்பனையினது குலைகளை உடைய நெடிய மடலிலிருந்து ஆண்பறவை தன் பெண்பறவையைக் கூவின் அவ்வொலியைக் கேட்ட புலி எதிரோசை எழும்படி முழங்கா நிற்கும் கோடைக்காற்று வீசுகின்ற அரியநெறியிலே சென்றகாதலர் மீண்டுவந்து இனிதாக நின்னை முயங்கி நீங்காது நீங்களிருவீரும் ஓரிடத்தே உறையுங்காலையும் நீ பெரிதும் நெஞ்சழிந்து, 'மடந்தையே என் வருந்துகின்றனை' என்று கூறுகின்றனை; அவ்வுண்மையை அறியாதவர்க்கு அத்தன்மையாகவேதான் காணப்படும்; நம் காதலன் முன்பு பிறமாதரை விரும்பாத கோட்பாட்டை யுடையனாயிருந்து இப்பொழுது தன்னை விரும்பிய பரத்தையினிடத்துத் தன் வளப்பம் பொருந்திய மார்பை மடுப்பானாயினன்; இங்ஙனம் பிறள் ஒருத்திபால் அன்புவைத்தால் என்மாட்டு அவனுக் கெவ்வண்ணம் அன்பு தோன்றும்? ஆ[illegible]து இல்லாதபொழுது என்னை அவன் தழுவிக்கொள்வதனாலும் யான் அவனைத் தழுவிக்கொள்வதனாலும் யாது பயன்படும்? எ – று.



கோள் – காய்.

கொண்டி – கொள்ளைகொள்ளும் பரத்தை.

இறைச்சி: (க) ஈந்தின் முற்றுக்குலைபோன்றது தாளிப்பனங்குலை யென்றது பரத்தையும் என்போலத் தலைமகனுக் குரியளாயினளென்றதாம்.

,, ,, (உ) தாளிப்பனைமடலி லிருந்து ஆண்பறவை பெண்பறவையை விளித்தால் புலி எதிரொலியெடுப்ப முழங்காநிற்குமென்றது, இல்லகத்திருக்கும் யான் கணவனைவிரும்பி எற்பின் அயலே பரத்தை முழக்கத்தோடு தலைவனை அழையாநிற்கு மென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - தலைவி புலவிகூர்தல். (கஎச)

## கஎரு. ..............................

நெய்தல்: இது, தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, சிறைப்புறமாக வந்திருந்த தலைமகன் கேட்டு இனி இல்வயிற் செறிக்கப்படுமாதலால், களவுப்புணர்ச்சிக் கியலாதென்று வரைந்தெய்துமாறு தோழி தலைவியைநோக்கி நம் தலைவனுடன் கூட்டம் நிகழ்ந்ததனை அன்னை அறியாதிருந்தும் ஏதிலாட்டியர் கூறுதலால் என்னைச் சுடுவது போல நோக்குவளெனவும் இதுபற்றி உள்ளுறையால் இறைமகன் இன்னதுசெய்தல் வேண்டுமெனவுஞ் சூழ்ந்து கூறுகிற்பது.

நெடுங்கடல் அலைத்த கொடுந்திமில் பரதவர்
கொழுமீன் கொள்கை அழிமணல்
குவைஇ
மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறுதீ விளக்கில் துஞ்சும் நறுமலர்ப்
௫. புன்னை ஓங்கிய துறைவனொடு அன்னை
தானறிந்து அன்றோ இலளே பாணர்
சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்

சுடுவான் போல நோக்கும்
அடுபால் அன்னஎன் பசலை மெய்யே.

உரை:—நெடிய கடலிலேசென்று வலைவீசி ஆங்குள்ள மீன்களை வருத்திப் பிடித்த வளைந்த மீன்படகுகளையுடைய பரதமாக்கள் தாம் பிடித்துக்கொண்டுவந்த கொழுவியமீன்களை நெகிழ்ச்சியையுடைய மணற்பரப்பிலே குவித்து மீன்கொழுப்பாலாகிய நெய்யைவார்த்துக் கிளிஞ்சிலில் ஏற்றிய சிறிய சுடர்விளக்கினொளியிலே துயிலுகின்ற நறிய மலரையுடைய புன்னைமரங்களுயர்ந்த துறைவனுடனே நாம் களவிலேபுணர்ந்ததனை நம் அன்னைதான் முன்னரே அறிந்துவைத்தாளும் அல்லள்; அங்ஙனமாக இரவு நடுயாமத்தில் நம்முடைய சேரியின்கணுள்ள அயலுறைமாதர் கூறுங் குறிப்புரையாகிய இழிந்த சிலசொற்களைவிரும்பிக் கேட்டுக் கொதிக்கின்ற பால்போன்ற பசலைபரந்த என்மேனியைச் சுடுவதுபோல நோக்காநிற்கும் இதனால் இனி இல்வயிற்செறிக்கும் போலும்? எ - று.

வான் - தொழிற்பெயர்விகுதி. இதனுலென்பதுமுதற் குறிப்பெச்சம்

தலைவன் பிரிதலாலே பசப்புண்டாகியதென்பதை அவனுக்கறிவுறுத்தவாள் என்பசலைமெய்யென்றாள். காமத்தீமிகுதலானே சுடுபாலன்ன மெய்



என்றாளெனவுமாம். சுடுபால்மேல் ஆடைபடர்தல்போலக் காமத்தீயால் உடம்பிலே பசலைபரந்ததெனக்கொள்க. இதுவும் தலைவிகூற்றைத் தோழி தன்கூற்றாகக்கொண்டு கூறியது. இது பசலைபாய்தல்.

உள்ளுறை :—கடல்வேட்டையிலே சென்றபரதவர் கொண்டுவந்த மீனை மணலிலே குவித்துவிட்டு விளக்கொளியிலே துஞ்சுவர் என்றது, தலைவன் வேற்றுநாட்டகன்று பொருளீட்டிக் கொணர்ந்து எமர் விரும்பியவாறு அவர் முன்றிலிலே குவித்துப்போகட்டுப் பலரறிய மணந்து முயங்கி அயாவோம்பி இருப்பானாக வென்றதாம். **மெய்ப்பாடு - பெருமிதம்.** **பயன்** - வரைவு கடாதல். (களகு)

களஎ. ..............................

குறிஞ்சி :

இது, பரத்தை தலைவியின் பாங்கிக்குப் பாங்காயினோர் கேட்ப விறலிக்குச் சொல்லியது.

எ - து, உணர்த்தவுணரும் ஊடற்பகுதிக்கண்ணதாகிய தலைவியின் பூப்பு நீராடியதுணர்த்தவேண்டி இறைமகள் தோழியைச் செங்கோலஞ் செய்து விடுப்ப அதுகண்டு உலகியல்நோக்கித் தலைவனைவிடுத்தபரத்தை யாம் தலைவியை அஞ்சிவிடுத்தேமென்று ஊரார் கூறுவர்போலுமென்று உட்கொண்டு எதிர்வந்து உரையாடுதலையஞ்சித் தான்கூறுவதனைத் தலைவியும் பாங்கியும் அறிந்துகோடற்பொருட்டு, அப்பாங்கிக்குப் பாங்காயினோர் கேட்பத் தன்தோழியாகிய விறலியைநோக்கி அவள் நம்மை நயந்துகொண்டிருக்கையில் நாம் அவளை நயந்துகொள்ளவேண்டி அவனைவிடுத்தோம் என ஊரார் புகலுவர்கொல்லெனக் கூறுவதுடன் உள்ளுறையால் யாம் அவனைமீட்டுக் கைக்கொள்வாமெனவும் வெகுண்டு கூறுநிற்பது.

எம்நயந்து உறைவி ஆயின் யாம்நயந்து,

நல்கினம் விட்டதென் நலத்தோன்

அவ்வயின்

சால்பின் அளித்தல் அறியாது

அவட்கவள்

காதலள் என்னுமோ உரைத்திசின்

தோழி

நிரைத்த யானை முகத்துவரி கடுப்பப்

போதுபோதி உடைந்த ஒண்செங்

காந்தள்

வாழையஞ் சிலம்பின் வம்புபடக்

குவைஇ

யாழோர்த் தன்ன இன்குரல் இனவண்டு

அருவி முழவின் பாடொடு ஒராங்கு

மென்மெல இசைக்கும் சாரல்

குன்ற வேலித்தம் உறைவின் ஊரே.

உரை :—விறலி! தலைமகளானவள் எம்மைவிரும்பி உறைபவளாயிருக்கையில் யாமாக அவளைவிரும்பி அவள் விரும்பியவாறு நல்கிவிட்டதுதான் என்னவிருக்கின்றது? நம் நலத்துக்குக் காரணமாயிருக்குந் தலைமகனை அத்தலைவிபால் யாம் சார்பிருந்தே கொடுத்தது அறியாது; - நிரைத்திருக்கின்ற யானையின் முகத்திலுள்ள கோடுபோல அரும்புகள் பொதிந்தன வெல்லாம் மலர்ந்த ஒள்ளிய செங்காந்தள், வாழையையுடைய சிலம்பின்கண்

மணங்கமழாநிற்ப, யாழோசையைக் கேட்டாலொத்த இனிய குரலையுடைய கூட்டமாகிய வண்டுகள் திரண்டுபுகுந்து அருவியாகிய முழவொலியோடு ஒரு தன்மைப்பட மெல்லமெல்ல ஒலியாநிற்குஞ் சாரலிலே குன்றுசூழ்ந்த வேலியாகவுடைய அவர்களிருக்கின்ற ஊரிலுள்ளார் 'தலைவிபால் அப் பரத்தை மிக்க காதலையுடையளாதலின் அத்தலைவி விருப்பத்தின்படி தலைவனை விடுத்தனள்' என்று கூறாநிற்பரோ? ஆராய்ந்து ஒன்றனைக் கூறாய்; அங்ஙனமாயின் மீட்டும் அவனை நாம் ஈங்கு நமது ஆற்றலானே கைக்கொண்டு போதுவாங்காண்; எ - று.

பரத்தை தான் தோழியெனவிளித்தலால், அவட்குத் தோழி விறலி யென்பது. விறல் - சத்துவம்; அவை சிங்காரமுதலாய ஒன்பான் சுவை யென்ப. அச்சுவைகள் தன்மெய்க்கண்ணே தோன்றுமாறு அவிநயத்திற் புலப்படுத்திக்காட்டவல்லவள் விறலி. உறைவி - உறைபவள். நலந்தோன்- இரண்டன்றொகை. குவைஇ - திரண்டு. அங்ஙனமாயினென்பதுமுதற் குறிப்பெச்சம்.

உள்ளுறை :—சிலம்பிலே செங்காந்தள்மலர்தலும் வண்டுகள் அருவி யொலியொடு சேர மெல்லமெல்லப் பாடாநிற்குமென்றது, தலைவியொடு தலைவன் மகிழ்ந்திருப்பனாதலின் நாம் முழவுமுதலியவற்றோடு பாடுகிற் போம்; அவன் நம்வயந்தனுவானென்பதாம். "ஏனோர்க் கெல்லாம் இடம் வரை வின்றே" (தொ-பொ-௩௦௨) என்றதனாலே பரத்தை தானறிந்த கிளவியானே நிலம்பெயர்ந்துறையாத பொருள்கொண்டு உள்ளுறை கூறி னளென்பது. மெய்ப்பாடு - வெகுளி. பயன் - பரத்தைசூழ்தல். (௧௭௬)

**௧௭௭.** ..........................

**பாலை :**

இது, செலவுக்குறிப்பறிந்த தலைமகள் தோழிக்குரைத்தது.

*எ - து, தலைவன் வினைவயிற்செல்லுங் குறிப்பையறிந்த தலைமகள், தோழியைநெருங்கி நம் காதலர் சுரம்போதலைத் துணிந்தனரென்பது திண்ணம்; வேலைத்துடைப்பர், பலகையணிவர், என்னையும் அளிப்பர் ஆதலின், யாம் துன்பவெள்ளத்தில் நீந்தியுழலுநாள்வந்து எய்தியதுபோலு மென அழிந்து கூறுகிறபது.*

பரந்துபட கூரெரி கானம் நைப்ப
மரந்தீ உற்ற மகிழ்தலை அம்காட்டு
ஒதுக்கரும் வெஞ்சுரம் இறந்தனர்
மற்றவர்
குறிப்பிற் கண்டிசின் யானே
நெறிப்பட
வேலும் இலங்கிலை துடைப்ப
பலகையும்
பீலி சூட்டி மணியணி பவ்வே
பண்டினும் நனிபல அளிப்ப இனியே
வந்தன்று போலுந் தோழி நொந்துநொந்து
எழுதெழில் உண்கண் பாவை
அழிதரு வெள்ளம் நீந்தும் நாளே.

உரை :—தோழீ ! நம் காதலர் பரந்துபட்ட மிக்கதீ காடுமுழுதும் எரிந்து அழித்தலினால் அதனிடையிருந்த மரங்களெல்லாந் தீந்து கண்டோர்க்கு மகிழ்ச்சி நீங்கலாகிய காட்டகத்து ஒதுங்கியிருத்தற்கும் நிழலில்லாத கொடியசுரத்தின்கண்ணே சென்றுவிட்டனரென்பது திண்ணம் ; அவர் செய்யுஞ்செய்கையின் குறிப்பினால் யான்கண்டறிந் தேன்மன் ; யாங்ஙனம் அறிந்தனைகொலெனா, நீ வினவுதியேல் இயம்பு வன்கேள் ; ஒழுங்குபட வேலின் இலங்கிய இலையையும் மாசுபோகத் துடையாநிற்பர் ; அன்றிக் கிடுகினையும் மயிற்பீலிசூட்டி மணியை அணியாநிற்பர் ; மற்றும் முன்போலின்றி என்னையும் மிகப் பலபடியாகப் பாராட்டி அன்புசெய்யாநிற்பர் ; ஆதலின் யான் வருந்திவருந்தி ஓவியர் எழுதுதற்குத்தகுந்த அழகமைந்த மையுண்டகண்ணிலே பாவைதோன்றாத படி வெள்ளம்போன்று கண்ணீர்வடிய அவ்வெள்ளத்தின்கண் விழுந்து நீந்தியுழலும் நாள் இன்னேவந்து இறுத்ததுபோலும் ; இனி எவ்வாறு ஆற்றுகிற்பேன் ? எ – று.

தலையல் – நீங்குதல். அம் – சாரியை. இறந்தனர் – தெளிவின்கண் வந்த காலவழுவமைதி. பலகை – கிடுகு ; இக்காலத்துக்கேடயமெனா மருவியது. பண்டினும் நனிபல அளிப்ப என்றது, மனைவியைமுன்பு அன்புபாராட்டும் அளவினுங்காட்டில் மிகுதிப்படப்பாராட்டுதல் ; கண்ணுந் தோளும் நுதலுங் கூந்தலுந் தைவந்து தழுவி முழுவி உறுப்புக் களைப் பலகாலும் நோக்கிநிற்றலும் பலபடிசென்றுபோந்து நோக்கி மீளுதலும் பயனில்லாத வழியும் வாளா உரையாடலும் பிறவுமாம். இது துன்பத்துப்புலம்பல். எனை **மெய்ப்பாடு** – அழுகை. **பயன்** – அயா வுயிர்த்தல். (கஎஎ)

கஎஅ. ........................

நெய்தல்: இது, சிறைப்புறமாகத் தோழி

செறிப்பறிவுறீஇயது.

எ - து, சிறைப்புறத்தானாகிய தலைவன்கேட்டு வரைவொடு புகுமாற்றானே தோழி தலைவியை இல்வயிற்செறித்தமையை அறிவுறுத்துவாளாய்த் தலைவனது தேரையும் பார்க்கமுடியாதாயிற்று, நாண்மிகுதலாலே துயிலவும் இல்லை, என்னெஞ்சும் அழிந்ததென்றுகூறி, உள்ளுறையாலே தலைவியினுடைய ஏனையநிலைமையுங்கூறி வரைவுகடாவாநிற்பது.

ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன
தோடமை தூவித் தடந்தாள் நாரை
நலனுணப் பட்ட நல்கூர் பேடை
கழிபெயர் மருங்கின் சிறுமீன் உண்ணாது
கைதையம் படுசினைப் புலம்போடு வதியும்
தண்ணந் துறைவன் தேரே கண்ணில்
காணவும் இயைந்தன்று மன்னே நாணி
நள்ளென் யாமத்துங் கண்படை பெறேஎன்
புள்ளொலி மணிச்செத்து ஓர்ப்ப
விளிந்தன்று மாதவத் தெளிந்தஎன் நெஞ்சே.

உரை :—அசைகின் றமுங்கிலினுள்ளே உரிக்கப்படும் உரியைமடித்து மெல்லிதாகப் பிசைந்துவைத்தாலொத்த தொகுதி அமைந்த சிறகுகளையும் நீண்டகால்களையுமுடைய நாரையினால் இன்பம்நுகரப்பெற்ற செயலற்ற பேடை, கழிக்கரையிலே பெயருமிடங்களிற் பெயர்ந்துசென்று சிறிய மீனையுமுண்ணாது தாழையின் பெரியகிளையின்கண்ணே வருத்தத்துடன் உறையாநிற்கும் மெல்லியதுறைகளையுடைய நம் காதலனூர்ந்துவருந் தேரானது, முன்பு நம்முடைய கண்ணாலேனுங் காணுதற்குப் பொருந்தி இருந்தது; இப்பொழுது அதுகழிந்தது; ஏதிலமாதரார் கூறுஞ் சிறுசொல்லை நம்பி நம் அன்னை இல்வயிற்செறித்தலானே, நாணமுற்று இரவு நடுயாமத்திலுங் கண்துயில்கொளப்பெற்றிலேன்; அயலிலே பறவைகள் ஒலித்தல் அவர்தேரின் மணியொலிபோலிருத்தலால், அவ்வொலியைக் கேட்டு முன்பு மிகத்தெளிந்திருந்த பெருமையுடைய என்னெஞ்சமானது இப்பொழுது அழிவுபொருந்தியதாயிற்று; எ - று.

ஆக்கம் - ஆக்கப்படுவது: செய்யப்படுவதென்றவாறு. ஐது - மெல்லிது; வியப்புடைத்தாக வென்றுமாம். தோடு - தொகுதி. மன் - கழிவுப்பொருளது. செத்து - ஒத்து: உவமவுருபு. நல்கூர்தல் - பல்காற் புணர்தற்கின்றிச் சேவல் நாரையைப்பிரிந்து தனியிருத்தல். மா - அசைச் சொல்.

அவன்முயக்கங் குறைந்தவழி அருகிலே நோக்கியிருந்தாலும் உள்ளம் தேறும்: நோக்காதவாறு இல்வயிற்செறித்தமையானே தேரினையுங்காணு வண்ணம் அதுகழிந்ததென இரங்கினாள். இது துன்பத்துப்புலம்பல். கண்படைபெறேனென்றது கண்டுயில் மறுத்தல். நெஞ்சம்விளிந்ததென் றது ஆங்குநெஞ்சழிதல். இது தலைவிகூற்றைத் தோழி தன்கூற்றாகக் கூறியது.

உள்ளுறை :—நாரையால் நலனுணப்பட்ட பேடை, பின்பு சேவலின்றித் தனியே மீனுமுண்ணாது சினையின்கண்ணே புலம்பொடுவதியு மென்றது, தலைவனாலே நலனுணப்பட்ட தலைவி மீட்டும் அவனை அடையப்பெறாது உண்டியும் விரும்பாது இற்செறிக்கப்பட்டு வருந்தி உறையாநிற்கும் என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இற்செறிப்பறிவுறுத்தி வரைவுகடாதல். (களஅ)

பாலை : இது, மனைமருட்சி.

எ - து, தலைமகன் தலைமகளை வைகிருளிலே கொண்டு தலைக்கழிந்த தனைச் செவிலியாலறிந்த நற்றாய், அஃது அறநெறியேயென வுணர்ந்தும் அவளது இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்குகின்றாள் என்றொரு மகள் பாலூட்டவும் உண்ணாது அழுபவளாய் நேற்றும் அத்தன்மையளா யிருந்தவள், இன்று ஒருவன்பின் சுரநெறியிலே சென்றனள்; இங்ஙனஞ் சென்றனளென்பதை எவ்வாறு ஆற்றுவேனென நொந்து கூறுகிறது.

இல்லெழு வயலை ஈற்றுஆ தின்றெனப்
பந்துநிலத்து எறிந்து பாவை நீக்கி
அவ்வயிறு அலைத்தஎன் செய்வினைக் குறுமகள்

மூலமும் உரையும்

௨௦௫

மானமர்ப்பு அன்ன மையல் நோக்கமொடு
யானுந் தாயும் மடுப்பத் தேனொடு
தீம்பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி

நெருநலும் மனையுள் மன்னே இன்றே
மையணற் காளை பொய்புக லாக
அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்
முருந்தேர் வெண்பல் முகிழ்நகை
திறந்தே.

**உரை** :—மனையகத்து முளைத்துப்படர்ந்த வயலைக்கொடியை ஆங்குக் கன்றையீன்ற பசுவானது சென்றுதின்றதனாலே அதுகண்டவுடன் தான் விளையாட்டயர்ந்துகொண்டிருந்த பந்தை நிலத்தெறிந்துபோகட்டு ஓரை ஆடும் பாவையையும் அவ்வயின்வைத்துத் தனது அழகிய வயிற்றிலடித்துக்கொண்ட செய்யுங்காரியங்கள்வல்ல என் இளம்புதல்வி மானின் பொருந்திய நோக்கம்போன்ற மையலைச்செய்யும் பார்வையுடனே,— யானும் செவிலித்தாயும் தேனொடுகலந்த இனிய பாலையருந்துகவென்று ஊட்டவும் உண்ணாது விம்மி அழுபவளாகி நேற்றும் அத்தன்மையளாயிருந்தனள்; அங்ஙனஞ் செய்வதெல்லாங் கழிந்தது; இன்று கறுத்த அணலையுடைய காளையாவானது பொய்ம்மொழியே தனக்குப் பற்றுக்கோடாகக்கொண்டு முருந்துபோன்ற தன் வெளிய எயிறுகளிலே தோன்று நகையைத் தோற்றுவித்து உடன்பட்டுச் செல்லுதற்கரிய சுரத்தின்கண்ணே சென்றொழிந்தனள்; இத்தகைய இளமையுடையாள் எங்ஙனஞ் சென்று மனையறம்பூண்டு ஒழுகாநிற்குமென்று அஞ்சுகின்றேன்? எவ்வண்ணம் ஆற்றுவேன்? எ - று.

அ - அழகு. அணல் - மோவாயின் கீழுள்ளதாடி. பொய் - ‘தான் செல்வமிக்குள்ளேன், வன்மையுடையேன், என்மனையகத்து நின்னைப் பாராட்டுநர் பல்லாயிரர்காண்’ என்பதுமுதலாயின. புகல் - பற்றுக்கோடு. இத்தகைய என்பதுமுதற் குறிப்பெச்சம்.

வயலைக்கொடியை ஈற்றுஆ மேய்ந்தழித்ததனை நோக்கி என்குறுமகள் வயிறலைத்து வருந்தியதுபோல அவளை ஏதிலாளன் துய்த்துக் கைக்கொண்டுபோக யான்வயிறலைத்துப் புலம்பாநின்றேனென்பது. **மெய்ப்பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமைநீங்குதல். (௱௭௧)

## ௧௮௦. ..........................

**மருதம்** :

இது, தலைமகற்கு வாயினேர்ந்ததோழி, தலைமகளிடத்துப் பொருமைகண்டு சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனை எதிரேற்று முகமன்வழங்கியதோழி, தலைமகளிடஞ்சென்று கூறுதலும் அவள் சினமிகுந்து உடன்படாமையால் உள்ளங்கலங்கி ஊரன் பரத்தையர்பால் நசையுடையனுகி இல்வயின்வருகின்றிலன்; வரினுந் தலைவி தான் புலவிநீங்குவாளல்லள்; இவ்விருவருடையபகையும் யான் இறங்கொழியின் அன்றே தீர்ந்துவிடும் போலுமென நொந்து கூருகிற்பது.



பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்
விரவுவெள் ளரிசியில் தாஅம் ஊரன்

௫.

பலர்ப்பெறல் நசைஇநம் இல்வா ரலனே
மாயோள், நலத்தை நம்பி விடலோல் லாளே
அன்னியும் பெரியன் அவனும் விழுமிய
இருபெரு வேந்தர் பொருகளத்
தொழித்த
புன்னை விழுமம் போல
என்னொடு கழியுமிவ் இருவரது இகலே.

உரை:—வயலருகிலிருக்கின்ற பலாமரத்திலுள்ள இலைகளைக்கூடாக்கி முயிறுகள் முட்டையிட்டு நெருங்கியுறைகின்ற அக்கூடுகளைக் கழனியின் கண்ணே இரையுண்ணுமாறுபோந்த நாரை சென்றிருந்து உரிஞ்சுதலானே அம்முயிறுகளும் அவற்றின் முட்டைகளும் மழுக்கியபடியுள்ள சிவந்த நெல்லொடுகலந்த அரிசியுதிர்ந்து பரவினாற்போல உதிர்ந்து பரவாநிற்கும் வயல்சூழ்ந்த ஊரையுடைய தலைவன், பரத்தைமகளிர் பலரைத் தான்பெற்று முயங்குதலை விரும்பி அதனால் நம்மனையகத்து வருகின்றானலன்; ஒருகால் அவன் வரினும் அப்பொழுது மாமைநிறத்தையுடையளாய தலைவி அவனது நலத்தையுடைய பெருந்தகைமையை விரும்பித் தான் அதன்முன் ஏறட்டுக் கொண்டுடைய துனிவிட்டொழிவாளுமல்லள்; ஆகலின் அன்னிகுடியி லிருந்த அன்னியென்பவனும் தேரழுந்தூரிலுள்ள பெரிய திதியனென்ப வனும் ஆகிய சிறப்புற்ற இரண்டு பெரிய அரசர்கள் போர்செய்த குறுக்கையின்கண் உள்ள போர்க்களத்தில் அன்னி வெட்டிச்சாய்த்தலாலே பூவுமலரு மிக்க துன்புற்ற புன்னைமரம்விழுதலும் அவ்விருவருடைய பகைமையும் முடித்தொழிந்தாற்போல, இத்தலைவியுந் தலைவனுமாகிய இருவருடைய பகைமையும் இடையிலுள்ள யான் இறந்தபோனால் என்னொருத்தியொடு நீங்கும்போலும்; எ - று.

பாகல் - பலா. மாயோள் - தலைவி. செந்நெல் முயிற்றுக்கும் அரிசி முட்டைக்கும் சிறப்புநிலைக்களமாக முதலொடுமுதலும் சினையொடுசினையும் வந்த உருஉவமம். துனி - அவாய்நிலை. இடையிலுள்ள ஏகாரம் இரண்டுந் தேற்றம்.

உள்ளுறை:—நாரை உரிஞ்சுதலால் குடம்பையுள் முயிறு உதிரு மென்றது, தலைவி சினமிகுத்தலினால் என்னுடலினின்று உயிர்நீங்கும் போலுமென்றதாம். மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன் - தலைவி ஊடல்தீர்தல். (கஅ0)

## கஅக. ................

மூல்லை : இது, வினைமுற்றிப் புகுந்ததுகண்ட

தோழி மகிழ்ந்து

உரைத்தது.

எ - து, தலைவன் வினைமுடித்துவரக்கண்ட தோழி மகிழ்ந்து மாலைப் பொழுதிலே தலைவனது தேர்வந்ததாதலின், இனிப் பசலையால் இவளது நெற்றியினழகு கெடாதிருக்குமெனவும் உள்ளுறையால் முன்பு பரத்தை





யிற் பிரிந்ததலைவனை வெறுத்தாற்போல வெருது எதிர்கொள்ளற்பாலள் எனவும் உவந்து கூறுகிறபது.

உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்
பிறபுலத் துணையோடு உறைபுலத் தல்கி
வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை
நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன
சிறுபல் பிள்ளையோடு குடம்பை

கடிதலில்

துவலையின் நனைந்த புறத்த தயலது
கூர லிருக்கை அருளி நெடிதுநினைந்து
ஈர நெஞ்சில் தன்வயின் விளிப்பக்
கையற வந்த மையல் மாலை
இரீஇய வாகலின் இன்னொலி யிழந்த
தாரணி புரவி தண்பயிர் துமிப்ப
வந்தன்று பெருவிறல் தேரே
உய்ந்தன் றாகுமிவள் ஆய்நுதற் கவினே.

**உரை** :—மனையகத்துக் கூரையினுள்ளே உறைகின்ற கரியதாழ்வாயை உடைய குருவியின்சேவல், வேற்றுப்புலத்துச்சென்று ஆண்டுள்ள ஒரு குருவிப் பெடையொடு மற்றொருசார்பிலே புகுந்து புணர்ந்து அங்கே சிறிதுபொழுது தாழ்த்திருந்துவருதலும் வந்ததனுடைய மெய்யிலே புணர்குறி வாய்த்திருப்பதை நோக்கி அதற்குரிய பேடையானது நெறிப்புவிளங்கிய ஈங்கையின் பூவைப்போன்ற சிறியபலவாகிய பிள்ளைகளும் தானும் சேரநின்று குடம்பையினுள்ளே புகுதாதபடி தடுத்தலினால், மழையிலே நனைந்த புறத்தினதாகிப் பக்கத்தில் நடுங்கியிருப்பதைநோக்கி நெடும்பொழுது ஆராய்ந்து, அருள்கூர்ந்து இரக்கமுற்ற நெஞ்சத்தோடு தன்பால் வருமாறு அழைப்பக் குருவிச்சேவல் செயலற்று வாராநிற்கும் மயக்கத்தையுடைய மாலைப்பொழுது வந்திறுத்ததாகலின் இனிய ஒலியிழந்த மாலை அணிந்தபுரவி மெல்லிய பயிர்களை மிதியாநிற்பப் பெரியவெற்றியை உடைய தலைவரது தேர்வந்திறுத்தது; இனி இவளது சிறிய நெற்றியில் உள்ள அழகானது பசலையாலுண்ணப்படாது உய்ந்ததாகும்; எ - று.

கூரலிருக்கை - மழையாலுங் குளிராலும் நனைந்து நடுங்கியிருப்பது. விறல் - வெற்றியையுடைய தலைவனையுணர்த்துஞ் சொல். முருகவேளை "அணிசால் பெருவிறல்" என்றார் (அக.) கலியினும். ஆய்நுதல் - சிறுநுதல்.

**உள்ளுறை** :—வேற்றுப்புலத்தொரு பெடையைப் புணர்ந்து மீண்டு வந்த சேவலை அதனுரிய பேடை தன் பிள்ளையொடு சென்று குடம்பையுள்ளே புகுதாவாறு தடுத்துப் பின்பு அச்சேவல் புறத்தே நனைந்துவருந்துவதைநோக்கி இரங்கி அழையாநின்றதென்றது, முன்பு தலைவன் பரத்தையிற் பிரிந்துவருதலையறிந்த தலைவி தன் உழையருடன் சென்று மறுத்துப் பின்பு அவன்புறத்து வருந்திநிற்றலையறிந்து எதிரேற்றுக்கொண்டனள்; அங்ஙனமின்றி இப்பொழுது எதிர்கொண்டு பணிந்தேற்கற்பாலள் என்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (கஅக)



கஅஉ. ............

குறிஞ்சி ;

இது, வரைவுநீட்டிப்பத் தலைமகளாற்றாமையறிந்த தோழி சிறைப்புறமாகச் சொல்லி வரைவுகடாயது.

எ - து, தலைவன் மணம்புரிந்துகொள்ள நீட்டித்ததனாலே தலைவி வருந்துவதறிந்த தோழி, இரவுக்குறிக்கட் சிறைப்புறமான தலைமகன் கேட்டு விரைவில் வரையுமாறு தலைவியை நிலவுமறைந்தது, இருளுமூடியது, அன்னையுந்துயிலுவள் இப்பொழுது குறிவயின்வந்து நின்ற தலைவனது நிலைகண்டு அவன்மார்பை முயங்கிவருவேமோ சொல்லுவாயென்று கவன்று கூறுநிற்பது.

நிலவு மறைந்தன்று இருளும் பட்டன்று
ஓவத் தன்ன இடனுடை வரைப்பில்
பாவை யன்ன நற்புறங் காக்குஞ்
சிறந்த செல்வத்து அன்னையுந் துஞ்சினள்
கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக்கொண் டாங்கு
நன்மார்பு அடைய முயங்கி மென்மெலக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
கீழும் மேலும் காப்போர் நீத்த
வறுந்தலைப் பெருங்களிறு போலத்
தமியன் வந்தோன் பனியலை நிலையே.

உரை :—தோழீ! நிலாவும் மறைந்தொழிந்தது; இருளும்வந்து பொருந்தியது; சித்திரத்திலமைந்தாலொத்த அகன்ற இடத்தையுடைய வீட்டின் எல்லையிலே பாம்பைபோன்ற நம்மைப் புறங்காக்கின்ற சிறந்த மேம்பாட்டினையுடைய அன்னையும் துயிலாநின்றனள்; தறியிலே பிணித்துக் காப்பவரும், மீதேறி நடத்துபவருமொழிந்த சிறிய தலையையுடைய பெரிய களிற்றுயானைபோலத் தனியாகவந்த தலைவனது பனியலைத்தலானே கலக்குண்ட நிலையைச் சென்றுநோக்கிக் கையிலிருந்து தவறுண்டுவிழுந்து இழந்துபோகிய நல்ல அணிகலனை மீட்டும் கண்டெடுத்தாற்போல நம்மை இற்செறித்தலான் அடையப்பெறாதிருந்த அவனுடைய நல்லமார்பைச் சேரப்புல்லி மகிழ்ந்திருந்து அவனைப் பலகாலுஞ் செவ்விதாகநோக்கிப் பின்னர் மெல்லமெல்லவருவமோ? ஆராய்ந்து கூறுவாயாக; எ - று.

வறிது - சிறிது; வறுந்தலை - சிறியதலை; அலங்கரிக்கப்படாத தலையுமாம்.

நிலாவெழுகின்றதனாலே களவின்முயங்க இடையீடுபடுதலை அறிவுறுத்தி வரைவுடன்படுத்துவாள் நிலவுமறைந்தன்றென்றாள். நெறியினது ஏதங்கூறுவாள் களவுக்கு இன்றியமையாமைபோல இருளும்பட்டதென்றாள். அன்னை துயிலுமென்பதனால் அவளது வெகுளியும் இல்வயிற்செறிப்பும் அறிவுறுத்தினாள். கண்டனம் வருகமென்றதனாலே இல்வயிற்காப்புப் பூண்டதே காரணமாக இதுகாறுங் காணப்பெறாமையறிவுறுத்தினாள். அவன் மார்பு முயங்கப்பெறாது போயதேயென்பதறிவுறுத்துவாள் கையிழந்த நன்கலத்தை உவமித்தாள். அவன் மார்புபெறின் உண்டாகு மகிழ்ச்சி

யையும் அனையகலன் கைவந்தாற்போன்ற தென்பதனூற் கூறினள். வரைந்துகொள்ளென வற்புறுத்துவாரின்மையாலே தன்னுள்ளஞ் சென்ற வாறு களவின்வந்து ஒழுகுமென்பாள் காப்போர்நீத்த களிறுபோன்று னென்றாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கஅ௨)

## கஅ௩. ....................

நெய்தல்: இது, வரைவிடைவைத்துப் சொல்லியது.

பிரியுந்தலைவற்குத் தோழி

எ - து, வரைதல்காரணமாகப் பொருளீட்டிவருமாறு பிரிதலுறுந் தலைமகனைத் தோழி பிரிதலால்வருகின்ற துன்பம் இன்னதன்மையதென்பாள் உமணர்பிரிதலாலே இன்னுமை யுண்டாதல்போல, நீ பிரிதலால் இன்னுமைதோன்றும்; அவ்வின்னுமை தோன்றுமாறு ஊதையொடு மாலையுந் தோன்றுதலுடையதாயிராநின்றது; இவ்வளவிலே பிரியின் அவள்வாழாள்; அதனைநினையாதோய், நீ அறியாமையுடையையென வெகுண்டு கூறுநிற்பது.

தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
ரு.
அவணுறை முனிந்த ஒக்கலோடு புலம்பெயர்ந்து
உமணர் போகலும் இன்னு தாகும்

மடவை மன்ற* கொண்க வயின்தோறு
இன்னா தலைக்கும் ஊதையொடு ஓரும்
நும்மில் புலம்பின் மாலையும் உடைத்தே
இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த
வறுநீர் நெய்தல் போல
வாழாள் ஆதல் சூழா தோயே.

உரை :—கொண்கனே! மருதநிலத்தின்கணுள்ள உப்புவாணிகர் தமது நாட்டில் விளைந்த வெளியநெல்லைப் பண்டிகளிலேற்றிச்சென்று கொடுத்து அந்நெல்விலையாக அயனாடாகிய நெய்தனிலத்திலே விளைந்த உப்பைப்பெற்றுக்கொண்டுபோய் விலைகூறி, நீண்டநெறியிலே பண்டிகளுடனே நிலாப்போன்ற மணற்பரப்பைக் கடந்து தாம் பிரிந்து போதலாலே தனியே அவ்விடத்திலிருப்பதை வெறுத்தசுற்றத்துடனே அங்குநின்றும்போந்து அவ்வுப்புவாணிகர் செல்லுதலும், அவர்தங்குழுவொடும் பண்டிகளொடுஞ் சென்றொழிந்தமை அவ்வூர்க்கு இன்னாமையைத் தருவதொன்றாயிருக்குமன்றோ? அப்படியே நீயும் எம்மைக் கையிகந்துபெயர்வது, எமக்கும் இன்னாமையைத் தருவதொன்றாகும்; அங்ஙனம் துன்பந்தருதற்கு, இடங்கள்தோறும் துன்புறுத்திவருத்துகின்ற கூதிரின் ஊதைக்காற்றுடனே நீயில்லாத தமியேமாகியகாலத்துப் போதருகின்ற மாலைப்பொழுதும் ஏதுவாக

(பாடம்) * மடவைமன் றம்ம.

வுடையதாயிராநின்றது; அதனையறிந்துவைத்தும் நீ பிரியின்,-மீனினத்தை மிகத்தின்ற வெளியநாரை மிதித்த நீர்வற்றியகுளத்து நெய்தல்மலர்போல இவள் ஒரு நொடிப்பொழுதும் உயிர்வைத்திருப்பவளல்லள்; அங்ஙனம் இறந்துபடுமிவளதுசெயலை நினையாதநீ அம்மவோ! திண்ணமாக அறி யாமையுடையை யாவாய்; எ - று.

ஒரும் - அசை. ஒழுகை - பாண்டில்; பண்டியெனவும் வண்டியென வும் இக்காலத்து வழங்கப்படுகின்றது. இது பிறிதுமொழிதல். மீனை தின்ற செருக்கோடு நாரை வற்றியகுளத்துச் சிறிதுசிறிது மலர்ந்து வாட்ட முறுகின்ற நெய்தல்மலரை மிதித்துக்கெடுத்தல்போலப் பொருள்வயி கொண்ட வுள்ளத்தொடுநீ நெடுநாளைக்கொரோவோர்கால் நின்னைப்பெற் எனைக்காலத்து வாடியிருக்குந்தலைவியை முற்றும்பிரிந்து இறந்துபாடுறுவி கின்றனை என உவமையோடு பொருளை ஒற்றுமையாக்குக. வாழாளா வென்றது துன்பத்துப்புலம்பல். எனை மெய்ப்பாடு - பெருமிதம். பயன் செலவழுங்குவித்தல். (கஅ-

## கஅச. ....................

### பாலை: இது, மனைமருட்சி.

எ - து, தலைமகன் தலைமகளைக் கொண்டுதலைக்கழிதலும் அதனை செவிலியாலறிந்த ஈன்றதாய் புலம்புவாளாக, அங்ஙனம் புலம்புதல்கண்ட அயல்மனைமாதர்போந்து தேற்றி, அஃது அறத்தாறுதல்கண்டாய் இனி வருந்தாதேகொளென்றார்க்கு அறத்தாறுயினும் பிரிவை எவ்வண்ண தாங்கமுடியும்? என்மகள் ஆடிய இடங்காணின் என்னுள்ளமும் வேகின் தன்றே எனா எதிரழிந்து கூறாநிற்பது.

ஒருமகள் உடையேன் மன்னே அவளுஞ்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற்
காளையொடு

பெருமலை அருஞ்சுரம் நெருநற்
சென்றனள்
இனியே, தாங்குநின் அவலம் என்றிர்
அதுமற்று
யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை
யீரே
உள்ளின் உள்ளம் வேமே உண்கண்
மணிவாழ் பாவை நடைகற்
றன்னஎன்
அணியியல் குறுமகள் ஆடிய
மணியேர் நொச்சியுந் தெற்றியுங்
கண்டே.

உரை:—அறிவுடைய அயலிலாட்டியரே! நுங்களைப்போலப் ப
புதல்வியரைப் பெற்றேனில்லை; யான் ஒரோவொரு புதல்வியையே பெ
றுடையேன்; அவளும் போரின்மிக்க வலிமையும் கூரிய வேற்படை
முடைய காளையாவானொருவனொடு நெருநலிரவு பெரியமலையின் கண்உள்
சென்று சேர்தலரிதாகிய சுரநெறியே சென்றொழிந்தனள்கண்டீர்; அ
ஙனம் அவள் போயொழிதலானே அவள்பால் யான்கொண்டிருந்த அவ
வும் நீங்கியது; ஆயினும் வேறுபுதல்வியரோடு மகிழ்ந்துறையும் பயனெய்
வேனுதலின் அவளொடு பழகியதே காரணமாக இன்றுவருந்தும் என்னை
நீயிர் இனி நின்அவலத்தை அடக்கிக்கொள்ளெனக் கூறுகின்றீர்; அதனை

**உகக**

அடக்கிக்கொள்ளுதல் எவ்வாறியலுங்கொல்? மையுண்டகண்ணின் மணியூடுவாழும் பாவை வெளிவந்து நடைபயின்று நடந்தாலன்ன என் அழகிய சாயலையுடைய இளமகள் விளையாடிய நீலமணிபோன்ற பூவையுடைய நொச்சியையும் திண்ணையையும் நோக்கி நினைந்தால் அவ்வண்ணங் கருதுமுள்ளமும் வெந்தழியுமன்றே; இனி யான் எவ்வாறய்குவேன்? எ - று.

மன் - கழிவு. நொச்சி - முன்றிலின்கணுள்ளவேலியில் நிழல்நிரம்பிய நொச்சி. இது சிற்றில்கோலிச் சிறுசோறட்டு விளையாடிய இடம். தெற்றி- திண்ணை; இது கழங்கு, பலகறை, பல்லாங்குழி முதலாயின ஆடிய இடம்.

அவளருமை கூறுவாள் கண்மணியுள் வாழ்பாவையை உவமித்தாள். சிலநாள் கடந்தாலும் நெஞ்சம் ஆறுமன்றே, அங்ஙனமுமின்றி நெருநல் இரவிலேதான் சென்றனளாதலின் அவலம் தாங்குவதெங்ஙனமொல்லும் என்றாள். நன்னெறியில்லாத கொடுஞ்சுரமாதலின், அதனை நினையினும் அவலம் தாங்குவதெங்ஙனமொல்லுமென்றாளெனவுமாம். மெய்ப்பாடு - உவகைக்கலுழ்ச்சி. பயன் - ஆற்றாமைநீங்குதல். (கஅச)

## கஅரு. ..............................

குறிஞ்சி: (க) இது, யாங்கற்குத் தலைவன் சொல்லியது.

எ - து, பாங்கற் கூட்டத்துக்கட், கற்றறிபாங்கன் கழறக்கேட்ட தலைவன் வருந்திக் கொல்லிப்பாவைபோன்ற அவள் கொலைபுரியச் சூழ்ந்தனளாதலின் அதுகாரணமாகவுற்ற என்துன்பத்தை நீ கண்ணாலே காணப்பெற்றிருந்தும் அவளையான் கூடுமாறு நீ முயலாதொழியின் அது நின்னால் வந்ததன்று என் ஊழ்வினையால்வந்ததென அதனைநோவனென்று அழிந்து கூறுநிற்பது.

,, ,, (உ) சேட்படுக்குந் தோழிக்குத் தலைவன் சொல்லிய தூஉமாம.

எ - து, சேட்படை முன்பு கூறினமையானே பொருள்வெளிப்படை; உரை இரண்டற்கும் ஒக்கும்.

ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கிக்
காமங் கைம்மிகக் கையறு துயரங்
காணவு நல்கா யாயிற் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
கவிகுளம்பு பொருத கன்மிசைச் சிறுநெறி
இரவலர் மெலியாது ஏறும் பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லிக் குடவயின்
அகலிலைக் காந்தள் அலங்குகுலைப்
பாய்ந்து

பறவை இழைத்த பல்கண் இறால்
தேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை அன்னோள்

கொலைசூழ்ந் தனளால் நோகோ யானே. ௨௯௨



**உரை:**—பாணர் பரிசிலாகப்பெற்ற விரிந்த புறமயிரையுடைய நல்ல குதிரையின் கவிந்தகுளம்பு மோதுதலாலே செப்பமாகிய மலைமேலுள்ள சிறுநெறியின்கண்ணே, மெலியாமல் இரவலரேறுகின்ற பொறையனது புகழமைந்த கொல்லிமலையின் மேல்பால் அகன்ற இலையையுடைய காந்தளின் அசையும் பூங்குலையிலேபாய்ந்து தேனைநுகர்ந்துவந்து வண்டுகளால் வைக்கப்பட்ட பலவாயகண்களையுடைய இறாலின்கண் மிக்க தேனையுடைய நெடிய அம்மலையிலே தெய்வத்தாற்செய்துவைத்தலிற் செயற்கைமாட்சிமைப்பட்ட பாவைபோன்ற அவள்தான் என்னைக்கொலைசெய்யும்வண்ணம் ஆராய்ந்து நன்றாக அறிந்துகொண்டனள்; அங்ஙனம் சூழ்ந்தவளது சூழ்ச்சியிலேபட்டு இன்னும் இறவேனாகி அடங்காத நோயுடனே பலபலவாக எண்ணிக் கழிக்கின்றதுன்பமிகுதலானே கலக்கமெய்திக்காமமானது அளவு கடந்து பெருகுதலானே என்செயலொருங்கழிந்து வருந்துகின்றேன்; இங்ஙனம்வருந்தி அழிந்தொழிவதனை நீ கண்ணாலே கண்டுவைத்தும் அவளுடன் கூட்டுவிக்கு முயற்சியை நீயேசெய்யாதொழியின் அது நின்னால் வந்ததன்று என் ஊழ்வினையால் வந்ததென அவ்வூழினை யான் நோவாநிற்பேன்; எ - று.

ஆனாமை - அமையாமை; அடங்காமை. படாஅலே கலங்கியென மூன்றனுருபுவிரிக்க. கைம்மிகல் - அளவுகடத்தல். கொல்லிப்பாவை - அம்மலையிலுள்ள தேவரையும் முனிவரையுந் துன்புறுத்தவருகின்ற அவுணரும் அரக்கரும் அப்பாவையின் நகையைக்கண்டு மயங்கி உயிர்விடும்படி தேவதச்சனுக்கிவைத்த பெண்வடிவினது. அவுணரும் அரக்கரும் போதருகாலே அவர்வாடைபட்டவுடன் தானே நகைசெய்யுமாறு பொறியுள் வைக்கப்பட்டது. அது நகைத்துக் கொல்லுமென்பதனை "திரிபுரத்தைச், செற்றவனுங் கொல்லிச் செழும்பாவை யுந்நகைக்கக், கற்றதெல்லா மிந்த நகை கண்டேயோ" (சித்திரமடல்) என்றதனுலுமறிக. அது போன்றவ ளென்றதனால் என்னையும் குறுநகையால் மயக்குவித்துக் கொலைசூழ்ந்தன ளென்க.

இறைச்சிகள்:—(க) பாணரின் குதிரைக்குளம்பாலே செப்பமாகிய நெறியில் இரவலர் மெலியாதேறுமென்றது, நீ சென்று கண்டு இவைவிப்பின் அந்நெறியே யான் வருந்தாது சென்று கூடுவேனென்றதாம்.

" " (உ.) கொல்லிமலையிலுள்ள காந்தளின்தேனை வண்டு கொணர்ந்து இருலின்கண் வைக்குமென்றது, என்னறிவு என்னெஞ்சினைப் புகுந்து பற்றிக்கொண்டுபோய் அவள்பாலுய்த்ததறிவா யென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்த வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - பாங்கனை உடன்படுவித்தல். (கஅ௯)

**கஅரு.** ........................

**பாலை:** இது, பிரிவிடை மெலிந்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

ஏ - து, தலைவன்பிரிதலானே தலைவி வருந்துவளென நினைந்து மெலிந்ததோழியை அதனையறிந்ததலைமகள் கூறுவாளாய் நம் காதலர் தாஞ் சென்ற ஆறு மரமீதேற இயலாத ஓந்தி யாழோசையோர்ந்து அசைவு தீர்ந்து ஏறுந்தொழிலையுடையவாகுமென்று உரைசெய்வராதலின், அன்ன



தொருநெறியில் யாங்ஙனஞ் செல்வரோவென்று என்னுள்ளம் வருந்துவதாயினும் அவர்வருவரென ஆற்றுவேன்காணென்று இறைச்சியாலே பொருள் கொள்ளுமாறு சூழ்ந்து கூறுநிற்பது.

கல்லூற்று ஈண்டல கயன்அற வாங்கி
இரும்பிணர்த் தடக்கை நீட்டி
நீர்கொண்டு பெருங்கை யானை பிடியெதி
ரோடும்
கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை
வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்துப்
பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்
நெடுநிலை யாஅம் ஏறுந் தொழில
பிறர்க்கென முயலும் பேரருள்
நெஞ்சமொடு
காமர் பொருட்பிணி போகிய
நாமவெம் காதலர் சென்ற வாறே.

**உரை**:—கல்லின்கண்ணே ஊறுகின்ற ஊற்றிற் சேர்தலையுடைய நீரைப் பெரியசருச்சரையுடைய நீண்ட துதிக்கையைநீட்டி அவ்வூற்றுக் குழியில் அறவாங்கி முகந்துகொண்டு பெரியகையையுடைய களிற்றியானை தன்பிடியானையினெதிரே ஓடாநிற்கும் காடுமுற்றும் வெப்பமடைந்த வறன்மிக்க கற்சுரத்திலே,—தன்வாழ்நாளும் பொருளும் இன்னோரன்ன எல்லாம் பிறர்பொருட்டேயென்று முயன்றுமுடிக்கும் பெரிய அருள்மிக்க நெஞ்சுடனே அழகியபொருளாசை பிணித்தலால் எங்காதலர்சென்ற அச்சமுடையநெறி வேனிலின்கண் மாறிமாறித் தன்னிறம்வேறுபடுகின்ற முதிய ஓந்திப்போத்துத்தான் ஏற இயலாது வருந்தியவிடத்து ஆண்டுச் செல்லும் பாணர் தம் அசைவுதீரச் சிறிதுபொழுது யாழ்வாசிப்ப அதனைக் கேட்டலும் தன்வருத்தந்தீர்ந்து பக்கத்தில் நீண்டு நிற்றலையுடைய யாமரத் தின்மீது ஏறுந்தொழிலையுடையனவென்பர்; அத்தகைய கொடியகாட்டில் அவர் செல்லுவதனை நினைத்தலான் இனி எவ்வண்ணம் யான் ஆற்றியுளேனாவேன்? எ - று.

கயன் - ஊற்றுநிலை. பிணர் - சருச்சரை. ஈண்டல - ஈண்டுதலையுடைய நீர். ஓதி - ஓந்திக்கொருபெயர். நிறம்பெயர் முதுபோத்தென்றதனாலே பச்சோந்தியெனவுமாம். கடைய - செலுத்துதலால். பொருட்பிணிகாதலரெனக்கூட்டுக. அத்தகைய என்பதுமுதற் குறிப்பெச்சம். இங்ஙனம் கூறினாள் இறைச்சியால் ஆற்றியிருப்பேனாதலின் நீவருந்தாதே கொள் என்றாளென்பது.

**இறைச்சி**:—நீர்வறந்தகாலத்துக் கயத்தினூறுநீரைத் தன்பிடிவருந்தாவாறு களிறு கையால் நொண்டு கொண்டு சென்றதென்றதனாலே யான் வருந்தாவாறு தலைவர்தாம் சென்றவிடத்து எய்தப்படும்பொருளொடு விரைந்து போதருவர் ஆதலின் ஆற்றியிருப்பேனென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்தபெருமிதம். **பயன்** - அயாவுயிர்த்தல்.

(கஅக)

# கஅஎ. ஔவையார்

**நெய்தல்:** *இது, தலைமகன் பகற்குறிவந்து மீள்வானது செலவு நோக்கித் தலைமகள் தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.*

*எ – து, பகற்குறிவந்த தலைமகன் மீண்டு போகும்பொழுது அவன் செல்லுதலைநோக்கிய தலைவி புலம்புகின்றவள், கானற்சோலையும் விளங்குதல் குறைவதாயிற்று; காதலன் ஏறிச்செல்லுந் தேருஞ் சென்றுமறையாநிற்கும்; ஆதலின் இவ்வூரொடு, நாம் அவனொடுமயங்கியிருந்த சோலை இனி நமக்கு எவ்வண்ணமாகத் தோன்றுநிற்குமென அழிந்து கூறுநிற்பது.*

நெய்தல் கூம்ப நிழல்குணக்கு ஒழுகக்
கல்சேர் மண்டிலஞ் சிவந்துநிலந் தணியப்
பல்பூங் கானலும் அல்கின் றன்றே
இனமணி யொலிப்பப் பொழுதுபடப் பூட்டி
மெய்ம்மலி காமத்து யாந்தொழுது ஒழியத்
தேருஞ் செல்புறம் மறையும் ஊரோடு
யாங்கா வதுகொல் தானே தேம்பட
ஊதுவண்டு இமிருங் கோதை மார்பின்
மின்னிவர் கொடும்பூண் கொண்கனொடு
இன்னகை மேவநாம் ஆடிய பொழிலே.

உரை :—நெஞ்சமே! நெய்தலின்மலர் குவிய நிழல்களெல்லாம் கீழைத்திசையைச் சென்றடைய மேலைத்திசையிலுள்ள அத்தமனக் குன்றைச்சென்று புகுகின்ற ஆதித்தமண்டிலம், சிவந்தநிறமுற்று நிலத்தின்கண்ணே தான் காட்டிய கொடுமைமுற்றுந் தணியாநிற்பப் பலவாய மலர்களையுடைய கடற்கரைச்சோலையும் தன்தோற்றப்பொலிவு குறைவதாயிராநின்றதுமன்; இப்பொழுது உடம்பில் மலியப்பெற்ற காமத்தையுடைய யாம் அக்காமத்தைத் தணிக்கும்வகையைப்பெறாது பின்னே நின்று தொழுது ஒழியும்படி பொழுதுபடலும் மணியினமொலிப்பக் குதிரைகளைப்பூட்டப்பட்டுத் தேரானது தான்செல்லுகின்ற புறமும் மறையாநிற்கும்; ஆதலால் இவ்வூருடனே,—தேனைப் பொருந்தவுண்ணுகின்ற வண்டுகளொலிக்கின்ற மாலையணிந்த மார்பின்கண்ணே மின்னுதல் பொருந்திய விளர்ந்தகலன்களையுடைய கொண்கனும் நாமும் இனிய உவகைபொருந்த முயங்கி விளையாடிய சோலையானது நமக்கு எவ்வண்ணமாக அமையப்படுவதாமோ? அறிகிலேன்; எ - று.

அல்குதல் - குறைதல்; வெயில்மறைதலாலே சோலையினது தோற்றம் கட்புலனாகாதபடி சிறிது சிறிதாக மறைந்துபடுதல். யாங்கு - எப்படி. அறிகிலேன் - சொல்லெச்சம். இது துன்பத்துப்புலம்பல்.

வரும்பொழுது எதிர்தொழுது போம்பொழுது புறந்தொழுதல் கற்புடைமகளிர்க் கியல்பாதலின் கையறவுதோன்றாதபடி கற்பின்றலைமைக் கேற்பத் தொழுதமைகூறினாள். காதலனொடு உறையாதவிடத்து வரும்



அவனுடன் முயங்கிக்கிடவாதவிடத்துச் சோலையும் பொலிவழிந்து வெறுப்பாகத் தோன்றுதலின் - அவற்றைக்காணுந்தோறும் யாங்காவது கொலெனத் தானுய்யாமைகூறி யிரங்கினாளென்பது. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். **கேட்போர்** - நெஞ்சம். (௧௮௭)

## ௧௮௮. ........................

**குறிஞ்சி :** இது, பகற்குறிமறுத்து வரைவுகடாயது.

எ - து, தலைமகன் பகற்குறிவந்தொழுகுகின்றானைத் தோழிநோக்கி வெற்பனே! எங்கள்தலைவி முதற்கூட்டத்துக்கண்ணே களவொழுக்கம் தீதென நன்றாக அறிந்துவைத்துளளெனின்; நீ வரைதலுஞ்செய்யாது இப்பொழுது அருகியும்வருதல் காரணமாக வாடுநளல்லள்; அதுகழிந்தது; இனி மொழிந்துயாதுபயனென மறுத்துக் கூறாநிற்பது.

படுநீர்ச் சிலம்பில் கலித்த வாழைக்
கோடுமடல் ஈன்ற கூர்வாய்க் குவிமுகை
ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத்
தொடூஉம்
மெல்விரல் மோசை போலக் காந்தள்
௯. வள்ளிதழ் தோயும் வான்தோய் வெற்ப
நன்றி விளைவுந் தீதொடு வருமென
அன்றுநன் கறிந்தனள் ஆயிற் குன்றத்துத்
தேமுதிர் சிலம்பில் தடைஇய
வேய்மருள் பணைத்தோள்
அழியலள் மன்னே.

உரை :—ஆழ்ந்தசுனையில் நீரையுடைய மலைப்பக்கத்தில் முளைத்த வாழையின் வளைந்த மடலினின்றுபோந்த கூரியநுனியையுடைய குவிந்த முகையானது, ஒள்ளிய கலனையுடைய மாதர்களின் விளங்கிய வளையொடு பிணிப்புற்ற மெல்லிய விரலிலணிந்த விரலணிபோலச் செங்காந்தளின் வளவிய இதழிலே தோயாநிற்கும் விசும்பில் நீண்டுபொருந்திய மலையை யுடைய தலைவனே! எம் தலைவி 'ஒருகாலத்து நன்றாக முடிவதொருகாரிய மும் மற்றொருகாலத்துத் தீதாகவரும்' என்று நின் இயற்கைப்புணர்ச்சி யாகிய முதற்கூட்டத்தின்கண்ணே இரந்து பின்னிலைநின்ற அக்காலத்து நன்றாக அறிந்தனளாயிருப்பின் குன்றத்ததாகிய தேன்முற்றிய பக்கமலையில் முளைத்துவளர்ந்த அடியையுடைய மூங்கில்போலும் பருத்ததோள் இக் காலத்து நெகிழ்வாளல்லள்; அது கழிந்தசெயலாகி முடிந்ததாதலின் இனிக் கூறி என்னபயனும்? எ - று.

படு - நீர்நிலையாகியபள்ளம். மோசை - விரலணி; வாழைப்பூப் போலக் குவிந்துளதென உவமையாலறியக்கிடத்தலின் மோதிரமன்மை யுணர்க. தடைஇய - வளைந்த. தோள் அழியலன் - சினைவினை முதலொடு முடிந்தது.

நல்லனுபிருந்தநீ கொடியகருத்தினையாய் வந்தனையென்பாள், நன்றி விளைவுந் தீதொடுவருவது என்றதனாலே குறிப்பித்தாளென்பது. அக் காலத்தே அறிந்துளாளெனின் உடன்படாதே உறையும்; 'நின்கொடுஞ்



செயலை அறியாது கூடி இஞ்ஞான்றை வருந்துகின்றனளென்றவாறு. இஃது அழிவில்கூட்டத்து அவன்புணர்வுமறுத்தல்.

வாழைமுகை மோசைபோலக் காந்தளிலே தோய்ந்தும் மோசையாகா தன்றே, அங்ஙனமாக நீ நன்மகன்போலவந்து தலைவியைத் தோய்ந்தும் இங் ஙனம் வாடும்படிவிட்டு வரையாது அருகிவருதலால், நன்மகனல்லை யென்றுளென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

கசுசு. ........................

பாலை : இது, பிரிவிடைமெலிந்த

தலைமகளைத் தோழி வற்புறுத் தியது.

எ – து, தலைவன் பிரிதலால் மெலிந்த தலைவியைத் தோழிநோக்கிக் காட்டிலேசென்ற நம் தலைவர் இன்னும் வந்திலரேயென நீ வருந்தா தொழி, இதுகாறும் வாராராயினும் கங்கைவங்கம்போகுவர்கொல்? வேறெவ் வினை செய்வர்கொல்? ஓரிடத்தும்போகார்; ஒன்றுஞ் செய்யாராதலால், அவரின்னே வருகுவர்காணென அவளாற்றுமாறு வலியுறுத்திக் கூறு கிற்பது.

தம்மலது இல்லா நம்நயந் தருளி
இன்னும் வாரா ராயினுஞ் சென்னியர்
தெறலருங் கடவுள் முன்னர்ச் சீறியாழ்
நரம்பிசைத் தன்ன இன்குரல் குருகின்
ரு. கங்கை வங்கம் போகுவர் கொல்லோ
எவ்வினை செய்வர்கொல் தாமே
வெவ்வினைக்
கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து

போகிய

கானப் புறவின் சேவல் வாய்நூற்
சிலம்பி அஞ்சினை வெரூஉம்
கo. மலங்கல் உலவையங் காடிறந் தோரே.

**உரை :**—கொடிய கொலைத்தொழிலில்வல்ல வேட்டுவனது வலையை யறுத்துவிட்டோடிய காட்டின்கணுள்ள சேவற்புறுவானது, தன்வாயிலுண்டாகும் நூலாலேகட்டிய சிலம்பியின் கோட்டையைக்கண்டு அஞ்சாநிற்கும் சுழன்றடிக்கின்ற சூறைக்காற்றையுடைய சுரத்தின்கண்ணே சென்ற தலைவர் அவ யின்றிச் சிறிதும் பொருந்தியிராத நம்மைவிரும்பி யருள்செய்ய இன்னும் வந்திலர்; அங்ஙனம் வாராராயினும் வேறியாண்டைச்சென்றிருப்பர்? பாணர் தெறுகின்றசினம் தணிதற்கரிய தெய்வத்தின்முன்பு சென்று அதன் சினமடங்குமாறு சிறிய யாழின் நரம்பினோசையை யெழுப்பிப் பாடினலொத்த இனிய குரலையுடைய குருகுகளிருக்கின்ற கங்கையாற்றின்க ணோடுகின்ற மரக்கலத்தேறி யாண்டேனுஞ் செல்லுகிற்பர்கொல்? அவர் பிற எந்தச்செயலைச் செய்கிற்பர்கொல்? ஓரிடத்தும் போகலர், ஒருசெயலுஞ்செய்கலர், ஆதலின் இன்னேவருகுவர்காண்; நீ வருந்தாதேகொள்; எ - று.

மூலமும் உரையும்

உக்ள்

சென்னி - பிச்சையெடுக்கு மண்டைபோன்றதொருகலம்; அதனை யுடைமையிற் பாணர் சென்னியரெனப்பட்டார். சிலம்பி - சிலந்திப்பூச்சி. அங்கம் - கப்பல். சினை - சிலம்பியின்வயிற்றிலிருந்து வருநூலாலே அது கோட்டைசெய்யப்படுதலால் சினையென்றார். ஓரிடத்துமென்பதுமுதற் குறிப்பெச்சம். அருளியென்பதை அருளவெனத்திரிக்க.

காதலனுங் காதலியு மோருயிரினரென்பாள் தம்மலதில்லாநம்மென்றாள். இதனால் நீயின்றியும் அவரமையாராதலிற் பாணியாது இன்னேவருவாரென்பது.

இறைச்சி :—வேட்டுவன் விரித்த வலையிலே சிக்குண்ட புறு, சிலம்பியின் சினைக்கு வெருவுமென்றது, முன்பு களவுக்காலத்துப் பலமுறையும் இடையீடுபட்டுப் பிரிந்துறைதலாலே தலைவர் வருந்தியவராதலின் இவ் வினைவயிற்சென்றவர் பிரிவென்பதற்கஞ்சி இன்னே குறித்தப்பருவத்து வாராநிற்பரென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (கஅகூ)

கககூ0. ........................

குறிஞ்சி :

(க) இது, பின்னின்ற தலைமகன் ஆற்றானாகி நெஞ்சிற்குச் சொல்லியது.

எ - து, குறையுறவறிந்த தோழி இவனொரு குறையுடையான் போலும் என ஆராய்ந்துணரநிற்குமிடத்துத் தலைமகன் தனதுநெஞ்சம் குறைமுடித்தல் வேண்டுமென்று முடிக்கக்கருதலும் அதனைநோக்கி நெஞ்சமே, கிடைத்தற்கரிய குறுமகள் இன்னகைக்கு மகிழ்ந்தோய், எஞ்ஞான்றும் கிடைக்கப்படாத பொருளைவிரும்பியதனால் நீ இவ்வண்ணமே துன்பமெய்தி நெடுங்காலம் வாழ்ந்தொழிவாயாகவென்று அழிந்து கூறாநிற்பது.

„ „ (உ) அல்லகுறிப்பட்டுமீள்வான் நெஞ்சிற்குச் சொல்வி

ய தூ உமாம.

எ - து, இரவுக்குறி சென்று குறிமருண்டு இடையீடுபடுதலாலே தலைவியை எய்தப்பெருஞய் நெஞ்சைநோக்கி முற்கூறியபடி கூறிய தூ உமாம.

" "

(௩) இடைச்சுரத்துச் சென்று தலைமகள்நலம்உள்ளி மீளலுற்ற நெஞ்சினைக் கழறிய தூ உமாம்.

எ - து, வினைவயிற்சென்ற தலைமகன் சுரத்திடையே காதலியை நினைந்து மீண்டுவரக்கருதிய நெஞ்சைநோக்கி அவளது இனியநகை நோக்கி மகிழ்ந்தோய், அந்த மகிழ்ச்சிமேற்கொண்டு மீளுதலாலே நீ இங்ஙனமே துன்பெய்தி வாழ்வாயாகவென்றதூ உமாகும். இதற்கு நிலம் பாலை. உரை மூன்றுதுறைகட்கும் பொருந்துமாறறிக.

நோவினி வாழிய நெஞ்சே! மேவார்

ஆரரண் கடந்த மாரி வண்மகிழ்த்

திதலை யெஃகிற் சேந்தன் தந்தை

தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி

௫.

வண்டூசு நெய்தல் நெல்லிடை மலரும்

அரியலங் கழனி ஆர்க்கா டன்ன
காமர் பணைத்தோள் நலம்வீ றெய்திய
வலைமான் மழைக்கண் குறுமகள்
சில்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந்
தோயே.

உரை :—நெஞ்சமே! பகைவருடைய புகுதற்கரிய அரணங்களை வென்றுகொண்ட மாரிபோல்கின்ற கைவண்மையையும், கள்ளுணவையும், திதலைபரந்த வேற்படையையுமுடைய சேந்தனென்பானுக்குத் தந்தையாகிய தேன்மணங்கமழும் விரிந்த மாலையையுடைய அழகிய தேரினையுடைய அழிசியென்பவனது நெற்கதிர்களினிடையே வண்டுமொய்க்கின்ற நெய்தலின் மலர்கின்ற பூவினின்று தேன்வடிதலையுடைய வயல்சூழ்ந்த 'ஆர்க்காடு' என்னும் ஊரையொத்த, விருப்பம்வருகின்ற பருத்த தோளினழகோடு பெருமையடைந்த வலையிலகப்பட்ட மானினதுகண்போன்ற மருண்ட குளிர்ச்சியையுடைய கண்களையுடைய இளமையளாகிய தலைவியின் சிலவாய மொழியையுடைய சிவந்த வாயினின்றெழுகின்ற நகைக்கு மகிழ்ந்தோய், அங்ஙனம் மகிழ்ந்ததனாலே பின்பு கிடைக்கப்பெறாயாய் இனி நீ துன்புறுவாய்காண்; அவ்வகையாகிய துன்பத்துடனே நெடுங்காலம் வாழ்வாயாக.

சேந்தன் தந்தையாகிய அழிசியின் ஆர்க்காடன்ன குறுமகளெனக் கூட்டுக. வாழிய - இகழ்ச்சிக்குறிப்பு. பலவாய அரணங்கடந்த அழிசியின் 'ஆர்க்காடு' என்னும் ஊரின்கணுள்ள கழனி, பகைவர் நெருங்குதற்கு அரிதாதல்போல யாம் நெருங்குதற்கு அரியளாயினளென்றவாறு. இது துன்பத்துப்புலம்பல். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - தன்னுளத்தழுந்தல். ஏனைத்துறைகளுக்கும் மெய்ப்பாடு பயன் ஏற்றபெற்றிகொள்க. (கசுO)

## கசுக. உலோச்சனார்

## நெய்தல்:

இது, தோழி தலைமகன் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுப்பான் வேண்டிச் சொல்லியது.

எ - து, வரையாது களவின் வழிவந்தொழுகுந் தலைமகன் ஒருகால் ஒருசார்பின்கண்ணே வந்துறைதலையறிந்த தோழி, தலைவியை இவ்வயிற் செறிப்பாரென்பதை அறிவுறுத்தவேண்டி நேற்றொரு தேர்வந்ததெனப் பழிச்சொலுண்டாயதன்றி அன்னையும் என்னைக் குறிப்பாக நோக்கினள்; நான் இயங்காதிருப்பின் யான்கொண்ட அழகினுண்மை இத்தகைய இயல்பினதேயென்று காட்டுவதரியதாகும்; அவர்வந்து வறிதேபோதல் அதனினும் அரிய துன்பமுடையதாகுமென நொந்து கூறுநிற்பது.

சிறுவீ ஞாழல் தேன்தோய் ஒள்ளிணர்
நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த
வண்டற் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅங்
கண்டல் வேலிக் காமர் சிறுகுடி
எல்லிவந் தன்றே தேரெனச் சொல்லி

அலரெழுந் தன்றிவ் வூரே பலருளும்

என்னோக் கினளே அன்னை நாளை
மணிப்பூ முண்டகங் கொய்யே னாயின்
௧௦. அணிக்கவின் உண்மையோ அரிதே
மணிக்கழி
நறும்பூங் கானல் வந்தவர்
வறுந்தேர் போதல் அதனினும் அரிதே.

உரை:—சிறியபூவையுடைய ஞாழலின் தேன்பொருந்திய ஒள்ளிய பூங்கொத்துக்கள் அழகிய கலன்களையுடைய சிறுமியர் நெடியமணலில் வண்டலாட்டயரும்வழி, வண்டல்மண்ணாலே செய்த பாவையின் அழகிய கொங்கையில் ஒள்ளிய வரியையுடைய சுணங்குபோல மெல்லிதாகப் படுமாறு பரவாநிற்கும் கண்டல்மரங்களாகிய வேலிசூழ்ந்த கண்டார்க்கு விருப்பம் வருகின்ற சிறியகுடித்தெருவின்கண்ணே நேற்றிரவில் ஒருதேர் வந்துளதேயன்றோவென உரையாடி இவ்வூர்முழுதும் அலரெழுந்ததாக; அவ்வலரைச் செவியிலேறட்டுக்கொண்ட நம்மன்னை என்போல்வார் பலருமிருப்ப அவருள் என்னையே குறிப்பாக நோக்காநின்றனள்மன்; நாளைக் கழிக்கரையிலுள்ள முள்ளியினுடைய நீலமணிபோலும் மலரைக்கொய்யேனாயின் என்மிக்க அழகு உளதாவது அரியதாகும்; இஃதிவ்வண்ணமாக, நீலமணிபோலுங் கரிய கழியிடத்துள்ள நறிய பூஞ்சோலையில் அவர்வந்து எம்மையணையாது தேர்மேல் வறிதேசெல்லுதல், எம்மை இல்வயிற்செறிக்கும் அதனினுங்காட்டில் அரியதுன்பமுடையதாகும்; எ - று.

ஞாழல் - கடற்கரையிலுள்ளதொருமரம். கண்டல் - ஒருமரம். முண்டகம் - கடன்முள்ளி.

பலருள்ளும் யானே தலைவிக்குச் சிறந்ததோழியென அன்னை அறிந்து வைத்தனளென்பதறிவுறுத்துவாள் தன்னையே அன்னைநோக்கினளென்றாள். அங்ஙனம் நோக்கினமையின் இனித் தான் இடைநின்று கூட்டற்கியலாதாதலின் வரைந்தெய்துகவெனக் குறிப்பித்தனளென்பது. நேற்றேதேரொன்று வந்ததென்று அலரெழுந்ததனாலே இனி நினதுதேர் இங்குக் களவொழுக்கத்து வாரற்க என்றாளாயிற்று. கொய்யேனாயினெனத் தலைவியை இற்செறித்தமை அறிவுறுத்தினாள். இது தலைவியைத் தானாகக் கொண்டு கூறியது. வருந்தேர்போதல் அரிதென்றதனாலே வரைந்து தேரேற்றிச் செல்கவெனவும் அன்றேல் வலிந்து கொண்டுதலைக்கழிகவெனவுங் குறிப்பித்தாளென்பது.

உள்ளுறை :—ஞாழலி னொள்ளிய பூங்கொத்து மகளிரிழைத்த வண்டற்பாவையின் மார்பிலே தேமல்போலப் பரக்குமென்றது, அன்னையின் சீற்றம் என்னாற் காவற்பட்ட தலைவியின்மீது ஒறுப்பதுபோலத் தாக்கா நிற்குமென்றதாம். மேய்ப்பாடு - பெருமிதம். பயன் - செறிப்பறிவுறுத்து வரைவுகடாதல். (கககக)

ககக௨. ..............................

குறிஞ்சி :

இஃது, இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றானாயதலைமகன் சொல்லியது.

ஏ - து, களவொழுக்கத்து இரவுக்குறி வந்துகூடுந் தலைவனை நோக்கித் தலைவி அவன் இராவருநெறியின் ஏதம்நினைந்து கவன்று இனி நீ

இங்ஙனம் வாராதேகொள் என்றனை, நீ யஞ்சாதொழி, நினது நலனை யான் கருதிவரும்பொழுது நின்மேனி யொளிசிய யாண்டும் வீசி இருளைப் போக்குவதாகத் தோன்றுதலானே, இம் மலையடியிலுள்ள நெறி எனக்கொரு காவலாகியே யிருக்குமெனத் தேற்றிக் கூறுநிற்பது.

குருதி வேட்கை உருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயில் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்
மாரி எண்கின் மலைச்சுர நீளிடை
நீநயந்து வருதல் எவனெனப் பலபுலந்து
அழுதனை உறையும் அம்மா அரிவை
பயங்கெழு பலவின் கோல்லிக்
குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதிர் இளவெயில் தோன்றி.
யன்னநின்

ஆய்நலம் உள்ளி வரினெமக்கு
ஏமம் ஆகும் மலைமுதல் ஆறே.

உரை :—'இரத்தத்தையுண்ணும் விருப்பத்தொடு அச்சத்தைச் செய்யும் வலியபுலி தன்னெதிரே வலிமிக்க பெரிய இளைய களிற்றியானை வருதலை நோக்காநிற்கும் மரங்கள் பொருந்திய சோலைநிரம்பப் பூழியருடைய நல்ல நிறத்தையுடைய யாட்டு மந்தைபோல மாரிக்காலத்து வைகறைப்பொழுதில் மேய்கின்ற கரடிகளையுடைய மலைச்சுரத்து நீண்ட நெறியில் நீ என்னை விரும்பிவருதல் என்னைகொல்' எனப் பலவாகப் புலந்துகூறிக் கலுழ்ந்து கொண்டிராநின்ற அழகிய மாமைநிறத்தினையுடைய மடந்தாய்! பயன்மிக்க பலாமரங்களையுடைய கொல்லிமலையினுள் மேல்பாலாக முன்பு தெய்வத்தாலே செய்துவைக்கப்பட்ட புதுவதான நடைகொண்டியங்குகின்ற பாவை விரிந்தஞாயிற்றின் இளவெயிலிலே தோன்றிநின்றாலொத்த நினது அழகிய நலத்தைக் கருதிவருங்காலத்து நின்மேனியொளிய எங்கும் பரவியிருளைப் போக்குவதாகத் தோன்றுதலானே இம்மலையடியிலுள்ள நெறியானது எமக்குக் காவலையுடையதாகுங் கண்டாய்; ஆதலின் நீ அழுது உறைவதை விட்டொழிப்பாயாக; எ - று.

வயமான் - புலி. துரு - யாடு. ஆய்நலம் - அழகியஇன்பம். ஏமம் - காவல். இவ்வுவமைபோல "தாவி னன்பொன் தைஇய பாவை, விண்டவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன" என்றார் (உகஉ) அகத்தினும்.

தனக்குச் சிறந்தாளென்று தான் கருதியிருப்பதனை அவள் அறிந்துகொள்ளுமாற்றான் நின்னையுள்ளிவரின் ஏமமாகுமென்றான்.

இறைச்சி :—புலி களிற்றைப்பார்க்குஞ் சோலையின்கண்ணே கரடி அஞ்சாது இயங்குமென்றது, அன்னை காவலாயிருக்கும் மனையகத்து யான் அஞ்சாது வரவல்லேனென்றதாம். மெய்ப்பாடு - வீரம். பயன் - தலைமகளையாற்றுவித்தல். (ககஉ)



ககங. ..............................

பாலை : இது, பிரிவிடையாற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

எ – து, தலைவன் பொருள்வயிற்பிரிதலாலே குறித்தபருவத்து வாராமையால் வருந்தியதலைவி வாடையைநோக்கி வாடையே, யாம் நினக்குத் தீதுகருதகில்லேம்; காதலரைப்பிரிந்து தனியே வருந்துகின்ற எம்மை வருத்தாதேகொள்ளென இரந்து கூறாநிற்பது.

அட்டரக்கு உருவின் வட்டுமுகை ஈங்கை
துய்த்தலைப் புதுமலர்த் துளிதலைக் கலாவ
நிறைநீர்ப் புனிற்றுப் புலந்துழைஇ
ஆனாய்

ரு.
இரும்புறந் தழூஉம் பெருந்தண் வாடை
நினக்குத் தீதறிந் தன்றோ இலமே
பணைத்தோள் எல்வளை ஞெகிழ்த்தஎங்
காதலர்
அருஞ்செயல் பொருட்பிணிப் பிரிந்தன
ராக
யாருமில் ஒருசிறை யிருந்து
பேரஞர் உறுவியை வருத்தா தீமே.

உரை:—உருக்கிய அரக்குப்போன்ற சிவந்த வட்டமாகிய முகையை யுடைய ஈங்கையினது பஞ்சுபோன்ற தலையையுடைய புதியமலரின் தேன் துளி நின்பாற்கலப்ப, அத் தேன்றுளியுடனே புதுவதாக மழைபெய்து நிறைந்த நீர்த்தும்பும் புலங்களுட் புகுந்து அவற்றையெல்லாந் தும் அங்குத் தங்காமல் எமது பெரிய அயற்பக்கமெங்குஞ் சூழ்ந்து வந்து மோதுகின்ற பெரிய குளிர்ச்சியையுடைய வாடையே, யாம் ஒரு பொழுதும் எந்நெஞ்சி னுள்ளே நினக்குத் தீதாகியசெயலைக் கருதியறிந்ததுமில்லையே; அங்ஙன மாக, எம்முடைய பருத்த தோளிலேற்றிய ஒளியையுடைய வளை நெகிழும் படி செய்த எம் காதலர்தாம் ஈட்டுதற்கரிய பொருளீட்டுமாறு உள்ளம் பிணித்தல்காரணமாக அகன்றனராதலினால், உசாவுந்துணை யாருமில்லாது ஒருபுறத்திருந்து பெரிய துன்பமுற்றேமாகிய எம்மை வருத்தாதேகொள்.

உறவி - தன்னைப் படர்க்கையாகக்கூறிய இடவழுவமைதி. துளி கலப்பப் புலந்தழீஇயவாடை - இயற்கையாகத் தனக்குரிய தட்பமுமன்றிச் செய்கையானுஞ் செய்துகொண்டவாடை யென்றவாறு. நினக்குத்தீதறி யாதேம் என்றதனால் நட்புடையேமென்றாளாயிற்று. நின்னட்பினேமாகிய எம்மை இங்ஙனம் வருந்துவித்தவர் காதலராதலின் எம்காரியமாக அவ ரைச்சென்று வருத்திக் கூட்டுவிப்பாயாக என்றாளென்பதூஉமாம். மெய்ப் பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (கககூ)

## ககசு. *

## மதுரைமருதனிளநாகனார்

குறிஞ்சி: இது, சிறைப்புறமாகச்

செறிப்பறிவுறீஇயது.

எ - து, களவொழுக்கத்து வரையாது வந்தொழுகுந் தலைமகன் ஒரு கால் மறைந்துவந்து உறைவதனையறிந்ததோழி தலைவியை இல்வயிற்செறித்

(பாடம்) * மருதைப்பெருமங்கன் இளநாகனார்.

தனரென்பதனை அவன்கேட்டு விரைய வரைவொடுவருமாறு தலைவியை நோக்கி நாம் வெற்பனொடு தமியேமாகி விளையாடும்பொழுது தினைக்கதிரை அழிக்காதொழிந்த யானைக்கும் கிளிகட்கும் கைம்மாறு யாது செய்யவல்லாம் இப்பொழுது இல்வயிற்செறித்தமையால் அவைகொள்வனபோலுமென அழிந்து கூறுநிற்பது.

அம்ம வாழி தோழி கைம்மாறு
யாதுசெய் வாம்கொல் நாமே கயவாய்க்
கன்றுடை மருங்கிற் பிடிபுணர்ந் தியலும்
வலனுயர் மருப்பின் நிலன் ஈர்த் தடக்கை
அண்ணல் யானைக்கு அன்றியும் கல்மிசைத்
தனிநிலை இதணம் புலம்பப் போகி
மந்தியு மறியா மரம்பயில் ஒருசிறைக்
குன்ற வெற்பனொடு நாம்விளை யாட
விரும்புகவர் கொண்ட ஏனற்
பெருங்குரல் கொள்ளாச் சிறுபசுங்
கிளிக்கே.

உரை :—தோழீ ! வாழ்வாயாக; யான் கூறுகின்ற இதனைக்கேள்; மலை மேலே சமைத்த தனியாகவிலைபெற்ற கட்டுப்பரண்வழிதாம்படி விடுத்துச் சென்று, - மரமேறுந்தொழிலிலே சிறப்புடைய மந்திகளும், ஒன்றோ டொன்று செறிந்திருப்பதால் ஏறியறியாத மரங்கள் நெருங்கின ஓரிடத் திலே குன்றுகளையுடைய மலைகிழவனுடன் நாம்முயங்கி விளையாட்டயரா நிற்கவும், அப்பொழுது மிக விருப்பங்கொண்ட புனத்திலுள்ள தினையின் பெரிய கதிர்களைத்தின்றழித்துவிடாத, - பெரியவாயையுடைய கன்றினை மருங்கிலுடைய பிடியானையொடு புணர்ந்து இயங்குகின்ற வலிமைமிக்க மருப்பினையும், நிலத்தின்கண் ஈர்த்தலையுடைய நெடிய துதிக்கையையும் பெருமையையுமுடைய களிற்றியானைக்கு நாம் யாது கைம்மாறுசெய்யக் கடவா நிற்போம் ? அன்றியும் மிக விருப்பங்கொண்ட பெரிய தினைக் கதிரைக்கொண்டு போகாதொழிந்த சிறிய பசிய கிள்ளைக்கு யாதுகைம்மாறு செய்யக்கடவா நிற்போம்? இப்பொழுது நம்மை இல்வயிற் செறித்தலானே அவை புனம்புகுந் தழிக்கலாயின ; எ - று.

விரும்புகவர் - ஒருபொருட்பன்மொழி ; விரும்புகின்ற விருப்பமு மாம். வலன் - வலிமை. கொள்ளாயானையெனவும் கொள்ளாக்கிளி யெனவுங் கூட்டுக. இப்பொழுதென்பதுமுதற் குறிப்பெச்சம்.

காவலொழிந்து சென்று அவனொடு நாம் விளையாட்டயர்ந்ததனையும் மறந்து வரையாதொழிந்தனனேயென்றிரங்கியதாம். இப்பொழுது அழிப்பனபோல நாம் காக்குநாளில் அழிவுசெய்திருந்தால் அன்னையும் ஐயன் மாருங் கொள்ளுஞ்சினம் இன்னும் கொடியதாகுமென்பது.

இறைச்சி :—கன்றை மருங்கிலுடைய பிடியைக் களிறுபுணர்ந்தியலு மென்றது, மணம்புரிந்து இல்லற மேற்கொண்டு புதல்வனைப்பயந்து அப் புதல்வன் மருங்காகத்தலைவன் என்னை இடையறவுபடாது முயங்கி இயக்குவானாகவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செறிப் பறிவுறுத்து வரைவுகடாதல். (கக௪)

கசரு. ........................

நெய்தல் :

இது, களவின்கண் நெடுங்காலம் வந்தொழுக

ஆற்றளாயினதோழி, வரைவுகடாயது.

எ - து, தலைமகன் களவுப்புணர்ச்சியிலே நீட்டிப்ப ஆற்றாத தோழி உள்ளுநெறையால் வரைந்தெய்துமாறு கடாவுவாளாய்க் குறிப்பால் அவனை நோக்கிப் புலம்பனே! நீ விரும்பிய காதலியினுடைய கண்கள் மாறாது கலுழாநிற்கும்; அதனை யான் கண்டிருக்கின்றேனாதலின், நீ அவளை வரைந்து முயங்கியருளினையல்லை; அங்ஙனம் அருளாமையானது கொடிதுகாணென வெகுண்டு கூறாநிற்பது.

அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்
குருஉ நீர்நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் * பொதும்பிற் பள்ளி
கொள்ளும்
மெல்லம் புலம்ப யான்கண் டிசினே

ரு. கல்லென் புள்ளின் கானலந் தொண்டி

நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப்
பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீரலைத் தோற்றம் போல
ஈரிய கலுழுநீ நயந்தோள் கண்ணே.

உரை :—கரிய கழியின்கணுள்ள நீர்நாயின்குருளை கொழுவிய மீன்களைப் பிடித்துத்தின்று தில்லைமரப்பொந்துகளிலே பள்ளிகொள்ளா நிற்கும் மெல்லிய கடற்கரையின் தலைவனே! கல்லென ஒலிக்கின்ற புள்ளினங்களை யுடைய கடற்கரைச் சோலைசூழ்ந்த தொண்டியின்கண்ணதாய வயலிலே நெற்கதிரறுக்கும் உழவரினுடைய கூரிய அரிவாளால் அறுபட்டதனாலே, பல இதழ்கள்விளங்கிய குவியாத நெய்தன்மலர் நீரிலமுங்கி அலைகின்ற தோற்றத்தைப்போல, நீ விரும்பிய காதலியின்கண்கள் ஈரிய வாய்க் கலுழாநிற்கும் ; அதனையான் கண்டிருக்கின்றேன் , ஆதலின் நீயும் அவள்கலுழாதிருக்குமாறு வரைந்தருள்செய்கின்றுயல்லை ; இங்ஙனம் அருளாதிருப்பது ஓஒ ! கொடிதுகாண் ; எ – று.

ஆகல் – பிரிவிலசைநிலை. குருளை – இளங்குட்டி. தில்லை – உப்பு நீரருகே வளர்வதொருமரம். இதனடிப்பொந்து தண்ணீரிலே தோயப் பெற்றிருப்பதால் பொதும்பிலே பள்ளிகொள்ளுவதியல்பு.

நின்னைக்கண்டவழி புலத்தலின் அவள் அழுவதனை நீ யறிந்தாயல்லை; யான் கண்டுளேனென்றாள். இது, துன்பத்துப்புலம்பல்.

உள்ளுறை :—நீர்நாய்க்குருளை தன் விருப்பத்தின்படி மீனைத்தின்று கவற்சியின்றிப் பொந்துகளிலே பள்ளிகொள்ளுதல்போல, நீதானும் இரவெல்லாம் இவளதுநலனுகர்ந்து மணம்புரியுங் கவலையென்பதின்றி நின்னூர்வயின் சென்று வைகுகின்றனை யென்றதாம்.

---

(பாடம்) * தில்லையம் ; தில்லைப்,

இறைச்சி :—தொண்டியின்கணுள்ள கானலிலே புள்ளினம் கல்லென ஒலிக்குமென்றது, ஊராரெடுத்த பழிச்சொல் கல்லென ஒலியாநிற்கும் என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (கசுகு)

## கசுஅ. வெள்ளைக்குடி நாகனார்

**நெய்தல் :**

*இது, நெட்டிடைகழிந்து பொருள் வயிற்பிரிந்த காலத்து ஆற்றாளாகிய தலைமகள், திங்கள்மேல் இட்டுத் தன்னுள்ளே சொல்லியது.*

எ - து, அறத்தொடுநின்று வெளிப்பட்டபின்னும் தலைமகன் வரைந்து கொள்ளாது பொருள்வேண்டி நெடுந்தூரஞ்சென்றுறைதலானே ஆற்றாத தலைமகள், திங்களைநோக்கி நீ அறியாவிடமில்லையாதலின் என் காதலர் உறையுமிடம் நினக்குத்தெரிந்திருந்தும் எனக்குக் கூறினையல்லை; இங்ஙனம் அறிந்திருந்தும் பொய்த்தலின் நின்புலனழிந்து அது சொல்ல இயலாதவாறு ஆவாயெனக்கடிந்து கூறாநிற்பது.

பங்குசேறிந் தன்ன பல்கதிர் இடையிடைப்
பால்முகந் தன்ன பசுவெண் ணிலவின்
மால்பிடர் அறியா நிறையுறு மதியஞ்

சால்புஞ் செம்மையும் உடையை

ஆதலின்

ரு. நிற்கரந்து உறையும் உலகம்

இன்மையின்

எற்கரந் துறைவோர் உள்வழி காட்டாய்

நற்கவின் இழந்தவென் தோள்போற்

சாஅய்ச்

சிறுகுபு சிறுகுபு சேரீஇ

அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே.

உரை :—பலகூறுகள் ஒன்றாகச் செறிந்தாற்போன்ற பலவாயகதிர்களின் இடையே இடையே பாலை முகந்துவைத்தாற்போன்ற குளிர்ச்சியையுடைய வெளிய நிலாவினையுடைய மேகத்தின் பிடர்மேலேதோன்றிப் பிறராலறியப்படாத எல்லாக்கலைகளும் நிறைவுற்ற திங்களே, நீதானும் நிறைவும், நேர்மையும் உடையையாதலானும் நினக்குத்தெரியாதவண்ணம் மறைந்து உறையும் உலகமொன்று இன்மையானும் எனக்குத்தோன்றாது மறைந்தொழுகுமெங்காதலரிருக்கும் இடத்தினை நீ காட்டுவாயாக என்று இரந்துவேண்டினள். அவள் அங்ஙனம் இரந்துவேண்டியும் திங்கள் விடை கூறிற்றில்லையாதலின், அதன்மேல் வெறுப்புற்று மீட்டும் அதனை நோக்கித், திங்களே, நீ அறிந்த அளவு சான்றுகூறாது பொய்யைமேற்கோடல் காரணமாக நல்ல அழகிழந்த என்தோள்போல் வாட்டமுற்று நாடோறும் சிறுகிச் சிறுகிக்குறைந்து நின்விழிப்புலம் மறைபடுதலாலே நீ காட்டுவதுதான் இயலுமோ? இயலாதன்றே என்றாள்; எ - று.

மால் - மேகம்; இனி மால்பு இடர் எனக்கொண்டு நிலத்தைக்குறிஞ்சியாக்கி எமர் தேனெடுக்கச் சமைத்த கண்ணேணியாலே இடரப்பட்டறியாத திங்களேனவுரைப்பினுமாம்; இதற்கு "வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத், தேனின் இறுலென ஏணி இழைத்திருக்குங், கானக நாடன்"

(கலி-ந௲க) என்றதனைநோக்கியும் அறிக.
கெட்டிடைகழிந்தமை பெறப்பட்டது.

கரந்துறைறவோரென்றதனாலே

எங்குந்தெரிந்திருந்தும் அவருள்வழி எனக்குக் கூறுதிருத்தலின் அறிகரிபொய்த்தனை என்றாள். அங்ஙனம் பொய்த்தல் காரணமாகவன்றே நாளுந் தேய்ந்தொழிவாய் என்றாள். பொய் ஐம்பெரும் பாதகங்களுளொன்றாதலின் அது அமுதமுண்டுசாவாதிருப்போரையும் குறைத்துவிடும் என்பது அமுதகலையையுடைய நீ அழிந்தொழியுமதனாலே காணலாகியது என்றவாறு. அறிகரிபொய்த்தார்க்கு யாதும் கைகூடாதென்பது.
மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௧௬௬)

## ௧௬௭. நக்கீரர்

பாலை: இது, வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகளைத்
தோழி ஆற்றுவித்தது.

எ - து, வரைந்துகோடல் காரணமாகச் சென்ற தலைமகன் வாராது தாழ்ப்ப அதனால் ஆற்றாளாயதலைமகளைத் தோழிநோக்கி 'நீ இறக்க ஏதுவாயிற்றேயென்று வருந்தாதேகொள்; காதலர் நாட்டிலே மேகங்கள் செல்லாநிற்கும்; அம்முகிலை அவர்நோக்கியவுடன் விரைந்துவருகுவர்' எனத் தேற்றிக்கூறுநிற்பது.

தோளே தோடிநெகிழ்ந் தனவே நுதலே

பீர்இவர் மலரிற் பசப்பூர்ந் தன்றே
கண்ணுந் தண்பனி வைகின அன்றே

௫.

தெளிந்தன மன்ற தேயர்என் உயிரென
ஆழல் வாழி தோழி நீநின்
தாழ்ந்தொலி கதுப்பின் வீழ்ந்த
காலொடு
வண்டுபடு புதுமலர் ஒண்துறைத் தரீஇய
பெருமட மகளிர் முன்கைச் சிறுகோல்
பொலந்தொடி போல மின்னிக்
கணங்கொள்
இன்னிசை முரசின் இரங்கி மன்னர்
எயிலூர் பல்தோல் போலச்
செல்மழை தவழுமவர் நன்மலை
நாட்டே.

உரை:—தோழீ! ‘தோள்கள் வளைகள் நெகிழ்ந்தன; நெற்றி படர்ந்த பீர்க்கமலர்போலப் பசலைபரந்தது; கண்களுந் தண்ணியநீர் பெருகின; இவை இங்ஙனமாதல் ஐயோ திண்ணமாக எம் உயிர் இறந்தொழிதற் பொருட்டேயென்பதனை யாம் நன்றாகத் தெளிந்துகொண்டோம்’ என்று அழாதேகொள்; இவ்விடரொழிந்து நீ நெடுங்காலம் வாழ்வாயாக; நினது தாழ்ந்து தழைந்த கூந்தல்போல இறங்கிய காலுடனே வண்டுகள்பொருந்திய புதியமலர்களை ஒள்ளிய நீர்த்துறையின்கண்ணே கொய்துகொணர்ந்த பெரிய மடப்பத்தையுடைய மகளிரின் முன்கையிலணிந்த சிறிய கோற்றொழிலமைந்த பொன்னாலாகிய தொடிபோல மின்னிக் கூட்டங்கொண்ட

இனிய ஒலியையுடைய முரசுபோல முழங்கி அரசர்களுடைய அரணாகிய மதில்மேலே பகைவருடையபடை சென்று பாயாதவாறு ஓம்பாநின்ற பல வாகிய கிடுகுபோல விசும்பிலேசெல்லும்மேகம், அவரது நல்ல மலைநாட்டின்கண்ணே தவழாநிற்கும்; அம்மழை நின்கூந்தல்போலிருத்தலானே அதனைக் காண்டலும் நின்னைக்கருதி இன்னேவருகுவர்காண்; எ - று.

வீழ்ந்தகால் - காலிறங்குதல்; அஃதாவது மழைபெய்ய இறங்கும் நீர் வீழ்ச்சி. தோள்தொடி நெகிழ்ந்தனவென்றது, இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. கதுப்பு - கூந்தல். தோல்- கடகு; கிடுகு, கேடயம் எனவும் வழங்கப்படுவது. தேயர் - தேயும் பொருட்டு.

போர்முகத்துப் பயின்றவராதலின், அவரை மழை பகைபோலமுற்று தல்நோக்கி அது நின்னையும் வருத்துமன்றோவெனக்கருதி இன்னேவருவர் என்னுங்குறிப்பால் மழையைக்கிடுகுபோலவென உவமித்தாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல் (ககள)

## ககஅ. கடமணா

பாலை :

இது, பின்சென்ற செவிலி இடைச்சுரத்துக் கண்டார்க்குச் சொல்லியது.

எ - து, தலைமகன் தலைமகளைக் கொண்டுதலைக்கழிந்தவழி பின்னே தேடிச்சென்ற செவிலி, ஒருதலைவனுந் தலைவியுமாக எதிரேவருவாரைத் தன்மகளும் மருமகனுமாமெனமயங்கி அருகில் வருதலும் ஐயம்நீங்கி விடலாய், இவள் என்மகள்போலுதலானே என் கண்ணீர் பெருகுவதுகாண்; அவள் இத்தன்மையளே; நும்மை விருந்தோம்புகிற்பேன்; அதற்குரிய அவள் தந்தையூர் இதுகண்டீர்; யான் அவளையீன்றதாய்; அவளைப்பற்றி நீயிர் கூறுவீராயின், நுமக்கு அறமுண்டாகுமெனவருந்திக் கூறுநிற்பது.

சேயின் வரூஉம் மதவலி யாஉயர்ந்து
ஓமை நீடிய கானிடை அத்தம்
முன்னாள் உம்பர்க் கழிந்த என்மகள்
கண்பட நீராழ்ந் தன்றே தந்தை
தன்னூர் இடவயின் தொழுவேன்
நுண்பல்
கோடேந்து அல்குல் அரும்பிய திதலை
வாஅர்ந் திலங்குவால் எயிற்றுப்
பொலிந்ததார்ச்
சில்வளைப் பல்கூந் தலளே அவளே
மையணல் எருத்தின் முன்பின் தடக்கை
வல்வில் அம்பின் எய்யா வண்மகிழ்த்
தந்தை தன்னூர் இதுவே
ஈன்றேன் யானே பொலிகநும் பெயரே.*

---

(பாடம்) * பொலிகநும்புகழே.

உரை :—சேய்மைக்கண்ணிருந்து வாராநின்ற அரசகுமரனே! யாமரம் உயர்ந்து ஓமைமரம்நீடிய காடிடையிட்ட சுரத்திலே நேற்று நெடுந்தூரஞ் சென்ற என்மகள்போல இவள் என் கண்ணெதிரே படுதலால் என் கண்ணீர் நிரம்பப் பெருகாநின்றது; அவள்தான் நுண்ணியபலவாய வரி பொருந்திய அல்குலும் தோன்றிய சுணங்கும் சேர்மையுற்று விளங்கிய வெள்ளிய பற்களும் பொருந்திய பாதிரிமலர்ப் பிணையலும் சிலவாயவளை யும் பலவாய கூந்தலுமுடையாள்; நிற்க; நும்மை அவள் தந்தையினூர் இடத்தில் விருந்தேற்று உபசரித்துத் தொழுகிற்பேன்; அவ்வண்ணம் நும்மை எதிர்கோடற்கேற்ற,-மைபோன்ற கரிய அணலையும், பிடரியையும், வலிய நெடிய கையையும், வலியவில்லினையும், அம்பையும், அளந்தறியா வண்மையையும், கள்ளுணவையுமுடைய தந்தையினது ஊர் இதுவே கண்டீர்; யானே அவளை ஈன்று பாதுகாத்தேன்; எனது ஆற்றாமையைக் கண்டநீயிர் அவளை எதிர்கண்டு பேசிய வகையை நுவலுவீராயின் நுமக்கு அறத்தாலாய புகழ் உண்டாகுக; எ - று.

மதவலி - அரசன்; மத - விசேடித்தஉரிச்சொல்.

சிறிதும் ஐயமில்லையென்பாள் தேற்றத்தால் முன்னின்றாளை என் மகளேயென்றாள். அன்பின்மிகுதியாலே கண்ணீராழ்ந்தமை கூறினாள். தான் செவிலியென்பதனை அறிவுறுத்துவாள் தொழுவலென்றாள், அவன் அரசகுமரனாதலின், நும்மையெதிரேற்று முகமன்வழங்குந் தகுதிப்பாடு உடையனென்ன அவள் தந்தையைச் சிறப்பித்துக்கூறினாள். வருத்த மிகுதியுடையளென்றுகருதி மகளொடுநுவன்றவை கரவாதுகூறும் பொருட்டு ஈன்றேன் யானே என்றாள்; இஃது அன்புமிகுதிபற்றி.

மூலத்தொடு வரைந்த குறிப்பு :—[தந்தையூரிதுவென்றது, அவள் (செவிலி) விருந்தோம்பத் தங்கிப்போகலா மென்றவாறு. ஈன்றேன் யானென்றது, எனதாற்றாமைகண்டாற் சொல்லுவார்க்கறமுண்டென்ற வாறு. பெயரென்பது சொல்லுக்கு மறுமாற்றம்.] **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்த உவகை. **பயன்** - தலைமகளைக்காண விரும்பல். (கககூ)

## க௯௯. பேரிசாத்தனார்

**நெய்தல்:** *இது, வன்பொறை எதிரழிந்தது.*

*எ - து, தலைவன்பிரிதலானே வருந்திய தலைவியைநோக்கி நீ வருந்தாது வலிதிலே பொறுத்திருவென்ற தோழிக்கு நீ என்னைப்பொறுத்திரு என்கின்றனையே, துறைவனுடையமுயக்கம் எய்தாதவிடத்துக் குருகின் ஒலிக்கு உடைந்தும் இன்னும் உளனுயிராகின்றேனே என்னுயிர் எவ்வளவு வன்மையுடையதென அழிந்து கூறுநிற்பது.*

ஓங்குமணல் உடுத்த நெடுமாப் பெண்ணை
வீங்குமடற் குடம்பைப்
பைதல்வெண் குருகு
நள்ளேன் யாமத்து உயவுதோ றுருகி
அள்ளல் அன்னஎன் உள்ளமோடு
உள்ளுடைந்து
௫. உளனே வாழி தோழி வளைநீர்க்
கடுஞ்சுறு எறிந்த கொடுந்திமில் பரதவர்



வாங்குவிசைத் தூண்டில் ஊங்கூங்
காகி
வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்

நீல்நிற விசும்பின் மீனொடு புரையப்
பைபய இமைக்குந் துறைவன்
மெய்தோய் முயக்கங் காணா ஊங்கே.

உரை :—தோழீ! வாழி; சூழ்ந்த கடனீரில் விரைந்துசெல்லுஞ் சுறா மீனைப் பிடிக்க வலைவீசியெறிந்த வளைந்த மீன்பிடிக்கும் படகினையுடைய பரதவர் இழுக்கும் விசையையுடைய தூண்டிலின் இடையிடையே அமைந்து காற்றுமோதுதலாலே எரிகின்ற கற்றை சாய்ந்துபரவிய நெருங்கிய விளக்கின் ஒளி, நீலநிறத்தையுடைய ஆகாயத்தின்கண்ணே ஒளிரும் மீன்களைப்போலச் சிறுகி மெல்லமெல்ல ஒளிவீசாநிற்குந் துறையையுடைய தலைவனது உடம்பை அணைந்து முயங்கும்முயக்கத்தை யான் அடையப் பெறுதவிடத்து உயர்ந்த மணல்மிக்க திடர்சூழ்ந்த நீண்ட கரிய பனையினது நெருங்கிய மடலிற்கட்டிய குடம்பையின்கண்ணேயிருக்கின்ற பிரிவுற்று வருந்துதலையுடைய வெளியாளரை இரவுநடுயாமத்தே நரலுந்தோறும் உருகி அள்ளலாகிய குழம்புபோன்ற என்னுள்ளத்தொடு என் மனமும் உடைந்து இன்னும் உயிர் உடையேனாயிராநின்றேன்; என்னுயிர்தான் எவ்வளவு வன்மையுடையதுகாண்; எ - று.

பைதல் - வருத்தம். அள்ளல் - அள்ளுந்தன்மையதாகிய சேற்றின் குழம்பு. உள்ளுடைந்துளனேயென்றது துன்பத்துப்புலம்பல்.

உள்ளுறை :—காற்றால் வீசப்பட்டும் அவியாது ஒளிமழுங்கித்தோன்றும் விளக்கையுடையதுறையென்றது, அவாமிகுதியால் என்நலம் பசலையால் உணப்பட்டு மழுக்கமடைந்தும் அவர் வருவரென்னுங் கருத்தால் இன்னும் உயிருடையேனா யிராநின்றேன் என்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௧௯௯)

## ௨00. கூடலூர்ப் பல்கண்ணனார்

மருதம் : இது, தோழி தலைமகளது குறிப்பறிந்து வாயிலாகப்புக்க பாணன்கேட்பக் குயவனைக்கூவி இங்ஙனஞ் சொல்லாயோ என்று குயவற்குச் சொல்லியது.

எ - து, பரத்தையிற்பிரிந்துவந்த தலைவனால் விடப்பட்ட பாணன் வாயிலாகப்புகுதலும் தலைவி வெகுளுவதனையறிந்த தோழி வாயில்மறுக்கின்றாள்; அவ்வழித் திருவிழாநடப்பதனை ஊரார்க்குத் தெரிவிக்குமாறு போந்த குயவனைநோக்கி நீ நின் விழாவயர்ச்சி கூறுவதுடனே 'மகளிர்களே, இப்பாணன்கூறும் பொய்ம்மொழியை மெய்யெனக்கொண்டு பின்புவருந்தாதீர்' என்று இதனையுஞ்சொல்லிப் போவாயாகவென வெகுண்டு கூறுகிறப்பது.

கண்ணி கட்டிய கதிர அன்ன

ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவில்



சாறென நுவலும் முதுவாய் குயவ
௫. இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ
ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்
பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகிக்
கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்
செய்த அல்லல் பல்குவ வையெயிற்று

௧௦. ஐதகல் அல்குல் மகளிர் இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின்

எனவே.

**உரை :**—அரும்புகட்டிய கதிர்போன்ற ஒள்ளியபூங்கொத்தினை யுடைய நொச்சிமாலையைச்சூடி யாறுகிடந்தாற்போன்ற அகன்ற நெடிய தெருவின்கண்ணே யாவரும் அறிய, 'இற்றைநாளால் இவ்வூரிலே திரு விழாநடவா நின்றது, எல்லீரும்போந்துகாணுங்கோள்' என்று கூறிச் செல்லுகின்ற அறிவுவாய்ந்த குயவனே! ஆம்பல் நெருங்கிய இனிய பெரிய வயலும் பொய்கையுமுடைய ஊரின்கண்ணே நீ செல்வாயாகி ஆங்குள்ள மகளிரையழைத்துக் 'கூரிய எயிற்றினையும் மெல்லிதாயகன்ற அல்குலையு முடைய மங்கைமீர்! கைவிரும்புதற்குக் காரணமான நரம்பினையுடைய யாழிலேபாடும் இசைப்பாட்டு நுவலவல்ல பாணன்செய்த துன்பங்கள் மிகப்பலவாகி வளர்வனவாயின ; ஆதலின் இப்பாணன் உள்ளால் பொய்யை நிரப்பிவைத்து மேலால் மெய்ம்மையைக்கொண்டுமூடி நுவலுகின்ற கொடியசொல்லிலே கண்ணருள்செய்யாது நும்மைப் பாதுகாத்துக்கொள் ளுங்கோள்' என்று, முதலில் நீ திருவிழாநடப்பதை நுவன்றுகொண்டு போவதுடன், இதனையுங்கூட்டி அவ்விடத்துள்ளார்க்குக் கூறிப்போவா யாக ; எ - று.

கண்ணிகட்டல் - அரும்புதோன்றுதல். கதிர,அ - சாரியை. சாறு - திருவிழா. அவ்வூரில் நடக்குந் திருவிழாவை ஊர்ப்பொதுநிலத் திருக்குங் குயவனே ஆங்குள்ள வீடுதோறுஞ்சென்று கூறிப்போவது அவ்வூர் வழக் குப்போலும்.

இசையால் யாரையும் மயக்கவல்லனாதலின் அதுகொண்டு மயங்காதீ ரென்பாள் அவ்விசைவன்மையை முதலிற்கூறினாள். அல்லல் ஒருகாலத் தோடொழிவதன்றென அறிவுறுத்துமாறு தலைவிக்குச்செய்த அல்லல் மிகப்பல்குவவெனக் கூறுதியென்றாள். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயில்மறுத்தல்.

(உ௦௦)

## உ0க. பரணர்

குறிஞ்சி :

இது, கழறிய பாங்கற்குத் தலைமகன் உரைத்தது.

எ - து, பாங்கற்கூட்டத்துக்கண் மறுத்துக்கூறியபாங்கனைத் தலைமகன் நோக்கிக் குறவன்மகள் கடியகாவலினாலே பெறுதற்கரியளாதலின், நீ அவளைக்கருதுதல் கூடாதென்றோய், எவ்வழியானும் கொல்லியம்பாவை அழியாது வைகுமியல்புபோல என்னெஞ்சினின்று நீங்குவாளல்லளாதலின் யான் யாதுசெய்யவல்லேனென அழிந்து கூறுநிற்பது.



மலையுறை குறவன் காதல் மடமகள்
பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்லெதிர் கொள்ளாள் இளையள் அனையோள்
உள்ளல் கூடா தென்றோய் மற்றுஞ்
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்

தெய்வங் காக்குந் தீதுதீர்
நெடுங்கோட்டு

அவ்வெள் அருவிக் குடவரை அகத்துக்
கால்பொருது இடிப்பினுங் கதழுறை கடுகினும்
உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினுந் திருநல உருவின்
மாயா வியற்கைப் பாவையிற்
போதல் ஒல்லாளென் நெஞ்சத்
தானே.

உரை :—'மலையின்கண்ணே உறைகின்ற குறவனின் காதலையுடைய இளமகள் அரிய கடிய காவலையுடையவள், அதனால் நின்னாலேபெறுதற்கரியள் கண்டாய்; நீ கூறியமொழிகளை ஏற்றுக்கொள்ளும் இயல்புடையளல்லள்; அவள் இத்தன்மையளாதலின் அவளை நினைத்தலுங் கூடாது' என்ற நண்பனே! சிவந்தவேரையுடைய பலாமரங்களின் பழங்கள்பொருந்திய தெய்வத்தாலே பாதுகாக்கப்பட்டுவருகின்ற தீதுதீர்ந்த நெடிய கொடுமுடியையும் அழகிய வெளிய அருவியையுமுடைய கொல்லிமலைச்சாரலிலே காற்று மோதியடித்தாலும் வலிய மழைவிரைந்துவீசினாலும் சினங்கொண்டு இடிமுழங்கி மோதினாலும் இவையேயன்றி வேறுபல ஊறுபாடுகள் தோன்றினாலும் பெரிய இவ்வுலகமே சினங்கொண்டெதிர்த்தாலும் தன் அழகிய நல்லவடிவங்கெடாத இயல்பினையுடைய பாவைபோல என் நெஞ்சினின்றும் நீங்கியொழிபவளல்லளாயிராநின்றாள்; ஆதலின் அவளை யான் எவ்வாறு மறந்து உய்வேன்; எ - று.

பலவின்வேர்ப் பயங்கெழுகொல்லி எனமாற்றி பலா வேரிலேகாய்த்துப் பழுக்கின்ற பழம்பொருந்திய கொல்லியெனவுமாம். கிளர்தல் - சினங்கொள்ளுதல். குரை - அசைநிலையிடைச்சொல்.

நின்பால் அன்புடையளாயினும் காவலினுள்ளாளாதலிற் பெறுதலும் அரியள் சொல்லுமேற்று விடையளிப்பாளல்லள் என்றானும், கூடாதென்ற தன் காறும் பாங்கன்கூற்றைக் கொண்டுகூறியது. போதலொல்லாள் எனவே எத்திறத்தானும் கூடினாலன்றி உய்கலேனென்றதாயிற்று. தெய்வங் காத்தலானே எத்தகைய ஊறுமில்லாதபாவைபோல ஊழ்வினை கூட்டி முடித்தலானே நீ எவ்வண்ணங்கூறினும் நின்கூற்றுப் பயன்படாதெனக் குறிப்பித்தானுமாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - பாங்கனையுடம்படுவித்தல். (உ0க)

## உ0உ. பாலைபாடியபெருங்கடுங்கோ

பாலை: இஃது, உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

மூலமும் உரையும் உ௩க

எ - து, தலைவியை இருளிலே கொண்டுதலைக்கழிந்து சுரநெறியே செல்லுந்தலைமகன் அவளை 'மடந்தாய்! நுந்தையினது காடு இதனைநீ பாராய்' என அவளது அயாவொழிந்தகலுமாறு கூறி மகிழ்வித்துக் கொண்டு செல்லாநிற்பது.

புலிபோரச் சிவந்த புலாவஞ் செங்கோட்டு
ஒலிபன் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவல் பராரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
ரு. தேன்செய் பெருங்கிளை இரிய
வேங்கைப்

பொன்புரை கவழம் புறந்தருபு ஊட்டும்
மாமலை விடரகங் கவைஇக் காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.

உரை:—இளமடந்தையே! நீ நெடுங்காலம்வாழ்வாயாக; புலியொடு போர்செய்தலாலே இரத்தந்தோய்ந்து சிவந்த புலவுநாற்றத்தையுடைய செவ்விய மருப்பினடியிலே தழைத்த பலவாயமுத்துக்க ளொளியாகிற்ப வலிமிக்கு வலிய மேட்டுநிலத்தின்கணுள்ள வேங்கைமரத்தின் பருத்த அடியை முறித்துத் தன்கன்றுடனே இளம்பிடியை அணைத்த நீண்டகையையுடைய களிற்றியானை தேனைத்தொகுக்கின்ற ஈக்களெல்லாம் ஓடுமாறு அவ்வேங்கையின் பொன்போன்ற பூங்கொத்தாலாகிய உணவைப் பாதுகாத்துநின்று ஊட்டாநிற்கும் கரிய மலைப்பிளப்பிடங்களைச் சூழ்ந்து அழகுமிகக் கார்த்திகைநாளின்பெயராலே பெற்ற அறஞ்செய்தற்குரிய திங்களின் எடுக்கப்பட்ட விசும்பிலே செல்லுகின்ற ஒளியையுடைய நீண்ட விளக்கங்களின் வரிசைபோலப் பலபூக்கள்நிரம்பிய கோங்கங்கள் அழகு செய்யப்பட்ட நின் தந்தைக்குரிய இக்காட்டினைநீ காண்பாயாக; எ - று.

சுவல் - மேட்டுநிலம். கவழம் - வாய்நிரம்பியஉணவு; கவளமென்பர். அறுமீன் - கார்த்திகைநாள். அது உவாமதியொடுசேர்கின்ற திங்களைக் கார்த்திகைத்திங்களென்ப. அத்திங்களில் நீராடி விளக்கேற்றிவைத்துப் பார்ப்பார்க்களித்தல் அறமெனப்படுதலின், அறஞ்செய்திங்களென்றார். சுடர் - விளக்கு. கொடி - விளக்கின் வரிசை.

இளமையளாதலின் வருந்ாதேகுமாறு அவள்தந்தை காட்டினைக் காட்டி மகிழ்வித்து மெல்லக்கொண்டேகுகின்றனும்; அன்றித் தன் அஞ்சாமையைத் தெரிவிப்பான் தந்தைகாட்டினை நீ காண் என அதன்கண் மகிழ்ந்து செல்லுதலானே குறிப்பித்ததூஉமாம்; அதனலே தமர்வந்து தகைப்பின் ஆற்றவல்லேன் என்றதாயிற்று.

இறைச்சி:—கன்றோடு பிடியைத்தழுவிய வேழம் கவளமூட்டுங் காடு என்றது, காதலியோடு இல்லறம் நிகழ்த்தி அவளிடத்துப் பிறந்த மக்களுடனே அவளையும் பாதுகாத்துக் கொள்ளுவேனெனக் காதலன்குறிப்பித்ததாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகளை அயாவகற்றல். (உ0உ)



## உ0௩. உலோச்சனார்

நெய்தல்: இது, தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழி சொல்லி வரைவுகடாயது.

எ - து, களவுப்புணர்ச்சியில் வரைவுநீட்டித்த தலைமகன் மறைவாகிய ஓரிடத்தில் வந்திருப்பதையறிந்த தோழியானவள் அவன்கேட்டு விரைய வரையுமாற்றானே தலைவியைநோக்கிக் கானவிடத்து நம் கணவனோடு உற்ற நம்மில் ஒருவரையொருவர் பிரிந்தால் பிழைப்பது அரிதென்னுமல் அலரெழுந்து அவரை இங்கு வாராவண்ணம் தடுத்ததுமன்றி அதுகாரணமாக இவ்வூர் வருத்துதலையுஞ்செய்கின்றது; இஃதென்னகொடுமையென நொந்து கூறுகிறபது.

முழங்குதிரை கொழீஇய மூரி எக்கர்த்

தடந்தாள் தாழை முள்ளுடை

நெடுந்தோட்டு

அகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூங்
கோடேவார்ந் தன்ன வெண்பூத் தாழை
எறிதிரை உதைத்தலிற் பொங்கித் தாதுசோர்பு
சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலாம் அறுக்கும்
மணங்கமழ் கானல் இயைந்தநங் கேண்மை
ஒருநாள் பிரியினும் உய்வரிது என்னாது
கதழ்பரி நெடுந்தேர் வரவாண்டு அழுங்கச்
செய்ததன் தப்பல் அன்றியும்
உயவுப்புணர்ந் தன்றிவ் அழுங்கல் ஊரே.

**உரை** :—ஒலிக்கின்ற அலைகொழித்த பெரிய மணலாகிய திடரின்கணுள்ள வளைந்த அடியையுடைய தாழையின் முள்ளையுடைய நெடிய தொகுதியாகிய இலையின் உள்மடலிலே தோன்றிய அரும்பு முதிர்ந்த வெளிய பொலிவுபெற்ற சங்கினை நீட்டித்துவைத்தாலொத்த வெளிய பூவையுடைய தாழை எறிகின்ற அலைமோதுதலாலே பொங்கித் தாது உதிர்ந்து சிறியகுடியையுடைய பாக்கத்துத் தெருவிலெழுகின்ற புலவுநாற்றத்தைப் போக்காநிற்கும் மணங்கமழ்கின்ற கடலருகிலுள்ள சோலையின் கண்ணே காதலருடனே தொடர்ந்து ஒன்றிய நம்முடைய நட்பானது, ஒருநாள் இடையீடுபட்டுப் பிரிந்தாலும் உயிருய்தல் அரிதாகுமென்று கருதாமல் விரைந்த செலவினையுடைய குதிரைபூட்டிய அவரது நெடிய தேரின் வருகையை இனி அக் கானலிடத்துவாராது அலரால் மறிக்கப்பட்டு வருந்தச்செய்த தன்னுடைய தவறுகளை வெளிக்காட்டா திருப்பதன்றியும் இப்பழிமொழியாகிய பேரிரைச்சலையுடைய ஊரானது இங்ஙனம் ஒருதேர் வருவதன்காரணந்தான் யாதோவென்று ஆராய்ந்து அதனால் வருத்தமும் அடைகின்றது ; இஃதென்ன கொடுமையுடையதுகாண் ? இங்ஙனமாயின் இனி எவ்வாறு அவருடன் களவொழுக்கம் நிகழாநிற்குமன் ? எ - று.

ஒருநாள்பிரியினும் உய்வரிதென்றதனால் இனி வரைந்து தலையளி செய்யாவிடின் இறந்துபடுமென்றறிவுறுத்தினள். ஊரின் கௌவை



மேலிட்டதன்றியும் தேர்வருகையை உசாவாநிற்குமென்றதனலே இனிக் களவொழுக்க மியலாமையறிவுறுத்தினள். இஃது அவன்புணர்வுமறுத்தல். உய்வரிதென்றது, துன்பத்துப்புலம்பல்.

**உள்ளுறை** :—அலைமோதுதலாலே தாழையின் மகரந்தம் உதிர்ந்து மறுகிலுள்ள புலவுநாற்றத்தை நீக்குதல்போலத் தலைவனை அவாவானது தூண்டுதலாலே அவன்பொருளை எமரில்லத்துக்கொணர்ந்து குவித்து வரைந்து ஊரிலெழுந்த அலரைப்போக்குவானாக வென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல் (௨0௩)

# உ௦சு. மள்ளனார்

குறிஞ்சி : இது, பின்னின்றதலைமகன் ஆற்றானாய்த் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

தோழிகேட்பத்

எ - து, இயற்கைப்புணர்ச்சியின்பின் தலைவியுற்ற வேறுபாட்டையும், பின்பு தலைமகன் கையுறையேந்திவந்து இரந்துநிற்றலையும் அறிந்ததோழி இவனொருகுறையுடையான்போலும், அதுவும்இவள்கண்ணதேயாகுமென ஆராயும்பொழுது அதுகாறும் பொறானாய்த் தான் கூறுவதனைத் தோழி கேட்டு விரைந்து குறைமுடிக்குமாறு தன்னெஞ்சைநோக்கி, 'மடந்தாய்! யான் எப்பொழுது நின்னை அணையவருவதோகூறாய்' என்றலுங் குறி யிடத்துவந்து இன்மொழிகூறிப் பெயர்ந்த கொடிச்சி போகும்புறநோக்கிக் கைவிட்டுநின்றநெஞ்சமே, ஒருத்திநின்கையிலகப்பட்டால் நகராதுவிட லாமோ? விடுதலாகாதேயென வருந்திக் கூறாநிற்பது.

தளிர்சேர் தண்தழை தைஇ நுந்தை
குளிர்வாய் வியன்புனத்து எற்பட வருகோ
குறுஞ்சுனைக் குவளை அடைச்சிநாம்
புணரிய
நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ
ரு. இன்சோன் மேவலைப் பட்டவேன்
நெஞ்சுணக்
கூறினி மடந்தைநின் கூரெயிறு உண்கென
யான்தன் மொழிதலின் மொழியெதிர் வந்து
தான்செய் குறியில் இனிய கூறி
ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு

கO. உறுகழை நிவப்பின் சிறுகுடிப் பெயருங்
கோடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடலோல் லாதே.

உரை :—'மடந்தாய்! தளிர்சேர்ந்த மெல்லிய தழையையுடுத்து நுந் தந்தையினுடைய கிளிகடிகருவியாலே பாதுகாக்கப்படுகின்ற அகன்ற தினைப்புனத்தின்கண்ணே பொழுதுபோதலும் வருவேனோ? பறித்த சுனைக்குவளை மலரைச்சூடி நாம் பண்டுபுணர்ந்த நறிய தண்ணிய மலைப்பக் கத்தில் விளையாடுவோமாதலால் அதற்கு அங்குவருவேனோ? இவற்றுக்கு விடையாக நின் இனியமொழியை விரும்புதலால் அம்மொழிபெறாமல் வருந்துகின்ற என்னுள்ளங் கொண்டுமகிழும்படி இப்பொழுது ஒருமொழி கூறிக்காண்; நின்னுடைய கூரிய எயிற்றைச் சுவைத்துமகிழ்வேன்' என



யான் நெருங்கி அவன்பால் இனிய வார்த்தை பலவற்றைக் கூறவின் என் சொல்லுக்கு எதிராகவந்து தான் முன்புசெய்த குறியிடத்து அழைத்துக் கொண்டுபோய் 'நீ பின்னர் என்னை முயங்குதி' என இனியமொழிகளைக் கூறிக் கலைமானைப் பிரிந்தகல்கின்ற பெண்மான்போல நின்னை வேறாகக் கொண்டு மிக்க மூங்கில் உயர்ந்து தோன்றுதலையுடைய தன்சிறு குடியின் கண்ணே பெயர்ந்துசெல்லுங்கொடிச்சி செல்லுகின்ற பின்புறம்நோக்கி அவளைக்கைவிட்டு ஏமார்ந்திருந்தநெஞ்சமே, ஒருத்தி நின் கையிலகப்பட் டால் அவளது நலனை நுகர்ந்துமகிழாது கைவிடலாமா? விடலாகாதே; எ – று.

எயிறு உண்கு - வாயைமுத்தமிடுவேனெனவுமாம்.
பட்ட - விருப்பம் அலைத்தலால் துன்பப்பட்ட.
மேவு அலைப்

தழைதை இ எற்படவருகோவென்றது, வேற்றோனென ஐயுறுதபடி குறிஞ்சிநிலத்துக்குரிய தழையை உடையாகப்புனைந்து இரவுக்குறி வரலாமோ என்றுனென்பது. சாரலாடுகம் வருகோவென்றது, பகற்குறி வரலாமோவென வினவினனென்பது. தன்மொழிதல் - அவளுள்ளம் அவன்பால் விரும்புமாறு கூறிய பலவகையாய நயமொழிகள். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - கேட்ட தோழி குறைமுடிப்பாளாவது. (உ0௪)

## உ0௫. இளநாகனார்

**பாலை:** (க) இது, தலைமகன் தன்னெஞ்சிற்குச் அழுங்கியது.

சொல்லிச் செலவு

எ - து, வினைவயிற்பிரியுந்தலைவன் ஆற்றுனாகித் தன்னெஞ்சை நோக்கி நீ துன்னருங்கானமென்னுது இவளை இங்கிருக்குமாறு கைவிட்டு வினைமேற் செல்லுவையாயின், இவளது மாமையினழகு இன்றோடு போயிற்றுக்காணென அழுங்கிக் கூறுநிற்பது.

,, ,, (உ) தோழி செலவழுங்கச்

சொல்லியதூஉமாம்.

எ - து, தோழி வினைவயிற்பிரியுந்தலைவனை நோக்கி நீ இவளைக் கைவிட்டு வினைமேற்செல்லுவையாயின் இவளது மாமையினழகு இன்றோடு போயிற்றுக்காணென அழுங்கிக் கூறுநிற்பதுமாகும்.

அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்துவெண் கோட்டு வயக்களிறு இழுக்குந்
துன்னருங் கானம் என்னுய் நீயே
குவளை உண்கண் இவளீண்டு ஒழிய
ஆள்வினைக் ககறி யாயின் இன்றொடு
போயின்று கொல்லோ தானே படப்பைக்
கொடுமுள் ஈங்கை நெடுமா அந்தளிர்
நீர்மலி கதழ்பெயல் தலைஇய
ஆய்நிறம் புரையுமிவள் மாமைக் கவினே.

உரை:—நெஞ்சே, அருவி ஒலிக்கின்ற பெரிய மலைப்பக்கத்தில் நல்ல ஆளியென்னும் விலங்கு இரைவிரும்பியெழுந்த கொல்லவல்ல நகங்களையும் அழகிய வரியையுமுடைய புலியாலடிக்கப்பட்ட கூரிய நுனியையுடைய தலையிலேதாங்கிய வெளியகோட்டினையுடைய வலிய களிற்றியானையை இரையாகக்கொண்டு இழுத்துச்செல்லாநிற்கும் பிறர் நெருங்குதற்கரிய காடென்றுநினையாயாய் நீதான் குவளைமலர்போன்ற மையுண்டகண்களை உடைய இவள் இவ்விடத்தே நிற்குமாறு கைவிட்டு நின்னுள்ளத்து முயற்சியை மேற்கொண்டு வினையிடத்துச் செல்லுவையாயின் கொல்லையிலுள்ள வளைந்தமுள்ளையுடைய இண்டின் நெடியகரிய அழகிய தளிரின்மீது நீர்மிக்க விரைவையுடைய மழைபெய்துவிட்டபொழு துண்டாகிய அழகிய நிறம்போன்ற இவளது மாமையினழகு இன்றேயே போயிற்றுக்காண்; ஆதலின் ஆராய்ந்து நினக்கு ஏற்றது செய்வாயாக; எ - று.

ஆளி - சிங்கத்தின் வேறுபட்டது.

மாமைக்கவின் இனி எய்துவதரிதென்பான் இன்றேயே போயதென இறந்தகாலத்தாற் கூறினான். இதனினும் ஆள்வினை சிறந்ததாயினும் கானின் கொடுமையைக்கருதின் அஃது அத்துணைச்சிறப்பிலதென நெறியினதருமைகூறி அறிவுறுத்தினனும்.

இறைச்சி:—புலிதொலைச்சிய களிற்றை ஆளி இரையாக உண்ணக் கருதி யிழுத்துண்ணுங் கானமென்றது, நின்னால் நலனுணப்பட்ட இவளது மேனியழகைப் பசலையுண்டு கெடுக்காநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - செலவழுங்கல்.

இரண்டாந்துறைக்கு இவையனைத்துந் தோழி தலைவனைவிளித்துக் கூறியதாகக் கொள்ள உரையொக்கும். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - செலவழுங்குவித்தல். (உ0௯)

குறிஞ்சி:

இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

எ - து, பகற்குறியின்கண்ணே தலைமகன் ஒருபுறத்தில் வந்து அற்றம் நோக்கி மறைந்திருப்பதை யறிந்ததோழி அவன்கேட்டு விரைந்து மணஞ் செய்து கொள்ளுமாற்றானே தலைவியைநோக்கித் தினைமுற்றியதைக் கவருகின்ற கிளியை ஓட்டிக் காப்பாயென்று எந்தைகூறினன்; அப்பொழுது அன்னையும் வேங்கைமலர்கவென என்முகத்தைக் குறிப்பாக நோக்கினளாதலின் நாடனது கேண்மையை அறிந்தனளோ யாதோதெரிகிலேனே யென மயங்கிக் கூறுநிற்பது.

துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார்பு இறைஞ்சித்
தோடலைக் கோண்டன ஏனல் என்று

துறுகல் மீமிசைக் குறுவன குழீஇச்
செவ்வாய்ப் பாசினங் கவருமின் றவ்வாய்த்
ரு. தட்டையும் புடைத்தனை கவணையுந் தொடுக்கென

எந்தைவந் துரைத்தனன்

ஆக அன்னையும்

உருசு நற்றிணை நானூறு

நன்றாள் வேங்கையும் மலர்கமா

இனியென

என்முகம் நோக்கினள் எவன்கொல்

தோழி

செல்வாள் என்றுகோல் செறிப்பல்

என்றுகோல்

௧௦. கல்கெழு நாடன் கேண்மை

அறிந்தனள் கொல்லஃது அறிகலேன்

யானே.

உரை:—தோழீ! 'பஞ்சுநுனிபோன்ற தலையையுடைய அப்பொழுதீன்ற தினைக்கதிர்களெல்லாம் பால்நிறைந்து முற்றித் தலைசாய்ந்து மேலேயுள்ள தோடுகள் அலைதல்கொண்டன, அவற்றைநோக்கி இனி உண்ணத் தகுமென்றுகருதி அக் கதிர்களைக்கொய்துபோகவேண்டித் துறுகல்மீது சிவந்த வாயையுடைய பசியகிளியின்கூட்டங் கூடி இனிக் கவர்ந்து கொண்டேபோய்விடுமாதலின், நீ ஆங்கே சென்று கிளியோப்புந் தட்டையைப் புடையிலுள்ள குற்றியிலே புடைத்து ஒலியெழுப்பினையாகிக் கவண்கல்லும்வீசுக' என எந்தைவந்துகூறினன்; அப்பொழுது எம் அன்னையும் இனி நல்லநாளை அறிவுறுத்தும் வேங்கையும் மலர்கவென்றுகூறி என் முகத்தைக் குறிப்பாக நோக்கினள்கண்டாய்; என்னைத்தான் இவள் தினைப் புனங்காக்கச்செல்வாளென்றோ? அல்லது தன்னுள்ளத்தேதான் நின்னை (தலைவியை) இல்வயிற்செறிப்பலென எண்ணியோ? வேறு ஏதேனுங் கருதியதுண்டோ? மலைபொருந்திய நாடன்பால்வைத்த நம்முடைய கேண்மையை அவ் அன்னைதானறிந்துகொண்டனளோ? அவளது எண்ணம் இன்னதென்று நானறிந்திலேன்; நீ அறிந்தனையாயிற் கூறிக்காண்; எ-று.

பாசினம் - கிளியின்கூட்டம். ஆக - பிரிவிலசைநிலை. இஃது அவன் புணர்வுமறுத்தல். தினைவிளைவு உணவுக்குக் கொண்டுவரப்படும் நாளாகவின் அது நன்னாளெனப்பட்டது.

வேங்கைமலர்கவென்றது நினைகொய்யுங்காலம் அதுவாதலால் விரைவிலே கொய்யக்கருதிக் கூறினாளென்பது. அங்ஙனம் கூறுதலால் இனித் தலைவி இற்செறிக்கப்படுவளென்றதாம். காரணமின்றிக் கூற்றுமின்றி நோக்கினமையின் நாடனது கேண்மை அறிந்தனள்கொலென்றாள். வேங்கைமலர்தலை அவன் கேட்குமாற்றானேகூறியது அந்நாள் வதுவை அயர்தற்கு ஏற்றதாதலின் வரைவொடுவருகவென அறிவுறுத்தினளுமாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுடன்படுத்தல். (உ0௬)

## உ0௭. ......................

## நெய்தல் :

*இது, சொதுமலர் வரைவுழித் தோழி, செவிலிக்கு அறத் தொடுநின்றது.*

*எ - து, தலைவியை வேற்றுமாக்கள் மணஞ்செய்துகொள்ளவேண்டி வருவதனையறிந்ததோழி, தன்தாயாகிய செவிலியிடஞ்சென்று அன்னாய்! முன்பு களவொழுக்கத்திலே கலந்த கேள்வருடைய தேர்வருவது நிறுத்தப் பட இயலாதது; வந்தவர்தாம் வறிதேபெயர்வரோ? நம் இளமகளை வேற்றுவரைவிற் படுத்தினிரேல் கொலைவெய்ய சிறுவர்கைப்பட்டனளேயா மென முன்புநிகழ்ந்த களவொழுக்கத்தை வெளிப்படுத்தித் தெளியக் கூறுகிற்பது.*

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென
நெடுந்தேர் பண்ணி வரலா னாதே
குன்றத் தன்ன குவவுமணல் நீந்தி
வந்தனர் பெயர்வர்கொல் தாமே அல்கல்
இளையரும் முதியருங் கிளையுடன் குழீஇக்
கோட்சுறா எறிந்தெனச் சுருங்கிய நரம்பின்
முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்
திரையெழு பௌவம் முன்னிய
கொலைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே.

உரை :—அன்னய்! கழிசூழ்ந்த கண்டல் மரங்களாலாகிய வேலியை உடைய கொல்லையிடையமைந்த முள்ளிச்செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையுடைய சிறுகுடில்களையுடைய கொழுவிய மீன்கொள்பவர் உறைகின்ற பாக்கமெங்கும் கல்லென்னும் ஓசையுண்டாக நெடிய தேரினைச் சமைத்துக்கொண்டு நம் காதலர் வருவது நிறுத்தப்படுவதொன்றன்று; மலைபோன்ற குவிந்த மணற்பரப்பைக் கடந்துவந்த அவர்தாம் வறிதே இனிப்பெயர்வரோ? பெயரார்காண்; இரவில் இளைஞரும் முதியோரும் தம் உறவினருடன் கூடியிருந்து கொல்லவல்ல சுறுமீன்கிழித்ததனலே சுருங்கிய நாம்புகளைக்கொண்டு வலையை முடிகின்ற முதிர்ச்சியையுடைய பரதவரின் மடப்பமிக்க மொழியையுடைய இளமகளான இவள் அவருக் கேயுரியள்; அங்ஙனன்றி வேற்றுவரைவிற் படுத்தினிரேல், வலையையும் தூண்டிலையும் பிடித்துப் பெரிய காற்றுவீசுதலானே அலையெழுகின்ற கடலின்கண்ணே செல்லுகின்ற கொலைத்தொழிலையுடைய வெய்ய பரதவர் சிறுர்வாய்ப் பட்டொழிந்தனளேயாம்; இனிக் கூறியாவதென்? எ - று.

குறுமகள் சிறுர்பாற் பட்டனளெனக் கூட்டுக. இளையரும் முதியருமாகக் கூடிமுடிகின்ற பரதவர். நாம்பு - மெல்லியகொடி; மெல்லியநாருமாம். பட்டனளெனத் தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினள். இனிக் கூறியாவதென் என்பது சொல்லெச்சம். குறியிறை - குறிய இறப்பு.

நம்மின் மிக்க செல்வமுடைய காதலரென்பாள் தேரொடும்வருதல் கூறினள். அத்தகையார் இழிந்த பாக்கத்துவருகின்றனரென இவள்பாற் கொண்ட வேட்கைமிகுதிகூறினள். பிறர்வரையப்புகுவோர் இழிதக்காரென்பாள் வலையுந்தூண்டிலும் பற்றிய சிறுரெனக்கூறினள். கொலைவெஞ்சிறுர் பாற்பட்ட இவள் உய்யாளென இறந்துபாடு குறித்தாளுமாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். பயன் - வெளிப்படையாக அறத்தொடு நிற்றல். (உ0எ)

## உ0அ. நொச்சி நியமங்கிழார்

பாலை :

இது, செலவுற்ருரது குறிப்பறிந்து ஆற்ருளாய தலைமகள் உரைப்பத் தோழி சொல்லியது.

*எ - து, தலைமகன் பொருள்வயிற் பிரிந்தானாது குறிப்பறிந்து தலைமகள் வருந்துதலும் அதுகண்ட தோழி நீ என் வாடுகின்றனை, அவர் செல்பவரல்லர்; செல்லிற் காமநோய்பொறுப்பவருமல்லர்; பொருள்முடியா தாயினும் வருவர்காண்; இம்மழைக்குரல் பிரிந்தோரைநாடித் தருவது போலுமெனத்தேற்றிக் கூறுகிறப்பது.*

விறல்சாய் விளங்கிழை நெகிழ விம்மி
அறல்போல் தெள்மணி இடைமுலை நனைப்ப
விளிவிலா கலுழும்* கண்ணொடு பெரிதழிந்து
எவனினைபு வாடுதி சுடர்நுதற் குறுமகள்
செல்வர் அல்லர்நங் காதலர்† செலினும்
நோன்மார் அல்லர் நோயே மற்றவர்
கொன்னு நம்பும் குரையர் தாமே
சிறந்த அன்பினர் சாயலும் உரியர்
பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள்
முடியா தாயினும் வருவர் அதன்றலை
இன்றுணைப் பிரிந்தோர் நாடித்
தருவது போலுமிப் பெருமழைக் குரலே.

உரை:—விளங்குகின்ற நெற்றியையுடைய இளமடந்தையே! நின் வலிமையெல்லாங் குறைந்துபோய் விளங்கிய கலன்கள்நெகிழாநிற்ப, முத்துப்போன்ற கண்ணீர்த்துளி கொங்கையினிடையேவிழுந்து நனைத்தலைச் செய்ய நீங்காதபடி விம்மிவிம்மி அழுகின்ற கண்ணுடனே பெரிதும் அழிந்து வருந்தி என்னகருதி வாடுகின்றனை? நம் காதலர் நின்னைப் பிரிந்து செல்பவரல்லர்; அங்ஙனம் பிரிந்து சென்றாலும் சென்றவிடத்தே தமக்குண்டாகிய காமநோய் பொறுப்பவரல்லர்; அவர்தாம் நின்னிடத்துப் பெரியதொரு விருப்பமுடையவர்கண்டாய்; நின்பாற்சிறந்த அன்புடையராயிராநின்றார்; மிக்கமென்மையும் பொருந்தினவராயினர்; அவரைப்பிரிந்துறையும் நம்மினுங்காட்டில் இரக்கமுற்றுத் தாம் சென்றவிடத்து ஈட்டுதற்கரியபொருள் முற்றுப்பெறாதாயினும், அது நிமித்தமாக அங்கே நீட்டியாது உடனே மீண்டுவருவர்; அதன்மேலும் இப்பெரிய மேகத்தின் முழக்கமானது இனியதுணையைப் பிரிந்தோரை நாடித் தருவதுபோலுமாய் இராநின்றது ஆதலின் நீ வருந்தாதேகொள்; எ - று.

விறல் - வலிமை. சாய்தல் - உள்ளதனுணுக்கம். அறல் - நீர். நினைபு - நினைத்து. நோன்றல் - பொறுத்தல்; நோன்மார் - பொறுப்பவர். கொன் - பெருமையுணர்த்திய உரிச்சொல். நம்பு - விருப்பம். குரை - அசைநிலை இடைச்சொல். சாயல் - மென்மை. ஆதலின் நீ வருந்தாதேயென்பது குறிப்பெச்சம். பெரிதழிந்துவாடியது - துன்பத்துப்புலம்பல்.

அங்ஙனம் வாராது நீட்டித்தாலும் இம்மழையைக் கண்டவளவிலே தமியராய் ஆங்குத்தங்கலரென்னுங்கருத்தால் குரல் தருவதுபோலுமெனக்

---

(பாடம்) * கலிழும். † நுங்காதலர்.

கூறினள். மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த தலைவியை ஆற்றுவித்தல்.

பெருமிதம். பயன் -
(௨௦௮)

## ௨௦௧. நொச்சி நியமங்கிழார்

குறிஞ்சி :

இது, குறைமறுக்கப்பட்டுப் பின்னின்றதலைமகன், ஆற்றானாய் நெஞ்சிற்குச்சொல்லுவானாய்ச் சொல்லியது.

எ - து, தலைவன் தோழியிடத்துச்சென்று தலைவி இன்றியமையாமையாகிய குறைகூறி இரந்தவழி அவள் மறுத்துவிட்டுத் தனியேயிருந்து அவன் குறைக்குக்காரணம் யாதென்று ஆராய்கின்றகாலத்தில் அதுகாறும் பொறானாய் ஆற்றாது தன்னெஞ்சைநோக்கி இக்கொல்லைகாப்பாளுடைய இனியகுரலைக் கிளியும் அறிந்திருக்கும்; அத்தகையாள் எனது அருகிருப்பின் எனது நோய்தீரும்; பொருந்தாளாயின் என்னுயிரோடெல்லாம் அழிந்தொழியுமென நொந்து கூறுநிற்பது.

மலையிடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்
தளிபதம் பெற்ற கானுழு குறவர்
சிலவித்து அகல விட்டென் பலவிளைந்து
இறங்குகுரல் பிறங்கிய ஏனல் உள்ளாள்
மழலையங் குறுமகள் மிழலையந் தீங்குரல்
கிளியுந் தாமறி பவ்வே எனக்கே

படுங்காற் பையுள் தீரும் படாஅது
தவிருங் காலை யாயினென்
உயிரோ டெல்லாம் உடன்வாங் கும்மே.

உரை:—மலைச்சார்பிடத்தில் அகலப்படுத்தி வளைத்த கொல்லையாகிய மழைபெய்யும் பதம்பெற்ற காட்டினை உழுகின்றகுறவர், சிலவாய விதைகளைக் கலப்பாக விதைத்து ஒருசேரப் பலவாக விளைந்து சாய்ந்து கதிர்விளங்கிய தினைக்கொல்லையின்கண் உள்ளாளாகிய மழலைமாறாத இளமடந்தை பேசுகின்ற இனிய குரலைக் கிளிகளும் அறிந்திருப்பனவே, அவ்வினிய குரல் என் அருகிருந்து மிழற்றின் அன்றே எனது காமநோய் தீரும்; அங்ஙனம் அருகிருந்து மிழற்றப்படாது என்னினின்று நீங்கி அகல்வதாயின் என் அறிவுமுதலாயகுணங்களுடன் என் உயிரையுஞ்சேர எல்லாவற்றையும் கைக்கொண்டு அகலாநிற்கும்; இப்படியாயின் அவள் இன்றி யான் எவ்வாறு உய்யமாட்டுவேன்? எ - று.

கோட்டுதல் - வளைத்தல்; வேலியிட்டு அகலப்படுத்தி வளைத்தல். கொல்லைக்கானுழுகுறவர் - கொல்லைக்காட்டையுழுகின்றகுறவரென்க.

இறைச்சி:—சிலவாயவிதையை விதைத்துப் பலவாய பயனைப்பெறும் ஏனல்காவலினிவளை விரும்பியயானும் நின்பாற்கூறும் சிலவாயகூற்றினாற் பெற்று இவள்கொடுக்கின்ற பலவாய இன்பந்துய்ப்பேனாக வென்றதாம். **மெய்ப்பாடு** - தன்கட்டோன்றிய அவலம். **பயன்** - தோழிகேட்டுக் குறை முடிப்பாளாவது. (உ0௯)



## உ௧0. மிளைகிழான் நல்வேட்டனார்

மருதம் :

இது, தோழி தலைமகனை நெருங்கிச் சொல்லுவாளாய் வாயில் நேர்ந்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனைக் காதலிபுலந்துகொள்ளலும் அதனைத் தோழியாலே தணிக்கக்கருதி அவள்பாலுற்றனளாக, அவனைநோக்கி, ஊரனே! இப்பெற்றிப்பட்ட எனைத்தும் செல்வமெனப் படுவதன்று; அடைந்தாரைக் காத்தலே செல்வமெனப்படுவது; அச்செயல் நின்பால் இல்லையென்று தலைவியூடல்தீரும்வண்ணம் கடிந்து கூறுநிற்பது.

அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர
நெடிய மொழிதலுங் கடிய ஊர்தலும்
செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கண் செல்வஞ் செல்வமென் பதுவே.

உரை :—நெல் அறுத்து நீங்கப்பெற்ற அழகிய இடமகன்ற வயலின் கண்ணே மறுபடியுழுத ஈரமுடைய சேற்றில் விதைக்கும்வண்ணம் விதை கொண்டு சென்ற கடகப்பெட்டியில் மிகப்பலவாகிய மீன்களைப் பிடித்துப் போகட்டு மீண்டுகொண்டுவருகின்ற புதுவருவாயினையுடைய ஊரனே! அரசராலே மாராயம்பெறப்படுதலும் அவர்முன்பாக விரைந்தசெலவினை யுடைய குதிரை, தேர், யானை முதலாகியவற்றை ஏறிச் செலுத்துதலும் செல்வமெனப்படுவதன்றுகண்டாய்; அவையனைத்தும் முன்பு தாம்செய்த வினைப்பயனுன் எய்தப்படுவனவாகும்; இனிச் சான்றோராலே செல்வம் என்று உயர்த்துக்கூறப்படுவதுதான்யாதோவெனில், தம்மை அடைக்கல மாகக் கைப்பற்றியவர்க்கு உண்டாகிய துன்பத்தையஞ்சி அத்துன்பத்தைப் போக்கி அவரைக் கைவிடாமல் ஆளுகின்ற இயல்புடனே வன்கண்மை இன்றி இனியதன்மையனுயிருக்குஞ் செல்வமேயாம்; அடைக்கலமெனக் கைப்பற்றி யொழுகாநின்ற இவளை நீ கைவிட்டதனுலே அத்தகைய இயல்பு நின்பால் இல்லையென்றறியக்கிடக்கின்றமையின் இனிக் கூறியாவதென்? எ - று.

வட்டி - கடகப்பெட்டி.

நெடியமொழிதலும் கடியவூர்தலும் களவுக்காலத்தே தலைவன்வந்து கூறி நிகழ்த்தியவை; அவற்றை ஈண்டுக்குறிப்பித்தது நீ அத்தகையையல்லை என்பாள், நின்னைப் புகலிடமாக அடைந்த தலைவியைக் கைவிட்டனை என்பதனுலே பின்னர்க்குறிப்பித்தாள்.

உள்ளுறை :—தாளடியில் விதைக்குமாறு விதையொடுசென்ற வட்டி மீனெடுபெயருமென்றது, தலைவியொடு இல்லறம் நிகழ்த்துகின்ற நின்பால் வேண்டியபரத்தையரைக் கொணர்ந்து புணர்த்தியபாணன் தான்விரும்பும்

பொருளை நின்னிடத்துப்பெற்றுச் செல்லாநிற்கும்; அந்த மயக்கிலிருக்கின்ற நின்னைக் கூறியாவதென் என்றதாம். **மெய்ப்பாடு** - வருத்தம் பற்றிய வெகுளி. **பயன்** - வாயில் நேர்தல். (உக0)

## உகக. கோட்டியூர் நல்லந்தையார்

### நெய்தல்:

இது, வரைவுநீட ஒருதலை ஆற்றாளாமென்றதோழி சிறைப்புறமாகத் தன்னுள்ளே சொல்லியது.

எ - து, களவொழுக்க மேற்கொண்ட தலைமகன் மணஞ்செய்துகொள்ளாது நீட்டித்தலாலே தலைவி ஒருபடியாக ஆற்றாளாமென்று அறிந்த தோழி, ஆங்கு ஒருபுறம் வந்திருந்த தலைவன் அறிந்து விரைய மணம் புரிந்துகொள்ளுமாறு உள்ளுறையாலே தலைவிபடுந் துன்பத்தைக்கூறி வெளிப்படையாலே கொண்கன் பிரிந்தனனென்று நொந்து யாவரிடத்தில் உரைப்பேனென அழிந்து கூறாநிற்பது.

யார்க்குநொந் துரைக்கோ யானே ஊர்கடல்
ஓதஞ் சென்ற உப்புடைச் செறுவில்
கொடுங்கழி மருங்கின் இரைவேட் டெழுந்த
கருங்கால் குருகின் கோளுய்ந்து போகிய

ரு. முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை
எறிதிரை தொகுத்த எக்கர்
நெடுங்கோட்டுத்
துறுகடல் தலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉந்
துறைகெழு கொண்கன் துறந்தனன்
எனவே.

உரை :—ஊர்ந்துசெல்லுகின்ற கடலின்நீர் ஓடிப்பரந்த உப்புப்படுதலை உடையசேற்றினையுடைய வளைந்த கழியிடத்து இரையைவிரும்பியெழுந்த கரியகாலையுடைய குருகின் குத்துக்குத் தப்பிப் பிழைத்தோடிய வளைந்த முதுகும் உயர்ந்தவாயுமுடைய இறவின் ஏற்றை, மோதுகின்ற அலை கொழித்திடப்பட்ட மணல்மேடாகிய நெடியகரையின்கண்ணே உண்டாகி நெருங்கிய கடலின்புறத்திலே தலைசாய்ந்துடைய இலைகள்பொதிந்த தாழையினுடைய வண்டுகள்வந்து மொய்க்காநின்ற வெளியபூவைநோக்கி இதுவுமொரு குருகுபோலுமென் றஞ்சாநிற்கும் துறைபொருந்திய கடற் கரைக்குத் தலைவனாகிய நம்காதலன் என்னைத் துறந்து சென்றொழிந்தன னென்று யாரிடத்தில் யான்படுந் துன்பத்தையெல்லாம் புலப்படுத்தி வருந்தி உரையாநிற்பேன்? எ - று.

குருகு - நாரையின் பகுதியாகிய 'நெடலை, வக்கா' முதலாயின; இவையே தாழம்பூமோத்தைபோ லிருப்பன. இது தலைவிகூற்றைத் தோழி தன்கூற்றாகக் கொண்டு கூறியது.

வரையாதொழுகினும் அவனேமணமகனென அவனறியுமாறு கொண்கனெனக்கூறினாள். கொண்கன் - திணைப்பெயரேயன்றிக் காதல னெனும் பெயரையுமுடைமையின் களவுகாலத்துப்பிரிவாதலின் எவ ரிடத்தும் புலப்படுத்தற்கு இயையாமையின் 'யார்க்கு நொந்துரைப்பேனோ' எனத் தானே புலம்பியதாம்,

**உள்ளுறை:**—இரைதேடிவந்த குருகுபற்றுதலைத் தப்பியோடிய இருமீன் தாழம்பூவைநோக்கிக் குருகெனக்கருதி அஞ்சுமென்றது, ஊரார் பழிதூற்றத்தொடங்கலும் அதற்கஞ்சிய தலைவி அன்னையைக்கண்டவிடத்தும் எதிலாட்டியர் கூற்றை மேற்கொண்டு சினந்துவருவாள்கொல்லோ வென அஞ்சாநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகையைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - தலைவனை வரைவுடன்படுத்தல். (உ கக)

## உகஉ. குடவாயிற் கீரத்தனார்

**பாலை:**

இது, பொருண்முடித்துத் தலைமகனோடு வந்த வாயில்கள்வாய் வரவுகேட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்சென்ற தலைவன் மீண்டுவரும்பொழுது அவனுடன்வந்த இளைஞர் முதலானோர் முன்னரே மனையகம் புகுந்து தலைவன் வருகையைத் தெரிவிப்பக் கேட்டதோழி, தலைமகளை நெருங்கிச் சுரத்தின்கண்ணே சென்ற நங்காதலர் மீண்டுவந்தெய்தினர்காண்; ஆதலின் அவரும் நீயும் நெடுங்காலம்வாழ்கவென உவந்து கூறுநிற்பது.

பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள்
தெள்விளி

சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்போடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்
கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்ற நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொற் கழல்தொடி நோக்கி மாமகன்
கவவுக்கொள் இன்குரல் கேட்டொறும்
அவவுக்கொள் மனத்தேம் ஆகிய நமக்கே.

**உரை**:—தோழீ! பார்வை ஒன்றனைவைத்து வேட்டுவன் அமைத்த வலையைக்கண்டு வெருவி நெடியகாலையுடைய 'கணந்துள்' என்னும்பறவை தான் தனிமையினிருந்து கத்தாநின்ற தெளிந்தவோசை, அச் சுரத்தின் கண்ணே செல்லுகின்ற கூத்தாடிகள் தம் வழிவருத்தம் நீங்குமாறு தங்கி விரைவில் ஒலியெழுப்பி இசைபாடுகின்ற யாழோசையோடு சேர்ந்து ஒத்து ஒலியாநிற்கும் அரியநெறியிலே, கடிய ஒலியையுடைய பம்பையையும் சினங்கொண்ட நாயையுமுடைய வடுகரிருக்கின்ற நெடியபெரிய குன்றங் கடந்து, நம்முடைய கையிலுள்ளதாகிய செம்பொன்னாற் செய்து பூட்டப் பட்டு இப்பொழுது கழன்றுவிழுகின்ற தொடியைநோக்கி நம் அரிய சிறந்தபுதல்வன் நம்மை அணைத்துக்கொண்டு அழுகின்ற இனியகுரலைக் கேட்குந்தோறும் ஆசைகொள்ளுகின்ற மனத்தையுடையேமாகிய நமக்கு மனமகிழ்ச்சி உண்டாகும்படி நம்மிடத்து வந்தெய்தினர் கண்டாய்; ஆதலின், இனி நீங்கள் இருவீரும் மணையறஞ் செய்துகொண்டு நெடுங் காலம் வாழ்வீராக; எ - று.

கோடு - ஊதுகொம்பு; அதனையுடைமையிற் கோடியரெனவுமாம். நரம்பு - யாழுக்குச் சினையாகுபெயர். பம்பை - ஒருவகை வாச்சியம். கவவு - உள்ளே அணைத்துக்கொள்ளுதல். கணந்துளம், அம் - சாரியை, இது நீர்வாழ்பறவை என்று கூறப்படுதலின் "எங்கில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொ - பொ - கக) என்றபடி பாலைக்கண் வந்ததெனக்கொள்க. **கைகோள்** - கற்பு.

தலைவன் பிரிதலினாலே மெய் இளைத்தலிற் கழுதொடியென்றாள். அதனையும் மெய்சோர்ந்து காட்டுதலையும் நோக்கவே மகளுக்கு அழுகை பிறந்தமை கூறினாள்.

**இறைச்சி** :—கணந்துட்பறவையினோசை யாழோசையோடு சேர்ந்து இசைக்குமென்றது, நீ தலைவனொடு கூடி எங்கும் இசைபரவ வாழ்வாய் என்றதாம். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - மகிழ்ச்சி. (௨ கஉ)

## உகங கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்

### குறிஞ்சி :

இது, மதியுடன்படுக்கும் தலைமகன் சொல்லியது.

எ - து, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தபின் வாயில் பெற்றுய்ந்த தலைமகன் பின்னர்த் தலைமகளுந் தோழியும் ஓரிடத்திலிருப்பதையறிந்து மதியுடன்படுப்பான் ஆங்கெய்திப் புதுவோன்போல நின்று 'சிறுமிகளே, நுமது சிறுகுடி யாதென வினவவும் நீங்கள் சொல்லுகின்றிலீர், அது கிடக்க, இத்தினைப்புனங்காவலும் நும்முடையதேயோ இதனையேனுங் கூறுமினோ' என்று தன்கருத்தொடு அவ்விருவர் கருத்தினையும் ஒன்றுபடுத் துணரக் கூறுகிறப்பது.

அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்

வேர்க்கோண்டு தூங்குங் கோழுஞ்சுளைப்
பெரும்பழம்
குழவிச் சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சோல்லவும் சோல்லீ ராயிற் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினைக்
கோய்புனம் காவலும் நுமதோ
கோடேந்து அல்குல் நீள்தோ ளீரே.

**உரை:**—பக்கம் உயர்ந்த அல்குலேயும் பெருத்த தோளேயுமுடைய சிறுமிகளே! அருவியொலிக்கின்ற பெரிய மலேயையடைந்து, - ஆவினது இளங்கன்றைக் காலிவிட்ட கயிறுபிணித்த தழைந்த மன்றம்போன்ற பலா மரத்தின் வேரிலே காய்த்துத் தூங்காநின்ற கொழுவிய சுளேயையுடைய பெரியபழத்தை அவ் இளங்கன்றையுடைய சிவந்த பசுவானது தின்று பக்கத்திலுள்ளதாகிய மூங்கில்நெருங்கிய சிறுமலேயின்கணுள்ள குளிர்ந்த

நீரைப்பருகாநிற்கும் பெரியமலையை அரணாகவுடைய நமது சிறியகுடி தான் யாதோவென யான்வினவ அதற்குவிடையொன்று சொல்லுதலையுஞ் செய்திலீர்; ஆயினும் அதுகிடக்க, மின்னல்முதலாய தொகுதியையுடைய கரியமேகம் கல்லென்னும் ஒலியோடு மழையைப் பெய்ததனாலே விளைந்த சிவந்தநிறம் பொருந்திய செழுவியகதிர்களையுடைய கொய்யத் தக்க இத்தினைப்புனங்காவலும் நம்முடையதுதானோ? இதனையேனுங் கூறுங்கோள்; எ - று.

இறும்பு - சிறியமலை. ஆம் - ஈரம். அறல் - நீர். கருவி - மின்னல் முதலியவற்றின்தொகுதி. கேழ் - நிறம். முன்றிலின்கண்ணே பலர்கூடி வைகுமாறு மன்றுபோல நிற்றலின் மன்றப்பலவென்றார். ஊர்ப்பொது

மரமுமாம.

கோடேந்து அல்குலெனத் தான் முன்பு கண்டு வைத்ததாகக் கூறலின் முன்னுறுபுணர்ச்சி அறிவுறுத்தினான். வேற்றுமையிலீரென்பான் நீள் தோளீரென்றான். இதனானே தலைவியுள்ளக்கருத்தின்வழி நீ யொழுக வேண்டுமென்று ஒற்றுமைநயத்தாற் கூறினனுமாம். புனமழிந்தாற் கூட்ட மின்மை கூறுவான் கொய்கின்ற புனமென்றான். கொய்தழிந்தவழித் தலைவி மனையகம்புகுமாதலின் ஆண்டு இரவுக்குறிவேண்டுவான் சிறுகுடி யாதென வினவினமை கூறினான்.

**உள்ளுறை**:—கன்றையுடைய சேதா ஆண்டுள்ள பலாப்பழத்தைத் தின்று அயலிலுள்ள இறும்பின் நீரைப்பருகுமென்றது, இத்தலைவியை முன்பே இயற்கைப் புணர்ச்சியாலே பெற்றுடைய யான் இங்குப் பகற் குறியிற் கூடி அப்பால் இரவுக்குறியுங்கூடி நுகர்ந்து மகிழ்வேனென்ற தாம். **மெய்ப்பாடு** - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். **பயன்** - மதியுடம் படுத்தல். (உகங)

## உகச. கருவூர்க் கோசனார்

பாலை :

இஃது, உலகியலாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகன் குறித்த பருவங்கண்டு தலைமகள் சொல்லியது.

எ - து, இரந்தோர்க்கீதல் முதலாய காரணத்தானே பொருள்வயிற் பிரியுந்தலைமகன் இன்னபருவத்து வருவேனென்றபடி வாராமையாலே அவன் குறித்தபருவம் வரக்கண்டதலைவி, போதணியவருவேனென்று சூளுரைகூறியகன்ற நம்தலைவர் தாங்கூறிய பருவத்துக்குரிய இடிமுழக் கத்தைக் கேட்டிலரோவென வருந்திக் கூறுகிற்பது.

இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு
இன்மென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை
அரும்பவிழ் அலரிச் சுரும்புண் பல்போது
ரு. அணிய வருதுநின் மணியிருங் கதுப்பென
எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி
மைசூழ் வெற்பின் மலைபல இறந்து



செய்பொருட்கு அகன்ற செயிர்தீர்

காதலர்

கேளார் கொல்லோ தோழி தோள

இலங்குவளை நெகிழ்த்த கலங்கஞர்

எள்ளி

நகுவது போல மின்னி

ஆர்ப்பது போலும்இக் கார்ப்பெயல்

குரலே.

உரை :—தோழீ! இம்மைக்குரியபுகழும் இருமைக்குமுரிய இன்பமும் அங்ஙனம் மறுமையிலும் இன்புறுதற்கேதுவாகிய இரந்தோர்க் கீதல் முதலாகிய கொடைமையும் ஆகிய இம்மூன்றும் தமது இல்லின்கண்ணே செயலற்றிருந்தோர்க்கு அருமையாகவுங் கைகூடுவதில்லை யெனக் கருதிப் பொருள்செயல்வினையிடத்துப் பிரிந்த வேறுபட்ட கோட்பாட்டுடனே என்னை நோக்கி, ‘நின்னுடைய நீலமணிபோலுங் கரிய கூந்தலுக்குக் கார்காலத்து அரும்புமலர்ந்த இதழ்களில் வண்டுகள் தேனைப் பருகாநின்ற பலவாயமலர்களை அணியும்பொருட்டு யாம் வருகின்றோம்’ என்று என் மனங்கொள்ளுமாறு குறையாத கடுஞ்சூள் பலவுங்கூறி மேகந்தவழும் வெற்பாகிய மலைகள் பலவற்றைக் கடந்து பொருளீட்டும்வண்ணஞ் சென்ற யாதொரு குற்றமும் இல்லாத நம் காதலர், - என்னுடைய தோளினுள்ள இலங்கிய வளைகளை நெகிழும்படி செய்ததனுலாகிய கலங்கிய துன்பத்தைநோக்கி இகழ்ந்து நகைபுரிவதுபோல மின்னி ஆரவாரஞ் செய்வதுபோலுகின்ற இந்த மழைபெய்யும் மேகத்தினிடி முழக்கத்தைக் கேட்டிலர் கொல்லோ? எ - று.

அசை - செயலறவு.

தேயங்தோறும் பருவவேறுபாடுண்மையின் அவர்சென்ற நாட்டு இக் கார்ப்பருவமில்லை போலும் இருந்தால் அறிந்துகொள்வாரே என்பாள், கேளார்கொல்லோவென்றாள். அவர் தவறுகரல்லரென்பாள் செயிர்தீர் காதலரென்றாள். இஃது அருண்மிகவுடைமை. வஞ்சினங்கூறிச் சென்றனர் என்றது குறித்த பருவத்துவாராவிடின் வஞ்சினத்தான் அணங்கப் படுவர்கொலெனை இரங்கினளாயிற்று; இது தெய்வமஞ்சல். எனை மெய்ப் பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உகச)

## உகரு. மதுரைச் சுள்ளம்போதனார்

**நெய்தல்:** (க) இது, பகற்குறிவந்து மீள்வானை 'அவள் ஆற்றுந் தன்மையள் அல்லள்; நீயிர் இங்குத் தங்கற்பாலீர்; எமரும் இன்னதொரு தவற்றினர்;' எனத் தோழி தலைமகற்குச் சொல்லியது.

எ - து, வெளிப்படை.

,, ,, (உ) இரவுக்குறிமறுத்து வரைவுகடாயதூஉமாம்.

எ - து, களவொழுக்கத்து இரவுக்குறிவருந் தலைமகனை அங்ஙனம் வாராதபடி தடுத்து மணம்புரிந்து கொள்ளும்வண்ணங் குறிப்பாற் கூறு நிற்பதுமாகும்.

குணகடல் இவர்ந்து குரூஉக்கதிர் பரப்பிப்
பகல்கெழு செல்வன் குடமலை மறையப்
புலம்புவந் திறுத்த புன்கண் மாலை
இலங்குவளை மகளிர் வியனகர் அயர
மீன்நிணந் தொகுத்த
ஊன்நெய் ஒண்சுடர்
நீல்நிறப் பரப்பில் தயங்குதிரை
உதைப்பக்
கரைசேர்பு இருந்த கல்லென் பாக்கத்து
இன்றுநீ இவணை யாகி எம்மொடு
தங்கின் எவனோ தெய்ய செங்கால்
கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
கோட்சுறாக் குறித்த முன்போடு
வேட்டம் வாயாது எமர்வா ரலரே.

**உரை** :—சேர்ப்பனே! கீழ்கடலினின்றெழுந்து நல்லநிறத்தையுடைய கதிர்களைப்பரப்பிப் பகற்பொழுதைச் செய்துவிளங்கிய ஆதித்தன் மேல்பால் உள்ள மலையிலே மறைந்துசெல்லலும் துன்பத்தை முற்படுத்துவந்து தங்கிய புன்கண்ணையுடைய மாலைப்பொழுதினை இலங்கிய வளையணிந்த மகளிர் தம்தம் மாளிகையிலே எதிர்கொண்டு அழையாநிற்ப மீன்கொழுப்பைச் சேர்த்து உருக்கிய ஊனுகிய நெய்வார்த்து ஏற்றிய ஒள்ளிய விளக்கின் ஒளியையுடைய நீலநிறமுடைய பரப்பின்கண் விளங்கிய அலைமோதக் கரையிடத்துப் பொருந்தியிருந்த கல்லென்னுமொலியையுடைய பாக்கத்து இன்று நீ இவ்விடத்து இருந்தனையாகி எம்மோடு தங்கியிருப்பின் உனக்கு ஏதேனுங் குறைபாடுளதாமோ? சிவந்த நூலாலாகிய காலையும் வளைந்த முடியையுமுடைய அழகிய வலைகிழியும்படி அறுத்துக்கொண்டு புறத்தே ஓடிப்போன கொல்லவல்ல சுறுமீனைக்கருதி மிக்கவலியுடனே அவற்றைத் தம் வேட்டையிலகப்படப் பிடித்துக்கொண்டு வாராது எஞ்சுற்றத்தார் வெறுமனே மீண்டுவருபவரல்லர்; எ - று.

அயரவென்னுமெச்சம் இருந்தவென்பதனைக்கொண்டது.

தலைவிக்கு வருத்தமிகுதியுண்டாமென்பதனை அறிவுறுத்துவாள் புன்கண்மாலையென்றாள். தலைவியொடுகூடி நலந்துய்க்கவென்று குறிப்பிப்பாள் எம்மொடுதங்கினெவனோ என்றாள். அச்சமும் கண்படையும் இன்றி இரவுமுழுதுந் துய்க்கலாமென்பாள் எமர்வாரலரென்றாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல்.

(உ.) இரவுக்குறிமறுத்து வரைவுகடாதற்கு—மணஞ்செய்துகொண்டால் அன்றி வெளிப்படையாகத் தலைவிபால் வைகுதற்கு இயலாதாதலானும், வேட்டம் வாய்ப்பின் எமர் உடனே வருவராதலால் அவர் அறியின் ஏதம் நிகழும் ஆகலானும், மாலை புன்கணுடையதாதலால் நீ தங்காவிடின் தலைவி ஆற்றகிலாளெனக் குறிப்பாற் கூறுதலானும் மணஞ்செய்துகொள்கவெனக் களவுமறுத்து வரைவுகடாயதறிக. மெய்ப்பாடும் பயனும் அவை. (உகஙு)

## உகசு. மதுரை மருதனிள நாகனார்

**மருதம்:** இது, தலைமகட்குப் பாங்காயினார்கேட்பத் தலைமகன் தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை பாணற்காயினும் விறலிக்காயினும் சொல்லுவாளாய் நெருங்கிச் சொல்லியது.

எ - து, தலைமகனாலே தலையளிசெய்யப்பட்ட காதற்பரத்தை அவனுக்கு அறிவுறுத்துமாற்றால் அத் தலைவிக்குப் பாங்காயுள்ளார்கேட்ப முற்கூறிய அவ்விருவரில் ஒருவரைநோக்கி இன்பநுகராவிடினும் அவரைக் காணுதல் இனிதேயாம்; அவரில்லாதவூர் இன்னாதாகுமெனை வருந்திக் கூறாநிற்பது.

துனிதீர் கூட்டமொடு துன்னா ராயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்
கண்ணுறு விழுமங் கைபோல் உதவி
நம்முறு துயரங் களையா ராயினும்
இன்னா தன்றே அவரில் ஊரே
எரிமருள் வேங்கைக் கடவுள் காக்குங்
குருகார் கழனியின் இதணத்து ஆங்கண்
ஏதி லாளன் கவலை கவற்ற
ஒருமுலை யறுத்த திருமா வுண்ணிக்
கேட்டோ ரனையா ராயினும்

வேட்டோ ரல்லது பிறரின் ஞரே.

**உரை :**—புலவிதணித்துக் கூடுகின்ற கலவியொடு பொருந்தி என் பால் எய்திலராயினும் பலகாலும் முன்பு அவர்மெய்யைநோக்கி மகிழ்ந்து ளேனுதலின், அங்ஙனமாகக் காணுந்தரத்தினரை நோக்கியிருந்தாலும் உயிரொடு வாழ்வ தினியதாகும்; அவ்வண்ணங் காணப்பெறேனுதலின் யான் இனி உயிர்வைத்திருப்பதில் யாதுபயன்? கண்ணில்விழுகின்ற நுண்ணிய துகளையும் கை விலக்குமாறுபோல நம்மையுற்ற துன்பத்தை நீக்காராயினும் அவரில்லாதவூர் இன்னுதாகும்; இன்னுதவூரில் யானிருந் தும் யாதுபயன்? ஆதலின் இன்னே துறந்தகலினும் அகலுவன்; குருகு கள் ஆரவாரிக்கும் வயற்கரையிலே கடவுளேறிய எரிபோன்ற பூவை யுடைய வேங்கைமரத்திற்கட்டிய கட்டுப்பரணருகிலே, அயலானொருவன் செய்ததனுலாய கவலை வுருத்துதலாலே ஒருகொங்கையை அறுத்த திருமா வுண்ணியைக் கேட்டவர்கள் அத்தன்மையராயினும் அவள்பால் அன்பு வைத்தவர்மாத்திரம் வருந்துவரே அன்றிப் பிறர்வருந்துபவரல்லர்; அவ்வாறே தலைவரைப் பிரிந்ததலைவி வருந்துவளாயினும் மிக்கவேட்கையை யுடைய யான் வருந்துந்துணை அவள் வருந்துபவளல்லள்; அங்ஙனமே பிறரும்வருந்துபவரல்லர்; எ - று.

கண் பரத்தையாகவும், விழுமம் அவள்கொண்ட காமமாகவும், கை தலைவனுகவும் உவமங்கொள்க. இது வினையுவமம். அவ்வாறேயென்பது முதற் குறிப்பெச்சமும் முன்னுள்ளயாவும் இசையெச்சமுமாகக் கொள்க. திருமாவுண்ணியென்பது கண்ணகிகதையைக்குறிக்கின்றதுபோலும்.



துன்னராயினுமென்ற உம்மையால் ஒருகால் துன்னினுந் துன்னுவ ரெனக்கொண்டு காண்புழி இனிதேயென்றாள். களையாராயினும் என்ற தற்கும் அங்ஙனமே ஒருகால் களையினுங்களைவரெனக்கொண்டு அத்தகை யார் இல்லாதவூர் இன்னுதென்றாள் எனலுமாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - தலைவி புலத்தல். (உ௬௬)

## உகள. கபிலர்

**குறிஞ்சி :** இது, தலைமகள் வாயில் மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்த தலைமகன் மீண்டுவந்து தலைவி புலந்திருப்பது அறிந்து அப்புலவியைத் தணிக்கவேண்டித் தோழியைவிடுப்ப அத்தோழியைத் தலைவிநோக்கி நம் மலைநாடன் மிக இனியனாயினும் புலவிநீக்கிக்கூடுதல் நல்ல இன்பத்தைத்தருதலால் யான் ஊடுகிற்பேன் காணென வெகுண்டு கூறுகிறபது.

இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண்டொறும் பொலியுங் கதழ்வாய்
வேழம்
இருங்கேழ் வயப்புலி வெரீஇ அயலது
கருங்கால் வேங்கை ஊறுபட மறலிப்
ரு. பெருஞ்சினந் தணியுங் குன்ற நாடன்
நனிபெரிது இனியன் ஆயினுந் துனிபடர்ந்து
ஊடல் உறுவேன் தோழி நீடு
புலம்புசேண் அகல நீங்கிப்
புலவி உணர்த்தல் வண்மை யானே.

**உரை** :—தோழீ! புகழ்மிகும்படி வாழ்கின்றவருடைய செல்வம் பொலிவடைதல்போலக் காணுந்தோறும் பொலிந்து தோன்றுகின்ற விரைந்த செலவினையுடைய களிற்றியானை தன்னெதிர்நிற்க இயலாது கரியநிறத்தை உடைய வலியபுலி வெருவியோடுதலாலே அயலிலுள்ளதாகிய கரிய அடியையுடைய வேங்கைமரம் சிதைவுபடுமாறு முறித்துத் தள்ளித் தனது பெரிய சினம் தணியாநிற்கும் மலைநாடனாகிய நம் காதலன் பலகாலும் நம்பால் நிகழ்த்தும் புணர்ச்சியாலும் பெருநயப்புமுதலியவற்றாலும் மிகப்பெரிதும் இனியனாயிருப்பினும் பிரிவினாலுண்டாகிய நீடிய வருத்தமெல்லாம் தூரத்தே அகன்றுபோகும்படி வந்துகூடி யான்கொண்ட புலவியைப் போக்குமாறு என்னைப் பணிந்துணர்த்தல்முதலாகிய வண்மையைச்செய்தலானே யான் வருத்தமேற்கொண்டேன்போல ஊடாநிற்பேன் காண்; எ - று.

கதழ்வு - விரைவு. வெரீஇ என்னுஞ் செய்தெனெச்சத்தை வெருவ என்னுஞ்செயவெனெச்சமாகத்திரித்து ஏதுப்பொருட்டாக்குக.

பிரிந்தகாலத்துத் தான் உற்ற வருத்தம் தலைவனும் படுவதைத் தான் நேரிற்பார்க்கவேண்டுங்கருத்தால் ஊடலுறுவேனென்றாள். அங்ஙனம் ஊடியவழி அவன்உணர்த்தல் இன்பநனிபயப்பதனை "இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல், வல்ல தவரளிக்கு மாறு." (குறள்-கங௨௧) என்றதனானும் அறிக.

## மூலமும் உரையும்

உ௭௬

**உள்ளுறை** :—களிற்றியானை தன்னிடத்துப் புலி யஞ்சியோடுதலாலே தான்கொண்டசினத்தை அயலிலுள்ள வேங்கையைமோதித் தணியாநிற்கும் என்றது, தலைவிகொண்ட புலவிக்குத் தலைவன் அஞ்சியகலுதலாலே அவன்பாலுற்ற பரத்தைமையை இகழ்ந்துகூறி அச்சினந்தணியாநிற்கும் என்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயின்மறுத்தல். இது நிலத்தாற்குறிஞ்சி. (உகஎ)

## உகஅ. கிடங்கில் காவிதிகீரங்கண்ணனார்

**நெய்தல்:** இது, வரைவிடை
எதிர்மொழிந்தது.

மெலிந்ததலைமகள் வன்பொறை

எ - து, களவினின்று மணஞ்செய்துகொள்ளவேண்டிய தலைமகன் நீட்டித்தலால் வருத்தமுற்ற தலைவி, தன்னை வலிதிற்பொறுத்திருவென்ற தோழியைநோக்கி 'மாலையம்பொழுதும் வந்தது, அதன்மேல் இரவும் வந்திறுத்தது; அவர்கூறிய பருவங்கழிந்தது, கூகையுங்குழறும், அன்றி அன்றிலின்குரலையுங்கேட்குவன்கொலாம்' என்று அழிந்து கூறுகிறபது.

ஞாயிறு ஞான்று கதிர்மழுங் கின்றே
எல்லியும், பூவீ கொடியிற் புலம்படைந்
தன்றே
வாவலும் வயின்தோறும் பறக்குஞ் சேவலும்
நகைவாய்க் கோளீஇ நகுதோறும் விளிக்கும்
ரு. மாயாக் காதலொடு அதர்ப்படத்
தெளித்தோர்
கூறிய பருவங் கழிந்தன்று பாரிய
பராரை வேம்பின் படுசினை யிருந்த

குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்
ஆஅ நோயட வருந்தி யின்னுந்
தமியேன் கேட்குவென் கொல்லோ
பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே.

**உரை:**—ஆதித்தமண்டிலம் மேலைத்திசையிலிறங்கிக் கதிரும் மழுக்கம் அடைந்தது, இராப்பொழுதென்பதும் பூவுதிர்ந்தகொடிபோல ஞாயிற்றை இழந்து தனித்துப்பொலிவுகுன்றுகின்றது,இடங்கள்தோறும் வௌவாலும் பறந்து உலவாநிற்கும்,—ஆந்தையின் சேவலும் மகிழ்ச்சிமிகப்பெற்றுத் தான் நகைக்குந்தோறும் தன்பெடையை அழையாநிற்கும், இவையேயு மன்றித் தீராத ஆசையுடனே நெறிப்பட என்னைத் தேற்றியகாதலர் கூறிய பருவமும் மெல்லமெல்லச் செல்லாநின்றது, இடையிடையே நிழல்பரவிய பருத்த அடியையுடைய வேம்பின் பெரியகிளையிலிருந்த குராலாகிய கூகையும் இரவுமுழுதுங் குழறுநிற்கும், இத்தகைய இரவிலே தீராத காமநோய் துன்புறுத்தலாலே வருத்தமடைந்து இத்துணைநாளும் வருந்தியதன்றி இன்னும் தமியளாயிருந்து பருத்த அடியையுடைய பனைமடலிலே இருக்கும் அன்றிலின் குரலையுங் கேட்டுமாழ்குவேனோ? எவ்வண்ணம் இதனை ஆற்றி இருப்பேன்; எ - று.



ஞான்று - தொங்கி, கீழிறங்கி. எல்லி - இரவு. சேவல் - ஈண்டு இரவில்இயங்கும் ஆந்தையின்சேவல்; "எந்நில மருங்கின்" (தொ-பொ-கக) என்றபடி புள்மயங்கிற்று. குரால் - கோட்டான்; குராற்கூகை - இருபெயரொட்டு. பரிய அரை - பரிய என்ற குறிப்புப்பெயரெச்சத்தின் அகரம் தொக்கது. கேட்குவன்கொல்லோவென்றது துன்பத்துப்புலம்பல்.

மாலைப்பொழுதானது காமநோயை முற்படவிட்டு வருதலின் அது வருதற்கேதுவாகிய ஞாயிறு படுந்தன்மைகூறி வருந்தினள். தனித்துறை வாழ்க்கையின் இரவு பொலிவடையாமையின் எல்லியும் புலம்படைந்தது என்றாள். ஏனைப் புள்ளினம் புணர்ச்சிகருதிப் பெடையையழைப்பக் கேட்டலானே தனது ஆற்றாமை கூறுகின்றவள் அதனுள் இறந்துபடாமல் அன்றிற்குரலுங் கேட்குவேன்கொலென்றாள். **மெய்ப்பாடு-அழுகை. பயன்** - அயாவுயிர்த்தல். (உகஅ)

## உகக. தாயங்கண்ணனார்

**நெய்தல்:**

இது, வரைவிடைவைத்துப்பிரிய ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

எ - து, களவினின்று மணம்புரிந்துகொள்ளக்கருதிய தலைமகன் அது காரணமாகப் பொருளீட்டி வருமாறு பிரிதலும் ஆற்றாளாகிய தலைவி தோழியை நோக்கி என் உயிர்போவதாயினும் சேர்ப்பன் தானேவந்து புணர்ந்து தலையளிசெய்ததனாலே இன்னும் வந்துமுயங்குவனென்னுங் கருத்தோடு அவன்மீது சிறிதுஞ்சினங்கொள்ளேனெனத் தனக்குண்டாய வருத்தத்தை உள்ளடக்கிக்கொண்டு கூறுகிறபது.

கண்ணுந் தோளுந் தண்நறுங் கதுப்பும்
பழநலம் இழந்து பசலை பாய
இன்னுயிர் பெரும்பிறி தாயினும்

என்னதூஉம்

புலவேன் வாழி தோழி சிறுகால்
அலவனொடு பெயரும் புலவுத்திரை
நளிகடற்
பெருமீன் கொள்ளுஞ் சிறுகுடிப் பரதவர்
கங்குல் மாட்டிய கனைகதிர் ஒண்சுடர்
முதிரா ஞாயிற்று எதிரொளி கடுக்குங்
கானலம் பெருந்துறைச் சேர்ப்பன்
தானே யானே புணர்ந்த மாறே.

உரை:—தோழீ! நீ நெடுங்காலம் வாழ்வாயாக; என்னுடைய கண்களும் தோள்களும் மெல்லிய நறியகூந்தலும் பழைய அழகுகெட்டுப் பசலைபாய இனிய என்னுயிர் இறந்துபடுவதாயினும் சிறியகாலையுடைய நெண்டுகளோடு பெயர்ந்தேகும் புலவுநாற்றத்தையுடைய அலைகள்நெருங்கிய கடலின் கண்ணேசென்று பெரிய மீனைப்பிடிக்குஞ் சிறுகுடியின்கணுள்ள பரதமாக்கள் மரக்கலங்களுக்குத் தெரியுமாறு இரவிலிடப்பட்ட நெருங்கிய கதிர்களையுடைய ஒள்ளியவிளக்கம் முதிராத இளஞாயிற்றின் எதிரேதோன்றிய ஒளிக்கு ஒப்பாகும் கழிக்கரைச்சோலையையும் பெரிய கடலின் துறையையும் உடைய நம் காதலன் தமியனாய்வந்து யான் மகிழுமாறு முன்புபுணர்ந்து

தலையளிசெய்ததனால் இனியும் அங்ஙனம் வருவானென்னுங் கருத்தோடு சிறிதும் அவன்மீது புலப்பேனல்லேன் காண் ; எ - று.

பெரும்பிறிது - சாக்காடு. கனைகதிர் - நெருங்கியகதிர். நளி - செறிவு. தானே யானே என்பவற்றின் ஏகாரம் பிரிநிலை. எதிரொளி - பிரதிவிம்பம்.

இழந்து பாய உயிர் பெரும்பிறிதாயினும் என்றது பழநலனிழந்து பசலைபாய்தலினாலே உயிர்போகுந் தன்மையேனென்றுளென்பது. இறக்குந்தன்மையேன் புலந்தாவதென்னை யென்பாள் புலவேனென்றாள். தமிவந்து புணர்ந்துபோயதனால் இன்னும் வருவான் கொல்லோவென்று ஐயுற்று உயிர்வைத்திருக்கின்றேனென்றாள். பழநலமிழந்து பசலைபாய வென்றது, பசலைபாய்தல். உயிர் பெரும்பிறிதாயினுமென்றது, கலக்கம்.

**இறைச்சி**:—பரதவர் கங்குல்மாட்டிய விளக்கு இளங்கதிரின் ஒளி போல விளங்குமென்றது, தலைவன் என்னைக்கலந்து 'நின்னிற்பிரியேன்' என்று சொல்லிவிடுத்தவாய்மை என்னெஞ்சின் இலங்கா நின்றதென்றாள் என்பதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (உகக)

## உஉ0. குண்டுகட்பாலியாதனார்

**துறை**: (க) இது, குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது.

எ - து, தலைமகன் அடைந்த குறையைத்தீர்க்குமாறு உடன்பட்ட தோழி தலைமகளிடஞ்சென்று, அத்தலைவி தன்முகம் நோக்கி மகிழ்ந்து வினவுதல் நிமித்தமாக உரையாடுகின்றவள், ஒருதலைவன் ஊர்கின்ற மடல் மாவையீர்த்து நம்முடைய மறுகின்கண்வரும் மாக்களாகிய மயக்கமுற்ற இவர்கள் உலகவியல்பறிந்திருப்பின் 'இத்தோழியர் தலைவிக்கு வேறுவார்' என்று எம்முடன் சொல்லாடப்படுதல் எவ்வண்ணமாகுமென்று சூழ்ந்து கூறுநிற்பது.

„ „ (௨) பின்னின்றதலைமகன் தோழிகேட்பத் தலைமகளை ஓம்படுத்ததூஉமாம்.

எ - து, தன்குறையைத் தோழிபாலுரைத்த தலைமகன் மீட்டும் தான் கூறுவதனை அவள்கேட்டு விரைந்து குறைமுடிக்குமாற்றானே யான் ஊர்கின்றபனைமாவையீர்த்து மறுகின்வருமாக்களாகிய மயக்கமுடைய இவர்கள் உலகவியலறிந்திருப்பின் 'இத்தோழியர் தலைவிக்கு வேறாத லுடையார்' என்று எம்முடன் சொல்லுதல் எவ்வண்ணமாகுமென்று கூறியதுமாகும்.

„ „ (௩) தான் ஆற்றாளாய்ச் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை (உரை

எல்லாவற்றிற்குமொக்கும்.)

சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇக்
குறுமுகிழ் எருக்கங் கண்ணி சூடி
உண்ணா நன்மாப் பண்ணி எம்முடன்
மறுகுடன் திரிதருஞ் சிறுகுறு மாக்கள்
பெரிதுஞ் சான்றோர் மன்ற விசிபிணி

## ௨௫௨ நற்றிணை நானூறு

முழவுக்கண் புலரா விழவுடை ஆங்கண்
ஊரேம் என்னுமிப் பேரேம் உறுநர்

தாமே ஒப்புரவு அறியின் தேமொழிக்
கயலேர் உண்கட் குறுமகட்கு
கo. அயலோர் ஆகலென்று எம்மொடு
படலே.

உரை :—நல்ல பனைமடலால் உணவுண்ணாத ஒரு குதிரையைச்செய்து அதற்குச் சிறியமணிகளைக் கட்டிப் பெரிய கச்சையைப்பூட்டிக் குறிய எருக்கம் பூமாலையைச்சூடி ஒருதோன்றல் அதிலேறியிருப்ப அக்குதிரையை ஈர்த்துக்கொண்டு யாம்வருகிறதெருவில் எம்பின்னேவந்து திரிகின்ற சிறிய குறிய பிள்ளைகளாகிய,-நன்றாக இறுகக்கட்டிய குடமுழாவின்கண் ஓயாதுமுழங்குகின்ற திருவிழாவையுடைய அந்தவூரினேமென்று கூறும் இப்பெரிய மயக்கமுடையவர்கள்தாம், உலகநடையறிந்திருப்பாரே ஆயின் எம்மைச்சுட்டித் 'தேன்போலும் மொழியையும் கயல்போன்ற மையுண்டகண்ணையுமுடைய நம் இளமடந்தைக்கு இத்தோழிமார் அயலாந் தன்மையுடையர்,' என்று எம்முடன்சொல்லாடல் எவ்வளவு வியப்புடையது? இங்ஙனங் கூறுதலால் இவர் பெரிதுஞ் சால்புடையர்போலும்? எ - று.

தொடர்தல் - தொங்கக்கட்டுதல். கச்சு - முதுகிலிட்டகலனை நழுவாதபடி குதிரையின் பின்னே மாட்டிக்கட்டும் வார். இவையிரண்டும் குதிரையின்புனைவு. எருக்கங்கண்ணி - தலைமகன் சூடுவது.

தலைமகன் மடலூர்தலை ஊராரறியின் நின்னை அலர்தூற்றுவராதலின் அதன்முன் நீ உடன்படவேண்டுமென்பதை யறிவுறுத்துவாளாய் அவன் மடலூர்கின்றமைகூறினாள். மக்களை நீவிர்யாவரென்றதற்குத் தக்கவிடை கூறாது அந்தவூரினேமென்றமையின் மயக்கமுற்றவரென்றாள். யான் நினக்குரியள் ஆதலையறியாராய்க் குறுமகட்கயலோரென்றதனால் பெரிதுஞ் சான்றோரென் றிகழ்ந்துகூறினாள். இவையனைத்துந் தன்முகமாகத் தலைவி நோக்கி வினவுமாற்றாற்கூறியது. புகுதல் - தலைவிநோக்கிய நோக்கெதிர் தான் சென்றுபுகுதல். முகமென்பது அங்ஙனம் தான்புகுதற் கிடமாகிய நோக்கு. **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய இளிவரல். **பயன்** - தலைமகளைமுகம்புகுவித்தல். (உ௨0)

முல்லை : இது, வினைமுற்றி மறுத்தராநின்ற தலைமகன் பாகற்குச் சொல்லியது.

எ - து, சென்றுவினைமுடித்து மீளுந்தலைமகன் தேர்ப்பாகனைநோக்கிப் பாகனே! நம் காதலி தன்புதல்வன் துயிலுமிடம்புகுந்து 'எந்தாய் வருக' என்னுஞ்சொல்லை யாம் கேட்டு மகிழுமாறு நின்தேர் விரைவிலே செல்லுவதாகவென்று மகிழ்ந்து கூறுநிற்பது.

மணிகண் டன்ன மாநிறக் கருவிளை
ஒண்பூந் தோன்றியொடு தண்புதல் அணியப்
பொன்தொடர்ந் தன்ன தகைய நன்மலர்க்

மூலமும் உரையும்

உ௫௩

௫.

கொன்றை ஒள்ளிணர் கோடுதோறும் தூங்க
வம்புவிரித் தன்ன செம்புலப் புறவின்
நீரணிப் பெருவழி நீளிடைப் போழச்
செல்க பாகநின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉம் பெருந்தோள்
குறுமகள்
மின்னொளிர் அவிரிழை நன்னகர் விளங்க
நடைநாள் செய்த நவிலாச் சீறடிப்
பூங்கண் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
வந்தீக எந்தை என்னும்
அந்தீம் கிளவி கேட்க நாமே.

**உரை** :—பாகனே! வரும்விருந்தை எதிரேற்க விருப்பங்கொண்ட பெரிய தோளையுடைய இளமையுற்ற நம் காதலி மின்னல்போல ஒளிவிடுதலையுடைய விளங்கிய அணிகலங்களால் எமது நல்ல மாளிகையெங்கும் விளங்காநிற்ப நாட்காலையில் நடத்தலைப்பயின்றறியாத சிறிய அடிகளையும் பூப்போன்ற கண்ணையுமுடைய புதல்வன் தூங்குமிடத்திலே சென்று உடம்பிலுள்ள துவட்சியோடு அப்புதல்வனை நெருங்கிநோக்கி '.எந்தாய் வருக' என்று அழைக்கின்ற அழகிய இனிய வார்த்தையை நாம் கேட்டு மகிழும்படி நீலமணியாற் செய்துவைத்தாற்போன்ற கரியநிறத்தை உடைய கருங்காக்கணங்கொடி ஒள்ளியகாந்தளுடனே தண்ணியபுதல் தோறும் மலர்ந்து அழகுசெய்யப்பொற்காசினைத் தொங்கவிட்டாற்போன்ற அழகையுடைய நல்ல மலரையுடைய சரக்கொன்றையின் ஒள்ளிய பூங்கொத்துக்கள் அதன்கிளைகள்தோறுந் தூங்காநிற்ப இவற்றால் நறுநாற்றத்தைப் பரப்பினாற்போன்ற சிவந்தமுல்லைநிலத்தில் நீர் அமையப்பெற்ற பெரியவழியின் நீண்ட இடமெங்கும் சுவடுபிளப்ப இயங்குந் தொழிலையுடைய நினது நெடியதேர் விரைவிலே செல்லுவதாக; எ - று.

கருவிளை - கருங்காக்கணம். தோன்றி - செங்காந்தள். வம்பு - நறுமணம். நவிலுதல் - பயிலுதல். இழையையுடைய புதல்வனென்க. வந்தீக - வருகவென்னும் வினைச்சொல்லின் திரிபு. "போர்யானை வந்தீக ஈங்கு" என்றார் (அகூ) கலியினும்.

காதலி தன்னுள்ளமகிழ்ச்சியால் புதல்வனை எழுப்புவது முதலிற் கூறினான். காதலியும் புதல்வனும் தன்னைக்கண்டவழி கழியுவகைமீதூர்தலானும் அவருவகையைக் கண்டவுடன் தான் வழிவரும்வருத்தம் நீங்கப்பெறுதலுண்மையானும் அவள் புதல்வனையெழுப்புங்கிளவியைத் தான் கேட்டு மகிழுமாறு விரைந்து தேர்செல்வதாகவென்றான். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - பாகன்விரைந்துதேர்கடாவல். (உஉக)

## உஉஉ. கபிலர்

### குறிஞ்சி :

இது, தோழி தலைமகன் வரவுணர்ந்து சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, தலைமகன் களவொழுக்கமேற்கொண்டு ஒழுகுபவன் ஒருநாள் பைய ஒருபுறமாகவருதலையறிந்ததோழி உள்ளுறையால் தலைவியை



இல்விடத்துச்செறித்ததையும் குறிப்பால் அவன் இன்றியமையாமையையும் அறியப்படுத்தி வரைவுகடாவுவாளாய்த் தலைவியை நோக்கித் தோழீ! நீ அவருடைய குன்றத்தையேனுங்கண்டு மகிழும்படி வேங்கையிலே கட்டிய கயிற்று ஊசலிலே நின்னைவைத்து வீசியாட்டவோ ஒன்றுகூறு யென அழுங்கிக்கூறாநிற்பது.

கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை
வடக்கோளப் பிணித்த விடுமுரி முரற்சிக்

கைபுனை சிறுநெறி வாங்கிப் பையென
விசும்பாடு ஆய்மயில் கடுப்பயான் இன்று
பசுங்கா ழல்குல் பற்றுவன் ஊக்கிச்
செலவுடன் விடுகோ தோழி பலவுடன்
வாழை ஓங்கிய வழையமை சிலம்பில்
துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபடக் காணது
பெருங்களிறு பிளிறுஞ் சோலையவர்
சேணெடுங் குன்றங் காணிய நீயே.

**உரை** :—தோழீ ! பலவாகிய மலைவாழையும் உயர்ந்த சுரபுன்னைகளும் பொருந்திய மலையின்கண்ணே துயிலுகின்ற பிடியானையின் பக்கத்தில் மேகம் மறைத்தலால் அப்பிடியைக் காணப்பெறாது பெரியகளிற்றியானை பிளிறுகிற்கும் சோலையையுடைய அவரது உயர்ந்த நெடியமலையை நீ பார்த்தேனும் நினது கவலைதணியும்படியாக,—கரிய அடியையுடைய வேங்கையின் சிவந்தமலர்களையுடைய வளைந்தகிளையிலே தழும்புபடக் கட்டிய வளையவிட்ட கயிற்றினலாகிய கைவன்மையாலே செய்த சிறிய முடக்கத்தை உடைய ஊசலை யிழுத்து மெல்ல நின்னை யேற்றிவைத்து யான் இப்பொழுது நின்னுடைய அல்குலின்மேலேகிடந்த பசியபொன்னு லாகிய வடத்தைப்பற்றி ஆகாயத்திலேபறக்கின்ற அழகிய மயிலேபோல நின்னை ஆட்டி நீளச்சென்றுமீளும்படி விடுவேனே ? ஒன்று கூறிக்காண் ; எ - று.

முரி - முரிவு ; ஒடிவு. முரற்சி - கயிறு. நெறி - நெறிப்பு ; புரியின்

முடகம.

மனைவயிற்காவற்படுத்தியதனாலே தலைவனை முயங்கவும் காணவும் இயையாமையால் அவன் குன்றத்தைநோக்கியேனுஞ் சிறிது ஆறுதல் கொள்ளுமாறு மனைமுன்றிலின்கணுள்ள வேங்கையிலே தொடுத்த ஊசலில்வைத்து நின்னையாட்டுகோவென்ருள்; வீசியாட்டும்பொழுது உயரப்போகுங்காலத்து அவன் குன்றங்காணப்படுமாதலால், இஃது இல்வயிற்செறித்ததும் அவன் இன்றியமையாமையுங் கூறியதாயிற்று. இனிக் களவுநிகழ்தற்கின்மையானும், பிரிவாலே தலைவி இறந்துபடுமாகலானும் கேட்டதலைவன் வரைந்து எய்துவதன்றி வேறு செய்யக்கிடந்ததின்மையின் வரைவுகடாவாயிற்று.

**உள்ளுறை** :—பிடியை மேகம்மறைத்தலாலே அதனைக்காணுது களிறு பிளிறுமென்றது, தலைமகளை இற்செறித்தலானே தலைமகன் குறியிடம் புகுந்து அவளைக்காணுது வருந்தாநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம், **பயன்** - வரைவுகடாதல். (உஉஉ)

மூலமும் உரையும்

உ௫௫

## உஉ௩. உலோச்சனர்

**நெய்தல்** :

இது, பகற்குறிவந்து மீள்வானைத் தோழி இரவுக்குறி நேர்வாள்போன்று அதுவுமறுத்து வரைவுகடாயது.

எ – து, அங்ஙனம் வந்துமீளுந் தலைமகனைத் தோழி இவள் நின்பால் அன்புடையளாதலிற் பகலும் வருகின்றனை, இங்கு நீவந்துபோவதனை எங்கள் ஐயன்மார் அறியின் இல்வயிற் செறிப்பராதலின், இரவின்வருவாயாக என்றுகூறினவள் அவ்வண்ணம் நீ இரவில்வருதற்கும் இவ்வூர் துறையின்கண்ணே இரவிலுந் துயிலாத அம்பற்பெண்டிரையுடையதாயிராநின்றதென அதனையுமறுத்து வரைவுதோன்றக் கூறுநிற்பது.

இவள்தன், காமம் பெருமையிற் காலையென் ஞள்நின்
அன்புபெரி துடைமையின் அளித்தல்
வேண்டிப்
பகலும் வருதி பல்பூங் கானல்
இந்நீ ராகலோ இனிதால் எனின்இவள்
௫. அலரின் அருங்கடிப் படுகுவள் அதனால்
எல்லி வம்மோ மெல்லம் புலம்ப
சுறவினங் கலித்த நிறையிரும் பரப்பில்
துறையினுந் துஞ்சாக் கண்ணர்
பெண்டிரும் உடைத்திவ் அம்பல் ஊரே.

**உரை :**—மெல்லிய நெய்தல் நிலத்தலைவனே! இவள் தன்னுடைய காம

மிகுதியாலே இது காலைப்பொழுதாமே என்று கருதாளாகி நின்னாலே செய்யப்படும் அன்பைப் பெரிதும் பாராட்டுதலுடைமையால், இவளைத் தலையளிசெய்யவேண்டி நீ பகற்பொழுதின்கண்ணும் பலவாய மலர்களை யுடைய கழியருகிலுள்ள சோலையில் அன்றுகொண்ட குறிவயின் வாரா நின்றனை ; இங்ஙனம் நீயிரிருவீரும் களவினொழுகுதல் இனிதேயா மென்றாலோ ஊரார் கூறும் பழிமொழியே காரணமாக இவள் மீள்வதற் கரிய சிறையின்கண்ணே படுத்தப்படாநிற்பள்காண் ; ஆதலின் இனி நீ இராப்பொழுதையில் இங்குவருகுவாயாக ; (என்றலும் அவன் இரவினும் வருவானேயன்றி வரைந்தெய்துபவன் அல்லனெனக்கொண்டு மீட்டும் சேர்ப்பனே,) நீ அங்ஙனம் இரவின்வருவையாயினும் பழிச்சொல்லை மேலேறட்டுக் கூறுநிற்கும் இவ் ஊர் சுறுமீனினம் மிக்க நிறைந்த கடற் பரப்பிலுள்ள துறையிடத்தும் துயிலாத கண்ணினராகிய கொடியமாதரை யும் உடையதாயிராநின்றது ; ஆதலின் இரவின்வருதலினும் இடும்பை எய்தும் போலும் ? எ - று.

கடி - காவல். கலித்தல் - மிகுதல். வருதியென்றது வந்துமீள்வானை நோக்கிக்கூறியது. நிகழ்காலவினைமுற்று.

இரவுக்குறிநேர்வாள்போன்று எல்லிவம்மோவென்றாள். இரவுவரின் அவர்கண்டு பூசலிட்டுத் தலைமகளை இல்வயிற்செறிப்பரென அறிவுறுத்த வேண்டி இவ்வூர் துறையிலே துஞ்சாக்கண்ணராகிய பெண்டிரையுடை யது என்றாள். இஃது, அழிவில்கூட்டத் தவன்புணர்வுமறுத்தல்.



**இறைச்சி:** சுறுமீனிருக்குங் கடலினது துறையிலே துஞ்சாத கண்ணையுடையரான மாதரை இவ்வூருடையதென்றது, தலைவியிருக்கின்ற மனையின்கண்ணே துஞ்சாத கண்ணளாகிய அன்னையை யாம் உடையே மாய் இராநின்றேமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (உஉ௩)

# உ௨௪. பாலைபாடிய பெருங்கடுங்கோ

**பாலை :** *இது, தோழியாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் பெயர்த்துஞ் சொற்கடாவப்பட்டு அறிவிலாதேம் என்னை சொல்லியும் பிரியாராகாரோ என்று சொல்லியது.*

*எ - து, தலைவன் பிரிந்ததனைத் தோழி தலைவிக்குத் தெரியக்கூறி மீட்டும் வினவக்கேட்டு வருந்தி அன்பின்மிக்க பெரியராய் நின்னைநீங்கிலேம் என்று தேற்றிச் சுரத்தின்கண்ணே சென்ற நங்காதலர்திறத்து யான் இனி மொழிவதுயாதென நொந்து கூறுகிற்பது.*

அன்பினர் மன்னும் பெரியர் அதன்றலைப்
பின்பனி அமையம் வருமென முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவுஅரும்
பினவே
புணர்ந்தீர் புணர்மி னோவென
இணர்மிசைச்
செங்கண் இருங்குயில் எதிர்குரல்
பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன்று நம்வயின்
பிரியல மென்று தெளித்தோர் தேஎத்து
இனியெவன் மொழிகோ யானே
கயனறக்
கண்ணழிந்து உலறிய பன்மா நெடுநெறி
வினைமூசு கவலை விலங்கிய

வெம்முனை அருஞ்சுரம் முன்னி
யோர்க்கே.

**உரை** :—நம்காதலர் நம்பால் அன்புடையவர், மிகப் பெரியவர்; அவர் அப்படியிருப்ப அதன்மேலும் காலமோ பின்பனிக்காலம்வருமென்று முன்பனியின்கொழுந்தை முற்படவிட்டு அறிவுறுத்திய அதற்கு அடையாளமாகக் குராமரம் அரும்புகட்டின; மாவின்பூங்கொத்துமீதிருந்து சிவந்த கண்களையுடைய கரியகுயிலின்சேவலும் பேடையும் எதிரெதிரிருந்து 'ஓ, தலைவனும் தலைவியுமாயமைந்து புணர்ந்துடையிர், பிரியாதீர்; இன்னும் பலபடியும் புணருங்கோள்' என்று தம் இனியகுரலாலெடுத்து இசைக்காநின்ற இன்பமுடைய வேனிற்பருவம் வந்திறுத்ததாதலின், இனி நாம் நம்மிற்பிரியகில்லோம்' என்று என்னைத் தெளிவித்தனர்; அங்ஙனம் தெளிவித்தவராய்ப் பின்பு,—குளங்களில் நீர்வற்றத் தடையறச் செவ்வி அழிந்து காய்ந்த பலபெரிய நெடிய நெறியையுடைய மறத்தொழில் நெருங்கிய கவர்த்தவழிகள் குறுக்கிட்ட கொடிய முனையையுடைய செல்லுதற்கரிய சுரத்தின்கண்ணே சென்றனர், அவ்வாறு சென்றவர் நிமித்தமாக அவர்பால் இனியான் யாது சொல்லமாட்டுவேன்? எ - று.



கயன் - குளம். உலறுதல் - காய்தல். வினை - போர்வினை. விலங்குதல் - குறுக்கிடுதல். பின்பனியென்பதுமுதல் பிரியலமென்றதன்காறும் தலைவன் கூற்றைக்கொண்டு கூறியது.

பருவவியல்பு அறியாதார் பிரியக்கருதினால் அவரைத் தெளித்தலுமாம். அங்ஙனமின்றித் தாம் அறிந்துவைத்துப் பிரிபவர்க்கு யான் யாதுகூற வல்லேனென்றழிந்துகூறினாள். பிரியலமென்று கூறிப்பிரிந்ததனால் நம்பால் அன்புடையவரென அசதியாடிக்கூறினாள். மன்னும் பெரியரென்றதும் அது. உலறியகொடியநெறியிலே செல்லுகின்றனரென்றது, அத்தகைய நெறியிலே செல்லுபவர் நெஞ்சமும் பசையற்றகொடுமையுடையதாதலின் அவர்திறத்து யாதுசொல்லமாட்டுவேன் என்றதூஉமாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உஉச)

## உஉரு. கபிலர்

### குறிஞ்சி : (க) இது, வன்புறை எதிரழிந்தது.

எ - து, தலைமகன் பிரிதலானே வருந்திய தலைமகளைத் தோழி, 'நீவருந்தாதேகொள்; அவர் இப்பொழுதே வருவர்' என்று வலியுறுத்திக்கூறப் பின்னும் ஆற்றாளாய்த்தோழியைநோக்கித் தோழீ! நாடனதுமார்பை நாம் போய் இரந்தோமோ? இல்லையே; அவன்தானேவந்து தலையளிசெய்து, இப்பொழுது துன்புறுத்துகின்றானேயென்று எதிரழிந்து கூறாநிற்பது.

### (உ)

பரத்தை தலைமகட்குப் பாங்காயினார்கேட்பச் சொல்லியதூஉமாம்.

எ - து, காதற்பரத்தை தலைமகளுக்குரிய தோழிமுதலாயினார்கேட்கும்படியாக நாடனது மார்பை யாரேனும் இரந்தோருண்டோ? அவனே நமதுநலனைத் துய்க்கவந்தவிடத்துத் தலைமகள் வருந்துவதனால் யாதுபயன் உண்டெனச் செருக்கிக் கூறாநிற்பதுமாகும்.

முருகுறழ் முன்பொடு கடுஞ்சினஞ் செருக்கிப்
பொருத யானை வெண்கோடு கடுப்ப

வாழை ஈன்ற வையேந்து கொழுமுகை
மெல்லியல் மகளிர் ஓதி அன்ன
ரு. பூவொடு துயல்வரும் மால்வரை நாடனை
இரந்தோர் உளர்கொல் தோழி
திருந்திழைத்
தொய்யில் வனமுலை வரிவனப்பு
இழப்பப்
பசந்தெழு பருவரல் தீர
நயந்தோர்க் குதவா நாரின் மார்பே.

உரை:—தோழீ! திருத்தமாகச்செய்த கலனணிந்த தொய்யிற்குழம்பால் எழுதப்பட்ட வனமுலையின்கணுள்ள இரேகையினழகுகெடும்படி பசந்து தோன்றிய துன்பந்தீருமாறு,—முருகவேளையொத்த வலியொடு கடுஞ்சின மிகுத்துப் போர்செய்த யானையின் குருதிபடிந்த வெள்ளிய தந்தம்போல வாழை அப்பொழுது ஈன்ற தாற்றின் கூர்மைபொருந்திய கொழுத்தமுகை மெல்லியசாயலையுடைய மகளிரது கூந்தலைமுடித்துப்போட்டாற்போன்ற





அதன்பூவோடு அசையாநிற்கும் பெரியமலைநாடன்பாற்சென்று விரும்பின எமக்குஉதவாத அன்பற்ற அவனதுமார்பை நம்மில் இரந்துகேட்டவருளரோ? அவனேவந்து தலையளிசெய்து இப்பொழுது கைவிட்டொழிந்தனன கணடாய; எ - று.

வை - கூர்மை. தொய்யில் - கரும்புவடிவாக முலையில் எழுதுங் கோலமுமாம். நார் - அன்பு. நயந்தோர் - இடவழுவமைதி. அவனே வந்து என்பதுமுதற் குறிப்பெச்சம். வெண்கோடு - தூறுவிடுதலுக்கும், ஓதி - பூவுக்கும் உவமையாக்குக. நாடனது மார்பையென இயைக்க.

இங்ஙனம் வருந்துமாறு கைவிட்டமையின் நயந்த எமக்கு உதவாத நாரில்மார்பென்றாள். இரவாதுதானேவந்து புணர்ந்தகன்றமையின் தன்னுறுபுன்கணேம்புவதல்லது பிறருறுவிழுமங்களையாத தன்மையனாயினனே என்றிரங்கியதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

(உ) உரை:—மலைநாடன்பாற்சென்று விரும்பினார்க்குதவாத அவனது மார்பை இங்கு இரங்தோருளரோ? யாருமிரந்தாரிலர்; அவன் பற்பலர் மாட்டுந் துய்க்கச்செல்லுதல்போல, என்மாட்டும் வந்தானாக அதுகொண்டு தலைமகள் வருந்துவதால் யாதுபயன்? எ - று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - காதற்பரத்தை தலைமகளை இகழ்ந்து கூறல். (உ௨௫)

## உ௨௬. கணிபுன்குன்றனார்

பாலை: இது, பிரிவிடைமெலிந்ததலைமகள் மொழிந்தது.

வன்பொறை எதிர்

எ - து, தலைவன் பொருள்கொணருமாறு பிரிதலானே வருந்திய தலைமகளை நெருங்கி நீ வருந்தாதேகொள் வலிதிற்பொறையோடிருவென்ற தோழிக்கு அவள் நம்காதலர் அன்புசெய்திருந்தமையால் நாம் உயிருய்ந்திருந்தேம்; அதனையறியாராய் அவர் அரும்பொருள்விரும்பி அகன்று போயினர்; ஆடவர்செய்கை இதுவேயென்பர் சான்றோர்; இதனை யாவரும் அறிவர்காணென வருந்தி எதிர்மொழி கூறுநிற்பது.

மரஞ்சாம் மருந்துங் கொள்ளார் மாந்தர்

உரஞ்சாச் செய்யார் உயர்தவம்
வளங்கெடப்
பொன்னுங் கொள்ளார் மன்னர்
நன்னுதல்
நாந்தம் உண்மையின் உளமே
அதனல்
ரு. தாஞ்செய் பொருளளவு அறியார்
தாங்கசிந்து
என்றாழ் நிறப்ப நீளிடை ஒழியச்
சென்றோர் மன்றநங் காதலர் என்றும்
இன்ன நிலைமைத் தென்ப
என்னோரும் அறிபஇவ் உலகத்
தானே.

உரை:—அழகிய நுதலையுடையாய்! இவ்வுலகத்து மாந்தர் மரம் பட்டுப்போகும்படி அதன்பாலுள்ள மருந்தைமுற்றுங் கொள்வாரல்லர்; மற்றும் தம் வலிமைமுற்றுங் கெடுமாறு உயர்ந்த தவத்தைச்செய்யார்;

அரசர் தம்முடையகுடிகளின் செல்வமெல்லாங் குறைபடுவண்ணம் அவரிடத்து வரிவாங்குபவரல்லர்; அவற்றையுணர்ந்துவைத்தும் தாம் வருத்தம்மேற்கொண்டு வெயில்நிலைகொள்ள நீண்டசுரத்துநெறி பின்னே ஒழிய எம்மைப்பிரிந்து சென்றவராகிய நம்காதலர் தாம் 'எம்மைப் பிரியாதுறைதலின் நாம் உயிரோடிராநின்றேம்; தாம் ஈட்டவிரும்பும் பொருள்காரணமாக எம்மைப் பிரிவராயின் அதனாலேவருவது எமது இறந்துபாடு' என்பதனைத் திண்ணமாக அவரறிந்தவரல்லர்; எக்காலத்தும் இதுவே ஆடவரியற்கையென்பர் சான்றோர்; இதனை யாவரும் அறிந் திருப்பர் கண்டாய்; எ - று.

பொருள்ஈட்டுவது இன்பநுகர்ச்சியின்பொருட்டன்றே, இன்ப நுகர்ச்சிக்கு இன்றியமையாத எமது உயிரழிவின்பின் ஈட்டும் பொருளி னால்வருவது ஒன்றுமில்லையென்பது எடுத்துக்காட்டிய உவமைகளினால் அறியப்படுவது. இது, துன்பத்துப்புலம்பல். மருந்து - மருந்துமரத்தில் உள்ள பட்டைமுதலியன. மாந்தரென்பதனைச் செய்யாரென்பதனோடுங் கூட்டுக. மரஞ்சாம் முதலாயமூன்றும் பிறிதுமொழிதலணி.

மற்றும், மருந்துகொள்ளும்மாந்தர் பின்னும் பயனைவேண்டியே அம் மரத்தைப் பாதுகாப்பர்; அங்ஙனமுமின்றி என் நலனை முழுவதூஉமுண்டு யான் இறந்துபடும்வண்ணம் என்னைக் கைவிட்டுத் துறந்தார் எத்தகையார் என்பேனென அக்காதலர்நிலைகூறிப் புலந்தாளுமாம். மாந்தர் உரங் கெடுமாறு தவமுஞ்செய்கின்றிலர்; யான் அவ்வண்ணமின்றி என்னுள்ளம் வருந்தியொழியும்படி தவத்தினும் அவரின்பம் பெரிதுமன்றவெனக் கொண்டு தலைமடியலாயினேனெனத் தன்நிலைகூறினாளுமாம். இங்ஙனங் கூறினவள் மீட்டும் காதலர் தன்னுயிருஞ் சேரக்கொண்டகன்றனராதலின் அவர் குடிஓம்பிக்கொள்ளாக் கொடுங்கோன்மன்னர்போலவும் தான் அவ் அரசனால்அலைப்புண்ட குடிபோலவுமென இருவர்நிலையுங் கூறினாளுமாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உஉசு)

## உஉஎ. தேவனார்

**நெய்தல் :**

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தோழி தலைமகனை வரைவுமுடுகச் சொல்லியது.

எ – து, மணஞ்செய்துகொள்ளாது களவுப்புணர்ச்சியே கருதிவந்து ஒழுகுந் தலைமகனைத் தோழி குறியிடத்துச்சென்று தொழுது முன்னின்று நின்றல் அருளிப்பாட்டொடுசெய்த தலையளிதான் பலராலும் அறியப் பட்டு அலராயிற்று, இனி இவள் இறந்துபட்டொழியினும் இப்பொழுது உண்டாகிய பழிச்சொல் நீங்குவதொன்றன்று, இன்னுமையுடையதுகாண் என வரைவுதோன்றக் கூறுகிறபது.

அறிந்தோர் அறனிலர் என்றலர் சிறந்த

இன்னுயிர் கழியினும் நனியின் னுதே
புன்னையங் கானல் புணர்குறி வாய்த்த
பின்ஈர் ஓதியென் தோழிக்கு அன்னே
ரு. படுமணி யானைப் பசும்பூண் சோழர்



கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட்டு
ஆங்கண்
கள்ளுடைத் தடவில் புள்ளொலித்து
ஓவாத்

தேர்வழங்கு தெருவின் அன்ன
கௌவையா கின்றது ஐயநின் அருளே.

உரை:—ஐயனே! புன்னையஞ்சோலையிடத்துப் புணர்தற்குப் பலகாலும் நீ குறித்த குறியின் வந்துநின்ற பின்னரிய குளிர்ந்த கூந்தலையுடைய என் தோழிக்கு ஐயோ! நீ செய்த தலையளிதான் ஒலிக்கின்ற மணியை உடைய யானையையும் பசிய பொன்னாலாகிய பூண்களையுமுடைய சோழரது கொடி நுடங்காநின்ற தெருக்களை யுடைய ஆர்க்காடென்னும்பதியிலே கள்ளையுடைய சாடியின்கண் வண்டுகள் ஒலித்து நீங்காத தேர்களியங்குந் தெருவையொத்த பெரிய பூசலுண்டாகாநின்றது; அப்பூசலாகிய பழிச் சொல்லும் எப்படிக் கூறப்படுகின்றதோ வெனில் 'அறிந்தோமென்று கூறிக்கொள்ளு மவரெல்லாம் அறநெறியிலே நிற்பவரேயல்லர்' என்று எவ்விடத்தும் பரந்தோங்கின்; அவ்வலர்தான் அவளது இனிய உயிர் இறந்துபட்ட பின்னும் இன்னுமையைத் தருகின்ற தன்மையுடையது காண்; எ - று.

அன்னோ - இரக்கச்சொல். தடவு - சாடி; பானையுமாம். படுதல் - ஒலித்தல். இஃது ஈரமில்கூற்றம் ஏற்றலர் நாணல். புள்—வண்டு.

அறிந்தோரெனப்படுவார் களவுநீதென்பதறியாரோ? அஃதறியா ராயின் அவர் எவ்வாறு அறனுடையவராவார்? ஆதலின் அவர் அறனிலரே என்று அலர்தோன்றியது உரைத்தாளென்பது. தலைமகள் தன் காதலர் அறனிலர் எனப் பிறர்கூறக்கேட்டலின் அது பொறாது, இறந்துபடுமெனவும், அலரேயன்றி அப்பழியும் நின்னைவந்து சூழுமென வுங்கூறி வரைவுடன்படுத்தினளாயிற்று. மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-வரைவுமுடுக்கல். இது, கருப்பொருளால் நெய்தல். (உ௨எ)

## உ௨அ. மூடத்திருமாறனார்

குறிஞ்சி :

இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவா ளாய்த் தலைமகன்கேட்பச் சொல்லியது.

எ - து, சிறைப்புறமாகவந்த தலைமகன்கேட்டு விரைவிலே மணம் புரிந்துகொள்ளும் ஆற்றானே, தோழி தலைமகளைநோக்கித் தோழீ! இனி மலைகிழவோன் நம்மைக்கூடித் தலையளிசெய்யானோ? மற்று அவன்தான் இங்கு வாராதிருப்பது என்னகாரணமென்று கருதப்படுமென அழிந்து கூறாநிற்பது.

என்னெனப் படுமோ தோழி மின்னுவசிபு
அதிர்குரல் எழிலி முதிர்கடன் தீரக்
கண்ணேர்பு விரிந்த கனையிருள் நடுநாள்
பண்பி லாரிடை வரூஉம் நந்திறத்து
அருளான் கொல்லோ தானே கானவன்
சிறுபுறங் கடுக்கும் பெருங்கை வேழம்



வெறிகொள் சாபத்து எறிகணை வெரீஇ
அழுந்துபட விடரகத்து இயம்பும்
எழுந்துவீழ் அருவிய மலைகிழ வோனே.

உரை :—தோழீ! கானகத்துவாழும் வேட்டுவனது முதுகுபோன்ற பெரிய துதிக்கையையுடைய களிற்றியானை அச்சங்கொண்ட வில்லின் கின்று எய்யுங்கணைக்கு அஞ்சி ஓசையானது மலைப்பிளப்பின் ஆழத்தே சென்று மோதுமாறு பிளிற்றுநிற்கும் குதித்துவிழுகின்ற அருவியை உடைய மலைக்குரிய நம் காதலன் மின்னலாலே இருளைப்பிளந்துகொண்டு முழங்குகின்ற குரலையுடைய மேகம் தான் சூல்முதிர்தலுடைமையால் அக்கடன்தீருமாறு கண்ணொளிமறையும்படி பரத்தலினாலே செறிந்த இருளையுடைய நடுயாமத்தில் இயல்பில்லாத அரியவழியில் வந்து எம்மாட்டு அருளுதல்செய்யானோ ? இப்பொழுது அவன்வந்து தலையளிசெய்யா திருத்தற்குக் காரணந்தான் என்னென்று சொல்லப்படுமோ? எ - று.

வெறி - அச்சம்; பல ஒன்றோடொன்று மயங்கிக்கிடந்தமையின் வெறிகொள்கணையெனவுமாம். வசிபு - பிளந்து; வசிதல் - பிளத்தல். கடன்தீர்த்தல் - தன் கடமையைச்செய்து தீர்த்தல். "யார்கடன் வைத்தாலும் மாரிகடன்வையாது" என்னும் பழமொழியை நோக்கியுமறிக. வரூஉ - வந்து என்னும் இறந்தகாலவினையெச்சத்திரிபு.

ஆற்றது ஏதத்துக்குக் கவலுகின்றாளாதலின் 'இனித்தாழ்க்காது யாம் வரைவொடு செல்லுதும்' எனக்கருதுவனென்க்கொண்டு என்னெனப் படுங்கொலென்றாள்.

உள்ளுறை :—யானை, வேட்டுவன் கணைக்கு வெருவி விடரகத்து முழங்குமென்றது தலைவி ஏதிலாட்டியர்கூறும் பழிச்சொல்லுக்கஞ்சி மனையகத்துப் புலம்பிவருந்தாநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுடன்படுத்தல். (உஉஅ)

## உஉகூ. ................

பாலை :

(க) இது, தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை ஆற்றுவித்துச் செல்ல உடன்பட்டது.

எ - து, தலைமகன் தான் வினைவயிற்பிரிதலைத் தோழிக்குரைப்ப அவள்சென்று தலைமகட்குணர்த்தி மீண்டுவந்து தலைமகனைத் தொழுது நீயிர் செல்லுகின்றீரென்றும் செல்லாதுறைகுவீரென்றும் கூற அஞ்சுவேன், ஆதலால் சென்று வினைமுடித்து விரைந்துவருவீராக; வாண்டவந்து நின்றதனைக் கண்டிரல்லீரோவென உடன்பட்டுக் கூறுநிற்பது.

(உ) செலவழுங்குவித்ததூஉமாம்.

எ - து, தலைவன் வினைவயிற்செல்லுதலை உடன்படாது முற்கூறிய படியே தடுத்துக்கூறியதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்.)

சேறும் சேறும் என்றலின் பலபுலந்து
செல்மின் என்றல் யானஞ் சுவலே
செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர்



நிறத்தெறி புன்சொலின் திறத்தஞ் சுவலே
அதனாற், செல்மின் சென்றுவினை
முடிமின் சென்றாங்கு
அவண்நீ டாதல் ஓம்புமின் யாமத்து
இழையணி ஆகம் வடுக்கொள முயங்கி
உழையீ ராகவும் பனிப்போள் தமியே
குழைவான் கண்ணிடத்து ஈண்டித்
தண்ணென

௪௦. வாடிய இளமழைப் பின்றை
வாடையுங் கண்டிரோ வந்துநின்

றதுவே.

உரை :—'நாம் வினைவயிற்செல்வோம், நாம் வினைவயிற் செல்வோம்' என்று நீர் பலகாலுங் கூறுதலாலே யான் பலவாகப்புலந்து கூறிச் 'செல்லு வீராக' என்று சொல்லுதற்கு அஞ்சாநிற்பேன்; 'நீர் செல்லாது இங்கே இருமின்' என்று சொன்னால் பலருங்கூறுநிற்கும் மார்பிலே தைக்கின்ற அம்புபோன்ற புல்லிய சொல்வினிமித்தமாக எங்கே பழிவந்துமூடுமோ என்று அதற்கும் நான் அஞ்சாநிற்பேன்; ஆதலால் நீர் செல்லுவீராக; சென்று வினைமுடிப்பீராக; அங்ஙனம் முடிக்கச்சென்ற அவ்விடத்து நெடுங்காலம் நிற்றலை ஒழியுமாற்றைப் பாதுகாத்துக்கொள்வீராக; இரவு நடுயாமத்துக் கலனணிந்த மார்பிலே தழும்புகொள்ளுமாறு முயங்கி நீயிர் அருகிருப்பீராயினும் இவள் நடுங்காநிற்பள் கண்டீர்; அத்தகையாள் இப்பொழுது தனியேயிருந்து வருந்துமாறு அகன்ற இடமெங்கும் பரவி நெருங்கித் தண்ணெனும்படி இயங்குகின்ற பெய்துவெளிதாகிய மேகத்தின் பின்னர் வந்துநின்ற வாடைக்காற்றையுங் கண்டீரன்றே? ஆதலின் ஆராய்ந்து ஏற்றது செய்ம்மின்; எ - று.

பல்லோர் நிறத்தெறிபுன்சொல் - அறப்புறங்காவல், நாடு காவலென்னும் இவற்றின்பொருட்டுச் செல்லாதிருப்பதாலாகிய கேட்டைக்குறித்துப் பலருங்கூறுங்கடுஞ்சொல்.

முயங்கி அணைத்திருந்தகாலத்தும் பனிப்பவள் நீயிர்பிரியின் வாடையால் நடுங்கி இறந்துபடுமென்பாள் சுட்டிக்காட்டி வாடையுங் கண்டீரோ என்றாள். **மெய்ப்பாடு** - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - செலவழுங்குவித்தல். (உஉக)

## உ௩௦. ஆலங்குடிவங்கனார்

**மருதம் :** இது, தோழி வாயில்மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகன் வாயில்வேண்டிச் சென்றானைத் தோழிநோக்கி ஊரனே! என்னைக் கைவிட்டுப் பரத்தைக்கே அருள்செய்வாயாக, நின்னைக் காணும்போழ்து இனிமையாயிருக்கின்ற அவ்வொன்றேயெனக்கு அமையுமெனவே மறுத்து வெகுண்டு கூறாநிற்பது.

முயப்பிடிச் செவியின் அன்ன பாசடைக்
கயக்கணக் கொக்கின் கூம்புமுகை
அன்ன
கணைக்கால் ஆம்பல் அமிழ்துநாறு
தண்போது
குணக்குத்தோன்று வெள்ளியின்



கயற்கணங் கலித்த பொய்கை ஊர
முனிவில் பரத்தையை என்துறந்து
அருளாய்
நனிபுலம்பு அலைத்த வேலை நீங்கப்
புதுவறங் கூர்ந்த செறுவில் தண்ணென
மலிபுனல் பரத்தந் தா அங்கு*
இனிதே தெய்யநின் காணுங் காலே.

உரை :—நெருங்கிய பிடியானையின் செவிபோன்ற பசிய இலையையும் குளத்தின்கணுள்ள அழகிய கொக்குப்போலக் கூம்பியமுகையையும் அவற்றிற்கொத்த திரண்ட தண்டினையுமுடைய ஆம்பலின் அமிழ்துநாறும் மெல்லியமலர் வைகறையிலே கீழைத்திசையின்கண்ணே தோன்றுகின்ற வெள்ளியைப்போல இருள்கெட மலராநிற்கும் கயல்மீன்கூட்டம் செருக்கிய பொய்கையையுடைய ஊரனே, என்னைக் கைவிட்டுச் சிறிதும் நின்பாற் சினங்கொள்ளாதிருக்கின்ற பரத்தையைத் தலையளிசெய்து ஆண்டுறைவாய் ஆக ; யான் நின்பால் வெகுட்சிகொண்டுடைமையால் நின்னொடு லெஞ்ஞான்றும் தலையளிசெயத் தக்கேன் அல்லேன் ; கோடையாலே மிகத் துன்பப்பட்ட காலை அக் கோடைவெப்பம் நீங்குமாறு புதுவதாக வற்றிக் காய்ந்து வெடிப்புமிக்க வயலிலே குளிர்ச்சியுற நிறைந்த புதுநீர்வெள்ளம் பரவினாற்போல, வந்த நின்னைக் காணும்பொழுதெல்லாம் இனிமையாகவேயிராநின்றது ; அக்காட்சியொன்றே போதும் ; ஆதலின் என் மனையின் கண்ணே வாராதேகொள் ; எ - று.

முயத்தல் - நெருங்கல் ; முயா என்னுங் குறியதனிறுதிச் சினைகெட்டு உகரம்பெறுதுநின்றது. கணை - திரட்சி. தெய்ய - அசைநிலை. இது தலைவியைத் தானாகக்கூறியது.

நயந்து தலைவனைப்பிணித்தலின் முனிவில்பரத்தையை யென்றாள். இஃது அவன்வயிற் பரத்தைமைபன்று. இங்கு வருதலுஞ்செய்யாய் என்றிருந்தேமுக்கு நீ வந்ததே முயக்கத்தினுங்காட்டிற் சிறந்ததாகக் கொண்டு மகிழுவேமென்னுங் கருத்தால் நின்னைக் காணுங்கால் இனிதே என்றாள். இது வாராதுசாழ்த்தனையென்று இகழ்ந்ததாயிற்று.

இறைச்சி :—ஆம்பலம்போது வெள்ளி போல மலர்ந்திருந்தாலும் வெள்ளியாகாதவாறுபோல, நீ தலைவிக்குச்செய்யுந் தலையளிபோலப் பரத்தைக்குச் செய்யினும் அவள் தலைவியாந்தன்மையளல்லள்காண் என்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின்மறுத்தல். (உ௱௰)

## உ௱௧. இளநாகனார்

நெய்தல் : இது, சிறைப்புறமாகத் தோழிசொல்லி வரைவுகடாயது.

எ - து, தலைவன் சிறைப்புறத்தானாகத்தலை யறிந்ததோழி அவன் இன்றி அமையாமையாலே, தாம் வருந்துவதனை அறிவுறுத்தி விரைந்து வரையு மாற்றானே தலைவியைநோக்கி நம் கொண்கன் செய்த காதல் நம்மைவிட்டு நீங்காமையாலே துறை நோக்குதற்கு வருத்தமாயிராநின்றதென வரைவு தோன்றக் கூறாநிற்பது.

---

(பாடம்) * பரத்தந் தாங்கு இனிது.



மையற விளங்கிய மணிநிற விசும்பின்
கைதொழு மரபின் எழுமீன் போலப்
பெருங்கடல் பரப்பின் இரும்புறந் தோயச்
சிறுவெண் காக்கை பலவுடன் ஆடுந்
துறைபுலம்பு உடைத்தே தோழி பண்டும்
உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னைக்
கானலங் கோண்கன் தந்த
காதல் நம்மோடு நீங்கா மாறே.

**உரை:**—தோழீ! இதன்முன்னும் மனையின்கண்ணேயுள்ள ஊர்க்குருவியின் முட்டையை யுடைத்தாற்போன்ற பெரிய அரும்புமலர்ந்த கரிய அடியையுடைய புன்னையஞ்சோலையையுடைய கொண்கன் கொடுத்த காதலானது, நம்மைவிட்டு நீங்காமையினாலே மாசறவிளங்கிய நீலமணி போன்ற நிறத்தையுடைய ஆகாயத்தின்கண்ணே தோன்றி உலகத்தாராலே கைதொழப்படுந் தகுதியையுடைய முனிவரின் தோற்றமாகிய எழுமீன் களைப்போலப் பெரியகடற்பரப்பின்கண்ணே கரியமுதுகு நனையும்படி சிறிய வெளிய நீர்க்காக்கை பலவும் ஒருசேர நீர்குடையாநிற்குங் கடல் துறையை யாம் தமியேமாய் நோக்குதற்கு அத்துறை நனி இன்னாமை உடையதாகக் காணுந்தன்மையதா யிராநின்றது; எ-று.

எழுமீன் - உத்தரதுருவத்தைச் சூழ்ந்துவரும் (எழுமுனிவர் எனட் படும்) எழுமீன்கள். பண்டுந்தந்த காதலென இயைக்க.

புன்னையங்கானலின் முன்பு முயங்கினமையின் அதனை நோக்கலும் கானலங்கொண்கன் தந்த காதலென இடத்தொடு புலம்பத்தொடங்கினாள். கொண்கனொடு ஆடற்கினியதுறையாதலின் அவனின்மையிற் புலம்ட உடைத்தென வருந்தினாளாயிற்று. மணஞ்செய்துகொண்டாலன்றி அவன் வெளிப்படையாகவந்து ஆடற்கியலாமையின், வரைவுகடாவுமாயிற்று.

**இறைச்சி:**—சிறுவெண்காக்கை தாம் ஆணும்பெண்ணும் பல ஒரு சேர ஆடுதலைநோக்கினகாலை யாமும் அங்ஙனம் ஆடற்கில்லையேயென வருந்தாநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவு கடாதல். (உகக)

## உகஉ. மூறுவெங்கண்ணனார்

**குறிஞ்சி:** இது, பகல்வருவானை இரவுவரவெனத் லியது.

தோழிசொல்

எ - து, பகற்குறிக்கண்வந்த தலைவனைத் தோழிசென்று வலங்கொண்டு எம்பெருமான் எமதுபாக்கத்து இரவுதங்கினையாகிச் செல்லுவையாயின் அதற்கடையாளமாக இப்பொழுது நின்மாலையைத் தருக என்றுவேண்டுவேமெனக் கூறுகின்றவள், உள்ளுறையால் அதனையும் மறுத்து வரைவு கடாவாநிற்பது.



சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம்
குளவித் தண்கயங் குழையத் தீண்டிச்
சோலை வாழை முணைஇ அயலது
வேரல் வேலிச் சிறுகுடி அலறச்
செங்கால் பலவின் தீம்பழ மிசையும்
மாமலை நாட தாமம் நல்கென
வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை
வீயுக விரிந்த முன்றில்
கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே.

உரை :—சிறிய கண்ணையும் பெரிய கையையுமுடைய யானையின் களிறும் பிடியுமாகிய இரண்டினம், மலைப்பச்சையைச் சுற்றிலுமுடைய நீர்ச்சுனையிலே மெய்துவளப்புணர்ந்து சோலையிலுள்ள மலைவாழையைத் தின்பதைவெறுத்து அயலிடத்துள்ளதாகிய மூங்கில்முள்ளான் மிடைந்த வேலியையுடைய சிறியகுடியின்கணுள்ளார் அஞ்சியலறும்படி சிவந்த அடியை உடைய பலாவினது இனியபழத்தைத் தின்னுநிற்குங் கரிய மலை நாடனே! நீ நெடுங்காலம் வாழ்வாயாக; எந்தைக்குரிய,—வேங்கைமலர் உதிரும்படி அகன்ற வாயிலையுடைய மலையிலேபொருந்திய பாக்கத்து இன்று இராப்பொழுதையிலே தங்கினையாகிப் பிற்றைநாளிற் செல்வதாயின், அதற்கு அடையாளமாக நினதுமாலையைக் கொடுப்பாயாகவென வேண்டுகிற்பேம்; எ - று.

குளவி - மலைப்பச்சை. பாக்கம் - பக்கத்துள்ளவூர். முனைதல் - வெறுத்தல். மிசைதல் - தின்னுதல். இஃது அழிவில்கூட்டத்து அவன் புணாவுமறுததல.

இரவில்வந்து முயங்குங்காறும் ஆற்றியிருத்தலருமையின், மூற்பட மாலைநல்குவாயாகவென்றாள்; அதனையணைத்தேனும் ஆற்றலாமாதலின்.

உள்ளுறை :—யானை ஈரினம் தலைவனும் தலைவியுமெனவும் குழையத் தீண்டியென்றது இயற்கைப்புணர்ச்சியிற் கூடியதெனவும், வாழையை வெறுத்தென்றது களவுப்புணர்ச்சியை வெறுத்ததெனவும், சிறுகுடியலற என்றது பழிச்சொற்கூறும் அயலிலாட்டியர் நடுங்கி அவர்வாயடங்கச் செய்தெனவும், பலவின்பழமிசையுமென்றது வரைந்துகொண்டு இல்லற நடத்தி இன்பந்துய்ப்பாராகவெனவும் கொள்க. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உ௲உ)

## உ௲௲. அஞ்சிலாந்தையார்

குறிஞ்சி :

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக இவள் ஆற்றாள் என்பதுணர்ந்து சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

எ - து, தலைமகன் வரைந்துகொள்ளாது களவொழுக்கமேற்கொண்டு நெடுநாள்காறும் வருதலையறிந்ததோழி, இவன் களவின்வருதலை இவள் ஆற்றாளென்பதுகொண்டு ஒருநாள் அவன்சிறைப்புறத்தானாகத் தலைவியை



நோக்கி நீ அவன்பால் காதல்மிக்குடையையாதலின், என்சொல்லை ஏற்றுக் கொள்ளமாட்டாய்; ஆயினும் ஒன்றுகூறுவேன்கேளென்று தொடங்கி அவன் சான்றோனல்லனாதலை அறிந்துகொள்ளென்றுகூறி, உள்ளுறையால் அவள் செய்யவேண்டுவதனையுஞ் சூழ்ந்து கூறிநிற்பது.

கல்லாக் கடுவன் நடுங்கமுள் எயிற்று
மடமா மந்தி மாணா வன்பறழ்
கோடுயர் அடுக்கத்து ஆடுமழை ஒளிக்கும்
பெருங்கல் நாடனை அருளினை யாயின்
இனியென கொள்ளலை மன்னே

கொன்றுென்று

கூறுவன் வாழி தோழி முன்னுற
நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி
ஆன்றோர் செல்நெறி வாழாச்
சான்றோன் ஆதல்நன்கு அறிந்தனை

தெரிமே.

உரை :—தோழீ! வாழ்வாயாக; தன்னுடைய தொழிலையன்றிப் பிறவற்றைக் கல்லாத கடுவன் நடுங்குமாறு முள்போன்ற கூரிய எயிற்றினையும் மடப்பத்தையுமுடைய கருமுகமந்தி தன் மாட்சிமைப்படாத சிறிய வலிய பிள்ளையோடு கொடுமுடியுயர்ந்த மலைப்பக்கத்து இயங்கும் மேகம் தனக்கு மறைவிடமாகக்கொண்டு ஒளிக்கின்ற பெரிய மலைநாடன் வரைந்துகொள்ளாது நாளும்வந்து நின்னைக் கூடியிருத்தலானே அவன்பால் காதல் கைம்மிக்கு அருளுடையையாயினை; அங்ஙனமாதலை ஆராயின் இனி என்னுடைய வார்த்தைகளை ஏற்றுக்கொள்வாயல்லைமன்; அது காரணமாக யான் கூறுவதும் பயனின்றி யொழியத்தக்கதுதானென்றாலும், ஒரோவொன்று நினக்குக் கூறுநிற்பேன், இதன்முன் பலநாளும் இங்கு வருதலால் யான் அறிந்த அளவில் அவன் தன் அன்புடைய உள்ளத்து அருள்பொருந்தி ஆராய்ந்து மேலவர்செல்லும் நெறியிலே சென்று வாழாத சால்பிலனாதலை நீ நன்றாக அறிந்தனையாகித் தேர்ந்துகொள்வாய்; எ - று.

கோடு - கொடுமுடி. என - என்னுடையவார்த்தைகள்; அஃறிணைப் பன்மைக் குறிப்புவினையாலணையும்பெயர். மன் - கழிவு. கொன் - பயன் இன்மை.

அவனைக்கூட்டுவிக்குமுன் தன்ளுல் தலைவிக்கு இன்பஞ்செய்தாற் போல இப்பொழுது செய்யாமையின் இனி எனகொள்ளலையென்ருள்; இன்பஞ்செய்யாமைக்குக் காரணம் அலர் முதலாயினவற்றை அறிவுறுத்தி விலக்கத்தொடங்கினது. ஆன்ருேர்செல்லுநெறி பலரறிய வரைதலும் களவினைக்கடிதலும்; அந்நெறிவாழாச் சான்றேனென்றது பலரறிய மணந்து களவினைக்கடியாத சால்பிலானென்றிழித்துக் கூறியதாம்.

உள்ளுறை :—கடுவன் நடுங்க மந்தியும் பறழும் அடுக்கத்து மழையில் ஒளிக்குமென்றது, தலைமகன்வந்து காணுது மயங்குமாறு நீயும்யானும் இங்கொருசார்பில் மறைந்துகொள்வோம் என்றதாம்; எனவே களவு முட்டுப்பாட்டினல் இனி வரைந்தெய்துவானென்றதாயிற்று. மெய்ப் பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உ௩௩)

## மூலமும் உரையும்

உ சூள்

* உ௩௪. ..............................

..............................

உ௩௫. ...............

நெய்தல்: இது, வரைவுநீட ஆற்ருளாங்காலத்துத் தோழி வரைவுமலிந்தது.

எ - து, மணம்புரிந்துகொள்ளாது தலைவன் நீட்டித்தலும் அது பொறாது தலைவி வருந்தக்கண்டதோழி நீ வருந்தாதேகொள், தலைமகன் பகற்குறிவந்து பெயர்ந்தனனாயினும், இனி அவன் வரைவொடு வருதலைப் பார்த்து மீளுதும் வருவாயாகவென அவள் ஆற்றும்வண்ணங் கூறுகிற்பது.

உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்
அரவுவாள் வாய முள்இலைத் தாழை
பொன்னேர் தாதின் புன்னையொடு கமழும்
பல்பூங் கானல் பகற்குறி வந்துநம்
மெய்கவின் சிதையப் பெயர்ந்தன னாயினுங்
குன்றில் தோன்றும் குவவுமணல் ஏறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
தண்தார் அகலம் வண்டிமிர்பு ஊதப்
படுமணிக் கலிமா கடைஇ
நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉம் ஆறே.

உரை :—தோழீ! வலிய அலைவந்து மோதிய சருச்சரைபொருந்திய வளைந்த அடியையுடைய அராவுகின்ற வாளரம்போன்ற வாயையுடைய முட்கள்பொருந்திய இலைமிக்க தாழையின்கணுள்ளபூ பொன்போன்ற மகரந்தத்தையுடைய புன்னைமலரொடு சேர்ந்து மணங்கமழாநிற்கும் இன்னும் பலவாகிய மலர்களையுடைய சாலையில்வைத்த குறியிடத்திலே பகற்பொழுது வந்து நலனுகர்ந்து நம்முடைய உடம்பின் அழகு கெடும் படியாகப் பெயர்ந்துபோயினனாயினும் தண்ணிய மாலையணிந்த மார்பின் கண் வண்டுகள் வந்தொலித்து அம்மாலையின் தேனை உண்ணாநிற்ப ஒலிக்கின்ற மணி அணிந்த குதிரைகளைச்செலுத்தி நெடிய நீரையுடைய நெய்தனிலத்திற்குத் தலைவனாகிய நம் காதலன் வரைவொடுவருகின்றதனை யாம் சென்று குன்றுபோலத் தோன்றுகின்ற குவிந்தமணலாலாகிய திடர் மீதேறிநின்று கண்டுவருவோம்; அதற்காகச் செல்லுவோமோ? ஒன்று கூறிக்காண்; எ - று.

அரவுவாள் - வாளரம். ஊதல் - உண்ணுதல். தாழை, புன்னை - மலருக்குப்பொருளாகுபெயர்கள். வாய தாழை - குறிப்புப்பெயரெச்சத் தொடர்.

---

* குறிபபு :—உருசு ஆம்பாட்டு எனக்குக்கிடைத்த படிகளினுத் தினுங் காணப்படவில்லை.

உசு அ நற்றிணை நானூறு.

நலனுகர்தலால் அழகு கதிர்ப்பேறினும் அது வாட்டமுறக் கைவிட்டுச் சென்றமையின் கவின்சிதையப் பெயர்ந்தனனென்றாள். இடையீட்டாலே மெய்கவின்சிதையப் போயினனுதலின் வரைவொடுவருவான்காண் ; அதனைச்சென்று நோக்குதுமென அவளை ஆற்றுவித்தாளாயிற்று. வண்டிமிர்பூதக் கலிமாகடைஇ மிக்க ஆரவாரத்தொடுவருதலின், வரைவுமவிந்தமையுமாம்.

இறைச்சி :—தாழையும் புன்னையுஞ் சேர்ந்து மணங்கமழுங் கானல் என்றது, தலைவன் வரைவொடு புகுதலாலே மணம்புரிந்துகொண்டு நீயும் அவனும் நம்முடைய சேரிவிளங்க வீற்றிருப்பீரென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்வித்தல். (உருஞ)

## உருசு. நப்பிகுட்டுவனார்

குறிஞ்சி :

இது, தலைமகன் சிறைப்புறமாக வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

எ - து, வரையாமையால் ஆற்றாமைமிக்கு வருந்திய தலைவியைத் தோழிநோக்கி நீ வலிதிற்பொறுத்திருவென்றாட்கு அப்பொழுது தலைமகன் ஒருபுறத்துவந்து மறைந்திருப்பதையறிந்த தலைவி அவன் கேட்குமாற்றானே தோழியைநோக்கி எனக்கு நோய்மிக்கது; மெய்யும் வெப்பம் உடைத்து; இனி உய்யேன்; ஒருகால் அவனது மலையிலே பட்டகாற்று என்மெய்யைத்தீண்டினால் உய்வேனாதலின் அதுபடும் பொருட்டு அன்னையிடஞ்சென்று 'என்னை முன்றிலிலேபோகட்டாலுய்வேன்' என்று சொல்லென அழிந்து கூறாநிற்பது.

நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
ஒய்யெனச் சிறிதாங்கு உயிரிய
பையென
முன்றிற் கொளினே நந்துவள்
பெரிதென
நிரைய நெஞ்சத் தன்னைக்
குய்த்தாண்டு
உரையினி வாழி தோழி புரையில்
நுண்ணேர் எல்வளை நெகிழ்த்தோன்
குன்றத்து
அண்ணல் நெடுவரை ஆடித்
தண்ணென
வியலறை மூழ்கிய வளியென்
பசலை ஆகந் தீண்டிய சிறிதே.

உரை:—தோழீ! நீவாழ்வாயாக; எனக்குண்டாகிய காமநோயும் அளவுகடப்பப் பெரிதாயிராநின்றது; என்னுடம்பும் தீயையுமிழ்கின்ற கொதிப்பினால் வெப்பமுடையதாயிராநின்றது; ஆதலின் என்னுடம்பை மெலிவித்துக் குற்றமற்ற நுண்ணிய நேர்மையையுடைய ஒளிபொருந்திய வளையைக்கையினின்று கழலச்செய்த தலைமகனது மலையிலே பெருமை பொருந்திய நீண்ட கொடுமுடியின் கண்ணே பரவிநின்று குளிர்ச்சியுறும்படி அகன்ற பாறையில் அளாவியகாற்றானது என்னுடைய பசலைநோயுற்ற மெய்யிலே சிறிதுபடவேண்டி நீ விரைந்துசென்று 'அங்கு உயர்ந்த



நம்முடைய முன்றிலிலே இவளைச்சிறிதுபோது மெல்லக்கிடத்தினால் இவள்பெரிதும் நோய் நீங்கப்பெறுவள்' என்று அவ்விடத்து என்னைக் கொண்டுபோய்விட்டு நரகம்போன்ற கொடிய நெஞ்சத்தையுடைய அன்னைக்கும் இப்பொழுதே உரைப்பாயாக; எ – று.

மலையிலேபட்டகாற்றையும் விரும்பியேற்பவளை நாம் வரையாது விடின் இறந்துபடுவது திண்ணமென் றஞ்சி விரையவரைவொடு புகுவ னென்னுங் கருத்தால் இங்ஙனங்கூறினள். இல்வயிற்செறித்துக் காவலோம்பலின் நிரையம்போன்ற நெஞ்சத்தன்னையென் றிகழ்ந்தாள்; இனித் துய்க்குங்காலத்தே துய்க்காவாறு தடுப்பவர் நிரையம்புகுபவென் னுங் கொள்கை உடைமையால் நிரயம்புகுநெஞ்சத்தன்னையென் றலுமாம்.

இறைச்சி.—கொடுமுடியிலே காற்று அளாவிச்சூழ்தல்போல என்னுள்ளம் அவனுடைய தோளிலேபட்டு அளாவிச் சூழாநிற்குமே என்று இரங்கியதாம். **மெய்ப்பாடு** – அழுகை. **பயன்** – அயாவுயிர்த் தல். (உ௯௯)

## உ௫௭. காரிக்கண்ணனார்

பாலை : இது, தோழி உரைமாறுபட்டது.

*எ - து, பிரிவுக்காலத்துத் தலைவியின் துன்பம் நீங்குமாறு தேற்றுதற்கு உரையெடுத்த தோழி அதனை ஏற்றுக்கொள்ளாது தலைவி ஆற்றியிருப்பதை யறிந்து வியந்து மடந்தாய், அவர்கூறிய பருவவரவின் அடையாளமாக மழைவாராநின்றதுகண்டாய்; அதுகாறும் தலைவர் நீத்தகன்றனரெனக் கூறினையுமல்லையே, இஃதென்னவியப்பென மாறுபடக் கூறியது.*

நனிமிகப் பசந்து தோளுஞ் சாஅய்ப்
பனிமலி கண்ணும் பண்டு போலா
இன்னுயிர் அன்ன பிரிவருங் காதலர்
நீத்து நீடினர் என்னும் புலவி
உட்கொண்டு ஊடின்றும் இலையோ
மடந்தை
உவக்காண் தோன்றுவ ஓங்கி வியப்புடை
இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்
புரவெதிர்ந்து தொகுத்த யானை போல
உலக முவப்ப ஓதரும்
வேறுபல் உருவின் ஏர்தரு மழையே.

உரை :—மடந்தாய்! வியப்புடைய இரவலர் வரும்பொழுது அவர்கட்குக் கொடுப்பதுகருதி ஆய் அண்டிரன் சேர்த்துவைத்த யானைத்திரள் போல உலகத்தில் வாழுமுயிர்கள் மகிழ்ச்சியடையச் சொல்லுதற்கரிய வெவ்வேறாகிய பலபல உருவத்தொடு எழுகின்ற மேகங்கள் ஓங்கித் தோன்றுவனவற்றை உவ்விடத்தேகாணாய்; இஃது அவர்குறித்தபருவமன்றோ? 'இதுகாறும் மிகப்பசந்த தோளும் வாட்டமடைந்து நீர்வடி



கின்ற கண்களும் முன்போல் இன்றி வேறுபாடுகொள்ள இனிய உயிர் போன்ற பிரிதற்கரிய காதலர் என்னைக் கைவிட்டு நெடுந்தூரஞ் சென்றொழிந்தனரே' என்று கூறப்படுகின்ற புலவியை நீ நின் உள்ளத்தே கொண்டு ஊடுகின்றது மில்லையோ? இஃதென்னவியப்பு! எ - று.

நனிமிக - ஒருபொருட்பன்மொழி. உவக்காண் - உவ்விடத்தேபார். ஏர்தரல் - எழுதல். இஃதென்னவியப்பு என்றது சொல்லெச்சம். வியப்புடையிரவலர் - செய்யுளால் தன்னைப்புகழ்தலையுடைய இரவலர்.

அவர்பால் அன்பிலள் கொடியளென்று ஏதிலாட்டியர் ஏசுபவாதலின் அத்திறத்தேனும் புலப்பாயாகவென்பாள் ஊடின்றுமில்லையோ என்றாள். வருந்தாது மகிழ்ந்தவண்ணமே தலைவரை எதிரேற்குந்தன்மையைக் காணென்பாள் அவர்குறித்த மழைதோன்றுமென்றாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். பயன் - மாறுபடக்கூறல். (உ௫எ)

## உ௫அ. கந்தரத்தனார்

**முல்லை: இது, தலைமகள் பருவங்கண்டழிந்தது.**

எ - து, வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்த தலைமகன் குறித்த பருவம் வரக்கண்டும் அவன் வாராமையைக்கருதிய தலைவி மேகத்தைநோக்கி மேகமே, அவர்நிலையைக் கூறக்கேளென்று நீ இங்கு வருதல் சால்புடையதன்றுகண்டாய். நின்குரல் பாம்பின்படத்தை மழுங்கச் செய்வதன்றி அவர் நெஞ்சைக் கனியச்செய்யாமையின் இனியவல்ல மன்னென அழிந்து கூறுநிற்பது.

வறங்கோல வீந்த கானத்துக் குறும்பூம்
கோதை மகளிர் குழூஉநிரை கடுப்ப
வண்டுவாய் திறப்ப விண்ட பிடவ
மாலை அந்தி மாலதர் நண்ணிய
பருவஞ் செய்த கருவி மாமழை
அவர்நிலை யறிமோ ஈங்கென வருதல்
சான்றோர்ப் புரைவதோ அன்றே
மான்றுடன்
உரவுரும் உரறு நீரில் பரந்த
பாம்புபை மழுங்கல் அன்றியும்
மாண்ட
கனியா நெஞ்சத் தானும்
இனிய அல்லநின் இடிநவில் குரலே.

உரை:—கோடைதெறுதலாலே பட்டுப்போன காட்டிலே சிறிய பூவணிந்த கூந்தலையுடைய ஆயர்மகளிர் கூடுகின்ற கூட்டம்போல வண்டுகள் வாய்திறந்து தேனைப்பருகும்படி மலர்ந்த பிடவுகளையுடைய அந்திமாலையில் யான் காமநோய் மிகக்கொள்ளுமாறு கார்ப்பருவத்தைச் செய்த மின்னல் முதலாகிய தொகுதியையுடைய கரியமேகமே, நீ ‘அவர் நிலைமையை இங்குநான் கூற அறிந்துகொள்’ என்று வருதல் சான்றோர் செய்கையை ஒத்ததாகமாட்டாது கண்டாய்; ஒருசேர மயங்கி நின் இடித்த

உஎக

முழங்குந்தொழிலையுடைய குரல் வலிய இடியாய் முழங்குந்தன்மை யினாலே பரவிய பாம்புகள் படம் மழுங்கியடங்குமாறு செய்வதல்லாமல் மாட்சிமைப்பட்ட தலைவரது நெஞ்சங் கனியும்படிசெய்ய வல்லனவல்ல வாதலால் நின் இடித்துமுழங்கும் அக்குரல் எனக்கு இனிமைசெய்வன வல்ல; எ - று.

வறம் - கோடை. மோ - முன்னிலையசை. பிடவு இலை புதிர்த்துத் தூர்தெரியாதபடி பூத்தலால் பட்டகானத்தைப் பூச்சூடியமகளிரை யுவமித்தார்.

அவரை உடனழைத்துவருதலின்றி அவர் நிலையை நீ யறிவையோ எனக்கூறுதலால் என் காமநோயை நீக்குந்தன்மை கருதுகின்றிலையாத லின் சான்றோர்செய்கையை நின்செய்கை ஒவ்வாதென்றாள்; சான்றோர் செய்கை "பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல், சான்றோர் கட் கெல்லாங் கடன்" (கலி-கூ௩௯) என்றதனாலறிக. குறித்தபருவத்து வாராது தாழ்த்தமையின் பாம்பின் நஞ்சுடைத்தலையினும் அவர்நெஞ்சங் கொடிதென்பாள் கனியாநெஞ்சத்தானுமென்றாள். மெய்ப்பாடு-அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உ௯அ)

## உ௯௯. குன்றியனார்

நெய்தல்: இது, தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

*ஏ - து, களவொழுக்கத்துத் தலைமகன் ஓரிடத்தில்வந்து மறைந்திருப்பதையறிந்த தோழி தங்களுக்குண்டாகிய பழிச்சொல்லை அவன் கேட்டுவிரைய வரைந்துகொள்ளுமாற்றானே யாம் இதுகாறும் சேர்ப்பனுக்குப் பொருந்தி நடந்துகொண்டோமில்லை; அங்ஙனமாக, இப்பொழுதே எம்மைநோக்கி 'அக்காதலனை யணைத்து முயங்குவாய்' என்று கூறுகின்ற இவ்வூர் யாம் ஏதாவது களவொழுக்கத்துக்கு உரியதைச்செய்துவிட்டால் இனி என்னபாடுபடுமோவென்று நொந்து கூறுகிற்பது.*

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி
அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்

காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்
ஆய்மணி பொதியவிழ்ந் தாங்கு நெய்தற்
புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்

மல்லல் இருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்கு
அமைந்துதொழில் கேட்டன்றோ இலமே
முன்கை
வார்கோல் எல்வளை உடைய வாங்கி
முயங்கெனக் கலுழ்ந்த இவ்வூர்
எற்றா வதுகொல்யா மற்றோன்று
செயினே.

உரை :—மேலைத்திசையிலே சாய்ந்துவிழுகின்ற ஆங்குள்ள அத்தமனக்குன்றின்வாய் மறையாநிற்ப

ஆதித்தமண்டிலம் மயங்கிய மாலைக்



காலத்தில் கட்குடித்து மகிழ்ச்சியுற்ற பரதவ மாக்கள் தாம் வருந்தாதுபெற்ற பெரிய மீனை எளிதாகவிற்று ஞெண்டுவிளையாடிய புலவுநாற்றத்தையுடைய மணல்பரந்த முன்றிலையுடைய நோக்குவார்க்கு விருப்பம்வருகின்ற சிறுகுடியின்கண்ணே செல்லலுற்ற ஒழுங்குபட்டவழியில் அழகிய நீல மணியின் குவியலை விரித்துப் பரப்பினாற்போல நெய்தலின் புறவிதழான் மூடப்பட்ட மலரைக் கெடமிதித்துச் செல்லாநின்ற வளப்பத்தையுடைய கரியகழிபொருந்திய நிரம்பிய கடல்நீரையுடைய நெய்தனிலத்தலைவனுக்கு யாம் மனமொத்து இதுகாறும் அவனிட்ட தொழிலைக்கேட்டு அதன்படி நடந்தோமேயில்லை; அங்ஙனமாக என்னைநோக்கி 'நின் முன்கையிலணிந்த நெடிய கோற்றொழில் அமைந்த ஒளிபொருந்திய வளைகள் உடையும் படி அச்சேர்ப்பனை அழைத்து அணைத்து முயங்குவாயாக' என்றுகூறிப் புலம்பியழுத இவ்வூர்தான் யாம் இனி அவனுக்கு அமைய நடக்கவல்ல வேறொருகாரியத்தைச் செய்துவிட்டால் என்னபாடுபடுமோ? எ - று.

வரைந்துகொண்டு அவற்குக் குற்றேவலிழைக்கும் பயனைப்பெற்றேம் இல்லையேயென் றிரங்குவாள் தொழில் கேட்டன்றோவிலமே யென்றாள். அவனொடு கூட்டமுண்மையை ஊரறிந்ததென அறிவுறுத்துவாள் வாங்கிமுயங்கென இவ்வூர் கலுழ்ந்ததென்றாள். இதனால் இனி வரையாது தாழ்ப்பின், இறந்துபடுவதல்லது வேறு செய்யக்கடவதின்மையும் அதனால் அவன் பழியெய்துகின்ற உண்மையுங் கூறினாளாயிற்று;

உள்ளுறை :—குடித்துமயங்கிய பரதவர் தாம் பெற்ற பெரியமீனை எளிதிலேமாறி நெறியிலுள்ள நீலமலரை மிதித்துச்செல்லுவரென்றது, காமமயக்கங்கொண்ட காதலன் தான் அரியபொருளை எமரிடத்துக் கொடுத்துத் தலைவியைப்பெற்று மணந்து ஊரார் எடுத்த அலரைத் தாழ மிதித்து அடக்கித் தன்னூர் கொண்டுபுகுவானாக வென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உ௩௧)

## உ௪ ௦ நப்பாலத்தனார்

பாலை: (க) இது, பிரிவிடைமெலிந்த தலைமகள் சொல்லியது.

எ - து, பிரிவின்கண் மெலிவுற்ற தலைமகள் என் முயக்கத்தை வெறுத்துச் செல்லுதலால் என்னுடம்பு துயில்கொள்ளாது இடையீடு படுவதாயினும் அவர் சென்ற காடு மலைபோல அச்சத்தைத் தாராநின்றது; அதனைப் படைத்த கொடியோன்றானும் அதன்கண்ணேசென்று நனி வருந்துவானாகவென நொந்து கூறாநிற்பது.

(உ) நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் சொல்லியதூஉமாம்.

எ - து, உள்ளத்தாலே பொருள்கருதப்படுதலும் தலைவியைப் பிரிதல் ஆற்றாத தலைமகன் நம் காதலியின் முயக்கத்தை வெறுத்துச்செல்லுதலால் என்னுடம்பு துயில்கொள்ளாது இடையீடுபடுவதாயினும் செல்லுங் காடு மலைபோல அச்சத்தைத் தாராநின்றது; அத்தகைய காட்டினைப் படைத்த கொடியோன்தானும் அதன்கண்ணே சென்று நனிவருந்துவானாக என வருந்திக் கூறாநிற்பதுமாகும்.

ஐதேகு அம்மஇவ் உலகுபடைத்தோனே
வையேர் வாலெயிற்று ஒண்ணுதற்குறுமகள்
கைகவர் முயக்கம் மெய்யுறத் திருகி
ஏங்குயிர்ப் பட்ட வீங்குமுலை ஆகம்
துயிலிடைப் படூஉந் தன்மைய தாயினும்
வெயில்வெய்து உற்ற பரலவல் ஒதுக்கில்
கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி
ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்
யானை இனநிரை வௌவும்
கானந் திண்ணிய மலைபோன் றிசினே.

(க) உரை :—கூர்மையாயெழுந்த வெளியபற்களையும் ஒள்ளிய நெற்றியையுமுடைய இளமையுற்றதோழீ ! நம் காதலர் தாம் கையாலணைத்து முயங்கும் புணர்ச்சியானது மெய்யிலே பொருந்தவேண்டாவென்று மாறுபடுதலானே ஏங்குகின்ற உயிர்த்தலோடுபொருந்திய பருத்தகொங்கையை உடைய என்மெய்யானது இனித் தனியேகிடந்து துயிலுவதனாலே துன்பப்படுந் தன்மையதா யிராநின்றதெனினும், வெயிலால் வெப்பமுற்ற பரல் மிக்க பள்ளத்தின் ஒருபுறத்திலே குந்தாலியாற்குழித்த கிணற்றையடைந்து பசுவினிரையைப் பாதுகாக்கும் ஆயர் பறித்த சிறுகுழியிலுள்ளநீரை யானை இனம் வரிசையாகச்சென்று உண்ணுநிற்கும் அவர்சென்ற கானமானது திண்ணிய மலைபோல அழியாத தன்மையதாய் நின்று கருதுகின்ற எனக்கு அச்சத்தைத் தாராநின்றது ; அத்தகைய அந்தக் கொடிய சுரமுற்ற பாலை நிலத்தினைப் படைத்த கொடியோன்றானும் அதன்கட் பையச் சென்று நனி துன்புற்றுவருந்துவானாக ; எ – று.

அவல் – பள்ளம். கணிச்சி – குந்தாலி. இடைப்படல் – இடையீடு படுதலுமாம். திருகியென்பதைத் திருகவெனத்திரிக்க. பத்தல்போலச் சிறிதாகத் தோண்டப்படுதலிற் பத்தலென்றார் ; இது கிணற்றினீரை யெடுத்து ஊற்றி ஆனிரையை உண்பித்தற்குத் தோண்டப்படுவது.

இறைச்சி :—ஆனிரையுண்பிக்கும்வண்ணம் ஆயர் கூவலருகிலே பறித்தகுழியாகிய பத்தலி னிரப்பிவைத்த நீரை யானையினம் உண்ணுநிற்கும் என்றது, இப்பொழுது தலைவனாலே துய்க்குமாறு சமைந்த என்நலனைப் பசலையுண்டொழிக்கு மென்றதாம். **மெய்ப்பாடு** – அழுகை. **பயன்** – அயாவுயிர்த்தல்.

(உ) உரை :—நெஞ்சமே! குறுமகளை முயங்குமுயக்கம் வேண்டா என்று வெறுத்து நீங்குதலானே பருத்த கொங்கையையுடையாளது மெய்துயிலின்றி வருந்துவதாயினும், யான் இப்பொழுது செல்லும் கானமானது மலைபோல அச்சத்தைத் தாராநின்றது ; அத்தகைய அக்கானம் பரவிய பாலைநிலத்தைப் படைத்த கொடிய இறைவன்தானும் அதன் கண்ணே மெத்தெனச் சென்று துன்புறுவானாக ; எ – று.

இறைச்சி :—யான் துய்க்கவேண்டிய நலத்தைப் பசலையுண்டொழிக்கும் என்றதாம். **மெய்ப்பாடு** – பிறன்கட்டோன்றிய அச்சம்பற்றிய இளிவரல். **பயன்** – இல்லத்தழுங்கல். (உ௯0)

## உசக. மதுரைப் பெருமருதனார்

**பாலை:** இது, தலைமகள் வன்பொறை எதிரழிந்தது.

எ – து, தலைமகன் பொருள்வயிற்பிரிதலாலே வருந்திய தலைமகளை நீ வருந்தாது வலிதிற் பொறுத்திருப்பாயென்ற தோழியைநோக்கி அவள் யான் எங்ஙனம் ஆற்றுவேன் பொருள்வயிற்பிரிந்தோர் ஆண்டு என்னை நினைப்பாராயின் எனக்குப் புரையேறும்; அப்படியுஞ் செய்யார்போலு மென்று அழிந்து கூறுநிற்பது.

உள்ளார் கொல்லோ தோழி கொடுஞ்சிறை
உள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீரழி மருங்கின் ஈரயிர் தோன்ற
வளரா வாடை உளர்புநனி தீண்டலின்
வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வேந்துவீசு கவரியிற் பூம்புதல் அணிய
மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு
விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்

௬௦. பனிக்கால் கொண்ட பையுள் யாமத்துப்
பல்லிதழ் உண்கண் கலுழ
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே.

உரை:—தோழீ! வளைந்த சிறகையுடைய பறவைகளின் உள்ளங்காற் சுவடு பொருந்திய வரிகளை மேற்கொண்டுள்ள நீர்வற்றிய இடங்கள் தோறும் மெல்லிய நுண்மணல் தோன்றாநிற்ப, மெல்லெனவீசும் வாடைக் காற்று உளர்ந்து மிகவும் தீண்டுதலினாலே, கரும்பின் வெளிய பூப் பலவும் ஒருசேர விரிவனவாய் அரசனுக்கு வீசப்படுங் கவரிபோல மெல்லிய புதல் தோறும் அழகுசெய்யாநிற்ப, மேகங்கள் நீங்கிச் செல்லுகின்ற ஆகாயத்தில் மாறி மாறி விழித்து மூடி இமைப்பதுபோல ஞாயிறுதோன்றித் தோன்றி மறையாநிற்ப, பகற்காலஞ்சென்ற மாலைப்பொழுதோடு இராக்காலம்வந்து சேர்தலும் பனி நிலத்தில் விழத்தொடங்கிய துன்பத்தைத் தருகின்ற நடு யாமத்தில் இமையையுடைய மையுண்டகண்கள் நீர்பெருகிவடியும்படி அழாநிற்ப நிலைநில்லாத பொருளை ஈட்டுதலில் உள்ளம் பிணிப்புண்டு எம்மைப் பிரிந்துசென்ற காதலர் இப்பொழுது யாம் படுந்துயரைக் கருதினரேல், புரையேறல், தும்மல் முதலியவற்றால் அறிந்து இனி அவர்வருவர் போலுமென ஆற்றியிருப்பேமன்றோ? அங்ஙனமின்மையில் கருதியிருப்பாரல்லரோ? எ - று.

கொடுஞ்சிறை - பறவைக்குச்சினையாகுபெயர். வேழம் - பேய்க் கருமபுமாம.

நிலைநில்லாப் பொருள்பிணித்தலானே நிலைபெறக் கைவந்த இன்பத்தை நீத்துச் சென்றவராதலின், அறவரல்லரெனவும், அங்ஙனம், அறவரல்லார்க்குச் செய்ந்நன்றி மறப்பது இயல்பாதலிற் பண்டு நாம் பாவித்த

நலனுண்டு துறந்து நம் காதலர் நம்மை உள்ளாருமாயினர்போலுமென வுங்கொண்டு கூறினளென்பது. கைகோள்-கற்பு. மெய்ப்பாடு-அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உசக)

## உசஉ. விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் முல்லை:

இது, வினைமுற்றி மறுத்தராநின்ற பாகற்குச் சொல்லியது.

தலைமகன் கார்கண்டு·

எ - து, வினைவயிற்சென்று மீளூந் தலைமகன் தலைமகளைக் காணும் அவாவினுல் விரைவிலே தேர்செலுத்தவேண்டிப் பாகனை நோக்கிப் பாகனே! மழைபெய்யத் தொடங்கியதுமன்; இவ்வேலை தன்குட்டியோடு களரின்கண்ணே சென்ற பிணைமானை அதன்கலைமான் தேடாநின்றது உவ்விடத்தேபாராய்; ஆதலின் நின்தேர் விரைந்து செல்வதாகவென உவந்து கூறுகிறபது.

இலையில் பிடவம் ஈர்மலர் அரும்பப்
புதலிவர் தளவம் பூங்கொடி அவிழப்
பொன்னெனக் கொன்றை மலர
மணியெனப்
பன்மலர்க் காயாங் குறுஞ்சினை கஞலக்
ரு. கார்தொடங் கின்றே காலை வல்விரைந்து

செல்க பாகநின் தேரே உவக்காண்
கழிப்பெயர் களரில் போகிய மடமான்
விழிக்கண் பேதையோடு இனனிரிந்
தோடக்
காமர் நெஞ்சமொடு அகலாத்
௧௦. தேடூஉ நின்ற இரலை ஏறே.

உரை:—பாகனே! பழுத்து உதிர்தலானே இலைகளில்லாத பிடா வெல்லாம் மெல்லிய மலர்கள்நிறையும்படி அரும்புமுகிழ்ப்ப, புதர்மேலேறிப் படர்கின்ற முல்லைக்கொடி பூக்கள்மலராநிற்ப, கொன்றைகளனைத்தும் பொன்போல மலர்தலைச்செய்ய, நீலமணிபோலப் பலவாயமலர்களையுடைய காயாவின் குறுமையாகிய கிளைகள் விளங்காநிற்ப இன்று காலைப் பொழுதிலேயே மேகம் தான் மழைபெய்யுந்தொழிலைத் தொடங்கியது கண்டாய்; கழிந்து பெயர்கின்ற களர்நிலத்திலே சென்றபிணைமான் மருண்டுவிழித்தலை உடைய கண்களையுடைய தன்குட்டியொடு கூட்டத்தினின்று இரிந்தோடுதலும் அதன்பாலுற்ற விருப்பமிக்க நெஞ்சத்தொடு சென்று தேடாநின்ற ஆண்மானை உவ்விடத்தேபாராய்; ஆதலின் நின்தேர் மிக விரைந்து செல்வதாக; எ - று.

ஆண்மான் பெண்மானையுங் குட்டியையுந் தேடாநின்றதனைப்பார் எனவே யான் என்காதலியையும் புதல்வனையுங் காண மிகவிருப்பமுடையேனென்பதைப் பிறிதொன்றன் மேல்வைத்து அறிவுறுத்தினனென்பது. இது குறிப்பெச்சமெனவும்படும். தான் கார்காலத் தொடக்கத்தில் வருவதாகக் காதலிக்குக் கூறிச்சென்றனனாதலின் அதுபழுதுறாவாறு செல்லவேண்டிக் கார்தொடங்கின்றென்றான். விழிக்கண்பேதை

என மான்குட்டிக்குக் கூறிய அடைச்சிறப்பால் ஆசிரியர் பெருங் கண்ணனார் விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் எனப்பட்டார்போலும். கைகோள் - கற்பு. மெய்ப்பாடு - உவகை. பயன் - பாகன்தேர்கடாவல்.

(உசஉ)

## உசங. காமக்கணிப்பசலையார்

பாலை: இது, பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரிதலால் மெலிந்த தலைவி 'சோலை தோறும் குயில்கள் புணர்ந்தீர் பிரியாதீரென்பதுபோலக் கூவாநிற்கும் இவ் இளவேனிற்காலத்திலே பிரிதல் இயல்பென்றால் அறத்தினும் பொருளே அருமைபதுபோலும்' என்று அழிந்து கூறுநிற்பது.

தேம்படு சிலம்பில் தெள்ளறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
ரு. கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல

மெய்யுற இருந்து மேவர நுவல
இன்னா தாகிய காலைப் பொருள்வயின்
௧௦. பிரிதல் ஆடவர்க்கு இயல்பெனின்
அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே.

உரை :—தேன் உண்டாகின்ற பக்கமலையிலே தெளிந்த நீர்சூழ்ந்த துறுகல்லின் அயலிலுள்ள தூய மணலடுத்த கரையின்கண்ணே அசைகின்ற கிளைகளிலே தளிர்த்துத்தழைத்த நறியவடுக்களையுடைய மாமரமிக்க சோலைதோறும் தங்குதல்கொண்ட சிவந்தகண்ணுடைய கரியகுயில்கள் 'சூதாடு கருவிபெயர்ந்து விழுமாறுபோன்ற நிலையில்லாத பொருளீட்டும் வாழ்க்கையை ஏதுவாகக்கொண்டு அறிவுடையீர்! நீங்கள் நுங்களுடைய காதலிமாரை விட்டுப் பிரியாது கலந்தேயிருங்கோள்' என்று செயலறும்படி கைவிட்டுத் துறந்துசெல்வோரை இடித்துரைப்பனபோலத் தாம் தாம் ஆணும் பெண்ணும் மெய்யொடுமெய் சேரவிருந்து பொருந்துதல்வரக் கூவாநிற்பப் பிரியும்பொழுதே இன்னாமையைத் தருவதாகிய இளவேனிற் காலத்துப் பொருள்வயிற்பிரிவது ஆடவர்க்கு இயல்பாகுமென்னில் அடைந்தோமென்பாரைக் கைவிடேம் என்று கூறிப் பாதுகாக்கும் அறத்தினுங்காட்டில் தெளிவாகப் பொருள் அரியதுபோலும்? இது மிக்க வியப்பு ; எ - று.

பிரிந்தவழிக் குயில்கூவுமோசை தனக்கு இன்னாமைசெய்தலில் அவை இங்ஙனமே கூவுகின்றனவென்றாள். "ஊடினீ ரெல்லா முருவி லான் றன்னாணை, கூடுமி னென்று குயில்சாற்ற" என்றார் பிறரும். அடைந்தாரைக் காப்பேமென்று முன்னர்க்கூறியபடி பின்னர்க் காப்பதே

அறமெனப்படுவது. அதனைக் கைவிட்டுப் பொருள்பெரிதெனப் பிரிந்தார் ஆதலின் அறத்தைக் கைவிட்டார்க்குப் பிற கைகூடாவேயென்று இரங்கியவாறு. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உ௪௩)

## உ௪௪. கூற்றங்குமரனார்

குறிஞ்சி: இஃது, அறத்தொடு நிலைவலித்த முகம்புக்கது.

தோழியைத் தலைவி

எ - து, களவொழுக்கத்துத் தலைமகன் சிலபொழுது வாராமையாலே தலைமகள் கவலையால் வாடியதறிந்த தோழி இதனைத் தமர்க்கு அறிவுறுத்தி வரைவெதிர் கொள்ளுவிப்பலெனக் கருதுதலும் அதனையறிந்த தலைவி தோழியைநோக்கி என்னுடம்பிலுள்ள அழகைக்கெடுத்த பசலையை நீ கண்டுவைத்தும் காடனுக்கு உரைத்தலாவது அன்னைக்கு இதுதணியும் வகையை யுரைத்தலாவது செய்தாயல்லையேயென்று நொந்து கூறாநிற்பது.

விழுந்த மாரிப் பெருந்தண் சாரல்
கூதிர்க் கூதளத்து அலரி நாறும்
மாதர் வண்டின் நயவரும் தீங்குரல்

ரு.

மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்
உயர்மலை நாடற்கு உரைத்தல் ஒன்றோ
துயர்மருங்கு அறியா அன்னைக் கிந்நோய்
தணியுமா றிதுவென உரைத்தல் ஒன்றோ
செய்யாய் ஆதலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
செயலை அந்தளிர் அன்னஎன்
மதனின் மாமெய்ப் பசலையுங் கண்டே.

உரை :—தோழீ! நீலமணிபோன்ற நீண்ட மலையில் அழகுபொருந்த உயர்ந்த அசோகந்தளிர்போன்ற எனது நல்ல மேனியின் அழகுகெடும்படி செய்த பசலையை நீ கண்டுவைத்தும்,—மழைபெய்த பெரிய தண்ணிய சாரலின்கண்ணே கூதிர்க்காலத்துக் கூதாளிமலரின் மணம்வீசுகின்ற அழகியவண்டின் விருப்பமுறும் இனிய ஓசையை யாழோசைபோலும் என்று நறுமணங்கமழும் மலைமுழையிலிருக்கின்ற அசுணமாகிய விலங்கு செவிகொடுத்துக் கேளாநிற்கும் உயர்ந்த மலைநாடனுக்குச் சொல்லுதலொன்றுவது, எனது துன்பத்தின்மிகுதியை அறியாத அன்னைக்கு இந்தநோய் தணியும்வழி இதுதானென உரைத்தலொன்றுவது செய்தாயல்லை; இங்ஙனம் இரண்டிலொன்றேனுஞ் செய்து என்னைப் பாதுகாவாமையாலே நீ கொடுமைமிக்குடையையாவாய்; எ - று.

கூதளம் - தாளிக்கொடி; அதன்பேதமுமாம். மாதர் - அழகு. கூதளமணநாறும்வண்டு - தேனையுண்ணுமாறு தாளிப்பூவில் விழுதலால் அம்மலர் மணம்வீசும் வண்டு.

அன்னை வெறியெடுத்தல்முதலாயின கூறி அதன்முன் அவனை விரைந்து மணஞ்செய்துகொள்ளும்படி வற்புறுத்தாமைபற்றி நாடற் குரைத்தலாய வொன்றேனுஞ் செய்திலையென்றாள். அன்னை வெறி யெடாதபடி நாடனது மார்பினால்வந்த இந்நோய் அவன்மார்பை முயங்குவ தாலே தணியும் என அவட்கு அறிவுறுத்தாமையின் அன்னைக்கு இந்நோய் தணியுமாறு உரைத்தலொன்றுஞ் செய்திலையென்றாள்.

உள்ளுறை :—கூதாளிமலரில் வீழ்ந்துண்ணுதலாலே அதன்மணம் நாறுகின்ற வண்டு பாடும் ஓசையை யாழோசைபோலுமென்று அசுண மான் ஆராயுமென்றது, என்னைத் தலைவன் முயங்கி விடுத்தலானுகிய வேறு பாட்டைக்கண்டு இது முருகணங்குபோலுமென அன்னை ஆராயநிற்குமே என்றதாம். மெய்ப்பாடு - வருத்தம்பற்றிய வெகுளி. பயன் - தோழி யைத் தன்முகமாக்குதல். (உசச)

## உசரு. அல்லங்கீரனார்

**நெய்தல்:** இது, குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது.

எ - து, பாங்கியிற்கூட்டத்துத் தலைமகன்கூறிய குறையை முடிப்ப தாக உடன்பட்ட தோழி, மீண்டுவந்து தலைவியின் குறிப்பைத் தன்வயம் ஆக்குவாளாய் உரையாடுகின்றவள், சேர்ப்பனொருவன் நம்மைநோக்கி, 'என்னுயிரைக் கைக்கொண்ட நீ யாவளோ' என்று அவனால் நாம் வருந்து வது அறியாமல் நம்மால் அவன் வருந்தினதாகக்கூறித் தொழுதுநின்றது, நகையாயிற்றுக் காணென நகையாடிக் கூறுநிற்பது.

நகையா கின்றே தோழி தகைய
அணிமலர் முண்டகத்து ஆய்பூங் கோதை
மணிமருள் ஐம்பால் வண்டுபடத் தைஇத்
துணிநீர்ப் பௌவந் துணையோடு ஆடி

ஒழுகுநுண் நுசுப்பின் அகன்ற அல்குல்
தெளிதீங் கிளவி யாரை யோவென்
அரிதுபுணர் இன்னுயிர் வௌவிய்
நீயேனப்
பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித்
தான்நம் அணங்குதல் அறியான் நம்மில்
தான்அணங் குற்றமை கூறிக் கானல்
சுரும்பிமிர் சுடர்நுதல் நோக்கிப்
பெருங்கடற் சேர்ப்பன் தொழுதுநின்
றதுவே.

உரை:—தோழீ! தகுதியையுடைய அழகிய மலர்மிக்க கழிமுள்ளியின் நுண்ணிய பூமாலையை நீலமணிபோன்ற கூந்தலில் வண்டுகள்பொருந் தும்படி சூடித் தெளிந்த நீரையுடைய கடலிலே தோழியருடனேசென்று நீராடி நேர்மையுடைய நுணுகிய இடையையும் அகன்ற அல்குலையும் தெளிந்த இனியசொல்லையு முடையையாய் எனது அரிதாயமைந் திருக்கின்ற இனியவுயிரைக் கைக்கொண்ட நீதான் யாவளோ உரையாய்

என்று பூண் நிரம்பிய நெடிய தேரிலேபூட்டிய குதிரையொடுவந்து அவன்தான் நம்மை வருத்துதலறியானாய் நம்மால் அவன் வருந்தியது மட்டுங்கூறிக் கழிச்சோலையின்கண்ணே நாம் நின்றபொழுது நறுமணத்தால் வண்டுகள்வந்து சூழ்ந்தொலிக்கின்ற ஒளியையுடைய நமது நெற்றியைநோக்கிப் பெரிய கடற்சேர்ப்பன் கைகூப்பி வணங்கிநின்றதைக் கருதுந்தோறும் நகையுடையதா யிராநின்றதுகாண்; எ - று.

முண்டகம் - கழிமுள்ளி. துணிநீர் - தெளிந்தநீர். ஒழுகல் - நேர்மை.

அவன் செல்வக்குறைபாடின்மை கூறுவாள், தேர்ப்புரவிதாங்கி என்றாள். அவனாலே தலைவி மயங்கிநின்றமை அறிவுறுத்துவாள், தான் நம்மணங்குதலென்றாள். மெய்ப்பாடு - பிறன்கட்டோன்றிய பேதைமை பொருளாகப் பிறந்த நகை. பயன் - தலைவியின் கருத்தறிதல். (உசுகு)

## உசுஅ. காப்பியஞ்சேந்தனார்

பாலை: இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

எ - து, தலைமகன்பிரிதலால் மேனி வேறுபட்டு மெலிந்த தலைமகளை நோக்கி இனிய சகுனங்காணாநின்றது, பல்லியும் அடிக்கின்றது, குயில் பயிற்றும், ஆதலிற் காதலர் இன்னேவருகுவர்; வானம் இரங்காநின்றதனால் அவர் வருவேமென்ற பருவ மிதுவேபோலுமெனத் தோழி வலியுறுத்திக் கூறுநிற்பது.

இஉஉ ஊங்கண் இனிய படூஉம்

நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கில்

தேற்றும்

மனைமர நொச்சி மீமிசை மாச்சினை

வினைமாண் இருங்குயில் பயிற்றலும்

பயிற்றும்

உரம்புரி உள்ளமோடு சுரம்பல நீந்திச்
செய்பொருட்கு அகன்றன ராயினும்
பொய்யலர்
வருவர் வாழி தோழி புறவில்
பொன்வீக் கொன்றையொடு
பிடவுத்தளை அவிழ
இன்னிசை வானம் இரங்குமவர்
வருதும் என்ற பருவமோ இதுவே.

*உரை :—தோழீ! வாழி; நாம் கருதியதன் இடையிட்டு உவ்விடத்தே இனிய நிமித்தம் உண்டாகாநின்றன; நெடிய சுவரின்கணுள்ள பல்லியும் நம் பக்கத்திருந்து நம்மைத் தெளிவியாநின்றது; மனையகத்துள்ள பெரிய நொச்சிவேலியிலுயர்ந்த மாமரத்தின் கிளையிலிருந்து இனிமைபயப்பக் கூவுந்தொழிலிலேகைபோதலான் மாட்சிமைப்பட்ட கரியகுயில் கூவுதலையுஞ்செய்யாநிற்கும்; நம் தலைவர் வலிமைமிக்க உள்ளத்துடனே பலவாய சுரத்தைக்கடந்து ஈட்டப்படும் பொருட்காக அகன்றனராயினும் தாம் குறித்தபருவத்திலே பொய்யாராய் வருவர்காண்; கானத்துப் பொன்போலும் மலரையுடைய கொன்றையுடனே பிடாவும் மலராநிற்ப இனியகுரலையுடைய மேகம் முழங்காநிற்குமாதலால் அவர் வருவேமென்ற பருவம் இதுதான்போலும்; எ – று.*

ஊங்கண் - உவ்விடம். இனியபடுதல் - இன்னே வருகுவரென்னும் வாய்ச்சொலுண்டாதன் முதலிய நன்னிமித்தம்படுதல். "எருவுஞ் செருவும்" என்ற (தொல்-எழு-௨௯௰) சூத்திரத்துத் 'தம்மொற்றுமிகூஉம்' என உடம்பொடு புணர்த்துக்கூறலின் ஈண்டு 'இடூ, படூ' என உகரம்நீண்டு "குற்றெழுத்திம்பரும்" என்ற (தொல்-எழு-௨௯௭) சூத்திரத்து 'நிற்றல்வேண்டும் உகரக்கிளவி' என்றபடி உகரம்பெற்று இடூஉ படூஉம் என்றாயினமை அறிக. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல்.

## ௨௪௭. பரணர்

குறிஞ்சி: இது, நீட்டியாமைவரையெனத் தோழி சொல்லியது.

எ - து, களவொழுக்கத்தை மேற்கொண்டிருந்து மணம்புரியாது வினைமேற்செல்லுந் தலைமகனைத் தோழி நோக்கி 'நீ அருளினும் அருளாது விடினும் நின்வழியொழுகுபவளாகிய தலைமகளது நெற்றியிலுண்டாகிய பசலைநோய்க்கு நீயே மருந்தென்பதறிந்து அப்பாற்செல்வாயாக' என்று செலவுமறுத்துக் கூறுநிற்பது.

தோன்றுபடு துப்போடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
வழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி
எஃகுறு பஞ்சிற் றாகி வைகறைக்
கோடுயர் நெடுவரை ஆடும் நாடநீ
நல்கா யாயினும் நயனில செய்யினும்
நின்வழிப் படூஉமென் தோழி நன்னுதல்
இருந்திறை கூடிய பசலைக்கு
மருந்துபிறி தின்மைநன் கறிந்தனை

சேல்மே.

உரை :—முதிர்ந்தவலியுடனே பகைமிகுதலாலே சினந்து புலியைக் கொன்ற யானையின் சிவந்ததந்தம் கழுவும்படி வீழ்கின்ற மழையைப் பெய்த இனிய முழக்கத்தையுடைய மேகம் வில்லாலெறியப்பட்ட பஞ்சு போலாகி விடியற்காலத்திலே சிகரம் உயர்ந்த நெடியமலையில் இயங்கா நிற்கும் நாட்டையுடையோனே! நீ தலையளி செய்யாயாயினும் அவள் விரும்பாதவற்றை வெறுக்கும்படி செய்தாயெனினும் நின்னுள்ளஞ்சென்ற வழி நடக்கும் என் தோழியின் நல்ல நெற்றியிலிருந்து நிலைமிகுதலைக் கொண்ட பசலைநோய்க்கு நீயே மருந்தாவதன்றி மற்றொரு மருந்தில்லாமையை நீ நன்றாக அறிந்தனையாகிப் பின்பு செல்வாயாக; எ - று.

எஃகுதல் - வில்லாலடித்தல். நயனில - விரும்பாதன. இறைகூடுதல்- நிலைமிகுதல்.

இல்லறநிகழ்த்த நின்னுள்ளம்போல் ஒழுகுபவளென்பாள், நின்வழிப் படூஉம் என் தோழியென்றாள். வரைந்து பிரியாதுறைந்து பலகாலும் முயங்கியவழியே பசலைமென்மெலத் தணியுமென்றறிவுறுத்துவாள், பசலைக்கு மருந்துபிறிதில்லையென்றாள். இது, பசலைபாய்தல்.

## மூலமும் உரையும்

உஅக

உள்ளுறை :—புலியைக்கொன்ற யானையின் கோடு கழுவும்படி மழை பொழிந்த மேகம் விளர்த்து வைகறையில் வரைமீ தியங்குமென்றது, வேற்றரசையென்ற நின்னுடைய காமந் தணியும்படி பெரிய இன்பத்தைக் கொடுத்த தலைவி நீ கைவிடுதலாலே பின்பு விளர்த்துக்காட்டும் என்பதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உசஎ)

## உசஅ. காசிபன்கீரனார்

முல்லை: இது, பருவங்கண்டு ஆற்றாளாகிய மழைமேல்வைத்துப் பருவமறுத்தது.

தலைமகளைத் தோழி

எ - து, அங்ஙனம் மழைமேல்வைத்துப் பருவமறுக்கின்றாள் தலைவர் தாம் கார்ப்பருவத்து வருவேமென்றார்; அதற்குள்ளாக மேகமே நீ இவள்பால் அன்பின்மையால் இடையில்வந்து பெய்யத்தொடங்கி மருட்டிப் பெய்தலையுடைய நின் பொய்ந்நீர்மையை மெய்ந்நீர்மையாகக்கொண்டு மயங்குகின்ற மயிலின்குழாம்போல, யான் மயங்கேனென மறுத்துக் கூறுநிற்பது.

சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ
பொறிவரி நன்மான் புகர்முகங் கடுப்பத்
தண்புதல் அணிபெற மலர வண்பெயல்
கார்வரு பருவம் என்றனர் மன்இனிப்
பேரஞர் உள்ளம் நடுங்கல் காணியர்
அன்பின் மையிற் பண்பில பயிற்றும்
பொய்யிடி அதிர்குரல் வாய்செத்து
ஆலும்
இனமயில் மடக்கணம் போல
நினைமருள் வேனோ வாழியர் மழையே.

உரை — மேகமே! நம் காதலர்தாம் வினைவயிற் பிரிந்து செல்கின்ற பொழுது இனி என்றுவருவீரோவென்று யாம் வினவியதற்கு அவர் 'சிறியபூவையுடைய முல்லையின் தேன்மணம் வீசும் பசியமலரெல்லாம் நல்ல யானையின் புள்ளிகளையும் வரிகளையுமுடைய புகரமைந்த முகம் போல மெல்லிய புதர்களிலெங்கும் அழகுபொருந்தும்படி மலராநிற்ப மிக்க மழைபெய்தலையுடைய கார்ப்பருவமன்றோ யாம் வரும்பருவம்' என்று கூறிச் சென்றார்; அங்ஙனமாக நீ இப்பொழுது மிகுதியும் இவள்பால் அன்பில்லாமையால் இவளுடைய பிரிவினாலுண்டாகிய பெரிய துன்பம் பொருந்திய உள்ளம் நடுங்குதலைச் செய்யும்பொருட்டு இயல்பில்லாதவற்றை மேற்கொள்ளுகின்ற பொய்ம்மையாக இடிக்கின்ற அதிர்ச்சியையுடைய நின் முழக்கத்தை மெய்ம்மையாகக்கொண்டு ஆரவாரிக்கின்ற மயிலினமாகிய அறிவிலாத அக்கூட்டம்போல நின்னைக்கண்டவுடன் அவர் இப்பொழுது வருகுவரென்று யானும் மயங்குவேனோ? அங்ஙனஞ்செய்யேன்; அவர் இயல்பாகிய கார்ப்பருவத்திலேதான் வருகுவர்; நீ வீணே முழங்காதே கொள்; நீடுவாழ்வாயாக. எ - று.

வாழியர் - இகழ்ச்சிக்குறிப்பு.



கார்ப்பருவந்தொடங்கியுங் காதலர்வாராமையால் வருந்திய தலைவி தேறுதல்வேண்டி மழையைப் பொய்ம்மழையென்று மறுத்தாள். மேயப் பாடு - பெருமிதம். பயன் - தலைவியையாற்றுவித்தல். (உ சு அ)

## உ சு கூ. உலோச்சனார்

நெய்தல் : இது, வரைவிடைமெலிந்தது.

எ - து, களவொழுக்கத்துத் தலைமகன் வரைவிடைவைத்துச் சென்றான் நீட்டித்தலும் வருந்திய தலைவி, முன்பு நமதுசேரியில் அலரெழுந்தமையால் அதுபொறாத கொண்கனதுதேர் தடுக்கவும் நில்லாது சென்றுவிட்டதன்றே? ஆதலின் அவன் மீண்டுவந்து வரைவதுமுளதாமோ என அழிந்து கூறுநிற்பது.

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகந்தோறும்
வெள்ளி அன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தா துதிரப்
புலிப்பொறிக் கொண்ட பூநாறு குரூஉச்சுவல்
வரிவண் டூதலிற் புலிசெத்து வெரீஇப்
பரியுடை வயங்குதாள் பந்தின் தாவத்
தாங்கவுந் தகைவரை நில்லா ஆங்கண்
மல்லலஞ் சேரி கல்லெனத் தோன்றி
அம்பல் மூதூர் அலரெழச்
சென்றது அன்றே கொண்கன் தேரே.

உரை :—இரும்புபோன்ற கரியகிளையையுடைய புன்னை நீலம் போன்ற பசிய இலையிடமெங்கும் வெள்ளிபோன்ற விளங்கிய பூங்கொத்தினிடை உள்ள பொன்போன்ற நறிய மகரந்தம் உதிராநிற்ப, புலியினது புள்ளியைக்கொண்ட அழகு விளங்கிய நல்லநிறமுற்ற மேற்புறத்தையுடைய வரியமைந்த வண்டுகள் ஊதுதலினாலே இது புலியோசையோவென்று அயிர்த்து அச்சமுற்றுப் பலமுறை இழுத்து நிறுத்தவும் நிறுத்தியவிடத்தில் நில்லா ஆகித் தேரிற்பூட்டிய குதிரையினுடைய வயங்கியகால்கள் பந்து போலத் தாவாநிற்ப, வளப்பமிக்க நம்முடையசேரியிலே கல்லென்னும் ஓசையோடு வெளிப்பட்டுச் சிறிய பழிச்சொல்லைக்கூறும் முதிய ஊரொங்கும் பெரிதாய பழிதூற்றுதலினாலே கொண்கனது தேர் முன்பு இங்கு நில்லாது சென்றதன்றோ? அது நாம் அறிந்ததே; அத்தகைய தலைவன் வெள்கலின்றி மீண்டுவந்து மணஞ்செய்துகொள்ளவும் இயையுமோ? இனி என்செய்து உய்குவேன்? எ - று.

ஆங்கண் - ஊர். ஊரிலுள்ள சேரியெனக்கூட்டுக. பலவீடுகள் சேர்ந்திருப்பது சேரி. ஆங்காங்கு உவமையும் பொருளுமொத்தமையின், உள்ளுறையின்மையறிக. கைகோள் - களவு. கேட்போர் யாருமில்லையாதலில் தானே கூறியாறுதல். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உசக)



## உருo. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

மருதம் : இது, புதல்வனெடுபுக்க தலைமகன் ஆற்றுனைப் பாணற் குரைத்தது.

*எ – து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில்பெறுனய்த் தன் புதல்வனொடு சென்றால் மனைவி சினங்கொள்ளாளென்னுங் கருத்தால் அங்ஙனமே கொண்டுபுகுதலும் அதனையறிந்து தலைவி ஊடல்நீடுதலை உடன்வந்த பாணனைநெருங்கி யானும், புதல்வனுமாக அடைந்தவழியும் அவள் வெகுண்டு 'நீயாவனடா' என்றிகந்து நின்றது நகையாகின்றது ஆதலின், யாம் நகுவோம் வாராயென அவள் ஊடல்தணியும்படி கூறுகிற்பது.*

நகுகம் வாராய் பாண பகுவாய்
அரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சந் துரப்ப யாந்தன்
முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறைவனப்பு உற்ற மாசறு திருநுதல்
நாறிருங் கதுப்பின்எம் காதலி
வேறுணர்ந்து வெரூஉமான் பிணையின் ஒரீஇ
யாரை யோவென்று இகந்துநின் றதுவே.

உரை :—பாணனே! எமது அருகில் வருவாயாக; பகுத்தவாய்வழியாலே உள்ளே பரலிடப்பட்ட கிண்கிணியொலிப்பத் தெருவிலே முக்காற் சிறுதேரைப் பின்பற்றிக்கொண்டு நடைபயிலுகின்ற இனியமொழியை உடைய புதல்வனை எம்மார்போடணைத்தலும் அவனது செவ்வாம்பல் மலர் போலத் தோன்றுஞ் சிவந்த வாய்நீரொழுகுதலாலே சிதைந்த சந்தனப் பூச்சோடு, விருப்பம்வரும் எம்முள்ளம் எம்மைச்செலுத்த யாம் எம் காதலியை முயங்கவேண்டிய விருப்பத்துடனே அருகிலே சென்றேமாக, அங்ஙனஞ் சென்றவுடன் பிறைத்திங்களைப்போன்ற அழகுபொருந்திய மாசற்ற சிறப்புடைய நெற்றியையும் மணங்கமழுங் கரிய கூந்தலையுமுடைய அவள் தன் உள்ளத்து வேறாகக்கருதிப் பிணைமான்போல வெருண்டு எம்மைநீங்கி அயலேசென்று நின்று 'நீ என்னருகில் வருதற்கு யாவனுந்தன்மையுடையை' என்று இகந்துநின்றதை நினைக்குந்தோறும் நகைதோன்றுதலானே நாம் இருவேமும் நகாநிற்பம் ; எ - று.

தான் காதலிபால் உழுவலன்புடையனென அவள்கருதுமாறு நெஞ்சந் துரப்பஎன்றான். அவளை நன்குமதித்தமைதோன்ற நுதலையுங் கூந்தலையுஞ் சிறப்பித்தான். அணைந்தவழி நுதலையுங் கூந்தலையுந் தைவரல் இயல்பாதலிற் கூறினனுமாம். மெய்ப்பாடு - பிறர் எள்ளல்பொருளாகப் பிறந்தநகை. பயன் - ஊடல்தணிவித்தல். (உ௫௰)



உ௫௧.

# மதுரைப் பெருமருதிள நாகனார்

குறிஞ்சி :

இது, சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.

எ - து, களவொழுக்கத்துத் தலைமகன் ஒரு சிறைப்புறத்தானாக வந்திருப்பதையறிந்த தோழி, தலைவியை இற்செறிப்பறிவுறுத்துவாள் தினையை நோக்கித் தினையே! யாம் நாடனை விரும்பியதுகாரணமாகவே நின்னைப் பாதுகாத்தலையும் நீ காண்பாய்; இப்பொழுது எம்மை இற்செறித்து அன்னை வெறியெடுத்ததனிமித்தம் நின்னைக் காப்பாரில்லாமையாலே, பறவைகள் நின் கதிரைக் கொண்டுபோய் விடுமாதலின் நீ இப்பொழுது விளையாமல் பிற்காலத்து விளைவாயாகவென நயந்து கூறுநிற்பது.

நெடுநீர் அருவிய கடும்பாட்டு ஆங்கண்
பிணிமுதல் அரைய பெருங்கல்
வாழைக்
கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்
நன்மலை நாடனை நயவாய் யாமவன்
அளிபேர் அன்பின் இன்குரல் ஓப்பி
நின்புறங் காத்தலும் காண்போய்
நீயேன்
தளிரேர் மேனித் தொல்கவின் அழியப்
பலிபெறு கடவுட் பேணிக் கலிசிறந்து
தோடங்குநிலைப் பறவை உடங்குகுரல்
கவருந்
தோடிடங் கோடாய் கிளர்ந்து
நீடினை விளைமோ வாழிய தினையே.

உரை :—இனையே! நெடிதாம் நீர்மையுடைய அருவியினது ஒலிமிக்க அவ்விடத்திலே பிணிப்புண்ட அடியையுடைய பெரியமலையிடத் துண்டாகிய வாழையின் கொழுத்த அழகிய கனியை மந்திகள்கவர்ந்து உண்ணுநிற்கும் நல்ல மலைநாடனை விரும்பி யாம் அவனது கருணைமிக்க அன்பினால் நின்னுடைய கதிர்களைக் கிளிகள் கொய்யாதபடி ஓப்பி நின்னைப் பாதுகாத்திருப்பதையும் நீ கண்டிருக்கின்றாயன்றே? தளிர்போன்ற என்னுடம்பில் உள்ள பழைய அழகுகெடும்படி அன்னையானவள், யான்வெளிப்படாதவாறு இல்வயிற்செறித்து ஆடுமுதலிய பலியைப்பெற இருக்கின்ற முருகவேளை வழிபட்டு மாதர்குழாத்தொடுகூடி ஒலிமிக்கு வெறியெடுக்குங்காலை யான் நின்னைக் காப்பதில்லாது கைவிட்டு விடுதலானே கிள்ளைமுதலாய பறவைகள் ஒருசேரவந்து உன்னுடைய கதிர்களைக் கொய்துகொண்டு போகாநிற்கும்; ஆதலின் இப்பொழுது நின்கதிர்த்தோட்டினிடம் தலைசாயாது நிமிர்ந்துநின்று நெடுநாட்கழித்துக் கதிரீன்று விளைவாயாக; நீ நெடுங்காலம் வாழ்வாயாக; எ - று.

நாடனொடு களவுப்புணர்ச்சிநீட்டிக்கச் செய்தலாலும், பகற்குறிக்கிடங் கொடுத்தலாலும் வாழியவென்றாள். வெறியெடுத்தகாலை அறத்தொடு நிற்றலின் பின்வரையுநாள் தினைகொய்யுங்காலமும் வேங்கைமலருங் காலத்தொடுபட்டு வருதலால், அப்பருவங்கடந்து பின்னர்க்கொய்யும்படி காலம் நீட்டித்து விளைவாயாகவென்றாள்.

## மூலமும் உரையும்

### உஅ௩

உள்ளுறை :—அருவியொலிக்கின்றவிடத்துத் தோன்றிய வாழையின் கனியை மந்திகவருமென்றது, வெறியெடுத்து முழங்குமிடத்தும் தலைவன் அஞ்சாதுவந்து இவளது நலம்பருகுவானவனென்றதாம். இனித் தமரெல்லாங்கூடி மகிழ்கின்றவிடத்து வரைவொடு புகுந்து தலைவன் தலைவியை மகிழ்ந்து துய்ப்பானவனெனவுமாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உ௫௧)

## உருஉ. அம்மெய்யநாகனார்

பாலை : இது, பொருள்வயிற்பிரியுமெனக்
தோழி சொல்லியது.

கவன்றதலைமகட்குத்

எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரிவானெனக் குறிப்பாலறிந்து வருந்திய தலைமகளைத் தோழி, இவளுடைய குணங்கள் தலைவர்சூழ்ந்து மேற்கொண்ட வினையிலே குறுக்கிட்டுத் தடுத்தல் செய்திலபோலும்; ஆதலின் ஆற்றியிருக்கற்பாலதன்றி வேறு செய்யக்கடவதியாதெனக் கருதித் தேற்றுகிறது.

உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்
திறம்புரி கொள்கையொடு இறந்துசெயின்

அல்லது

அரும்பொருள் கூட்டம் இருந்தோர்க்கு

இல்லென

வலியா நெஞ்சம் வலிப்பச் சூழ்ந்த
வினையிடை விலங்கல போலும்

புனைசுவர்ப்

பாவை யன்ன பழிதீர் காட்சி
ஐதேய்ந்து அகன்ற அல்குல் மைகூர்ந்து
மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்
முயல்வேட்டு எழுந்த முடுகுவிசைக் கதநாய்
நன்னாப் புரையுஞ் சீறடிப்
பொம்மல் ஓதிப் புனையிழை குணனே.

**உரை** :—சுவரில் அலங்கரித்தெழுதிய பிரதிமைபோன்ற குற்றந் தீர்ந்த காட்சியையும், மெல்லியதாய்ப் பொருந்தியகன்ற அல்குலையும், மையெழுதப்பட்டு நீலமலரை எதிரிட்டுப் பிணைத்தாற்போன்ற கரிய இமைகளையுடைய குளிர்ச்சியுற்ற கண்ணையும், முயலைப்பிடிக்கவெழுந்த விரைந்த செலவுஞ் சினமுமுடைய நாயினது நல்ல நாவினையொத்த சிறிய அடிகளையும், செறிந்தகூந்தலையும், புனைந்த கலன்களையுமுடைய இவளுடைய குணங்கள்,—கிளைகளையுடைய ஓமைமரத்தின் பட்டகிளைகளுள் மறைந்து தங்கிச் சிள்வீடு ஒலியாநிற்கும் வேற்றுநாட்டின்கண்ணே செல்லுகின்ற நெறியில் இன்னவாறு செல்வோமென்னுங் கோட்பாட்டினோடு சென்றிருந்து பொருள்சேர்த்தாலல்லாமல், வீட்டின்கட் கவலையுடன் மனமடிந்து இருந்தவர்க்கு அரியபொருளின் சேர்க்கை ஒருபொழுதுஞ் சேர்வதில்லையென்று இதுவரையிலும் உடன்பட்டெழாத நெஞ்சம் ஒருப்படுதலால் தலைவர் ஆராய்ந்து தொடங்கிய காரியத்தின்கண்ணே

குறுக்கிட்டுத் தடுத்தல் செய்திலபோலும்; ஆதலின் ஆற்றியிருக்கற்பாலதன்றி வேறு செய்யக்கடவது யாதுமில்லை; எ - று.

சிள்வீடு - ஒருவகைவண்டு.

இறைச்சி:—சிள்வீடு ஓமைமரத்தின் பட்டகிளையிலுள்ளாலொடுங்கி ஒலியாநிற்குமென்றது, இவள்கொண்ட காமமானது கற்பின்மிகுதியால் வெளிப்படத்தோன்றாது உள்ளகத்தொடுங்கிக் கனற்றாநிற்குமேயென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். கைகோள் - கற்பு. (உ௯உ)

## உ௯௩. கபிலர்

குறிஞ்சி: இது, செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, தலைவி அழகின் கதிர்ப்புமிகுதலாலே காவலுட்பட்டவள் ஆயினள், நீதானும் வெய்யவாகப் பெருமூச்செறியாநின்று என்னுடைய மொழியைக் கேளாயாய் வேறுகருதாநின்றனை, இனி வரைந்தாலல்லாது களவொழுக்கம் எங்ஙனம் நிகழ்த்த இசையுமென்று தோழி தலைவனை நோக்கித் தலைவியின் இற்செறிப்பு அறிவுறுத்தி வரைவுகடாவாநிற்பது.

புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க்
காணினும்
பள்ளி யானையின் வெய்ய உயிரினை
கழிபடு வருந்திய எவ்வமொடு
பெரிதழிந்து
எனவ கேளாய் நினையினை நீநனி
௫. உள்ளினும் பனிக்கும் ஒள்ளிழைக்

குறுமகள்

பேரிசை உருமோடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப்

பினளே.

உரை:—ஒள்ளிய இழையையணிந்த இளமகளாகிய தலைவி,—பெரிய முழக்கமுற்ற இடியுடனே மழை மாறாதுசூழ்ந்து பெய்தலையுடைய பலவாகிய பனங்குடையிலிட்டுண்ணுங் கள்ளினாலாகிய பேருணவையுடைய பாரியினது பலாமரமிக்க பறம்புமலைபோலப் பெரிய அழகு அமைதலாலே இல்வயிற்செறிக்கப்பெற்று அரியகாவலுட்பட்டவளாயினாள்; அங்ஙனம் காவலுட்படுதலானே இக் களவொழுக்கத்தைக் கருதினாலும் நடுங்குந் தன்மையளாயிராநின்றனள், நீதானும் புள்ளினம் தம்தம் கூட்டின்கண்ணேசென்று கூடியின்புற்றாலும் தலைவனுந் தலைவியுமாகக்கூடிப் புணர்ந்தவரைக் கண்ணாலே கண்டாலும் படுக்கையிலேகிடந்த யானைபோல வெய்ய பெருமூச்சினையுடையையாய் மிகுதிப்பட வருத்தமுற்ற துன்பத்துடனே பெரிதும் அழிந்து யான் கூறுவனவற்றையுங் கேளாது மிகக்கருதுந் தன்மையுடையையாயினை; இங்ஙனம் வருந்தியாவதென்னோ? இன்னேசென்று வரைவொடுவந்துபுகுதுவாய்; வரைந்துகொள்வாய்; யான்கூறுவன இவைகளேயாகும்; எ - று.

மாரிமுற்றிய குன்றமென்க.

ஆற்றாறஞ்சல் முதலியவற்றாலும் காணும்பொழுதிற் காணாப்பொழுது பெரிதாயிருத்தலாலும் வரையுங்கருத்தன்றித் தலைவிக்கு இக்களவொழுக்கம் உடன்பாடில்லையெனக் குறிப்பாள், உள்ளினும் பனிக்குமென்றாள். ஒருகாரியஞ் செய்வார்க்கு அக்காரியம் முட்டுப்பட்டவழி அறிவுமயங்கல் இயல்பாதலின், அருங்காப்பினால் நின்களவொழுக்க முட்டுப்பட்டவழிப் பெரிதும் அழிந்து நினைவுடையையாயினை என்கூற்றையுங் கேட்பாயல்லை என்று இரங்கிக் கூறினாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (உ௫௩)

## உ௫௪. உலோச்சனார்

**நெய்தல்:** இது, தோழி படைத்துமொழிந்தது.

எ - து, தலைமகன் குறையுற்றும் அக்குறை நீக்கப்பெறானாய்ச் செல்கின்றானை ஆற்றுவிக்கக் கருதியதோழி புதியனவாகிய சிலமொழிகளை அமைத்துக்கொண்டு பரப்பனே! நீ எஞ்சிறுகுடியின்கண் இன்றிரவு தங்கிச் செல்லுவையாயின் நின்பரிகள் உணவுண்ண நீயும் தனியாகத் தங்குவை அல்லையெனப் புனைந்து கூறுநிற்பது.

வண்டல் தைஇயும் வருதிரை
உதைத்தும்
குன்றோங்கு வெண்மணல் கொடியடும்பு
கொய்தும்
துனியில் நன்மொழி இனிய கூறியும்
சொல்லெதிர் பெறாஅய் ஆகி மெல்லச்
௫. செலீஇய செல்லும் ஒலியிரும் பரப்ப
உமணர் தந்த உப்புநொடை நெல்லின்
அயினி மாஇன்று அருந்த நீவீக்

கணம்நாறு பெருந்தொடை புரளும்
மார்பில்
துணையிலை தமியை சேக்குவை அல்லை
நேர்கண் சிறுதடி நீரின் மாற்றி
வானம் வேண்டா உழவினெம்
கானலஞ் சிறுகுடிச் சேர்ந்தனை செலினே.

உரை :—பகற்பொழுதெல்லாம் எம்முடன் வண்டல்மண்ணை வீடு போலச் சமைத்துக்கோலஞ்செய்தும், கரைமேலேறுகின்ற அலையை எற்றியும், மலைபோலுயர்ந்த வெளிய மணல்மேட்டிலே படர்ந்த கொடியடும்பின் பூவைப் பறித்தும், வருத்தந்தீர்ந்த நல்லவார்த்தை இனியவற்றைக் கூறியும், அங்ஙனம் நீ கூறியவற்றிற்கு விடையும்பெறுயாகி மெல்ல நின்னூர்க்குப் போகும்பொருட்டுச் செல்லாநின்ற ஒலிக்கின்ற பெரிய கடற்பரப்பினையுடைய தலைவனே! நேர்மையான இடத்தையுடைய உப்புப் பாத்தியிலே கடலின்நீரைக் கொணர்ந்து பாய்ச்சி விளைவித்துக் கொள்வதன்றி மழையை விரும்பாத வேளாண்மையுடைய கடற்கரைச்சோலை சூழ்ந்த எமது சிறுகுடியின்கண்ணே வந்து சேர்ந்து இராப்பொழுதில் அங்கே தங்கியிருந்து செல்வாயாயின்,—உப்புவாணிகராலே கொண்டுவரப் பட்ட உப்புவிலையினாற் பெற்ற நெல்லைக்குற்றி ஆக்கிய அரிசிக்காணத்தை நின்குதிரை இன்று உண்ணுநிற்ப, நீயும் மலரின்கூட்டம் நன்மணங்



கமழும் பெரிய பூமாலை புரளுகின்ற மார்பிலணைக்குந் துணையின்றித் தமியே தங்குவாயல்லை; அத்தகைய துணையாகிய தலைவியை யணைத்து உறங்கப்பெறுவாய்; எ - று.

சிறுதடி - உப்புப்பாத்தி "காயற் சிறுதடி கண்கெடப் பாய்தலின்" என்றார் (ரு௬௬) அகத்தினும். இனியகூறல் - இம்முத்து நல்லன, இக்கண்ணிநல்லன, இத்தழைநல்லன, இவைகொள்ளற்பாலன என்பன வற்றைக் கூறுதல். அடும்புகொய்தல்-அதன் மலரைக்கொய்து பாவைக்குச் சூட்டக்கொடுத்தல். துனியில் நன்மொழி - சினவாது இரக்குமாறு கூறும் நல்லமொழி. நின் இரப்புக்கியைந்தழிக் களவுநீட்டிப்பின் ஏதம் பயக்குமாகலானும், வரைந்தன்றிப் பலநறிய மனைவயிற்றங்க இயலாதாக லானும் வரைந்தெய்துக வென்பாள் இங்ஙனம் கூறினள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவனை ஆற்றுவித்தல். (உ௯௪)

## உ௫௫. ஆலம்பேரி சாத்தனார்

### குறிஞ்சி: இஃது, ஆறுபார்த் துற்றது.

ஏ - து, "ஒருதலை யுரிமை வேண்டியும்" என்ற (தொல்-பொ-உஉ௫) சூத்திரப்படி வரைதல்வேட்கையுற்ற தலைமகள் தோழியைநோக்கி ஆற்றது ஏதங்கூறி வரைந்தெய்தும்படி தலைமகனுக்குச் சொல்லுவாயாக வென்பாள் கானவர் துஞ்சார், நெறியின்கண்ணே புலிமுழங்காநிற்கும், மழைபெய்து இடி இடியாநிற்கும், இத்தகையபொழுதில் நாம் காமத்தால் வருந்தினும் அவர் வாராதிருத்தல் நல்லதாகுமென நெறியினது ஏதங் காட்டி மறுத்துக் கூறாநிற்பது.

கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே
உருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக்
கடியுடை வியன்நகர்க் கானவர்
துஞ்சார்
வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை
௫. கன்முகைச் சிலம்பிற் குழுமி மன்னே
மென்தோள் நெகிழ்ந்துநாம் வருந்தினும்

இன்றவர்
வாரா ராயினோ நன்றுமற்று இல்ல
உயர்வரை அடுக்கத்து ஒளிறுபு
மின்னிப்
பெயல்கால் மயங்கிய பொழுதுகழி
பாளுள்
திருமணி அரவுத்தேர்ந்து உழல
உருமுச்சிவந்து எறியும் ஓங்குவரை
யாறே.

உரை :—பேயினங்கள் விளக்கமுற இயங்காநிற்ப இவ்விராப்பொழுது எல்லாம் ஊர்முழுதுந் துயில்கொள்ளாநின்றது; கேட்போர் அச்சம் பொருந்துதற்குரிய தன்மையுடனே குறிஞ்சியென்னும் பண்ணைப்பாடிக் கொண்டு அகன்ற இவ்வூரைக்காத்தலையுடைய கானவர்யாருந் துயில்வா ரல்லர்; வலிய களிற்றியானையொடு பொருத வாள்போலுங் கோடுகளை யுடைய புலி துறுகல்மிக்க மலையடியினின்று முழங்காநிற்கும்; ஐயோ! ஓங்கிய மலைவழியில் உயர்ந்த மலைப்பக்கத்தில் விளங்கி மின்னி மழை



பெய்தலைமயங்கி நிற்கின்ற காலம் நீட்டித்த இரவுநடுயாமத்துப் பாம்பு தன்செவியிற் படுதலும் தன்னிடத்துள்ள அழகிய நீலமணியைக் கக்கி வருந்திஉழலுமாறு சினங்கொண்டு இடிமுழங்கிமோதாநிற்கும்; இப் பொழுது மெல்லியதோள் தளர்வுற்று நாம் வருந்துவதாயினும் அவர் இங்கு வாராராயிருத்தலே மிகநல்லதாகும்; எ - று.

கழுது - பேய். கால்கிளர்தல் - ஒருசொல். பேய் காற்றைப்போல இயங்கவென உரைப்பினுமமையும். குழுமுதல் - குமுறுதல்.

யாமத்தெய்திற் பேயணங்குமென்பாள் கழுதுகால்கிளர்ந்தமை கூறினாள். அவன் வரினும் கூடுதலருமையென்னுங் கருத்தாற் காவலருமை கூறினாள். புலிகுழுமுதலும் உருமுச்சிவந்தெறிதலும் குறிப்பாள், நெறியினது ஏதங்கூறினாள். அவனின்றியமையாமை கூறுவாள் நாம் தோள்நெகிழ்ந்து வருந்தினுமென்றாள். இங்ஙனங்கூறவே இவ்வெல்லாந்தீர வரைந்தெய்துமாறு பணிப்பாயாகவென்றுளாயிற்று. மெய்ப்பாடு - அச்சம். பயன் - வரைவுவேண்டல். (உருசு)

# உருசு. பாலைபாடிய பெருங்கடுங்கோ

பாலை :

இது, பொருள்வயிற் பிரிந்தானென்று
தலைமகளைத் தலைமகன் ஆற்றியது.

ஆற்றுளாகிய

எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரியக் கருதியதறிந்து வருந்துகின்ற தலைவியை நீ மெல்லிய அடியுடையை, காடுகள் கொடியவாதலின் நின்னுடன் செல்லுஞ்செலவு இப்பொழுது தவிர்ந்தனம், கார்காலத்து நின்னைப்பிரியவே இயலாதாகலின், அப்பொழுதுந் தவிர்ந்தனமென அவளாற்றும் வண்ணந் தலைமகன் கூறுகிற்பது.

நீயே, பாடல் சான்ற பழிதபு சீறடிப்
பல்குறப் பெருநலத்து அமர்த்த கண்ணை
காடே, நிழல்கவின் இழந்த அழல்கவர்

மரத்த

புலம்புவீற் றிருந்து நலஞ்சிதைந் தனவே
இந்நிலை தவிர்ந்தனம் செலவே

வைந்நுதிக்

களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்
கார்செயல் செய்த காமர் காலை
மடப்பிணை தழீஇய மாஎருத்து இரலை
காழ்கோள் வேலத் தாழ்சினை டியந்த
கண்கவர் வரிநிழல் வதியுந்
தண்படு கானமுந் தவிர்ந்தனஞ்

செலவே.

உரை:—நீதான் புலவராலே பாடுதற்கமைந்த குற்றமற்ற அழகிய சிறிய அடிகளுடனே பல்கியபெரிய அழகமைந்த அமர்த்த கண்ணை யுடையையா யிராநின்றனை; காடுகளோ தீப்பற்றிய மரங்களையுடையன வாதலின், நிழலும் அழகும் நீங்கியொழிந்தன; அவ்வண்ணம் ஒழிதலும் தனிமை நிலைபெற்றிருத்தலினால் நன்மைகளெல்லாம் ஒருங்கே சிதைவுற்

ந. நா.—19

றனை; இத்தன்மையாகிய நிலைமையினால் நின்னை உடன்கொண்டு சேறல் இயையாமையின் நின்னுடன் செல்லுதலைத் தவிர்ந்தனம்; அன்றிக் கூரிய நுனியையுடைய களாவின்மலர் ஒருங்கேமலர்ந்து மணங்கமழாநிற்ப, பிடாமலர் முறுக்குவாய் நெகிழ்ந்து மலர மேகம் தான் செய்யவேண்டிய மழைபெய்தலைச் செய்யத்தொடங்கிய அழகிய கார்ப்பருவத்தில் இளைய பிணைமானைப் புணர்ந்த கரியபிடரினையுடைய கலைமான் உள்ளே வயிர முற்றிய வேலமரத்தின் தாழ்ந்த கிளையினாற்பல்கிய காண்போர்கண்ணைக் கவர்ந்துகொள்ளும் வரிபொருந்திய நிழலிலே தங்கியிருக்குங் குளிர்ச்சி உற்ற காட்டின்கண்ணே செல்லுவதனையுந் தவிர்ந்தனம்; ஆக இருவகைக் காலத்தும் நின்னைப் பிரியாதிருக்க நீ வருந்துவதென்னை? வருந்தாதே கொள்; எ - று.

வெப்பத்தில் அடிவைத்தல் இயையாதென்னுங்கருத்தால் அடியையும், நோக்கவுமியையாதென்னுங் கருத்தாற் கண்ணையுங் கூறினான். கார்காலத்தே கலைமான் பிணையைத்தழுவி உறையுமாதலின் அவற்றை நோக்குவார்தாமும் பிரிந்திருப்ப மனம்பொருந்தார் எனக்கொண்டு அக்காலத்துந் தவிர்ந்தனம் என்றான். இனிக்காதலியைக் காதலன் அணைந்திருந்தாலன்றிக் கார்முதல் நான்குபருவங்களையுங் கடத்தலரிதாதலின் அங்ஙனங் கூறினானெனினுமாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (உ௫௬)

## உ௫எ. வண்ணக்கன் சொருமருங்குமரனார்

### குறிஞ்சி: இது, தோழி தலைமகனது ஏதஞ்சொல்லி வரைவுகடாயது.

எ - து, இரவுக்குறிவருந் தலைமகனைத் தோழி நெருங்கி, நாடனே! எம்மை அருளாயாகிச் சிறுநெறியிலே சிங்கமுதலாயின இயங்குதலறிந்து வைத்தும் நடுயாமத்தில் வாராநின்றனை; இதற்கு யான் வருந்துகின்றேன் என இரவுக்குறிமறுத்து வரைவுடன்படுமாறு கூறாநிற்பது.

விளிவில் அரவமொடு தளிசிறந்து

உறைஇ

மழையெழுந்து இறுத்த நளிர்தூங்கு

சிலம்பில்

கழைஅமல்பு நீடிய வானுயர்

நெடுங்கோட்டு

இலங்குவெள் அருவி வியன்மலைக்

கவாஅன்

அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால்

வேங்கைப்

பொன்மருள் நறுவீ கன்மிசைத் தாஅம்
நன்மலை நாட நயந்தனை அருளாய்
இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறிக்
கடமா வழங்குதல் அறிந்து
நடுநாள் வருதி நோகோ யானே.

உரை:—அரும்புகள் முகமலர்ந்த கரியகாம்பையுடைய வேங்கை மரத்தின் பொன்போன்ற நறியமலர் பாறைமேலுதிர்ந்து பரவாநிற்கும் நல்ல மலைநாடனே! எம்பால் விரும்பி அருள்செய்யாயாகி ஓயாத முழக்க மொடு மழைமிகுத்து இடியிடித்து மேகம் ஓங்கிச்சென்று பெய்யத்

தொடங்கிய குளிர்ச்சிமிக்க மலையிலே மூங்கில் நெருங்கிப்பரந்த மிக உயர்ந்த நெடிய சிகரத்தின்கண்ணே விளங்கிய வெளிய அருவியையுடைய அகன்ற மலைப்பக்கத்தில் வழிப்போகுவார் யாருமில்லாத நீர்விளங்கிய சிறியநெறியிலே கொடிய சிங்கமுதலிய விலங்குகள் இயங்குவதனை அறிந்துவைத்தும் இரவு நடுயாமத்தில் நீ வாராநின்றனை ; இதற்கு யான் நோவாநின்றேன் அல்லேனோ ? எ - று.

அமலுதல் - நெருங்குதல். தளி - மழை.

நீ இரவில் வரும் ஏதத்துக்கு யாம் அச்சமுறுதபடி வரைந்து பிரியாது உறையநினைந்தாயல்லையென்பாள், நயந்தனையருளாயென்றாள்.

உள்ளுறை :—சூடுவாரின்றி வேங்கையின் நறியமலர் கற்பாறையில் உதிர்தல்போல நீ வரைந்துகொண்டு அருகிருந்து நலனுகர்ந்திலை ; ஆதலின் தலைவியின் நலன் இழக்கலாயிற்றென்றதாம். மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பயன் - ஏதஞ்சொல்லி வரைவு கடாதல். (உருள)

## உருஅ. நக்கீரர்

### நெய்தல்: இது, தோழி செறிப்பறிவுறீஇயது.

எ - து, பகற்குறிவந்த தலைவனைத் தோழி நெருங்கிக் கொண்கனே ! எம் தலைவியின் வேளைகழல்வதனை அறிந்த அன்னை அவளை இல்வயிற் செறித்து ஓம்புவாளாயினள் ; இங்கு யான் தமியேனாய் வந்துபோகின்றேன் என வரைவுதோன்ற உரையாடாநிற்பது.

பல்பூங் கானல் பகற்குறி மரீஇச்
செல்வல் கொண்க செறித்தனள் யாயே
கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்

திருவுடை வியனகர் வருவிருந்து
அயர்மார்

பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கோக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட
அகலங் காடி அசைநிழற் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை
தூங்கல் வங்கத்துக் கூம்பிற் சேக்கும்
மருங்கூர்ப் பட்டினத்து அன்னவிவள்
நெருங்கேர் எல்வளை ஓடுவ கண்டே.

**உரை:**—*கொண்கனே, கதிரெறித்தலானே மக்கள்முதலாயினோர் கால்கள் வெம்பும்படி கீழைத்திசைமலையிலேதோன்றிக் காய்கின்ற ஞாயிற்றின் உடைய இயக்கம்பொருந்திய பகற்பொழுதிலே செல்வம் உடைய அகன்ற நகரின்கண்ணே வருகின்ற விருந்துகளைப் பாதுகாக்கும்படி பொன்னால் ஆகிய தொடியையுடைய மகளிர் சமைத்து நிவேதித்து முற்றத்திலே பலியாகப்போகட்ட கொக்கினது உகிர்போன்ற சோற்றைத் தின்று பொழுதுபடும் அளவில் அகன்ற மீன்கடையில் அசைகின்ற நிழலிலே குவித்த பசிய இறாமீனைக் கவர்ந்துண்ட பசுமையாகிய கண்ணை*

உடைய காக்கை, ஆங்கு வினை இன்றிக் காற்றுலசைகின்ற தோணியிலே பிணித்த பாய்மரத்திற்சென்று தங்காநிற்கும் மருங்கூர்ப்பட்டினம் போன்ற இவளுடைய நெருங்கிய அழகும் ஒளியும்பொருந்திய வளைகள் கழல்வனவற்றைக்கண்டு அன்னை இவ்வேறுபாடு முருகணங்கால் ஆகியது போலுமென உட்கொண்டு இல்லின்கண்ணேசெறித்துப் புறத்தேகவிடாது காவல்செய்யலாயினள்; ஆதலின் இவள் வருதற்கியலாமையால், இல்வயிற்செறிப்பை நினக்கு உரைசெய்யும்படி கருதிய யான் இன்று பல வாயமலர்களையுடைய கழியருகிலுள்ள சோலையிலே பகற்பொழுதின் கண்ணே குறியிடத்து வந்துபோகாநின்றேன்காண்; எ - று.

நிமிரல் - சோறு. நிழல் - அங்காடி நிழல்; அருகிலுள்ள மரத்து நிழலுமாம்.

நின்னைப்பிரிதலால் உடம்பு வாடி வேறுபட்டு வளைகளுங் கழலாநின்றன என்பாள், வளையோடுவ என்றாள். அருகிலுள்ளாளென அவன் ஆற்றவேண்டி இவளெனச் சுட்டுப்பெயராற்கூறினாள். இனி இங்ஙனம் வாடாதபடி வரைந்துகொள்ளெனக் குறிப்பாற்கொள்ளக்கிடந்தமையின் வரைவுகடாவாயிற்று.

உள்ளுறை :—மகளிரிட்ட பலிச்சோற்றையுண்டு அங்காடியிலே குவித்த இருமீனைக் கவர்ந்தகாக்கை வங்கத்துக் கூம்பிற்சென்று தங்குமென்றது, பாங்கற்கூட்டத்தால் நலனுகர்ந்து பாங்கியிற்கூட்டத்தான் ஆயதனையுந் துய்த்த நீ கவற்சியின்றி நின்னூரின்கண்ணே சென்று தங்காநின்றனை யென்றதாம். மெய்ப்பாடு - பருமிதம். பயன் - வரைவு கடாதல். (உருஅ)

## உருகூ. கொற்றங்கொற்றனார்

குறிஞ்சி : இது, தோழி தலைமகளைச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ – து, களவொழுக்கத்துத் தலைவன்கேட்டு வரையுமாற்றானே தோழி தலைவியைநோக்கித் தினைமுற்றின; இனி அவற்றைக் கொய்த உடன் நின்னை இல்வயிற்செறிப்பாராதலின் நாடனோடு இயைந்த கேண்மை இனி அரியவாகுமெனக் கருதாநிற்பேன்; அப்பால் யாது செய்வாமெனக் கவன்று கூறாநிற்பது.

யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன்வீ
வேங்கை ஓங்கிய தேம்கமழ் சாரல்
பெருங்கல் நாடனொடு இரும்புனத்து
அல்கிச்
செவ்வாய்ப் பைங்கிளி ஓப்பி
அவ்வாய்ப்
பெருவரை அடுக்கத்து அருவி ஆடிச்
சாரல் ஆரம் வண்டுபட நீவிப்
பெரிதமர்ந்து இயைந்த கேண்மை
சிறுநனி
அரிய போலக் காண்பேன் விரிதிரைக்
கடல்பெயர்ந் தனைய ஆகிப்
புலர்பதங் கொண்டன ஏனற் குரலே.

உரை :—தோழீ, திரையின் கதிரெல்லாம் விரிந்த அலையையுடைய கடல்தான் வற்றினாற்போலக் காயும்பருவம் எய்தினகண்டாய்; இனி அவற்றை நமர் கொய்து கொண்டுபோவதன்றி நின்னையும் இல்லின் கண்ணே செறிப்பது திண்ணம்; பொன்போன்ற மலரையுடைய வேங்கை மரங்கள் உயர்ந்த மணங்கமழ்கின்ற சாரலின்கண்ணே பெரிய மலைநாடனொடு கரிய தினைப்புனத்திலே தங்கிச் சிவந்த வாயையுடைய பசிய கிளியை ஓப்பி அங்குள்ள கரிய பக்கமலையின்கணுள்ள அருவியில் நீர்விளையாட்டயர்ந்து மலைச்சாரலிலெழுந்த சந்தனமரம் நறுமணங்கமழ்தலால் வண்டுவந்து விழும்படி அச்சந்தனத்தேய்வையைப் பூசிப் பெரிதும் விரும்பி இயைந்த நட்பு மிகச்சிறுகி இனி அதுதானும் இல்லையாகும்போல யான் காண்பேன்; ஆதலால் நாம் என்ன செய்யமாட்டுவோம்? எ - று.

நீவுதல் - கையாலே தடவுதல்; இங்குப் பூசுதலுக்காயிற்று. நாடனொடு இயைந்த கேண்மையெனக் கூட்டுக.

நாடனுடன் அல்கி ஓப்பி ஆடி இயைந்த பெரிய நட்பாதலின் அதன் கண் இடையற எய்தியவழிக் காதலி இறந்துபடுமென அவனுக்கு அறிவுறுத்தவேண்டி அரியபோலக் காண்பேனென்றாள். முன்போல நீங்காதுறைதல் வரைந்தன்றி இயலாதாதலின் வரைந்தெய்துகவெனக் கடாயதாயிற்று. மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-வரைவுகடாதல். (உருக)

## உ௬௦. பரணர்

### மருதம் : இஃது, ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் தலைமகளைத் தழுவலும் அவள் கொண்டிருந்த சினத்தை உள்ளடக்கி உடன்பட்டாள்போன்று 'ஊரனே! நீ இப்பொழுது மிக்க விருப்பமுற்றாய்போன்று புல்லுகின்றனை, முன்பு என் கோதை வாடுமாறு கையகன்று ஒழிந்தாயென்பதை யான் அறிவேன்' என உள்ளுறையால் அவன் பரத்தையிற் பிரிந்ததனையுங் கூறி ஊடல் நிங்காநிற்பது.

கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை

பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி அயலது
குன்றுசேர் வெண்மணல் துஞ்சும் ஊர
வெய்யை போல முயங்குதி முனையெழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்
மலிபுனல் வாயில் இருப்பை அன்னஎன்
ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த
முகையவிழ் கோதை வாட்டிய
பகைவன் மன்யான் மறந்தமை கலனே.

உரை :—கழுநீர் மலரை மேய்ந்த பெரியகாலையுடைய எருமை அயலில் உள்ள வயலிலே படர்ந்த தாமரையின் குளிர்ந்த மலரைத் தின்பதனை வெறுத்துவிட்டுக் கையிலே தடிகொண்ட வீரரைப்போலச் செருக்கி



நடந்து அதன் பக்கத்துள்ள குன்றுபோலக் குவிந்த வெளிய மணலின்மீது துயிலாநிற்கும் ஊரனே, நீ இப்பொழுது விருப்பமுடையாய் போலப் பலகாலும் என்னைத் தழுவிக்கொள்ளுகின்றனை; பகைமிகுதலாலே ஆண்டு வந்த பகைவரையழித்த சிவந்த வேற்படையையுடைய வீரனாகிய 'விராஅன்' என்பவனது நிறைந்த புனல்வாயிலை அடுத்த இருப்பையூர்போன்ற என்னைவிட்டொழிதலானே என்னுடைய தழைத்த பலவாகிய கூந்தல் அழகுபெற அலங்கரித்த அரும்புமலர்ந்த பூமாலைவாடும்படிசெய்த மிக்க பகைவனல்லையோ? யான் நின்செய்கையை மறந்திருப்பேனல்லேன்காண்; ஆதலின் என்னைத் தொடாதேகொள்; எ - று.

பழனம் - நீர்நிலைவயல்.

மெய்ம்மையாக என்பால் நினக்கு அன்பில்லையென்பாள் வெய்யை போல முயங்குதியென்றாள். கோதை புனைந்ததன் பயனாகிய புணர்ச்சி எய்தப் பெருமையிற் கோதைவாட்டிய பகைவனென்றாள். தொடராதே என வெறுப்புக்கொண்டமை குறிப்பாள் மறந்தமைகலனென்றாள். பணிந்து வேண்ட ஊடல்தீர்வாளாவது.

உள்ளுறை :—தாமரைமலரைவெறுத்துக் கழுநீரைமேய்ந்த எருமை மணற்குன்றிலேசென்று தங்குமென்றது, தலைவிநலனை வெறுத்துக் காதற் பரத்தையின் இன்பந்துய்த்த தலைவனே, நீ ஆண்டுந் தங்காயாய்ச் சேரிப் பரத்தையின் மனையின்கண்ணே சென்று உறங்குவாயாயினையென்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - ஊடல்தீர்தல். (உகூ0)

## உகூக. சேந்தன்பூதனார்

### குறிஞ்சி : (க) இது, சிறைப்புறமாகத் தோழி இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது.

எ - து, தலைவன் ஒருசிறைப்புறமாக வந்திருப்பதை அறிந்த தோழி தலைவியை நோக்கி இத்தகைய கொடிய சிறுநெறியில் நம் தலைவர் இருளில் வருதலால், அவர் நம்பால் அருளிலராவாரென இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது.

### (உ) தலைமகள் இயற்படமொழிந்ததூஉமாம்.

எ - து, தலைவி வரைதல்வேட்கையளாய் மொழிந்ததுகேட்ட தோழி தலைமகளை இகழ்ந்து கூறுதலும் அதுபொறாத தலைமகள் நொந்து அவர் வரைந்துகொள்ளாது இருளில்வருதலால் நம்பால் அருளிலராயினும் நாம் இறந்துபடுவதுகருதி அன்பின் வருதலால், அவர் நீடுவாழ்வாராக என இயற்படக் கூறுகிற்பதுமாம்.

அருளிலர் வாழி தோழி மின்னுவசிபு
இருள்தூங்கு விசும்பின் அதிரும் ஏறோடு
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்
நெடும்பெருங் குன்றத்துக் குறும்பல மறுகித்
தாவில் பெரும்பெயல் தலைஇய யாமத்துக்
களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்
வெளிறில் காழ்மரம் பிணித்து நனிமிளிர்க்கும்



உ௬ரு

சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை
எருவை நறும்பூ நீடிய
பெருவரைச் சிறுநெறி வருத லானே.

(க) உரை :—தோழீ! நீ நெடுங்காலம் வாழ்வாயாக; மின்னல் பிளந்தெழுந்து இருள் நிறைந்த ஆகாயத்தில் அதிர்கின்ற இடிமுழக்கத்துடனே வெய்ய ஆதித்தன் வெளியிலே தோன்றுதபடி மறையச்செய்த நிறைந்த சூலையுடைய மேகம், நெடிய பெரிய மலையிடத்துச் சிறிய பலவாக இயங்கி வருத்தமில்லாத பெரிய மழையைப் பெய்துவிட்ட நடுயாமத்திலே களிற்றியானையைப்பற்றிச் சுற்றிக்கொண்ட பெரிய சினத்தையுடைய பெரும்பாம்பு வெண்மையில்லாது முற்றிய வயிரம்பொருந்திய மரத்துடனே சேரப் பிணித்து மிகப் புரட்டாநிற்கும் சந்தனமரத்தினின்று போந்த நறுமணங்கமழ்கின்ற மலைப்பிளப்பினையுடைய துறுகல்லின் அயலிலே கொறுக்கச்சியின் நல்லபூ நீடி மலர்ந்த பெரிய மலையின்கணுள்ள சிறிய நெறியில் வருதலால் நம் தலைவர்தாம் நம்பாற் சிறிதும் அருளுடையர் அல்லர்: இனி அங்ஙனம் வாராதிருக்குமாறு கூறாய்; எ - று.

அவர் வருநெறியின் ஏதங்கருதி நாம் வருந்தும்படி வருதலின் அருளிலர் என்றாள். இங்ஙனங் கூறவே வரைந்துகொள்வதன்றி வேறு செய்யலாவது இன்மையால், வரைவுகடாவாயிற்று. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல்.

(உ) உரை :—அவர் வரைந்துகொள்ளாது இருளில் வருதலால் நம்பால் அருளிலராயினும் நாம் இறந்துபடுவது கருதி அன்போடுவருதலால், அவர் நீடுவாழ்வாராகவென்று கூறிமுடிக்க. (உசுக)

## உசுஉ. பெருந்தலைச்சாத்தனார்

**பாலை :** இது, தலைமகள் ஆற்றாக்குறிப்பறிந்து கியது.

பிரிவிடை விலக்

எ - து, பொருள்வயிற் பிரிகின்றானென்பது உணர்ந்த தலைமகள் வருந்துதலும் அதனையறிந்த தலைவன் இத்தகையாளை விட்டுப் பிரிவேன் என்று என்னெஞ்சு கருதுமாயின், இன்மையதிளிவு மிகக் கொடிதென அழிந்து கூறாநிற்பது.

தண்புனக் கருவிளைக் கண்போன் மாமலர்
ஆடுமயில் பீலியின் வாடையோடு துயல்வர
உறைமயக் குற்ற ஊர்துஞ்சு யாமத்து
நடுங்குபிணி நலிய நல்லெழில் சாஅய்த்
துனிகூர் மனத்தள் முனிபடர் உழக்கும்
பணைத்தோள் அரும்பிய சுணங்கிற் கணைக்கால்
குவளை நாறுங் கூந்தல் தேமொழி
இவளின் தீர்ந்தும் ஆள்வினை வலிப்பப்
பிரிவன்நெஞ் சென்னும் ஆயின்
அரிதுமன் றம்ம இன்மையது இளிவே.

உரை :—ஈரிய புனத்திலுள்ள கருங்காக்கணத்தின் கண்போன்ற கரிய மலர் வாடைக்காற்று வீசுதலானே கூத்தாடுகின்ற மயிலின்பீலி போல ஆடாநிற்ப, விடாது மழைத்துளால் பொருந்திய ஊர்முழுதுமுறங்கும் நடு யாமத்து நடுங்குகின்ற காமநோய் வருத்தஞ்செய்தலாலே நல்ல அழகு குறைந்து துன்பமிக்க மனத்தளாய்த் தன்னை முனிந்தொறுக்கும் காம நோயால் உழக்குகின்ற பருத்ததோளையும், வெளிப்படத்தோன்றிய தேமலை யும், திரண்ட தண்மையுடைய குவளைமலர் மணம்வீசுங் கூந்தலையும், இனிய சொல்லையுமுடைய இவளைக் கைவிட்டும் பொருளின் முயற்சி என்னெஞ்சினை யிழுத்தலால் என்னெஞ்சு 'யான் இவளைப் பிரிகிற்பேன்' என்று கூறுநிற்கும்; அங்ஙனம் கூறுமாறல் வறுமையான்வரு மிளிவரவு அம்ம! திண்ணமாக மிகக்கொடியதேயாம்; இஃதொரு வியப்பிருந்த வாறென்? எ - று.

கருவிளை - கருங்காக்கணம். உறை - மழைத்துளி.

பிரிந்தவழி நடுயாமத்துத் தனிகூர்ந்து உழக்குங்கால் ஆற்றுவாரும் இலராவரேயென்பான் ஊர்துஞ்சியாமத்தை முதலிற் கூறினான். தோள் மீதுங் கூந்தல்மீதுங் கிடந்து முயங்குமின்பம் நினைவில்வர அதனையடுத்துப் பிற் கூறினான். முயங்காதிருந்தக்காலும் மொழியொன்றனைக்கேட்டே இன்புற்று இருக்கலாமே அதுவுமில்லையாவதோவென இரங்கி ஈற்றிற் கூறினான். தானே கூறியாறியது. கைகோள் - கற்பு. மெய்ப்பாடு - பிறன்கண்தோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இல்லத் தழுங்கல். (உகூஉ)

## உகூங. இளவெயினனார்

நெய்தல்: இது, சிறைப்புறமாகத் தோழி தலைமகனை வரைவு கடாயது.

எ - து, தலைமகன் ஒருசிறைப்புறமாக வந்திருப்பதை யறிந்த தோழி தலைவியைநோக்கி அவர் நம்பால் வந்துபோகின்ற களவொழுக்கத்தால் அடைந்த அலர்முதலாயவைகளை நாணத்தினால் நாம் நேரே கூறாவிடினும் நம்முடைய கண்ணீரே அவரறியும்படி உரைசெய்துவிடுகின்றனவென்று அழிந்து கூறுகிற்பது.

பிறைவனப்பு இழந்த நுதலும் யாழநின்
இறைவரை நில்லா வளையும் மறையாது
ஊரலர் தூற்றும் கௌவையும் நாணிட்டு
உரையவற்கு உரையாம் ஆயினும் இரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவோடு கானலெய் தாது
கழனி ஒழிந்த கோடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடன்மீன் ஒய்யும்
மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக்
கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக்கு
உரைத்த தோழி உண்கண் நீரே.

உரை :—தோழீ! பிறைபோன்ற அழகெல்லாம் இழந்த நினது நெற்றியையும், முன்கையளவி னில்லாது கழலும் வளையையும், மறைந் தேனுங் கூறுது நேராகவந்து ஊரார் அலர்அாற்றும் பழிச்சொல்லையும் சொல்லவேண்டிய நம் காதலனுக்கு நாம் நாணமேலீட்டினால் சொல்லா தொழிந்தோமெனினும், இரையை விரும்பி நிறைந்த சூலுடைமையின் இயங்கமாட்டா வருத்தத்தினாலே நெய்தனிலத்தின்கண்ணதாகிய கழியை அடையாமல் மருதநிலத்தின்கண்ணதாகிய கழனியிலே தங்கியிருந்த வளைந்தவாயை உடைய பேடைநாரைக்கு முடமுதிர்ந்த நாரைப்போத்துக் கடலின்மீனைக் கொண்டுபோய்க் கொடாநிற்கும் மெல்லிய கடற்கரைத் தலைவனைக்கண்டு பலகால் நாம் மறைக்கவும் மறைக்கவும் நிலைக்கொள்ளா மல் அளவுகடந்து, மையுண்ட நம்முடைய கண்களினீரே வெளிவந்து உரைசெய்துவிட்டன ; யாம் யாதுசெய்யவல்லேம் ? எ - று.

ஓய்யும் - கொடுக்கும். நிலைசெல்லல் - ஒருசொல்.

வரைந்து பிரியாது
கூறினள்.

முயங்குவையென்பாள் பிரிவினைநமும் அலருங்

உள்ளுறை :—வயலிலே தங்கிய பேடைக்கு நாரைப்போத்து, கடலின் மீனைக் கொண்டுவந்து சொரிதல்போலத் தலைவன் தலைவியை வரைந்து தன்னில்லத்தே கொண்டுசென்றுவைத்துத் தானும் பொருளீட்டிவந்து முட்டின்றி இல்லறம் நடத்துவனென்றதாம்.

இன்னும் இதனானே தன்னாட்டுப்பறவையும் மனைவியொடு வாழக் கண்டும் தான் அங்ஙனஞ் செய்திலனே இஃதென்ன வியப்போவென வேறும் ஒருபொருள் தோன்றிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உகந)

## உகச. ஆவூர்க் காவிதிகள்

## சாதேவனார் பாலை: (க)

இஃது, உடன்போகாநின்ற தலைமகன் தலைமகளை வற்புறீஇயது.

எ-து, உடன்போக்கிற் கொண்டுசெல்லுந் தலைமகன் மடந்தாய், ஊர் தோன்றுகின்றது உங்கே பாராய்: சிறிது நனி விரைந்து செல்லுவாயாக என ஆற்றிக்கொண்டு செல்லாநிற்பது.

(உ)

உடன்போய் மறுத்தராநின்றான் ஊர்காட்டி வற்புறீஇயதுமாம்.

எ-து, வெளிப்படை (ஊரெனப் பொதுப்படக் உரை இரண்டற்குமொக்கும்.)

கூறியிருத்தலால்

பாம்பளைச் செறிய முழங்கி வலனேர்பு
வான் தளி பொழிந்த காண்பின் காலை
அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும்
மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்
வீபெய் கூந்தல் வீசுவளி உளர
ஏகுதி மடந்தை எல்லின்று பொழுதே

வேப்பயில் இறும்பின் கோவலர்யாத்த
ஆபூண் தெண்மணி இயம்பும்
உதுக்காண் தோன்றுமெம் சிறுநல் ஊரே.

உரை:—மடந்தாய்! ஞாயிறு மேலைத்திசையிலே சென்று ஒளி மழுங்கியது, மூங்கில் நிறைந்த சிறிய மலையின்கண்ணே பசுவினிரைபூண்ட கோவலராலே கட்டப்பட்ட தெளிந்த ஓசையையுடைய மணி ஒலியா நிற்கும் எமது சிறிய நல்லூர் தோன்றுநின்றது, உவ்விடத்தேபாராய்: பாம்பு அளையினுள்ளே செறிந்திருக்குமாறு முழங்கி வலமாக எழுந்து மேகம் மழை பொழிந்த காட்சியையுடைய காலைப்பொழுதிலே அழகு விளங்கிய கலாபத்தை வியப்புடையதாக விரித்து ஆடுகின்ற நீலமணி போன்ற பிடரியை உடைய மயில்போல மலர்சூடிய நின் கூந்தல் வீசுகின்ற காற்று உளரி விரித்துவிடச் சிறிது விரைந்து செல்வாயாக; எ-று.

ஏர்பு - எழுந்து. காண்பு - காட்சி. ஐது - வியப்புடையது.

"இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே" (தொ - பொ - உகஎ) என்றதன்படி தலைவிக்கு மஞ்ஞையையும் அவள்கூந்தலுக்குக் கலாவத்தையும் உவமித்ததென்க. இது காதல் நிலைக்களமாக அடையடுத்த முதலொடு முதலவந்த உருவுவமம.

தன்னூர் மிக நெருங்கியதென்பான் ஆ பூணுமணி இயம்புமென்றான். இஃது அவளது அயாவொழியுமாறு கூறினனுமாம். விரைந்து செல்க வென்பான் கூந்தல்வளியுளர எகுதியென்றான். இனி அச்சமில்லையாதலால் 'கொண்டைமேற் காற்றடிக்கச்செல்' என்றானுமாம். மேய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகளை அயாவகற்றிக்கொண்டேகல். (உகச)

## உசுரு. பரணர்

குறிஞ்சி: இது, பின்னின்ற தலைமகன் நெஞ்சிற்கு உரைத்தது.

என் - து, பாங்கி மதியுடம்பாட்டின்கண்ணே இவ னொருகுறையுடையான்போலுமென்று தோழி உய்த்துணர நிற்குமிடத்து அதுவரையும் பொறாத தனது நெஞ்சைத் தலைவன் நெருங்கி நெஞ்சமே, இவளின் தலைவி யாகிய மெல்லிய கூந்தலையுடையாள் நம்பால் அன்புடையளாதலின் நீ வருந்தாதொழியென்று தெளியக் கூறாநிற்பது.

இறுகுபுல் மேய்ந்த அறுகோட்டு முற்றல்
அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை
வீளை அம்பின் வில்லோர் பெருமகன்
பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
பாரத்து அன்ன ஆர மார்பில்
சிறுகோல் சென்னி ஆரேற்று அன்ன
மாரி வண்மகிழ் ஓரி கொல்லிக்
கலிமயிற் கலாவத்து அன்னஇவள்
ஒலிமேன் கூந்தல் நம்வயி னானே.

உரை:—காய்ந்த புல்லை மேய்கின்ற உதிர்ந்த கொம்பினையுடைய முதிர்ச்சியையுடைய சேற்றிலோட்டி வருந்தச் செய்த புள்ளியையும் வரியையுமுடைய கலைமானை எய்யும் ஒலியையுடைய அம்பினையும் வில்லினையுமுடைய வீரர்தலைவனாகிய பொலிவுபொருந்திய தோளிலே கவசம் பூட்டிய மிஞிலி என்பவனாலே காவல்செய்துவருகின்ற பாரம் என்னும் ஊரைப்போன்ற, - ஆத்திமாலையையுடைய மார்பையுடைய சிலவாகிய ஊர்களை ஆட்சிகொண்ட செங்கோலையுடைய சோழனுடைய ஆரேற்றைப் போன்ற, - இவளுடைய தலைவியாகிய, - மழைபோன்ற கொடையும், கள்ளுணவுமுடைய ஓரியென்பவனது கொல்லிமலையிலிருக்கின்ற செருக்கிய மயிலைப்போன்ற நம்காதலியாவாள் அம்மயிலின் கலாபம்போன்ற தழைந்த மெல்லிய கூந்தலையுடையாள் நம்பாலளல்லளோ? ஆதலின் நெஞ்சமே, கவலைகொள்ளாதே: நின்செயல் விரைய முடிவுபெறுங்காண்; எ - று.

## வினை - அம்பினொலி.

கோடு முதிர்ந்தகாலத்து உதிர்தலின் அறுகோடெனப்பட்டது. முற்றிய கோடு உதிர்தலையுடைய கலையென இயைப்பினும் அமையும். பாரத்து அன்ன ஆரேற்று அன்ன மயிலன்ன காதலியாகிய இவளெனக் கூட்டி இவள்கூந்தல் நம்முடைய கையிலே சிக்குண்டதன்றோ இனி எங்குப் போகுவளென இயைப்பினுமாம். மெய்ப்பாடு - பிறன்கண்தோன்றிய ஆக்கம்பற்றிய இளிவரல். பயன் - தலைமகன் ஆற்றல். (உகரு)

## உகசு. கச்சிப்பேட்டு இளந்தச்சனார்

முல்லை: (க) இது, தலைமகனைச்

செலவுடன்பட்டது.

எ - து, தலைவன் வினைவயிற் செல்லக்கருதியதறிந்த தோழி, அவன் கவலையில்லாது சென்று வினைமுடித்து வருதல்கருதி அவனை நெருங்கி ஐயனே, எம்மை இங்கு நீங்கி வினைவயினேகுவிராயின், யாம் வருந்தாது சீறூரின்கண்ணே உறைவோம்; நல்லகுடியிலே பிறந்தாரைத் தனிவைத்த காலை வருந்துதல் அவர்க்கியல்பன்றெனை உடன்பட்டுக் கூறுநிற்பது.

(உ) கடிநகர்வரைப்பிற் கண்டுமகிழ்ந்த தலைமகற்குத் தோழி நம்மாலே யாயிற்றென்று சொல்லியதூஉமாம்.

எ - து, தலைமகன் அந்தணர் சான்றோர் அருங்கலமுன்னிட்டு மனையகம் புகுந்து தோழியைக் கண்டானுக்கு அவள் நீயிர் வரைவிடை வைத்துப் பிரியுங்காலை யாம் வருந்தாதிருந்ததன்றி இம்மணவினையை முயன்றேமில்லை, இது நும் முயற்சியானன்றோ நிகழ்ந்ததென மகிழ்ந்து கூறுநிற்பதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்.)

கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்
அகலுள் ஆங்கண் சீறூ ரேமே
அதுவே சாலுவ காமம் அன்றியும்



எம்விட்டு அகறிர் ஆயின் கொன்னொன்று
கூறுவல் வாழியர் ஐய வேறுபட்டு
இரீஇய காலை இரியின்
பெரிய அல்லவோ பெரியவர் நிலையே.

உரை:—ஐயனே, வாழ்வீராக; நீவிர் எம்மைக் கைவிட்டு வேற்று நாட்டுக்குச் செல்வீராயின் அக்காலத்தில் யாம் கொல்லைகளிலே தனியே யிருக்குங் கோவலருடைய சிறிய புனத்தைச்சார்ந்த குறுகிய காம்பினை யுடைய குராமரத்தின் குவிந்த கொத்திலுள்ள வெள்ளியபூ ஆடுமேய்த்தலை யுடைய இடையன் அணிந்துகொள்ளுமாறு மலராநிற்கும் அகன்ற இடத்தையுடைய சீறூரின்கண்ணே யிருத்தலையுடையேமா யிராநின்றேம்; அங்ஙனம் உறைகுவ தொன்றுமே எங்கள் விருப்பத்துக்குப் பொருந்துதலாயிருக்கும்; அல்லாமலும் யான் கூறுவதில் ஒருபயனு மில்லையாயினும் இன்னும் ஒன்று கூறுநிற்பேன்; நீயிர் வேற்றுநாட்டுக்குச் செல்லக் கருதி எம்மை இல்லின்கண் இருத்தியகாலத்து யாம் வருந்தியக்கால் பெருங்குடியிலே பிறந்தவர் நிலை பெரிய வல்லவாமன்றோ? எ - று.

அகலுளாங்கண் - அகன்ற இடம். ஆங்கண் - ஊரையடுத்தவிடமுமாம். பெரியவல்லவோ பெரியவர்நிலை: பிறிதுமொழிதலணி. இஃது அருள் மிக உடைமை.

பிரிந்தநிலைமகன் வருந்துணை இல்லின்கண் ஆற்றியிருத்தல் கற்புடை மகளிர் கடனதற்கேற்பச் சீறூரேமென்றாள். அதுவேகாமம் சாலுமென்றதனால் உடன்பட்டமையாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செலவுடன்படுதல். (உகசு)

## உகள. கபிலர்

நெய்தல்:

(க) இது, தோழி காப்புக்கைமிக்குக் காமம்பெருகிய காலத்துச் சிறைப்புறமாகச் செல்லியது.

எ - து, தலைவியை வேற்றுமைகண்டு இல்வயிற்செறித்தகாலத்துக் காமமிகுதிப்பட்டு வருந்துந்தலைவியை ஆற்றப்புகுந்த தோழி, தலைவன் சிறைப்புறத்தானாதலையறிந்து அவன் கேட்குமாற்றானே கானலில் என்றும் வாராதயான் ஒருநாள் வந்து ஆண்டுப் புள்ளொலிக்குரலைத் தலைவனது தேர்க்குரலோவென்றவுடன் அவன் அங்குவந்துவிட்டனன்; இப்பொழுது அங்ஙனமும் தலைப்பெய்யாதபடி காவல்செய்யப்பட்டாயிற்று என்று நொந்து கூறுநிற்பது.

(உ) வரைவுகடாயதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

நொச்சி மாஅரும் பன்ன கண்ண
எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி
இலங்கெயிற்று ஏளர் இன்னகை மகளிர்
உணங்குதினை துழவும் கைபோன் ஞாழல்
மணங்கமழ் நறுவீ அரிக்குந் துறைவன்





தன்னொடு புணர்ந்த இன்னமர் கானல்
தனியே வருதல் நனிபுலம் புடைத்தென

வாரேல் மன்யான் வந்தனேன் தெய்ய
சிறுநா வொண்மணித் தெள்ளிசை
கடுப்ப
௯0.

இனமீன் ஆர்கை ஈண்டுபுள் ஒலிக்குரல்
இவைமகன் என்னு அளவை
வயமான் தோன்றல் வந்துநின் றனனே.

உரை:—நொச்சியின் கரிய அரும்புபோன்ற கண்ணையுடைய மணலால் ஆகிய எக்கரின்கணுள்ள பெரிய சுற்றத்தையுடைய ஞெண்டின் கூட்டம், விளங்கிய பற்களின் அழகிய இனிய நகையையுடைய மாதர்கள் வெயிலிலே காயுந்தினையைக் கைவிரலாலே துழாவிவருதல்போல மணம் வீசும் ஞாழலின் உதிர்ந்த மலரைக் காலால் வரித்துக் கோலஞ்செய்யுந் துறையையுடைய தலைவனொடு கூட்டிய இனிய விருப்பத்தையுடைய கழிச்சோலையிலே இப்பொழுது அவனின்றித் தனியே நான்வருதல் மிக வருத்தமுடையதாய் இராநின்றதெனக் கருதி, அதனால் பெரும்பாலும் வாராதிருந்த யான் முன்பு ஒருநாள் வந்துளேனாகிச் சிறிய நாவையுடைய ஒள்ளிய மணியின் தெளிந்த ஓசையைப்போலக் கூட்டமாகிய மீனைத் தின்னுகிறதற்கு வந்து கூடுகின்ற புள்ளொலிக்குங் குரலைக்கேட்டு இவ்வொலி தலைமகனது தேரின்மணியோசைபோலுமென் றுட்கொண்டு 'இவ்வோசை தலைமகன்' என்று சொல்லெடுக்குமுன் வலிய குதிரையையுடைய தோன்றலாவான் ஆங்கு வந்துநின்றனன்; இப்பொழுது அங்ஙனமுங் காணுதபடி காவல்செய்ததாயிற்று; எ - று.

இறைச்சி:—ஞாழலி னுதிர்ந்தபூவை ஞெண்டு துழவுமென்றது, தலைவன்பால் நின்று பிரித்து இல்வயிற்செறிக்கப்பட்ட தலைவியை ஏதிலாட்டியர் அலர்தூற்றி வருத்தாநின்றார் என்றதாம். காப்புக்கைமிக்குக் காமம் பெருகியகாலத்துக் கூறினமையின் அறத்தொடு நிலைக்கட்பட்டது இத்துறை என்க. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - அறத்தொடுநிற்றல். (உ௬எ)

## உகூஅ. வெறிபாடிய காமக்கண்ணியார்

குறிஞ்சி: (க) இது, தலைமகட்குச் சொல்லியது.

எ - து, அன்னை வெறியயர்வதாயினளென்று படைத்து மொழிந்து வரைவுடன்படுக்கலுறுந் தோழி, தலைமகளை நெருங்கி அன்னையெடுக்கும் வெறிக்களத்துவரும் வேலனை நாம் காதலன்பால் அளவுகடப்பக் காதல் உண்டாக்கியும் அவனால் விரும்பப்படேமா யிருப்பது எக்காரணத்தா லெனக் கேட்பேமோவென ஆராய்ந்துகூறுநிற்பது.

(உ) தலைமகன் வந்தொழுகவும் வேறுபாடு கண்டாள்
அவன் வருவானாகவும் நீ வேறுபட்டாய்
வெறியெடுத்துக்கொள்ளும் வகையான்
என்றதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)



சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க
மால்பெயல் தலைஇய மன்னெடுங் குன்றத்துக்
கருங்கால் குறிஞ்சி மதனில வான்பூ
ஓவுக்கண் டன்ன இல்வரை இழைத்த ரு.
நாறுகொள் பிரசம் ஊறுநா டற்குக்
காதல் செய்தலுங் காதலம் அன்மை
யாதேனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு

மெய்ம்மலி கழங்கின் வேலன் தந்தே.

உரை :—தோழீ! மணலைப்பரப்பிய முற்றத்தைச் சிறப்புச்செய்து மெய்ம்மையைக் கூறுகின்ற கழங்கிட்டுக் குறிபார்த்தலையுடைய படிமத்தானை அன்னை வீட்டிலழைத்துவந்திருத்தலானே,—அச்சஞ்செய் தலையுடைய இடமகன்ற சுனையில் நீர் நிறையும்படியாக மேகம் மழை பெய்துவிட்ட மிக்க நெடிய குன்றத்தின்கண்ணே கரிய காம்பையுடைய குறிஞ்சியின் வன்மையில்லாத மெல்லிய வெளியபூ,—மலையிடத்தே ஓவியன் சித்திரித்தாற்போன்ற வேட்டுவரில்லங்களிலே, இழைக்கப்பட்ட தேனடைக்கு வேண்டியவளவு மணங்கொண்ட தேனூறுகின்ற நாட்டையுடைய தலைவனுக்கு யாம் பலபடியாகக் காதலுண்டாக்கியிருந்தும் அவனாலே காதலிக்கப்படுந் தன்மையேமல்லா திருத்தல் எக்காரணத்தினாலோ? இவ்வொரு காரியத்தை அந்த வேலன்பாற் கேட்போமாக; எ - று.

இழைத்த என்பதனை வினைப்பெயராக்கி கூறுக. தந்து என்பதனைத் தரவெனத்திரிக்க. நான்கனுருப்புகொடுத்துக்

சிறைப்புறமாகிய தலைமகன் கேட்டு விரைய வரையுமாற்றானே அவன்பால் இறைமகள் கைகடந்த காதலுடையளெனவும் அவன் அங்ஙனம் இலனுயினனெனவுங் கூறுவாள் நாடற்குக் காதல்செய்தலுங் காதலம் அன்மை என்றாள்.

உள்ளுறை :—கருங்கோற் குறிஞ்சியின் மதனிலவாகிய பூ இல்லகத்து இழைத்த தேனடைக்கு மிக்க தேனூறுமென்றது, குறவர்மகளிரேம் ஆகிய யாம் மருதநிலத்தலைவன் மகனுகிய நம் காதலன்பால் வழிமுறை பெருகற் பாலதாகிய நட்புவைத்துள்ளோம்; அதனை அவன் அறிந்தானில்லையே யென்று இரங்கியதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (உசஅ)

## உகுகூ. எயினந்தைமகன் இளங்கீரனார்

### பாலை: (க) இது, தோழி வாயின் மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்து மீண்டுவந்த தலைமகன் தலைவிகொண்ட ஊடலைத் தணித்தற்பொருட்டுத் தூதாகவிடுக்கப்பட்ட வாயிலவரைத் தோழி நெருங்கி நம் காதலர் இறைவியின் கண்கள் தம்மைப் பிணிக்கு மென்றெண்ணாது கடுஞ்சுரஞ்செல்பவர் பின்பு எதைத்தான் செய்யார்?

மூலமும் உரையும்

கூ0கூ

பரத்தையிற்பிரிதலோ அவர்க்கு அரிது, அவர் கருதியவை யாவர் அறிவார் என்று மறுத்துக் கூறுநிற்பது.

(உ) செலவழுங்குவித்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

குரும்பை மணிப்பூண் பெருஞ்செங்

கிண்கிணிப்

பாலார் துவர்வாய்ப் பைம்பூண் புதல்வன்

மாலைக் கட்டின் மார்பூர்பு இழிய

அவ்எயிறு ஒழுகிய வெவ்வாய்

மாண்நகைச்

௫. செயிர்தீர் கொள்கைநம் உயிர்வெங் காதலி
திருமுகத்து அலமருங் கண்ணினைந்து
அல்கலும்
பெருமர வள்ளியிற் பிணிக்கும் என்னார்
சிறுபல் குன்றம் இறப்போர்
அறிவார் யாரவர் முன்னி யவ்வே.

உரை:—குரும்பைபோன்ற மணியையுடைய பூணுகிய பெரிய செவ்விய கிண்கிணியையும் பாலுண்ணுஞ் சிவந்த வாயையும், மற்றும் பல பசிய கலன்களையுமுடைய புதல்வன் மாலையணிதலையுடைய இன்பத்திற்குக் காரணமாகிய மார்பிலூர்ந்து இறங்குதலால், அழகிய எயிற்றினின் ஞெழுகிய விருப்பமுற்ற மாட்சிமைப்பட்ட நகையையும் குற்றமற்ற கோட்பாட்டினையுமுடைய நம்முயிர்போன்ற விருப்பமிக்க காதலியினது அழகிய முகத்திலே உலாவுகின்ற கண்கள் துன்பமெய்தி நாள்தோறும் பெரிய மரத்தைச்சுற்றிய வள்ளிக்கொடியைப்போல நம்மைப் பிணிக்குமேயென்று கருதாராய் எப்பொழுதும் சிறிய பலவாய குன்றங்கடந்து சுரஞ்செல்வாராயினர்; அத்தகையார் பின்பு எதனைத்தான் செய்யார்? பரத்தையிற் பிரிந்து செல்லுதலோ அவர்க்கு அரியது? அஃதியல்புதானே; இன்னும் அவர் கருதி உள்ளவை யாவர்தாம் அறியவல்லார்; எ - று.

குரும்பைமணிப்பூண் - அரையிற்கட்டும் கிண்கிணி.

காதலனது முயக்கம் வேண்டாது புதல்வன் முகத்தில் ஆறியிருக்கவும் அமையுமென்பாள், புதல்வனை முற்கூறினள். காதலிமுயக்கத்தை வெறுத்த தன்றிச் செறுநரும் விரும்புஞ் சேயின் காட்சியையும் வெறுத்துச் செல்பவர், யாதுதான் செய்யாரெனக் கொண்டுகூறினளுமாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயின்மறுத்தல். (உசக)

## உஎ०. பரணர்

நெய்தல்:

இது, தோழி வாயினேர்கின்றாள் தலைமகனை நெருங்கிச் சொல்லி வாயிலெதிர்கொண்டது.

உடனிலைக்கிளவிவகையால்.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனை இறைமகளுடன் எதிர்கொண்ட தோழி! நின்னைப்பிரிந்து வருந்துவதல்லாமல் நின்னைத் தன்பால் வயமாக்க அறியாத இத்தலைவியால் வைத்திருக்கும் அன்பினும்



என்பால் அன்புடையைதான்; ஆயினும் நீ பிரிந்தது நன்னன்செய்த கூந்தற்கயிற்றினுங்காட்டிற் கொடியதன்றோ? அத்தகுதியை யான் மறப்பேன்காணென்று வெகுண்டு கூறுகிற்பது.

தடந்தாள் தாழைக் குடம்பை நோனைத்
தண்தலை கமழும் வண்டுபடு நாற்றத்து
இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி
உருள்பொலி போல எம்முனை வருந்தல்
அணித்தகை அல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந்தோள் செல்வத்து இவளினும் எல்லா
எற்பெரி தளித்தனை நீயே பொற்புடை

விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே
மறப்பன் மாதோநின் விறல்தகை
மையே.

**உரை :**—எட, நீ பிரிந்தக்கால் பெரிய ஆற்றினையுடைய தாழைப் புதலினாலே கட்டப்பட்ட எமது சிறியவீட்டின்கண்ணே பொறுக்கமுடியாதபடி சோலையிலுள்ள புன்னைமுதலாகியவற்றின் மலரை முடித்தலால் வண்டுகள் மொய்க்கின்ற கறுகாற்றத்தையுடைய இருளொத்த கூந்தலில் மிக்க தூகள்படிய நிலத்திலே புரண்டு சாய்ந்தாற்போலாக எம்முன்னே வருந்துதலை உடையளாகி அழகழிந்த தன்மையொன்றல்லாது நின்னை வசமாக்குதலைத் தெளியாத பெரிய தோளையுடைய செல்வமகளாகிய இவளினுங்காட்டில் என்னைப் பெரிதும் நீ அன்புசெய் தொழுகாநின்றனை; அங்ஙனமாயினும் நீ பிரிந்து சென்றதானது அழகுபொருந்திய விரிந்த பிடரிமயிர் பொலிவுபெற்ற விரைந்த செலவினையுடைய நல்ல குதிரைப் படைகளையுடைய பகையரசராகிய பிண்டன் முதலாயினோரைப் போரிலே தோற்றோடச்செய்த எந்திய வேற்படையையுடைய நன்னன், தான் அப் பகையரசரின் உரிமை மகளிரைப்பற்றிவந்து அவர் தலையைமழித்து அக் கூந்தலைக்கயிறாகத்திரித்து அக்கயிற்றாலே அப்பகைவரின் யானையைப் பிணித்த கொடுமையினுங் கொடியதாயிராநின்றது ; ஆதலால் நினது வலிய தகுதிப்பாட்டினை யான் மறந்தேவிடுகின்றேன்காண் ; எ - று.

நோன்றல் - பொறுத்தல் ; நோனமை - பொறுக்கமுடியாமை. முனை, ஐ - சாரியை. அணித்தகை - அழகைத்தடுப்பது. எல்லா - எடவென்னும் முன்னிலைச்சொல். கணவனை வயமாக்க அறியாதாள் வருந்தியென் னென்றதாம். இதனை “பஞ்சிறைகொண்ட” (சேம-கஉஎ) என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளானுமறிக. முரற்சி - கயிறு. தலைவியுடனெதிர் கொண்டமையால் உடனிலைக்கிளவியாயிற்று. இவளெனச் சுட்டினமையின் உடனின்றமை தெளிக.

புலவி தீர்க்கும் வாயிலாக யான் அமையாத்வழி என்னுடனும் பேசாது வெறுத்தல் செய்வாய் அமைந்தமையால் என்னுடன் பேசுவாயாயினை என்று கொண்டு எற்பெரிதளித்தனை யென்றாள். மெய்ப்பாடு - உவகை யைச்சார்ந்த பெருமிதம். பயன் - வாயினேர்தல். (உஎ0)

## மூலமும் உரையும்

௩0௫

### உஎக. ..............................

பாலை : இது, மனைமருண்டு சொல்லியது.

எ - து, தலைவியைத் தலைமகன் கொண்டுதலைக்கழிந்தவழிக் கற்பொடு புணர்ந்த கௌவைக்கண் மனையகத்திருந்த நற்றாய், அஃது அறத்தாறெனக் கொண்டாளாயினும், ஏதிலார் கூறும் பழிமொழி பொறாளாய் மயங்கி முன்னமே என்னுயிரைக் கொண்டுபோகாது இப்பொழுது ஏதிலாளன் பின்சென்ற என்மகளைப் பின்சென்று தேடி அலர்கூறுதலை யான் கேட்டிருக்குமாறு என்னை இதுகாறும் கைவிட்டொழிந்த கூற்றும் தானே கெடுவதாக என்று மருண்டு கூறுகிறபது.

இரும்புனிற்று எருமைப் பெருஞ்சேவிக் குழவி
பைந்தாது எருவின் வைகுதுயில் மடியும்
செழுந்தண் மனையோடு எம்மிவண்
ஒழியச்
செல்பெருங் காளை பொய்மருண்டு

சேய்நாட்டுச்
சுவைக்காய் நெல்லிப் போக்கரும்
பொங்கர்
வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன்
தின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை உண்கணென் மகளோர் அன்ன
செய்போழ் வெட்டிப் பெய்தல் ஆயம்
மாலைவிரி நிலவிற் பெயர்புபுறங்
காண்டற்கு
மாயிருந் தாழி கவிப்பத்
தாவின்று கழிகஎற் கொள்ளாக் கூற்றே.

*உரை:—அணித்தாக ஈனப்பட்ட கரிய எருமையின் பெரிய செவியையுடைய கன்று, பசிய மலரிலுள்ள பராகங்களுதிர்ந்து எருவாகக் கிடத்தலை உடைய தொழுவத்திடத்துத் தங்கப்பெற்ற துயிலைமேற்கொண்டு உறங்காநின்ற செழுமையுடைய குளிர்ச்சியுற்ற மாளிகையுடனே எம்மை இங்கே ஒழியவிட்டுத் தன்னுடன் வருகின்ற பெரிய காளையாவான் கூறும் அளவு கடந்த பொய்ம்மொழியாலே மயங்கி நெடுந்தூரத்திலுள்ள அவனது நாட்டை அடையவிரும்பி,-இளமரஞ்செறிந்த சுவையையுடைய நெல்லியஞ் சோலையில் உதிர்ந்த கடையிலே திரண்ட காயை ஒருசேரத்தின்று வறந்த சுனையில் உள்ள மிகச் சிலவாய நீரைப்பருகிச் சென்றுவிட்ட நெய்தல்மலர் போன்ற மையுண்ட கண்ணையுடைய என்மகளை,—ஒருதன்மையாகிய சிவந்த பனங்குருத்தைக்கீண்டு பதனிடுமாறு போடுதலாய மாலைப் பொழுதில், விரிந்த நிலவிலே சென்று பின்னே போய்க் காணும்படியாக விட்ட இதற்கு முன்னாலேயே என்னைப் பெரிய கரிய தாழியிலிட்டுக் கவிக்கும்படி என்னுயிரைக் கொண்டுபோகாத கூற்றமானது,—தான் வலியழிந்து தன்னை அந்தத் தாழியிலிட்டுக் கவிக்கும்படி இறந்தொழியக் கடவதாக; எ - று.*

பனங்குருத்தைக்கீண்டு பதனிடப்போடுகின்ற மாலையென்க,

ந. நா.—20



தன் செல்வச்சிறப்பு அறிவுறுத்துவாள் குழவி தாதெருவிலே துயில் மடியுமென்றாள். அவன் வறுமைகூறுவாள் காளையின் பொய்ம்மை கூறினாள். பின்னிருட்பொழுதிலே கொண்டுதலைக்கழிந்தமை குறிப்பின் உணர்த்துவாள் மாலைவிரி நிலவென்றாள். புறங்காண்டற்கு என்றது, இதனாலே தமர் பின்விரைந்து சென்றாற் காணவும்பெறும் என்றாளுமாம். தமருடன் சென்றாற் அஞ்சி விடுத்துச்செல்லுமாதலின் அவனுறுந்தோல்வி காண்டல் இழிபென்பதுகொண்டு அதனைக் காணுமாறுவைத்த கூற்றென்றவாறு.

இறைச்சி:—எருமைக்குழவி தாதிலே துயிலுமென்றது, அழைத்துச் சென்ற தலைமகன் இனிய தன் மார்புதுணையாகத் துயிற்றுமென்று உள்ளம் மகிழ்வாளாவது. மெய்ப்பாடு - உவகைக்கலுழ்ச்சி. பயன் - ஆற்றியிருத்தல். (உஎக)

## உஎஉ. முக்கல் ஆசான் நல்வெள்ளையார்

நெய்தல்: (க) இது வரையாது நெடுங்காலம் ளாய தலைமகள் சொல்லியது.

வந்தொழுக ஆற்று

எ - து, தலைமகன் மணம்புரிந்துகொள்ளாது களவொழுக்கமே கொண்டு நெடுங்காலம் வந்துபோவதனை ஆற்றாத தலைவி, தோழியை நோக்கித் துறைவன் தலையளிசெய்யாமையால், யான்கொண்ட நோயானது ஊரரால் அறியப்பட்டு இன்னும் மிக்கநோயாய் இராநின்றதெனக்கூறி உள்ளுறையாலே தலைவன் தன்னை வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்து மாறுங் கூறுநிற்பது.

(உ) தோழி தலைமகளுக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லிய

தூஉமாம.

எ - து, வெளிப்படை (உரை

இரண்டற்குமொக்கும்.)

கடலம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
படிவ மகளிர் கொடிகோய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல்

ஒருசிறைக்

கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
ரு. இருஞ்சேற்று அயிரை தேரிய

தெண்கழிப்

பூவுடைக் குட்டங் துழவுந் துறைவன்
நல்கா மையின் நசைபழு தாகப்
பெருங்கை அற்றவென் சிறுமை

அலர்வாய்

அம்பன் மூதூர் அலர்தந்து
கo. நோயா கின்றது நோயினும் பெரிதே.

உரை :—கடலிலியங்கு நீர்க்காக்கையிலே சிவந்த வாயையுடைய ஆண் காக்கையானது, சோன்பினையுடைய மாதர்கள் வைகுதல் வேண்டி ஆண்டுப் படர்ந்துள்ள கொடிகளைக்கொய்தலால் அழிபட்ட நெருங்கிய அவ் அடும்பின் கொடியையுடைய வெளிய மணற்பரப்பின் ஒருபால் நிரம்பிய



சூலுடனே தங்கிய தன்னால் விரும்பப்படுகிற பேடைக்குக் கரியசேற்றின் கண்ணவாகிய அயிரைமீனைத் தேர்ந்தெடுக்கவேண்டித் தெளிந்த கழியிடத்துப் பூவுதிரப்பெற்ற ஆழமான இடத்தினைத் தன் மூக்காலுங் காலாலுந் துழாவாநிற்குந் துறையையுடைய கொண்கன், குறித்தபொழுது வந்து கூடித் தலையளி செய்யாமையால் யான்கொண்ட விருப்பம் வீணாகிவிட அதனாலே செயலழிந்த என் பெரிய நோயானது பழிமொழி கூறுகின்ற அம்பலை உடைய பழைய நமது ஊராராலறியப்பட்டு முன்பு நான்கொண்டிருந்த நோயினுங்காட்டில் மிக்க நோயுடையதாகா நின்றது ; எ - று.

தேரிய - செய்யியவென்னும் வாய்பாட்டெச்சம். கடலம், அம் - சாரியை.

உள்ளுறை :—நீர்க்காக்கைச் சேவல் சூலொடுவதிந்த பெடைக்கு அயிரைமீனைத் தேடுமென்றது, என்னை மணஞ்செய்துகொண்டு மனையறம் படுத்து யான் இல்வயினிருக்குமாறு வைத்துத் ' தாயத்தாற்செய்தது தேவரும் பிதிரு மின்புறுர் ' ஆதலின் அவரை இன்புறுத்துமாறு வேற்றுநாட்டுச் சென்று பொருளீட்டிவந்து இல்லறம் நிகழ்த்தற்பாலனென்று அறிவுறுத்தியதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

## உஎரு. மதுரை இளம்பாலாசிரியன்

## சேந்தன்கூத்தனார்

குறிஞ்சி: இது, தோழி தலைமகனது வரவுணர்ந்து தலைமகட்குரைப் பாளாய் நின் வேறுபாடு தாய்க்குப் புலனாக அவள் வேலனைக்கூவி வெறி அயருமென்பதுபடச் சொல்லியது.

எ - து, (வெளிப்படை) அங்ஙனஞ் சொல்லுகின்றவள் வெறியயர்தலாலே குன்றநாடனை நினைக்குந்தோறும் அவன் செய்கையாலே தந்த வருத்தம் எனது நெஞ்சை நடுங்கச்செய்யாநின்றது; இஃதெப்படியாய் முடியுமோ என்று நொந்து கூறுநிற்பது.

இஃதேவன் கொல்லோ தோழி
மெய்பரந்து எவ்வங் கூர்ந்த ஏமுறு துயரம்
வெம்மையில் தான்வருத் துறீஇ
நம்வயின்
அறியாது அயர்ந்த அன்னைக்கு
வெறியென
வேலன் உரைக்கும் என்ப ஆகலின்
வண்ணம் மிகுத்த அண்ணல் யானை
நீர்கோள் நெடுஞ்சுனை யமைந்துவார்ந்
துறைந்தேன்
கண்போல் நீலந் தண்கமழ் சிறக்குங்
குன்ற நாடனை உள்ளுதோறும்
நெஞ்சுநடுக் குறூஉமவன் பண்புதரு
படரே.

உரை:—தோழீ! நின் உடம்பெங்கும் பரந்து துன்பமிக்க மயங்கிய துயரத்தை நோக்கி நம்பாலுள்ள விருப்பத்தாலே தானும் வருத்தமுற்று நம்மிடத்தில் நிகழ்ந்ததறியாது முருகவேளுக்கு வெறியெடுத்த நம் அன்னையை நோக்கி இது முருகணங்கென்று வேலன் கூறுநிற்குமென்பர்



ஆதலின் நிறமிக்க பெரிய யானை நீர்முகந்துகொள்கின்ற நெடிய சுனையின் கண்ணே அமைந்து நீண்டுற்று என் கண்போல்கின்ற நீலமலர் தண்ணிய வாய் மணமிகும் மலைநாடனை நினைக்குந்தோறும் அவன் இயல்பாகத்தந்த கவலையானது எனது நெஞ்சை நடுங்கச்செய்யாநின்றது; இஃது இனி எப்படியாகி முடியுமோ? எ - று.

வார்தல் - நெடுகுதல். படர் - வருத்தமுமாம். கேட்ட தலைவன் வரைவொடு புகுமாறு கருதியதாதலின், இது வரைவுகடாயதாயிற்று.

அவன் தலையளி செய்ததெல்லாம் தனக்கு மிக்கதுன்பமும் மயக்கந்தரு துயரமு மாகியதென்பாள், எவ்வங்கூர்ந்த எமுறு துயரமென்றாள். இனி வரைந்தன்றிக் களவினியலாதென் றறிவுறுத்துவாள் உள்ளுதொறும் படர் நடுக்குறுத்துமென்றாள்.

உள்ளுறை:—யானை தலைவனாகவும் சுனை நமது குடியாகவும் நீர் தலைவியாகவும் அவ் யானையுண்ணுதல் தலைவன் தலைவியைமணந்து நலன் நுகர்தலாகவும் நீலமலர்தல் இருமுதுகுரவரும் மகிழ்வதாகவுங்கொள்க.
**மெய்ப்பாடு** - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௨௭௩)

## ௨௭௪. காவன்முல்லைப் பூதனார்

பாலை : இது, தோழி பருவமாறுபட்டது.

எ - து, தலைவன் பிரிந்து சுரஞ்சென்றதறிந்த தலைமகள் கானின் கடுமையை நினைந்து வருந்துதலும், 'அதுகண்ட தோழி, சுரம் மழை பெய்தலினாலே பொலிவுடையதென்று கூறுதல்கருதி அங்ஙனம் பிரிந்து சுரநெறி செல்லுகின்ற தலைவர் 'மழைபெய்த மலையின்கண்ணே மான் சென்று தீண்டலானே குமிழம்பழம் உதிர்கின்ற கானகநெறியில் நீ எம்மோடு வருதியோ' என்று அழையாநின்றனர்காணென்று கூறி ஆற்றுவிப்பது.

நெடுவான் மின்னிக் குறுந்துளி தலைஇப்
படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து
உழைமான் அம்பிணை தீண்டலின்
இழைமகள்
பொன்செய் காசின் ஒண்பழந் தாஅங்
ரு. குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்
எம்மோடு வருதியோ பொம்மல்
ஓதியெனக்
கூறின்று முடையரோ மற்றே வேறுபட்டு
இரும்புலி வழங்குஞ் சோலைப்
பெருங்கல் வைப்பிற் சுரன்இறந் தோரே.

உரை :—கரிய புலி சினங்கொண்டு மாறுபட்டு உலாவாநிற்குஞ் சோலையையுடைய பெரிய மலையிடத்துளதாகிய சுரத்தின்கண்ணே சென்ற காதலர், நெடிய மேகங்கள் மின்னிச் சிறியதுளிகளாகப் பெய்யத்தொடங்கி மிக்க மழைபெய்த பிளப்புக்களையுடைய மலைச்சாரலிலே உழையாகிய அழகிய பிணைமான் உராய்ந்துகொள்ளுதலாலே கலனணிந்த மடந்தையொருத்தியின் பொன்னாற்செய்த கலன்களைப் பரப்பினாற்போல ஒள்ளிய பழங்கள் உதிரப்பெற்ற குமிழமரங்கள் நிரம்பிய குறிய பல வழியை

## மூலமும் உரையும்

௩௦௪

உடைய சுரத்து நெறியிலே 'செறிந்த கூந்தலையுடையாய், நீ எம்முடன் வருகின்றனையோ' என்று கூறிய சொல்லையுமுடையர்காண் ; ஆதலின் அந்நெறி மழைபெய்தலான் நலனுடையதாயிராநின்றது ; அது காரணமாக நீ வருந்தாதே கொள் ; எ - று.

பொற்காசு - பொன்னாபரணம். உழைமான் - இருபெயரொட்டு.

மழை பெய்திருப்பதோடு அந்நெறிகளும் சிறிய தூரங்களுடைய அன்றிக் கடத்தற்கரிய பெரியவல்லவென்பாள், குறும்பல் அத்தமென்றாள். நீர்மிக்கு இருப்பதோடு நிழலும் நன்குடையதென்பாள், சோலைவைப்பிற் சுரனென்றாள்.

இறைச்சி :—மான்சென்று தீண்டலும் குமிழ் பழத்தை உதிர்க்கும் என்றது, தலைவர்சென்று பொருளீட்டத்தொடங்கலும் உடனே பொருள் கைவருமாதலின் விரைந்துவருவரென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (உஎச)

## உஎரு. அம்மூவனார்

### நெய்தல் :

இது, சிறைப்புறமாகத் தலைமகனது வரவுணர்ந்து வற்புறுப்ப வன்புறை எதிர்மொழிந்தது.

எ - து, வினைவயிற்பிரிந்த தலைமகன் மீண்டு ஒருசிறைப்புறமாக வருதலையறிந்த தோழி தலைமகளை நோக்கி அவன் இப்பொழுதே வந்துவிடுவன் ஆதலின் நீ வருந்தாதேயென்று வலியுறுத்திக்கூறினாளுக்கு அவனை நினைந்து வருந்தேனாதலின், வெறுத்தேனுமல்லேன்; என்னைக் கைவிட்டு வெறுத்து அகன்ற தலைவன் தன்னைப் பிறரிகழாது புகழவேண்டி மீட்டும் பெறுவதாயினும் யான் உடன்படுவேனென உள்ளுறையாலே தன்னிலைமையும் அவனறியும்படி கூறுநிற்பது.

செங்நெல் அரிநர் கூர்வாள் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தெனப் பூவே
படையொடுங் கதிரொடும் மயங்கிய படுக்கைத்
தண்ணுறு விழுமம் அறியா மென்மெலத்
தெறுகதிர் இன்துயில் பசுவாய் திறக்கும்
பேதை நெய்தல் பெருநீர்ச் சேர்ப்பற்கு
யானினைந்து இரங்கேன் ஆக நோயிகந்து

அறனி லாளன் புகழஎன்
பெறினும் வல்லேன்மன் தோழி யானே.

உரை :—தோழீ! சிவந்த நெற்கதிரையறுக்கும் மள்ளர், தம் கூரிய அரிவாளினலே புண்படக்காஞராகக் கதிர்த்தாற்ருெடும் போந்ததனலே அம் மலர் அரிவாளொடுங் கதிரொடுங் கலந்தனவாகிய அரிக்கிடையிலே படுக்கையாகக்கிடந்து தானுற்றதுன்பத்தை ஆராயாமல் மெல்லமெல்லக் கொடிய ஆதித்தனைக் காண்டலும் இனிய துயிலிடத்துப் பசிய வாயைத் திறவாநிற்கும் பேதைமையுற்ற நெய்தல்மிக்க பெரிய கடற்கரைத்தலைவனுக்காக யான் படுகின்ற துன்பத்தையுங்கடந்து அவனைநினைந்து இரக்கம்



உறுவேனல்லேன் ஆதலால், அவனை வெறுத்தேனுமல்லேன்; அவ் அறனிலாளன் தன்னை அயலார் புகழும்படி என்னை மீட்டும்பெறுவதாயினும் அதற்கும் இயைகின்றேன்; அங்ஙனம் வெருது விடப்பட்டதனல் அதுவும் இல்லையாயிற்று; எ - று.

தஞ்சமென்றடைந்த தன்னைக் கைவிட்டமையின்

அறனிலாளன் எனறுள.

உள்ளுறை:—மள்ளரால் அறுபட்ட நெய்தற்பூக் கதிரொடுகலந்து அரிக்கு இடையிலே வாடிக்கிடந்தும் தன் துன்பத்தை ஆராயாமல் கதிரை நோக்கினவுடன் மலருமென்றது: ஏதிலாட்டியரெடுத்த பழிச்சொல்லாலே தலையெடாதபடி படுக்கையாகக்கிடந்தும் யான் தலைவனைக்காணில் என்நோயைக்காட்டாது முகமலர்ச்சியோடு அவற்கு உடன்படுவேனென்ற தாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். இவ்வுள்ளுறை 'கடுங்கண் வயலுழவர் காலைத் தடிய, மடங்கி யரியுண்ட நீலந் - தடஞ் சோர்ந்து, நீளரிமேற் கண்படுக்கு நீணீ ரவந்தியார், கோளரியே றிங்கி நந்த கோ'' எனப் பிறநூலுள்ளும் வந்தமை காண்க. (உஎடு)

# உஎசு. தொல்கபிலர்

குறிஞ்சி:

இது, பகற்குறிவந்துபெயருந் தலைமகனை உலகியல் சொல்லியது.

எ - து, பகற்குறிநீக்கத்துத் தலைவியைத் தோழியர்கூட்டத்து விடுத்து வந்து ஆங்குத் தன் ஊர்க்குச்செல்லுந் தலைவனைத்தோழி நெருங்கி யாம் குறமகளிராகிய கொடிச்சியேம், எம்மூர் இம்மலையிடத்தது ஆதலின் நீ இப்பொழுதே நின்னூர்க்குச்செல்லாது எம்மூர்வந்து நறவுண்டு குரவைகண்டு செல்வாயாகவென்று விருந்தெதிர்கொள்கின்ற உலகியல் கூறுவாள் போன்று வரைவுபயப்பக் கூறுகிற்பது.

கோடு துவையாக் கோள்வாய் நாயொடு

காடுதேர் நசைஇய வயமான் வேட்டு
வயவர் மகளிர் என்றி ஆயின்
குறவர் மகளிரேம் குன்றுகெழு
கொடிச்சியேம்
சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதில்
கான மஞ்ஞை கட்சி சேக்கும்
கல்லகத் ததுஎம் ஊரே செல்லாது
சேர்ந்தனை சென்மதி நீயே பெருமலை
வாங்கமை பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே.

உரை :—தலைவனே! கொம்பையூதி ஒலிப்பித்துக் கௌவிக்கொல்லும் நாயோடு காட்டின்கண்ணே ஆராய்கின்ற விருப்பமுற்ற வலியமானை வேட்டையாற்கொள்ளும் வேட்டுவவீரரின் மகளிரென எம்மைக் கூறுவாயாயின் வேட்டுவமகளி ரல்லேம்; யாம் குறமகளிரேம்; மலையிலிருக்கிற கொடிச்சியரேம்; தினைகாவலன் கட்டிய நீண்டகாலையுடைய கட்டுப்பரணைக்

காட்டில் இருக்கின்றமயில்கள், தாம் இருத்தற்குரிய பஞ்சரமாகக்கொண்டு அதன்கண்ணே தங்காநிற்கும் எம்மூர் இம்மலையினகத்ததா யிராநின்றது; ஆதலால் நீ இப்பொழுது நின்னூர்க்குச்செல்லாது எம்மூரையடைந்து பெரிய மலையின்கண்ணே தோன்றி வளைந்தமூங்கிலாலாக்கிய குழாயில் நிரப்பி முற்றவைத்த கள்ளைப்பருகி வேங்கைமரத்தையுடைய முன்றிலிலே யாம் அயருங் குரவையையுங்கண்டு மகிழ்ந்து பின்னுள் நின்னூரை அடைவாயாக; எ - று.

கோடு - கொம்புஎன்னும் வாச்சியம். கோள்-கொலையுமாம். வயமான் நசைஇய வேட்டுவரெனினுமாம். சேணோன் - மரத்தின்மீதிருந்து இரவிலே தினைப்புனங்காப்பவன். கழுது - கட்டுப்பரண்.

ஒரோவொருகால் நீ வந்துபிரிதலை ஆற்றலளாதலின் எம்மூர்வந்து தங்கிச்செல்வாயாகவென்றாள். எமர் உலகியலறிவராதலின் நின்னை எதிர்கொண்டோம்புவரென்பது குறிப்பிப்பாள் நறவுண்டு குரவையுங்காண்பாய்

என்றாள்.

உள்ளுறை :—கழுதினைத் தன்னுடையதாகக்கொண்டு மஞ்ஞை தங்கும் என்றது, எம் மாளிகையை நின்னுடையதாகக்கருதி நீ தங்குவாயாக என்று முகமன்கூறியதாம். வரைந்தன்றி அங்ஙனம் இயலாமையின் வரைவு கடாயதென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

## உஎஎ. தும்பிசேர்கீரனார்

பாலை : இது. 'பட்டபின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற் பிரிய' ஆற்றாளாகிய தலைமகள் தும்பிக்குச் சொல்லியது.

எ - து, அறத்தொடுநிற்றலின்பின் மணஞ்செய்துகொள்ளாது பொருள் ஈட்டுதற்குத் தலைவன் வேற்றுநாட்டுச்சென்றதனால் தலைமகள் வருந்தி வண்டைநோக்கி வண்டே, கொடியை; நீ கூடிமுயங்குவதுபோல எம்மை முயங்குமாறு செய்திலை; நின்னெஞ்சுங் கரியதேயோ? இந்நோயால் இன்றே யான் மடிகின்றேன்; நீ நீடுவாழ்தியென அழிந்து கூறுநிற்பது.

கோடியை வாழி தும்பி இந்நோய்

படுகதில் அம்ம யான்நினக்கு
உரைத்தென
மெய்யே கருமை அன்றியுஞ் செவ்வன்
அறிவுங் கரிதோ அறனிலோய் நினக்கே

௫.

மனையுறக் காக்கும் மாண்பெருங் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட
நாற்றம் இன்மையிற் பசலை ஊதாய்
சிறுகுறும் பறவைக் கோடி விரைவுடன்
நெஞ்சுநெகிழ் செய்ததன் பயனோ அன்பிலர்
வெம்மலை அருஞ்சுரம் இறந்தோர்க்கு
என்நிலை உரையாய் சென்றவண் வரவே.

உரை:—வண்டே! அறநெறியிலே செல்லாதோய், நீ மிக்க கொடியை; நமது மாளிகையைப் பொருந்தக்காவலாயிருக்கும் மாட்சிமைப்படப் பெரிதாக அமைக்கப்பட்ட நுண்ணிய முட்களையுடைய வேலியிலேபடர்ந்து தேனொடுதழைந்த குலைகட்டிய பீர்க்கம்பூவிலேசென்று தேனைப்பருகி அதற்குமாறாக நறுநாற்றமில்லாமையினாலே என் பசலையிடத்துமூரன்றாயும் அல்லை; சிறியகுறியநின்பேடு விரும்புதலும் நீ விரைவாக வோடிச்சென்று அதன் மனம்நெகிழப் புணர்ந்து தலையளிசெய்ததன் பயனாகவோ,—என்னிடத்து அன்பிலராகிக் கொடியமலையிலே செல்லுதற்கரிய சுரத்திற்சென்ற தலைவர்பால் ஆங்குச்சென்று அவர் விரைவில்வருமாறு ஈங்கு யானுற்றநிலைமையை யுரைத்தாயுமில்லை; நின்னுடம்பே கரியதாதலன்றியும் அறிவுங் கரியநிறமுடையதோ? அதனையேனுங் கூறிக்காண்; இங்ஙனங் கொடியையாகிய நின்னிடத்து என் துன்பத்தைக் கூறியதனாலேயே இந்நோயிலேபட்டு இப்பொழுதே இறப்பேனாக; நீ நீண்டகாலம் வாழ்ந்திருப்பாயாக; எ - று.

இல் - காலத்தின்மேலது. இது பசலைபாய்தலும், தூதுமுனிவு இன்மையுமாம்.

கூடி இன்பந் துய்க்கின்றவர் தம்மைப்போலப் பிறருந் துய்க்கக் கருதுவர்; நீ அங்ஙனமின்றி உரைத்தாயுமில்லையாதலால் அறிவுங்கரிதோ வென்றாள். கொடியநெஞ்சுடையாரைக் கரியநெஞ்சினரென்பது வழக்கு. "கரிமாலை நெஞ்சினான்" என்றார் சிந்தாமணியினும்; (நாமகள் - உகூ) கொடியோர்பால் ஒருகாரியங்கூறினால் அக்காரியம் மாறாகமுடியுமென்பதற்கேற்ப நின்பாற் கூறியதன்காரணமாக அவர்வாராதொழிதலின் நோய் மிக்கிறப்பேன் என்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உஎஎ)

## உஎஅ. உலோச்சனார்

நெய்தல்: இது, தோழி தலைமகட்கு

வரைவுமலிந்தது.

எ - து, வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்தோன் குறித்த காலத்து வாராமையாலே தலைமகள் வருந்தினளாக, அப்பொழுது அவன் விரைவில் வருவதனை அறிந்ததோழி தலைவியைநெருங்கி நம் காதலன் பலரறியவருதலானே நின்னைவரைந்துகொள்ளவருகிறனென்பதை யறிந்தேன் என்றுகூறி உள்ளுறையால் நீ கவலையின்றி வாழ்வாயாகவெனவும் மகிழ்ந்து கூறுநிற்பது.

படுகோழ் நாறிய பராரைப் புன்னை

அடுமேரல் மொக்குளின் அரும்புவாய் அவிழப்
பொன்னின் அன்ன தாதுபடு பன்மலர்
சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதோறும்
நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை
இனியறிந் திசினே கொண்கன் ஆகுதல்
கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
குளம்பினுஞ் சேயிறு ஒடுங்கின
கோதையும் எல்லாம் ஊதைவெண் மணலே.

உரை :—அடுத்த மரவின்மொக்குகளைப்போல பொருந்திய வயிரம் விளங்கிய பருத்தஅடியையுடைய புன்னையரும்பு வாய்திறந்து மலராநிற்ப அங்ஙனம்மலர்ந்த பொன்போன்ற மகரந்தமிக்க பலவாகியமலர்களில் அணிந்துகொள்பவர் கொய்து தொடுத்தனபோக எஞ்சியன கிளைகடோறும் நெய்மிக்க பசியகாயாகத் தூங்காநிற்கும் கடற்றுறையுடைய தலைவனே,— கழிக்கரையிலுள்ள சேறுபட்ட திரண்டகாலையுடைய அவனது தேரிலே பூட்டிய கோவேறுகழுதையின் குளம்பினெங்குஞ் சிவந்த இறாமீன்கள் ஒடுங்கப்பட்டு அழிந்தன; அவனது மாலையினும் மற்றெவற்றினும் காற்றால் எறியப்படும் வெளியமணலொடுங்கின ; ஆதலின் நினக்கே கணவனுமாறு விரைவில் வந்தனன்போலுமென்று இப்பொழுதுதான் அறிந்து கொண்டேன் ; எ - று.

நெய்கனி காயென்றதனால் புன்னைக்காயிலிருந்து நெய்யெடுக்கப்படும் வழக்கு அக்காலத்து முளதெனவறிக. ஒடுங்கினவென்பதனை மணலொடுங் கூட்டுக.

பகற்பொழுதிலே பலரறிய அருங்கலமுன்னிட்டு விழைவுமிகுதியால் விரைந்துவருதலின் இறாக் குளம்பிலொடுங்கின ; கோதைமுதலாயவற்று மணலொடுங்கினவென்றாள்.

உள்ளுறை :—புன்னைமலர் கொய்தனபோக எஞ்சியவை நெய்கனிந்த காயாகத்தூங்குமென்றது, நீ இதுகாறும் ஏதிலாட்டியரெடுத்த அலரால் வருந்தியதுபோக, இனிக் கனிந்தநெஞ்சினையாகி மகிழ்வாய்காணென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - ஐயந்தீர்த்தல். (உஎஅ)

## உஎகூ. கயமனார்

பாலை : இது, மகட்போக்கிய தாய்சொல்லியது.

எ - து, தலைவன் கொண்டுதலைக் கழிதலும் தோழியாலறிந்த செவிலி ஈன்றதாய்க்குரைப்ப, அவள் அஃது அறநெறிதானென்று கொண்டனள் ஆயினும் தன்மகளின் மெல்லியதன்மைகருதி இரங்குகின்றாள், ஐயோ! சிலம்புகழிநோன்பாகிய விழாவின்சிறப்பை யான்காணாது பிறர்கண்டு மகிழும்படி சென்றொழிந்த என்மகளுடைய அடிகள் சுரநெறியின் கண்ணே சென்று வருந்திநின்றனவோவென்று நொந்து கூறாநிற்பது.

வேம்பின் ஒண்பழம் முனைஇ இருப்பைத்
தேம்பால் செற்ற தீம்பழன் நசைஇ
வைகுபனி உழந்த* வாவல் சினைதோறும்
நெய்தோய் திரியில் தண்சிதர் உறைப்ப
நாட்சுரம் உழந்த வாட்கேழ் ஏற்றையொடு
பொருத யானைப் புண்தாள் ஏய்ப்பப்
பசிப்பிடி உதைத்த ஓமைச் செவ்வரை
வெயில்காய் அமையத்து இமைக்கும் அத்தத்து

(பாடம்) * வைகுபனி யுறந்த.



அதருழந்து அசையின கொல்லோ ததரல்வாய்ச்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே.

உரை :—தலைவனைச்சார்ந்து மணமுடிக்கும்பொழுது காலிலணிந்திருந்த சிலம்பைக் கழற்றுதற்குச்செய்யும் விழாச்சிறப்பை யான் கண்டு மகிழாது பிறர்கண்டுமகிழும்படி சென்றொழிந்த அழகியகலனணிந்த என் புதல்வியின் அடிகள்,—வேம்பின் ஒள்ளியபழத்தைத் தின்னுதல்வெறுத்து இருப்பையின் தேன்போலும் பால்வற்றிய இனிய பழத்தைவிரும்பி வைகிய பனியிலே உழந்த வெளவால் கிளைகள்தோறுஞ் செல்லுதலால் அவற்றின்மேல் நெய்தோய்ந்த திரிச்சுடர் விழுதல்போலத் தண்ணிய பனித்துளிகள் மிகவிழ விடியற்காலையிலே சுரத்திற்சென்றுவருந்திய வான் போலும் நிறமுற்ற வரிபொருந்திய ஆண்புலியொடு போர்செய்தயானையின் புண்ணையுடைய கால்போலப் பொளித்தெடுத்துத் தின்னவேண்டிப் பசி மிக்கபிடியானை உதைத்து மேற்பட்டையைப்பெயர்த்த ஓமையின் சிவந்த அடிமரம் ஞாயிறெழுந்து வெயில்வீசும்பொழுது விளங்கித்தோன்றா நிற்கும் பாலையின் அருஞ்சுர நெறியிலேசென்று வருந்துகின்றனவோ ? ஐயோ ! எ - று.

உறைத்தல் - மிகவிழல். உறைப்ப இமைக்கும் அத்தமெனக்கூட்டுக.

புலியேற்றையொடு யானை பொருததனைக்கூறுவதுபோன்று நெறி ஏதமுடையதேயென்று இரங்கினள். இதுகாறும் கூந்தல்வாரி நுசப்பு இவர்ந்து ஓம்பியும் சிலம்புகழிநோன்பு யான்காணுமாறு நோற்றிலேனென் பான் பிறருணக்கழிந்தனளென்று இரங்கினளாயிற்று.

இறைச்சி : (க) வேம்பின்பழத்தைவெறுத்து இருப்பையின்பழத்தை விரும்பி வெளவால் வெய்யபனிஉறைப்ப இருக்குமென்றது, தந்தை செல்வத்தை வெறுத்துக் கேள்வனது செல்வத்தை விரும்பி இரவிலே சென்ற என் புதல்வி மாமி, நாத்தூணர் செறிந்திருப்ப எங்ஙனமிருக்குமோ என்றதாம்.

(உ) பிடியாலுதைபட்ட ஓமை ஞாயிறுதோன்றியவுடன் விளங்கித்தோன்றுமென்றது, மகளால் வெறுத்துநீக்கப்பட்ட யான் பொழுதுவிடிந்தவுடன் எல்லாராலுந் தூற்றப்பட்டு எங்குந்தெரிய லாயினேன் என்றதாம். **மெய்ப்பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமைநீங்குதல். (உஎக)

## உஅ௦. பரணர்

**மருதம் :** (க) இது, வாயில்வேண்டிச்சென்ற தோழிக்குத் தலைமகள் மறுத்து மொழிந்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் தலைவியின்னூடல் தணிய வேண்டி வாயிலாகவிடுப்ப வந்ததோழி துறைவனை வெரூதே என்றுட்கு என்மனைவயின்வந்த விருந்துகளை ஓம்புதலானே கையொழியாமையின் அவனை எதிர்ப்படப்பெற்றிலேன், ஆதலிற்புலவேன்; அன்றேல் புலந்து கொள்வேனென வெகுண்டுகூறுநிற்பது.

(உ) தலைமகனை ஏற்றுக்கொண்டு வழிபட்டாளைப் புகழ்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை.

## மூலமும் உரையும்

நகரு

கோக்கினுக்கு ஒழிந்த தீம்பழங் கொக்கின்
கூம்புநிலை அன்ன முகைய ஆம்பல்*
தூங்குநீர்க் குட்டத்துத் துடுமெனவீழும்
தண்துறை ஊரன் தண்டாப் பரத்தமை
ரு. புலவாய் என்றி தோழி புலவேன்

பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுடுநந்து உடைக்கும்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்
அன்னஎன்
நன்மனை நனிவிருந்து அயரும்
௧௦. கைதூவு இன்மையின் எய்தா மாறே.

உரை: தோழீ! கொக்குவந்திருந்ததனால் கிளை அசைதலின் உதிர்ந்த இனிய மாங்கனியானது, கொக்கினது குவிந்திருந்த நிலைபோன்ற அரும்புகளை உடைய ஆம்பல்மிக்க நிறைந்த ஆழமுள்ள நீரிலே துடுமென வீழாநிற்குந் தண்ணிய துறைகளையுடைய ஊரனது அமையாத அயலாந் தன்மை ஆகிய செய்கையைக் கண்டுவைத்தும் நீ புலவாதேகொள்ளென்று என்னை ஆற்றுகின்றனை; வயலிலுள்ள யாமையின் பசிய கற்போன்ற முதுகிலே அவ்வயலைக் காவல்செய்யும் மள்ளர் தாம் சுடுகின்ற நத்தையை உடைத்துத் தின்னுகின்ற பழமைமுதிர்ந்த வேளிருடைய குன்றூர்போன்ற எனது நல்லமனையின்கண்ணே வருகின்ற மிக்க விருந்தினரை உபசரித்தலிற் கையொழியாமையால் அவனை எதிர்ப்படப்பெற்றிலேன்; அதனாலே புலவாதுவைகினேன்; அன்றேல் புலவிகூர்தலின் இங்குவர ஒல்லேன் கண்டாய்; எ - று.

பரத்தமை - அயலாந்தன்மை; தன்னின்வேறுயொழுகுந்தன்மை. பாசறை - பசிபகல். கைதூவல் - கையொழிதல். கைதூவின்மை - கையொழியாமை. துடுமெனல் - ஒலிக்குறிப்பு.

உள்ளுறை :—கொக்கினால் உதிர்ந்தபழம் ஆம்பற்பொய்கையிலே துடுமென விழுமென்றது, பரத்தையாலிகந்துவிடப்பட்டதலைமகன் விரைந்து நின்னை வாயிலாகக்கொண்டு இங்கு வாராநின்றான்போலும் என்றதாம்.

இறைச்சி :—நாட்டுக் கடைஞராயுள்ளார் சிறப்பில்லாத நத்தை ஊனைத் துப்புடைய ஆமையின்புறத்து உடைத்துத் தின்பரென்றதனால் தலைமகன் சிறப்புடைய தலைமகளை இகழ்ந்து வருத்தமுறவிட்டுச் சிறப்பில்லாத பரத்தையரை நலனுகருமென்றதாம். இப்பொருள்:—"வேட்டொழிவ தல்லால் விளைஞர் விளைவயலுள், தோட்ட கடைஞர் சுடுநந்து - மோட்டாமை, வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை, யின்புறுத்த வல்லமோ யாம்" எனவச்சத்தொள்ளாயிரத்தும் எடுத்தாண்டமையறிக. மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயில் மறுத்தல்.

(உ.) உரை :—ஊரன் வேறுபொழுகுந்தன்மையைக் கருதிப் புலவாதே கொள்ளென்றனை ; அவன் என்பால் எய்துவது எஞ்ஞான்றும்

(பாடம்) * தகைய ஆம்பல்.



அரியதாய் இருத்தலால் புலந்தால் முற்றும் வெறுக்குமோவென்று என்றும் புலவேன் என்றதாம். உள்ளுறை, இறைச்சி இதற்குமொக்கும். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (உ௮0)

## உ௮க.

## கழார்க் கீரனெயிற்றியார்

பாலை :

(க) இது, வன்பொறை எதிரழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

எ - து, பொருள்வயிற்பிரிந்தான் குறித்தபருவத்து வாராமையால் அதுகாறும் ஆற்றியிருந்து பின்பு ஆற்றுளாகிய தலைவியைத் தோழி வலி திற்பொறுத்திருவென்றாட்குத் தலைவி குளிர்காலத்து அவர் நம்மிடத்தில் இருப்பவும் நாம் வருந்தித் துயிலாததனை அறிந்தகாதலர் இப்பொழுது கைவிட்டதனால் அன்பிலர்காணென அழிந்து கூறுகிறப்பது.

(உ) ஆற்றுளெனக் கவன்றதோழி
தலைமகட்குரைத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை

இரண்டற்குமொக்கும்.) மாசில் மரத்த

பலியுண் காக்கை

வளிபொரு நெடுஞ்சினை களியோடு

தூங்கி

வெல்போர்ச் சோழர் கழாஅர்க்

கோள்ளும்

நல்வகை மிகுபலிக் கொடையோடு

உகுக்கும்

௫. அடங்காச் சொன்றி அம்பல் யாணர்

விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன

இருப்ப

மழையமைந்து உற்ற மாலிருள் நடுநாள்

தாம்நம் உழைய ராகவும் நாம்நம்
பனிக்கடு மையின் நனிபெரிது அழுங்கித்
௧௦. துஞ்சாம் ஆகலும் அறிவோர்
அன்பிலர் தோழிநங் காத லோரே.

**உரை :—**தோழீ! நம்காதலர் மாசற்றமரத்திலுள்ளனவாகி மக்களிடு பலியை யுண்ணுங்காக்கை காற்றுமோதுகின்ற நெடியகிளையில் தன்மேல் விழுகின்ற மழைத்துளியுடனே அசைந்துகொண்டு வெல்லுகின்ற போரையுடைய சோழரது'கழார்' என்னும்பதியிலே கொள்ளப்படுகின்ற நல்ல பலவகையாகமிருத்த பலிக்கொடையொடு போகடப்படுகின்ற சொல்லிலடங்காத சோற்றுத்திரளுடனே அழகியபலவாகிய புதிய ஊனொடுகலந்து இடப்படுகின்ற பெரியசோற்றைத் தின்னக்கருதியனவா யிருக்குமாறு மழைபொருந்திப் பெய்தலையுற்ற மயக்கத்தையுடைய இருளின் நடுயாமத்தில் அவர் தாம் நம்மிடத்து மூயங்கியிருப்பாராகவும், நாம் நமக்குண்டாகிய குளிரின் கடுமையால் மிகப்பெரிதும் வருத்தமுற்றுத் தூங்காதிருந்தனமாதலையும் அறிந்தவர் இப்பொழுது நம்மைக் கைவிட்டு அகன்றனர்கண்டாய்; ஆதலின் அவர் நம்மீது சிறிதும் அன்பேயில்லாதவர் அல்லரோ? எ - று.

சொன்றி - சோற்றுத்திரள்.



**இறைச்சி :—**பலியுண்காக்கை மழையிலேநனைந்து வருந்தியும் விடக்குடைச்சோற்றைக் கருதியிருக்குமென்றது, அவர் தலையளிசெய்த தால் இன்புற்ற யாம் இப்பொழுது பனியாலுங்குளிராலும் வருத்தியும் இன்னும் ஒருகால் அவர்வந்துகூடுவரோவென்னும் ஆசையால் உயிர் துறவேமாய் இராநின்றேமென்றதாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்.

(௨௮௧)

## ௨௮௨. நல்லூர் சிறுமேதாவியார்

குறிஞ்சி: இது, சிறைப்புறமாகத் தோழி செறிப்பு அறிவுறீஇ

வரைவுகடாயது.

எ - து, களவொழுக்க மேற்கொண்ட தலைமகன் மறைவாகிய ஓரிடத்தில் வந்திருப்பதனைக் குறிப்பாலறிந்த தோழி தலைவியை இல்வயிற் செறித்தமை அறிவுறுத்தி வரைந்தெய்துமாறு உடன்படுத்துகின்றாள் தலைவியை நெருங்கி நீ கொண்ட இந்நோய் காதலனாலே தரப்பட்டதென்பதை யறியாத அன்னை வெறியெடுத்தலின் ஆங்கெய்திய வேலன்வார்த்தையால் இது தணியுமாயினோ மிகநன்று, அது கழிந்தது; இனி வெற்பன்பாலுற்ற நமது தொடர்பு கழிந்ததுபோலுமென்று அழிந்துகூறுநிற்பது.

தோடமை செறிப்பின் இலங்குவளை நெகிழக்
கோடேந்து அல்குல் அவ்வரி வாட
நன்னுதல் பாய படர்மலி அருநோய்
காதலன் தந்தமை அறியா துணர்த்த
வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்
கிளவியில் தணியின் நன்றுமன் சாரல்
அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை
ஆடுமழை மங்குலின் மறைக்கும்
நாடுகெழு வெற்பனொடு அமைந்தநம்
தொடர்பே.

உரை:—தொகுதியாக அமைத்துச் செறித்தலையுடைய இலங்குகின்ற வளைகள் நெகிழ்ச்சியுற, பக்கம்உயர்ந்த அல்குலினுடைய அழகிய வரிகள் வாட்டமடைய, நல்ல நுதலின்கண்ணே பசலைபாயக் கவலை மிக்க நீங்குதல் அரிய நோயானது நம் காதலனாலே தரப்பட்டதென்பதை அறியாது நம் அன்னை படிமத்தானுக்கு இவள்படும் நோயின்காரணம் தெரியவேண்டும் என்றறிவிப்ப அந்த அறிவுவாய்ந்தவேலன் வெறிக் களத்து முருகவேளின் முன்பு இடப்பட்ட கழற்சிக்கொட்டையைக் கொண்டு ஆராய்ந்து முருகணங்கென்று அம்முருகவேளைத் துதித்தலாலே தணியப்படுமாயின் அது மிக நல்லதேயாம்; அங்ஙனம் வெறியுமெடுக்காது இல்வயிற் செறிக்கப்பட்டமையால் இனிச் சாரலின்கண்ணே அகிலைத் தீயிட்டுக்கொளுத்துங் கானவன் ஆங்குள்ளசருகில் முதலிலே தீயிடுத லானே நறுமணம்வீசுகின்ற புகையானது இயங்குகின்ற மழைமேகம் போல் மறைக்கப்பட்ட நாடுவிளங்கிய சிலம்பனுடன் விரும்பிப்பொருந்திய நமது தொடர்ச்சி கழிந்துவிட்டதுபோலும்; எ - று.



உவல் - சருகு. முதுவாய்வேலன் - முதுமைவாய்ந்தவேலன் என விரித்து அறிவுவாய்ந்தவேலன் எனப்பொருள்கொள்க.

காதலன் கைவிட்டுப் பிரிந்தமையை நினைத்தலும் உடம்பு இளைத்த லானே கைவளைகழன்றமைகூறினாள். பிரிதலும் பசலைபரந்து நலனைக் கெடுத்தமைதோன்ற அல்குலவ்வரிவாடவென்றாள். இது பசலைபாய்தல்.

இறைச்சி:—கானவன் சுடுபுகை மேகம்போலத் தோன்றிமறைக்கும் என்றது, நமது ஊழ்வினை காதலனுக்குக் களவுப்புணர்ச்சியே சிறந்தது எனக்காட்டி அவனறிவை மயக்காநிற்குமென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (உஅஉ)

## மதுரை மருதனிள நாகனர்

நெய்தல்: (க) இது, பகற்குறிவந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

எ - து, களவொழுக்கத்தே பகற்குறிவந்த தலைமகனை எதிர்கண்ட தோழி உன்சொல்லை மெய்யென்று கொண்ட இவளழகு கெடும்படி நீ இங்ஙனம் நீட்டித்துவருவது தகுமோவெனவும், உள்ளுறையால் வரைந்து எய்துகவெனவுஞ் சூழ்ந்து கூறுகிற்பது.

(உ) கடிநகர் புக்கதோழி பிற்றைஞான்று வேறுபடாது ஆற்றினையென்று சொல்லியதூஉமாம்.

எ - து, அருங்கலந்தந்து வரைந்துகொண்டு மனைவியொடு காதலன் தன்நகர் புகுந்தபின்பு இறைவியின் இல்லறநெறியை அறியுமாறு செவிலியொடு தோழி தலைமகனது மாளிகையிலேசென்று அவனைநெருங்கி நீ காதலி வேறுபாடுறாது மணந்துநன்காற்றினையென்று மகிழ்ந்து கூறுகிற்பதும் ஆகும்.

ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற
கண்ணேர் ஒப்பின் கமழ்நறு நெய்தல்
அகல்வரிச் சிறுமனை அணியுந் துறைவ

ரு.

வல்லோர் ஆய்ந்த தொல்கவின் தொலைய
இன்னை ஆகுதல் தகுமோ ஓங்குதிரை
முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏமுற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்றநின் சொல்நயந்

தோர்க்கே.

உரை:—ஒள்ளிய நெற்றியையுடைய நுளைச்சியர் அகன்ற கழியின் கண்ணே பறித்துவந்த மகளிர்கண்ணை நேராக ஒத்தலையுடைய மணங்கமழ்கின்ற நறியநெய்தல்மலர் அகன்ற கையாலே கோலஞ்செய்த சிறிய மனையை அலங்கரிக்குந் துறையையுடைய தலைவனே, உயர்ந்துவரும் அலையையுடைய கடலின்மீது பலருந் தொழுமாறு தோன்றி யாவரும் மகிழ விளங்கிய ஞாயிற்றினுங்காட்டில், வாய்மைவிளங்கிய நினது சொல்லைவிரும்பிய எம்மிடத்துள்ள அறிவுடையோரால் ஆராய்ந்துகண்ட



பழைய அழகு கெடும்படியாக நீ இத்தன்மையை உடையயாயிருத்தல் தகுதியுடையதொரு காரியமாகுமோ? ஆதலின் ஆராய்ந்து ஒன்றனைச் செய்வாயாக; எ - று.

தவிராது தோன்றிவிளங்குதலின்
நயந்தோர் - இடவழுவமைதி.

ஞாயிற்றை உவமித்தார். சொல்

வரைந்தெய்தாது இங்ஙனம் நீட்டித்து அருகிவருஞ்செய்கையை என்னும் பொருள்பட இன்னேயென்றாள். புகல்புக்கார்மாட்டு வாய்மை பிறழின் மிக்கதமெய்துமேயென்று குறிப்பித்தாளுமாம்.

உள்ளுறை :—மகளிர் கொய்துவந்த நெய்தல் சிறுமனையை அணி செய்யுமென்றது, இவளை மணந்துசென்று நின்து இல்லத்தை அணிபெறச் செய்யென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

(உ) உரை :—துறைவனே, தொல்கவின் தொலையுமாறு இப்படி வரைந்துகொள்ளாது களவிலொழுகியது தகுதியாகுமோவென்றவாறு.

உள்ளுறை :—நெய்தல்மலர் சிறுமனை அழகுசெய்தல்போல இவளே நின் இல்லத்துக்கு அழகமைந்தவளென்பது. மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். இப்பாட்டுச்சிறுமைக்குக் கூறிய ஒன்பதடியினுங் குறைந்துளது ; முதலடியில்லைப்போலும். (உ௪௩)

## உ௪௪.

# தேய்புரிப்பழங்கயிற்றினார்

பாலை :

இது, பொருண்முடியாநின்ற தலைமகன் சொல்லியது.

ஆற்றுனாகிச்

எ - து, பொருள்வயிற்சென்ற தலைமகன் தலைவியைநினைந்து ஆற்றுன் ஆகி 'என் நெஞ்சமானது தலைவிபாற் செல்லுவோமென்னுநின்றது, என் அறிவானது பொருள்முடித்துப்போவோமாதலின், அதற்குள் விரையாதே என்கின்றது, இவ்விரண்டும் பகைகொண்டதனுல் இடையிலுள்ள என் உடம்பு அழியவேண்டுவதுதான்போலும்' என இடைச்சுரத்து அழுங்கிக் கூறுநிற்பது.

புறந்தாழ்பு இருண்ட கூந்தற் போதின்
நிறம்பெறும் ஈரிதழ்* பொலிந்த உண்கண்

உள்ளம் பிணிக்கொண் டோள்வயின்

நெஞ்சம்

செல்லல் தீர்க்கஞ் செல்வாம் என்னுஞ்
ரு. செய்வினை முடியாது எவ்வஞ் செய்தல்
எய்யா மையோடு இளிவுதலைத் தருமென
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை

(பாடம்) * நிறங்கிளர் நிரையிதழ்.

ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்என் வருந்திய வுடம்பே.

உரை:—என் நெஞ்சமானது 'புறத்தே தாழ்ந்து இருண்டகூந்தலையும் நெய்தல்மலர்போன்ற நிறம்விளங்கிய ஈரிய இமைபொருந்திய மையுண்ட கண்ணையுமுடைய என்னுள்ளத்தைப் பிணித்துப் பற்றிக்கொண்டவளிடத்து யாம் செல்வோம், சென்று அவளுடைய இன்னாமையைத் தீர்ப்போம்' என்று கூறாநிற்கும்; அப்பொழுது என் அறிவானது 'நாம் எடுத்த காரியத்தை முடிவுபெறப் போக்காமல் இடையில் இகழ்ந்து விட்டு விடுதலானது அறியாமையுடனே இகழ்ச்சியையுங் கொடாநிற்குமென உறுதிப்பாட்டை ஆராய்கையாலே ஏநெஞ்சமே, நீ நிலையிலே பொருந்தி நின்று சிலபொழுதளவும் மிகவிரையாதேகொள்' என்று கூறாநிற்கும்; அவ்விரண்டும் மாறுபடுதல்கொண்டுடைமையின் அவற்றிடைநின்று வருந்துகின்ற என்னுடம்பானது விளங்கிய தலையிலேதாங்கிய கொம்பினை உடைய களிற்றியானை ஒன்றோடொன்று மாறாகா கைப்பற்றியீர்த்த தேய்ந்த புரியை உடைய பழையகயிறு இற்றொழிவதுபோல அழிய வேண்டுவதுதானோ? இஃதொருகொடுமையிருந்தவாறு நன்று; எ - று.

ஆயிடை வருந்திய உடம்பெனக் கூட்டுக. எய்த்தல் - அறிதல்; எய்யாமை - அறியாமை. செல்லல்தீர்க்கம் செல்வாமென்றது, காதல்கைம் மிகல்.

'உள்ளம் அவளாலே பிணிப்புண்டமையின் அது மீண்டு அவள்பால் ஏகக்கருதியதாயிற்று; அறிவு பிணிப்புறாமையின் ஆராய்ச்சியின்மேலதாய் விரையலென்றது.' என இதனானே மகளிர்பால் மயங்கினார்க்கு ஆராய்ச்சி தோன்றாமையும் மயங்காதார்க்கு ஆராய்ச்சி மேம்படத்தோன்றுவதுங் கூறினான். **மெய்ப்பாடு** - பிறன்கண்தோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - இடைச்சுரத்தழுங்கல். (௨௮௪)

## ௨௮௫. மதுரைக் கொல்லன்வெண்ணாகனார்

### குறிஞ்சி :

இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன்கேட்ப அம்பலும் அலருமாயிற்றென்று சொல்லியது.

எ – து, அங்ஙனம்தலைமகன் கேட்குமாறு கூறுகின்றவள், குன்றநாடன் இரவில்வருதலன்றியும் அயலார்கூறும் பழிச்சொல்லுக்கும் அகலானாகிப் பகற்பொழுதினும் புனத்தேவருகின்றனன்; அவனது கேண்மை நல்லதில்லையென இருவகைக்குறியையுமறுத்து உள்ளுறையாலே உடன்கொண்டுசென்றாயினும் வரைந்துகொள்ளும்படி சூழ்ந்து கூறாநிற்பது.

அரவிரை தேரும் ஆரிருள் நடுநாள்
இரவின் வருதல் அன்றியும் உரவுக்கணை
வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு

மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட
வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட
நடுகோற் குரம்பைத்தன் குடிவயிற்

பெயரும்

குன்ற நாடன் கேண்மை நமக்கே
நன்றால் வாழி தோழி என்றும்
அயலோர் அம்பலின் அகலான்
பகலின் வரூஉம் எறிபுனத் தானே.

**உரை** :—தோழீ! வாழ்வாயாக; திண்ணிய கையையுடைய கானவன் தனது வெய்ய வில்லைவளைத்து வலிய கணையையெய்து நெஞ்சிலேபாய்த்திக் கொன்ற முட்பன்றியேற்றையைக் கைக்கொண்டு வேட்டையிலே தான் பெற்ற வென்றியாலாய உவகையுடையவனாகி மனையகத்துள்ள நாய்கள் எல்லாம் ஒருசேரப் பக்கத்திலேவந்து குரைத்து விளையாடக் காட்டகத்து உள்ள நட்டகாலிலே கைசேர்த்துப் பிணித்த தானிருக்குங் குடிசையுடைய சேரியின்கண்ணே செல்லாநிற்குங் குன்றநாடன் பாம்புகள் தமக்கு வேண்டிய இரையைத்தேடி உழலாநின்ற இயங்குதற்கரிய இருள்மிக்க இரவு நடுயாமத்தில் நம்பால் வருவதல்லாமலும், எப்பொழுதும் அயலவர் கூறும் பழிச்சொல்லைக் கேட்டும் அகன்றுபோகானாகி வெட்டியுழுது விதைத்த தினைப்புனத்தின்கண்ணே பகற்பொழுதினும் வாராநின்றான்; ஆதலின் அவனுடைய நட்பானது நமக்குநல்லதோ? நல்லதன்றாயிற்றுக் காண்; எ - று.

நன்று – நல்லதன்று என்னும் பொருள்தோன்ற கொள்க. இஃது, அவன் புணர்வுமறுத்தல்..

எடுத்தலோசையாற்

**உள்ளுறை :**—கானவன் எய்துபெற்ற முளவுமானேற்றையொடு உவகையனாய் நாய்கள் மனையகத்து எதிரேபோந்து குரைத்து மகிழா நிற்பக் குடிவயிற்பெயருமென்றது, தலைமகன் தான் களவொழுக்கத்துப் பெற்ற தலைவியை இரவில் உடன்கொண்டுசென்று தன்னூர்வயிற்புகுந்து தன் மனையின்கணுள்ள தமர் மகிழாநிற்ப மணம்புணர்வானாக என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (உஅ௫)

## உஅசு. துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனார்

**பாலை :**

இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி

வற்புறுத்தது.

எ - து, வணிகர்தலைமகன் பொருள்வயிற் பிரிதலால் வருந்திய தலைவியைத் தோழி நெருங்கி அவர் பிரிதலால் இறந்துபடுவேனென்று வருந்ாதேகொள்; நட்பாளர்க்கு ஆக்கமும் நின்தோளுக்கு அணியும் கொண்டுவரவேண்டியன்றோ அவர் சென்றதென வலியுறுத்தி ஆற்றுமாறு கூறாநிற்பது.

ஊசல் ஒண்குழை உடைவியத்து அன்ன
அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி
கல்லென வரிக்கும் புல்லென் குன்றம்
சென்றோர் மன்ற செலீஇயரேன் உயிரெனப்

ந. நா.—21

ரு. புனையிழை நெகிழ விம்மி நொந்துநொந்து
இனைதல் ஆன்றிசின் ஆயிழை நினையின்
நட்டோ ராக்கம் வேண்டியும் ஒட்டிய
நின்தோள் அணிபெற வரற்கும்
அன்றோ தோழியவர் சென்ற திறமே.

உரை :—ஆராய்ந்தணிந்த இழையையுடையாய்! தோழி, 'உடைமரங்கள் மிக்க நெறியின்கண்ணே மகளிரின் ஒள்ளிய குண்டலத்திற்கொளுவிய ஊசல்போன்ற மலைநெறியிலுள்ள குமிழமரத்தின் அழகிய இதழை உடைய மலர் கல்லென்னுமொலியொடு கோலஞ்செய்தாற்போல உதிராநிற்கும் பொலிவழிந்த குன்றத்து எம் காதலர் சென்றனராதலால் திண்ணமாக இனி என்னுயிர் சென்றொழிவதாக' என்று நீ அணிந்த கலன்கள் கழன்று விழும்படி விம்மியழுதுமிகநொந்து வருந்துகின்றதனைச் சிறிது பொறுப்பாயாக; கருதுங்காலைத் தம்மைநட்புக்கொண்டவர்தாம் செல்வமடைய வேண்டியதற்காகவும், அடைக்கலமாகப் புகுந்த நின்னுடைய தோள்கள் நல்ல கலன்களை அணியப்பெறுவதற்காகவும் அன்றோ அவர் சென்ற தன்மையாகும்; எ - று.

உடை - உடைமரம். வியம் - வழி. உடைவியத்துக் கற்பாறையிலே குழை ஊசலன்ன அலரி கோலஞ்செய்யுமென மாறிக்கூட்டுக. ஊசல் போறலின் ஊசலென்றார். இக்காலத்துச் சிமிக்கியெனவுங் குடைக்கடுக்கன் எனவுங் கூறுப; குமிழம்பூ அங்ஙனமேயிருப்பதுகண்டு தெளிக. பெறவரல் - ஒருசொல். அணிபெறுதற்கெனவே தலைவன் வணிகனெனமைதெளிக.

கல்லறை குமிழமலர் வரிக்குமென்றது, சென்றோர்மீண்டு நின்மாட்டு அருங்கலம் பலகொணர்ந்து அலங்கரிப்பரென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைமகளை ஆற்றுவித்தல். (உஅச)

## உஅஎ. உலோச்சனார்

நெய்தல்:

இது, காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

எ - து, இல்வயிற்செறித்துக் காவல்செய்யப்படுதலாற் புறத்தே போதற்கியலாது ஆற்றாமைமிக்க தலைவி, முன்பு தலைவன் நம்பால் வந்த பொழுதெல்லாம் அஞ்சாத என்னெஞ்சம், இப்பொழுது இல்வயிற்செறித்தலால் இரவிலே புள்ளொலி கேட்குந்தோறும் தலைவனது தேரின் மணிக்குரலோவென்றஞ்சித் துயில்கொண்டிலதென நொந்து கூறுகிறபது.

விசும்புறழ் புரிசை வெம்ப முற்றிப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்த
நல்லெயில் உடையோர் உடையம்

என்னும்

பேருந்தகை மறவன் போலக்

கோடுங்கழிப்

ரு. பாசடை நெய்தல் பனிநீர்ச் சேர்ப்பன்
நாம முதலை நடுங்குபகை அஞ்சான்

காமம் பெருமையின் வந்த ஞான்றை
அருகா தாகிய வன்கண் நெஞ்சம்
நள்ளென் கங்குற் புள்ளொலி
கேட்டொறுங்
தேர்மணித் தெள்ளிசை கொல்லென
ஊர்மடி கங்குலுந் துயின்மறந் ததுவே.

**உரை** :—வளைந்த கழியின்கண்ணே பசிய இலைகளையுடைய நெய்தல் மிக்க குளிர்ந்தநீரையுடைய கொண்கன், அச்சஞ்செய்கின்ற முதலையின் நடுக்கமுறுத்தும் பகைமைக்கும் அஞ்சானாகிக் காமமிகுதியால் இங்கு வந்த பொழுது விசும்பிலே நீண்டுயர்ந்த மதிலை உள்ளிருப்பவர் நடுங்கும்படி முற்றுகைசெய்து பசியகண்ணையுடைய யானைப்படையொடு பகையரசன் அதன்புறத்தே தங்கப்பெற்றதனால் அப்பகையரசனை உள்ளேபுகுதவிடாத படி கல்லமதில்காவலுடையாரை யாம் பெற்றுடையோமென்று கருதி யிருக்கின்ற பெருந்தன்மையுடைய உள்ளடைப்பட்டிருந்த வீரனைப் போலக் கெடாத வன்கண்மையுடைய என்னெஞ்சமானது இப்பொழுது செறிந்த இருளை உடைய நடுயாமத்திலே பறவையொலிப்பதைக் கேட்குந் தோறும் நம் காதலன் ஊர்ந்துவருகின்ற தேரிலேகட்டிய மணியின் தெளிந்த ஓசையோ என்று ஊராரெல்லாரும் உறங்குகின்ற இராப்பொழு தினும் துயில்கொள்வதனை மறந்துளதாயிராநின்றது ; எ - று.

தான் காவலுட்பட்டிருந்தமையை முற்றுகையுட்பட்ட வீரனோடு உவமித்தாள். அவ்வீரன் எயில்காவலரை உடையேமென்றிருத்தல்போல யானுந் தலையளிசெய்யுந் தலைவனையுடையேனாயிருந்தேன் அது கழிந்த தென்பாள், இப்பொழுது காவன்மிகுதியாலும் அவன்வாராமையாலும் புள் ளொலி ஒருந்தன்மையதாகியதென்றாள். புள்ளொலி கேட்டலென்றது, எதிர்பெய்துபரிதல். துயின்மறந்ததென்றது, கண்டுயின்மறுத்தல். எனை **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - அயாவுயிர்த்தல். (உஅஎ)

## உஅஅ. குளம்பனார்

குறிஞ்சி :

இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குரைப்பாளாய் வெறியறிவுறீஇ வரைவுகடாயது.

ஏ - து, சிறைப்புறம்வந்த தலைமகன் கேட்டு விரைய வரையுமாறு தோழி தலைவியைநெருங்கி நாடன்பிரிவினாலே பசலைதோன்றியதறிந்த அன்னை கட்டுவைத்துக் கேட்டால் அந்தக் கட்டுக்குறியானது முன்பு யாம் கிளியோப்பிப் புனங்காவல்செய்யச் சென்றிருந்தும் அதனையறியாது நெடியமுருகவேள் அணங்கியதென்று சொல்லுமோவென அழிந்து கூறுகிற்பது.

அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய
ஓங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்
குன்ற நாடன் பிரிவிற் சென்று
ரு. நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை
செம்முது பெண்டிரோடு நெல்முன்
நிறீஇக்

கட்டிற் கேட்கும் ஆயின் வெற்பில்
ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்
குறுகிளி கடிகஞ் சென்றும்இந்
௪௦. நெடுவேள் அணங்கிற் றென்னுங்கொல்
அதுவே.

உரை :—உயர்ந்த மரக்கிளையிலுள்ள பீலியையுடைய மயில் காலையில் விரிந்த இளவெயில்காயவேண்டி அருவியொலிக்கின்ற அச்சமுடைய நெடிய கொடுமுடியின் பக்கத்திலே தன் பெடையொடு விளையாடாநிற்கும் மலைநாடன், நம்மைப் பிரிதலினாலே சென்று நல்ல நினது நுதலிலே பரந்த பசலையைநோக்கி நம் அன்னை சேரியிலுள்ள செம்மையாகிய முதுமை உடைய கட்டுவிச்சி முதலாயினோருடனே இல்லகம்புகுந்து முன்னர் முறத்தில் நெல்லைப்பரப்பிக் கட்டுவைத்து நம்மை எதிரில்நிறுத்திக் குறி கேட்கும் ஆயின் அக் கட்டுக்குறியானது, - இப்பொழுது மலையிடத்தில் உள்ள ஏனலாகிய சிவந்த தினையின் பால்நிரம்பிய கொழுவிய கதிர்களைக் கொய்து கொண்டுபோகுங் கிளிகளை வெருட்டுவேமாகிச் சென்றிருந்தும் அதனை அறியாது இவள் இந்தநெடிய முருகவேளிருக்குமிடத்து அருகு சென்றதனால் முருகவேள் அணங்கியதென்று கூறுநிற்குமோ ? எ - று.

ஏனலாகியதினை - இருபெயரொட்டு.

கட்டு - சேரியின் முதுபெண்டாகிக் குறிசொல்லுமாதரை மனையகத் துக் கொணர்ந்துவைத்து முறத்திலே பிடிநெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடுசெய்து அக்நெல்லை நந்நான் காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவுங் கூறப்படுவது. முருகணங்கென்று கூறின் உடனே வேலனை (முருகனுக்குப் பூசைநடத்தும் பூசாரியை) அழைத்து வெறிக்களந்திருத்தி முருகவேளுக்குச் சிறப்பெடுத்து ஆண்டுக் கழங்குக் குறிபார்ப்பது. அதனை நேர்ந்துழி இந்நூலுட் கூறப்படுவதறிக.

உள்ளுறை :—இளவெயிலுண்ணவேண்டி மயில் பெடையோடு கோட்டின்பக்கஞ்சென்று ஆங்கு ஆடுமென்றது, காமவின்பந்துய்த்து இல்லறம் நிகழ்த்தவேண்டித் தலைமகன் தலைமகளைக்கொண்டு தலைக்கழிந்து மணந்து வைத்தவாறாக என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (உ௮௮)

## உ௮௯. மருங்கூர்ப்பட்டினத்துச் சேந்தன்குமரனார்

முல்லை : இது, பிரிவிடைப் பருவங்கண்டு சொல்லியது.

எ - து, பிரிந்த தலைமகன் குறித்தபருவத்து வாராமையால் வருந்திய தலைவி அவர் சொல்லிய சொற்பிழையார் ; அதன்முன் வானம் கார்காலத்தைச் செய்துவிட்டதாதலின், அவரால் அளித்தற்குரிய யான் இப்பொழுது அருளப்படாம லிருக்கின்றேனென்று நொந்து கூறுகிற்பது.

அம்ம வாழி தோழி காதலர்
நிலம்புடை பெயர்வதாயினுங் கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே வானம்
நளிகடல் முகந்து செறிதக இருளிக்

மூலமும் உரையும்

ந௨௫

ரு. கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்
கார்செய்து என்னுழை யதுவே யாயிடைக்

கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வேரடிப் போல
அருளிலேன் அம்ம அளியேன் யானே.

உரை :—தோழீ! வாழி; யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக; இந் நிலம் தன்னிலையினின்று பெயர்வதாயிருந்தாலும் நம் காதலர் தாம் கூறிய சொல்லை அதனிலைமையினின்றும் பெயர்த்துக்கூறுபவரல்லர்; ஆதலின் குறித்தபருவத்து வருவர்; அதன்முன் மேகமானது நெருங்கிய கடனீரை முகந்து செறிவுபொருந்த இருண்டு மிக்க மழையைப்பெய்து கடிய குரலைக் காட்டி இடித்துக் கார்காலத்தைச் செய்து துன்புறுத்துதற்கு என்மாட்டு அமைந்திராநின்றது; இப்பொழுது அளிக்கத்தக்க தகுதியுடையேனாகிய யான், அங்கே கொல்லையிற் கோவலர்கள் இரவில் எரிகொளுத்திய வெட்டுண்ட பெருமரத்தினது வேரடிக்கட்டையைப்போல காமநோய் கனற்றலானே அவரால் அருள்செய்யப்பெறேனாயிராநின்றேன்; எ - று.

காட்டின்கட் கொல்லையிற் கோவலர் கொளுத்திய வேர்க்கட்டை அவிப்பாரின்றித் தானேவெந்து தணியுமன்றே, அப்படிப்போல அருள் செய்யுந் தலைவரின்றி யான் காமத்தீயால் அழிந்தொழியாநின்றேனென உவமையொடு பொருத்திக்காண்க. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (உஅக)

## உகூ0. மதுரை மருதனிள நாகனார்

மருதம் : (க) இது, பரத்தை விறலிமேல் வைத்துத் நெருங்கிச் சொல்லியது.

தலைமகளை

எ - து, காமக்கிழத்தி விறலியை நோக்கிச் சொல்லுவாள்போலக் கூறித் தலைவியைப் புலவி தணிக்கின்றாள், ஊரனது தொடர்பை விரும்பினையாயின் என் சொல்லைக் கொள்ளுவையாக; நின் தகுதிக்கு இப்புலவி தகாதுகாண்; அவனை வண்டென்பதன்றி மகனென்றாராதலிற் புலவாதே கொள்ளென நயந்து கூறுகிற்பது.

(உ) பரத்தையிற் பிரிய வாயிலாய்ப்புக்க பாணன் கேட்பத் தோழி சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை.

வயல்வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்விடு நடைப்பகடு ஆரு மூரன்
தொடர்புநீ வெஃகினை யாயின் என்சொல்
கொள்ளல் மாதோ முள்ளெயிற் றோயே
நீயே பெருநலத் தகையே அவனே

௱௨௬ நற்றிணை நானூறு

நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
தண்கமழ் புதுமலர் ஊதும்
வண்டென மொழிப மகனென் னாரே.

**உரை** :—முட்போன்ற கூரிய பற்களையுடையாய், வயலில் மள்ளர் அறுக்குங் கதிரோடு அறுபட்டு அரிச்சூட்டோடு களத்திற்கொணர்ந்து போகடப்பட்ட வெளிய ஆம்பலின் அப்பொழுது மலர்ந்த புதியபூ, கன்றை அணிமையி லீன்றுடைய பசுவானது தின்று எஞ்சிய மிச்சிலை உழுது விட்ட ஓய்ந்த நடையையுடைய பகடு தின்னுநிற்கும் ஊரனுடன் கூட்டம் நெடுங்காலம் நிகழ்த்துதலை விரும்பினையாதலின் 'அவள் அவனொடு கட்டில் வரையெய்தினள்' என்று ஊரார் கூறுகின்ற சொல்லைக்கொண்டு என்னைப்போல வேறுபட்டுக் கொள்ளாதே; இனி என் வார்த்தையைக் கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்பமாயின் யான் கூறுகின்றதனைக் கொள்வாயாக; அதுதான் யாதோவெனில் பெரிய இளமையும் தகுதிப் பாடுமுடைமை யாதலால் நீ வேறுபட்டுக்கொள்வது நின் இளமைக்கும் எழிலுக்கும் ஏலாதுகாண்; அவனை நெடிய நீரையுடைய பொய்கையில் நடுயாமத்திலே தண்ணிதாய் நறுமணங்கமழும் புதிய மலரிலேசென்று தேனுண்ணும் வண்டெனச் சொல்லுவரல்லாமல் நல்ல ஆண்மகனென யாருங்கூறுர்; ஆதலின் அவனைப் புலவாதேகொள்; எ - று.

நள்ளிரவிலே சென்று புதிய பரத்தையை விரும்பித் துய்ப்பவன் என்பாள், நடுயாமத்து விரியும்பூவை உண்ணுகின்ற வண்டெனக் கூறினுள்.

**உள்ளுறை** :—புனிற்று தின்றமிச்சிலை உழுதுவிடுபகடு சென்று தின்றாற்போல, நீ இளமைச்செவ்வியெல்லாம் அவனை நுகர்ந்து புதல் வனைப் பயந்த பின்னர் நீ உண்ட மிச்சில்போன்ற அவனைப் பிறர் நுகர் கின்றனர்; அது நினக்கு இழுக்கன்று என்றதாம். **மெய்ப்பாடு** - பெரு மிதம். **பயன்** - ஊடல்தணித்தல்.

(உ) **உரை** :—முள்ளெயிற்றோய், நீ ஊரனது தொடர்ச்சியை விரும் பின் என் சொல்லை ஏற்றுக்கொள்ளவேண்டா; கொள்ளின் நீ மிக்க அழ குடையையாயிருந்தும் அவனை வண்டென்பதன்றி ஆண்மகனென்ஞர் ஆதலின், அவன் தொடர்பு என்ன பயனுடையதுகாண்? எ - று. **மெய்ப் பாடு** - வெகுளி. **பயன்** - வாயில்மறுத்தல். (உ௬0)

## உ௬௧. கபிலர்

நெய்தல் :

இது, வாயிலாகப் புக்க பாணற்குத் தோழி தலைமகளது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது.

எ - து, பரத்தையிற்பிரிந்த தலைமகன் விடுப்பவந்த பாணனைத் தோழி நோக்கித் தலைவன்பால் இறைமகள் வேட்கையுடையாளென்னுங் குறிப்பு அறிந்தனளாதலின், அதற்கேற்கும்படி கூறுவாளாகிப் பாணனே, இவள் தான் நலமிழந்துவருந்துவதனை நீ கண்ணாலே கண்டவாறு துறைவன் உள்ளங்கொள்ள மொழிந்தாயல்லையே இது தகுதியோவென நொந்து கூறுநிற்பது.



நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்று அள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த இனக்குருகு
குப்பை வெண்மணல் ஏறி அரைசர்
ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்
தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயுங்

கண்டாங்கு உரையாய் குணமோ பாண
மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரைப்
பல்லான் கிழவரின் அழிந்தவிவள்
நலனே.

**உரை**:—பாணனே! மிக்க பெரிய முள்ளூர் மன்னவனாகிய மலையமான் திருமுடிக்காரி, பரியேறிச்சென்று இராப்பொழுதில் அடித்துக் கொண்டு வரப்பட்ட கூட்டமாகிய பலவாய பசுவினிரைக்குரியவர் அவனோடெதிர்நின்று போர்முனையில் அழிந்தாற்போல அழிந்துபோகிய இவளது நலத்தை நீ கண்கூடாகக் கண்டபடி,—நீர் தன்நிலையிலிருந்து ஓடி வற்றிய அள்ளற் சேற்றின்கணுள்ள நிணமிக்க தலையையுடைய கொழுத்தமீனை அருந்தவேண்டி நாரையினம் குவிந்த வெளிய மணன் மேட்டில் ஏறியிருந்து அரசரது ஒள்ளிய காலாட்படையின் கூட்டம் போல விளங்கித் தோன்றாநிற்கும் தண்ணிய பெரிய கடனீர்த்துறையை உடைய காதலனுக்கு உரைத்தாய் இல்லையே; அங்ஙனங் கூறாதது நினக்கு இயல்பாகுமோ? கூறியிருந்தால் முன்னரே அவன் வந்து கூடித் தலையளி செய்திருப்பன்; நீ உள்ளவாறு கூறாமையின் அவனும் வந்திலன்; இவளது நலனும் அழிந்ததுகாண்; எ - று.

காவாட்படை சென்னியில் வெள்ளாடை சூடிச் செல்லுதல் அக்கால வழக்காதலின், வெளிய நாரையிருத்தற்கு உவமித்தனர்போலும். நிணத்தை உருக்க நெய்யாமாதலின் நெய்த்தலையென்றதாம்.

**உள்ளுறை**:—மீனருந்தவேண்டிக் கூட்டமாகக் குருகுகளிருத்தல் போல இறைமகன்பால் கிடைக்கப்பெறுவனவற்றைத் தெட்டிக் கொள்ளுதற்கு விறலிமுதலானவரொடு கூட்டமாகவிருக்கின்றீர்; குருகுகள் படைபோன்றிருப்பினும் படையாகாதன்றே அங்ஙனம் நீயிர் வாயில்கள் ஆகுந்தன்மையீர்போலிருந்தும் அது செய்யும் வன்மையுடையீரல்லீர் என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவனைத் தலைவியொடு கூட்டுவித்தல். (உகூக)

## உகூஉ. நல்வேட்டனார்

குறிஞ்சி: இஃது, இரவுக்குறி மறுத்தது.

எ-து, களவொழுக்கத்து இரவுக்குறிவருந் தலைவனைத் தோழி நெருங்கி ஐயனே, கரைகளில் யானைபொருதலால் இடிந்து பொன் முதலியன மின்னுநிற்கும்; கான்யாற்றின்கண்ணே முதலை இயங்காநிற்கும்; இத்தகைய நெறியின் ஏதம்நினையாது இராப்பொழுதில் நீ வருதலாலே தலைவி உயிர் வாழாள்காணென இரவுக்குறிமறுத்து வரைவு கடாவாநிற்பது.



நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலந்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்
யாணர் வைப்பிற் கானம் என்னாய்
களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை
ஒளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னுங்
கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்குங்
கராஅம் பேணாய் இரவரின்
வாழேன் ஐய மைகூர் பனியே.

உரை :—ஐயனே! நெடிய கணுக்களையுடைய சந்தனமரத்தின் அசைகின்ற கிளையிலே சுற்றிய பசிய நிறம்பொருந்திய இலையுடைய நறிய தமாலக்கொடியை இனிய தேனெடுக்கும் வேடர் வளைத்து அறுத்துக் கொண்டு செல்லாநிற்கும் புதுவருவாய் மிக்க இடத்தினையுடைய கானமென்று கருதாயாகி,—யானைகள் ஒன்றோடொன்று போர்செய்தலாலே இடிந்தொழிந்த பெரியபள்ளங்கள் பொருந்திய ஆழ்ந்த கரையிடமெல்லாம் விளங்கிய வெள்ளிய பளிங்குக்கற்களும் சிவந்த பொன்னும் மின்னுநிற்கும்; கரிய கற்பாறையில் ஓடுகின்ற கான்யாற்றில் நீந்துதற்கரிய நீர்ச்சுழியை உடைய இடந்தோறும் முதலைகள் இயங்காநிற்கும்; இத்தகைய ஏதங்களையும் நினையாயாகி இரவின்கண்ணே நீ இங்குவரின் யான் இனி உயிர்வாழ்கிரேன்; இந்த இருள் நிரம்பிய பனிக்காலத்திலே தனித்தும் உயிர்வாழ்கிரேன்; ஆதலின் இதனை ஆராய்ந்து ஒன்றனை இன்னே செய்வாயாக; எ – று.

வாழேனென்பதை இரண்டிடத்துங் தோழி கொண்டு கூறியது.

கூட்டுக. தலைவி கூற்றைத்

நறுங்கொடி என்றிரங்காது அறுப்பவரென்றதனால் நீ அரசகுமரனென்று இரங்காது ஊறுசெய்பவரென்பது குறிப்பித்தாள். வாழேனென்ன அவனது நெறிவருமேதம்நினைந்து கவன்றதுபோலவுங் கூறினமையின் வரைந்து பிரியாதுறைகவென்றாளுமாம். இஃது அழிவில்கூட்டத்து அவன் புணர்வுமறுத்தல்.

இறைச்சி :—தேன்கொள்பவர் சந்தனமரத்திலே சுற்றிய கொடியை அறுப்பரென்றதனால், தலைவியினது நலனை நுகரவருகின்ற நீ இரவில் வருதலானே கவலுகின்ற அவளது கவலை நீங்குமாறு வரைந்தெய்துக வென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இரவுக்குறிமறுத்து வரைவுகடாதல்.
(உகஉ)

உகங. கபிலர்

பாலை : (க.) இது, தாய் மனை மருண்டு சொல்லியது.

எ - து, களவினொழுகுந் தலைமகன் தலைவியை உடன்கொண்டு சென்றமை செவிலியாலறிந்த ஈன்றதாய் வருந்தி எம் புதல்வியுடனிருந்த தோழியரை யாம் காணுந்தோறும் நடுங்கி நொந்தொழிதல்போல, எம்மகளை

மூலமும் உரையும்

நஉசு

உடன்கொண்டகன்ற காளையாவானை ஈன்றதாயும் நடுங்கி நொந்தழிவாள் ஆக வென்று தன் மனையின்கண்ணே யிருந்து மருண்டு கூறுகிற்பது.

(உ.) அவரிடத்தாரைக்கண்டு

சொல்லியதூஉமாம்.

எ - து, தலைவனைச் சார்ந்தவரைக்கண்டு
இரண்டற்குமொக்கும்.)
சொல்லியதுமாகும். (உரை

மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து

ரு.

விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்ப்
பூங்கண் ஆயங் காண்டொறும் எம்போல்
பெருவிதுப் புறுக மாதோ எம்மில்
பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே.

உரை :—நீலமணிபோலும் பூங்கொத்தினையுடைய நொச்சிமாலையைச் சூடிப் பலிகளிடுதற்கு அமைந்த கையையுடைய பரிய முதிய குயவன் தான் இடப்படும் பலியை உண்ணுதற்கு அணங்குகளையும் காக்கைகளையும் அழையாநிற்கும் அகன்ற இடத்தையுடைய மன்றத்தின்கண்ணே திருவிழாச் செய்தலை மேற்கொண்ட பழைமையான வெற்றியையுடைய இம் மூதூரிடத்தில் எம்புதல்வியுடன் விளையாடும் நெய்தன்மலர்போலுங் கண்ணையுடைய தோழியரைக் காணும்போதெல்லாம் யாம் பெரிய நடுக்கமுற்றுத் துன்பப்படுவதுபோல,—எம் மனையகத்திருந்த பொலிவு பெற்ற கூந்தலையுடைய எம்புதல்வியை மருட்டிப் பலவாய பொய்ம்மொழி கூறித் தன் சொற்படி ஒழுகச்செய்து தன்னுடன் அழைத்துக்கொண்டு சென்ற வன்கண்மை உடைய காளையாவானை ஈன்றதாயும் இத்தகைய கொடிய புதல்வனை ஈன்றதனாலே அவள் பெரிய நடுக்கமுற்றுத் துன்பம் அடைந் தொழிவாளாக ; எ – று.

விதுப்பு - நடுக்கம். பழவிறல் - பழையவெற்றி. பொம்மல் - பொலிவு. இங்ஙனங்கூறியதனால் தலைவனுக்குத்தாயும் தலைவிக்குத்தாயுமாவார் ஒருவரையொருவர் கடிந்துகூறுதல் பண்டைக்காலமுதல் தமிழ்நாட்டில் நிகழும் வழக்குப்போலும். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - ஆற்றுதல்.

(உ௬௩)

## உ௬௪. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழான்

### குறிஞ்சி :

இது, மணமனை உட்புக்க தோழி தலைமகளது கவின்கண்டு சொல்லியது.

எ - து, கொண்டுதலைக்கழிந்த தலைமகன் தன்னகம்புகுந்து தலைமகளை மணஞ்செய்துகொண்டதறிந்த தோழி, அவன் மாளிகையின்கண்ணே சென்று தலைவியின் புதிய அழகுகண்டு வியந்து தலைவனது மார்பு முன்பு நோயும் பின்பு இன்பமுமாயிராநின்றது, இது பொய்ம்மையன்றென மகிழ்ந்து கூறுநிற்பது.

௩௩௦ . நற்றிணை நானூறு

தீயும் வளியும் விசும்புபயங் தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று மாதோ
மாயம் அன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை அகந்தோறுங்
தோன்றுறை* துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைக் கோடுகண்டு அன்ன
செம்புடைக் கொழுமுகை அவிழ்ந்த காந்தள்
சிலம்புடன் கமழுஞ் சாரல்
இலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே.

உரை:—தோழீ, மூங்கில் நெருங்கிக் கொறுக்கச்சி முளைத்துப் பரவிய பெரிய மலையிடமெல்லாம் பழைமையாயுற்ற அறிவுடனே வலிமையு மிகுதலாலே சினங்கொண்டு புலியைக்கொன்ற யானையின் தந்தத்தைக்கண்டாற் போன்ற செவ்விய புறத்தையுடைய கொழுவிய அரும்பவிழ்ந்த காந்தள் சிலம்பிடமெல்லாம் மணங்கமழுஞ் சாரலையுடைய இலங்குகின்ற மலைநாடனது அகன்ற மார்பானது, ஆற்றற்கரிய தீயையும் ஆற்றுதற்கினிய காற்றையும் ஆகாயந்தான் பெற்றதுபோலக் களவுக்காலத்து அணித்தாகி எப்பொழுதும் இல்லாமையால் நோய்செய்யுந் தன்மையும் இப்பொழுது வரைந்துகொண்டு கவவுக்கைநெகிழாது அணைத்து முயங்கியிருத்தலானே இன்பமாந்தன்மையுமாகி யிராநின்றது; இது பொய்ம்மையெனப்படுவதன்று; மெய்ம்மையேயாகும்; எ - று.

அகந்தொறும் அவிழ்ந்த காந்தளென்க. புலியின் இரத்தந்தோய்ந்த கோடாதலின் செம்முகைக்கு உவமித்தார். இது, நலன் நிலைக்களமாகச் சினையொடு சினைவந்த உருவுவமம். பிரிந்துறையும்பொழுது தீயாலே தெறப்படுவதுபோலத் தலைவி வருந்துதலின் மார்பு தீயொத்தநோயைப் பயந்ததெனவும் வரைந்து பிரியாதுறையும்பொழுது அவ்வெப்பந்தீரக் காற்றுவீசி இன்பஞ்செய்வதுபோல மார்பு காற்றொத்த இன்பத்தைப் பயந்தது எனவுங் கூறினளாயிற்று. இது, மறைந்தவையுரைத்தல்.

**உள்ளுறை**:—காந்தள் சிலம்பிடமெங்குங் கமழுமென்றது: தலைவனது அன்பு தலைவியின் இல்லகத்தார் யார்க்கும் மகிழ்ச்சியளிக்கின்றதென்றதாம். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - மகிழ்தல். (உகச)

## உகரு. ஔவையார்

**நெய்தல்**: (க)

இது, தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, தோழி தலைமகனை நெருங்கி எம் தலைவியின் களவொழுக்கத்தினை அன்னையறிந்து அவளை இல்வயிற்செறித்தனள்; இனிக் களவின் இயலாமையால், யாம் எந்நலனழியச் செல்லாநிற்பேம்; நீ வாழியவென நொந்து கூறாநிற்பது.

(உ) சிறைப்புறமுமாம்.

---

(பாடம்) * தொண்டுறை.

௩௩0 . நற்றிணை நானூறு

தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று மாதோ
மாயம் அன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை அகந்தோறுந்
தோன்றுறை* துப்போடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைக் கோடுகண்டு அன்ன
செம்புடைக் கொழுமுகை அவிழ்ந்த காந்தள்
சிலம்புடன் கமழுஞ் சாரல்
இலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே.

**உரை:**—தோழீ, மூங்கில் நெருங்கிக் கொறுக்கச்சி மூளைத்துப் பரவிய பெரிய மலையிடமெல்லாம் பழைமையாயுற்ற அறிவுடனே வலிமையு மிகுத லாலே சினங்கொண்டு புலியைக்கொன்ற யானையின் தந்தத்தைக்கண்டாற் போன்ற செவ்விய புறத்தையுடைய கொழுவிய அரும்பவிழ்ந்த காந்தள் சிலம்பிடமெல்லாம் மணங்கமழுஞ் சாரலையுடைய இலங்குகின்ற மலைநாட னது அகன்ற மார்பானது, ஆற்றற்கரிய தீயையும் ஆற்றுதற்கினிய காற்றையும் ஆகாயந்தான் பெற்றதுபோலக் களவுக்காலத்து அணித்தாகி எப்பொழுதும் இல்லாமையால் நோய்செய்யுந் தன்மையும் இப்பொழுது வரைந்துகொண்டு கவவுக்கைநெகிழாது அணைத்து முயங்கியிருத்தலானே இன்பமாந்தன்மையுமாகி யிராநின்றது; இது பொய்ம்மையெனப்படுவ தன்று; மெய்ம்மையேயாகும்; எ - று.

அகந்தொறும் அவிழ்ந்த காந்தளென்க. புலியின் இரத்தந்தோய்ந்த கோடாதலின் செம்முகைக்கு உவமித்தார். இது, நலன் நிலைக்களமாகச் சினையொடு சினைவந்த உருவுவமம். பிரிந்துறையும்பொழுது தீயாலே தெறப்படுவதுபோலத் தலைவி வருந்துதலின் மார்பு தீயொத்தநோயைப் பயந்ததெனவும் வரைந்து பிரியாதுறையும்பொழுது அவ்வெப்பந்தீரக் காற்றுவீசி இன்பஞ்செய்வதுபோல மார்பு காற்றொத்த இன்பத்தைப் பயந்தது எனவுங் கூறிஞளாயிற்று. இது, மறைந்தவையுரைத்தல்.

**உள்ளுறை:**—காந்தள் சிலம்பிடமெங்குங் கமழுமென்றது: தலைவனது அன்பு தலைவியின் இல்லகத்தார் யார்க்கும் மகிழ்ச்சியளிக்கின்ற தென்றதாம். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - மகிழ்தல். (உகச)

## உகரு. ஔவையார்

**நெய்தல்:** (க)

இது, தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

எ - து, தோழி தலைமகனை நெருங்கி எம் தலைவியின் களவொழுக்கத்தினை அன்னையறிந்து அவளை இல்வயிற்செறித்தனள்; இனிக் களவின் இயலாமையால், யாம் எந்நலனழியச் செல்லாநிற்பேம் ; நீ வாழியவென நொந்து கூறுகிறது.

(உ) சிறைப்புறமுமாம்.

(பாடம்) * தொண்டுறை.



என்னு வதுகொல் தோழி மன்னர்
வினைவல் யானைப் புகர்முகத்து அணிந்த
பொன்செய் ஓடை புனைநலங் கடுப்பப்
புழற்காய்க் கொன்றைக் கோடணி
கொடியினர்
௫. ஏகல் மீமிசை மேதக மலரும்
பிரிந்தோர் இரங்கும் அரும்பெறற்
காலையும்
வினையே நினைந்த உள்ளமோடு
துனைஇச்
செல்ப என்ப காதலர்
ஒழிதும் என்பநாம் வருந்துபடர்

உழந்தே.

**உரை**:—தோழீ! அரசருடைய போர்த்தொழில்வல்ல யானையின் புள்ளியையுடைய முகத்திலணிந்த பொன்னாற்செய்த நெற்றிப்பட்டத்தில் அலங்கரித்த அழகிய தோற்றம்போல உள்ளே புழலமைந்த காயையுடைய சரக்கொன்றையின் கிளைகளில் அழகிய கொடிபோன்ற பூங்கொத்துக்கள் பெரிய மலையின் மிகவுயர்ந்த இடத்தில் மேம்பட மலராநிற்கும்; பிரிந்தோர் வருகின்ற அருமையாகப் பெறுதற்கரிய கார்காலத்திலும் தாம் செய்யவேண்டிய காரியத்தையே கருதியவுள்ளத்துடனே நம் காதலர் விரைந்து செல்வாராயினர்; அங்ஙனஞ் செல்லுகின்றவருடன் சேரவுஞ் செல்லாமல் நாம் வருந்துகின்ற துன்பத்திலுழன்று இங்கேயே தங்கியிருக்கக் கடவோமாயினேம்; இஃதென்ன கொடுமை? இவ்வண்ணம் பிரிதலால் இனி யாதாய் முடியுமோ? ஒன்றுசூழ்ந்து கூறாய்; எ - று.

ஏ - பெருமை. என்ப இரண்டும் அசைநிலை. கொன்றைமலர்வது கார்காலத்தாதலின், ஈண்டுக் கார்காலமெனப்பட்டது. "கார்விரி கொன்றை" "கண்ணி கார்நறுங் கொன்றை" என்றார் பாரதம் பாடிய பெருந்தேவனாரும் (அகம் புறம் காப்புச்செய்யுள்களில்).

பிரிவின் இறந்துபடுவனென்னுங் கருத்தால் என்னுவதுகொல் என்றாள்.

**இறைச்சி**:—யானையின் நெற்றிப்பட்டம்போலக் கொன்றை கார்காலத்து மலருமென்றது, யான் தலைமகற்கு உரிமைபூண்டொழுகும் இல்லறக்கிழத்திபோல அவரைநோக்கி மகிழ்ந்துறைந்தேன்; கார்நீக்கத்துக்கண் அம்மலர் உதிர்ந்தொழிதல்போல அவர் பிரிவினால் யான் இறந்தொழிதல் திண்ணமென்றாளென்பதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (உகசு)

## உகஎ. மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்

**குறிஞ்சி**: (க) இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குரைப்பாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானாக அவன் கேட்குமாற்றானே தோழி தலைமகளை நோக்கி நின்னிடத்து நிகழுங்குறிப்புப் புணர்ச்சிக்குறிப்புப்போலப் பெரிதாயிராநின்றது: நீ நாடனை முயங்கிய குறியை அன்னை

-

மூலமும் உரையும்

ந. ந. ந.

நோக்கினால் ஐயப்படாநிற்குமன்றே; ஆண்டுக் காணென்று மருண்டு கூறாநிற்பது.

கூவாநின்றனள்

(உ) தோழி தலைமகளை அறத்தொடு நிலை வலிப்பித்ததூஉமாம்.

எ - து, தோழி தலைமகளை அறத்தொடு நிற்கும்படி கூறி படுத்தியதுமாகும். (உரை இரண்டற்குமொக்கும்.)

உடன்

பொன்செய் வள்ளத்துப் பால்கிழக்

கிருப்ப

நின்னொளி ஏறிய சேவடி ஒதுங்காய்
பன்மாண் சேக்கைப் பகைகொள

நினைஇ
மகிழா நோக்கம் மகிழ்ந்தனை போன்றனை
எவன்கொல் என்று
நினைக்கலும் நினைத்திலை
நின்னுள் தோன்றுங் குறிப்புநனி பெரிதே
சிதர்நனை முனைஇய சிதர்கால் வாரணம்
முதிர்கறி யாப்பில் துஞ்சும் நாடன்
மேல்ல வந்து நல்லகம் பெற்றமை
மையல் உறுகுவள் அன்னை
ஐயம் இன்றிக் கடுங்கூ வினளே.

**உரை** :—தோழீ! பொன்னாற்செய்த கிண்ணத்துள் வைத்த பால் நின்னால் உண்ணப்படாமல் கீழே வைத்திருக்கின்றமைகாணாய்; நின் மேனியின் ஒளிமிக்கு வேறு வண்ணமாகத்தோன்றுவ; அன்றி மெல்ல நின் சிவந்த அடிகளால் நடந்து இயங்கினையுமல்லை; பல மாட்சிமைப்பட்ட படுக்கையைப் பகையாகக் கருதிக்கொண்டு மகிழாநோக்கம் கட்குடியான் மயங்கினாற்போலாயினை; நாம் இப்படியிருப்பது என்னகாரணமென்று நினைக்கலுஞ்செய்திலை; ஆதலின், நின்னுள்ளே தோன்றுங் குறிப்பானது மிகப்பெரிதாயிராநின்றது; வண்டுகள் மொய்க்கின்ற மலரும் பருவத்தினையுடைய பூவினை வெறுத்த மெல்லிய காலையுடைய கோழி முதிர்ந்த மிளகுக்கொடி ஒன்றோடொன்று பின்னியிருப்பதன்கண்ணே துயிலாநிற்கும் மலைநாடன் மெல்லவந்து நின் மார்பின் அடையப்பெற்றதனால் ஆகிய சில குறிகளை நோக்கிய அன்னை இவளுக்கு இக்குறிப்புக்கள் உண்டாயதன் காரணம் யாதென்று மயக்கமுறாநிற்கும்; உவ்விடத்தே கேளாய், ஐயப்பாடின்றி அவ் அன்னை கடுமையான குரலையெடுத்து நின்னைக் கூவுகின்றனள்காண்; எ - று.

கிழக்கு - கீழிடம். மகிழ்தல்-கட்குடித்தல். சிதர் - வண்டு. சிதர்கால் - மெல்லியகால். யாப்பு - ஒன்றோடொன்று பின்னியிருக்குங் கட்டு. இருப்ப - முற்று.

இப்பொழுது ஆசாரமும் நாணும் காதலும் மீதூர்தலானே உணவை நோக்காயாய்ப் பண்டையிற்குறைந்த உண்டியையுடையாயென அன்னை ஐயங்கொள்ளுவளென்பாள் பால் கிழக்கிருப்ப என்பதனால் அறிவுறுத்தினாள். பண்டை நிறமின்றிக் கண்ணுங் கொங்கையுந் தோளுங் கதிர்ப்புக் கொண்டு வேறுபட்டுக்காட்டலானே ஐயுறுமென்பாள், நின்னொளிஎறிய



என்பதனால் அறிவுறுத்தினாள். ஆயத்தொடு பயிலாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலானும், செவிலி முலையிடத்தே துயிலவேண்டாது வேறோரிடத்துப் பயின்று நிற்றலானும், செய்வினைமறைப்புப் பயில்வு முதலியவற்றான் ஐயுறுமேயென்பாள் சேவடி ஒதுங்காயென் பதனால் அறிவுறுத்தினாள். இவை தானறிந்தனவன்றி அன்னையுமறியுமென அச்சுறுத்தினளுமாம். இவற்றை நோக்கவேண்டியே நின்னைக் கடுமையான குரலை எடுத்துக் கூவுதலையுடையளென மேலும் அச்சுறுத்தியது ஆயிற்று.

**உள்ளுறை**:—நனையை வெறுத்த வாரணம் கறிக்கொடியிலே துஞ்சும் என்றது, இத்தகைய தலைவியை வருந்தவிடுத்துத் தலைவன் கரந்து தன்னூர் அகத்து வைகுவானாயினன் என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௨௯௭)

## ௨௯௮. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்

**பாலை**:

இது, தோழியாற் பொருள்வலிப்பித்துத் தலைமகளை எய்தி ஆற்றாய நெஞ்சினை நெருங்கிச் சொல்லித் தலைமகன் செலவழுங்கியது.

எ - து, தோழி தலைவனை நெருங்கி நீ பொருளீட்டி வருகவென்று தூண்டுதலானே இயைந்த தலைமகன் காதலியையடைந்து ஆங்கு வருந்திய நெஞ்சினை நெருங்கி நெஞ்சமே, பொருள் வருவாயினையும் இவள் தோளின் பிரிவினையும் ஒருசேர நினைதலானே, நீ ஒருவழியினுஞ் சென்றாய் அல்லை; தோழி கூறியபடி பொருள் கொணருமாறு யாம் செல்லின் ஆண்டு இவளை எதிர்காணவுமியையுமோ இயையுமாயின் நீ சென்று காணென அழிந்து கூறுநிற்பது.

வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்

செங்கணை தொடுத்த செயிர்நோக்கு

ஆடவர்

மடிவாய்த் தண்ணுமைத்

தழங்குகுரல் கேட்ட

எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்
அருஞ்சுரக் கவலை யஞ்சுவரு நனந்தலைப்
பெரும்பல் குன்றம் உள்ளியும் மற்றிவள்
கரும்புடைப் பணைத்தோள் நோக்கியும்

ஒருதிறம்

பற்றாய் வாழிஎம் நெஞ்சே நற்றார்ப்
பொற்றேர்ச் செழியன் கூடல் ஆங்கண்
ஒருமை செப்பிய அருமை வான்முகை
இரும்போது கமழுங் கூந்தல்

பெருமலை தழீஇயுநோக் கியையுமோ

மற்றே.

**உரை** :—எமது நெஞ்சமே! அயல்நாட்டு மாந்தர் நெறியில் வருகின்ற தன்மையைநோக்கி அவரைக் கொள்ளைகொள்ளும்பொருட்டுச் சிவந்த அம்பைச்செலுத்திய சினத்தொடு நோக்குகின்ற மறவருடைய தோலை மடித்துப்போர்த்த வாயையுடைய தண்ணுமையை முழக்கி எழுப்பும்

மூலமும் உரையும்

௩௩௫

ஓசையைக்கேட்ட பருந்தின் சேவல் அச்சமுற்றுத் தன் சுற்றந்திடத்துச் செல்லாநிற்கும் சென்று சேர்தற்கரிய பாலைநிலத்தின்கணுள்ள கவர்த்த வழிகளைஉடைய கருதினவர்க்கு அச்சந்தோன்றுகின்ற அகன்ற இடத்தையுடைய பெரிய பலவாய குன்றுகளைப் பொருள்தேடு விருப்பினாலே செல்ல நினைந்தும், இவளுடைய கரும்பெழுதப்பெற்ற பருத்த தோளைப் பிரியவேண்டி இருத்தலினால், அதனுக்கஞ்சிப் பலமுறை நோக்கியும் நீ ஒரு நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுவாயல்லை; நல்ல மாலையணிந்த பொன்னாலாகிய தேரையுடைய பாண்டியனது மதுரையம்பதியிலே இவள் தோழி ஒருதன்மையாகப் பொருள்வயிற் செல்லும்படி உறுதிப்படுத்திக் கூறிய அருமையாகிய மொழியினால் யாம் பெரிய மலைநெறியைத் தழுவிய பின்னும் வெளிய அரும்புமலர்ந்த பெரிய மலரின் மணம்வீசுங் கூந்தலை உடையாளைப் பார்ப்பதற்கு இயையுமோ? இயையுமாயின் பொருள்வயின் பிரிந்து சென்றுகாண்; எ - று.

நோக்க என்பதின் அகரம் தொகுக்கும் வழித்தொக்கது.

**இறைச்சி** :—எருவைச்சேவல் தண்ணுமையொலிக்கஞ்சித் தன் சுற்றத் திடத்துப் பெயர்ந்து செல்லாநிற்குமென்றது, யாம் பொருள்வயிற் சென் றாலும் ஈண்டு இவள்படும் ஏதத்தைக்கருதின் அஞ்சி மீண்டெய்துவாம் போலும் என்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கண்தோன்றிய இளிவரல் பொருளாகப்பிறந்த அவலம். **பயன்** - இல்லத்தழுங்கல். (உ௬அ)

## உகூகூ. வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்

**நெய்தல்:** இது, தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானாதலையறிந்த தோழி தான் சொல்லு வதனை அவன் அறிந்தவுடன் 'நாமின்மையின் இவருமிலர்போலும்' என நன்குக அறிந்து விரைவின் மணம்புரிந்துகொள்ளும்வண்ணம் தலைவியை நெருங்கி நாம் களவினியங்குவதறிந்து நம்முடைய சிறுகுடி என்ன துன்பம் எய்தினும் அவரே நம் தலைவராவார்; அவரை மகிழ்ந்து கூடாத நாளில் நாமிருந்தும் இல்லாதேமாதலையறிவோம்; அது கழிந்ததேயென அழிந்து கூறுகிறபது.

உருகெழு யானை உடைகோண் டன்ன
ததர்பிணி அவிழ்ந்த தாழை வான்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்தாது
வயங்கிழை மகளிர் வண்டில் தாஅங்
ரு. காமர் சிறுகுடி புலம்பினும் அவர்காண்
நாமிலம் ஆகுதல் அறிதும் மன்னே
வில்லெறி பஞ்சி போல மல்குதிரை
வளிபொரு வயங்குபிசிர் போங்கும்
நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே.

**உரை :—** அச்சத்தைச் செய்கின்ற யானை நல்ல ஆடையை அணிந்து கொண்டாற்போன்ற நெருங்கிய பிணிப்பு அவிழ்ந்த பெரியதாழைப்புதரில்

இயங்குகின்ற கடிய மேல்காற்று மோதுதலாலே நுண்ணிய மலரின் உள்ள தாதுக்கள் வயங்கிய கலனணிந்த மகளிருடைய வளைகள் உடைந்து உதிர்ந்தாற்போல உதிர்ந்து பரவாநிற்கும் அழகிய கடற்கரையிலுள்ள சிறிய நம்மூர் வருத்தமுறுவதாயினும் அச் சேர்ப்பரே நம் தலைவர்காண்; வில்லால் அடிபட்ட பஞ்சுபோல நிரம்பிய அலைகளிலே காற்றுமோதுதலால் வயங்கிய பிசிர்கள் மிகுகின்ற நெருங்கிய கடற்கரையின் தலைவராகிய அச்சேர்ப்பரொடு மகிழ்ந்து கூடாதநாளில் நாம் இருந்தும் இல்லாதேம் போலாதலை அறியாநின்றேமன்றே; அங்ஙனமாகியும் இப்பொழுது அவர் தொடர்பு கழிந்ததுகண்டாய்; இஃதென்ன இன்னாமையுடையது? எ-று.

தாழையிலை அடியளவுந்தாழாது மேலே சிறிதளவு தழைதலால் யானை முதுகில்விடும் ஆடையை உவமித்தார். பிசிர் - அலையின்கணெழுந் திவலை. இதிலுள்ள யாவும் உவமையும் பொருளும் ஒத்தலால் உள்ளுறையின்மைதெளிக.

தன்னையே கேள்வனாகக் கொண்டனனென்பதை அவன் அறியுமாற்றானே குடிபுலம்பின் அவர் என எடுத்தவள், பிறர்கேட்பர் கொல்லென்றஞ்சி இசையெச்சத்தால் தலைவரெனக்கொள்ளுமாறு வைத்தாள். இன்றி அமையாமை கூறுவாள் நாமிலமாதல் அறிதும் என்றாள். களவினியலாமையில் புணர்ச்சியருகியதால் அது கழிந்ததேயென்றிரங்கினாள். **மெய்ப்பாடு**- பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௨௯௯)

## ௩00. பரணர்

**மருதம்:** (க) இது, வாயில் மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனால் விடப்பட்டுக் காமக்கிழத்தியிடத்துத் தூதாகவந்த பாணனை அவட்குப்பாங்காயின விறலி நோக்கி ஊரனுவான் சிறியவளையையுடைய இவட்கு இஃது ஈடென்று தனது தேரை அலங்கரித்து என் முன்றிலின்கண்ணே நிறுத்தியிட்டு வேறுவாளொருபரத்தைபாற் சென்றனன்கண்டாய்; அவனது தேரொடு வந்த நீயும் அவனொடுபோகாது எமது அட்டிற்சாலைக் கூரையைப் பற்றி நிற்கின்றனை, அப்படியே நீ நிற்பாயாகவென வெகுண்டு கூறுநிற்பது.

(உ) வரைவுகடாயதூஉமாம். மாற்றோர் னொதுமலாளர் வரைவின் மேவிட்டு மருதத்துக் களவு.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகனை நெருங்கிய தோழி, ஐயனே! வரைவுவேண்டிவந்த அயலானொருவன் நம் தலைமகளின் வளைவிலை இதுவாகுமென்று தனது தேரை முன்றிலின்கண் வைகவிடுத்து அகன்றொழிந்தனன்; நீயும் அங்ஙனம் அகன்றொழியாது போந்து மணம் புரிந்து கொள்ளென ஆய்ந்து வரைவுகடாதல் தோன்றும்வண்ணங் கூறியதுமாகும்.

சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென
அதனெதிர்
மடத்தகை ஆயங் கைதொழு தாஅங்கு
உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல்
தாமரைக்கு இறைஞ்சும் தண்டுறை ஊரன்

மூலமும் உரையும்

நநஎ

ரு. சிறுவளை விலையெனப் பெருந்தேர்

முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயுந், தேரோடு வந்து போதல்செல் லாது
நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்
இரும்பா ணொக்கல் தலைவன் பெரும்புண்
௧0. ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சைசூழ் பெருங்களிறு போலவெம்
அட்டில் ஓலை தொட்டனை நின்மே.

உரை :—நெய்வடிந்தாலொத்த பிசிரடங்கிய நரம்பு பூட்டிய யாழை உடைய பெரிய சுற்றத்தையுடைய பாணர்தலைவனே! விளங்குகின்ற தொடி அணிந்த அரசகுமாரி சினங்கொண்டவுடன் அவ்விடத்தில் மடப்பத்தை உடைய தோழியர்குழாம் கைதொழுது இறைஞ்சினாற்போல மிக்க காற்று மோதுதலானே ஆம்பல்குவிந்து தாமரைமலரிடத்திலே வந்து சாய்ந்து வணங்காநிற்கும் தண்ணிய துறையையுடைய ஊரன் ஏனையொருத்திக்குப் பரியமளிக்கவேண்டிச் செல்லுவான் இடையே எம்மைக்கண்டனனே சிறிய வளையினையுடைய இவட்குரிய விலை இதுவென்று தன் பெரிய தேரை அலங்கரித்து எமது முன்றிலின்கண்ணே நிறுத்தியிட்டு வேறொரு பரத்தையின் மனையகம் நாடிச்சென் றொழிந்தனன்கண்டாய்; அங்ஙனது தேருடனே வந்த நீயும் அவன் பின்னே செல்லாது போரிலே பெரிய புண்ணால் அழகுபெற்ற 'தழும்பன்' என்பவனது ஊணூரிடத்துள்ள பிச்சைக்குவந்த பெருங்களிறு நிற்றல்போல எம்முடைய அட்டிற்சாலைக் கூரையின் பனையோலையைத் தொட்டுநிற்கின்றனை; அவ்வண்ணமே நிற்பாயாக; எ - று.

உள்ளுறை :—காற்று மோதுதலாலே ஆம்பல் தாமரையைத் தாழும் என்றது, தலைவன் நின்னை ஏவுதலாலே நீ இங்குவந்து இறைஞ்சி நடலை பயிற்றுகின்றனையென்றதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின் மறுத்தல்.

இரண்டாந்துறையின் உரை:—ஊரனொருவன் இவளைப் பொன் அணியவேண்டி இச்சிறிய வளையுடையாளுக்கு விலை ஈதென்று தனது தேரினை அலங்கரித்து நிதியத்தொடு எமது முன்றிலிற்கொணர்ந்து நிறுத்தி அந்தணர், சான்றோர் முதலாயினோரை அழைத்துவரப்போயினான்; நீயும் அவ்வண்ணம் தேரோடுவந்து நிதியந்தந்து மணந்துசெல்லாது பாணர் ஒக்கலுக்கு உணவளிக்குந் தழும்பனது ஊணூரென்னுமிடத்தே களிறு நிற்றல்போல இரவுக்குறியிடமாகிய அட்டிற்சாலைக் கூரைப் பனையோலையைத் தொட்டுக் கருதிக்கொண்டிருக்கின்றனை; அங்ஙனமே நிற்பாயாக; எ - று. (௩௦௦)

## ௩௦௧. பாண்டியன் மாறன்வழுதி

குறிஞ்சி: இது, சேட்படுத்துப் பிரிவின்கண் அன்பின் இயற்கையில் தருவகையதோர் ஆற்றாமையினான் என்று தோழி தன் உள்ளே சொல்லியது.

எ - து, தலைமகளைக் குறைநயப்பித்துக் கூட்டுவிக்குந்தோழி தலைவியின் அருமைபெருமை முதலாயவைகளை யறிந்து, தலைமகன் விரைவில்





வரைதல் காரணமாக அவனுக்கு இயையாது மறுத்துக்கூறி அவன்படுந் துன்பத்தை அறிந்துவைத்தும் எம் அன்னை இவளைப் பலகாலும் நோக்கிப் புகழ்ந்துகூறித் தன்மனத்து மறக்கப்படாத தன்மையளாய் இராநின்றாள் ஆதலின் இங்குக் கூட்டுவிப்பதை யறிந்தால் எத்தன்மையளாமோ? யான் இதனை அஞ்சுகின்றேனென்று தன்னுள்ளே கவன்று கூறாநிற்பது.

நீண்மலைக் கலித்த பெருங்கோல் குறிஞ்சி
நாள்மலர் புரையும் மேனிப் பெருஞ்சுனை

மலர்பிணைத்து அன்ன மாயிதழ்
மழைக்கண்
மயிலோர் அன்ன சாயல் செந்தார்க்
கிளியோர் அன்ன கிளவிப் பணைத்தோள்
பாவை அன்ன வனப்பினள் இவளெனக்
காமர் நெஞ்சமொடு பலபா ராட்டி
யாய்மறப்பு அறியா மடந்தை
தேம்மறப்பு அறியாக் கமழ்கூந் தலளே.

**உரை :**—அகிலின் நெய்பூசி நீங்கலில்லாத மணம்வீசுகின்ற கூந்தலை உடைய தலைமகள்தான் பருவமுடைய ளாயினமையால் நீண்ட மலையிலே தழைந்த பெரிய தண்டினையுடைய குறிஞ்சியின் விடியலிலே விரிந்த மலர் போன்ற மேனியையும், பெரிய சுனையிலுள்ள குவளைமலர் எதிரெதிர் வைத்துப் பிணைத்தாற்போன்ற இமையையுடைய கரிய குளிர்ச்சிபொருந்திய கண்ணையும், மயிலி னொருதன்மையொத்த சாயலையும், கழுத்திலிட்ட சிவந்த வரையுடைய கிளியின் ஒருதன்மையொத்த சொல்லையும், பருத்த தோளையும், கொல்லிப்பாவைபோன்ற அழகையுமுடையவள் இவளென்று விருப்பம்வரும் உள்ளத்துடனே பலபடியாகப் புகழ்ந்துகூறி எம் தாய் சிறிதும் மறக்கப்படாத மடந்தையாய் இராநின்றாளாதலின் இவளது ஆற்றாமை தீரக் கூட்டுவிப்பதை அறியின் அவ்அன்னை எத்தன்மையள் ஆவாளோ? இதற்கு யான் அஞ்சுகின்றேன் ; எ - று.

தேம் - அகிலினெய். செந்தார் - கழுத்திலிட்டவரை.

தலைமகள் பருவமெய்திக் கதிர்ப்புக்கொண்டதனை நோக்கினமையின் புறத்தேபோனால் முருகு அணங்குமோவென்று அன்னை ஒழியாது கருது பவள் ஆதலின், யாய்மறப்பறியா மடந்தையென்றாள். **மெய்ப்பாடு** - பிறன்கண்தோன்றிய வருத்தம்பற்றிய அவலம். **பயன்** - தானே கூறி ஆறுதல். (௱௦௧)

## ௱௦௨. மதுரை மருதனிளநாகனார்

**பாலை:** இது, பருவங்கழிந்தது கண்டு தலைமகள் சொல்லியது.

எ - து, கார்காலம் வரும்பொழுது வருவேனென்றுகூறி வினைவயிற் சென்ற தலைமகன் முன்புகூறிய பருவம்வந்து நீங்குமளவும் வாராமையாலே தலைமகள் நெஞ்சழிந்து சுரநெறியேகிய நம்காதலர் கொன்றைகள் மலர்ந்து கார்காலஞ் செய்ததனை அறிந்திலராயினும், புதர்தோறும் மலர்ந்த எறுழமலர் வெண்ணிறம் பெறுகின்ற கூதிர்க்காலத்தையும் அவர் அறிந்திலரோவென நொந்து கூறாநிற்பது.

## மூலமும் உரையும்

௩௩௬

இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றைக்
காடுகவின் பூத்த ஆயினு நன்றும்
வருமழைக் கேதிரிய மணிநிற இரும்புதல்
நரைநிறம் படுத்த நல்லிணர்த்து எறுழ்வீ
தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்
களிறுதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு
வெளிறில் காழ வேலம் நீடிய

பழங்கண் முதுநெறி மறைக்கும்
கல. வழங்கருங் கானம் இறந்திசி னோரே.

**உரை:**—வேற்று நாட்டிலே களிறு காலாலுதைத்துப் போகட்டு ஒழிந்த மேல்கீழாகப்படிந்த மிக்க புழுதி வெளியின்றி வயிரமேறிய வேல மரங்கள் நெருங்கிய செல்லுவோருக்குத் துன்பஞ்செய்தலையுடைய முதிர்ந்த நெறியை மறையாநிற்கும் மக்கள் நடத்தற்கரிய சுரநெறியின்கண்ணே சென்ற தலைவர் பொன்னாலாகிய கலன்களை மிக அணிந்த மகளிர்போல யாவரும் விரும்பும் வண்ணம் மலர்விரிந்த நீண்ட சுரிந்த பூங்கொத்தில் உள்ள விளங்குகின்ற பூவையுடைய கொன்றைக்காடு அழகுமிக்கிருந்த அதனை அறிந்திலரேனும் பெரிதும் வருகின்ற மழையை நோக்கி மலர்ந்த நீலமணியின் நிறம்போன்ற கரிய புதர்களிலுள்ள நல்ல பூங்கொத்தை உடைத்தாகிய எருழமலர் மழைக்காலம் நீங்குதலாலே தன்னிறமாறி வெண்மைநிறம் பொருந்தியிருத்தலை அவர் தாம் அறியாரோ? அறிந்திருப்பாரேல் முன்பு தாம் கூறிய பருவங்கழிகின்றதேயென்று வந்திருப்பரே; எ - று.

நீறு நெறியைமறைக்குங் கானமென்க. மணிநிற இணரையுடையது எருழமலரெனவுமாம்.

தலைவர் விரைவில்வந்து முயங்குதற்கு மில்லையேயென்பாள் சேய் நாட்டு இறந்திசினோரென்றாள். இது துன்பத்துப்புலம்பல்.

**இறைச்சி:**—இரும்புதரிலுள்ள மணிநிறமலர் நரைநிறம்படுத்தவென்றது, மணிநிறமுடைய யானும் விளர்ப்புநிறம்பெற்றேனென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கூ0௨)

## கூ0௩. மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரி

### சாத்தனார்

நெய்தல்: (க) இது, வேட்கை தாங்ககில்லாளாய்த் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

எ - து, தலைவன்மீதுண்டாகிய காதலானது கைகடந்து பெருக அது தாங்க இயலாத தலைவி தோழியை நெருங்கி நாம் துயரமடைதல்போல நம் கொண்கனும் துன்பமெய்தி, 'நள்ளிரவினும் நம் காதலி துயிலாளாய்



வருந்துவளோ' என்று தன் நெஞ்சிலே கருதுவதுண்டாகுமோ, ஆகும் எனில் ஒன்று கூறுவாயாகவென்று அழிந்து கூறுகிறப்பது.

(உ) சிறைப்புறத்தானென்பது மலிந்ததூஉமாம்.

எ - து, தலைமகள் ஒருசிறைவந்து உறைவதனை அறிந்ததோழி சொல்லியதுமாகும். (உரை இரண்டற்கு மொக்கும்.)

ஒலியவிந்து அடங்கி யாமம் நள்ளெனக்
கலிகெழு பாக்கம் துயின்மடிந் தன்றே

௫.

தோன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்
துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்

நம்வயின் வருந்தும் நன்னுதல் என்பது
உண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்
கோடுமுடி அவ்வலை பரியப் போகிக்
கடுமுரண் எறிசுறு வழங்கும்
நெடுநீர்ச் சேர்ப்பன்தன் நெஞ்சத் தானே.

**உரை :**—தோழீ! நெடுங்காலம் வாழ்வாயாக; 'ஊரோசையவிந்து அடங்கி இரவு நடுயாமமாகலும் கட்குடியின் செருக்கு அடங்கிப் பாக்கமுந் துயிலாநின்றதே; இப்பொழுது நம் காதலனை நினைந்து நாம் வருந்துதல் போலத் தெளிந்த கடலின்கண்ணே வலிய கையையுடைய பரதவமாக்கள் மீன்பிடித்தற்கு நெடுக இட்ட சிவந்த நிறத்தையும் வலித்துக்கட்டிய முடியையும் உடைய அழகிய வலை பீறுபடக் கிழித்துச் சென்று அச்சத்தைச் செய்யும் வலிமையுடைய தன் மருப்பினுற் கொல்லவல்ல சுறாமீன் இயங்காநிற்கும் நீண்ட நீர்த்துறையுடைய தலைவனது உள்ளத்திலும் பண்டுதொட்டு உறைகின்ற கடவுள் தங்கப்பெற்ற பருத்த அடியையுடைய ஊர்ப்பொதுவிலுள்ள பனையின் வளைந்த மடலிடத்துச்செய்த குடம்பையின்கண் இருந்து தன் பெடையைப் புணர்கின்ற மகன்றிலின் வருத்தந் தருங் குரலைக் கேட்குந்தோறும் நல்ல நுதலினையுடைய நம் காதலி கண் உறங்காது காமநோய் வருத்துதலானே, உடம்பு மெலிந்து நம்மீது வருத்தமடையாநிற்பள்' என்பதும் உண்டாகுமோ? ஆராய்ந்து கூறாய்.

மன்றப்பெண்ணை - ஊர்ப்பொதுப்பனை. தம் குலதெய்வத்தையும் ஊர்ப்பொதுத் தெய்வத்தையும் பனையிலேற்றுவித்து வணங்கிவருவது தொன்றுதொட்டுவரும் நெய்தல்நிலத்து வழக்கு.

உசாவுவாருண்டாயவிடத்துச் சிறிதாற்றலாமெனினும், இல்லாதபடி பாக்கந் துயில்மடிந்ததேயென்று இரங்கினள்.

அதுவும்

**உள்ளுறை** :—பரதவரிட்ட வலையைக் கிழித்துச்சென்று சுறு இயங் கும் என்றது, நாம் நமது அன்பினலே பிணிக்கவும் தலைவன் அதனை இகந்து சென்று வைகாநின்றுனென்றதாம். **மெய்ப்பாடு - அழுகை. பயன்** - அயாவுயிர்த்தல். (௩0௩)

## மூலமும் உரையும்

௩௦௪

## ௩0௪. மாறோக்கத்து நப்பசலையார்

### குறிஞ்சி :

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்ருளாகிய தலைமகள் வன்பொறை எதிர்மொழிந்தது.

எ - து, வரைந்துகொள்ளாது பலநாளும் களவில்வந் தொழுகுந் தலைமகனை நினைந்து வருநெறியின் ஏதங்கருதி வருந்திய தலைமகள், தன்னை வருந்தாதேயென்று தோழி பலகாலுங் கூறுதலானே தாங்காது எதிர் மொழிபவள் தலைவனை முயங்கினபோது எழிலும் பிரிந்தபோது பசலையுந் தோன்றுதலால், அவன் மார்பு இன்பமுந் துன்பமும் உடையதென்று கூறுவதுடன் உள்ளுறையால் அவன் விரைய மணஞ்செய்துகொள்வா ஞகை எனவும் பரிந்து கூறுகிறபது.

வாரல் மென்தினைப் புலவுக்குரல் மாந்திச்

சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளியெறி வயிரின் கிளிவிளி பயிற்றும்
நளியிருஞ் சிலம்பின் நன்மலை நாடன்
புணரிற் புணருமார் எழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்
அணிநலஞ் சிதைக்குமார் பசலை அதனால்
அசுணங் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமுந் துன்பமும் உடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே.

*உரை :—கிளிகள் சாரல்பொருந்திய மலையிலுள்ள சுற்றத்தொடு சேர்ந்து தாம் கொள்ளையிடுதற்குரிய மெல்லிய தினையின் மணம்நிரம்பிய கதிரைக் கொய்துதின்று காற்றினால் ஒலியெழுப்புங் கொம்புவாச்சியம் போல ஒன்றனை யொன்று அழையாநிற்கும் நெருங்கிய பக்கமலைகளை யுடைய நல்ல மலைநாடன் வந்து என்னைப் புணர்ந்த காலமெல்லாம் எனக்கு நல்ல அழகு உண்டாகாநிற்கும்; அவன் என்னைப் பிரிந்தாலோ நீலமணியிடைப்பட்ட பொன்போல எனது மெய்யின் மாந்தளிரின் தன்மைகெட என்னழகையும் நலத்தையும் பசலைதோன்றிக் கெடுக்கா நிற்கும்; ஆதலினால் தண்ணியதாய் மணங்கமழும் நறிய மாலையணிந்த வலிமையுடைய நம் காதலன் மார்பானது, இசையறிவிலங்காகிய அசுணமானைக் கொல்பவருடைய கையைப்போல இன்பமுந் துன்பமும் உடையதாயிரா நின்றது; எ - று.*

*வாரல் - நீளுதலுமாம். ஆர் இரண்டும் அசைநிலை. அசுணங்கொல்பவர் முதலில் யாழைவாசித்துப் பின்பு செவியில் ஏற்கவொண்ணாத பறையை முழக்கி அவற்றைக்கொல்வதனால் இன்பமுந் துன்பமும் *உடைமையின் அதனை உவமித்தார்.*

உள்ளுறை :—கிளி கிளையொடு குழீஇவந்து தினையைத் தின்று விளி பயிற்றும் நாடனென்றது, அப்படிப்போலத் தலைமகனும் அந்தணர் சான்றோர் உடன் குழீஇவந்து என்னை மணந்து என் நலனைத்துய்த்து மகிழ்ந்து



விளையாடப்பெறுவானாக வென்றதாம்.
அயாவுயிர்த்தல்.

மெய்ப்பாடு - அழுகை. பயன் -
(௩0௪)

## ௩0௫. கயமனார்

பாலை : (க) இது, நற்றாய் தோழிக்குச் சொல்லியது.

எ - து, தலைமகன் தலைமகளை இரவில் உடன்கொண்டு சென்றனன் என்று செவிலியாலறிந்த ஈன்றதாய் அஃது, அறநெறியென்று கொண்டும் பிரிதல்பொறாது தோழியை நெருங்கி, 'மகளே, நின் தோழி ஆடிய பந்தும் அவள் ஓம்பிவந்த வயலையங்கொடியும், விளையாடிய நொச்சியும், அவளில்லாது தனியேகண்ட சோலையும் என்னை வருத்தாநிற்ப அதனொடு நில்லாமே காட்டின்கண்ணே நண்பகலிற் புறவின்குரலைக்கேட்டு அமர்த்த நோக்கத்தால் அவ்விடலை வருந்தவுஞ் செய்யுமோவென என்னுள்ளம் துயரம் எய்துவதேயென் றழிந்து கூறுநிற்பது.

(உ) மனைமருட்சியுமாம்.

*எ - து, ஈன்றதாய் மனையின்கண்ணே இருந்து மருண்டு சொல்லியது மாம். (உரை இரண்டற்கு மொக்கும்.)*

வரியணி பந்தும் வாடிய வயலையும்
மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்
கடியுடை வியன்நகர் காண்வரத் தோன்றத்
தமியே கண்டதண் தலையுந் தெறுவர
நோயா கின்றேம் மகளைநின் தோழி
எரிசினந் தணிந்த இலையில் அம்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி
உருப்பவிர் அமையத்து அமர்ப்பனள் நோக்கி
இலங்கிலை வென்வேல் விடலையை
விலங்குமலை ஆர்இடை நலியுங்கொலெனவே.

உரை :—மகளே! நின் தோழி விளையாடிய வரிந்து அணிந்த பந்தும், நீர்விடுவாரின்மையாலே வாடிய அவளோம்பிவந்த வயலைக்கொடியும், சிற்றில்கோலி விளையாடிய மயில்போன்ற இலையையும் கரிய பூங்கொத்தையும் உடைய நொச்சியும், காவலையுடைய அகன்ற மாளிகையிடத்து எதிரே காணும்படி தோன்றாநிற்ப, அவளின்றித் தமியேகண்ட சோலையும் என்னை வருத்தாநிற்ப அவற்றொடு, நின் தோழி ஆதித்தமண்டிலங் கொதிப்புச் சிறிதடங்கிய மாலையின் முற்படுபொழுதில் இலையுதிர்ந்த அழகிய மராக் கிளையில் இருந்து வரிபொருந்திய முதுகினையுடைய புறவினது அச்சங் கொள்ளத்தக்க தெளிந்த கூவுதலாகிய ஓசையைக்கேட்டு வெப்பமிக்க பொழுதின்கண் வருந்திப் போர்செய்யப் புகுந்தாற்போன்ற கண்ணையுடையளாய் நோக்கி இலங்கிய இலைவடிவாகிய வெற்றிபொருந்திய வேற்படையையேந்திய காதலனை மலைகுறுக்கிட்ட அரிய நெறியிடத்தே தன் புறத்துங் கொல்லோவென்றே எனக்கு வருத்தமுண்டாகாநின்றது; எ-று.

மகளை, ஐ - சாரியை. நலியுமோவென நோயாகின்று எனக்கூட்டுக.

## மூலமும் உரையும்

௧௪௧

தன் புதல்வி காதலனொடு கலந்து இனியவாழ்வெய்தக்கண்டால் இப்பொழுது அவளின்றிக் காணப்படும் பந்து முதலாயவற்றானெய்துந் துயரம் எல்லா மொருங்கேயகலும்; அவ்வண்ணமின்றி அவனை வெறுக்கச்செய்யின் இல்லறநிகழ்த்தற்கியலாது வருந்துமே என்பதுகொண்டு பந்து முதலாய கண்டவழி எய்துந் துன்பமேயன்றி விடலையை நலியுங் கொலென்றும் இரங்கினாள். **மெய்ப்பாடு** - உவகைக்கலுழ்ச்சி. **பயன்** - ஆற்றாமை நீங்குதல். (௧0௩)

## ௧0௪. உரோடோகத்துக் கந்தரத்தனார்

குறிஞ்சி: (க) இது, புனமடிவுரைத்துச்

செறிப்பறிவுறீஇயது.

எ - து, தலைமகன் ஒருபுறமாகவந்து மறைந்துறைதலை அறிந்த தோழி; புனங்கொய்தலையும் தலைமகளை இல்வயிற்செறிப்பதனையும் அவன் அறிந்து விரைய மணம்புரிந்துகொள்ளும்படி கூறுவாளாகி நமர் தினைப் புனங் கொய்யலுறுகின்றனர்; அன்றி, இறைவியையும் மனையகங் கொண்டுபுகுதுவாராயினர்; இனி, அவளை நமது புனத்தின்கண்ணே காணவும் இயையாதேயென நொந்துகூறுநிற்பது.

(உ) சிறைப்புறமுமாம்.

எ - து, தலைமகன் சிறைப்புறத்தானாகக்
இரண்டற்கு மொக்கும்.)
கூறியதுமாகும். (உரை

தந்தை வித்திய மென்தினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ
குளிர்படு கையள் கொடிச்சி செல்கென
நல்ல இனிய கூறி மெல்லக்
கோயல்தோடங் கினரே கானவர்
கோடுங்குரல்
துலவுப்போறை இறுத்த கோல்தலை
இருவி
விழவொழி வியன்களங் கடுப்பத்

தெறுவரப்

பைதல் ஒருநிலை காண வைகல்
யாங்கு வருவது கொல்லோ தீஞ்சொல்
செறிதோட்டு எல்வளைக் குறுமகள்
சிறுபுனத்து அல்கிய பெரும்புற நிலையே.

உரை :—'கிளிகடிகருவி பொருந்திய கையையுடைய கொடிச்சியே! நீ மனையகம்புகுவாயாக' என்று நல்ல இனிய மொழிகளை மொழிந்து கானவர் மெல்லத் தினைக்கதிரைக் கொய்யத்தொடங்கினர்: ஆதலின் எம் தந்தை விதைத்த மெல்லிய தினையைக் கொய்துகொண்டுபோமாறு மெல்ல மெல்ல வருகின்ற சிறிய கிளிகளை வெருட்டுதல் இனி எப்படியாகும்? அங்ஙனம் வளைந்த கதிர்களாகிய குவவிய பொறையைக் கொய்தொழித்த கொம்பாகிய தலையுடைய தினைத்தாள்கள் தாம் திருவிழாச்செய்தொழிந்த அகன்ற அவ் விழாக்களம்போலப் பொலிவழிந்து எம்மை வருத்தாநிற்கையில் இவ்வண்ணம் கொல்லை யழிந்ததன்மையையும், இனிய சொல்லும்



நெருங்கிய தொகுதியான ஒளிபொருந்திய வளையுமுடைய இளமையுற்ற எங்கள் தலைமகள் முன்பு சிறிய தினைப்புனத்துப் பெரிய மேற்கூரை உடைய கட்டுப்பரணிலே நின்ற நிலைமையையும் பார்க்கும்பொருட்டுக் காலையிலே தலைமகன் எப்படி வருதலியையுமோ? இயையாதே; எ - று.

பிறக்கு - அசைநிலை. பொறை - பாரம். இருவி - தினைத்தாள்.

கிளியோப்புதலில்லையாதலின் இனிப் புனத்து வந்து பகற்குறி கூடவும் இயையாதேயென்பாள், யாவணைதென்றாள். செல்கவென்பதனால் இற்செறிப்பு அறிவுறுத்தினாள். இங்ஙனங்கூறவே வரைந்துகொள்க வென அறிவுறுத்தினளுமாம். **மெய்ப்பாடு - பெருமிதம். பயன் -** வரைவுகடாதல். (௩0௬)

## ௩0எ. அம்மூவனார்

**நெய்தல்:** இது, குறிநீடஆற்றாளாகிய தலைமகளைத் வற்புறுத்தியது.

தோழி

எ - து, தலைமகன் குறித்த குறியிடத்துவரப் பாணித்தமையால் அது பொழுது வருந்திய தலைவியைத் தோழி நோக்கி அங்கே தேரின் மணியொலி இசையாநிற்கும்; இளையரும் ஒலியாநிற்பர்; ஆதலின், நினது நலன் நுகரும்படி கொண்கன் இன்னே வருகுவன்காண்; வருகின்ற அவன்தான் நம்மைக் காணாது வருந்துவதை நாம் சிறிதுபொழுது கண்டு மகிழும் வண்ணம் இங்குள்ள புன்னையடிமறைவில் மறைந்துகொள்வோம் வருவாயாகவென்று வலியுறுத்திக் கூறாநிற்பது.

கவர்பரி நெடுந்தேர் மணியும் இசைக்கும்
பெயர்பட இயங்கிய இளையரும் ஒலிப்பர்
கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த
திதலை அல்குல் நலம்பா ராட்டிய
௫. வருமே தோழி வார்மணற் சேர்ப்பன்

இற்பட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாவரை மறைகம் வம்மதி பானாள்
பூவிரி கானல் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணாதவன்
அல்லல் அரும்படர் காண்கநாம் சிறிதே.

உரை :—தோழீ! செல்லுதலில் விருப்பமுடைய குதிரைபூட்டிய நெடிய தேரிலே கட்டிய மணியும் ஒலியாநிற்கும்; பெயர்ந்துபட நடக்கின்ற வீரரும் ஆரவாரியாநிற்பர்; ஆதலின் நெடிய மணற்குன்றினையுடைய சேர்ப்பன் மகளிர்சென்று கடனீராடுகின்ற அகன்ற இடத்திலே மிக்க அழகுடன் பொலிந்து விளங்குகின்ற துத்திபடர்ந்த நினது அல்குலின் நலனைப் பாராட்டுமாறு இப்பொழுதே வருகிற்பன்காண்; அவ்வண்ணம் வரினும் இதுகாறும் வாராது நம்மை நடுங்கவைத்துள்ளாதலின் அவனும் இந்நடுயாமத்து மலர்விரிந்த சோலையில் நாம் புணர்கின்ற குறியிடத்து வந்து மெல்லிய பூங்கொத்தினையுடைய நறிய சோலையின் கண்ணே நம்மை எதிர்காணாதவனாகிப் படுகின்ற நீங்குதற்கரிய அல்லல்



ஆகிய துன்பத்தையும் நாம் சிறிது பார்ப்போம்; அதனால் நமது மனையருகில் வளைந்த குடமுழாப்போன்ற அடியையுடைய புன்னையின் கரிய அடிமரத்தின் பின்னே சென்று மறைந்துகொள்வோம்; நீ வருவாயாக; எ-று.

பெயர்படல் - பெயர்ந்துபோதல்.

அணித்தாகவந்தமை அறிவுறுத்துவாள் தேர்மணியும் இளையரும் ஒலிப்பது கூறினள். உவகை உள்ளத்தடக்க அடங்காமையின் அல்குல்நலம் பாராட்டி அமைவனெனத் தலைமகள்பால் இறைமகன் உழுவலன்புடையன் என அவள் ஆற்றும்படி கூறினளாயிற்று. மெய்ப் பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (கூ௭)

## கூ0அ. எயினந்தைமகன் இளங்கீரனார்

பாலை :

இது, நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்ட தலைமகன் தலைமகளையெய்தி ஆற்றானாய் நெஞ்சினிற் சொல்லிச் செலவழுங்கியது.

எ - து, பொருள்வயிற்பிரியுமாறு கருதிய தலைமகன் தலைமகள்பால் நெருங்குதலும் இவனது பிரிவின் குறிப்பறிந்த அவள்வருந்தி இவன்மீது சாய்ந்துகலங்கி வருந்துவதறிந்து இவ்வண்ணம் என்மேலழிந்துசாய்தலால் என்னுள்ளம் பிரிதலையொழித்து இவள்பால் முயங்கியுறையாநின்றது, இனிப் பொருளால் ஆவதென்னென்று செலவழுங்கிக் கூறுகிறபது.

செலவிரை வுற்ற அரவம் போற்றி

மலரேர் உண்கண் பனிவர ஆயிழை
யாம்தற் கரையவும் நாணின வருவோள்
வேண்டா மையின் மென்மெல வந்து
வினவலுந் தகைத்தலுஞ் செல்லா ளாகி
வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்
பொறியழி பாவையிற் கலங்கி
நெடிதுநினைந்து
ஆகம் அடைதந் தோளே அதுகண்டு
ஈர்மண்செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற் றாங்கெம்
போருண்மலி நெஞ்சம் புணர்ந்துவந்
தன்றே.

**உரை :**—ஆராய்ந்தணிந்த கலன்களையுடைய நம் காதலி, நாம் பொருள்வயிற்பிரிந்து செல்லுதலின் விரைவாலுண்டாகிய சொல்லை விரும்பிக் கேட்டுக் குவளைமலர்போன்ற மையுண்டகண்ணில் நீரைவடிய விடுதலும் அதனையாம் அறிந்து இஃது என்னென்று அவளைப் பலபடியாகப்பாராட்டி வினவவும் அதற்கு விடைகூற நாணினளாகி வருபவள் யாம் பிரிதலில் விருப்பம் இன்றி மெல்லமெல்லவந்து நீ எங்கேபோகின்றனையென்று வினவாமலும் போகலையென்று தடாமலும் இருக்குந்தன்மையளாய் மணங்கமழ்கின்ற நெருங்கிய குழல்முடியாகிய கொண்டைவிளங்க நல்ல சித்திரத்தொழிலமைந்து இயக்கும் இயந்திரமற்றழிந்த பாவை

ஒன்று எம்மீது விழுந்தாற்போலக்,—கலங்கி நெடும்பொழுது நினைந்து நின்று பின்பு எம் உடம்பின்மீது சாய்ந்து விழுந்தனள்; அவ்வண்ணம் விழுதலும் அதனைநோக்கி ஈரிய மண்ணாற்செய்யப்பட்டு ஈரங்காயாத பசுமட்கலம் ஒன்று பெரிய மழைநீரை ஏந்தவைத்தலால் அஃது அந் நீரோடு வேறுபாடின்றிக் கரைந்தொழியுமன்றே அப்படிப்போலப் பொருள்வயிற் பிரியக்கருதிய எமது நெஞ்சம் அவளுடன் ஒன்றுபட்டுக் கரைந்து வேறுபாடின்றி அடங்கிற்றுமன்; ஆதலின் இனிப் பிரிவது தான் எவ்வண்ணமாகும்? எ - று.

இதனுள் ஆயிழை போற்றி நாணிவந்து செல்லாளாகித் தயங்கக் கலங்கி நினைந்து அடைந்தோளென வினையெச்ச அடுக்காகக்கொண்டு எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையேகிடந்து பயனிலையை விசேடிக்கும் எச்சங்கள் உள்ளே ஒன்றனை முற்றாகக்கொண்டு திரித்துப் பாலும் இடமுங்காட்டி நிற்பச் செய்யுள் செய்தமை அறிக. தகைத்தலுஞ் செல்லாள் - ஒரு சொல்லாகக்கொள்க.

தான் அன்பின் மிகுதியாற் பாராட்டினது கண்டு நாணினமையின் அதனைக் கூறுவான்போன்று தன் அன்பைப் புலப்படுத்தினான். பாவையிற் கலங்கி ஆகமடைதந்தோளென அவளது அன்பின்மிகுதியும் அவட்குத் தானின்றியமையாமையுங் கூறினான். இருவரும் அன்பின் மேவீட்டினாற் கலந்துமகிழ்வதனினும் பொருள் சிறப்பிலதென்பான் 'பொருள்மலிநெஞ்சம் புணர்ந்துவந்தன்று' என்றான். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - இல்லத் தழுங்கல். (௩௦அ)

## ௩௦௯. கபிலர்

### குறிஞ்சி:

இது, வரைவுநீட ஆற்றாளெனக் கவன்று தான் ஆற்றாள் ஆகிய தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

எ - து, தலைவன் மணஞ்செய்துகொள்ள நீட்டித்தலானே தலைமகள் வருந்துவளேயென்று கவலைகொண்டு தோழி ஆற்றாதிருத்தலை அறிந்த தலைமகள், அவளை நெருங்கி நின்னால் எனக்குத் தீங்குவந்ததென்று அழாதேகொள் ; அவனது கேண்மை நமக்குத் துன்பமுடைத்தென நீ கூறாநிற்பை ; அவருடைய நட்பினியல்பை நன்றாக அறிந்துளேனாதலின் யான் பொறையோடு உறைவேனென அவள் தெளியும்படி கூறாநிற்பது.

நெகிழ்ந்த தோளும் வாடிய வரியும்
தளிர்வனப்பு இழந்தஎன் நிறனும் நோக்கி
யான்செய் தன்றிவள் துயரென அன்பின்
ஆழல் வாழி தோழி வாழைக்
௫. கொழுமடல் அகலிலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழுமம் ஆக அறியுநர் இன்றெனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவன் மன்யான் அவருடை நட்பே.

**உரை** :—தோழீ! தளர்வடைந்த தோளையும், வாட்டமுற்ற இரேகையையும், மாந்தளிரின் தன்மைபோன்ற அழகிழந்த எனது நிறத்தையும் நோக்கி, 'என்னால் இவளுக்கு இத்துயர் செய்யப்பட்டது' என்றுகூறி என்பாலுள்ள அன்பின் மிகுதியினால் நீ அழாதேகொள்; நெடுங்காலம் வாழ்வாயாக; வாழையின் கொழுவிய மடலகன்ற கட்டைக்குருத்தாகிய இலையிலே ஆற்றினுள்ள இனியநீர் கலந்து தங்கியிருக்கும் பெரிய மலைநாடனுடைய நட்பானது, நமக்குத் துன்பமாயிருக்கவும் அதனை அறிபவர் இல்லையேயென்று நீ கூறுகிற்பை; ஐயோ! அவருடைய நட்பை நான் மிகநன்றாகத் தெளிந்திருக்கின்றேனாதலால் ஆற்றியிருப்பேன்காண்; எ - று.

வரி - இரேகை. கலாவும் - கலக்கும். செய்தன்று - செய்தது.

தலைமகன் பிரிந்ததனைக்கருதி எக்கமடைந்ததனால் தோள்நெகிழ்ச்சியும் இரேகையின் வாட்டமும் மேனியழிவுங்கண்ட தோழி முன்பு தான் மதியுடம்பட்டதன் நிமித்தம் இப்பொழுது இவளுக்கு இத்தீங்கு நேர்ந்தது எனக் கவன்றனளாதலின், இவள் துயர் யான் செய்ததென அழுவென்றாள். தலைவன் பிரியும்பொழுதெல்லாம் கூறிய வாய்மை பிறழாது குறித்தபருவத்து வருவதனால் அவர் நட்பை யான் தெளிவேனென்றாள். தோழி வருந்திக்கூறலின் நாடன் என ஒருமையாகவும் தலைவி தலைவனை உயர்த்திக்கூறலின் அவர் எனப் பன்மையாகவுங் கூறியதாம்.

**உள்ளுறை** :—வாழைமடலிலே நீர்தங்கிக் கலந்திருக்குமென்றது, என் உள்ளத்தில் எப்பொழுதும் அவர் தங்கிக் கலந்திருப்பராதலால் யான் வருந்தேனென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தோழியை ஆற்றுவித்தல். (நூ0க)

## நூ௧௦. பரணர்

**மருதம்** : (க) இது, வாயிலாகப்புக்க

விறலியைத் தோழிசொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்து மீண்டுவந்த தலைமகன் தலைமகளது ஊடல்தீர்ப்பான் விறலியை விடுத்தலும் அவளை நோக்கிய தோழி, எங்கள் இறைவனுக்கு இன்னுமொரு பரத்தையை நாளைக்கொணர்ந்து கொடுக்க உடன்பட்டுவந்த விறலி! நின் பயனற்ற சொல்லை அப்பரத்தையரின் தாயர்பாலுங்கூறி அவரையும் முயங்கவிடுப்பாய்கொலாமென்று வெகுண்டு கூறுநிற்பது.

(௨) விறலியை எதிர்ப்பட்ட பரத்தை

சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை.

(உரை. இரண்டற்கு மொக்கும்.)

விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க
உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை

ரு. மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு
பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரொ டொழிபுடன்

சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாதும் இல்லதோர் போர்வையஞ்
சொல்லே.

**உரை :**—விளக்கைப்போன்ற ஒளிவிடுகின்ற மலர்பொருந்திய தாமரையினுடைய களிற்றியானையின் செவியைப்போன்ற பசிய இலை அலைபட நீர்பருகுந் துறையின்கணிறங்கிய மாதர்கள் அஞ்சியோட ஆழமாகிய நீர்மிக்க பொய்கையில் வாளைமீன் வெடிபாயும் ஊரனுக்கு இனி வருகின்ற அடுத்த நாளைக்கும் ஒரு பரத்தையைக் கொணர்ந்து கொடுத்தற்கு நேர்ந்த அறியாமையுடைய விறலியே, மெய்ம்மையே கல்லாதொழிந்த நாவினால் நிலைகுலைந்த தாழ்மையுடைய நின் சொல்லுக் குடன்பட்ட அப் பரத்தையர்ன் தாய்மாருடன் ஒருசாரெய்தி நீதான் விரைவாக ஆவின் கன்றையுரித்து உணவாகக்கொள்ளுகின்ற பாணன் கையிடத்ததாகிய பெரிதாக ஒலித்தலை உடைய தண்ணுமை வாச்சியம்போல உள்ளே யாதுமில்லாத ஒரு மேற்போர்வையுடைய சொற்களைச் சொல்லுகின்றிலையோ? அங்ஙனஞ்சொல்லி அவரையும் பிறர் முயங்குமாறு விடுக்கலாமன்றே? எ - று.

தாமரை - அதன் மலருக்கு ஆகுபெயர். யாதுமில்சொல் - பயனற்ற சொல். தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினான்.

பரத்தை மயங்குமாறு வேண்டும் பொய்ம்மைகூறிப் புணர்ப்பித்தலின் தொலைந்த நாவினென்றாள். பிறர் அறியாவாறு மந்தணமாகச் செய்தமைத்தலிற் குறுமொழியென்றாள். இழிதகவுகருதாது முதியோரையும் புணர்க்கும் இயற்கையையென்பாள், தாயரொடு சொல்லலைகொலென்றாள். நின் பயனற்றசொல் பரத்தையர்க்கும் அவரன்னையர்க்கும் ஏற்பதன்றி இங்குப் பயன்படாதென்பதாம்.

**இறைச்சி**:—வாளைமீன் தாமரைவருந்த மகளிர் இரிந்தோடக் குண்டு நீரில் வெடிபாய்ந்து பிறழுமென்றது, தலைமகன் யாம்வருந்தக் காமக்கிழத்தியர் இரிந்தகல விருந்தாக நீ புணர்த்திய புதிய பரத்தையிடத்தே சென்று தங்காநிற்கு மென்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - வாயின் மறுத்தல். (நகO)

## நகக. உலோச்சனார்

**நெய்தல்:** இஃது, அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

எ - து, அயலார் பழிச்சொல்லெடுத்தலால் அது பொறாது வருந்திய தலைமகளைத் தோழிநோக்கி நம்மூர் எல்லாவளனுமுடையது; துறையும் இனிமையுடையது; நம் காதலரின் தேரொலிகேட்டல் அரிதானமையின் நம்மூர்ச் சோலைக்கு அஃது ஒன்றுமே பழியுடையதா யிராநின்றது; அவர் வந்து கூடின் அதுவும் மிக நல்லதாயிருக்குமென்று கூறி ஆற்றுவிப்பது.

பெயினே, விடமோன் உழையினம் வெறுப்பத் தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே
வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச்
சேறுபுலர்ந்து

மூலமும் உரையும்.

ந.சுக

இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு
விளையும்
ரு. அழியா மரபின்நம் மூதூர் நன்றே

கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கிச்
சிறுவீ ஞாழல் துறையுமார் இனிதே
ஒன்றே தோழிநங் கானலது பழியே
கருங்கோட்டுப் புன்னை மலரில்தா தருந்தி
இருங்களிப் பிரசம் ஊதஅவர்
நெடுந்தேர் இன்னொலி கேட்டலோ
அரிதே.

உரை:—தோழீ! அழியாத மரபினையுடைய நம்மூரானது மழை பெய்தாலோ, எங்கும் உலாவாநின்ற உழையாகிய மான்கூட்டங்கள் செறியத் தோன்றப்பெற்றும் பெரிய கதிர்களையுடைய நெல்லின் புது வருவாயினை உடையதா யிராநின்றது; அங்ஙனம் மழைபெய்யாது வறந்து விட்டாலோ, பெரிய கழிநீரிடத்து முள்ளிச்செடியின் மலருதிர்ந்து பரந்து சேறெல்லாம் ஒருசேரக்காய்ந்து கழிய கழிச்சேற்றிடமெங்கும் வெள்ளையாகிய உப்புவிளையாநிற்கும் பெருமையுடையதா யிராநின்றது; இவையேயுமன்றிக் கொழுத்த மீன்சுடுபுகை தெருக்களினுள்ளே கலந்து சிறிய மலரை உடைய ஞாழல்மரங்கள் மிக்கதுறையும் இனியதாயிராநின்றது; இவ்வளவு வளம்வாய்ந்த நம்மூர்க்கண் உள்ள கடற்கரைச் சோலையொன்றுமே ஊரார் எடுக்கும் ஒரு பழியை உடையதா யிராநின்றது; அதுதான் யாதோ வெனில் கரிய கிளையையுடைய புன்னைமலரிலுள்ள தேனைப் பருகிக் களிப்பினையுடைய கரிய வண்டுகள் நன்னிமித்தமாக எதிர்வந்து ஒலியா நிற்ப நம் காதலராகிய அவர் வருகின்ற நெடிய தேரின்செவிக்கினிய ஓசையைக் கேட்பதுதான் அரியதா யிராநின்றது; இவ் அருமையொன்று இல்லையாய்விடின், நம்மூருஞ் சோலையும் மேதக்கனவாதலொடு அவர்வந்து நம்மைக்கூடின் அதுவும் மிக்க நல்லதாக நமக்குத் தோன்றுங்காண்; எ-று.

வெறுத்தல் - செறிதல். நன்னிமித்தம் - யாம் தேனைப்பருகி மகிழ்தல் போல நீயும் தலைவியினது நலனுகர்ந்து மகிழ்தியென்பது தோன்ற எதிர்வந்தொலித்தல். மழைபெய்தால் மான்கள் காட்டைக்கடந்து நாட்டில் வந்தியங்குவ தியல்பு. அவை எவ்வளவினவாகத் தின்றழித்தாலும் குறைபாடின்றி விளையுமதுவென்றவாறு.

'மழையின்றி மாநிலத்தார்க் கில்லை' என்பது எனை நிலத்தார்க் கன்றி நெய்தனிலமாக்கள் பெயினும் வறப்பினும் பயன்பெறுவ ரென்பாள் போலத் தலைமகன் பிரியினும் பிரியாதுறையினும் ஒருதன்மையான அன்பினன் என்று கூறினளாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௩௧௧)

## ௩௧௨. கழார்க் கீரனெயிற்றியார்

**பாலை:** இது, பிரிவுவலித்த தலைமகன் நெஞ்சினை சொல்லியது.

நெருங்கிச்

எ - து, வினைவயிற்பிரியுந் தலைமகன் தன்னெஞ்சினை நெருங்கி நெஞ்சமே! அருகில் நாம் முயங்கியுறையுங் கோடைநாளிலேயும் நடுங்கும்



நம் காதலி கார்முதலாய நான்கு பருவங்களிலும் என்னபாடு படுவளோ என்று யான் வருந்துகின்றேனென நொந்து கூறுகிற்பது.

நோகோ யானே நோம்என் நெஞ்சே
பனிப்புதல் ஈங்கை அங்குழை வருடச்
சிறைகுவிந் திருந்த பைதல்வெண் குருகு
பார்வை வேட்டுவன் காழ்களைந் தருள

நி. மாரி நின்ற மையல் அற்சிரம்
அமர்ந்தனள் உழையம் ஆகவுந் தானே
எதிர்த்த தித்தி முற்று முலையள்
கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெரும்பனிக் கென்னள்கோல்

எனவே.

**உரை**:—பொருளீட்டுமாறு யான் உடன்பட்டு நின்னொடு வந்திலேன் என்று நொந்துகொள்ளுகின்ற என் நெஞ்சமே! மேலேறிப் படருந் தேமலையும் முற்றுத இளைய கொங்கையையும் உடையவளாகிய நம் காதலி அவளருகினின்றும் பிரியாது நாம் இருந்தேமாகவும் மயங்கினளாய்க் கோடைத் திங்களிலும் நடுங்குபவள்,—குளிர்ந்த புதரினுள்ள இண்டின் அழகிய குழை முதுகைத் தடவிக்கொடுப்பத் தன் சிறகு குவிந்திருந்த வருத்தமிக்க வெளிய கொக்கைப் பார்வையாக்கி வேட்டுவன் அதன் கால் கட்டை அவிழ்த்துவிடாநின்ற கார்காலத்திலும், பகலிரவெண அறியாவாறு மயங்கிக் கிடத்தலை உடைய கூதிர்க்காலத்திலும், வாடைக்காற்றோடு கலந்துவீசும் பெரிய முன்பனிப்பருவத்திலும், பின்பனிப் பருவத்திலும் தமியளாயிருந்து என்னபாடு படுவளோவென்று யான் நோவாநின்றேன்; எனது நோயின் தன்மையறியாது நீ புலக்கின்றனை; ஈதொரு வியப்பிருந்தவாறு நன்று; எ – று.

அற்சிரம் - கூதிர்ப்பருவம். பனியெனப் பொதுப்படக்கூறினமையின் முன்பனி பின்பனியாகிய இருவகைப்பருவமுங்கொள்க. காழ் - பிணிப்பு. உழையம் - நெஞ்சையுளப்படுத்தியது.

**உள்ளுறை**:—வேட்டுவனாலே பார்வையாகக் களைந்து வைக்கப்பட்ட குருகு இண்டங்குழை வருடப் பைதலவாய், மாறிவிற்குமென்றது, நம்மால் இல்லின்கண் வைகுமாறு விடப்பட்ட தலைவி வருந்தித் தோழி தேற்ற மாரிக்காலத்தைக் கழியாவிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - இல்லத்தழுங்கல்.

## ௩௧௩. தங்கால் பொன்கொல்லன் வெண்ணாகனார்

குறிஞ்சி :

இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவா ளாய்ப் புனம் அழிவுரைத்துச் செறிப்பறி வுறீஇயது.

எ - து, தலைமகன் ஒருசிறைப்புறமாக வந்திருப்பதனை யறிந்த தோழி அவன் விரைவில் வரையுமாறு தலைவியைநெருங்கித் தோழீ! தினை கொய்யும்பதங் கொள்ளும்; அதனால் நாம் மீண்டு மனையகம் புகுவேம் போலத் தோன்றுகின்றது; அங்ஙனமானால் நம்முடைய தடைநீக்கிச்

மூலமும் உரையும்

௩௫௪

சென்று முன்பு நம்மைக் கைவிட்ட காதலனை எவ்வாறு என நொந்து கூறுகிற்பது.

அணைகிற்போம்

கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்
பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்
தகைவனப்பு உற்ற கண்ணழி
கட்டழித்து
ஒலிபல் கூந்தல் அணிபெறப் புனைஇக்
ரு. காண்டற் காதல் கைம்மிகக்
கடீஇயாற்கு
யாங்கா குவங்கொல் தோழி காந்தள்
கமழ்குலை அவிழ்ந்த நயவருஞ் சாரல்
கூதள நறும்பொழில் புலம்ப ஊர்வயின்
மீள்குவம் போலத் தோன்றுந்
தோடுபுலர்ந்து
கo. அருவியின் ஒலித்தல் ஆனா
கோய்பதங் கொள்ளுநாங் கூஉந்
தினையே.

உரை:—தோழீ! கதிர்கொய்யும் பதங் கொள்ளாநின்ற நாம் கடிக் கிளியோப்புந் தினைப்புனமெல்லாம் மேல் இலைகாய்ந்து மலையருவி ஒலித்தாற்போல ஒலித்தல் அமையாவா யிராநின்றன; அதனால் யாம் காந்த ளின் கமழ்கின்ற குலைமலர்ந்த விருப்பமிகுஞ் சாரலின்கண்ணே கூதாளி படர்ந்து மலர்ந்த நறியசோலை தனிமையாகும்படி கைவிட்டு ஊரிடத்து மீண்டு செல்வேம்போல எனக்குத் தோன்றாநிற்கும்; இங்ஙனமாகையில், தடைமுழுதும் அழித்துக் கரிய கிளைகளையுடைய வேங்கைமரத்தில் நாட் காலையின் மலர்ந்தமிக்க புதியபூ பொன்னைப் பணிசெய்யும் பொற்கொல்லன் உடைய கைவினையைப்போல மிக அழகுபொருந்திய தாழ்ந்த பலவாய கூந்தலில் அணிபெறச் சூடிக்காண்பதற்கு அளவுகடந்து விருப்பமிகுத லாலே நம்மை இப்பொழுது கைவிட்டிருக்கிற தலைவனை எவ்வாறு சென்று சேர்வோம்; எ - று.

கண்ணழிவு - தடை. கட்டழித்தல் - முற்ற ஒழித்தல். இஃது அழிவில் கூட்டத்து அவன்புணர்வு மறுத்தல்.

கொய்பதங் கொள்ளுந் தினையென்றதனால் புனமழிவுகூறிப் பகற்குறி இயலாதென மறுத்தாள். அணிபெறப்புனைந்து காண்டற் காதல் கைம்மிக என்றதனால், அவன் இன்றியமையாமைகூறி விரைவில் வரைந்தெய்துக என்றாள். ஊர்வயின் மீள்குவம்போலத் தோன்றுமென்றதனால், வரைந்து எய்த இயலாதாயின் இரவுக்குறியேனும் வந்தெய்துகவென்று குறிப் பித்தாள். கடஇயானென்றதனால், இங்ஙனம் அடைந்த எம்மைக் கைவிட்ட அறனிலாளனென நொந்துகூறினாள். **மெய்ப்பாடு** - பெரு மிதம். **பயன்** - வரைவுகடாதல். (௩௧௩)

## ௩௧௪. முப்பேர் நாகனார்

**பாலை:** இது, பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

எ - து, பிரிந்துசென்ற தலைமகன் முன்பு கூறிய பருவவரவின்கண் வாராமையால் மெலிந்த தலைமகள் நெஞ்சம்நொந்து, "ஒன்றாத் தமரினும்"

என்ற (தொ - பொ - ௪0) சூத்திரத்தில் கூறிய 'நாளது சின்மையும்; இளமைய தருமையும், அன்பின தகலமும்' பிறவும் "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" (தொ - பொ - ௪௪) என்ற விதிப்படி தானே கூறுவாளாகி முன்பு சுரத்தின்கண்ணே சென்ற காதலர் 'முதிர்ந்தோர் இளமையெய்தார், வாழ்நாளளவறிந்தாரில்லை ஆதலின் நின் கொங்கையைப் புல்லிக் கங்குல் கழியக்கடவது' என்றுகூறி எம்மளவிலே பொய்த்தனர்; அதனால் அணங்கப்பெறாது வாழ்வாராகவென்று அழிந்து கூறாநிற்பது.

முதிர்ந்தோர் இளமை ஒழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை
மாரிப் பித்திகத்து ஈரிதழ் அலரி
நறுங்காழ் ஆரமோடு மிடைந்த மார்பிற்
குறும்பொறிக் கொண்ட கொம்மையம் புகர்ப்பிற்
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவ தாக கங்குல் என்றுதாம்
மொழிவன் மையிற் பொய்த்தனர் வாழிய
நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
அலங்கலம் பாவை ஏறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசி னோரே.

**உரை :**—நொடித்துவிட்டாற்போன்ற காய்கள் ஒலியெழும்பத் தெறிக்கின்ற கள்ளியின் அசைகின்ற பாவைபோன்ற கிளைகளிலேறித் தனியே இருத்தலைக்கொண்ட புல்லிய புறவானது, தான் விரும்பிய பெடையைப் புணர்ச்சிக்குறிப்பால் அழையாநிற்கும் வெயிலின் வெப்ப மாறுத நீண்டிருக்கின்ற சுரத்தின்கண்ணே சென்ற தலைவர்தாம், 'ஆயுள் முதிர்ந்து யாக்கைமுத்துத் தளர்ந்தவர் மீண்டொருகாலத்து இளமைப் பருவத்தை விரும்பினுலும் தவறியேனும் அடைபவரல்லர்; - தாம் வாழ் நாளின் வகையினளவை யறிபவருமில்லை; ஆதலால் மாரிக்காலத்து மலர் கின்ற சிறு சண்பகத்தின் ஈரிய இதழ்களையுடைய மலரை நறிய வயிர முற்றிய சந்தனத்தை அரைத்துப்பூசி மேல்மாலையாக அணிந்த மார்பிலே குறுகிய புள்ளியமைந்த இளைய அழகிய நிறத்தையுடைய கரிய கண்கள் அமைந்த விருப்பமிகு முலைகள் நெருங்க அணைத்திருந்தபடியே கங்குல் கழியக்கடவதாக' என்று முன்புகூறிய தம் மொழியளவில் வன்னெஞ்சு உடைமையாற் பொய்த்தனர்; அங்ஙனம் பொய்த்ததனுல் ஒரேதமுமின்றி நீடுவாழ்வாராக; எ - று.

பித்திகம் - சிறுசண்பகம். ஞெமுங்கல் - நெருங்கல். நொடிவிடல் - நெறித்துவிடல். கள்ளியின்தலை, பாவைபோன்றிருத்தலிற் பாவை யென்முர். கொம்மை - இளமை.

பிரியேனென்ற சூள் வருத்துமாதலின் அச்சூள் வருத்தாவாறு வாழிய என்முள். செல்லுநெறி புறவு பெடையையழைத்துப் புணருவதனை உடையதாயிருப்ப அதனை நோக்கியும் மீண்டாரில்லையேயென் றிரங்கிய வாறு. இதனுள் முதிர்ந்தோர் இளமையெய்தாரென்றது, இளமையது

அருமை. வாழ்நாள் அறிஞருமில்லை யென்றது நாளது சின்மை. ஞெமுங்கப்புல்விக் கழிவதாகவென்றது, அன்பினதகலம். ஏனையவும் உய்த்துணர்க.
மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௧௪)

## ௩௧௫. அம்மூவனார்

நெய்தல்: இது, தலைமகனைப் பரத்தைநொந்து சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்த தலைமகன் மீண்டு தலைமகள்பால் வருதலும் அவள் சினமிகுதலாலே அதனை நீக்கும் வழியின்றி நின்றபொழுது அவனது இளமைமுதிர்ந்த காமக்கிழத்தி தலைவியை வெகுளாதபடி கூறி உடன்படுத்துகின்றாள், துறைவனே! பருவஞ்சென்றபின்னன்றோ என் போல இவளும் நின்னாலே கைவிடத்தக்காளென உள்ளுறையாலும், நீ ஒழுங்காக ஆராய்ந்து குற்றம்வாராது நடவாயெனின் நின்னை விரும்பியோர் தீயிடைப்பட்ட மலர்போல்வரென, வெளிப்படையாலுங் கடிந்து கூறி ஊடலைத்தீர்த்துக் கூட்டாநிற்பது.

ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் * புணரி அலைத்தலிற்
புடைகொண்டு மூத்துவினை போகிய
முரிவாய் அம்பி
நல்லெருது நடைவளம் வைத்தென †
உழவர்
௫. புல்லுடைக் காவில் தொழில்விட்
டாங்கு
நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ

ஞாழலொடு கெழீஇய புன்னையங்
கோழுநிழல்
முழவுமுதற் பிணிக்குந் துறைவ நன்றும்
விழுமிதிற் கொண்ட கேண்மை
நொவ்விதில்
௧0. தவறுநன்கு அறியா யாயின் எம்போல்
ஞெகிழ்கோட் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந்து அனையர் நின்நயந் தோரே.

உரை :—நெருங்கிய பெரிய தெய்வமெனப் பெயர்கொண்ட யாண்டுகள் பல சென்றதனாலே கரையையடுத்த துறையிலே கட்டினீர் அலைத்தலால் மோதப்பட்டு முதிர்ந்து தொழில் செய்யவுதவாது ஒழிந்த முரிந்த வாயையுடைய தோணியை,—நல்ல எருது முன்புள்ள நடையின் சிறப்பு நீங்கியதேயென்று அதனை உழவர் புல்லையுடைய தோட்டத்திலே தொழில் செய்யாதபடி விட்டொழிந்தாற்போல நறிய வாசனையுடைய நல்ல தூமங்கொடாராய்ச் சிறிய மலரையுடைய ஞாழலொடுசேர்ந்தோங்கிய புன்னையின் கொழுவிய நிழலிலே குடமுழாப்போன்ற அந்த மரத்தின் வேரடியிலே பிணித்துப்போகடுந் துறையையுடைய தலைவனே! பெரிதும் சிறப்பினதாகக்கொண்ட நட்பின்கண்ணே நுட்பமாகிய தவறும் வாராதபடி நன்றாக அறிந்து நடக்கவேண்டும்; அதனை நீ அறியாயாயின் நின்னால் விரும்பப்படுவோர் எம்மைப்போல நெகிழ்ந்த தோளும், கலுழ்ந்த கண்ணும்

(பாடம்) * பார்த்துப். † வளம் வாய்த்தென.

உடையராய் மலர்ந்து முறையே உதிர்ந்து கழியாது மலர்ந்தவுடன் தாற்போல்வர்காண்; எ – று.

தீய்ந்

தெய்வம் – வருடம்; தெய்வத்துயாண்டு – இருபெயரொட்டு; அத்து – அல்வழிச்சாரியை. அம்பி – மரக்கலமுமாம். புகைகொடுத்தல் கழுது அணங்கிக் கடலிலே கெடுக்காதிருத்தற்பொருட்டு. விழுமிது – சிறப்புடையது. நொவ்விது – நுண்ணியது.

தன்னையும் அவன் கைவிட்டுச் சேரிப்பரத்தையர் நலநுகர்ந்துறைதலின் எம்போலென்றாள்.

உள்ளுறை :—அம்பி முதிர்தலும் புன்னையின்கீழ்க் கொண்டுபோய்ப் பிணித்தலென்றது, முன்பு நின்னை யடைந்த மாதர் பலருஞ் சிறிது முதிர்தலும் அவரைப் பாதுகாவாது இல்வயின் விடுத்தொழிந்தனை யென்றதாம்.

நின்னை நயந்தோர் மலர்தீய்ந்தனையரென்றது, இவளும் முதிர்ந்தால் அன்றோ எனையோரைப்போலக் கைவிடப்படுவாள், அங்ஙனமின்றி இவ் இளமையிலேயே நீ துறந்ததனால் எம்மைப்போல இவளும் மலர்முதிராது கருகிய தன்மையளாயினாளென்பது. மெய்ப்பாடு – பெருமிதம். பயன் – ஊடல்தீர்த்தல். (நகக)

## நகஎ. இடைக்காடனார்

பாலை : இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி

வற்புறுத்தது.

எ – து, தலைவன் பிரிதலால் வருந்திய தலைவியைத் தோழி நீ வருந்தாதேகொள்; முல்லை அரும்பும்பொழுது வருவேமென்று அகன்ற காதலர் மீண்டு வருமுன் அவை அரும்பும்படி வம்பமாரி பெய்யத்தொடங்கி இடி இடித்துவிட்டது; ஆதலால், இம்மேகம் அறியாமையுடையதென வலி உறுத்திக் கூறுநிற்பது.

மடவது அம்ம மணிநிற எழிலி

மலரின் மௌவல் நலம்வரக் காட்டிக்
கயலேர் உண்கண் கனங்குழை
இவைநின்
எயிறேர் பொழுதின் எய்தரு வேமெனக்
கண்ணகன் விசும்பின் மதியென
உணர்ந்தநின்
நன்னுதல் நீவிச் சென்றோர் நல்நசை
வாய்த்துவரல் வாரா அளவை அத்தக்
கல்மிசை அடுக்கம் புதையக்
கால்வீழ்த்துத் தளிதரு தண்கார் தலைஇ
விளியிசைத் தன்றல் வியலிடத் தானே.

உரை:—தோழீ! கேட்பாயாக; முன்பு மலரையுடைய முல்லையைச் செவ்வையாகக் காட்டிக் கயல்போன்ற மையுண்ட கண்ணையும், கனவிய குழையையுமுடையாய் இம்முல்லை நின் பற்கள்போன்ற அரும்பையீனும் பொழுதில் யாம் நின்னை யெய்துவேமென்றுகூறி இடமகன்ற ஆகாயத்தில் எழுகின்ற திங்களோவென ஐயுற்றறியும்படியாகிய நினது நல்ல நெற்றி

யைத் தடவிக்கொடுத்துச்சென்ற நம் காதலர், தாம் நம்மை விரும்பும் விருப்பமுடையராய் வருதலின்றி வாராது அங்கிருக்கும் இக்காலத்தில் சுரத்துநெறியையுடைய மலைமேலே அதன் பக்கமெல்லாம் மறையுமாறு காலிறங்கி நீர்த்துளியைப்பெய்யுந் தண்ணிய மேகம் அம் முல்லைகள் அரும்பும்படி மழையைப்பெய்து அகன்ற ஆகாயத்தினிடத்திலே இடியிடித்தலையுஞ் செய்யாநின்றது; ஆதலின் நீலமணிபோலும் நிறத்தையுடைய இம் மேகம் அறியாமையுடையதுகாண்; இது மிக்க வியப்பு; எ - று.

பருவமன்றென்றமையால் குறித்தபருவத்து வருவரெனவும் பொய் கூறாரெனவும் பொய்ச்சூளால் அவர் அணங்கப்பெறுவரேயென்று நீ வருந்தாதேயெனவும் வற்புறுத்தினளாயிற்று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - தலைவியை ஆற்றுவித்தல். (௧௬௬)

## ௧௬௭. மதுரைப் பூவண்டநாகன்வேட்டனார்

### குறிஞ்சி: இது, தோழி தலைமகனை வரைவுகடாயது.

எ - து, தோழி வரையாது களவின்வழி வந்தொழுகுந் தலைமகனை நெருங்கி மலைநாடனே! நீ விரும்பிய இவள்பால் வந்துபோகுங் களவினை அன்னை அறிவாளேயாயின் இவள்கண் நீர்கலந்து சிவந்து வேறுபாடெய்தி எவ்வண்ணமாக முடியுமோவென அஞ்சி உரையாடுவாளாகி உள்ளுறையால் வரைந்துகொண்டு செல்வாயாகவெனவும் நொந்து கூறுநிற்பது.

நீடிருஞ் சிலம்பில் பிடியொடு புணர்ந்த

பூம்பொறி ஒருத்தல் ஏந்துகை கடுப்பத்

தோடுதலை வாங்கிய நீடுகுரல் பைந்தினை
பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்
உயர்வரை நாடநீ நயந்தோள் கேண்மை
அன்னை அறிகுவள் ஆயின் பனிகலந்து
என்னு குவகொல் தானே எந்தை
ஓங்குவரைச் சாரல் தீஞ்சுனை ஆடி
ஆயமோடு குற்ற குவளை
மாயிதழ் மாமலர் புரைஇய கண்ணே.

உரை :—நீண்ட கரிய மலையிலே பிடியானையொடுகலந்த பொலிவுற்ற முகத்திலே புள்ளியையுடைய களிற்றியானையின் தூக்கிய கைபோல மேவிலையகத்தினின்றும் நீண்டு வளைந்த பசிய தினைக்கதிரைப் பவளம் போலச் சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் கொய்துகொண்டுபோகா நிற்கும் உயர்ந்த மலைநாடனே! நீ விரும்பிய இத்தலைவியிடத்து வைத்திருக்குங் களவொழுக்கத்தாலாகிய நட்பை எம் அன்னை அறிகுவாளாயின்,—எந்தையினது உயர்ந்த மலைச்சாரலினுள்ள இனிய சுனையிலே நீராடித் தோழியரோடு சென்றுபறித்த அச்சுனைக்குவளையின் கரிய இதழ்களையுடைய சிறந்த மலரையொத்த கண்கள் நீர்கலந்து வடியப்பெற்று இனி எப்படியாகி முடியுமோ? எ - று.



வாங்கிய கதிர் - நீண்டு பறிந்த கதிருமாம். குற்ற - பறித்த. களவொழுக்கம் அன்னையறியின் ஒறுப்ப அதனாலே தலைவி அழுது இறந்துபடுமென்பது.

உள்ளுறை :—தினைக்கதிர் உண்ணுங்கிளி கொய்துகொண்டுபோக லான் அக்கிளிக்குப் பயன்படுமஃதன்றித் தான் விளைந்த கொல்லைக்குப் பயன்படாதன்றே, அவ்வாறே இவளும் நலனுகருகின்ற நினக்குப் பயன் படுவதன்றிப் பிறந்த இல்லகத்துக்கு யாதும் பயன்படுவதின்மையின், நீ வரைந்துகொண்டு செல்கவென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௩௧௭)

## ௩௧௮, பாலைபாடிய பெருங்கடுங்கோ

**பாலை:** இது, பிரிவுணர்த்தப்பட்ட தலைமகனைத் தோழி சொல்லியது.

எ - து, களவொழுக்கத்துக் கொண்டு தலைக்கழிந்து தன் மனைவரைந்து கொண்ட தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான் தோழிக்குணர்த்த அவள் ஐயனே! அன்று நாம் ஓமைநிழலிலிருக்கும்பொழுது களிற்றியானை பிளிற் றியதை வேறாகவுணர்ந்து பிடியானை புலம்பிய குரலை நினைத்தலுஞ் செய் வீரோ? அந்நெறியில் எங்ஙனஞ் செல்வீரென்பாள்போன்று பிரிவினாலே தலைவிபடுந் துன்பத்தைக்குறிப்பித்து மறுத்துக் கூறுகிறபது.

நினைத்தலும் நினைதிரோ ஐய அன்றுநாம்
பணைத்தாள் ஓமைப்* படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தன மாக
நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி
௫. ஒடித்துமிசை கொண்ட ஓங்குமருப்பு யானை

பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்
அறியிடை இட்ட அளவைக்கு

வேறுணர்ந்து

என்றூழ் விடரகம் சிலம்பப்
புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே.

உரை :—ஐயனே! அன்று நாம் பருத்த அடியையுடைய ஓமைமரத்தின் தாழ்ந்த கிளையிலுண்டாகிய இலைதீய்ந்தமையாலே பொருந்தாத புள்ளிபட்ட நிழலின்கண்ணே இருந்தேமாக, அப்பொழுது நம்மை நடுக்கப் படுத்தாது தான் அடையுமிடத்தில்வந்து தழையை ஒடித்துத் தின்னுதல் கொண்ட உயர்ந்த தந்தத்தையுடைய யானை, தன் புள்ளியையுடைய நீண்ட கையைச்சுருட்டித் தூக்கி வேறொன்றனை அறிகின்றதன் காரணமாக இடையீடுபட்டுப் பிளிற்றியவுடன் அதனை வேறாகவுணர்ந்து வெயில் பரவிய மலைப்பிளப்பிடமெல்லாம் எதிரொலி யெடுக்கும்படியாகப் புல்லிய தலையை உடைய இளைய பிடியானை புலம்பிய குரலைக்கேட்டிருந்தீரன்றே! அதனை நினைத்தலுஞ் செய்வீரோ? செய்வீராயிற் கொடிய சுரநெறியில் ஏகாதிருத்தலுடன் இவளைப்பிரியத் தக்கீருமல்லீர்; எ - று.

---

(பாடம்) * பனைத்தாள் ஓமை.



படுசினை - தாழ்ந்தகிளை. வேறுணர்தல் - புலியொடுபொருததோவென உணர்தல். புன்தலை - மெல்லிய தலையுமாம்.

இறைச்சி :—களிறு வேறொன்றனைக்கருதித் தாழ்த்தமையால் அதனை மாறுபாடாக வுணர்ந்து பிடியானை புலம்புமென்றது, நீயிர் சென்ற இடத்துத் தாழ்ப்பின் இவள் புலம்பி இறந்துபடும் என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செலவழுங்குவித்தல். (௩௧௮)

௩௧௯.

# வினைத்தொழிற் சோகீரனார்

**நெய்தல் :**

*இது, காப்புமிகுதிக்கண் ஆற்றானாகிய தலைமகன் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.*

*எ - து, களவொழுக்கம் புலப்படக்கண்டு தலைவியை இல்வயிற் செறித்துக் காவலோம்பலும் ஆங்குவந்த தலைமகன் அதனையறிந்து ஆற்றானாகித் தலைவியை நினைந்து இத் தகைய நடுயாமத்து இவளுடைய முயக்கத்தைக் கருதி யான் துயிலுகின்றிலேன் ; இனி என்னிலை யாதாய் முடியுமோ என நொந்து கூறுநிற்பது.*

ஓதமும் ஒலிஓ வின்றே ஊதையுந்
தாதுளர் கானல் தேளவேன் றன்றே
மணல்மலி மூதூர் அகல்நெடுந் தெருவில்
கூகைச் சேவல் குராலோடு ஏறி

ஆரிருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்
பாவை அன்ன பலராய் வனப்பின்
தடமென் பணைத்தோள் மடமிகு
குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்கல் உள்ளி
மீன்கண் துஞ்சும் பொழுதும்

யான்கண் துஞ்சிலன்* யாதுகொல்
நிலையே.

உரை :—கடலும் ஒலியடங்கிவிட்டதே ; ஊதைக்காற்று மகரந்தத்தைக் கிண்டுகின்ற கழிக்கரைச் சோலையும் பொலிவு அழிந்ததே ; மணல்மிக்க இம் மூதூரின்கணுள்ள அகன்ற நெடிய தெருவிலே கூகையின் சேவல் அதன் பெண்பறவையொடு சென்று மக்களியங்காத பெரிய நாற்சந்தி கூடு மிடத்தில் யாவர்க்கும் அச்சமுண்டாகும்படி குழறுகிற்கும் ; பேய்களும் வெளிப்பட்டு உலாவாநிற்கும் ; ஒருவரையொருவர் அறிதற் கியலாது மயங்கிய இருள் மிக்க அத்தகைய இரவு நடுயாமத்தில் கொல்விப்பாவை போன்ற பலரும் ஆராயும் அழகையும், அகன்ற மெல்லிய பருத்த தோளையுமுடைய மடப்ப மிக்க இளமடந்தையினது தேமல்படர்ந்த அழகிய கொங்கையை முயங்குதல் கருதி மீன்களுறங்கும் இராப்பொழு தெல்லாம் யான் கண்ணுறங்கிலேன் ; ஆதலின் இனி என்நிலை எத்தன்மையதாய் முடியுமோ ? அறிந்திலேன் ; எ - று.

(பாடம்) * யான் கண் துஞ்சேன்.



ஒவின்று - ஒவிற்று ; நீங்கிற்று. இரவு நடுயாமத்துக் கடலோசை அடங்குதல் வழக்கு. தௌவெனல் - பொலிவுஅழிதல். ஊதையும் என்றதன் உம்மை பிரித்துக்கூட்டப்பட்டது. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௧௯)

## ௩௨௰. கபிலர்

மருதம் : இது, பரத்தை தனக்குப் பாங்காயினார் கேட்ப நெருங்கிச் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்த தலைமகன் அவளைநீங்கிப் புதிய ஒரு பரத்தையிடம் புகுந்ததனாலே, அதனையறிந்த முதற்பரத்தை சினந்து தனக்குப் பாங்காயினார்க்குச் சொல்லுவாள்போல, இறைமகன் கேட்கும் வண்ணம் நெருங்கிநின்று திருவிழாவுமில்லாத இக்காலத்தில் இவனாலே காதலிக்கப்பட்ட இவள் தன்னைப் புனைந்துகொண்டு தெருவிலே சென்றதற்கு ஊரொருங்கு நகைசெய்ததன்றிக் குலமடமாதரும் தம் தம் கொழுநரைக் காத்துக்கொண்டனர்; அங்ஙனமாக இவனை இவள் பற்றிக் கொண்டது அரிதொன்று அன்றென இகழ்ந்து கூறுநிற்பது.

விழவும் உழந்தன்று முழவுந் தூங்கின்று
எவன்குறித் தனள்கொல் என்றி யாயின்
தழையணிந்து அலமரும் அல்குல் தெருவின்
இளையோள் இறந்த அனைத்தற்குப் பழவிறல்
ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவிற்
காரி புக்க நேரார் புலம்போல்

கல்லென் றன்றால் ஊரே அதற்கொண்டு
காவல் செறிய மாட்டி ஆய்தொடி
எழின்மா மேனி மகளிர்
விழுமாந் தனர்தங் கொழுநரைக் காத்தே.

உரை :—ஊரிலே செய்யப்படுந் திருவிழாவுஞ் செய்துமுடிந்தது ; மத்
தளமும் ஓசையொழிந்தது ; இக்காலத்து இவள் யாதுகருதினளோ
என்று கேட்பாயேயாயின் கருதியது கூறுகிற்பேன் ; ஒருநாள் உடுக்குந்
தழையை அணிந்து அத் தழையசையும் அல்குலையுடையவளாய்த்
த் தெருவின்கண்ணே இவ்விளையோள் சென்ற அவ் வொருகாரணத்
திற்காக,—பழைமையாகிய வெற்றியை யுடைய கொல்லிமலைத் தலை
வனாகிய வல்வில்லோரியைக்கொன்ற மலையமான் திருமுடிக்காரி
என்பான் உடனே அவ் ஓரியினது ஒப்பற்ற பெரிய தெருவிலே
புகுந்ததைக்கண்ட காரியின் பகைவராகிய ஓரியைச்சார்ந்த யாவரும் ஒரு
சேரநின்று பேரிரைச்சலிட்டாற்போல, இவ் ஊரிலே கல்லென்னும்
நகையொலி உண்டாயிற்று ; அந் நகையொலியைக் கேட்டலும் இவள்
தங்களுடைய கேள்வரைக் கைப்பற்றிக்கொண்டு செல்லாநிற்கும் என்
று திறணணி ஆராய்ந்தணிந்த வளையையுடைய அழகிய மாந்தளிர்போன்ற
மேனியையுடைய மாதர்கள் காவல்செறியச் செய்து தம்தம் கொழுநரைப்
பாதுகாத்துக்கொண்டு நன்மையடைந்தார்கள்; அங்ஙனம் அவரவர் பாது

மூலமும் உரையும்

நஉ௩

காத்ததனால் இவள்செயல் பயன்படாமையின் இவளைக் கைக்கொண்டகன்
றனள்காண் ; இவட்கு இஃதோர் அரியசெயலன்று ; எ - று.

உழந்தன்று - ஒடுங்கிற்றுமாம். தூங்குதல் – அடங்குதல்.
சிறப்படைதல்.
விழுமாத்தல்

விழவு முதலாயின இல்லாத காலத்து இவள் வெளிவந்தமையின் ஆண்பாலாரை வயமாக்கவேண்டி என்றாள். மாதர் பலரும் தம்த கொழுநரைக் காத்துக்கொண்டனரென்றதனால், காவாத இவளை கைப்பற்றிக்கொண்டனளென்று குறிப்பாற் கொள்ளுமாறு கூறினள் ஆயிற்று. மெய்ப்பாடு - வெகுளி. பயன் - விருந்தின் பரத்தையை பழித்தல். (௩௨0

## ௩உக. மதுரை அளக்கர் ஞாழார் மகனார்

## மள்ளனார்

முல்லை :

இது, வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

எ - து, வினைவயிற்சென்று மீளுந்தலைமகன் தேர்ப்பாகனைநோக்கி நம் காதலி மாலைப்பொழுது நாமில்லாத வறுமனையை நோக்கி வருந்த நிற்பளோ விரைவில் நினது தேரைச் செலுத்துவாயாக ; காட்டின்கண்ணே நெருங்குதலும் எம்மூர்மரங்கள் தோன்றாநிற்பனகாண் என உவந் கூறாநிற்பது.

சேந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை
பாடின் தெண்மணித் தோடுதலைப்
பெயரக்
கான முல்லைக் கயவாய் அலரி
பார்ப்பன மகளிர் சாரற்புறத்து அணியக்
ரு. கல்சுடர் சேருங் கதிர்மாய் மாலைப்

புல்லென் வறுமனை நோக்கி மெல்ல
வருந்துங் கொல்லோ திருந்திழை அரிவை
வல்லைக் கடவுமதி தேரே சென்றிக
குருந்தவிழ் குறும்பொறை பயிற்றப்
பெருங்கலி மூதூர் மரந்தோன் றும்மே.

**உரை :**—*திருத்தமாகச் செய்த கலனணிந்த என் காதலி சிவந் நிலத்தையுடைய காட்டின்கண்ணே சிறியமயிரையுடைய யாடுகளின் தெளிந்த ஓசையினிய மணிகளைக் கழுத்திலே பூட்டப்பட்ட கூட்ட மெல்லாம் தாம் மேய்வதையொழித்துத் தொழுவம்புகுமாறு பெயராநிற்ப கானத்தின்கண் உள்ள முல்லையின் அகன்றவாயையுடைய மலரை சாரலின் புறத்து உள்ள பார்ப்பனமகளிர் பறித்துச் சூடாநிற்ப ஆதித் மண்டிலம் அத்தமனக்குன்றை அடைகின்ற ஒளிமழுங்கிய மாலைப்பொ தில் யான் இல்லாமையால் புல்லென்ற வறுவிய மாளிகையைநோக் மெல்ல வருந்தாநிற்பளோ ? பாகனே ! நமதுதேரை விரைவிலே செலுத்தி காண் ; சென்று அழகிய குருந்து மலர்கின்ற காட்டின்கண்ணே நெருங்*



*தலும் பெரிய ஒலியை உடைய நம்மூரின் மரங்கள் தோன்றாநிற்கும் ; ஆதலின் நின்தேர் விரைவிலே செல்லுவதாக ; எ - று.*

*புருவை - யாடு. கயவாய் - அகன்றவாய். சென்றிக - செல்கவென் னும் வியங்கோள் வினைத்திரிசொல். குறும்பொறை - காடு.*

*மரந்தோன்றுமென்றதனால் ஊரின் அணிமைகூறினன். பார்ப்பன மகளிர் அங்கி வளர்க்கும் கேள்வரையுடைமையிற் பிரியப்பெறாதலின், அம்மகளிர் மலரணிந்தமை கூறுமுகத்தால் அவர்போலக் காதலியும் பிரியாது உறையக் கருதுமேயென்று குறிப்பித்தான்.* **மெய்ப்பாடு** - *உவகை.* **பயன்** - *கேட்டபாகன் தேர்கடாவல்.* (ந௨௧)

## ௩௨௨. மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார்

குறிஞ்சி: (௧) இது, தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, தலைமகன் களவொழுக்க மேற்கொண்டு சிறைப்புறமாக வந்திருப்பதை யறிந்ததோழி,—அவன் கேட்டு உள்ளுநையால் விரைவிலே பொருளீட்டிவந்து வரைந்துகொள்ளுமாறு தலைவியை நெருங்கித் தோழீ! நாடனது மார்பைப் பெறுமையாலாகிய வேறுபாட்டையறிந்த அன்னை முருகணங்கென்று வெறியெடுத்தலும் அங்கெய்திய வேலன் இடுகின்ற பலியால் இவ்வேறுபாடு நீங்குமாயின் இதனினுங் கொடியதொன்றில்லை கண்டாய்; அங்ஙனம் நிகழ்வது உண்மைதானோ ஒன்றுகூறுயென்று கவன்று கூறுவிற்பது.

(௨) தலைமகன் பாங்கிக் குரைத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

ஆங்கனந் தணிகுவது ஆயின் யாங்கும்
இதனிற் கோடியது பிறிதொன் றில்லை
வாய்கோல் வாழி தோழி வேயுயர்ந்து
எறிந்துசெறித் தன்ன பிணங்கரில்
விடர்முகை
ஊன்தின் பிணவின் உட்குபசி களைஇயர்
ஆளியங்கு அரும்புழை ஒற்றி வாள்வரிக்
கடுங்கண் வயப்புலி ஒடுங்கும் நாடன்
தண்கமழ் வியன்மார்பு உரிதினிற் பெறுது

நன்னுதற் பசந்த படர்மலி அருநோய்
அணங்கென உணரக் கூறி வேலன்
இன்னியங் கறங்கப் பாடிப்
பன்மலர் சிதறியர் பரவுறு பலிக்கே.

உரை:—தோழீ! வாழ்வாயாக; மூங்கில் உயர்ந்து வளரப்பெற்று இடையே வெட்டி நெருக்கிவைத்தாற்போன்ற பின்னிய புதர்களையுடைய மலைப்பிளப்பையடுத்த துறுகல்லிடத்து ஊனைத்தின்னுகின்ற பெண் புலிக்கு உளதாகிய அஞ்சத்தக்க பசியைப் போக்கவேண்டி மக்கள் இயங்கு



கின்ற நுழைதற்கரிய சிறுவழியையடுத்து வாள்போன்ற கோடுகளையும் கொடிய கண்ணையுமுடைய வலிய ஆண்புலி பதுங்கியிருக்கும் மலைநாடனது தண்ணிதாய்க் கமழ்கின்ற அகன்றமார்பை உரிமையாகப்பெறாமையால் உண்டாகிய நல்ல நுதலிலே பசப்பெய்திய நினைத்தல்மிக்க நீங்குதற்கரிய இந்நோய் முருகவேள் அணங்கியதால் உளதாயிற்றென்று அன்னை அறியும்படி சொல்லிப் படிமத்தான் (பூசாரி) தனது துடிமுதலாய வாச்சியம் ஒலிக்கப் பாடிப் பலவாயபூக்களைத் தூவித் துதித்து இவ் யாட்டினை ஏற்றுக்கொள்ளென்று அதனை அறுத்துக் கொடுக்கும் பலிக்காக அவ் வண்ணம் இந்நோய் தணிவதாயினோ எவ்விடத்தும் இதனினுங்காட்டிற் கொடியது பிறிதொன்றில்லை கண்டாய்: அவ்வண்ணம் தணியுமென்பது மெய்ம்மைதானோ? ஆமாயிற் கூறுவாய்; எ - று.

வாய் - உண்மை. புழை - நுழைவழி. ஒற்றுதல் - அடுத்தல்.

உரிமையிற் பெறாததனாலே பசலைநோய் தோன்றியதென்பாள் வரைந்து உரிமையிற்பெறுமாறு அறிவுறுத்தினாள். நீடிப்பின் அன்னை வெறியெடுப்ப அதனால் இறந்துபாடெய்துமெனவும் அறிவுறுத்தினாளாயிற்று. இது, பசலைபாய்தல்.

உள்ளுறை :—பெண்புலியின் பசியைப் போக்க ஆண்புலி இரை தேடிப் பதிவிருக்குமென்றது, தலைவியின் படர்மலியருநோய் போக்கி வரைந்தெய்துமாறு தலைமகன் விரைவிலே பொருளீட்டச்சென்று பெற்று வருவானாக வென்றதாம். மெய்ப்பாடு - மருட்கையைச்சார்ந்த பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௩௨௨)

## ௩௨௩. வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

### நெய்தல் : இது, தோழி இரவுக்குறிநேர்ந்தது.

எ - து, பகற்குறி இடையீடெய்திய தலைமகன் இரவுக்குறி விரும்பினனாக, அதுகேட்டு உடன்பட்டதோழி குறியிடங்கூறுகின்றாள் :—எமது சிறுகுடிப்பாக்கம் பனையின் கூட்டத்தின் நடுவணது; வண்டொலிமிகுதியால் நின்தேரொலி கேட்டலுமரிது ; வருநெறியுமீதே யாதலால், மறவாது வருவாயாகவென இயைந்து கூறாநிற்பது.

ஓங்கித் தோன்றுந் தீங்கள் பெண்ணை
நடுவண் அதுவே தெய்ய மடவரல்
ஆயமும் யானும் அறியாது அவணம்
ஆய நட்பின் மாண்நலம் ஒழிந்துநின்
௫. கிளைமை கொண்ட வளையார் முன்கை

நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்
புலிவரி எக்கர்ப் புன்னை உதிர்த்த
மலிதாது ஊதுந் தேனோடு ஒன்றி
வண்டின் இன்னிசை கறங்கத்

திண்தேர்த்

கo. தேரிமணி கேட்டலும் அரிதே
வருமாறு ஈதவண் மறவா தீமே.



**உரை:**—நின்பால் மயக்கமுற்ற நட்பினல் மாட்சிமையுடைய இனிய நலத்தையும் ஒழியவிட்டு நின்னுடைய உறவைக்கொண்ட வளையணிந்த முன்னங்கையையுடைய நல்ல நின்காதலிக்குத் தந்தையின் சிறுகுடியை உடைய பாக்கமானது உயர்ந்து தோன்றுகின்ற இனிய கள்வடிதலையுடைய பனைகளின் நடுவினுளதா யிராநின்றதுகண்டாய்; மடப்பம் வருதலை உடைய தோழியர்கூட்டமும் யானும் ஒருவரையொருவர் அறியாதபடி அவ்விடத்திலேயே இருப்போம்; ஆங்கே புலியின் வரிபோன்ற மணல் மிக்க திடரில் இருக்கும் புன்னையினின்று உதிர்ந்த நிரம்பிய பராகத்தை உண்ணுகின்ற பெண்வண்டுகளுடனே ஆண்வண்டுகளும் முரலுகின்ற இனிய ஓசை மிக்கொலித்தலால் நினது திண்ணிய தேரின் விளங்கிய மணிகள் ஒலித்தலைப் பிறர்கேட்டலும் அரியதாகும்; அங்கு நீ வருதற் குரிய நெறியும் இதுவே ஆகும்; ஆதலினாற் சேர்ப்பனே! மறவாது வந்து கூடுவாயாக; எ - று.

கிளைமை - உறவு. தேன் - ஒருவகைவண்டுமாம். ஊதல் - உண்ணுதல்.

நீ வருமுன் யாம் அங்கேசென்று நின் வருகையை எதிர்கொள்வேம் என்பாள் அவணம் என்றாள். நீ வருவதனை அயலார் அறியாத இடமென்பாள், பெண்ணை நடுவணதென்றாள். இதனாற் குறியிடமும் அங்கென்றே கூறினளென்பது. அஞ்சாது வரலாமென்பாள், மணியோசை பிறர்கேட்பது அரிதாகுமென்றாள். தீம்கள்பெண்ணையென்றதனால் நீ அங்குத்தங்கி விருந்துண்டு செல்லலாமென உலகியல் கூறினளுமாம்.

இறைச்சி :—புன்னையுதிர்த்த தாதினை வண்டுகள் இமிர்ந்து உண்ணும் என்றதனல், தலைவியின் நலத்தை அஞ்சாதுண்டு மகிழ்ந்திருக்கலாம் என்பது. மெய்ப்பாடு-பெருமிதம். பயன் - இரவுக்குறி நேர்தல். (௩௨௩)

## ௩௨௪. கயமனார்

குறிஞ்சி : (௧) இது, தலைமகன் பாங்கற்குச் சொல்லியது.

எ - து, பாங்கற்கூட்டத்துப் பாங்கன் தலைவனைநெருங்கி நீ கூறுகின்ற மங்கை எவ்விடத்து எவ்வடிவினளென்றானுக்கு அவள் தன் தந்தையினது இல்வயின் இராநின்றனள்; அன்னை உணவூட்ட வந்துழி அவளை அலையப்படுத்தித் தான் ஓடியுலாவும் இளம்பருவத்தினளென இயலிடங் கூறாநிற்பது.

பாலை : (௨) இடைச்சுரத்துக் கண்டோர் சொல்லியதூஉமாம்.

எ - து, கொண்டுதலைக்கழிய இடைச்சுரத்துக் கண்டோர் காவினுட் பந்து உருட்டுபவள்போல வெயிலிலே நடந்துசெல்லமாட்டாது ஓடாநிற்கும்; இவளையீன்ற தாய் என்னென்று வருந்துங்கொலோவென்ற இரங்கிக் கூறாநிற்பதுமாம். (உரை இரண்டற்குமொக்கும்.)

அந்தோ தானே அளியள் தாயே
நொந்தழி அவலமோடு என்ஞ
குவள்கொல்
பொன்போல் மேனித் தன்மகள்

நயந்தோள்

கோடுமுற்று யானை காடுடன் நிறைதர
ரு. நெய்பட் டன்ன நோன்காழ் எஃகின்

மூலமும் உரையும்

நடூசிநட

செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்

ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி
அஞ்சில் ஓதி இவளுறும்

பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே.

உரை :—பொன்போலுகின்ற மேனியையுடைய தன் புதல்வியாகிய இவளுடைய விருப்பத்தின்படி நடத்துபவளாதலால், இவளை ஈன்றதாய் யாவராலும் இரங்கத்தக்காள் ; அவள்தான் நொந்து அழிகின்ற அவலமுடனே இனி எவ்வண்ணமாகுவளோ? ஐயோ! தந்தங்கள் முற்றிய யானை தனது காட்டில் நிறையப் பெருகியதால் அத்தகைய செல்வமுடைய நெய் பூசினலொத்த வலிய காம்புசெருகிய வேற்படையேந்திய தந்தையினது அகற்சியையுடைய இடத்தில் விளையாடுகின்ற பந்தைக் காலால் உருட்டுபவள்போல ஓடியோடி அழகிய சிலவாகிய கூந்தலையுடைய இவளுடைய மிக்க பஞ்சுபோன்ற மெல்விய அடிகள் நடைபயிற்றுநிற்குமே ; எ - று.

சாணையா லாகிய மெருகு நெய்பூசினுலொத்தலின் நெய்பட்டன்ன எஃகு என்றார். இனி நெய்பூசிய அத்தகைய வேலெனவுமாம். **மெய்ப்பாடு - உவகை. பயன் - பாங்கற்குணர்த்தல்.**

இரண்டாந்துறைக்குப் பொன்போன்ற மேனி வாடுமென்று வருந்துவள் ஆதலின் என்னுகுவளோ வென்றார். செல்வத்தந்தையின் புதல்வி இங்ஙனம் ஓடுமேயென்றிரங்கி அந்தோவென்றார். பரவில் நடை பயிற்றுமே பஞ்சிமெல்லடியன்றேயென் றிரங்கினுரென்பது. **மெய்ப்பாடு - அழுகை. பயன் - ஆற்றுதுரைத்தல்.** (௩௨௪)

## ௩௨௫. மதுரைக் காருலவியங் கூத்தனுர்

**பாலை:** இது, தோழி செலவழுங்குவித்தது.

எ - து, தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றுனைத் தோழி நெருங்கி, எம்பெருமானே! பிரிகின்றனை என்பதறிந்த இவள்கண் நீர்வடியக் கண்டும் கொடியகாட்டில் நீ செல்லுதல் தகுதியாமோ? நும் செலவு தவிர்க என அவன் செலவழுங்கும்வண்ணங் கூறுநிற்பது.

கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை
இரைதேர் வேட்கையின் இரவிற் போகி
நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து எடுத்த
அரவாழ் புற்றம் ஒழிய ஒய்யென
௫. முரவாய் வள்ளுகிர் இடப்ப வாங்கும்
ஊக்கருங் கவலை நீந்தி மற்றிவள்
பூப்போல் உண்கண் புதுநலஞ் சிதைய
வீங்குநீர் வாரக் கண்டும்

தகுமோ பெரும தவிர்கநும் செலவே.



உரை :—பெரும ! இவளுடைய நீலமலர்போன்ற மையுண்ட கண்களின் புதிய அழகு சிதையும்படி மிக்க நீர்வடிதலைக் கண்டு வைத்தும்,—கவிந்த தலையையும் பருத்த மயிரையுமுடைய ஆண்கரடி தான் இரைதேடி உண்ணும் விருப்பத்தினால் இரவிலேசென்று நீடிய செய்கையை உடைய கறையான்கூட்டம் செய்துயர்த்திய பாம்புகள் வாழ்கின்ற புற்றில் உள்ள அச் சிதலை ஒருங்கே ஒழியும்படி விரைவாக ஒடிந்த வாயை உடைய பெரிய நகங்களாலே பறித்து உள்ளிருக்கும் குரும்பிமுதலாய வற்றை உறிஞ்சி இழுக்காநின்ற உள்ளத்தால் நினைத்தற்குமரிய கவர்த்த சுரநெறியிலே செல்லத்தகுமோ ? ஆதலால் நீ செல்லுவதை ஒழிப்பாயாக ; எ - று.

சிதலைத்தோடு - கறையான்கூட்டம். முரவு - ஒடிதல் ; முரவாய் - ஒடிந்தவாய். நீந்தி என்பதை நீந்தவெனத்திரிக்க. குழாத்தொடுஞ் செல்லுதலால் நும்செலவெனப் பன்மையாற்கூறினாள்.

இறைச்சி :—கரடி இரைதேர்வேட்கையாலே புற்றைப்பெயர்த்து இரவிலுண்ணுமென்றது, இவளது காமம் நின்னைக்கூடும் வேட்கை மீதூர்தலானே இவளுயிரை உண்டொழிக்கும் என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - செலவழுங்குவித்தல். (நஉரு)

## நஉசா. மதுரை

## மருதனிள நாகனார்

குறிஞ்சி : இது, தோழி தலைமகனை வரைவுகடாயது.

எ - து, பலகாலுங் களவுமேற்கொண்டு வந்தொழுகுந் தலைமகனைத் தோழி நெருங்கி, நாடனே! நீ எந்நாளும் வந்து முயங்கியகன்றும் இன்னதனால் உண்டாயதென்று அறியவியலாதபடி இவள் கண்கள் பசப்பூரா நிற்கும்; அதனை நின்பால் உரைசெய்யவும் வெள்குவேன்; இவள் இவ்வாறு துன்புறாதபடி மணந்து ஓம்புவாயாக என்று சூழ்ந்து கூறுகிறப்பது.

கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
மீன்குடை நாற்றந் தாங்கல்செல் லாது
துய்த்தலை மந்தி தும்மும் நாட
நினக்கும் உரைத்தல் நாணுவல் இவட்கே
நுண்கொடிப் பீரத்தின் ஊழுறு பூவெனப்
பசலை ஊரும் மன்னோ பன்னாள்
அறிஅமர் வனப்பினெங் கானம் நண்ண
உண்டேனும் உணரா வாகி
மலரென மரீஇ வருஉம்இவள் கண்ணே.

உரை:—கொழுத்த சுளையையுடைய பலாவின் பயன்மிக்க மலைப் பக்கத்தில் செழுமையாகிய காய்காய்த்துப் பருத்தலாலே தாங்கமாட்டாது வளைந்த கரிய கிளையிலேவந்து தங்கிய கொக்கானது மீனைக்கொணர்ந்து குடைந்து தின்னுதலால் உண்டாகிய புலவுநாற்றம் பொறுக்கவியலாது



ஆங்குள்ள பஞ்சுபோன்ற தலையையுடைய மந்தி தும்மாநிற்கும் மலை நாடனே! பலநாளும் அறியப்படுகின்ற அமர்ந்த அழகுடைய எமது தினைப்புனத்தை நீ அடைதலுண்டெனினும் இன்னகாரணத்தாலே தோன்றினவென்று நம்மால் உணரப்படாதனவாகி நீலமலர்போலப் பொருந்திவரும் இவளுடைய கண்ணில்,—நுண்ணிய கொடிப்பீர்க்கின் மலர்ந்த பிற்றைநாளுதிரும் பழம்பூவின் நிறம்போலப் பசலை யுண்டாகா நிற்கும்; அதனை நினக்குச்சொல்லவும் யான் வெட்கமுடையவளாய் இரங்கின்றேன்; இவட்கு இத்தகைய துன்பம் வாராதபடி காப்பாயாக; எ - று.

ஊழுறுபூ - மலர்ந்துகழியும் பழம்பூ. உண்டெனும் - உண்டெனினும் என்பதன் இடைக்குறை.

காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் உள்ளவொடுக்கத்தாற் கூற நாணுவலென்றாள்.

உள்ளுறை :—பலாமரம் தினைப்புனமாகவும், கொக்குத் தலைவனாக வும், மீன் தலைவியாகவும், குடைதல் இன்பந்துய்த்தலாகவும், நாற்றம் அலராகவும், மந்தி அன்னையாகவுங்கொண்டு பலாமரத்தின்மீது கொக்கிருந்து மீனைத் தின்னுதலானாகிய நாற்றத்தைத்தாங்கமாட்டாது மந்தி தும்முதல்போலத் தினைப்புனத்து நீ வந்து இவளைக்கலந்து செல்லுதலால் உண்டாகிய அலரைத் தாங்கமாட்டாது அன்னை சினந்து பலகாலும் நோக்காநிற்கும் என்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல். (௩௨௬)

## ௩௨௭. அம்மூவனார்

நெய்தல் :

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாய தலைமகள் வன்பொறை எதிரழிந்தது.

எ - து, தலைவன் மணந்துகொள்ளாது களவிலே நெடுங்காலம் வந்து ஒழுகுதலால் வருந்திய தலைமகளைத் தோழி ஆற்றவும், அதுபொழுது தோழியைநோக்கி நம் காதலரை நாம் விரும்புவது பழியெனில் அதனினுஞ் சாதலினியதேயாகும்; அது கூடாதாயின் அவர் மார்பை உரிமை உடையோமாதல் இனிதேயாகும்; இவ்விரண்டனுள் ஒன்றனை அடைவது நன்மையாமென அழிந்து கூறுநிற்பது.

நாடல் சான்றோர் நம்புதல் பழியெனில்

பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்
சாதலும் இனிதே காதலந் தோழி
௫.

அந்நிலை அல்ல ஆயினுஞ் சான்றோர்
கடன்நிலை குன்றலும் இலரென்று உடனமர்ந்து
உலகங் கூறுவது உண்டென நிலைஇய
தாயம் ஆகலும் உரித்தே போதவிழ்
புன்னை ஓங்கிய கானல்
தண்ணந் துறைவன் சாயல் மார்பே.



உரை:—என்பால் அன்புமிக்க தோழீ! நம்மைவிரும்பிக் களவொழுக்கத்தில் வந்து முயங்குஞ் சான்றோராகிய தலைவரை நாம் விரும்பி ஒழுகுதல் பழியுடையதாமெனில் தூங்காதனவாய் அழுகின்ற கண்ணோடு ஏக்கத்தால் இளைத்து இறந்துபோதலும் இனியதாகும்; அவ்வாறு இறப்பது இயல்பு உடையதன்றாயினும் சால்புடையவர் தாம் செய்யுங் கடமையிலே குறைபடார் என்று சேரப்பொருந்தி உலகங் கூறுவதுண்டெனக்கொண்டு அரும்புகள் மலர்கின்ற புன்னைமரமோங்கிய சோலையையுடைய தண்ணிய துறைவரது மெத்தென்ற மார்பை நிலையாகப் பெறத்தக்க தன்மையுடையேமானாலும் அஃது உரியதேயாகும்; இவ் இரண்டனுள் ஒன்றை அடைவது நலமாகும் அன்றோ? எ - று.

சான்றோர் - இரண்டனுருபு விரிக்க. தாயம் - பாகம்; உரிமை. துறைவன் - பன்மையொருமை மயக்கம்.

உலகங்கூறுதலால் உண்டெனக்கொள்வதன்றி இயல்பாகிய உறுதி அவனிடத்தே தனக்கில்லையாதலின் முதலில் இறப்பதே நலமென்றாள். இறந்துசெய்யக்கடவது யாதுமில்லையாதலின் ஒருகால் உண்டெனக் கொண்டு உரிமையாக்கினும் அமையுமென்று பின்னர்க்கூறினள்.

இறைச்சி :—அடைந்தாரைக் கைவிட்ட துறைவனது சோலையாய் இருந்தும் புன்னை, போது அவிழாநின்றதே இஃதென்னவியப்போ எனப் பொருட்புறத்தே தோன்றியதறிக. மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௨௭)

## ௩௨அ. தொல்கபிலர்

குறிஞ்சி : இது, தோழி வரைவிடை யாற்றாளாகிய வற்புறுத்தது.

தலைமகளை

எ - து, மணஞ்செய்துகொள்வதாக மொழிந்து சென்ற தலைமகன் குறித்தபருவத்து வாராமையால், அது பொறாது வருந்திய தலைமகளைத் தோழி நெருங்கி மலைநாடன் உயர்பிறப்பினனென்பதை யறிந்தனம்; அவன் கூறிய மொழி பிறழான்காண்; முதல்மழை பெய்தவுடன் வருவேனென்றனன் ஆதலின் ஒருநாள் நம்மூரின் புனத்தில் மழை பெய்வதாக; பெய்த அன்றே வருவன் என வலியுறுத்துக் கூறாநிற்பது.

கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேல் தூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைகிளி கடியும் பெருங்கல் நாடன்
பிறப்புளூர் அன்மை அறிந்தனம்

அதனால்

௫. அதுவினி வாழி தோழி ஒருநாள்
சிறுபல் கருவித் தாகி வலன்ஏர்பு
பெரும்பெயல் தலைக புனனே இனியே
எண்பிழி நெய்யோடு வெண்கிழி

வேண்டாது

சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ்

சாரல்

௧0. விலங்குமலை அடுக்கத் தானும்
கலம்பெறு விறலி ஆடுமிவ் வூரே.

உரை :—தோழீ ! கிழங்குகள் கீழிறங்கித் தேனடைகள் மிகுதியாக மேலேவைக்கப்பட்டு மிகச் சிலவாய தினைகளைவிதைத்து அவை மிகப் பலவாக விளைதலும் அவற்றைக் கிளி கொய்துபோகாதபடி ஓப்பிப் பாதுகாக்கும் பெரிய மலைநாடனுடைய பிறப்பு மிக உயர்வுடையதேயன்றி நம்மோடு ஒத்த ஒருதன்மையதன்றென்பதை அறிந்தனம் ; அதனால் அப்பிறப்பு இனி என்றும் வாழ்வதாக ; அத்தகைய உயர்பிறப்பினனாதலின் அவன்கூறியது பிறழான்காண் ; முதன்மழை பெய்தவுடன் வருவேன் என்றனன் ஆதலின், இனி எள்ளைப் பிழிந்தெடுக்கும் நெய்யையும் வெளிய கிழியையும் விரும்பிப்பெறாது சந்தனமரம் மிகுதியாகவுடைய உயர்ந்த பெரிய சாரலிலே குறுக்கிட்ட மலையின்புறத்திருக்கும் பக்கமலை இடத்து நன்கலம்பெற்ற விறலி கூத்தயராநிற்கும் இவ்வூரிலுள்ள நம்முடைய தினைப்புனத்தில் அந்த மேகம் சிறிய பலவாய மின்னல்முதலாய தொகுதியையுடையதாகி வலமாக எழுந்து பெரும்பெயலை ஒருநாள் பொழிந்துவிடுவதாக; பெய்த அன்றே வருகுவனாதலின், நீ வருந்தாதே கொள் ; எ - று.

விழுதல் - இறங்குதல் ; " வள்ளிகீழ்வீழா " என்றார், (கூகூ) கலியினும். தூங்குதல் - தொங்குதல். விளைந்து என்பதை விளையவெனத்திரிக்க. ஓரன்மை - ஒருதன்மையல்லாமை. எண் - எள்ளு.

உள்ளுறைகள் :—(க) கிழங்கு கீழ்வீழ்ந்து தேன் மேல்தூங்கி என்றது, அவன் நம்பால்வைத்த அன்பு கீழாக வேரூன்றி இறங்கி மேலே காணும் போதெல்லாம் தேனினும் இனிமைசெய்கின்றதென்பது.

" (உ) சிற்சில வித்திப் பற்பலவிளைந்தென்றது, ஒரோ ஒருகால் இயற்கைப்புணர்ச்சியிலே நீ இன்பம்நல்க அதனைப் பெற்றான் ஆதலின், அதற்கீடாகப் பல்லாயிரம் நன்மையை நினக்கு அளிக்க நாடியிருப்பன் என்பது.

" (ங) கிளிகடியுமென்றது, அவ்வன்பு கெடாதபடி பாதுகாக்குமென்பது.

,, (ச) எண்ணெய் கிழி வேண்டாது விறலி ஆடு மென்றது, அவன் பெருந்தகைமைநோக்கவே அருங்கல முதலாயின வேண்டாது நம் சுற்றத்தார் நின்னைக் கொடுக்க உடன்படுவரென்பது. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - ஆற்றுவித்தல். (௩உ௮)

௩உ௯.

## மதுரை மருதங்கிழார் மகனார்

## சொகுத்தனார்

பாலை : இது, பிரிவிடை மெலிந்த தலைமகளைத்

தோழி பருவங்

காட்டி வற்புறுத்தது.

எ - து, தலைமகன் வினைவயிற் பிரிதலால் மெலிவடைந்த தலைமகள் வருந்தலும் அதுகண்ட தோழி நெருங்கிக் காதலர் நம்மையகன்று சென்றாராயினும் சென்றவிடத்தே தங்கியுறைபவரல்லர்; வருவேமென்று அவர் கூறிய கார்காலம் இன்றுதான் தொடங்குகின்றதாதலின் இன்னே வருகுவர்காண்; அதுகாறும் நீ வருந்தாதேகொள்ளென்று வலியுறுத்திக் கூறாநிற்பது.



வரையா நயவினர் நிரையம் பேணார்

கோன்றுற்றுத் துறந்த மாக்களின்

அடுபிணன்

இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறுஅது
புனிற்று நிரை கதித்த பொறிய முதுபாறு
இறகுபுடைத்து இற்ற* பறைப்புன்

தூவி

செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்
ஆடுகோள் நெஞ்சமொடு அதர்பார்த்து

அல்கும்

அத்தம் இறந்தன ராயினும் நம்துறந்து
அல்கலர் வாழி தோழி உதுக்காண்
இருவிசும்பு அதிர மின்னிக்
கருவி மாமழை கடன்முகந் தனவே.

**உரை:**—தோழீ! வாழ்வாயாக; அளவுபடாத நயமுடையராய் நிரையம்போன்ற தீய நெறியைக் கைக்கொள்ளாதொழுகும் நம் காதலர்,—சுரத்திலே கொன்றுபோகடப்பட்ட மக்களினுடைய கொலையுண்ட பிணங்களில் உள்ள நிறைந்த நீனாற்றத்தையுடைய அவற்றினருகிலே சென்று பறித்துத் தின்ன இயலாது ஈன்ற அணிமையால் நெருங்காது வெறுத்துக் கடந்து போயிருந்த புள்ளிகளையுடைய முதிய பருந்து தன் சிறகை அடித்துக்கொள்ளுதலால் உதிர்ந்த பறத்தலையுடைய புல்லிய இறகைச் சிவந்த அம்பிலேகட்டிய வீரத்தன்மையுடைய மறவர் தாம் வெற்றி கொள்ளுங் கருத்துடனே நெறியைப் பார்த்து உறைகின்ற மலைவழியிலே சென்றனராயினும், நம்மைக் கைவிட்டு அங்கே தங்குபவரல்லர்; அவர் கார்காலத்து வருவேமென்றார் ஆதலின், உவ்விடத்தே பாராய்; கரிய ஆகாயம் அதிரும்படி இடித்து மின்னி இடி மின்னல் முதலாய தொகுதியை உடைய கரியமேகம் கடல் நீரை முகந்துவந்தன; அவர் இன்னே வருகுவர்போலும்; எ - று.

நம்பால் அளவுபடாத அன்புடையராதலின் நினக்கு வருவேமென்று பொய்ச்சூளுரைத்து அதுகாரணமாகப் பின்னரெய்தும் நிரையங்கொள்பவர் அல்லரென்றாள்.

**இறைச்சி:**—(க) ஈன்றபருந்து மக்களிறந்த பிணத்தின் முடை நாற்றம் மிகுதியால் அருகிலே நெருங்கித் தின்னமாட்டாது அகன்றுபோய் இருக்கும் என்றது, நினது நெற்றியிலே தோன்றும் பசலை அவர் நின்பால் வைத்திருக்குங் காதல் மிகுதியால் குறித்தநாளிலே வருதல் மெய்ம்மை ஆதலின் அதுகண்டு தானே யகன்றொழியும் என்றதாம்.

(உ) கணைசெறித்த ஆடவர் வெல்லும் நெஞ்சத்துடன் நெறிநோக்கித் தங்காநிற்பரென்றது, கொடுமையுடைய அயல்மாதர் பலரும் நின்னை அலர்தூற்றுங் கருத்தோடு அற்றம்நோக்கி இருப்பவர் ஆதலின் நின்மெய்யின் வேறுபாடு அறிந்தால் இகழ்ந்து அலர்தூற்றாநிற்பர் என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (கஉக)

(பாடம்) * புடைத்திட்ட.

## ௩௩௦. ஆலங்குடி வங்கனார்

**மருதம்:** இது, தோழி தலைமகனை வாயின்மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்து மீண்டுவந்து தலைவியின் ஊடலைத் தணிக்கும்படி தோழியை வாயில்வேண்ட, அவள் தலைவனைநோக்கி ஊரனே! நீ பரத்தையரை எம்மனையின்கண்ணே கொண்டுவந்து வதுவை அயர்ந்து தழுவியிருந்தாலும் அவரது மனத்தின்கண் உண்மை அரிதாதலையும் அவர் கற்புடைமகளிராய் எம்மோடொத்தல் அரிதாதலையும் நீ அறிந்தாயல்லைபோலுமென்று கூறித் தலைவனியல்பையும் உள்ளுறையாலே கடிந்து கூறுகிற்பது.

தடமருப்பு எருமைப் பிறழ்சுவல் இரும்போத்து
மடநடை நாரைப் பல்இனம் இரிய
நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து
நாள்தொழில் வருத்தம் வீடச் சேட்சினை
௫. இருள்புனை மருதின் இன்னிழல் வதியும்
யாணர் ஊரநின் மாணிழை மகளிரை
எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்
புன்மனத்து உண்மையோ அரிதே

அவரும்

பைந்தொடி மகளிரோடு சிறுவர்ப் பயந்த
௧0. நன்றி சான்ற கற்போடு
எம்பா டாதல் அதனினும் அரிதே.

உரை :—வளைந்த கொம்பையும் வலிமைபெற்று விளக்கிய பிடரியையும் உடைய கரிய எருமைக்கடா இளநடையையுடைய பலவாகிய நாரையின் கூட்டமெல்லாம் இரிந்தோடும்படியாக நெடிய நீர்நிரம்பிய தண்ணென்ற பொய்கையிலே தடுமென்னும் ஒலியுண்டாம்படி தான் காலையிலுழுத தொழிலின் வருத்தம் நீங்குமாறு பாய்ந்துகிடந்து தன்னுடம்பின் அயா நீங்கியபின்னர் நீண்ட கிளைகளையுடைய இருள்நிரம்பிய மருதமரத்தின் இனிய நிழலின்கண்ணே தங்கியிருக்கும் புதுவருவாயினை உடைய ஊரனே! நின்னுடைய மாட்சிமைபொருந்திய கலனணிந்த பரத்தைமகளிரை எமது மனையின்கண் அழைத்துவந்து நீ குலமகளிரைப் போலக் கருதி மணந்து தழுவியிருந்தாலும் அவருடைய புல்லிய மனத்திலே கரவில்லாதபடி மெய்ம்மை தோன்றுதல் அரிதேயாகும்; அவரும் பசியவளையணிந்த புதல்வியரையும் புதல்வரையும் ஈன்று நன்மையமைந்த கற்புடனே எம்பக்கத்து அமர்தலும் அதனினுங்காட்டில் அரிய தொன்றாகும்; அங்ஙனமாதலை நீ அறிந்தாய் அல்லைபோலும்; எ - று.

பரத்தைமகளிரை இல்வயிற்கொணர்ந்து வதுவை அயர்ந்து துய்த்தல் வழக்கு. "பிறரு மொருத்தியை யெம்மனைத் தந்து, வதுவை அயர்ந்தனை" என்றார் (௪௬) அகத்தினும். பொருள்கவரவேண்டிப் பொய்ம்மையாகிய அன்புகாட்டுவராதலின் அவர்மனத்து உண்மையரிதென்றாள். அவர் பெறும் புதல்வியரும் புதல்வரும் நமதுகுலத்துக்குச் சிறிதளவும்
க. நா.—24

௩௭0 நற்றிணை நானூறு

பயனெய்தாரென்பாள், மகளிரொடு சிறுவரையீன்று

எம்பாடாதலரிது என்றாள்.

உள்ளுறை:—எருமைக்கடா தலைவனாகவும், நாரையினம் காமக்கிழத்தியராகவும், கயம் பரத்தையர் சேரியாகவும், மருதநிழல் அன்று பாணன் அதுபோய்க் கூட்டுவித்த புதியபரத்தையின் மனையாகவுங் கொண்டு எருமைக்கடா நாரையினம் இரியப் பொய்கையிலே பாய்ந்து வருத்தம் நீங்கியபின் தான் புகுந்து வைகவேண்டிய தொழுவம்புகுதாது மருதநிழலிலே வதிதல்போல நீ முதலிலே காமக்கிழத்தியர்பாற்கிடந்து பின்னர் அவர் அஞ்சியகல வெறுத்துப் பரத்தையர் சேரியின்கண்ணே தங்கி ஆங்குமுயங்கிக் கவற்சி இன்றிக் கிடந்து அதன்பின்னரேனும் மனையகம்புகுதாது பாணன் புணர்ப்பித்த புதிய பரத்தையின்பால் வைகியிருந்தனை; இங்கு நினக்கு வேண்டிக்கிடந்தது என்னையென்றாள் என்பதாம். மெய்ப்பாடு - வெகுளி. பயன் - வாயின்மறுத்தல். (௩௩௦)

## ௩௩௧. உலோச்சனார்

### நெய்தல்: இது, தோழி இரவுக்குறி நேர்ந்தது.

எ - து, பகற்குறி இடையீடுபட்ட தலைமகன் இரவுக்குறிவந்து கூடுவது கருதினன் தோழியை வினவ, அவள் அவனைநோக்கிச் சேர்ப்பனே! எம்மூர் இனிமையுடையதே; நீ வருதலால் யாதொரு தவறுமில்லை; தம்தம் உறவினர் ஒருவரைஒருவர் இன்னாரின்னாரென் றறியாத சேரியையுடையதாதலின் அயலாராய் வருவாரை யறிவ தெவ்வண்ணமாகுமென்று அவன் வருதற் குடன்படுவாளாய்க் கூறுகிறது.

உவர்விளை உப்பின் உழாஅ உழவர்
ஓகை உமணர் வருபத நோக்கிக்
கான லிட்ட காவற் குப்பைப்
புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி
௫. மடநோக்கு ஆயமோடு உடனுப்பு ஏறி
எந்தை திமிலிது நுந்தை திமிலென

வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்
திண்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப
இனிதே தெய்யஎம் முனிவில் நல்லூர்
இனிவரில் தவறும் இல்லை எனையதூஉம்
பிறர்பிறர் அறிதல் யாவது
தமர்தம் அறியாச் சேரியும் உடைத்தே.

உரை:—ஆங்குப் புலவுநாற்றத்தையுடைய மீனை உப்புப்படுத்துப் புலர்த்தும்பொழுது அவற்றைக் கொண்டுபோகவந்து விழுங் காக்கைமுதலாய புள்ளினங்களையோப்பி மடப்பம்பொருந்திய நோக்கத்தையுடைய தோழியர் உடனே உழாது விளைவிக்கும் நெய்தனில மாக்களாகிய பரதவர் உவர்நிலத்து விளைகின்ற உப்பினைச் செறிவுடைய உப்பு வாணிகர் வரு





கின்ற காலம்நோக்கி கழிக்கரைச் சோலையருகிலே குவடாகக் குவித்த காவலைஉடைய குவியலாகிய அவ்வுப்புக் குவட்டில் பரதவமகளிர் ஏறிநின்று, ‘இங்கு வருகின்றது எந்தையினது மீன்படகாகும்; அங்கு வருகின்றது நின் தந்தையினது மீன்படகாகும்’ என்று வளைந்த கடனீரில் வேட்டைமேற்சென்ற சுற்றத்தாருடைய வலிய மீன்படகுகளை எண்ணுகின்ற தண்ணிய கடற்சேர்ப்பனே! வெறுத்தலைக்கருதாத எம்முடைய நல்லூர் மிக இனிமையுடையதாய் இராநின்றது; இப்பொழுது முதலாக என்றுவந்தாலும் யாதோர் ஊறுபாடுமில்லை; சுற்றத்தார் ஒருவரையொருவர் அறியாத சேரியை உடையதாதலால் எவ்வளவேனும் அயலா ரொருவரையொருவர் அறிவது எவ்வண்ணமியலும்? ஆதலின் நீ அச்சமின்றி வருவாயாக; எ-று.

வளைநீர் - சங்குகளை யுடைய நீருமாம்.

நம்மூர்போன்றதென்பாள், எம்மூர் இனிதேயென்றாள். அன்னை முதலாயினோர் ஐயமின்றி யிருக்கின்றனராதலிற் குறிவயின் தவிராது வருதும் என்பாள், தவறுமில்லையென்றாள். நீ பிறநிலத்தினர்போன்ற கோலத்தொடுவரினும் எமர் அறிபவரல்லரென்பாள், தமர்தம்அறியாச் சேரியது எனறாள.

உள்ளுறை:—மகளிர் புள்ளோப்பி மாலையில் உப்புக் குவட்டின்மீது ஏறிக் கடலிலேவருகின்ற மீன்படகுகளைநோக்கி இஃது எந்தைதிமில் இது நுந்தைதிமிலென எண்ணுந்துறையென்றது, யாங்கள் பகற்பொழுதில் மீனுணங்கலிற் புள்ளோப்பி இரவில் மனையகம் புகுந்திருந்து சோலையிலே நீ வந்து குறிசெய்வதனை நினைந்து இப்புள்ளோசை நீ குறிசெய்தது இவ் வோசை வேற்றுப்புள்வரவெழுந்த ஓசையென நின்வரவை எதிர்பார்த்திருப்போமென்றதாம். **மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இரவுக்குறி** நேர்தல். (௩௩௧)

## ௩௩௨. குன்றூர் கிழார்மகன் கண்ணத்தனார்

### குறிஞ்சி :

(க) இது, பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி களவுக் காலத்து வற்புறுப்பத் தலைவி கூறியது.

எ - து, களவின்வந்தொழுகுந் தலைமகனது பிரிவினால் மெலிந்த தலைமகளைத் தோழி நெருங்கி, நின்னை நாள்தோறும் தலைமகன் வந்து முயங்கி முயங்கி எருங்காலையும் நீ மெலிகின்ற தென்கொலோவென் றாட்கு, இறைமகள் இயற்கைப்புணர்ச்சி வந்ததுபோன்று காதலன் கொடிய நெறியை அஞ்சானாய் நாளும் வருதலால் யான் எவ்வாறு துயரின்றி வைகுவேன் என மெலிந்து கூறுகிற்பது.

(உ) வன்பொறை எதிர்மறுத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

இகுளைத் தோழியிஃது என்னெனப் படுமோ
குவளை குறுநர் நீர்வேட் டாங்கு
நாளும் நாளுடன் கலவவுந் தோளே
தொன்னிலை வழீஇயநின் தொடியெனப் பன்மாண்
உரைத்தல் ஆன்றிசின் நீயே விடர்முகை



ஈன்பிணவு ஒடுக்கிய இருங்கோள் வயப்புலி*
இரைநசைஇப் பரிக்கு மலைமுதற் சிறுநெறி
தலைநாள் அன்ன பேணலன் பலநாள்
ஆரிருள் வருதல் காண்பேற்கு
யாங்கா கும்மே இலங்கிழை செறிப்பே.

உரை :—இகுளையாகிய தோழீ! 'நீரிலிறங்கிநின்று குவளைமலர் கொய்பவர் தாம் நீர்வேட்கையால் வெய்துற்றாற்போல, நின்னுடைய தோள்கள் நாள்தோறும் காதலனுடைய தோள்களை முயங்கிவைகியவழியும் நின் கைவளைகள் முன்பு நிலைத்திருந்த இடத்தினின்றும் கழலாநிற்பன' எனப் பலகாலும் மாட்சிமைப்பட நீதான் உரையாநின்றனை; துறுகல்லை அடுத்த மலைப்பிளப்பிடத்தே குட்டிகளையீன்ற கரிய பெண்புலியுற்ற பசியைப்போக்கவேண்டிப் பெரிய கொலைத்தொழிலை மேற்கொண்ட வலிமை உடைய ஆண்புலி, இரைவேட்கையாலே பதுங்கியிருக்கின்ற தாழ்வரையில் உள்ள சிறிய வழியிலே இயற்கைப்புணர்ச்சிக்காலத்து இருந்தாற்போன்ற விருப்ப மிகுதியுடையனைப் பலநாளும் இயங்குதற்கரிய இருளில்வருதலைக் காண்கின்ற எனக்கு என் வளைமுதலாய கலன்கள் கழலாதவாறுசெறிப்பது எவ்வண்ணமாகும்? இங்ஙனம் என் உடம்பு இளைத்தலின் இனி எப்படியாய் முடியுமோ? எ - று.

இகுளைத்தோழி - இருபெயரொட்டு. பேணலன்-பேணுதலுடையன்.

தலைமகன் வந்து முயங்குந்தோறும் தலைநாளிலே கலந்தாலொத்த புதியபுதிய இன்பம் தானும் நுகர்தலானே இயற்கைப்புணர்ச்சியைக் குறிப்பித்தாள்.

இறைச்சி :—பெண்புலியின் பசியைப் போக்கவேண்டி ஆண்புலி இரைதேடிப் பதுங்கியிருக்கும் நெறியைக் கண்டுவைத்தும் என்கவற்சி நீங்குமாறு காதலன் பொருளீட்டிவந்து மணமுடிக்கக் கருதுகின்றிலனே என்று இரங்கியதாம். மெய்ப்பாடு-அழுகை. பயன் - அயாவுயிர்த்தல்

## ௩௩௩. கள்ளிக்குடிப் பூதம் புல்லனார்

பாலை : இது, பொருள்வயிற் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தது.

ஆற்றுளாகிய

எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரிதலாலே வருந்திய தலைமகளை; தோழி நெருங்கி அவரை நாம் கருதும்போதெல்லாம் சுவரின்கண்ணே பல்லி சொல்லாநின்றதாதலின், அகன்றுபோகிய காதலர் இன்னேவந்த நின்னை முயங்குவர்போலுமென்று தோன்றுகின்றது; நின் துயரப் நீங்குவாய்காணென வலியுறுத்திக் கூறுகிறபது.

மழைதொழில் உலந்து மாவிசும்பு உகந்தேனக்

கழைகவின் அழிந்த கல்லதர்ச் சிறுநெறிப்

பரலவல் ஊறற் சிறுநீர் மருங்கில்

பூநுதல் யானையோடு புலிபொருது

உண்ணுஞ்

(பாடம்) * கேழ்வயப்புலி.

மூலமும் உரையும்

நஎந

ரு. சுரன்இறந்து அரிய என்ஞர் உரனழிந்து

உண்மலி நெஞ்சமொடு

வண்மை வேண்டி

அரும்பொருட்கு அகன்ற காதலர்

முயக்கெதிர்ந்து

திருந்திழைப் பணைத்தோள் பெறுநர்

போலும்

நீங்குக மாதோநின் அவலம் ஓங்குமிசை
கo. உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத்து உள்ளுதோறும்
படுமே.

உரை :—தோழீ ! உயர்ந்தவிடத்தில் உயர்ந்த புகழையுடைய நல்ல வீட்டின்கண்ணே செறிந்த இரவு நடுயாமத்தில் நாம் நம் காதலரை நினைக்குந்தொறும் இனிமையான குரலையுடைய பல்லி ஒள்ளிய சுவரிலே பொருந்திநின்று நன்மையான சொற்களைக் குறிப்பாற் கூறாநின்றது; ஆதலின்,—மேகம் தான் செய்யவேண்டிய பெய்தற்றொழிலை இன்மை ஆக்கிக் கரிய ஆகாயத்திலே சென்றொழிந்ததனால் வெப்பமிக்கு மூங்கில் எல்லாம் வாடி அழகழிந்த மலைவழியின் சிறிய நெறியிலே பருக்கைக் கற்கள் நிரம்பிய பள்ளத்தில் ஊறுகின்ற மிகக் குறைவுபட்ட சிறிய நீரிடத்தில் பொலிவுபெற்ற நெற்றியையுடைய யானையொடு புலி போர்செய்து அந்நீரை உண்ணுகின்ற சுரநெறியிலேசென்று ஈட்டப்படும்பொருள் நமக்கு அரியவாமென்று நினையாமல் உள்ளேமகிழ்ச்சியுற்ற வன்மை மிக்க நெஞ்சுடனே தாம் வண்மை மிக்குடையராயிருத்தலை விரும்பி அரியபொருள் காரணமாக அகன்ற நம் காதலர் நின்னை முயங்குவதை எதிர்நோக்கித் திருத்தமாகிய கலன்களை அணிந்த நின் பருத்ததோளை இன்றுவந்து கூடுவார்போலத் தோன்றாநின்றதுகாண்; இனி நின் அவலம் நீங்குவாயாக ; எ – று.

உகத்தல் – உயரப்போதல். ஓங்குமிசை – உயர்ந்த இடம்.

இறைச்சி : பள்ளத்திலுள்ள நீரை யானையொடு புலி போர்செய்து உண்ணாநிற்குமென்றது, வேற்றுநாட்டிலே பொருளை யெய்தும்படி வேற்றரசரை நின்காதலர் போர்செய்து வென்று பொருள்கொண்டு வருவர்காணென அவனது வென்றிகூறி மகிழ்வித்தாள் என்பதாம். மெய்ப்பாடு – பெருமிதம். பயன் – தலைமகளை ஆற்றுவித்தல். (௩௩௩)

குறிஞ்சி: இது, தோழி இரவுக்குறி முகம்புக்கது.

எ - து, களவின்கணொழுகுந் தலைமகன் பகற்குறி இடையீடுபட்டுத் தோழியைநெருங்கி இரவுக்குறிவேண்டுதலானே அதற்குத் தான் உடன்பட்டுத் தலைமகளை உடன்படுத்துவாளாய் அவளருகிலே அடைதலும் அவள் தோழியை நோக்கியபோது தோழி மலைநாடன் இரவு நடுயாமத்தில் வருகிற்பேன் என்றுரைதலின், அங்ஙனம்வரின் நமது உயிரினிலை எவ்வாறுமோ வென்பாள்போன்று உள்ளுறையால் இறைமகள் உடன்படவேண்டுவதை அறிவுறுத்தவந்தவள் அங்கு ஆயத்தார் பலரும் அருகிருப்பதறிந்து தான் கூறவந்ததனை வெளிப்படையாகக் கூறாது கண்ணாலே புலப்படச் சைகைசெய்து கூறாநிற்பது.

ருஎச நற்றிணை நானூறு

கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை
பெருவரை அடுக்கத்து அருவி ஆடி
ஓங்குகழை ஊசல் தூங்கி வேங்கை
வெற்பணி நறுவீ கற்சுனை உறைப்பக்
ரு. கலையொடு திளைக்கும் வரையக நாடன்
மாரி நின்ற ஆரிருள் நடுநாள்
அருவி அடுக்கத்து ஒருவேல் ஏந்தி
மின்னுவசி விளக்கத்து வருமெனின்
என்னோ தோழிநம் இன்னுயிர் நிலையே.

**உரை :**—தோழீ ! கரிய விரலையும் சிவந்த முகத்தையுமுடைய பெருங் கூட்டமாகிய முசுக்கலைச் சுற்றமாகவுடைய பெண்குரங்கு பெரிய மலைப் பக்கத்து அருவியில் விளையாடி உயர்ந்த மூங்கிலிலேறி அதன் நுனியை ஊசலாகக்கொண்டு ஊசலாடி மலையில் வேங்கையின் அழகிய நறியமலர் அங்குள்ள சுனையிலே மிக உதிர்ந்துவிழும்படி அதன் கிளையிலேறிக் கடுவனொடு புணராநிற்கும் மலையகநாடன் மழைபெய்கின்ற மாந்தர் இயங்குதற்கரிய இருள்நிறைந்த நடுயாமத்தில் அருவியையுடைய மலைப் பக்கத்தின் கண்ணதாகிய நெறியில் ஒப்பற்ற வேற்படையை யேந்தி மழையின் மின்னலானது இருளைப்பிளக்க அம் மின்னல்விளக்கத்தில் வருவதாகக் கருதினனென்றால் அவன் வருநெறியை நினைந்து வருந்து கின்ற நம்முடைய இனிய உயிர், இனி எவ்வாறு நிலைத்திருக்குமோ? அறிகின்றிலேன் ; எ - று.

கலை - ஆண்குரங்கு. வசிதல் - பிளத்தல்.

**உள்ளுறை :**—மந்தி அருவியாடி ஊசலிலேதூங்கி நறுமலர் சுனையில் உதிரும்படி மரத்திலேறிக் கலையொடு புணருமென்றது, நீயும் பகலிலே அருவியாடி ஊசலில் தூங்கி இரவில் நின் காமவேட்கை முற்றுமொழியத் தலைவனொடு முயங்குவாயாக வென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - சைகைசெய்து உடன்படுத்தல். (கூகூச)

## கூகூரு. வெள்ளி வீதியார்

**நெய்தல்:** இது, காமமிக்க கழிபடர்கிளவி மீதூர்ந்து சொல்லியது.

தலைமகள்

எ – து, தலைவன்பால் காமவேட்கை மிக்கதனாலாகிய மிகக் கருதிய சொல்மேம்பட்ட தலைமகள் திங்கள் விளங்குகின்றது; கடல் ஓசை யடங்கியது இல்லை; அன்றிலும் ஒலியாநிற்கும்; யாழும் யான் உய்யாதபடி இசையாநின்றது; அவற்றைக் கேட்டலானே எனக்குண்டாகிய காமமோ பெரியதாய் இராநின்றது; இதனை ஒழிக்கவல்ல காதலர் அருகிலில்லாது ஒழிந்தனர்; இனி யான் எவ்வாறு உய்வேனென அழிந்து கூறுநிற்பது.

திங்களுந் திகழ்வான் ஏர்தரும் இளநீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடோ வாதே
ஒலிசிறந்து ஓதமும் பெயரும் மலிபுனல்

மூலமும் உரையும்

நடன்று

பல்பூங் கானல் முள்ளிலைத் தாழை ரு.
சோறுசோரி குடவயின் கூம்புமுகை அவிழ
வளிபரந்து ஊட்டும் விளிவில் நாற்றமொடு
மையிரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் மென்புறம் நரலும் அன்றி
விரல்கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ் கo.
யாமம் உய்யாமை நின்றது
காமம் பெரிதே களைஞரோ இலரே.

**உரை** :—திங்களும் விளங்கிய விசும்பின்கண்ணே எழுந்து தோன்றா நிற்கும்; மெல்லிய நீர்மையிற்பொங்கி எழுகின்ற அலையையுடைய கடலும் ஒலியடங்கியதில்லை; ஒலி மிகுத்து அக்கடல்நீரும் கரையை மோதிப் பெயர்ந்து செல்லாநிற்கும்; நிறைந்த கழிநீர் சூழ்ந்த பலவாய அழகிய கடற்கரைச் சோலையின்கணுள்ள முள்ளையுடைய இலைமிக்க தாழை சோற்றைச் சொரிகின்ற குடம்போலப் பருத்த உள்ளீட்டினை யுடைய கூம்பிய அரும்பு மலரா நிற்பக் காற்றானது அப் பூமடலினுள்ளே புகுந்து பரவிவந்து வீசுகின்ற கெடாத நறுமணத்துடனே கரிய பெரிய பனைமேலிருந்து துன்பத்தைத் தருவனவாய் வருத்துகின்ற அன்றிற் பறவையும் என் பக்கத்தேவந்து ஒலியாநிற்கும்; இவையேயன்றி விரலாலே தடவிவருந்தி இசைகூட்டிய விருப்பத்தைச்செய்யும் நல்ல யாழும் இரவு நடுயாமத்து யான் உயிர்வைத்து உய்யாவாறு இசையாநின்றது; அவை அனைத்தினுங் காட்டில் யான்கொண்ட காமமோ பெரிதாயிராநின்றது; இதனைப் போக்கவல்ல காதலரோ அருகில் இல்லாது ஒழிந்தகன்று போயினர்; இனி யான் எவ்வாறு உய்குவேன்; எ - று.

முற்கூறிய அவையனைத்துங் காமத்தை மிகுதிப்படச் செய்தலானே காமம்பெரிதேயென்றாள். களைஞர் இன்மையால் உய்வேனலேன் இறந்து படுவது திண்ணமெனக் கருதினளாயிற்று. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௩௫)

## ௩௩௬. கபிலர்

## குறிஞ்சி: இஃது, ஆறுபார்த்துற்றுச் சொல்லியது.

எ - து, இரவிலே கொடிய நெறியின்கண்ணே களவொழுக்கத்து வருந் தலைமகனை மறுத்து வரைவுடன்படுத்தக் கருதிய தோழி நெருங்கி நாடனே! இரவில் நெறியினது ஏதம் அஞ்சாது வாராநின்றனை; அதனை யான் நினையாமுன் அஞ்சுகிற்பேனாதலால் அவ் வரைநெறியில் வாராது ஒழிவாயாக என அந்நெறியினது ஏதங்கூறி உள்ளுறைபால் இவளை வதுவையயர்ந்து மனையறம்படுத்து வாழ்கவெனநுவன்று வரைவுகடாவா நிற்பது.

பிணர்ச்சுவல் பன்றி தோன்முலைப் பிணவொடு
கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்
கல்லதர் அரும்புழை அல்கிக்* கானவன்

(பாடம்) * அரும்புழை யொல்கி.



வில்லில் தந்த வெண்கோட்டு ஏற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட
உரவுச்சின வேழம் உறுபுலி பார்க்கும்
இரவின் அஞ்சாய் அஞ்சுவல் அரவின்
ஈரளைப் புற்றங் காரென முற்றி
இரைதேர் எண்கினம் அகழும்
வரைசேர் சிறுநெறி வாரா தீமே.

உரை :—சிலிர்த்த மயிர்மிக்க பிடரினையுடைய ஆண்பன்றி, தோலாய் வற்றிய கொங்கையையுடைய பெண்பன்றியுடனே சென்று திரண்ட அடித்தண்டுடைய தினைக்கதிரை அளவின்றித் தின்றழித்ததனாலே கானவன் மலைவழியிலுள்ள செல்லுதற்கரிய சிறிய புழையருகிலே பதுங்கி இருந்து வில்லினால் எய்து கொன்றுதந்த வெளிய கோட்டினையுடைய அவ் ஆண் பன்றியை அலங்கரித்த கரியகூந்தலையுடைய அவன்மனைவி அறுத்துத் தன் சுற்றமாகிய குடிகளிருக்கு மிடந்தோறுஞ் சென்று பகுத்துக் கொடாநிற்கும் நெடிய மலைநாடனே! மிக்க வலிய சினமுடைய களிற்றியானை அங்கு வருகின்ற புலியின் வருகையை எதிர்பார்த்து நிற்கும் இரவின்கண்ணே நீ இங்கு வருதலை அஞ்சுகின்றனையல்லை: அதனை நினையாமுன் யான் அஞ்சாநிற்பேன்; ஆதலின், பாம்பு உறைகின்ற ஈரிய புழையையுடைய புற்றை மேகம்போலச் சூழ்ந்துகொண்டு இரையிருப்பதனை யாராய்கின்ற கரடியின் கூட்டம் பறித்து எடாநிற்கும் மலையை அடுத்த சிறியநெறியில் இனி வாராதொழிவாய்காண்; எ – று.

கெண்டுதல் – வெட்டுதல்.

நின்பாற் கழிபேரன்பினே னென்பாள், நீ வருநெறிக்கு அஞ்சுவல் என்றாள். நம்பால் இவ்வளவு அன்புடைமையின் இனி இரவுவரின் இறைமகள் இறந்துபடுவதும் ஆமெனக்கொண்டு இந்நெறியில் வாராதீம் என்றதனாலே பிறிதொன்றுசெய்யக் கடவதின்மையாற் பிற்றைஞான்று வரைவொடு புகுவானாவது.

உள்ளுறை :—தினையைத் தின்ற பன்றியைக் கானவன் கொணர்ந்து கொடுப்ப அவன்மனைவி அதனைவாங்கிப்பகுத்துச் சுற்றத்தார்கள் பலர்க்கும் முறைப்படி கொடுக்குமென்றது, நீ இவளை மணஞ்செய்து கொண்டு இல்லறம் நிகழ்த்தத் தொடங்கி வேற்றுநாட்டுச் சென்று அடங்காதபகைவரை வென்று பொருளீட்டி இவளிடம் அளித்து இவளும், 'தெய்வம், விருந்து, ஒக்கல்' முதலாயினார்க்குக் கொடுக்குமாறு செய்வாயாக வென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுகடாதல்.

## ௩௩௭. பாலைபாடிய பெருங்கடுங்கோ

பாலை :

(க) இது, தோழி தலைமகன் பொருள்வயிற் பிரிதலுற்று னது குறிப்பறிந்து விலக்கியது.

எ - து, தோழி, கற்பியலிலே பொருள்வயிற் பிரிகின்ற தலைமகனது குறிப்பறிந்து தலைவனே! உலகம் படைத்தகால முதலாகப் பொருளீட்டி



வாழ விரும்புவோர் தம்மை அடைக்கலம் புகுந்தாரைப் பாதுகாக்கவேண் டும் என்னும் அறநெறியை மறந்தனரோ? அவர் சிறந்தவரேபோலு மென்று பிறர்மேல் வைத்து அவனது செலவு விலக்குவாளாய் மறுத்துக் கூறுநிற்பது.

(உ) தோழி உலகியல்கூறிப்

பிரிவுணர்த்தியதூஉமாம்.

எ - து, பொருளீட்டுமாறு பிரிபவர் பிரியவேண்டுபவரே; ஆயினும், அடைந்தாரைக் காப்பது மேலான அறமன்றோ? அதனை மறந்தனரல்லர் சான்றோரெனக் கூறுநிற்பதுமாகும். (உரை இரண்டற்கு மொக்கும்.)

உலகம் படைத்த காலைத் தலைவ

மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே
முதிரா வேனில் எதிரிய அதிரல்

பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்

ரு. நறுமோ ரோடமொடு உடனெறிந்து

அடைச்சிய
செப்பிடந்து அன்ன நாற்றந் தொக்குடன்
அணிநிறங் கொண்ட மணிமருள் ஐம்பால்
தளர்நறுங் கதுப்பில் பையென முழங்கும்
அரும்பெறற் பெரும்பயங் கொள்ளாது
பிரிந்துறை மரபின் பொருள்படைத்
தோரே.

உரை :—தலைவனே! முற்றாத இளவேனிற்காலத்தை எதிர்நோக்கிய காட்டுமல்லிகை மலரையும் பருத்த அடியையுடைய பாதிரியின் குறுகிய நுண்ணிய மயிரையுடைய சிறந்த மலரையும் நறிய செங்கருங்காலி மலரையுங் கொய்து ஒருசேர உள்ளேசெறித்திருந்த பூஞ்செப்பைத் திறந்துவைத்தால் போன்ற நறுமணம் ஒருங்கே அமையப்பெற்று அழகிய நல்ல நிறம் பொருந்திய நீலமணிபோன்ற ஐந்துபகுதியாக முடித்தற்குரிய சரிந்து விழுகின்ற வண்டுகள் மெல்ல ஒலித்தலையுடைய நறிய கூந்தலினுடைய அருமையாகப் பெறுகின்ற பெரிய பயனைக்கொள்ளாது பிரிந்துறைகின்ற பகுதியையுடைய பெரிய பொருளீட்டி வாழ்வோர் இவ்வுலகத்தைப் படைத்தகால முதற்கொண்டு அடைந்தாரைப் பாதுகாக்கவேண்டுமென்று அவ்வண்ணமே நிகழ்ந்துவரும் அறநெறியை மறந்துவிட்டனரோ? அங்ஙனம் மறந்த தகுதிப்பாட்டினை உடையோர் சிறந்தோரே யாவார்; எ - று.

நறுமோரோடம் - செங்கருங்காலி. அதிரல் - காட்டுமல்லிகை. வண்டு - அவாய்நிலை. சிறந்திசினோர் - இகழ்ச்சிக்குறிப்பு. முழங்குங் கதுப்பென மாறிக்கூட்டுக; இனிக் கதுப்பின் வண்டுமுழங்கும் பெரும் பயனெனக் கூறிற் பொருள்சிறவாமை யறிக.

அணையிலேமுயங்கிக் கூந்தலிற்கிடந்து துயிலும் பயன் பெரிதாதலானே கதுப்பிற்பெரும்பயனென்றாள். மெய்ப்பாடு - பெருமிதம். பயன்- செலவழுங்குவித்தல். (௩௩௭)



## ௩௩௮. மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரி சாத்தனார்

**நெய்தல் :**

இஃது, ஒருவழித் தணந்தகாலை ஆற்றாத தலைமகள் வன்பொறை எதிர்மொழிந்தது.

*எ - து, களவுக்காலத்துத் தலைமகன் இரவுக்குறிவந்து ஒழுகாநிற்கையில் அலரெழுந்ததுகண்டு அவ் அலர் அடங்குங்காறும் அகன்று வைகுவமெனப் பிரிந்து ஒருசார் சென்றுறையுங்காலைப் பிரிவால் ஆற்றாத தலைமகள் தோழியைநெருங்கி நீ என்னை வருந்தாது பொறையோடிருவென்று புகலாநின்றனை ; மாலைவந்தது ; அவர் தேர் வந்திலதுகண்டாய் ; காமநோய் என்னை நலியாநின்றது ; நாரை பெடையை முயங்கும்படி அழையாநிற்கும் ; இன்னதொருபொழுதில் யான் எங்ஙனம் துயரம்நீங்கி உறைவேன் என்று நொந்து கூறாநிற்பது.*

கடுங்கதிர் ஞாயிறு மலைமறைந் தன்றே
அடும்புகொடி துமிய ஆழி போழ்ந்தவர்
நெடுந்தேர் இன்னொலி இரவுந் தோன்றா
இறப்ப எவ்வம் நலியும் நின்னிலை
நிறுத்தல் வேண்டும் என்றி நிலைப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே மால்கொள
வியலிரும் பரப்பின் இரையெழுந் தருந்துபு
புலவுநாறு சிறுகுடி மன்றத் தோங்கிய
ஆடரைப் பெண்ணைத் தோடுமடல் ஏறிக்
கொடுவாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய
உயிர்செலக் கடைஇப் புணர்துணைப்
பயிர்தல் ஆனா பைதலங் குருகே.

**உரை** :—கடிய கதிரையுடைய ஞாயிறும் மேலைத்திசையிலுள்ள அத்தமனக் குன்றின்கண்ணே மறைந்தொழிந்தது; அடும்பின் கொடிகள் துண்டித்துவிழும்படி தேருருள் ஊர்ந்துவருமாறு அவருடைய நெடிய தேரின் இனியஒலி இரவு இத்துணைப்பொழுதாகியும் தோன்றினபாடில்லை; காமநோய் தன் எல்லையளவையுங் கடந்து தோன்றி என்னை நலியா நின்றது ; இவை போதாமல் இன்னுங் காமமயக்க மீதூருமாறு துன்பத்தைச்செய்யும் நாரையானது அகன்ற கரிய கழிப்பரப்பின்கண்ணே எழுந்து சென்று இரைதேடி யருந்தி அதன்பின் புலவுநாறும் நமது சிறிய குடியிலுள்ள ஊர்ப்பொதுவாகிய அம்பலத்தின்கண் உயர்ந்த காற்றலைசைகின்ற பருத்த அடியையுடைய பனையின் தோடாகிய மடலி லேறியிருந்து வளைந்த வாயையுடையபேடை தன் குடம்பையில் வந்து தன்னோடு புணருமாறு யான் கேட்டு உடனே என்னுயிரை விடுக்கும்வண்ணம் கடிந்து தான் தன்பெடையொடு புணர்ச்சி துணியுமளவும் அதனைக் கூவுதலை நிறுத்தவில்லை; இத்தகைய பொழுதிலே என்னை நெருங்கி, ‘நீ படுந்துயர் ஏதிலார் அறியாதபடி கரந்தொழுகவேண்டும்’ என்று கூறுகின்றனை

## மூலமும் உரையும்

௩௭௮

இந்நோய் இனி யான் உயிர் நிலைத்திருக்கும்வண்ணம் எப்படி என்னைவிட்டு ஒழியுமோ? எ - று.

குருகு அருந்துபு ஏறிக் கடைஇப் பயிர்தலை

அமையாவென்க.

அஃறிணையாகிய குருகும் இரையருந்திக் குடம்பையிலே சென்றிருந்து தான் பெடையை யணையுமளவும் அதனை விளியாநிற்கும், எல்லாம் அறிந்த நம் காதலர் அங்ஙனஞ் செய்வாரல்லர்; யான் எவ்வாறுய்வேன் எனவுமாம். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௩௮)

## ௩௩௧. சீத்தலைச் சாத்தனார்

குறிஞ்சி : இது, சிறைப்புறமாகத் தலைவன்கேட்பச் சொல்லியது.

எ - து, களவின்வழிவந் தொழுகுந் தலைமகன் கரந்து ஒருபால் வந்து தங்கியதை யறிந்த தோழி அவன் உணர்ந்து விரைவிலே வரைந்துகொள்ளுமாறு தலைவியை நெருங்கி அன்னை இவள் இவ்வேறுபாடெய்தியது எதனாலென்றலும் சுனையாடியதனால் உண்டாகிய தென்றேன்; அது மிகை என்று கொண்டு நாளை அதனிலாடின் இன்னும் எவ்வாறாகுமோ என்றனளாதலின், நம் காதலர் பிரிதலால் நாம் வருந்துகின்றோமென்பதை அவள் அறிந்தனள்போலுமென்று சூழ்ந்து கூறாநிற்பது.

தோலாக் காதலர் துறந்துநம் அருளார்
அலர்வது அன்றுகொல் * இதுவென்று நன்றும்
புலரா நெஞ்சமொடு புதுவ கூறி
இருவேம் நீந்தும் பருவரல் வெள்ளம்
அறிந்தனள் போலும் அன்னை சிறந்த
சீர்கெழு வியன்நகர் வருவனள் முயங்கி
நீரலைக் கலைஇய ஈரிதழ்த் தொடையல்
ஒண்ணுதல் பெதும்பை நல்நலம் பெறீஇ

மின்னேர் ஓதி இவளோடும் நாளைப்
பன்மலர் கஞலிய வெறிகமழ் வேலித்
தெண்ணீர் மணிச்சுனை ஆடின்
என்னே மகளிர்தம் பண்பென் றோளே.

உரை :—தோழீ ! அன்னையானவள் சிறந்த அழகு விளங்கிய அகன்ற நமது மாளிகையின் கண்ணே இன்றுவந்தனள் ; அங்ஙனம் வந்தவள் அன்போடு தழுவி மகிழ்ந்து, 'நின்தோழி சூடிய மாலை கலைந்து தோற்றப்பொலிவும் வேறுபட்டிருப்பதன் காரணந்தான் யாதென என்னைவினவ யானும் என்னொடு இவள் இன்று சுனையாடினளாதலின் இவ்வேறுபாடுகளுண்டாயின வென்று கூறினேனாக, அவற்றை வேறாகக்கொண்டு சுனையாடும் பொழுது நீர்மோதி யலைத்தலானே கலைந்துபோகிய குளிர்ச்சியுற்ற மலர் மாலையையும் ஒள்ளிய நுதலையுமுடைய பெதும்பைப் பருவத்தின் நல்ல

(பாடம்) * ஆவது அன்று சொல்.



நலனைப்பெற்றுக் கூந்தலையுடைய மின்னலைப்போன்ற இவளுடனே நாளைப் பொழுதிலே பலவாகிய மலர்விளங்கிய மணங்கமழ்கின்ற மருதவைப்புப் போன்ற தெளிந்தநீரையுடைய அழகிய சுனையிடத்து ஆடினால் மகளிர்மேனியி னிறம் இன்னும் எப்படியாமோவென்று கூறினள்; ஆதலால், 'பகைப் புலத்து வென்றிபெறுவ தொன்றேயன்றித் தோல்வியுறாத நம் காதலர் நம்மைக் கைவிட்டு இனி அருள்செய்பவ ரல்லர் ; அவருடனிகழ்ந்த இக் களவொழுக்கமானது புறத்தார்க்குப் புலனாகி அலர்தூற்றுந் தன்மையை எய்துமன்றே ' என்று பெரிதும் வாட்டமுற்று நம்முள்ளத்துடனே புதியனவாய சிலவற்றைக்கூறி நாம் இருவரும் துன்பவெள்ளத்து நீந்துகின்றதனை அவ்வன்னை அறிந்துகொண்டனள்போலும் ? எ – று.

புலரா – செய்யாவென்னும் உடன்பாட்டு வினையெச்சம். வேலி – மருதவைப்பு ; காவலுமாம்.

புதுவகூறியது அவர் அருளாதகலினும், முன்புள்ள நிகழ்ச்சியாலும் மெய்வேறுபாட்டாலும் அலரெழுமேயென்று நெஞ்சினுள்ளே மந்தணமாக மொழிந்துகொண்டது. இதனை அன்னை கரந்துநின்று கேட்டறிந்து பின்பு மாலைகலைந்து தோற்றமும் வேறுபட்டிருப்பதைக் கண்டு இவள் ஒருகணவனொடு கலந்தனள்போலுமென்று உட்கொண்டு இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்றாட்குச் சுனையாடியதால் ஆயதென்றலும் நாளையும் அச் சுனையினாடினால் இன்னும் வேறுபாடு மற்றொருவிதமு மாகுமென நகைத்துக் கூறினா ளென்பதாயிற்று. இதனால் அன்னை அறிந்தனள்போலு மென்றாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௩௩௯)

## ௩௪௦. நக்கீரர்

**மருதம் :** இது, பரத்தையின் மறுத்தந்த தலைமகனைத் தொந்து சொல்லியது.

தலைமகள்

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்து ஆற்றாமை வாயிலாகப் புகுந்து பள்ளியிடத்தானாகிய தலைமகனை முயங்கல் விருப்பொடு புகுந்த தலைமகள் நெருங்கி உள்ளுறையாலே அவனியல்புகூறி மகிழ்நனே, என்னைக் கைவிட்ட நின்னை முயங்கேன்கண்டாய்; அதனாலே புலந்தேனும் இல்லேன் என நொந்துகூறி அவா மீதூர்தலின் முயங்காநிற்பது.

புல்லேன் மகிழ்ந புலத்தலும் இல்லேன்

கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்

படைமாண் பெருங்குளம் மடைநீர்

விட்டெனக்

காலணைந்து எதிரிய கணைக்கோட்டு

வாளை

அள்ளலங் கழனி உள்வாய் ஓடிப்
பகடுசேறு உதைத்த புள்ளிவெண்

புறத்துச்

செஞ்சால் உழவர் கோற்புடை மதரிப்
பைங்கால் செறுவின் அணைமுதற் புரளும்
வாணன் சிறுகுடி அன்னஎன்
கோல்நேர் எல்வளை நெகிழ்த்த நும்மே.

மூலமும் உரையும்

ரு-அக்

உரை :—மகிழ்நனே! பாகன் கூறு மொழிக்குறிப்பன்றிப் பிறவற்றைக் கற்றறியாத யானையையும் விரைந்துசெல்லுந் தேரினையுமுடைய செழியன் பெயராலே செய்த மாட்சிமைப்பட்ட பெரிய குளத்துநீர் மடைஅடைத் திருந்தது திறந்துகொண் டோடியதனாலே அக் குளத்தினின்றும் புறம் போந்து கால்வாயையடைந்து சென்று திரும்பிய இரண்ட கோட்டினையுடைய வாளைமீன் அக் கால்வாயினின்றும் சேற்றையுடைய வயலினுள்ளாலோடி ஆங்கு உழுதுவருகின்ற எருமைக்கடாவின் காற்சேறுபட்ட புள்ளியுடைய வெளிய மேற்புறத்தோடு, செவ்விய பலபடியாக மறித்து உழுகின்ற உழவர் தம் கைக்கோல்கொண்டு புடைத்தற்கும் அஞ்சாது செருக்குற்று நீர் பொருந்திய சேற்றின்மேல் வரம்படியிலோடி அப்பாற்போக இயலாமையால் அவ்வரம்படியிலே புரளுகின்ற வாணனது காவிரியின் வடபாலுள்ள 'சிறுகுடி' என்னும் ஊர்போன்ற என்னுடைய கோற்றொழில் வலமைந்த அழகிய ஒளிபொருந்திய வளை நெகிழும்படிசெய்த நின்னைப் புல்லவுஞ்செய்யேன்; அதனால் நின்னை வெறுத்தேனுமல்லேன்; அயலாந் தன்மையேனாதலின் என்னைத் தீண்டாதேகொள்; எ - று.

ஏனை ஊர்களினுஞ் சிறந்த சிறுகுடிபோன்ற மகளிரிற்சிறந்த எனது வளையென்க. இதனால் இத்துணைச் சிறப்பு வாய்ந்த காதலியைக் கைவிட்ட கொடுமையுடையை யெனவுங் குறிப்பித்ததாம்.

**உள்ளுறை :**—குளத்தையுடைத்துப் புறப்பட்டுக் கால்வாய்வழியே சென்ற வாளை, கழனியு ளோடிச் சேறு புறந்தீற்றப் பெற்று ஆங்கு உழவர் புடைத்தற்கும் அஞ்சாது செருக்கி வரம்படியிலே சென்று புரளுமென்றது, மனையகத்தைவிட்டுப் புறப்பட்ட நீ பாணன் செலுத்தும் வழியேசென்று ஒரு பரத்தையுட் புகுந்து அதனையறிந்த ஏனையோர் கூறும் பழிமொழியை ஏறட்டுக்கொண்டு அங்குத் தங்கியவழி ஏனைப் பலப்பல பரத்தையரும் நின்னை விரும்பியீர்ப்ப அவர்மாட்டுச் செல்லாது ஒருத்தியில்லத்துக் கிடந்து துயின்றுவந்தனை என்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளிபற்றிய உவகை. **பயன்** - ஊடல்தீர்த்து முயங்கல். (௩௪௦)

## ௩௪௧. மதுரை மருதனிள நாகனார்

**குறிஞ்சி :**

இது, வினைவயிற் பிரிந்து ஆற்றானாகிய தலைமகன் சொல்லியது.

எ - து, பகைமேற்சென்று முனையிடத்துப் பாசறைக்கண் உள்ளானாகிய தலைமகன் அயலிலொரு குன்றின்மேல் ஓராடவனும் அவன் காதலியும் விளையாடுவதனை நோக்கி இம்மடந்தை தன் காதலனொடு சிறிய நொடி பயிற்றி மகிழாநிற்கும்; இங்ஙனம் எம்காதலி ஆற்றி மகிழ இடனின்றி யாம் பாசறையின்கண் இராநின்றேமென்று புலம்பாநிற்பது.

வங்கவரிப் பாறைச் சிறுபாடு முணையின்
செம்பொறி அரக்கின் வட்டுநா வடிக்கும்
விளையாடு இன்னகை அழுங்காப்
பால்மடுத்து

உலையா உலவை ஓச்சிச்சில கிளையாக்
குன்றக் குறவனொடு குறுநொடி பயிற்றும்



துணைநன் குடையள் மடந்தை யாமே

வெம்பகை அருமுனைத் தண்பெயல்
பொழிந்தென
நீர்சார்ங் கரைநாள் மயங்கிக் கூதிரோடு
வேறுபுல வாடை அலைப்பத்
துணையிலேம் தமியேம் பாசறை யேமே.

உரை :—இங்கு ஒருகுன்றின்கண்ணே காணப்படு மடந்தை வெள்ளி போன்ற வரிகளையுடைய கற்பாறையிலே விழும் அருவியாடி அதிற் சிறிது வெறுப்படையிற் சிவந்த புள்ளிகளையுடைய அரக்கினாலாக்கிய வட்டைச் சாடியின்வாயில் வைத்து அதன் நாவினாற் காய்ச்சி வடிக்கப்படுகிற விளையாடும் இனிய மகிழ்ச்சி நீங்கப்பெறாத கள்ளின் தெளிவை (சாராயத்தை)ப் பருகி அதன் மயக்கம் மிகுதியாலே சுழன்றோடிவந்து மரக்கொம்பினை ஒடித்து ஓங்கிக் காட்டிச் சிலவார்த்தையைக் கூறிக் குன்றகத்துள்ள தன் காதலனாகிய குறவனொடு சிறிய கொடிபயிற்றா நின்ற நல்ல துணையுடையளா யிராநின்றனள் ; இங்ஙனம் எம்மோடு எம் காதலி கள்ளின் தெளிவைப் பருகிக் குறுகொடிபயிற்றி மகிழாவாறு யாம் நெருங்குதற்கரிய கொடிய பகைவர்முன்னிலையிலே குளிர்ந்த மழை பெய்தலினால் நீர்மிக்க ஈரிய கான்யாற்றங்கரையில் காட்டாலையிலே கூதிரொடு கலந்து வேற்றுப்புலத்துள்ள வாடைக்காற்றுத் துன்புறுத்த வானே மயங்கி அத் துன்பத்தைப் போக்க வல்ல துணையின்றித்தமியே மாய்ப் பாசறையின்கண் இராநின்றேம் ; எ – று.

வங்கம் - வெள்ளி. நா - நீர்வடியவிடுதற்கு நாக்குப்போலச்செய்து வைத்திருப்பது. பால் - சாராயத்துக்கொருபெயர் ; கள்ளை மரத்துப்பாலெ னக் கூறும் வழக்குண்மையின் அறிக. குறவனொடு கொடிபயிற்றலும் பிறவுங் கணவனைப் பிரிந்தார்க் கின்மையின் ஈண்டுத் தன்காதலியைக் கூறியதல்லாமை தெளிக. மெய்ப்பாடு - அழுகை. பயன் - பாசறைப் புலம்பி ஆறுதல். (௲௬௪)

## ௲௬௫. மோசி கீரனார்

நெய்தல்: (௧) இது, குறைநேர்ந்ததோழி தலைமகளை முகம்புக்க தன் சொற் கேளாது விடலின், இறப்ப ஆற்றாளயினன் என உணர்ந்து ஆற்றாளாய்த் தன்னுள்ளே சொல்லியது.

எ - து, தலைமகனது குறைநீர்க்க உடன்பட்டதோழி தலைவியினருகு சென்று கண்ணாலேகுறிப்பித்துத் தன்வயமாக்கமுயன்றும் அவள் முகங் கொடாமையாலே தன்னுள்ளே அவன் ஆற்றுவானல்லனேயென்று தான் ஆற்றாளாய் இப்பொழுது யான் குறிப்பாற்கூறினுந் தேர்வாளல்லள்; சோலையின்கண்ணே சென்றவழிப் பணிந்து மொழியின் வினவும்போலு மென்று தன்னுள்ளே கூறாநிற்பது.

(உ) தலைமகனுக்குக் குறைநேர்ந்ததோழி தலைமகளை முகம் புக்கவளாய் ஆற்றாது தன்னுள்ளே சொல்லியதாஉ மாம.

## மூலமும் உரையும்

நஅரு

எ - து, முன்கூறியபடி தோழி தலைமகளிடஞ்சென்று அவள்குறிப் பறியாளாய்த் தானே ஆற்றாது சொல்லியதுமாகும். (உரை இரண்டற்கு மொக்கும்.)

மாவென மதித்து மடலூர்ந்து ஆங்கு
மதிலென மதித்து வெண்தேர் ஏறி
என்வாய் நின்மொழி மாட்டேன்
நின்வயின்

சேரி சேரா வருவோர்க் கென்றும்
அருளல் வேண்டும் அன்புடை
யோயெனக்
கண்ணினி தாகக் கோட்டியுந் தேரலள்
யானே எல்வளை யாத்த கானல்
வண்டுண் நறுவீ நுண்ணிதின் வரித்த
சென்னி சேவடி சேர்த்தின்
என்னனெனப் படுமோ என்றலும் உண்டே.

**உரை** :—அன்புடைய தோழீ! 'கானலின்கண் ஒருவர் என்பால்வந்து இரந்துகூறலும் அதனைப் பெறேனாகி என்வாயினால் நீ கூறும்மொழியைச் சென்று தலைவியிடங் கூறுகின்றிலேன்; நின்குறை நீயே சென்றுரை யென்றதனாலே மயங்கிநின்று, குதிரையெனக்கருதிப் பனைமடலேறிவந்தும் இது காவலையுடைய மதிலெனமதித்து வெளிய பேய்த்தேரைச் சென்று நோக்கியும் நீயிருக்கின்ற சேரியைச் சாரவருபவர்க்கு எக்காலத்தும் அருள்செய்யவேண்டுமென்று யான் கண்ணினால் இனிய குறிப்புத் தோன்றத் தலைசாய்த்துக்காட்டியும் ஒளிபொருந்திய வளையையுடைய தலைவி அவற்றை அறிந்துகொண்டனளல்லள்; ஆதலால் யானே வேலி சூழ்ந்த கடற்கரைச்சோலையில் வண்டுகள் உண்ணுகின்ற நறியமலருதிர்ந்து நுண்ணிதாகக் கோலஞ்செய்த அவ்விடத்து எனது தலை அவ்விறைமகளின் சிவந்த அடிகளிலேசேர்த்து வணங்கினால் அத்தலைவர் செயல் இப்பொழுது எப்படியா யிருக்கின்றதோவென்று என்னை வினவலுமுண்டாகும்; அப்பொழுது நிகழ்ந்தவற்றைக் கூறுவேன்; எ - று.

மதிலெனமதித்தல் - மடன்மாமீதேறி மதிலைச் சூழ்போதற்குக் கருதுதல். ஊர்ந்து ஏறிச் சேரா வருவோரென்க. எல்வளை - அன்மொழித்தொகை.

காமங்காழ்கொண்டு அறிவுமயங்கினமையின், மாப்போலுமென மடலைக்கொண்டனரென்றும் மதில்போலுமென வெண்டேரேறினரென்றுங் கூறினள். மயக்கமிகுதலானே வரையும் பாய்வர்கொலாமென்று குறிப்பித்தாளுமாம். **மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-தன்னுளாராய்தல்.** (௩௪௨)

## ௩௪௩. கருவூர் கதப்பிள்ளைச் சாத்தனார்

**பாலை** : *இது தலைமகள் பிரிவிடையாற்றாளாய்ச் சொல்லியது.*

*எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரிந்தான் குறித்தபருவத்து வாராமையால் மாலைக்காலந்தோறுங் காமம் மேலிடுதல்கண்டு வருந்துந் தலைவி தோழியைநெருங்கி நம்மை வருத்துகின்ற இம்மாலையம்பொழுது காதலர் சென்ற நாட்டிலே செல்லுவதில்லையோவென நொந்து கூறாநிற்பது.*



முல்லை தாய கல்லதர்ச் சிறுநெறி
அடையாது இருந்த அங்குடிச் சீறூர்த்
தாதெரு மறுகின் ஆபுறந் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை
புன்கண் அந்திக் கிளைவயிற் செறியப்
படையொடு வந்த பையுள் மாலை

இல்லைகொல் வாழி தோழி நம்துறந்து
அரும்பொருள் கூட்டம் வேண்டிப்
௧௦. பிரிந்துறை காதலர் சென்ற நாட்டே.

உரை :—தோழி! வாழ்வாயாக; முல்லைக்கொடி படர்ந்த மலைவழி ஆகிய சிறிய நெறியைச் சாராது அழகிய குடிகளமைந்த சிறிய ஊரின் கண்ணே மலரின் தாதுக்களே எருவாக உதிர்ந்துடைய தெருவின்கட் செல்லுகின்ற ஆனிரையின் முதுகிலே தீண்டுகின்ற நெடிய வீழ்விடப்பட்ட கடவுள் உறையும் ஆலமரத்திலிருந்து அங்குக் கடவுளுக்குப் படைத்துப் போகட்ட பலிச்சோற்றைத் தின்ற தொக்க விரல்களையுடைய காக்கைகள் எல்லாம் துன்பத்தைத் தருகின்ற மாலையம்பொழுதிலே தம் தம் சுற்றமிருக்கும் இடத்தையடையாநிற்பப் பிரிந்தாரையொறுக்கும் படையுடனே வந்த நோயைச்செய்யும் இம்மாலையானது நம்மைத் துறந்துபோய் ஈட்டுதற்கரிய பொருள்தேடுதலை விரும்பிப் பிரிந்துறையும் நம் காதலர் சென்ற நாட்டின்கண்ணே செல்லுவதில்லையோ? சென்றுவருத்தினல் அவர் இன்னே வந்திருப்பரே; எ - று.

இறைச்சி :—(௧) ஆலத்தின்கீழ்விடப்படும் பலியைத் தின்ற காக்கை சுற்றத்திடத்தே சென்று தங்குமென்றது, என் நலனெல்லாம் உண்ட பசலை நெற்றியிலே நங்காநின்றதென்பதாம்.

(௨) ஆலம்வீழ் ஆவின்புறத்தே வருடுமென்றது, நீ அருகிருந்து ஆற்றித் தைவரலால் இதுகாறும் யானுளேன் என்றதாம்.
மெய்ப்பாடு - அழுகை. பயன் - அயாவுயிர்த்தல். (௩௪௩)

௩௪௪. மதுரை அறுவைவாணிகன்
இளவேட்டனர்

குறிஞ்சி: இது, தோழி சிறைப்புறமாகத் தலைமகன் சொல்லியது.

கேட்பச்

எ – து, களவின்வழிவந் தொழுகுந் தலைமகன் கரந்து ஒருபுறம்வந் துறைவதனை யறிந்த தோழி அவன் கேட்டு விரைய வரைவொடுபுகுமாறு தலைவியை நெருங்கி அன்னை தலைவியை இல்வயிற்செறித்து வெறியெடுக் கத் துணிந்தனளென உள்ளுறையா லுரைத்து அவன்பால் தாம் அன் புடையராய் அவன் இன்றியமையா திருத்தலை மீட்டும் நாம் தினைப்புனங் காவலைக் கருதினமாயின் அவன் அதனையறியாது தன்னூர் சென்று விடுவனோவென வெளிப்படக்கூறி வரைவுகடாவாநிற்பது.

## மூலமும் உரையும்

நடுரு

அணிவரை மருங்கின் ஐதுவளர்ந் திட்ட
மணியேர் தோட்ட மையார் ஏனல்
இரும்பிடித் தடக்கையில் தடைஇய
பெரும்புனம்
ரு.

காவல் கண்ணினம் ஆயின் ஆயிழை
நம்நிலை இடைதெரிந்து உணரான் தன்மலை
ஆரம் நீவிய அணிகிளர் ஆகம்
சாரல் நீளிடைச் சாலவண்டு ஆர்ப்பச்
செல்வன் செல்லுங்கொல் தானே
உயர்வரைப்
பெருங்கல் விடரகஞ் சிலம்ப இரும்புலி
களிறுதொலைத்து உரறுங் கடியிடி
மழைசெத்துச்
செந்தினை உணங்கல் தொகுக்கும்
இன்கல் யாணர்த்தம் உறைவின்
ஊர்க்கே.

**உரை :**—ஆராய்ந்தணிந்த இழையினையுடையாய்! அழகிய மலைப் பக்கத்தில் வியப்புடையதாய் வளர்ந்த நீலமணிபோன்ற தோட்டினையுடைய நிரம்பிய கருமையான தினைக்கதிரெல்லாம் பெரிய பிடியானையின் நெடிய கைபோல வளைந்துடைய பெரிய கொல்லையை நாம் நாளைமுதலாகக் காவல் செய்யக் கருதினேம் ஆயின், நம் காதலன் நம்முடைய நிலைமையை இடையிலே தெரிந்தறியானாய்த் தன் மலையிலுள்ள சந்தனத்தைப் பூசிய அழகு விளங்கிய மார்பில் வண்டுகள் மொய்த்து ஆரவாரிப்ப, உயர்ந்த மூங்கிலை உடைய பெரிய மலையகத்துள்ள பிளப்பிடமெல்லாம் எதிரொலி எடுக்கும் படியாகக் கரிய புலி களிற்றியானையைத் தொலைத்து முழங்கும் பெரிய பூசலைக்கேட்டு இது முகிலின் இடிமுழக்கமாமென்று எண்ணிச் சிவந்த தினை புலருமாறு போகடப்பட்டவற்றைக் கூட்டிக் குவிக்கின்ற இனிய மலையிலுள்ள புதுவருவாயினையுடைய தான் சாரலின்நெடிய வழியிலே தமரோடுறையுந் தன்னூர்க்குச் செல்லுவான்கொல்லோ? எ - று.

தடைஇய - வளைந்த. காவல்கண்ணினம் ஆயினென்றது அவன்பால் அன்புடைமையையும் அவன் இன்றியமையாமையையுங் குறித்துநின்றது.

**உள்ளுறை :**—யானையைப் புலி அடித்து முழங்கிய முழக்கத்தை மேக முழக்கமெனத் திரியவுணர்ந்து புலர்த்திய தினையைக் குவிக்குமென்றது தலைவனை ஊரார் வரவொட்டாதபடி அலரெடுத்ததை அன்னை கட்டினாலுங் கழங்கினாலுந் திரியவுணர்ந்து தினைகாத்திருந்த தலைவியைக் காவலொருவி இல்வயி னெடுத்த வெறிக்களத்துக் கொண்டுபோகாநிற்கு மென்றதாம்.
**மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௩௪௪)

## ௩௪௫. நம்பி குட்டுவனார்

**நெய்தல்:** இது, தெளிவிடைவிலக்கியது.

எ - து, பிரிவிடை யாற்றாத தலைவியைத் தலைமகன் நெருங்கி, 'யான் கடிதிலே வரைந்துகொள்வேன்; அதுகாறும் ஆற்றியிருப்பாயாக' என்று கூறப் புகுதலும் அதனையறிந்த தோழி, துறைவனே! நின்போன்ற சான்றோர் தம்மை யடைந்தார் வாடும்படி நெடுங்காலம் விரும்பாது கைவிடின்,





அடைக்கலம்புகுந்தார் வாழ்வ தெப்படியாகும்? ஆதலின், நீ தெளிவிப்ப தொழிக, இவள்தான் படுந்துன்பம் படுவாளாகவென்று கடிந்து கூறி விலக்காநிற்பது.

கானல் கண்டல் கழன்றுகு பைங்காய்
நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென
உறுகால் தூக்கத் தூங்கி ஆம்பல்

சிறுவெண் காக்கை ஆவித்து அன்ன
வெளிய விரியுந் துறைவ என்றும்
அளிய பெரிய கேண்மை நும்போல்
சால்பெதிர் கொண்ட செம்மை யோருந்
தேறா நெஞ்சங் கையறுபு வாட
நீடின்று விரும்பா ராயின்
வாழ்தல்மற் றெவனோ தேய்கமா
தெளிவே.

உரை:—மிக்க காற்று மோதுதலானே கடற்கரைச் சோலையிலுள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்று விழுகின்ற பசியகாய் நீலநிறத்தையுடைய பெரிய கழியிடத்து உள்ளேசென்று பொருந்தும்படி விழுதலாலே, அது மோதப்பட்டு ஆம்பலின் அரும்பு சாய்ந்து சிறிய வெளிய நீர்க்காக்கை கொட்டாவி விட்டாற் போன்ற வெளியவாய் மலராநிற்கும் துறைவனே! எக்காலத்தும் கருணைசெய்தலையுடைய பெரிய கேண்மையுடைய நும்மைப் போலச் சால்பினை எதிரேற்றுக்கொண்ட செம்மையுடையாரும் தம்மை அடைந்தாரைப் பாதுகாப்பேமென்று அரிய சூள்வைத்து அவர் தெளியாத நெஞ்சுடனே செயலழிந்து வாடும்படி நெடுநாள்காறும் விரும்பாதிருப்பார் ஆயின் அங்ஙனம் தஞ்சமென்று புகுந்தார்தாம் உயிர்வாழ்வ தெவ்வாறோ? நீ இங்கு நயந்து தெளிவிக்குந் தெளிவு முழுவதூஉம் அழிந்தொழிவதாக; இவள்தான் படுகின்ற துன்பமெல்லாம் நுகர்ந்து அழிவாளாக; எ - று.

துறைவ நும்போலென்றது பன்மையொருமைமயக்கம்.

**உள்ளுறை:**—கண்டற்காய் மோதி விழுதலால் மலரும்பருவத்தல்லாத ஆம்பல் வருந்தி விரியுமென்றது ஏதிலாட்டியர் அலர் தூற்றுதலால், இதுகாறும் நாணமுதலாய பண்புமிகுதியால் வாய்திறவாதிருந்த இவள் இப்பொழுது புலம்பாநிற்குமென்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - தலைமகனைக் கடிந்துகூறி வரைவுகடாதல். (௩௪௫)

**௩௪௬.**

# எயினந்தைமகன் இளங்கீரனார்

பாலை: இது, பொருள்வயிற்பிரிந்த தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது.

ஆற்றாயைத் தன்

எ - து, பொருள்வயிற்பிரிந்து இடைச்சுரத்துற்ற தலைமகன் தலைமகளை நினைந்து, காதல்மிகுதலாலே, அது தணியானாய் நெஞ்சமே! நம் காதலியின் தோள்களை இப்பொழுது இங்கு நினைந்து மகிழ்கின்றனை போலும்; அவை இங்கு அடைதலரிய அல்லவோவென்று இகழ்ந்து கூறாநிற்பது.

## மூலமும் உரையும்

௱௮௭

குணகடல் முகந்து குடக்கேர்பு இருளித்
தண்கார் தலைஇய நிலந்தணி காலை
அரசுபகை நுவலும் அருமுனை இயவின்
அழிந்த வேலி அம்குடிச் சீறூர்
ஆளில் மன்றத்து அல்குவளி ஆட்டத்

தாள்வலி யாகிய வன்கண் இருக்கை
இன்றுநக் கனைமன் போலா என்றும்
நிறையுறு மதியின் இலங்கும் பொறையன்
பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவிக் கம.
கடிபதங் கமழுங் கூந்தல்
மடமா அரிவை தடமென் தோளே.

உரை:—நெஞ்சமே! கீழைக்கடலிலே சென்று நீரைமுகந்து மேலைத் திசைக்கண் எழுந்துசென்று, இருண்டு, தண்ணிதாகியமேகம் மழைபெய்து விடப்பட்ட நிலத்தின் வெப்பந் தணிந்தகாலத்து அரசரது பகையால் அழிந்ததென்று சொல்லப்படும் அரிய ஊர்முனையடுத்த நெறியில் வேலியை உடைய குடிகளழிந்த சிறியவூரின்கணுள்ள மக்களில்லாதொழிந்த பொது அம்பலத்தில் நெருங்கிய காற்றுவீச முயற்சிகருதி யுறைகின்ற வீரத் தன்மையுடைய இருக்கையின்கண்ணே இப்பொழுது,—எக்காலத்தும் நிறைவுற்ற திங்கள்போல விளங்குகின்ற பொறையனது பெரிய தண்ணிய கொல்லிமலையிடத்துள்ள சிறிய பசியமலைப்பச்சை சூடுதலால் அதன்மணம் செவ்விதிற் கமழ்கின்ற கூந்தலையுடைய இளைய அழகிய மடந்தையின் உடைய வளைந்தமெல்லிய தோள்களை நீ கருதி மகிழாநின்றனைபோலும்; அத் தோள்கள் இங்கு நீ எய்துதற்கரிய அல்லவோ? எ - று.

வெப்பம் - அவாய்நிலை. அழிந்தகுடி யெனவும், இலங்கும் அரிவை யெனவுங் கூட்டுக. மன் - கழிவு. நக்கனைபோல் ஆகாவெனக் கொள்க. இன்று நக்கனையென்றது, நீ புறம்போதருமுன்னே கருதியுளையேல் ஆண்டே தங்கிவிடலாமன்றோ; அங்ஙனமின்றி இன்று கருதி மகிழ்ந்ததில் யாதுபயனென் றிகழ்ந்தானென்பது. மெய்ப்பாடு-பிறன்கண்தோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். பயன் - இடைச்சுரத் தழுங்கல். (கஉசகூ)

# கஉசஎ. பெருங்குன்றூர் கிழார்

குறிஞ்சி:

இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றுளாகிய தலைமகளைத் தோழி வற்புறுக்க மறுத்தது.

எ - து, மணஞ்செய்துகொள்ளாது நெடுங்காலம் தலைமகன் களவின் வழிவந்தொழுகுதலினாலே, அதுபொழுது வருந்திய தலைமகளை நீ வருந்தாது பொறையோடிருவென்று தோழி வலியுறுத்திக்கூறலும், அதுகேட்ட தலைவி என்னுடம்பின்கண்ணதாகிய நலமானது தலைவன்பாலேகி மீண்டு வந்த பரிசிலர்கூறுஞ் சிறந்த மொழிகளைக் கண்டு கேட்டு மகிழுமளவும் என்னை உயிரோடு விடுமோவென அழிந்து கூறுவிப்பது.

௩௮அ நற்றிணை நானூறு

முழங்குகடல் முகந்த கமஞ்சூல்

மாமழை

மாதிரம் நனந்தலை புதையப் பாஅய்
ஓங்குவரை மிளிர வாட்டிப் பாம்பெறிபு
வான்புகு தலைய குன்றம் முற்றி

௫.

அழிதுளி தலைஇய பொழுதில் புலையன்
பேழ்வாய்த் தண்ணுமை இடந்தோட்டு அன்ன
அருவி இழிதரும் பெருவரை நாடன்
இன்ன நிலையன் பேரன் பினன்எனப்
பன்மாண் கூறும் பரிசிலர் நெடுமொழி

கo. வேனில் தேரையின் அளிய
காண விடுமோ தோழியென் நலனே.

**உரை** :—தோழீ! வேனிற்காலத்து நுணலை மணலுள் முழுகி மறைந்து கிடப்பதுபோல, என் உடம்பினுள்ளே பொதிந்து கரந்துறையும் என் நலனனைத்து என்னை ஒறுத்துக் கொன்றொழிவதல்லது, முழங்குகின்ற கடலில் விழுந்து நீர்பருகியதனாலாகிய நிறைந்த சூலையுடைய கரியமேகம் திசைகளின் அகன்ற இடமெல்லாம் மறையும்படிபரவி உயர்ந்த கொடுமுடிகள் புரண்டுவிழுமாறு செய்து முழங்கிய இடியினாலே பாம்புகளை மோதி விசும்பிலுயர்ந்த முடியையுடைய குன்றுகளை ஒருங்கே சூழ்ந்து சிதைந்த மழையின் துளிகளை யாண்டும் பெய்தொழிந்தபொழுது, புலையனது அகன்ற வாயையுடைய தண்ணுமையின் கண்ணில் மோதுதலா லெழுகின்ற ஒலிபோன்ற ஓசையுடனே அருவிநீர் கீழிறங்கியோடும் பெரிய மலைநாடனானவன், 'இன்னதொரு நிலைமையுடையன்; பெரிய அன்புடையவன்' என்று பலவாய அவனுடைய மாண்புகளெல்லாங் கூறும் பரிசிலர் உடைய நெடிய சிறந்த மொழிகளை யான் காணவும் கேட்கவும், அங்ஙனம் கண்டுகேட்டுக் களிக்குமளவும் என்னை உயிரோடுவிடுமோ? அவை இரங்கத்தக்கன; எ - று.

மிளிர்தல் - புரளுதல். நெடுமொழி - மீக்கூற்று. நலன் - நிறத்துக்குப் பெயராகவுங் கொள்ளப்படுதலின் இங்கு வேறுநிறமுற்ற பசலையெனவுமாம். இது, பசலைபாய்தல்.

**இறைச்சி** :—மலையிலே மழைபெய்தவுடன் தண்ணுமை அடிக்கின்ற ஒலிபோல அருவி இழியுமென்றது, தலைமகன் வந்துபோனவுடன் பறை அறைந்ததுபோல எங்கும் அலரெழாநின்றது என்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (ருசஎ)

## ௩௪அ. வெள்ளிவீதியார்

**நெய்தல்:** இது, வேட்கைபெருகத் தாங்கலளாய்
கின்றாள் சொல்லியது.

ஆற்றுமைமீதூர்

ஏ - து, தலைவன்பால் அவா மிகுதலானே அது தாங்காத தலைவி நிலவுபரந்தது, ஊர் திருவிழா அயர்கின்றது, கானம் வண்டொலிசெய்யா

மூலமும் உரையும் ௩அ௯

நின்றன; இவ்விரவில் யான் கண்ணுறங்கிலேனே; அதனால் என்னொடு இவ்வுலகு போர்செய்யுமோ? அன்றேல் இவ்வுலகொடு என் நெஞ்சு போர்செய்யுமோ? ஒன்றுந் தோன்றவில்லையே என்று புலம்பா நிற்பது.

நிலவே, நீல்நிற விசும்பில் பல்கதிர்
பரப்பிப்
பான்மலி கடலில் பரந்துபட் டன்றே

ஊரே, ஒலிவருஞ் சும்மையொடு
மலிதோகுபு ஈண்டிக்
கலிகெழு மறுகின் விழவய ரும்மே
கானே, பூமலர் கஞலிய பொழிலகந்
தோறும்
தாம்அமர் துணையொடு வண்டிமி ரும்மே
யானே, புனைஇழை ஞெகிழ்த்த
புலம்புகொள் அவல
கனையிருங் கங்குலுங் கண்படை இலனே
[மோடு
அதனால், என்னொடு பொருங்கொல்இவ்
உலகம்
உலகமோடு பொருங்கொல்என் அவலமுறு
நெஞ்சே.

**உரை** :—நிலவோவெனில், நீலநிறமுடைய ஆகாயத்திலே பலவாய கதிர்களைப் பரப்பிப் பால்நிரம்பிய கடல்போலப் பரந்துபட்ட தன்மையதாய் இராநின்றது; இந்நிலாநாளில் இவ்வூரோவெனில், தழைந்துவரும் பேர் ஒலியுடனே நிறைந்து ஒருசேரக்கூடி ஓசைமிக்க தெருவெங்குந் திருவிழாக் கொண்டாடுந் தன்மையதா யிராநின்றது; காடோவெனில், மலர்ந்த பூவிளங்கிய சோலையி னிடங்கள்தோறும் தாம்தாம் விரும்பியொழுகும் பெண்வண்டுடனே ஆண்வண்டுகள் ஒலிசெய்யாநின்றன; இன்னதொருபொழுதிலே யானொருத்தியே அணிந்த கலன்களை நெகிழவிடுத்த தனிமையுடனே கொண்ட வருத்தத்தொடு மிக்க நீடிய கங்குல்முழுவதும் கண்கள்துயின்றிலேன்; ஆதலின், இங்ஙனம் எல்லார் செயலுக்கும் மாறுபாடாக யானிருத்தலால், இவ்வுலகம் என்னொடு போர்செய்து என்னை ஒழியப்பண்ணுமோ? அன்றி யாதொரு பயனுமில்லாத எனது நெஞ்சம் தன்செயலுக்கு மாறுபாடா யிராநின்றது இவ்வுலகமென்று உலகத்தொடு போர்செய்யஎழுமோ? ஒன்றுந் தோன்றவில்லையே! எ - று.

யானே, ஏ - பிரிநிலை. நிலனே, ஊரே, கானே, ஏ - வினா. கான் வண்டு இமிருமென்றது, இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின் மேல் ஏற்றிக் கூறப்பட்டது.

நிலவின் குளிர்ந்த கதிர் மேலேபடுதலும் காமவேட்கை மீதூர்தலின் நிலாவை முதலிலேகூறினாள். விழாக்கண்டு மகிழ்தல் கூடினார்க்கன்றிப் பிரிந்தார்க் கின்பஞ்செய்யாமையின், ஏனையோர் மகிழ்வதற்கும் தான்வருந்துவதற்குங் காரணமாகிய திருவிழாவை உடன்கூறினாள். உண்பார் முன் நிலையிலே பசியால் நொந்திருந்தார் நெஞ்சம் புண்ணாகி அழியுமன்றே! அவ்வண்ணம் துணையோடு வண்டு இமிர்தலை நோக்கவும் காமங் கனற்றலானே வருந்திக் கண்படை கொள்ளாமை கூறினாள். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௪௮)

## ௩௪௯. மிளை கிழான் நல்வேட்டனார்

**நெய்தல்:** இது, தலைமகன் தோழிகேட்பத்
லியது.

தன்னுள்ளே சொல்

எ - து, களவொழுக்கத்துப் பாங்கி மதியுடன்பாட்டின்கண் முன்னுறன் முதலாகிய மூவகையானும் தோழி மதியுடன்படுக்கின்றாள்: இவன் ஒரு குறையுடையான்போலும் அக்குறையும் இவள்கண்ணதேயென ஆராயுங்காலே அதுகாறும்பொருளாய் அவள் அறிந்து தன் குறையை விரைவிலே முடிக்குமாறு யாம் கொய்தும் தூக்கியும் குற்றும் நாள்தோறும் இவ்வண்ணம் குற்றேவன்மாக்கள் போலா யிருப்பவும் பின்நிற்றலை வெறாத நம்பால் பரதவர்மகள் எவ்வாறு கருதியிருக்குமோ என்று நொந்து கூறாநிற்பது.

கடுந்தேர் ஏறியுங் காலில் சென்றும்
கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்
கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு
வைகலும் இனையம் ஆகவுஞ் செய்தார்ப்
பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை
ஒளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருத

பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போலப்
பின்நிலை முனியா நம்வயின்
என்னென நினையுங்கொல் பரதவர்
மகளே.

உரை :—விரைந்த செலவினையுடைய தேரிலேறிச் சென்றும், பின்பு காலால் நடந்துசென்றும், இவளுக்கு ஏவல்செய்தொழுகுபவனாகி வளைந்த கழியருகினுள்ள அடும்பின்மலரைப் பறித்தும், தாழம்பூவைப் பறிக்குமாறு இவளைத் தாக்கினின்றும், தழையுடை புனையவேண்டி நெய்தலந்தளிரையும் கூட அதன்மலரையுங் கொய்துகொடுத்தும், நாம் காதலியை முயங்கினும் போலக் கருதியஉள்ளத்துடனே நாள்தோறும் இத்தன்மையேமாய் இராநிற்பவும் புனைந்த மாலையணிந்த பசிய பூணையுடைய அரசர்கள் போரிலே மடிந்த பாசறையின்கண்ணே விளங்குகின்ற படைக்கடலிலே களிற்று யானை படுமாறு போர்செய்தலானுகிய பெரிய புண்ணுற்றுக் கிடந்தாரை வேறு காப்போரின்மையால் அவருடைய உயிர்போமளவும் ஓரியும், பாறும், நரியும் கடித்து அவர் தசையைக் கொள்ளுமேயென்று இரக்கமுற்றுப் பேய் தானேகாத்து நின்றாற்போல இத்தோழியின் பின்னின்று இவன் ஆராயுமளவும் வெறுப்படையாது திரிகின்ற நம்மிடத்து நம் காதலியாகிய பரதவர்மகள் எவ்வண்ணம் மாறுபாடாகக் கருதியிருக்கின்றனளோ ? எ - று.

புண்பட்டாரைக் காப்போரின்மையின் அவருயிர்போமளவும் பேய் அருகிருந்து காப்பதுபோல இவள் ஆராய்ந்து கூறுங்காறும் பின்னே திரிந்து காத்துநின்றேனென்க. இது பேய்க்காஞ்சித்துறை, "ஏமச் சுற்ற மின்றிப் புண்ணோன், பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்" (தொல் - பொ - சூ. எஅ,) என்பதனுனறிக.

தன் செல்வமிகுதி அறிவுறுத்துவான் தேரிலேறிப் போந்தமை கூறினான். தான்வந்தது ஆங்குப் புறத்தார்க்குப் புலனாகாதென்பதை அறிவுறுத்துவான் காலினால் நடந்து போந்தமையாற் கூறினான். தனதுதேரை நிலவு மணற் கானயாற்றின் நிற்கப்பணித்து வந்தனனென்றவாறு. மலர்கொய்தல் முதலாயினவற்றால் தன்பெருமைக்கு எலாச் சிறுதொழிலாகிய தன் பணிவுடைமைகூறினான். தலைவி தன்நிமித்தம் இவள்பால் எம்பெருமான் இனி வந்தொழுகுவன் போலுமென்று கருதுவள்கொலென்பான் என என நினையுங்கொல் என்றான். **மெய்ப்பாடு** - தன்கண்தோன்றிய பிணிபற்றிய இளிவரல். **பயன்** - தோழி கேட்டுக் குறைமுடிப்பாளாவது.

## ௩௫௦. பரணர்

**மருதம்:** இது, தலைமகள் ஊடல்மறுத்தாள் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்து வந்து ஆற்றாமை வாயிலாகப் புகுந்து பள்ளியிடத்தானாகிய தலைமகனைத் தலைமகள் நெருங்கி ஊடல்தீர்கின்றாள், ஊரனே! எனது நலன்முழுவதுந் தொலையினும், என்னை நீ நெருங்க விடேன்; நெருங்கவிடுவேனாயின் என்வரைத்தன்றி என்கை நின்னை அணைத்து முயங்காநிற்கும்; சாந்த முதலாயின உடையையாதலின் நின்னை நீக்குவது கலங்கழிப்பதுபோலாம்: அதனால் இங்கு வாராதேகொள்; நின்னொடு அப்பரத்தை நீடுவாழ்வாளாக என வெகுண்டு கூறுநிற்பது.

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிருந்
தேர்வண் விராஅன் இருப்பை
அன்னஎன்
௫. தொல்கவின் தொலையினுந் தொலைக சார

விடேஎன் விடுக்குவென் ஆயின் கடைஇக்
கவவுக்கை தாங்கும் மதுகையம் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆகில் கலங்கழீஇ அற்றும்
௧௦. வாரல் வாழிய கவைஇநின் றோளே.

உரை :—வெள்ளிய நெற்கதிரை அறுக்கும் மள்ளர் முழக்குகின்ற தண்ணுமைக்கு அஞ்சி, வயலிலுள்ள பலவாகிய புள்ளினமெல்லாம் இரிந்தோடிச் செறிதலால் வயலின்மீது தாழ்ந்து வளைந்த கிளையையுடைய மருதமரத்தே தூங்குகின்ற பூங்கொத்துக்க ளுதிராநிற்கும்; இரவலர்க்குத் தேர்கொடுக்கும் வண்மையையுடைய 'விரான்' என்னுங் கொடைவள்ளலின் 'இருப்பையூர்' போன்ற எனது பழைய அழகெல்லாங் கெடுவதாயினுங் கெடுக, என்னருகில் நீ நெருங்குமாறு விடுவேனல்லேன்: அங்ஙனம் விடுகிற்பேனாயின், என்வாயினால் நின்னை விலக்கப்பட்டும் என் அகத்திடு கைகள் நின்னைவல்லே அணைத்து முயங்காநிற்கும்: நீதானும் வலிமை உடைய குவிந்த பரத்தையின் கொங்கையினாலே சாடப்பட்ட சந்தனத்தை யுடையை; அவள்குழைய முயங்கலாலே துவண்டு வாடிய மாலையை யுடையை; ஆதலால் நின்னைத் தீண்டுதல் கலங்கழித்தெறிந்த தாழிமுதலிய



வற்றைத் தீண்டிய அத்தன்மையதாகும்; அதனால் என் மனையின்கண்ணே வாராதேகொள்; நின்னை அணைத்துமுயங்கும் அப்பரத்தை நின்னொடு நெடுங்காலம் வாழ்வாளாக; எ - று.

கடைஇ - விலக்கி; இதனை விலக்கவெனத்திரிக்க.

அவன்பால் வைத்திருந்த அன்பின்மிகுதியை அறிவுறுத்துவாள் காண்டலும் கைகள் நின்னை அணைத்து முயங்குமென்றாள்.

**உள்ளுறை** :—மள்ளர் தண்ணுமைக்கு அஞ்சிப் புள்ளினம் இரிந்தோடி மருதிற் செறிதலானே அம் மருதங்கிளை அசைந்து பூங்கொத்துக்கள் உதிரா நிற்குமென்றது, என்பால் உனக்கு அன்பின்றி எதிலார் கூறும் பழிமொழியை அஞ்சி நீ இங்கு வருதலால் என்னுள்ளம் நின்னை வெறுத் தொழியாநிற்கும் என்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - ஊடல் நீங்குதல். (கூ௯0)

## கூ௹க. மதுரைக் கண்ணத்தனார்

**குறிஞ்சி :** இது, தோழி அருகடுத்தது.

எ - து, களவின் வழிவந் தொழுகுந் தலைமகன் இடையீடு முதலாய காரணங்களாலே சிலபொழுது வாரா தொழிதலும், தலைமகளின் மேனி மெலிந்து வாடியதறிந்த அன்னை அது முருகணங்குபோலுமென்று வேறாக உணர்ந்து வெறி அயருமாறு தொடங்கினளாக, அதுகண்ட தோழி அருகு சென்று அன்னையை, நீ வெறியயர்ந்து வருந்தாதேகொள் ; என் தோழியை இன்னு மொருகால் நமது புனங் காவ லோம்புமாறு செல்ல மொழிகுவை யேல், அவள் இழந்தநலனை யெய்துவள்காணென ஆய்ந்து கூறாநிற்பது.

இளமை தீர்ந்தன இவளென வளமனை
அருங்கடிப் படுத்தனை யாயினுஞ்
சிறந்திவள்
பசந்தனள் என்பது உணராய் பன்னாள்
எவ்வ நெஞ்சமோடு தெய்வம் பேணி
௫. வருந்தல் வாழிவேண்டு அன்னை
கருந்தாள்

வேங்கைஅம் குவட்டிடைச் சாந்தில் செய்த
களிற்றுத்துப்பு அஞ்சாப் புலியதள் இதணத்துச்
சிறுதினை வியன்புனங் காப்பின்
பெறுகுவள் மன்னோஎன் தோழிதன்
நலனே.

**உரை** :—அன்னாய் வாழ்வாயாக; யான் கூறுகின்ற இதனைக் கேட்பாயாக; இவள் பெதும்பைப்பருவம் நீங்கப்பெற்றவளென்று வளம்பொருந்திய மாளிகையிலே பெயர்ந்து போதற்கரிய காவலினுள் படுத்தினையாயினும் சிறந்த இவள் பசப்படைந்தனள் என்பதை உணர்ந்தனையல்லையாய்ப் பலநாளும் துன்பம்பொருந்திய நெஞ்சத்துடனே முருகவேளை விரும்பி இல்லகத்தழைத்து வெறிக்களந்திருத்தி வெறியெடுத்து வருந்தாதேகொள்; கரிய அடியையுடைய வேங்கைமரங்கள் நிரம்பிய சிறிய குன்றினிடத்திலே சந்தனமரத்தால்செய்த களிற்றியானையின் வலிமைக் கஞ்சாத புலித்தோலால்



வேய்ந்த கட்டுப்பரணிடத்திலே தங்கியிருந்து சிறிய தினைப்புனத்தை மறுபடியுஞ் சென்று பாதுகாத்து இருப்பாளாயின், என் தோழி தன் அழகை மீட்டும் பெறுகிற்பள்; அது வீணே கழிகின்றது; எ - று.

புலித்தோலால் வேய்ந்த இதணாதலின், யானை கறுவுகொண்டு மோதினும் சிதைவுபடாத பரணென்பது; அனைய பரணிலிருப்பேமாதலின் யாங்களும் இவ் வேலன் எடுக்கும் வெறியாட்டினுக்கு அஞ்சேமென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வெறிவிலக்கல். (நடுக)

## கூடுஉ. மதுரைப் பள்ளிமருதங்கிழார் மகனார் சொகுத்தனார்

**பாலை :**

இது, பொருள்வயிற் பிரிந்ததலைமகன் இடைச்சுரத்துக்கண் ஆற்றானாய்த் தன்னுள்ளே சொல்லியது.

எ - து, அங்ஙனம் சுரநெறி செல்கின்ற தலைமகன் தன் காதலியை நினைத்துக் கண்களை மூடியிருந்து விழித்தலும், தலைவியின் உருவம் தோன்றலால், வியந்து, இஃதென்னை நாம் செல்லவும் அரிய இந்நெறியில் இவ்விளமடந்தை எவ்வாறு வந்தனள்கொல்லோ; இவள் இரங்கத்தக்காளாயினளே என்று மருண்டு கூறாநிற்பது.

இலைமாண் பகழிச் சிலைமாண் இரீஇய
அன்பில் ஆடவர் அலைத்தலின் பலருடன்
வம்பலர் தொலைந்த அருஞ்சுரக் கவலை
அழல்போல் செவிய சேவல் ஆட்டி
நிழலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து உற்றுத்
தேர்திகழ் வறும்புலந் துழைஇ நீர்நயந்து
பதுக்கை நீழல் ஒதுக்கிடம் பெறாஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய
நமக்கும் அரிய வாயின அமைத்தோள்
மாண்புடைக் குறுமகள் நீங்கி

யாங்குவந் தனள்கொல் அளியள் தானே.

**உரை** :—இலைவடிவாகிய மாட்சிமைப்பட்ட அம்பை வில்லிலே மாண்புபட இருத்திய உயிர்களிடத்து அன்பில்லாத மறவர் கொன்றலைத்தலாலே, அயல்நாட்டினர் பலரும் அவ்விடத்தில் இறந்துகிடந்த செல்லுதற்கு அரிய சுரத்திலுள்ள கவர்த்த நெறியில் அங்ஙனங்கிடந்த பிணங்களை அழல்போலுகின்ற சிவந்த செவியையுடைய கழுகின்சேவல் தின்னு வாறு அதனை வெருட்டி அலைத்துத் தன் நிழலைப்பார்த்து மகிழ்ந்து விளையாடுகின்ற ஊனைத் தின்னுதலில் விருப்பமிக்க முதியநரி பசிய தசையை நிரம்பத் தின்று வாய்வறந்து நீர்பருக விரும்பிப் பேய்த்தேர் விளங்குகின்ற நீரற்ற வறும்புலத்தை நீருள்ள இடமென்று சென்று அலைந்து, ஆங்குக் கிடைக்காமையாலே, வருந்திக் கற்குவியலின் நிழலிலே



தான் வெயிலுக்கு ஒதுங்கி யிருக்கவும் இடம்பெறாது வருந்துகின்ற அஞ்சத்தக்க பலவாய வழி வருந்திய நமக்குங்கடத்தற்கு அரியவாயின; இத்தன்மைய வாகிய வழியில் மூங்கில்போன்ற தோளையுடைய மாட்சிமைப்பட்ட இளமடந்தையாகிய நம் காதலி தானிருக்கும் மாளிகையின் நின்று நீங்கி எவ்வாறு வந்தனளோ? இவள் இரங்கத்தக்காள்காண்; எ - று.

போல்செவி - வினைத்தொகை.
விளையாடுதல். கொள்ளை - மிகுதி.

ஆட்டுதல் - அலைத்தல். கதித்தல் -

இறைச்சி :—ஆறலைப்போர் கொன்றெழுந்த பிணங்களைக் கழுகு தின்றதபடி அலைந்தோப்பிக் கதிக்கின்ற நரி, தானே தின்று உண்ண நீர் பெறாது, ஒதுங்க நிழலின்றி வருந்துங் கானமென்றது, ஊழ்வினையினாலே தரப்பட்ட என் காதலியைப் பசலை தோன்றாதபடி மகிழ்ச்சியுற்ற யான் நுகர்ந்து ஈதல் முதலாயவற்றுக்கு உரிய பொருள்பெறாது எய்தும் இடனுந்தெரிதலின்றி வருந்தாநின்றேன் என்றதாம். **மெய்ப்பாடு** – மருட்கை. **பயன்** – இடைச்சுரத்தழுங்கல். (நடுஉ)

## நடுநு. கபிலர்

**குறிஞ்சி:** இது, தோழி ஆற்றதருமையஞ்சித் தான் சொல்லியது.

ஆற்றளாய்ச்

எ – து, களவின் வழிவந் தொழுகுந் தலைமகன் இரவின்கண் வருதலை அறிந்த தோழி நெருங்கி மலைநாடனே! இரவின்கண்ணே கொடிய நெறியில் வருதலால் நீ சால்புடையை அல்லையென வெகுண்டுகூறி, உள்ளுறையால் மணஞ்செய்துகொள்ள வருவாயாகவெனவும், அங்ஙனம் வருவையேயல் எமர் எதிர்கொண்டு மகட்கொடை நேர்வரெனவுந் தெளியக் கூறுநிற்பது.

ஆளில் பெண்டிர் தாளில் செய்த
நுணங்குநுண் பனுவல் போலக்
கணங்கொள

ஆடுமழை தவழுங் கோடுயர் நெடுவரை
முடமுதிர் பலவின் குடமருள்

பெரும்பழங்

கல்லுழ குறவர் காதல் மடமகள்
கருவிரன் மந்திக்கு வருவிருந்து அயரும்
வான்தோய் வெற்ப சான்றோய்

அல்லலெம்

காமங் கனிவது ஆயினும் யாமத்து
இரும்புலி தொலைத்த பெருங்கை யானை
வெஞ்சின உருமின் உரறும்
அஞ்சுவரு சிறுநெறி வருத லானே.

உரை:—நேட்டத்திற் குரிய காதலனில்லாத தாபதமகளிர் தாம் தேடி உண்ணுமாறு முயன்று நூற்கின்ற நுணங்கிய நுண்ணிய பஞ்சுபோலக் கூட்டமாகக் காற்றுலலைப்படு மேகந் தவழ்கின்ற கொடுமுடிகள் உயர்ந்த

நெடிய மலையிடத்து முடப்பட்டு முதிர்ந்த பலாமரத்திலுள்ள குடம்போன்ற பெரிய பழத்தின் சுளையை மலைச்சாரலில் உழுதுண்டுவாழுங் குறவர் தாம் அன்போடு பெற்று வளர்த்து வருகின்ற இளமகள், கரிய விரலையுடைய மந்தியை வருவிருந்தாக ஏற்றுக்கொண்டு கொடுத்து ஓம்பாநிற்கும் விசும்பில் நீண்ட மலைநாடனே! எம்பால் நீ காமம் மிகுதியாகக் கொண்டு இருப்பினும் இரவு நடுயாமத்துக் கரிய புலியைக் கொன்ற பெரிய கையை உடைய யானை கொடிய சினத்தையுடைய இடிபோல முழங்காநிற்கும் யாவரும் அஞ்சுகின்ற சிறிய கொடிய வழியின் வருதலானே நீ சால்புடையையல்லை; ஆதலின், இங்ஙனம் நீ வருதலை நீக்கி வேறு தக்க தொன்றனைச் செய்வாயாக; எ - று.

ஆளில் பெண்டிர் - பொருள் தேடிவந்து பாதுகாக்குங் கணவனை இழந்த கைம்மை மகளிர். பனுவல் - பறித்தபஞ்சு. "பருத்திப் பெண்டின் பனுவ லன்ன" என்றார் (கஉரு) புறத்தினும். முடமுதிர்பலா - இளமகள் கீழ்நின்றபடியே பறித்தற்குரியது.

**உள்ளுறை:**—குறவர்மடமகள் பலவின்பழத்துச் சுளையை மந்தியை விருந்தாகக் கொண்டு ஓம்புமென்றது, நீ மணஞ்செய்துகொள்ள வரின் எஞ்சுற்றத்தார் நின்னை மணமகனாக ஏற்று மகட்கொடை நேர்வரென்றதாம்.

பசித்துவந்த மந்தியையும் ஓம்பு மலையுடையையா யிருந்தும் நின்னை அடைக்கலம்புக்க இவள் அஞ்சாவாறு வரைந்தாயல்லையேயென் றிரங்கிய தென்பது.

இத்தகைய கொடிய நெஞ்சினையாகிய நின் மலையின்கண்ணே மஞ்சும் தவழாநின்றதே! இஃதென்ன வியப்போ எனப் பொருளின்புறத்தே இறைச்சி தோன்றுவதும் அறிக. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (நடுங)

## நடுச. உலோச்சனார்

நெய்தல்: (க) இது, தோழியாற் செறிப்பறிவுறீஇ கடாயது.

வரைவு

எ - து, களவின் வழிவந் தொழுகுந் தலைமகனை நெருங்கிய தோழி, ஐயனே! நினது கேண்மை அலராய் விளைகின்றதென்று கூறி, இறைச்சியாலே தலைமகளை இல்வயிற் செறித்தமை சொல்லி, அஃது எவ்வாறு யாங்கள் பொறுப்பதென வரைவுகடாவாநிற்பது.

(உ) மனைவயின் தோழியைத் தலைமகன் மறுத்துச் சொல்லியதூஉ மாம்.

புகழ்ந்தாற்கு

எ - து, மணமனையின் மற்றைநாள் செவிலியொடு புகுந்த தோழியை நீ நன்குக இறைமகளை ஆற்றியிருந்தாயென்று தலைமகன் புகழ்தலும், நீ கொண்ட கேண்மை எங்குங் கௌவையாகியது; அதனை நின் காதலியே பொறையோடு நீ வாராமையாலுண்டாகிய தனது காமநோயையும் ஆற்றியிருந்ததன்றி யான் ஆற்றுவிக்குமாறு கிடந்த தென்னையென்று தோழி மறுத்துக் கூறுநிற்பது மாகும்.



தானது பொறுத்தல் யாவது கானல்
ஆடரை ஒழித்த நீடிரும் பெண்ணை

வீழ்கா வோலைச் சூழ்சிறை யாத்த
கானல் நண்ணிய வார்மணல் முன்றில்
எல்லி அன்ன இருள்நிறப் புன்னை
நல்லரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த
தூங்கல் அம்பித் தூவலஞ் சேர்ப்பின்
கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு
நெடுநெறி ஒழுகை நிரைசெலப் பார்ப்போர்
அளம்போகு ஆகுலங் கடுப்பக்
கௌவையா கின்றது ஐயநின் நட்பே.

**உரை** :—ஐயனே ! கழிச்சோலையிடத்துக் காற்றலசைகின்ற அடியில் உள்ளவற்றை வெட்டி ஒழித்தலானே நெடிய கரிய பனையினின்று விழுகின்ற காவிக்கொணர்ந்த ஓலையைச் சூழ்கின்ற வேலியில் மறைபடக் கட்டிய கடற்கரைச் சோலையையடுத்த வெளிய மணலையுடைய முன்றிலின் கண்ணே இரவு போன்ற இருண்ட நிறத்தையுடைய புன்னையின் நல்ல பெரிய அடிமரத்திலே பிணித்துக் கிடத்தலானே தங்குதல்கொண்ட தோணியையுடைய நீர்த்துவலை தெறித்தவிழுங் கடற்கரையிடத்தே கடுகிய வெயிலினாற் கொதிக்கின்ற கல்லாகவிளைந்த உப்புக்களை ஏற்றி நீண்டநெறியிலே செலுத்தும் பண்டிகள் நிரையாகச் செறிந்து செல்லுமாறு உரப்பி யோட்டுகின்ற உப்புவாணிகர் அளத்து வெளியிலே போகும் பேரொலிபோல, நின்னால் செய்யப்பட்ட கேண்மையானது பழிச்சொல்லுக் கிடமா யிராநின்றது; அங்ஙனம், பரந்த அலரால் இற்செறிக்கப் பட்ட யாங்கள் அவ் இல்வயிற்செறிப்பை எவ்வாறு பொறுப்பது ? ஆய்ந்து கூறுவாயாக ; எ - று.

ஒழுகை - பண்டி. பெண்ணை அரையொழித்த வீழ்காவோலை யென்பது, பனையின் அடியிலிருந்து வெட்டாது விடப்பட்டிருந்து அப்பொழுது வெட்டிவீழ்த்திய ஓலையென்க.

**இறைச்சி** :—ஓலைச் சூழ்சிறையாத்த கானலென்றது, எமரும் அன்னையும் எமது இல்லகத்தைக் காவலோம்பலாயினு ராதலின், நீ இரவுக்குறி வருதற்கு இயலாதெனவும், புன்னை அடிமரத்திலே தோணி இயக்கமறப் பிணித்ததென்றது தலைமகள் புறத்துவந்து இயங்காவாறு இல்வயின் செறிக்கப்பட்டாளெனவுங் கூறியதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல்.

இரண்டாந்துறைக்கு அங்குக்கூறிய குறிப்பை விரித்துரைத்துக் கொள்க. அதற்கு **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - மகிழ்தல். (௩௫௪)

## ௩௫௫. ...............

### குறிஞ்சி: (௧) இது, தோழி அருகடுத்தது.

எ - து, களவின் வழிவந்தொழுகுந் தலைமகன் ஓரோவொருகால் அருகி வருதலை யறிந்த தோழி அவனது அருகில் நெருங்கி, என் தோழியை

மூலமும் உரையும்

௩௯௭

நீ விரும்பி முயங்கி இன்புறு யாயினும், என்பால் நீ கொண்ட அன்பின் மிகுதியினுலேனும் கைசோர விடாது அவளை அணைந்து தலையளிசெய்வாயாக ; நீயே களைகணன்றி அவள் பிறிதுடைய ளல்லளென்பதுபடக் கூறுநிற்பது.

(௨) தோழி தலைமகளது ஆற்றுமைகண்டு

வரைவுகடாய தாஉமாம.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை
முலைவாய் உறுக்குங் கைபோல் காந்தள்
குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை
அம்மடற் பட்ட அருவித் தீநீர்
செம்முக மந்தி ஆரும் நாட
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்
அஞ்சில் ஓதியென் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறுய் ஆயினும் அதுநீ
என்கண் ஓடி அளிமதி
நின்கண் அல்லது பிறிதியாதும் இலளே.

**உரை** :—புதல்வனைப் பெற்ற நீலமலர் போன்ற கண்ணையுடைய மடந்தை தன் கொங்கையைக் கையாலேபிடித்துத் தன் புதல்வன் வாயில் வைப்ப, அக்குழந்தை அதன்கணுள்ள பாலைப் பருகுவதுபோலக் காந்தளின் பூங்கொத்தொடு பொருந்திய கொழுவிய மடலையுடைய வாழைப்பூவின் அந்த மடலுட்பட்ட அருவிபோலப் பெருகிவரும் இனியநீரைச் சிவந்த முகத்தையுடைய பெண்குரங்கு பற்றிப் பருகாநிற்கும் மலைநாடனே! நட்புடையாளர் கண்ணோட்ட முடையார்க்கு எதிரே சென்றிருந்து, 'இதனை நீயிர் உண்பீராக' என்று நஞ்சைக் கலந்து கொடுத்தாலும் நட்பின்மிக்க அக் கண்ணோட்டமுடையார் அது நஞ்செனக் கண்டுவைத் தும் கண்மறுக்க மாட்டாமையின் அதனையுண்டு பின்னும் அவரோடு மேவுவார்; நீ அத்தகைய நட்புடையனு யிருந்தும், அழகிய சிலவாய கூந்தலையுடைய என் தோழியின் தோளிலே துயிலுவதை நின்உள்ளத்து இன்பமாகக் கொண்டாயல்லை: அங்ஙனங் கொள்ளாயேயாயினும் என்பால் உள்ள கண்ணோட்டத்தினாலாவது இவளுடைய தோளிலே துயிலுவதனை இன்பமாகக்கொண்டு தலையளி செய்வாயாக; இவள்தான் நின்பால் அடைக்கலமாக உடையளல்லது வேறொரு களைகணுமுடையளல்லள் காண்; எ - று.

நாகரிகர் - கண்ணோட்டமுடையவர். இக்கருத்து "பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்." (குறள் - ௫அ0) என்பதன்கண் எடுத்தாண்டமை யறிக.

வாழைமடலிலுள்ள இனியநீரை மந்தி பருகும் நாடனுயிருந்தும் அது போல இவளது நலனை நுகர நீ விரும்பினுயல்லையே; இஃதென்னையென வேறுமொருபொருள் தோன்றிநின்றது. **மெய்ப்பாடு** - பெருமிதம்,

பயன் - ஆற்றுதாரைத்து வரைவுகடாதல். இதன் 'முந்நை யிருந்து ...........நனிநாகரிகர்' என்னும் இரண்டடிகளும் பெருங்கதையில் வந்துள்ளன. (௩௫)

## ௩௫௬. பரணர்

குறிஞ்சி: இது, வரைவு மறுக்கப்பட்டு
நெஞ்சிற்குச் சொல்லியது.

ஆற்றானாகிய தலைமகன் தன்

எ - து, தலைமகன் அந்தணர், சான்றோர் முதலாயினரொடு வரைவு வேண்டி வருதலும் தலைமகளின் தமர் உடன்படாமைகண்டு அவன் தனது நெஞ்சை நெருங்கி, என் நெஞ்சமே! இதுகாறும் நீ வருந்தியதனை யான் அறிவேன்காண்; இங்ஙனம் வருந்தியதன் பயனாகவேனும் நம் காதலி நம் அருகிலே வைகுமாறு கிடைப்பளோ? ஒன்று கூறுவாயாகவென்று நொந்து கூறாநிற்பது.

நிலந்தாழ் மருங்கில் தெண்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
பொன்படு நெடுங்கோட்டு இமயத்து உச்சி
வானர மகளிர்க்கு மேவல் ஆகும்
வளராப் பார்ப்பிற்கு அல்கிறை ஒய்யும்
அசைவில் நோன்பறை போலச்

செல்வர

வருந்திணை வாழியென் உள்ளம் ஒருநாள்
காதலி உழையள் ஆகவும்
குணக்குத்தோன்று வெள்ளியின் எமக்கும் ஆர் வருமே.

**உரை** :—என் உள்ளமே! நீ வாழ்வாயாக ; நிலத்தின்கண்ணே ஆழ்ந்த இடத்தினையுடைய தெளிந்த கடலருகுசென்று இரைதேடி அருந்திய ஒன்றற்கொன்று விலகிய மெல்லிய இறகினையும் சிவந்த காலினையுமுடைய அன்னப்பறவைகள், பொன்பொருந்திய நெடிய கொடுமுடிகளையுடைய இமயமலையின் உச்சியி லிருக்கின்ற தேவருலகின்கண் வாழுந் தெய்வ மகளிர்க்கு விருப்பத்தோடு விளையாடுதற்காய சிறகுமுளைத்து வளராத தம் இளம் பார்ப்புக்களுக்கு இட்டுண்ணும் உணவைக் கொடுக்குமாறு செல்லு கின்றபொழுது அவற்றின் வருத்தமில்லாத வலிய சிறகு வருந்ினாற் போலப் பலகாலும் என்பால் நின்றும் அவள்பால் ஏகுதலாலே நீ வருந்தா நின்றனை ; அதனை யான் நன்குக அறிவேன்காண் ; இங்ஙனம் வருந்திய தன் பயனாக இனி மற்றொரு பொழுதிலாயினும் கீழ்பாற்கண் விடியலிலே தோன்றுகின்ற வெள்ளிபோல நம் காதலி நம் அருகில் வைகுமாறு நமக்குக்கிடைக்குமோ? அதனையேனும் ஆராய்ந்து கூறுவாயாக ; எ - று.

ஒய்யும் - கொண்டுசென்று கொடுக்கும். ஆர் - அசைநிலை. ஏ - வினா.

தமர் மறுத்தலால் உழையளாகவும் வருமோவென்று இரங்கினான். அவர் மறுப்பினும் அவள் தன்பால் அன்புடையளாதலின் ஒருகால் வருமே என்னும் கருத்தால் காதலியென்றான்.

**இறைச்சி** :—அன்னப்பறவை இமயத்து உச்சியில் அரமகளிர் கைப் பட்ட தம் பார்ப்புக்களுக்குக் கடலகத்துள்ள இரையைக் கொண்டு சிறகு

துணையாகச் செல்லுமென்றது. யாமும் தமர்வயிற்பட்ட நம் காதலி நிமித்தமாக வேற்றுநாட்டுச் சென்று பொருளீட்டி உள்ளமும், அந்தணரும் சான்றோரும் துணையாகக்கொண்டு ஈண்டெய்தி வருந்தாநின்றேம் என்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கட் டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௫௬)

## ௩௫௭. குறமகள் குறியெயினி

**குறிஞ்சி** :—(௧) இது, தலைமகன் வரைவு நீடிய
என்பதுபடச் சொல்லியது.

இடத்து ஆற்றுவல்

எ - து, களவின் வழிவந் தொழுகுபவன் வரைந்து கொள்ளாது பல நாள்காறும் நீட்டித்தலான் எவ்வண்ணமாயினும் வரையவருமென்னும் தெளிவினால் வருந்தாத தலைமகள் தோழியை நெருங்கி, என்னுள்ளம் சாரல் நாடனோ டாடிய நாளையெண்ணி வருந்த அறியாதது; ஆதலின், அதுகாரண மாக நினது எண்ணம் எவ்வாறோவென வினவி யறியாநிற்பது.

(௨) மனைமருண்டு வேறுபாடாயினும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉ மாம்.

எ - து, மனைமருளல் - மனையிலிருந்தவாறே வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

மருளுதல். ஏனைய

நின்குறிப்பு எவனோ தோழி என்குறிப்பு
என்னொடு நிலையா தாயினும் என்றும்

நெஞ்சுவடுப் படுத்துக் கெட அறி யாதே
சேணுறத் தோன்றுங் குன்றத்துக்
கவா அன்
பெயலுழந்து உலறிய மணிப்பொறிக்
குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலுஞ் சோலை
அங்கண் அறைய அகல்வாய்ப்
பைஞ்சுனை
உண்கண் ஒப்பில் நீலம் அடைச்சி
நீரலைக் கலைஇய கண்ணிச்
சாரல் நாடனொடு ஆடிய நாளே.

உரை :—தோழீ! என் கருத்தானது என்னொடு பொருந்தா தாயினும்,—ஆகாயத்தி லுயர்ந்து நன்றாகத் தோன்றுகின்ற மலையின் பக்கத்தில் மழைபெய்யுமளவில் அம் மழையிலே நனைந்து மயிர் சிலிர்த்த நீலமணி போன்ற புள்ளிகளையுடைய குடுமியையும் பீலியையுமுடைய மயில்சென்று உலாவிவருகின்ற சோலைசூழ்ந்த அழகிய இடமகன்ற கற்பாறையில் உற்ற அகன்ற வாயையுடைய குளிர்ந்த சுனையிடத்துள்ள மையுண்ட கண்ணை ஒத்த குவளைமலர்களைக் கொய்து நீராடும்பொழுது, அந்நீர் அலைத்தலானே குலைந்த மாலையையுடைய சாரல்நாடனுடனே அருவியிலாடிய நாளினைநினைந்து எக்காலத்தும் நெஞ்சைப் புண்படுத்திக்கொண்டு கெட்டொழிய அறியாததா யிராநின்றது: அதுகாரணமாக நின் கருத்துத்தான் எவ்வாறுளதோ? அதனைக் கூறிக்காண்: எ - று.

வடுப்படுத்தல் - குற்றப்படுத்தலுமாம். உலறிய உலறுதல் - சிலும்புதல். குறிப்பு - கருத்து.
மஞ்ஞையென்க.

வடுப்படுத்தல் கெடுதியையுடையதெனவும் தன் அறிவு அத் தன்மையது அன்றெனவும் அறிவுறுத்துவாள் கெடஅறியாதேயென்றாள். அங்ஙனம் யான் துன்புறுதிருப்பதை அறிந்தனையாதலிற் 'கேள்வன் பிரிந்ததனால் வருந்தாது மகிழ்ந்துறைகின்ற இவளொருத்தியின் நெஞ்சம் வன்மை உடையது' எனக் கருதுகின்றனையோ வென்னுங் குறிப்பால் நின் குறிப்பு எவனோ வென்றாள்.

இறைச்சி :—மழை பெய்தலானே நனைந்த மயில் சோலையில் உலாவி வருமென்றது, அவன் முன்பு ஒருகாலத்தே கூடித் தலையளிசெய்தலால் மகிழ்ந்த எனது நெஞ்சம் இப்பொழுதும் சோர்வடையாமல் அவன் தோள் மீது இயங்காநிற்கு மென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தோழியொடுகூறி ஆறியிருத்தல். (௩௫௭)

## ௩௫௮. நக்கீரர்

## நெய்தல்: (௧)

இது, பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்த காலத்துத் தோழி இவள் ஆற்றாளாயினள்: இவளை இழந்தேனெனக் கவன்றாள் வற்புறுத்தது.

எ - து, அறத்தொடு நிற்றலின்பின் மணஞ்செய்துகொள்ளாது தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்துத் தோழி இவள் ஆற்றுளாயினுள்: இவளை இழந்தேனெனக் கவலையுடையளாய் இறைமகளை நெருங்கி நமது கவின் கெடுமாறு பிரிந்துபோகிய தலைவர் முன்பு நின்னை அகன்றுபோகேன் என்று சூளுரைகூறி அதனை மறந்தனராதலால் 'அதுகாரணமாக நீ அணங்காதொழி' என்று கடல்தெய்வத்துக்குப் பரவுக்கடன் கொடுப்போம் வாவென அவள் ஆற்றும்வண்ணம் சூழ்ந்து கூறுநிற்பது.

(உ) அக்காலத்து ஆற்றுளாய்நின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

பெருந்தோள் நெகிழ அவ்வரி வாடச்
சிறுமெல் ஆகம் பெரும்பசப்பு ஊர
இன்னேம் ஆக எற்கண்டு நாணி
நின்னொடு தெளித்தனர் ஆயினும் என்னதூஉம்
ரு. அணங்கல் ஓம்புமதி வாழிய நீயெனக்
கணங்கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சேன்மோ தோழி
பெருஞ்சேய் இறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்

௧௦. பசும்பூண் வழுதி மருங்கை அன்னஎன்
அரும்பெறல் ஆய்கவின் தொலையப்
பிரிந்தாண்டு உறைதல் வல்லி யோரே.

## மூலமும் உரையும்



**உரை** :—தோழீ! பெரிய செவ்விய பஞ்சுபோன்ற தலையையுடைய இறுவின் முடங்கலைச் சிறிய வெளிய காக்கை நாட்காலையில் இரையாகப் பெறுகின்ற பசிய பூணையணிந்த பாண்டியனது மருங்கூர்போன்ற எனது அரிதாகப்பெற்ற நுண்ணிய அழகெல்லாம் கெடும்படியாக என்னைப் பிரிந்து அங்கே தங்குதற்கு வல்ல தலைவர்,—முன்னொருபொழுது நம்முடைய பெரியதோள் தளர்வடைய, அழகியவரி(இரேகை)கள் வாட்டமுற, சிறிய மெல்லிய கொங்கைகளிலே பெரிய பசலை பரவ நாம் இத்தன்மையே மாதலும் அவர் தம் காதலியைப் பிரிதலால் இவ்வண்ணம் ஆயினளென்று என்னைக்கண்டு வெட்கமுற்றுத் தெய்வத்தை முன்னிலைப்படுத்தி இனி ஒருபொழுதேனும் பிரியேனென்று நின்னுடனே சூளுற்றன ராயினும் 'அங்ஙனங் கூறியசூள் பொய்த்தலானே அது காரணமாக எவ்வளவேனும் அவரை வருத்தாதேகொள்; அவரைப் பாதுகாப்பாயாக; நீ வாழிய' என்று கணங்களையுடைய அக் கடவுளுக்கு உயர்ந்த பலியையிட்டு நீர்வளாவிச் சாந்திசெய்து பரவுக்கடன் கொடுத்து இறைஞ்சினமாகிப் பின்பு வருவோம்; அதற்காக ஆண்டுச் செல்வோமோ? ஒன்று ஆய்ந்து கூறுவாய் காண்; எ – று.

பெருந்தோள் நெகிழ்தல் முதலியன முன்பொருகாலத்து நிகழ்ந்தவை. தெளித்தல் – சூளுறுதல். ஆகம் – கொங்கை. கடவுட்குப் பலிக்கொடை நேர்ந்தால் அவர் ஊறின்றி வருவரென ஆற்றுவித்தது. "தாயத்தினடையா" (தொ – பொ – உ௨௧) என்றதன்படி தலைவி நலனைத் தோழி எனது நலனென்றாள்.

**உள்ளுறை :**—இருவின் முடங்கலைச் சிறுவெண்காக்கை நாட்காலையின் இரையாகப் பெறுமென்றது, பெரிய பொருளை நம் தலைவர் ஆண்டுச் சென்றவுடன் பெற்று மீள்வரென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (௩௫௮)

## ௩௫௯. கபிலர்

**குறிஞ்சி :**

*இது, தோழி தழையேற்றுக் கொண்டு நின்று தலைமகள் குறிப்பின் ஓடியது.*

*எ - து, பாங்கியிற்கூட்டத்துத் தலைவன் கொடுத்த கையுறையை ஏற்றுத் தலைவியிடஞ்சென்று அவள்கருத்து நாணமுதலாய மேற்கொண்டதால் வேறுபட்டிருப்பது அறிந்த தோழி, இன்று தலைமகன் தழைதந்தனன்; அவற்றையுடுத்தால் அன்னை முனியுமென் றஞ்சுதும்; வேண்டாவென்று தழையை மறுத்தால் அவனது ஆற்றாமைகண் டஞ்சுதும்; இடையே அத்தழை வாடவேண்டுவ போலுமென்று அவள் குறிப்பின்வழி ஒழுகுவாள் போன்று கூறுநிற்பது.*

சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளுங் குன்ற நாடன்
உடுக்குந் தழைதந் தனனே அவையாம்
௫. உடுப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பின்
கேளுடைக் கேடஞ் சுதுமே ஆயிடை

வாடல கோல்லோ தாமே அவன்மலைப்*
போருடை வருடையும் பாயாச்
சூருடை அடுக்கத்த கோயற்கருந்
தழையே.

**உரை :**—மலையின் மேய்ந்த சிறிய கொம்பையுடைய செவ்விய பசு அசைகின்ற குலையையுடைய காந்தளைத் தீண்டி அக் காந்தண்மலரிலுள்ள தாதுக்கள் தன்மேல் உதிரப்பெற்றதனாலே நிறம் வேறுபாடுடைமை நோக்கி அதன் கன்று தன் தாயென் றறியாமல் மயங்காநிற்கும் மலைநாடன், உடுத்திக்கொள்ளுந் தழையைக் கையுறையாகக் கொடுத்தனன் : அவற்றை எம்நாட்டினர் உடாராதலின் யாங்கள்மட்டும் உடுத்திக்கொள்ளின் அன்னை கேட்டற்கு யாது விடைசொல்ல வல்லேமென்று அஞ்சாநிற்பேம்; அத் தழை உடையை மீட்டும் தலைவன்பாற் கொடுத்துவிடின், அதனால் அவன் படும் ஆற்றாமைக் கஞ்சாநிற்பேம் : ஆகிய அவற்றிடையே அவனது மலையிலுள்ள போரைச் செய்தலையுடைய வரையாடும் பாய்ந்து செல்லாத தெய்வமிருக்கின்ற மலைப்பக்கத்தின்கண்ணே உள்ள கொய்த்தற்கரிய தழைதாம் வாடுதல் உடைய ஆகலாமோ? எ - று.

வாடல - வாடுதலையுடையன. உடன்பாட்டுக் குறிப்புவினைமுற்று: வருடை - வரையாடு. தெய்வமேறிய மலைத்தழையை வாடச்செய்துவிடின் அத் தெய்வம் ஏதம்நிகழ்த்தினுமாமென்று அஞ்சுவித்தது.

**உள்ளுறை :** சேதா காந்தளந்தாது மூடப்படுதலால் அதன் நிறம் வேறுபடக் கண்ட கன்று மருளாநிற்கும் என்றது; தலைவி நாணமுதலியவற்றான் மூடப்பட்டுக் கருத்து வேறுதலைக் கண்ட தோழி மயங்காநின்றாள் என்பதாம். இவ்வுள்ளுறை கொண்டு தலைவி நாணமுதலாயவற்றால் மூடப்பட்டாளென்று துறைக்குறிப்பி லுரைகூறலாயிற்று. **மெய்ப்பாடு** - இளிவரலைச் சார்ந்த பெருமிதம். **பயன்** - குறைநயப்பித்தல். (௩௫௯)

**மருதம் :**

(௧) இது, பரத்தையிற் பிரிந்த தலைமகனைத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வாயில்மறுத்தது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனிடத்துத் தலைமகள் சினமுடையளாதலை யறிந்த தோழி, தலைவனை நெருங்கி வலம்வந்து எம்பெருமானே! நீ வெஃகியுற்ற தன்மைக்கு யான் மகிழாநிற்பேன்; இம் மனையின்கண்ணே வந்து துயில்வது பிறிதொரு பொழுதினும் கைகூடு மாதலால் நேற்றுவந்த பரத்தையரின் நலனுண்டு துறந்துவந்த நீ இன்றுவரும் பரத்தையரின் நலன் நுகருமாறு செல்வாயாக; நின் பரத்தை சிறப்பெய்துக என மறுத்துக் கூறுகிறபது.

(௨) தலைமகள் ஊடிச்சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

முழவுமுகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவொழி களத்த பாவை போல
நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வெளவி
இன்றுதரு மகளிர் மென்தோள் பெறீஇயர்
௫. சென்றீ பெரும சிறக்கநின் பரத்தை

(பாடம்) * அவர்மலைப்,

பல்லோர் பழித்தல் நாணி வல்லே
காழிற் குத்திக் கசிந்தவர் அலைப்பக்
கையிடை வைத்தது மெய்யிடைத் திமிரும்
முனியுடைக் கவளம் போல நனிபெரிது
உற்றநின் விழுமம் உவப்பேன்
மற்றுங் கூடும் மனைமடி துயிலே.

**உரை** :—பெருமானே! பலரும் இகழ்ந்துகூறுதல் பொறாது வெள்கி விரைவாக,—வருந்திய பாகர் இருப்புமுள்ளாலே குத்தி அலைத்தலாலே துன்புற்றுத் தன் துதிக்கையிடை வைத்ததனை மெய்யின்மேல் வாரி இறைத்துக் கொள்ளுகின்ற யானைக்கன்றுக்கு இட்ட கவளம்போல மிகப் பெரிதாக நீ யுற்ற நின் சீர்மையை யான் கண்டு மகிழாநிற்பேன்; நீ மனையின் கண் வந்து துயிலுகின்ற துயிலானது பிறிதொரு பொழுதினுங் கூடும்; ஆதலால் மத்தள முகத்து வைத்த மார்ச்சனை வறந்துபோமாறு முறையே கூத்துக்களை யாடிய திருவிழாவொழிந்த களத்திலுள்ள கூத்தியைப்போல அழகுடைய நேற்றைப் பொழுதிலே வந்து நின்னை முயங்கிய பரத்தையர் உடைய புதிய நலனையெல்லாங் கொள்ளைகொண்டு இற்றைநாளால் பாணனாலே கொணர்ந்து தரப்படுகின்ற பரத்தையருடைய மெல்லிய தோளை அணையும்வண்ணம் விரைந்து செல்வாயாக; நின்னொடு நின் பரத்தை நீடு வாழ்வாளாக; எ - று.

புலர்ந்து - புலரவெனத்திரிக்க. நாணி உற்ற விழுமமெனக. காழ் - இருப்புமுள். முனி - யானைக்கன்று. அது கவளத்தை மேலே வாரியிறைத்துக்கொள்ளுதல்போல வெட்கமின்றி நீ மேலே போகட்டுக்கொண்ட பழிச்சொல்லை யான் கண்டு மகிழ்வேனென்க. விழுமம் - இகழ்ச்சிக் குறிப்பு.

நீ இங்ஙனம் இகப்பினும் மனையின்கண் ணிருந்தே மடிதுமாதலின், நீ விரும்பிய வண்ணம்வந் தொழுகற்பாலையென்பாள் மனைதுயில் மற்றுங் கூடும் என்றாள். **மெய்ப்பாடு-வெகுளி. பயன்-வாயின் மறுத்தல்.** (௩௬௦)

## ௩௬௧. மதுரைப் பேராலவாயர்

**முல்லை :**

இது, வாயில்களோடு தோழி உறழ்ந்து சொல்லியது.

எ - து, தலைமகன் வேற்றுநாட்டுச் சென்று வந்துழி, அவன் குறித்த பருவங் கடந்ததனாலே தலைவி துனிகூருமென்ற வாயில்களை நெருங்கித் தோழி நீயிர் கவல்வதென்னை அவனது தேரைக் குதிரைகள் கொண்டு வந்து தந்தன; அதுகண்ட இறைவி தானடைந்த துன்பமெல்லாம் நீங்குதலாலே விருந்தேற்கும் விருப்பினளாய் இராநின்றனளென உறழ்ந்து கூறுநிற்பது.



சிறுவீ முல்லைப் பெரிதுகமழ் அலரி
தானுஞ் சூடினன் இளைஞரும்
மலைந்தனர்
விசும்புகடப் பன்ன பொலம்படைக்
கலிமாப்

படுமழை பொழிந்த தண்ணறும் புறவின்
நெடுநா ஒண்மணி பாடுசிறந்து இசைப்ப
மாலை மான்ற மணன்மலி வியனகர்த்
தந்தன நெடுந்தகை தேரே என்றும்
அரும்படர் அகல நீக்கி
விருந்தயர் விருப்பினள் திருந்திழை
யோளே.

**உரை :**—சிறிய மலரையுடைய முல்லையினது பெரிதும் மணம் வீசுகின்ற மலரை நெடிய புகழையுடைய இறைவன் தானுஞ் சூடினன்; உடன்வந்த இளைஞருஞ் சூடினர்; விசும்பைக் கடந்தாலொத்த பொன்னால் ஆகிய கலனையை யணிந்த கனைக்கின்ற குதிரைகள் மிக்க மழைபொழிந்த தண்ணிய நறியகாட்டில் நெடிய நாவையுடைய ஒள்ளிய மணியோசை மிக் கொலிப்ப அவனது தேரை மாலைப்பொழுது மயங்கிய மணல்மிக்க அகன்ற மாளிகைவாயிலிலே கொணர்ந்து நிறுத்தின; திருந்திய கலனணிந்த தலைவி தான் முன்பு எந்நாளுங் கொண்டிருந்த தீர்தற்கரிய துன்பமெல்லாம் ஒருங்கே நீங்கி இறைமகனுக்கு விருந்தயரும் விருப்பத்தையுடையளாயிரா நின்றனள்; ஆதலின், அவள் தனிகூருமென்று நீயிர் கவலவேண்டா; எ-று.

படை - கலனை: சேணம். கலிமா - குதிரையெனவுமாம். கலிமா தேரைத் தந்தனவென இயைக்க. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வாயில்கள் மகிழ்தல். (௩௬௧)

## ௩௬௨. மதுரை மருதனிள நாகனார்

**பாலை :**

இஃது, உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

எ - து, கொண்டுதலைக்கழிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண்ணே தலைவி அயாவுற்றதறிந்து மடந்தையே! நீ சிறிதுபொழுது இங்கு விளையாடிக்கொண்டிருப்பாயாக; யான் இவ் வேங்கைமரத்தின் புறத்திலிருந்து மறவர்வரிற் போர்புரிந்து பெயர்க்குவேன்; நின்சுற்றத்தார் நின்னைத் தேடிவரின் மறைந்துகொள்கின்றேனென அவளது அயாவொழியுமாறு தெளியக் கூறுநிற்பது.

வினையமை பாவையின் இயலி நுந்தை
மனைவரை இறந்து வந்தனை யாயின்
தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீவிளை யாடுக சிறிதே யானே



மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்
நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.

**உரை:**—கரிய மாமைநிறமுடைய காதலியே! இயந்திரமஸமந்த கொல்லிப்பாவைபோல இயங்காநின்று நின் தந்தையின் மனையெல்லையைக் கடந்து யான் கூறுகின்ற சொற்களை மேற்கொண்டு என்னொடு போந்தனை; ஆதலால், முதற்பெயலைப் பெய்யத்தொடங்கிய குளிர்ச்சியான மழையையுடைய மேகம் பெய்தலாலே அழகுமிக்க காட்டில் அகன்ற மேலிடமெல்லாம் பரவிய விரைந்த செலவினையுடைய சிவந்த ஈயலின் மூதாயை நோக்கியும் அவற்றைப்பிடித்தும் சிறிதுபொழுது நீ விளையாடுவாயாக; யானோவெனில் இளைய களிற்றியானை யுரிஞ்சிய பருத்த அடியை உடைய வேங்கைமரத்தின் மணற்பரப்பினையுடைய அதன் பெரிய பின்புறத்தில் மறைந்திருந்து ஆறலைகள்வர் முதலாயினோர் சூழ்ந்து போர்செய்யவரின் அஞ்சாது போர்புரிந்து அவர் ஓடுமாறு பெயர்க்குவேன்; அவ்வண்ணம் நின் சுற்றத்தார் தேடி நின் பின்னே தொடர்ந்துவரின் மறைந்து கொள்ளாநிற்பேன்காண்; எ – று.

செம்மூதாய் - தம்பலப்பூச்சியுமாம்.

தான் அவரை அடும் ஆற்றலுடையனாயினும் தலைவி தன்னுள்ளத்து எம்பெருமானுக்கு ஏதேனும் ஏதம் நிகழுங்கொல்லோவென் றேங்கி இறந்துபடுமாதலின், அது கருதி நமர்வரின் மறைகுவேனென்றான்.

**இறைச்சி:**—மழகளிறு உரிஞ்சிய வேங்கை அங்ஙனம் உரிஞ்சுதலானே கெடாதவாறுபோல எத்தகைய பகைவர் வந்து மோதினும் அஞ்சேனென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தன் வலியுணர்த்தித் தலைவியை ஆற்றுவித்தல். (௩௬௨)

## ௩௬௩. உலோச்சனார்

**நெய்தல்:** (௧) இது, பகற்குறிவந்து நீங்குந் தலைமகனைத் தோழி தலைமகளை என்னை யாற்றுவிக்குமென்றுகாதோ எம்பெருமான் கவலாதுசெல்வது; யான் ஆற்றுவிக்கும் இடத்துக் கவன்றால் நீ ஆற்றுவியெனச் சொல்லியது.

எ - து, தோழி பகற்குறிவந்து நீங்குந்தலைமகனை நெருங்கி இறைவியை யான் அயாவேோம்புவேனென் றெண்ணியோ நீ கவலையடையாது செல்கின்றனை? யான் ஆற்றுவிக்குமிடத்து அவள் கவலைகொண்டால் நீயே வந்து ஆற்றுவிக்கவேண்டு மென்கின்றாள்; என் தோழி உன்னோடாடியதாலே சிலம்பு உடைந்துபோகியதுகண்டாய், அது கம்மியன் இணைப்பதற்குமேலே மண்கட்டவேண்டியதாதலின் அவன் எடுக்குந் துறைமணல் கொடுவருவாயாகவென்று கூறுகிறப்பது.

(உ) கையுறை நேர்ந்த தோழி தலைமகட்குக் கையுறை உரைத்ததூஉமாம்.

எ - து, வெளிப்படை.



கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்
தெண்கடல் நன்னாட்டுச் செல்வன்
யானென
வியங்கொண்டு ஏகினை யாயின்
எனையதூஉம்
உறுவினைக் கசாவா உலைவில் கம்மியன்
பொறியறு பிணைக்கூட்டுந் துறைமணல்
கொண்டு
வம்மோ தோழி மலிநீர்ச் சேர்ப்ப
பைந்தழை சிதையக் கோதை வாட

கன்னர் மாலை நெருநை நின்னொடு
சிலவிலங்கு எல்வளை ஞெகிழ
௧௦. அலவன் ஆட்டுவோள் சிலம்புஞெமிர்ந்
தெனவே.

உரை :—கிரம்பிய கடல்நீர் பரவிய நெய்தனிலத் தலைவனே! உடுத்திருந்த பசிய தழையுடை கிழைய, மலர்மாலை வாட, சிலவாகிய விளங்கிய ஒளிபொருந்திய வளைகள் கழல நன்றாக நேற்று மாலைப்பொழுது நின்னொடு அலவனைப் பிடித்தாட்டிய என் தோழியினுடைய சிலம்பு உடைபட்டதனாலே கண்டல்மரங்களை வேலியாகவுடைய புறத்தே கழி சூழ்ந்த கொல்லைகளையுடைய தெளிந்த நல்ல கடல்நாட்டுத் தலைவன் யானென நெறிக்கொண்டு போயினையாயின் எத்துணையளவேனும் தான் செய்யும் மிக்க கம்மத்தொழிலில் வருந்தமுறாத கெடுதலில்லாத கம்மியன் கலன் பொறியற்றுப்போயின் இணைத்துச் சந்துவைத்துக் கூட்டுதற்கு மண்கட்ட வேண்டியதன்றே! அங்ஙனம் கட்டுதற்கு மண்ணெடுக்குந் துறையிலுள்ள மணலைக் கொண்டுவந்து தந்துசெல்வாயாக; எ - று.

சிலம்பு உடைந்ததை அன்னையறியின் இல்வயிற் செறிக்கப்பட்டுக் களவுநிகழ்தற் கிடனின்றி இறைமகள் வருந்தாநிற்கும்; அப்பொழுது என்னுரை ஆற்றுவித்த லரிதாமாதலின், அங்ஙனம் அன்னை அறியுமுன் நீயே துறைமணல் கொணர்ந்து சிலம்பைக்கூட்டி இவளை யாற்றுவிப்பாய் என்பது. நீ வந்து ஆற்றுதியெனவே நின்னையின்றி அமையாளென அறிவுறுத்தினளாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - ஆற்றாமையுரைத்து வரைவுகடாதல்.

(உ) உரை :—தோழி! நீ தலைவனோடாடியதனாலே சிலம்பு உடைபட்டதாதலின் நாம் தலைவனை நோக்கிச் ‘சேர்ப்பனே! நீ பிரிந்தேகினையாயின் அலவனாட்டும் நின் காதலியின் சிலம்பு உடைத்ததனைக் கூட்ட மணல்கொண்டு வருவாயாக’ என்போம்; எ - று. **மெய்ப்பாடு** - அது. **பயன்** - கையுறையேற்பித்தல்.

(௩௬௩)

௩௬௪. கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்

**முல்லை :** இது, தலைமகள் வரைவிடை மெலிந்தது.

ஏ - து, தலைமகன் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிகின்றான் குறித்தபருவம் வருதலுந் தலைமகள் ஆற்றாளாய்த் தோழியை நோக்கித் தோழீ! அவர் குறித்த பருவம் வந்து நீங்குதலுமாகின்றது ; இங்ஙனம் இன்னுஞ் சில வைகல் கழிந்து மாரியொடு மாலையம்பொழுதுஞ் சேரவந்தால் யான் உயிர்வாழலேனென் றழிந்து கூறுநிற்பது.

## மூலமும் உரையும்

[illegible]

சொல்லிய பருவம் கழிந்தன்று எல்லையும்
மயங்கிருள் நடுநாள் மங்குலோடு ஒன்றி
ஆர்கலி வானம் நீர்பொதிந்து இயங்கப்
பனியின் வாடையொடு முனிவுவந் திறுப்ப ஞ,
இன்ன சில்நாள் கழியின் பல்நாள்
வாழலேன் வாழி தோழி ஊழின்
உருமிசை அறியாச் சிறுசெந் நாவின்
ஈர்மணி இன்குரல் ஊர்நணி இயம்பப்
பல்லா தந்த கல்லாக் கோவலர்
கொன்றையந் தீங்குழல் மன்றுதோறு இயம்ப
உயிர்செலத் துனைதரு மாலை
செயிர்தீர் மாரியொடு ஒருங்குதலை வரினே.

**உரை :**—தோழீ! நெடுங்காலம் வாழ்வாயாக; தலைவர் வருவேம் என்று சொல்லிப்போன பருவமோ வந்து நீங்குதலாயிற்று; பகற்பொழுதும் இருள் மிக்க நடுயாமத்துக் காரிருளோடொன்றி நிரம்பிய இடிமுழக்கத்தையுடைய மேகம் நீர் நிறையப்பெற்று இயங்காநிற்ப, வாடைக்காற்றுடனே பனிக்கு உண்டாகிய சினமெல்லாம் என்மீதுவந்து தங்காநிற்ப, இவ்வாறாகிய நாள் சில கழிவனவாயினும் முறையே இடிமுழக்கம் விசும்பிலே கேட்கப்படாத குற்றந்தீர்ந்த மாரியுடனே வல்லோசை பயின்றறியாத சிறிய செவ்விய நாவினையுடைய மணியின் குளிர்ந்த இனியவோசை ஊரின்கண்ணேபுகுந்து மிக ஒலியாநிற்கும்படி பலவாய ஆனிரையை நமதுதெருவிலே செலுத்திவந்த பிறதொழிலைக் கல்லாத ஆயருடைய கொன்றைப்பழத்தாற்செய்த இனிய புல்லாங்குழல் இவ்விடமெங்கும் இனிதாக ஒலியாநிற்பப் பிரிந்தோரின் உயிர் உடனே உடலைவிட்டு நீங்கும்படி விரைந்து வருகின்ற மாலைப்பொழுதானது ஒருசேர வந்து கூடினல், அப்பால் எந்நாளும் நான் உயிர்வாழ்கிறேன் காண்; எ – று.

“மாலையோ வல்லை மணந்தார் உயிருண்ணும், வேலைநீ வாழி பொழுது” (குறள்-கஉஉக) என்றதனானும் பிரிந்தோருயிரை மாலை ஒறுக்குமென்றறிக. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௯௪)

## ௩௯௫. கிள்ளிமங்கலம் கிழார்மகனார் சேரகோவனார்

**குறிஞ்சி :**

இது, தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்கு உரைப்பாளாய் இயற்பழித்து இன்னது செய்து மென்பா

ளாய்ச் சொல்லியது.

எ - து, களவின் வழிவந் தொழுகுந் தலைமகன் ஒருசிறை மறைந்து வந்துறைவதனை யறிந்த தோழி, அவன் இதுகேட்டு விரைய வரையுமாறு தலைவியை நெருங்கி அவனது இயல்பை இகழ்கின்றாள் தோழியே! மலை



நாடன் சான்றோனல்ல னாதலால் அவனெதிர்சென்று நீ சான்றோயல்லை என்று கூறி வரவேண்டி யாம் நாணமொழித்து மன்றிலேபுகுந்து அவனது ஊரை வினவிவருவோமோ ஒன்று சொல்லாயென்று கூறாநிற்பது.

அருங்கடி அன்னை காவல் நீவிப்
பெருங்கடை இறந்து மன்றம் போகிப்
பகலே பலருங் காண வாய்விட்டு
அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி பல்நாள்
கருவி வானம் பெய்யாது ஆயினும்
அருவி ஆர்க்கும் அயந்திகழ் சிலம்பின்
வான்தோய் மாமலை நாடனைச்
சான்றோய் அல்லை என்றனம் வரற்கே.

உரை :—தோழீ! வாழ்வாயாக; நெடுநாள்காறும் மின்னல்முதலாகிய தொகுதியை யுடைய மேகம் மழைபெய்யா தொழிந்தாலும் அருவி யொலி மாறாது பெருகிவருகின்ற நீர்விளங்கிய பக்கமலைகளை யுடைய ஆகாயத்தின் மீது உயர்ந்த பெரிய மலைநாடனை நெருங்கி, நின்னையடைந்த எம்மை நீ கைவிடுதலானே சால்புடைமையல்லை யென்று கூறினமாகி மீண்டு வருதற்கு;—அருமையாகிய காவலைச் செய்துடைய அன்னையினது காவல் கடந்து பெரிய தலைக்கடைவாயிலையும் நீங்கி ஊர்ப்பொதுவாகிய அம்பலத்தினை யடைந்து பகற்பொழுதிலே பலருங்காணுமாறு யாம் கொண்டிருந்த நாணினைவிடுத்து அகன்ற வயல்சூழ்ந்த கொல்லைகளை யுடைய அவனது ஊர் எவ்விடத்து உளதென்று வாயால்வினவியறிந்து சென்று வருவோமோ? ஒன்று கூறுவாயாக; எ - று.

அயம் - நீர். இன்னான் இன்னவூரிலுள்ளான்; அவ்வூர் இன்ன இடத்துளதென்று குறிப்பாடுடையாரையும் அவரிருக்கும் ஊரையும் ஊர்ப்பொதுவம்பலத்தின்கண் எட்டில்வரைந்துள்ள வழக்குப் பண்டு உள்ளதுபோலும். சான்றோயல்லையென்றது இயற்பழித்துரைத்தல்.

**இறைச்சி** :—சால்பில்லானது மலையாதலால் பன்னாள்காறும் வானம் பெய்யாதாயினும் அருவிநீர் அறாமல் ஆரவாரியாநின்றது; இஃதென்ன வியப்போ வென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவு கடாதல்.

(௩௬௫)

## ௩௬௬. மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்

**பாலை** : இஃது, உலகியல்கூறிப் பொருள்வயிற் நெஞ்சிற்குத் தலைமகன்சொல்லியது.

பிரிய வலித்த

எ - து, வந்தவிருந்தினரை ஓம்புவது இல்லறநெறியாயினும் அது தான் பொருளின்றி எவ்வாறியலுமாதலிற் பொருள்வயிற் பிரியவேண்டு மென்ற நெஞ்சினைத் தலைமகன் நெருங்கி நெஞ்சமே! அங்ஙனம் நீ பொருள் ஈட்டிவரினும் இல்லறம் நிகழ்த்தற்பாலள் மனைவியேயன்றே?

*அவளிறந்து படுமாறு விடுத்தகலுதல் தகுதியோ? அவள் வாடையால் வருந்திமாய விடுத்தகலுவோர் மடமையுடையரெனக் கடிந்து கூறுகிறபது.*

அரவுக்கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்
வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்
திருந்திழை அல்குல் பெருந்தோள் குறுமகள்
மணியேர் ஐம்பால் மாசறக் கழீஇக்*
கூதிர் முல்லைக் குறுங்கால் அலரி
மாதர் வண்டொடு சுரும்புபட முடித்த
இரும்பல் மெல்லணை ஒழியக் கரும்பின்
வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி
முதுக்குறை குரீஇ முயன்றுசெய்
குடம்பை
மூங்கில் அங்கழை தூங்க ஒற்றும்
வடபுல வாடைக்குப் பிரிவோர்
மடவர் வாழியில் உலகத் தானே.

**உரை** :—நெஞ்சமே! பாம்பு படமெடுத் தெழுந்தாற்போன்ற பலவாகக் கலந்த எண்மணிக்கோவையாகிய மேகலையணிந்த நடத்தலால் ஒதுங்குதல் அமைந்த நுண்ணிய துகிலி னுள்ளால் வந்து தோன்றி விளங்குகின்ற திருந்திய இழையணிந்த அல்குலையும் பெரியதோளையுமுடைய இளமடந்தையின் நீலமணிபோன்ற கூந்தலை மாசுநீங்கத் தூய்மைசெய்து விளக்கிக் குளிர்காற்றால் மலருகின்ற முல்லையின் குறுகிய காம்பையுடைய மலர்களை இளைய பெண்வண்டுடனே ஆண்வண்டுஞ் சூழுமாறு முடித்திருக்கின்ற மிகப்பலவாகிய மெல்லிய அக்கூந்தலணையிலேகிடந்து துயிலுவதனை யொழியவிட்டுக் கரும்பின் வேல்போல்கின்ற வெளியமுகை பிரியும்படி நீண்டி அறிவு மிக்க தூங்கணங் குருவி தான் முயன்றுசெய்த கூட்டினை மூங்கில் தன் அடித்தண்டும் அசையுமாறு மோதுகின்ற வடதிசைக்குரிய வாடைக்காற்று வீசுங் கூதிர்ப்பருவத்திலே பிரிபவர் இவ்வுலகத்து அறியாமை மிக்குடையராவார் ; எ - று.

மூதுக்குறைவு - பேரறிவு. அரவுசீறியெழுந்தாற்போன்ற அல்குல். நுண்ணிய வெளிய துகிலையுடுத்தவழி அத்துகில் அசையுந்தொறும் உள்ளிருந்து கண் இமைத்தல் போலுதலானே இமைக்குமல்குல் என்றுமாம்.

**இறைச்சிகள்** :—(க) மணமில்லாத கரும்பின்மலரை வாடைநீண்டும் என்றது, நெஞ்சே! நிலையில்லாத பொருளை நீ விரும்பி யுலாவுறுகின்றனை யென்றதாம்.

(உ) வாடை வீசுதலாலே குருவியின் கூடம்பை அசைந்து வருமாறு மூங்கில்சென்று மோதுமென்றது, பொருளாசை என்னைத் தூண்டுதலானே யான் வருந்துமாறு நீ என்னைத் துன்புறுத்துகின்றனையென்றதாம். **மெய்ப்பாடு** - பிறன்கட்டோன்றிய பிணிபற்றிய இளிவரல். **பயன்** - இல்லத் தழுங்கல். (௩௬௬)

---

(பாடம்) * மாசறக்கெழீஇக்.

## ௩௬௭. நக்கீரர்

**முல்லை :** *இது, வரவுமலிந்தது.*

*எ - து, வினைவயிற் பிரிந்த தலைமகன் குறித்தபருவத்து வந்திலனென்று கவன்ற தலைமகளைத் தோழி நெருங்கி, மடந்தாய்! சென்று வினைமுடித்தமையால் உடன்சென்றிருந்த வீரர் பலரும் மலர்சூடி வந்தனர்காண்; நங்காதலரும் இப் பனிக்காலத்து ஆண்டுத் தங்கிவருந்தாது இன்னே வருவரென்று கூறுபவள் உள்ளுறையால் நீ துன்புறாது இல்லறம் நிகழ்த்துவாயாக வென்றும் ஆராய்ந்து கூறுநிற்பது.*

கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கண் கருனைச் செந்நெல்வெண் சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்கால்
கூழுடை நன்மனை குழுவின இருக்கும்
மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி
மெல்லியல் அரிவைநின் பல்லிருங் கதுப்பிற்

குவளையோடு தொடுத்த நறுவீ முல்லைத்
தளையவிழ் அலரித் தண்ணறும் கோதை
இளையருஞ் சூடி வந்தனர் நமரும்
விரியுளை நன்மா கடைஇப்
பரியாது வருவர்இப் பனிபடு நாளே.

உரை :—வட்டமாகிய கண்களையும் கூரிய வாயையுமுடைய காக்கைப் பேடை, நடுங்குகின்ற சிறகையுடைய தன்பிள்ளையைத் தழுவிக்கொண்டு சுற்றத்தையும் விளித்துக் கரிய கண்ணையுடைய கருனைக்கிழங்கின் பொரிக் கறியொடுகூடிய செந்நெல் லரிசியாலாக்கிய வெளிய சோற்றுத்திரளை யைத் தெய்வத்துக்கிடும் பலியுடனே கவர்ந்துகொள்ளுமாறு, குறியகால் நாட்டிக் கட்டிய மிக்க உணவையுடைய நல்ல மனையின்கண்ணே கூடின வாயிருக்கும் பழமையான வீடுகளையுடைய 'அருமன்' என்பவனது பெரிய புகழ்பொருந்திய 'சிறுகுடி' என்னும் ஊரின்கிராநின்ற மெத்தென்ற சாயலையுடைய அரிவையே! நினது பலவாகிய கரிய கூந்தலிற் சூடிய மாலை போலக் குவளைமலரொடு இடையிட்டுத் தொடுத்த நறிய பூவையுடைய முல்லையின் மூட்டுவாயவிழ்ந்த மலராலாகிய தண்ணிய நன்மணமுடைய பூமாலையை உடன்சென்றிருந்த வீரரெல்லாருஞ் சூடிவந்தனர்; அதனால் இப் பனிமிக்க பருவத்திலேதானே நம் காதலரும் ஆண்டுத்தங்கி வருந் தாது விரிந்த பிடரிமயிரையுடைய நல்ல குதிரையைச் செலுத்திக்கொண்டு இன்னே வருகுவராதலின் நீ வருந்தாதேகொள்; எ - று.

சிறுகுடிபோன்ற அரிவை யெனினுமாம்.

வினைமுடித்த மகிழ்ச்சிகூறக் கேட்டவளவே ஆற்றுமாதலின் அது தோன்ற வீரர் மலர்சூடிவந்தன ரென்றாள். அவ் வினைமுடித்தவிற் சோர்விலரென்பது குறிப்பிப்பாள் பரியாது வருவரென்றாள்.

**உள்ளுறை:**—காக்கையின்பெடை தன் பார்ப்பைத் தழுவிக்கொண்டு சோற்றுப்பலியைக் கவரவேண்டிக் கிளையையழைத்து மனையின்கண்ணே சூழ்ந்திருக்குமென்றது நீயும் நின்மகனைத் தழுவினையாகிக் கேள்வன் கொணருகின்ற நிதியத்தை ஆர்த்துமாறு சுற்றத்தாரை யழைத்துச் சூழ இருத்தி மனையறம் நிகழ்த்துவாயாக என்றதாம். **கைகோள்** - கற்பு. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (௩௱௬௭)

## ௩௱௬௮. கபிலர்

**குறிஞ்சி:**—இது, தோழி தலைமகற்குச் செறிப்பறிவுறீஇயது.

எ - து, தலைமகன் வரையாது நெடுங்காலம் பகல்வந் தொழுகுவது கண்ட தோழி, அவன் விரைய மணஞ்செய்துகொள்ளுமாறு நெருங்கி ஐயனே! உம்மோடு யாம் கிளிகடிந்து ஊசல்தூங்கி அருவியாடி வருவதினும் இனியதொன் றில்லையாயினும், அதனால் எமக்குண்டாகிய புதுமண முதலாயவற்றை அன்னை நோக்கிச் சுட்டி உயிர்த்துச் சீறுகின்றனள்; அதனையஞ்சி யாம் இல்வயிற் செறிப்புற்று இரங்கத்தக்கேம் ஆயினேம் என்று நொந்து கூறுநிற்பது.

பெரும்புனங் கவருஞ் சிறுகிளி ஓப்பிக்

கருங்கால் வேங்கை ஊசல் தூங்கிக்

கோடேந்து அல்குல் தழையணிந்து

உம்மோடு

ஆடினம் வருதலின் இனியதும்

உண்டோ

நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த
வெறிகமழ் கொண்ட நாற்றமுஞ் சிறிய
பசலை பாய்தரு நுதலும் நோக்கி
வறிதுகு நெஞ்சினள் பிறிதொன்று சுட்டி
வெய்ய உயிர்த்தனள் யாயே
ஐய அஞ்சினம் அளியம் யாமே.

**உரை** :—ஐயனே! பெரிய புனத்திலுள்ள தினைக்கதிர்களைக் கொய்து கொண்டுசெல்லுகின்ற சிறிய கிளிகளை வெருட்டிக் கரிய அடியையுடைய வேங்கைமரத்திலே தொடுத்த கயிற்றூசலில் ஏறிஆடிப் பக்கம் உயர்ந்த அல்குலுக்குத் தழையுடை யணிந்து நம்முடனே அருவியாடி விளையாட்டு அயர்ந்தேமாய் வருதலினுங்காட்டில், இனியதொரு காரிய முளதாகுமோ? நெறிப்பமைந்த கருமை முதிர்ந்திருந்த கூந்தலில் நறுமணங் கமழ்தலைக் கொண்ட நல்ல புது நாற்றத்தையும் பசலைபரவிய சிறிய நெற்றியையும் நோக்கிப் பயனின்றிச் சிதைந்த உள்ளத்தையுடையளாய் எம் அன்னை பிறிதொன்றனைச் சுட்டினின்றாள்போல வெய்யவாகப் பெருமூச்செறிந்து வெகுளாநின்றனள்; அதனால், யாம் இல்வயிற் செறிக்கப்பட்டுப் பிறரால் இரங்கத்தக்க தன்மையேமாய் அஞ்சாநின்றேம்: எ - று.

இனியது மென்ற உம்மை பிரித்துக்கூட்டப்பட்டது. இருந்த கூழையென மாறுக.



அறிகரிகூறுவார் யாருமின்மையால் நேரே கடியாது அன்னை பிறிதொன்று சுட்டி யுயிர்த்தன ளென்றாள். அளியமென இற்செறிப் புணர்த்தினாள். அதற்கும் நீயே காரணமென்பதுதோன்ற நீ பிரிந்ததனாலுண்டாகிய பசலை பரவிய நுதலெனக் குறிப்பித்தாள். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (௩௬௮)

## ௩௬௯. மதுரை

## ஓலைக்கடையத்தார்

## நல்வெள்ளையார்

**நெய்தல்:**

இது, பட்டபின்றை வரையாதுபொருள்வயிற் பிரிந்து ஆற்றுளாகிய தலைமகள் வன்பொறை எதிரழிந்தது.

எ - து, அறத்தொடு நிற்றலின்பின் வரைந்துகொள்ளாது தலைமகன் வெட்டிடைக்கழிந்து வரைபொருள் காரணமாகப்பிரிதலும், ஆற்றுத தலைமகள் வலிதிற் பொறுத்திருவென்ற தோழியை நெருங்கித் தோழீ! நேற்று வந்த மாலைப்பொழுது இன்றும் வருவதாயின் எனக்குண்டாகுங் காம வெள்ளம் நீந்து நெறியறியேனென்று அழிந்து கூறுகிற்பது.

சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேர

நிறைபறைக் குருகினம் விசும்புகுந்து

ஒழுக

எல்லை பைபயக் கழிப்பி முல்லை

அரும்புவாய் அவிழும் பெரும்புல் மாலை

௫. இன்றும் வருவது ஆயின் நன்றும்

அறியேன் வாழி தோழி அறியேன்

ஞெமையோங்கு உயர்வரை இமயத்து

உச்சி

வாஅன் இழிதரும் வயங்குவெள் அருவிக்
கங்கையம் பேர்யாற்றுக் கரையிறந்

திழிதருஞ்
௧௦. சிறையடு கடும்புனல் அன்னவென்
நிறையடு காமம் நீந்து மாறே.

உரை:—தோழீ! வாழி; ஆதித்தமண்டிலம் தான்கொண்ட சினம் தணியப்பெற்று அத்தமனக்குன்றைச் சென்றுபுக, நிறைந்த சிறையுடைய நாரையின்கூட்டம் ஆகாயத்திலே நெருங்கிச் செல்லாநிற்பப் பகற்பொழுதை மெல்லமெல்லப் போக்கி முல்லையரும்பு வாய்திறந்து மலராநிற்கும் பெரிய புல்லிய மாலைப்பொழுதானது நேற்றுவந்து துன்புறுத்தியதுபோல இன்றும் வருவதாயினோ பெரும்பாலும்,—ஞெமைகள் வளர்ந்த உயர்ந்த இமயமலை உச்சியின்கண்ணே வானிடத்துநின்று இழிதரும் வயங்கிய வெளிய அருவியையுடைய பெரிய கங்கையாற்றினைக் கரைகடந்து இழியாநின்ற அணையை உடைத்துச்செல்லுங் கடிய செலவினையுடைய நீர்வெள்ளம்போன்ற எனது நிறையைபழித்துப் பெருகுகின்ற காமவெள்ளத்தை நீந்துமாறு நன்றாகத் தெரிந்தேனுமில்லையே! எவ்வாறு உய்குவேன்? எ - று.

*அவலம்பற்றி அறியேனென இருகால் அடுக்கியது.*



வெப்பம் நீங்கித் தட்பமிக்குப் பறவைகள் பயிர்க்கு கிளையாட நறுமணம்வீசி முல்லை நகைசெய, முதல்நாள் மாலையம்பொழுது வருத்தலும் காமவெள்ளத்தின் முழுகி வருந்தி இனி இம்மாலைவரின் இறந்துபடுவது திண்ணமெனக் கொண்டவளாதலின் நீந்துமாறு அறியேனென்றாள்.

**மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (௩௬௯)

## ௩௭௦. உறையூர் கதுவாய்ச்சாத்தனார்

**மருதம் :** (௧) இஃது, ஊடல்நீட ஆற்றனாய் நின்றான் சொல்லியது.

பாணற்குச்

எ - து, பரத்தையிற் பிரிந்துவருகின்ற தலைவனது வரவறிந்த தலைவி ஊடினாளை நயந்து பலகால்வேண்டியும் ஊடல் நீங்காமையால் வருந்திய அவன், ஆங்கு வந்த பாணனை நோக்கிப் பாணனே! நம் காதலி புதல்வனைப் பெற்றகாலத்து நாம் அருகெய்தி வினாயபொழுது நகைகொண்டு கண்ணை மூடியதை நினைக்குந்தோறும் நகாநிற்போம்; அத்தகையாள் இப்பொழுது ஊடியிருப்பது காணென்று நொந்து கூறுநிற்பது.

(௨) முன் நிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை குறிப்பெச்சமில்வழி ஒக்கும்.)

வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூல் நங்குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட்
குறுகிப் புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து
அவ்வரித் திதலை அல்குல் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோமெல் அஞ்சில் ஓதியெனப்
பன்மாண் அகட்டிற் குவளை ஒற்றி
உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல

க0. முகைநாள் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் புதைத்துவந்
ததுவே.

**உரை** :—பாணனே! என்னருகு வருவாயாக; நேர்மையான கலன்ளையுடையாள் என் சுற்றத்தார் சூழ ஓம்புகின்ற சிறந்த சூலுடையளாய் மகவீன்று நம்குடிக்கு உதவிபுரிந்து நெய்யுடனே கலந்து ஒளிருகின்ற சிறுவெண்கடுகாகிய திரண்ட விதைகளை விளங்கும் மாளிகையிடமெங்கும் விளங்கும்படிபூசிப் பாயலிலே படுத்திருந்தாளை நெருங்கி மெல்லிய அழகிய சிலவாகிய கூந்தலையுடையாய்! நீ புதல்வனையீன்றதனால் வேறு பெயரும் பெற்று அழகிய வரிகளும் தித்தியுமுடைய அல்குலையுடைய முதுபெண்டாகித் துயிலாநின்றனையோ என்று கூறிப் பலவாகிய மாட்சிமைப்பட்ட வயிற்றிடத்தில் என்கையிலுள்ள குவளைமலரால் ஒற்றிச் சில பொழுது கருதினேனாகி அங்குநின்ற என்னை மெல்லநோக்கி, முல்லையின் நாளரும்புபோன்ற நகையையுந் தோற்றுவித்துச் சிறந்த நீலமலர்போன்ற மையுண்ட கண்களைக் கையால் மூடி மகிழ்ச்சி மிகக்கொண்டிருந்தது



எனக்கு நகையுடையதா யிராநின்றது; அதனைக் கருதுந்தோறும் நாம் நகாநிற்போம்; அந்நகையான் இப்பொழுது ஊடியிருப்பது காணாய்; எ-று.

பெயர்பெயர்த்தல் - புதல்வனை யீன்றதனாற் பருவப்பெயர் மாறுபடுதல். அவை மங்கை, மடந்தைப் பருவங்கள் கடந்து அரிவை, தெரிவைப் பருவமாதல் போல்வன. சூலெய்திய காலத்தும் பொறையுயிர்த்த சில நாளளவும் சிற்சிலமகளிர்க்கு அல்குற்பக்கமெங்கும் சுட்டிசுட்டியாகத் தேமல்போல ஒளிர்வது தித்தியெனப்படும். **மெய்ப்பாடு** - வருத்தம்பற்றிய நகை. **பயன்** - அயாவுயிர்த்தல். (கஎ0)

கஎக. ஔவையார்

முல்லை : இது, வினைமுற்றி மறுத்தராநின்றான் சொல்லியது.

பாகற்குச்

எ - து, சென்று வினைமுடித்து மீண்டுவருகின்ற தலைமகன் தேர்ப் பாகனைநோக்கிப் ‘பாகனே மேகம் மழைபெய்யத் தொடங்கினகண்டாய்; அதுகண்டு நம் காதலி திண்ணமாக அழத்தொடங்கிவிட்டனளேயாம்; அவளின்னும் வருந்துமாறு ஆயர் குழலோசை தொடங்கினர்: அதனைக் கேளாய்’ என அவன் விரைந்து சேர்விடுமாறு கவன்று கூறுநிற்பது.

காயாங் குன்றத்துக் கொன்றை போல
மாமலை விடரகம் விளங்க மின்னி
மாயோள் இருந்த தேஎம் நோக்கி
வியலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பெயல்தொடங் கினவே பெய்யா வானம்
நிழல்திகழ் சுடர்த்தொடி ஞெகிழ ஏங்கி
அழல் தொடங் கினளே ஆயிழை

அதனெதிர்

குழல் தொடங் கினரே கோவலர்
தழங்குகுரல் உருமின் கங்கு லானே.

**உரை :**—பாகனே! இதுகாறும் மழைபெய்யாதிருந்த மேகங்கள் நிறைய மலர்ந்திருக்கின்ற காயாமரங்களையுடைய மலையின்கண்ணே இடையே சரக்கொன்றை மலர்ந்தாற்போலப் பெரிய மலைப்பிளப் பிடங்கள் எல்லாம் விளங்கும்படியாக மின்னி, என் காதலியாகிய மாமைநிறமுடையாள் இருந்த இடம்நோக்கிச் சென்று, அகன்ற கரிய ஆகாயத்தினிடம் எல்லாம் மறைபடும்படி பரந்து மழைபெய்யத் தொடங்கிவிட்டன; ஆதலால், ஆராய்ந்தணிந்த கலன்களையுடைய நம் காதலி நிழல்விளங்கிய ஒளியையுடைய கைவளைகள் கழன்றுவிழத் திண்ணமாக எக்கழுற்று அழத் தொடங்கினளேயாம்; அவள் அழுமிடத்துக்கு எதிரே இராப் பொழுதில் முழங்குகின்ற இடியோசைபோலக் கோவலர் புல்லாங்குழலை வாசிக்கத் தொடங்கினராவர்; ஆதலின் விரைவிலே தேரைச் செலுத்துவாயாக: எ - று.

*மலர்ந்தகாயா நீருண்ட மேகத்துக்கும், மலர்ந்தகொன்றை மின்னலுக்கும் உவமை. தொடங்கினள், தொடங்கினரென்பன தெளிவுபற்றி வந்த காலவழுவமைதி.*

மூலமும் உரையும் சகரு

தேயவேறுபாட்டினால் தானிருக்குமிடத் தெய்தாது பருவவரவு தொடங்கியதென அறிவுறுத்துவான் மாயோளிருந்த தேத்து மழை தொடங்கினவென்றான். இது குறித்தபருவத்து எய்தாவிடின் இறந்துபடும் என்று குறிப்பித்தானுமாயிற்று. பிரிந்துறைவோர்க்குக் குழலோசை இடி ஒக்குமென்றது வெளிப்படை. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - கேட்ட பாகன் தேர் விரைந்துகடாவல். (நஎக)

# நஎ௨. உலோச்சனார்

**நெய்தல் :**

இது, மேல் இற்செறிப்பான் அறிந்து ஆற்ருளாகின்ற தலைமகள் ஆற்றவேண்டி உலகியன்மேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறியாரெனச் சொல்லியது.

எ-து, தலைமகள் களவின்கண்ணே நன்னை இல்வயிற் செறிப்பரென்று அஞ்சி வருந்தலும் அதுகண்ட தோழி, நீ துறைவன்வந்து முயங்குமாறு விரும்பி வருத்திய நனை இவ்வூர் நோக்கிப் பிறிதொன்ருகக்கருதி அன்னை கொடுத்த கோடு உலைந்ததற்கு வருந்தாதேயென்று கூருநிற்கும்; ஆதலால் நின்னை இல்வயிற் செறிப்பாரல்லர்; நீ வருந்துவது தகுதியுடையது அன்றெனஅவள் ஆற்றுமாறு கூருநிற்பது.

அழிதக் கன்றே தோழி கழிசேர்பு

கானல் பெண்ணைத் தேனுடை அழிபழம்
வள்ளிதழ் நெய்தல் வருந்த மூக்கிறுபு
அள்ளல் இருஞ்சேற்று ஆழப் பட்டெனக்
(ரு). கிளைக்குருகு இரியுந் துறைவன்
வளைக்கோட்டு
அன்ன வெண்மணற்று அகவயின்
வேட்ட
அண்ணல் உள்ளமோடு அமர்ந்தினிது
நோக்கி
அன்னை தந்த அலங்கல் வான்கோடு
உலைந்தாங்கு நோதல் அஞ்சி
அடைந்ததற்கு

இனையல் என்னும் என்ப மனையிருந்து
இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்
திண்திமில் விளக்கம் எண்ணுங்
கண்டல் வேலிக் கழிநல் லூரே.

**உரை** :—தோழீ! கடற்கரைச் சோலையிலுள்ள பனையின் தேனை உடைய அழிந்த பழம் மூக்கு இற்றுக் கழியையடைந்து பெரிய இதழை உடைய நெய்தல் வருந்துமாறு அள்ளுதலமைந்த கரிய சேற்றிலே புதையும் படி விழுந்ததனால், அவ்வோசைக்கு அஞ்சிச் சுற்றத்தையுடைய நாரைகள் இனத்தோடு இரிந்தோடாநிற்கும் நீர்த்துறையையுடைய நின் காதலன் வளையாகிய சங்குபோன்ற வெளிய மணலையுடையதாகிய இடத்தில் முயங்கவிரும்பிய நினது பெருந்தகைகொண்ட உள்ளத்தொடு பொருந்துமாறு,—மகளிர் இல்லின்கண் இருந்து வருவிருந்தோம்பும் இயற்கையாலே கரிய கழியிடத்து மீனைத் தேடுகின்ற குளிரால் நடுங்கும் பரதவருடைய



திண்ணிய மீன்படகிலிருக்கும் விளக்குக்களை எண்ணுகின்ற கண்டல் மரத்தை வேலியாகவுடைய கழிசூழ்ந்த நம்முடைய நல்ல ஊரானது இனிதாக நோக்கி அன்னை நினக்குக் கொடுத்த அசைகின்ற குழையுடைய பெரிய கோடு குலைதலாலே நீ வருந்துவதுபோலக் கருதி அஞ்சி, 'நிகழ்ந்ததற்கு நீ வருந்தாதேகொள்' என்று கூறாநிற்கும்; இங்ஙனம் கூறுவதனால் இல்வயிற்செறியார்; ஆதலின் நீ மனம் அழிவது தகுதியுடையதன்று காண்; எ - று.

மணற்று - மணலையுடையது என்னும் முற்றெச்சம். கோடு - மீன் உணங்க வோம்புமாறு புள்ளோப்புதற்குக் கொடுத்த கோல். என்ப - அசை நிலை. விளக்கெண்ணுதல் - அவர் கரையேறியவுடன் அவரையோம்புமாறு இத்துணையோருள்ளாரென் றறியவேண்டிப் போலும்.

**உள்ளுறை :**—பனம்பழம் நெய்தல்வருந்தச் சேற்றில் விழக்கண்டு குருகினம் இரியுமென்றது தலைமகன் களவொழுக்கங்கெட நின்னை மணப்பின் அலர்வாய்ப்பெண்டிர் இரிந்தொழிவ ரென்றதாம்.

**இறைச்சி :**—மகளிர் இல்லிலிருந்து பரதவர்தம் மீன்பிடிக்கும் படகின் விளக்கை எண்ணுமென்றது, நாம் மனையின்கணிருந்து காதலனது கைவிடலானாகிய பழியை எண்ணுகின்றோம் என்றதாம். சிறைப்புறமென்றலால் அவனறியுமாற்றானே கூறினளாதலின் இவ்வாறு உள்ளுறையும் இறைச்சி கொள்ளலாயிற்று. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல்.
(௩௭௨)

## ௩௭௩. கபிலர்

### குறிஞ்சி : இது, செறிப்பறி வுறீஇயது

எ - து, களவின்வழிவந் தொழுகுந் தலைமகன் ஒருசிறை வந்திருந்தான் அறிந்து விரைய மணம்புரிந்து கொள்ளுமாறு தோழி தலைவியை நெருங்கி, நம்முடைய மெய்வேறுபா டெல்லாம் அன்னை கண்டு ஐயங்கொண்டு நம்மை இல்வயிற்செறித்து ஓம்புமாறு கருதினமையால், நம் காதலனொடு இன்றுகாறும் விளையாடி யிருந்ததுபோல நாளையும் விளையாட இயலுமோவென நொந்து கூறுகிறபது.

முன்றில் பலவின் படுசுளை மரீஇப்
புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை
மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி
ஐவன வெண்நெல் குறூஉம் நாடனொடு
சூருடைச் சிலம்பின் அருவி ஆடிக்
காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்

பாவமை இதணம் ஏறிப் பாசினம்
வணர்குரல் சிறுதினை கடியப்
புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே.

**உரை** :—தோழீ! இன்று அன்னை நம்மை நோக்கி ஐயப்பாடெய்தி இல்லயிற்செறிப்பக் கருதியதனால், மெல்லிய தலையையுடைய மந்தி இல்லின் முன்புள்ள பலாமரத்திலிருந்து அதன் பழத்தைக் கீண்டு நிறைந்த

# மூலமும் உரையும்

சஎள

சுளைகளையுண்டு அவற்றின் வித்தினைக் கீழே யுதிர்ப்ப, அயலிலேநின்ற கொடிச்சி தன் தந்தையினது மேகந்தவழும் கரிய மலைவளம்பாடி வெளிய ஐவனநெல்லைக் குத்துகின்ற மலைநாடனாகிய நம் காதலனோடு அச்சஞ் செய்யும் மலைப்பக்கத்திலுள்ள அருவியாடிக் கரிய நிறத்தையுடைய அரும்பு மலர்ந்த சோதிடம் வல்லார்போன்ற வேங்கைமரத்தின்மேலே கட்டிய பரப்பமைந்த பரண்மீது ஏறி விளைந்த கதிர்களையுடைய சிறிய தினைப்புனத்தின் கண்ணே வருகின்ற பசிய கிளியினத்தைக் கடிந்து யோக்குமாறு இன்றிருந்ததுபோல நாளையும் நமக்குப் பொருந்துவதாமோ? அங்ஙனம் பொருந்தாதுபோலும்; எ - று.

வேங்கை அரும்புங்காலம் தினைமுற்றுமாதலின் அரும்பியதுகண்ட கானவர் தினைகொய்ய ஈண்டுவர்; அதுபற்றிச் சோதிடம்வல்லார் போறலின் வேங்கை கணியெனப்பட்டது.

உள்ளுறை :—மந்தி பழத்தின் சுளையைத்தின்று அதன் வித்தினைக் கீழ் உகுப்பக் கொடிச்சி வரைபாடி நெற்குறுவாள் என்றது, தலைமகன் தலைமகளது நலனைக் களவினுண்டு அதனாலாய பழிச்சொல்லைப் பரவவிட அன்னை வேலனையழைத்து வெறியெடுத்து முருகனைப்பாடி யாட்டைச் சிதைக்குமே என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவு கடாதல்.

(நஎந)

## நஎச. வன்பரணர்

முல்லை : இது, வினைமுற்றி மீள்வான் இடைச்சுரத்துக் குச் சொல்லியது.

கண்டார்க்

எ - து, சென்று வினைமுடித்து மீளுந்தலைமகன், தான் காதலியைக் கண்டு மகிழ்வதனை நினைந்து விரைய வருகின்றான் நெறியில் வந்து கண்ட அயலாரொடு, 'அயலீர், எம் காதலி எமக்கு விருந்தயரும் விருப் பினளாய் உணவு அமைக்கும் நிலைமையை இதன்முன்னம் முழுமையும் பெற்றுடையேமோ? இல்லையே! இப்பொழுது பெறலாகியதே! இஃது என்ன வியப்பு,' என மகிழ்ந்து கூறுகிறப்பது.

முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி

சிறுகுடிக்

களரிப் புளியிற் காய்பசி பெயர்ப்ப
உச்சிக் கொண்ட ஓங்குகுடை வம்பலீர்
ரு. முற்றையும் உடையமோ மற்றே பிற்றை
வீழ்மா மணிய புனைநெடுங் கூந்தல்
நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
விருந்தயர் விருப்பினள் வருந்துந்
திருந்திழை அரிவைத் தேமொழி நிலையே.

உரை :—பரல் நிரம்ப மேலே பொருந்திய சென்றுசேர்தற் கியலாத நெறியில் உயர்ந்து தோன்றும் உப்புவாணிபமக்கள் நிறைந்திருக்கின்ற சிறிய குடிகளையுடைய களர்நிலத்தில் விளைந்த புளியின் கனியைச் சுவைத்து

உண்டு நம்மை வருத்துகின்ற பசியைப் போக்குதலாலே மீட்டும் நெறியிலே செல்லும் வன்மையிக்குடையீராய் உச்சிமேற்கொண்ட உயர்ந்த குடையையுடைய புதிய மாந்தர்காள்! இதுகாறும் பிரிந்ததனால் பிரியும் பொழுதின்றி அதன்பின்பு வருந்திக் கண்ணீர்வடிந்து விழுதலா லாகிய புள்ளி கொங்கையை நனையாநிற்ப யாம் புதியேமாகி வருதலின் எமக்கு விருந்துசெய்யும் விருப்பினளாய் அட்டிற்சாலைபுகுந்து உணவு அமைக்குந் தொழிலில் வருந்துகின்ற விரும்பிய கரிய மணியின் தன்மையுடைய அலங்கரித்த நெடிய கூந்தலையும் திருந்திய கலன்களையும் இனிய மொழியையுமுடைய மடந்தையி னிலையை இதன்முன்பும் இவ்வாறிருக்க முழுதும் பெற்றுடையேமோ? இல்லைகண்டீர்; இப்பொழுதுதான் பெறலாகியதே! இஃதென்ன வியப்பு? எ - று.

காய்செவிபெயர்ப்ப எனவும்பாடம். அதற்குப் பசியாலாய செவி அடைப்புத்தீர என்க.

பின்பு பிற்றையென்பது போல முன்பு முற்றையெனத் திரிந்தது போலும்; அருகியவழக்கு. மற்று - அசைநிலை. கூந்தல் திருந்திழைத் தேமொழி அரிவை யெனக் கூட்டுக.

இதன்முன் அட்டிற்சாலை புகுந்தறியாதாள் எம்பாலுள்ள அன்பால் இன்று புகுந்து வருந்தாநிற்குமென்று மகிழ்கின்றான் 'முற்றையு' முடையமோவென்றான். தனக்கு அன்பு மீதூர்ந்து வாய்சோர்ந்து சொல்விரைந்து தோன்றலின் யாதொரு தொடர்பு மில்லாத நெறிவரும் அயலாரை விளித்துக் கூறினான். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - மகிழ்தல். (கஎச)

## கஎரு. பொதும்பில் கிழார்மகன் வெண்கண்ணி.

## நெய்தல் :

*இது, வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தலைமகளது நிலையுணர்ந்த தோழி வரைவுகடாயது.*

*எ - து, மணஞ்செய்துகொள்ளாது தலைமகன் நெடுங்காலம் களவின் வந்தொழுகுதலானே வருந்துந் தலைமகளது நிலைமை இன்னதென வுணர்ந்த தோழி தலைமகனை யடைந்து சேர்ப்பனே! எம் தலைவி மகிழும் வண்ணம் எம்மூரின்கண்ணே வரைவொடுவரின் அது நலமாகு மென்று வெளிப்படையாகக் கூறுநிற்பது.*

நீடுசினைப் புன்னை நறுந்தாது உதிரக்
கோடுபுனை குருகின் தோடுதலைப்
பெயரும்
பல்பூங் கானல் மல்குநீர்ச் சேர்ப்ப
அன்பிலை ஆதலின் தன்புலன் நயந்த
என்னும் நாணும் நன்னுதல் உவப்ப
வருவை ஆயினோ நன்றே பெருங்கடல்
இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்திரை
எறிவன போல வரூஉம்
உயர்மணல் படப்பைஎம் உறைவின் ஊரே.

உரை:—நீண்ட கிளையையுடைய புன்னையின் நறிய மகரந்தம் உதிரும்படி அக்கிளைகளின்மீது அலங்கரித்தாற்போன்று வைகிய நாரையின்கூட்டம் இரைவேண்டிப் பெயர்ந்து உலாவாநிற்கும் பலவாகிய மலர்களையுடைய கடற்கரைச் சோலையையும் மிக்க உவர்நீரையுமுடைய நெய்தல்நிலத் தலைவனே! நீ பலகாலும் வந்து முயங்கியும் எம்பால் அன்புடையை அல்லை; அங்ஙனம் அன்புடையையாயிருப்பின் அவளுடைய அறிவின்வழியே ஒழுகுகின்ற என்பாலும் சொல்லுவதற்கு வெள்குகின்ற நல்ல நுதலையுடையாளாகிய அத் தலைவி உவக்கும்வண்ணம் பெரிய கடலிடத்து இராப்பொழுதிலே தண்கதிர்த்திங்கள் தோன்றுதலானே அதுகண்ட வலிய அலைகள் மோதுவனபோல எழுந்து வாராநிற்கும் உயர்ந்த மணல் நிரம்பிய கொல்லைகளையுடைய யாம் உறைகின்ற எம்மூரிடத்து நீ அவளை மணஞ்செய்து கொள்ளுமாறு வரல்வேண்டும்; அவ்வாறு வருவையாயின் அது மிக நல்லதொரு காரியமாகும்; எ - று.

கடல்மீது நிறைத்திங்கள் எழுந்துழி அக்கடல்நீர் பொங்கியெழுதல் வெளிப்படை. உவப்பவருதியென்றதனால் வரைந்து தலைமகள் மகிழுமாறு வருவாயாக வென்றவாறு.

உள்ளுறை:—புன்னைக்கிளையில் வைகிய குருகினம் அதன் மகரந்தம் உதிருமாறு கொம்பை அலைத்தெழுந்து செல்லுஞ் சேர்ப்பனென்றதனால் களவொழுக்க மேற்கொண்டு தலைவிபால் வைகிய நீ அவள் அழுது கண்ணீர் வடிக்குமாறு கையகன்று போயினை; இனி அங்ஙனமின்றி வரைந்து பிரியாது உறைவாயாக வென்றதாம்.

இறைச்சி:—திங்களைக்கண்டு கடல் பொங்கி அலையெழுந்து ஆரவாரிக்கு மென்றது, நீ வரைவொடு வருதல்கண்டு எமர் எதிர்கொண்டு மகிழ்ந்து ஆரவாரிப்ப ரென்றதாம். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவுக்குடாதல். (௩எ௩)

## ௩எ௪. கபிலர்

குறிஞ்சி:

இது, தோழி கிளிமேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறிப் பறிவுறீஇயது.

எ - து, களவின் வழிவந்தொழுகுந் தலைமகன் ஒருநாள் ஒருசிறைப் புறமாக வந்திருப்பதையறிந்த தோழி, தலைமகளை இல்வயிற் செறித்ததை அவன் அறிந்து மணஞ்செய்துகொள்ளு மாற்றானே கிளிகளை நோக்கிக் 'கிளியின்கூட்டமே அன்னை எம்மை இல்வயிற் செறித்திருப்பதனை நீயிர் அறிந்தீரன்றே! இனி வெறியு மெடுக்கும்போலும்; இவற்றை எம் காதலனைக் காண்பீரேல் நன்றாக அவனுக்கு அறிவியுங்கோள்' என்று அழிந்து கூறாநிற்பது.

முறஞ்செவி யானைத் தடக்கையில் தடைஇ
இறைஞ்சிய குரல பைந்தாள் செந்தினை
வரையோன் வண்மை போலப்
பலவுடன்
கிளையோடு உண்ணும் வளைவாய்ப்
பாசினம்
௫. குல்லை குளவி கூதளங் குவளை
இல்லமொடு மிடைந்த
ஈர்ந்தண் கண்ணியன்

சுற்றமை வில்லன் செயலைத் தோன்றும்
நற்றார் மார்பன் காண்குறில் சிறிய
நன்கவற்கு அறிய உரைமின் பிற்றை
அணங்கும் அணங்கும் போலும் அணங்கி
வறும்புனங் காவல் விடாமை
அறிந்தனிர் அல்லிரோ அறனில் யாயே.

உரை :—முறம்போலுஞ் செவியையுடைய யானையினது வளைந்த கை போல வளைந்து தலைசாய்ந்த கதிர்களையும் பசிய அடித்தண்டினையுமுடைய செவ்விய தினையை, வரையாது கொடுப்பவனது கைவண்மைக்கு ஈண்டும் பரிசிலர்போலப் பலவாகிய சுற்றத்தொடு நெருங்கிவந்து உண்ணுகின்ற வளைந்த வாயையுடைய பசிய கிளியின்கூட்டமே! தலைவனை முன்பு முயங்கி அவனை நீங்கியபின்னர், அறநெறியிலே நில்லாத எம் அன்னை எம்மை வருத்திக் காவலின்றி அழிகின்ற தினைப்புனத்தினை யாம் காவல் செய்ய விடாது இல்வயிற் செறித்திருப்பதனை நீயிர் அறிந்தீரன்றே! இதன்பின்பு வெறியெடுத்தலாலே, முருகவேளும் எம்மை வருத்தும் போலும்? ஆதலிற் 'குல்லை, மலைப்பச்சை, கூதாளி, குவளை, தேற்று' என்பனவற்றின் மலராற் புனைந்த மிகக்குளிர்ந்த பூமாலையை யுடையவனும், வரிந்துகட்டிய அமைந்தவில்லை யுடையவனுமாகி அசோகமரத்தின்கீழ் வந்துநிற்கும் நல்ல மாலையணிந்த மார்புடைய அவனை நீயிர் காண்பீராயின் இங்கு நிகழ்ந்த எல்லாவற்றினையுங் கூறுதுவிடினும் சிறிய சிலவற்றையேனும் அறிந்துகொள்ளுமாறு நன்றாக அவனுக்கு உரையுங்கோள்; எ - று.

குல்லை - கஞ்சா; துழாயுமாம். இல்லம் - தேற்றுமரம். யாய் அணங்கிப் புனங்காவல்விடாமை அறிந்தனிர் அல்லிரோவென்க. இமையார் என்னும் எதிர்மறைவினையாலணையும்பெயர் இமையோரெனத் திரிந்தது போல வரையானென்பது வரையோனெனத் திரிந்துநின்றது. இது, அறத்தொடுநிலை. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வரைவு கடாதல். (௱௭௬)

௱௭௭. மடல்பாடிய மாதங்கீரனார்

குறிஞ்சி :

இது, சேட்படுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

எ - து, பாங்கியிற் கூட்டத்துக்கண்ணே தலைமகனைக் குறைநயப்பித்த தோழி நீட்டியாது வரைந்துகொள்ளுதல் முதலாய காரணங்களைக்கொண்டு தலைமகனுக்கு மறுத்துக்கூறுதலும், அதனை ஆற்றானாகிய தலைமகன் தோழி அறிந்து விரைவிலே தன்குறைமுடிக்கு மாற்றானே தலைவியை உள்ளுந் தோறும் அவள் என்னை வினாவிமெலிவிக்கும் ; நோய் பெருகாநின்றது ; அதுதீர மடலேறாது இறந்துபடேமோவென்று அழிந்து கூறாநிற்பது.

மடல்மா ஊர்ந்து மாலை சூடிக்
கண்ணகன் வைப்பின் நாடும் ஊரும்
ஒண்ணுதல் அரிவை நலம்பா ராட்டிப்
பண்ணல் மேவலம் ஆகி அரிதுற்று



௫. அதுபிணி ஆக விளியலங் கொல்லோ
அகலிரு விசும்பின் அரவுக்குறை படுத்த
பசுங்கதிர் மதியத்து அகனிலாப் போல
அளகஞ் சேர்ந்த சிறுநுதல்
கழறும் மெலிக்கும் நோயா கின்றே.

**உரை**:—அகன்ற கரிய ஆகாயத்தின்கண்ணே அரவினாற் சிறிது விழுங்கிக் குறைபடுக்கப்பட்ட பசிய கதிர்களையுடைய திங்களின் விரிந்த நிலாவைப்போல ஒளிவீசுகின்ற கூந்தல் சேர்ந்த சிறிய நெற்றியை உடையாள் யாம் நினைக்குந்தோறும் எம்மெதிரே தோன்றி எம்மை வினவி மெலியப்பண்ணுநிற்கும்; அதனால் எமக்குக் காமநோய் நனி மிகாநின்றது; அது தீருமாறு,—பனைமடலாலே செய்த குதிரையேறி நடத்தி 'ஆவிரை, எருக்கம், பூளை, உழிஞை' என்பனவற்றின் மலரை விரவித் தொடுத்த மாலை அணிந்து இடமகன்ற வைப்புக்களையுடைய நாடுகள்தோறும் ஊர்கள் தோறும் சென்று ஒள்ளிய நெற்றியையுடைய அவளது அழகைச் சிறப்பித்துக்கூறி அம் மடலேறுந் தொழிலிற் செல்லேமாகி எம்முள்ளத்தை அரிதாக நிலைநிறுத்தி அதுவே நோயாகக்கொண்டு கிடந்து இறந்துபோக மாட்டேமோ? அங்ஙனம் மடலேறிப் பலராலும் இகழப்பட்டுத்தான் முடியவேண்டும்போலும்.? மடலேறுதலினும் உயிர்துறந்தொழிதல் நலனன்றோ? எ – று.

பண்ணல்மேவலம் என்பன ஒருசொல்லாகிப் பாராட்டி என்பதற்கு முடிபாயின. அகனிலாவையுடைய மதியம்போல வென மாறிக்கூட்டினும் அமையும். எதிர் தோன்றுதல் – உருவெளித்தோற்றம். இது, துன்பத்துப் புலம்பல்.

அவளைச் சிறப்பித்துக் கூறுவான்போலத் தான் அவள்பால் வைத்த அன்பின் நிலைமை புலப்படுத்தினான். நோய்கொண்டு இறவேமோ என்றதனால் மடலேறி வரைபாய்ந்து முடியவேண்டும்போலும் என்றான். இதனால் அவள்காரணமாக உயிர்விடத்துணிந்தமையும் அவ்வாறு உயிர் விடும்பழி நும்மை விடாதென்பதையும் அறிவுறுத்தினானாயிற்று. **மெய்ப்பாடு** – தன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரல். **பயன்** – தோழி குறைமுடிப்பது; அன்றேல் தானேகூறியாறுதல். (௱எஎ)

## ௱எஅ. வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

**நெய்தல்** : (க) இது, தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

எ – து, களவின் வழிவந்தொழுகுந் தலைமகன் ஒருபுறம்வந்து வைகி ஞன் அறிந்து விரைய வரைவொடு புகும்வண்ணம் தோழி, தலைவியை நெருங்கித் தோழீ! யாமம் முதலாயின வருத்தாநிற்ப இன்னும் ஞாயிறு தோன்றினபாடில்லை; முன்பு சேர்ப்பனொடு ஆராயாதுசெய்த நட்பின் அளவானது ஏதிலாட்டியர் அலர்தூற்றுமாறு இவ்வண்ணம் ஆயிற்றுக்காண் என்று வருந்திக் கூறுநிற்பது.

(உ) தலைமகன் ஒருவழித் தணந்தபின்னை வன்பொறை எதிர்மொழிந்ததூஉமாம்.



எ – து, தலைமகன் ஒரு வினைமேலிட்டுப் பிரிந்துபோகியபின் வருந் திய தலைமகளைத் தோழி, வலிதிற் பொறுத்திருவென்றாட்கு அவன்பாற் கொண்ட நட்பின் அளவானது ஏதிலாட்டியர் அலர்தூற்றுமாறு இங்ஙன மாயினதேயென்று அழிந்து கூறுநிற்பதுமாகும். (உரை இரண்டற்கும் ஒக்கும்.)

யாமமும் நெடிய கழியுங் காமமும்
கண்படல் ஈயாது பெருகுந் தெண்கடல்
முழங்குதிரை முழவின் பாணியின் பைபயப்
பழம்புண் உறுநரின் பரவையின் ஆலும்
ரு. ஆங்கவை நலியவும் நீங்கி யாங்கும்
இரவிறந்து எல்லை தோன்றலது அலர்வாய்

அயலிற் பெண்டிர் பசலை பாட
ஈங்கா கின்றால் தோழி ஓங்குமணல்
வரியார் சிறுமனை சிதைஇ வந்து
பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பிப்
பாடிமிழ் பனிநீர்ச் சேர்ப்பனொடு
நாடாது இயைந்த நண்பினது அளவே.

**உரை**:—தோழீ! இரவு நடுயாமமும் நெடும்பொழு துடையவாகிக் கழியாநிற்கும்; எமக்குளதாகிய காமமும் கண்ணுறங்கவொட்டாது பெருகாநிற்கும்; தெளிந்த கடலின்கண்ணே முழங்குகின்ற அலைகளும் முழவோசைபோல மெல்லமெல்ல ஒலித்து நெடுநாட் புண்ணுற்றாரைப் போலப் புரண்டுபுரண்டு அக் கடலிடத்து அசைந்து இயங்காநிற்கும்; அவை அவ்வண்ணம் நம்மை வருத்தாநிற்கவும் நீங்கி இராப்பொழுதைக் கடந்து ஞாயிறு தோன்றினபாடில்லை; உயர்ந்த மணற்பரப்பிலே புனைந்து கோலமிட்ட சிறிய மணற்சிற்றிலைச் சிதைத்து நம்பால் வந்து அன்புமிகும் படி கூறிய மெல்லிய சூளுரையை மெய்யென விரும்பிக்கொண்டு பக்கத்தில் ஒலிக்குங் குளிர்ச்சியையுடைய கடற்கரைத் தலைவனுடனே 'முன்பு இவன் இத்தன்மையன்' என்று ஆராய்ந்துபாராது உடன்பட்டதனாலாகிய நட்பி னளவானது பழிச்சொற்கூறும் வாயையுடைய அயல்வீட்டு மாதர்கள் எம்முடைய நெற்றியிலுண்டாகிய பசலையைக் குறித்துப் பலவாய இழிந்த பாடல்களைக் குறிப்பாகப் பாட இவ்வாறிழிதக வெய்தப்பண்ணியது கண்டாய்; எ – று.

முழவின் பாணிபோல எனவும் புண்ணுறுநர்போல எனவுங்கூறி அவற்றின் வினைகூறாமையின் "வந்த" (தொ-பொ-சூ. ௨௭௬) என்றதனால் இல்லாத வினைவருவித்துரைக்கப்பட்டது. இப்பாட்டின் கருத்தைத்தழுவி "நாடாது நட்டலிற் கேடில்லை" என்றார் (௭௯௧) குறளினும். சிறுமனை சிதைத்தல் மைந்தர்க் கியல்பு. "மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய, கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி" என்றார் (௫௧) கலியினும். இது, துன்பத்துப் புலம்பல். தோழி கூற்றுக்கு **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். தலைவி கூற்றுக்கு **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயாவுயிர்த்தல்.

(௩௭௮)

## ருஎகூ. குடவாயிற் கீரத்தனார்

**குறிஞ்சி:** (க) இது, தோழி தலைமகற்குக் கூறியது.

தலைமகளை மடமை

எ - து, பாங்கியிற்கூட்டத்துத் தலைமகன் ஈன்குமதித்து விரைந்து வரைதல்காரணமாகச் சேட்படுக்குந் தோழி அவனை நெருங்கி, நீ காதலித்த இளமகள் தான் பருகவெடுத்த பாலைக் குரங்கின்குட்டி பறித்ததனால் அழுதலிற் கண்கள் நீர்நிரம்பிய நீலம்போன்றன; வயிற்றின் அறைந்து கோடலின் கைவிரல்கள் காந்தளிதழ்போன்றன; இவ்வளவு அறியாமையுடையாள் நினது துயரை எவ்வாறு போக்குமென அவளது பேதைமை காட்டி மறுத்துக் கூறுகிறபது.

(உ) கற்புக் கைமிக்க காலத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

எ - து, இல்வயிற் செறித்துக் காவலோம்பிய பொழுது வருந்திய தலைவியை வினவிய தோழிக்கு, அவள் இன்ன இன்ன காரணத்தால் கண் நீலமொத்தன விரல் காந்தளொத்தன வென்று கூறுகிறபதுமாகும்.

புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்
குன்றுழை நண்ணிய முன்றில் போகாது
எரிஅகைந்து அன்ன வீததை இணர
வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய
தேம்பெய் தீம்பால் வெளவலின்
கொடிச்சி எழுதெழில் சிதைய அழுத
கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயில்
மாரியங் கிடங்கின் ஈரிய மலர்ந்த
பெயலுறு நீலம் போன்றன விரலே
பாஅய் அவ்வயிறு அலைத்தலின் ஆனாது
ஆடுமழை தவழுங் கோடுயர் பொதியின்
ஓங்கிருஞ் சிலம்பில் பூத்த
காந்தளங் கொழுமுகை போன்றன
சிவந்தே.

உரை :—ஐயனே! புல்லிய தலையையுடைய பெண்குரங்கினது தன் தொழிலையும் முற்றக் கற்றறியாத வலியகுட்டி சிறு குன்றினிடத்துப் பொருந்திய சிறுகுடியின்கணுள்ள மனைவாயினின்றும் போகாது எரி கப்புவிட்டாற்போன்ற மலர்கள் நெருங்கிய பூங்கொத்தினையுடைய வேங்கைமரத்தின் தாழ்ந்த கிளைமீது மறைந்திருந்து, நீ காதலித்த கொடிச்சி கையகத்திருந்த தேன்கலந்த இனிய பாலைக் கலத்தொடு வலிந்து பற்றிக் கொண்டு சென்றுவிட்டதனால், ஓவியர் எழுதுதற்குரிய அழகெல்லாம் கெடும்படி அழுத அவளுடைய கண்கள் இரவலர்க்குப் பரிசாகத் தேர்களைக் கொடுக்கின்ற வண்மையுடைய சோழமன்னவர்க்குரிய 'குடவாயில்' என்னும் ஊரகத்து மழைபெய்து நிரம்பப்பெற்ற அகழியிலே தண்ணியவாய் மலர்ந்த பெய்யும் மழைநீரை ஏற்ற நீலமலர்போன்றன; அங்ஙனம்



பாற்கலம் பறிபட்டதற் காற்றாது அழகிய வயிற்றிலே பரவ அடித்துக் கொண்டதனால் அவளுடைய விரல்கள் சிவந்து, அமையாது இயங்குகின்ற மேகந்தவழுங் கொடுமுடிகள் உயர்ந்த பாண்டியனது பொதியிலென்னும் உயர்ந்த பெரிய மலையில் மலர்ந்த கொழுவிய காந்தளின் மலரும் பருவமுகை போன்றன; இத்தகைய இளமைவாய்ந்த அறியாமடமையாள் நின்னை மயக்கினள் என்பதும் நின்காமந் தணிக்குமென்பதும் எவ்வண்ணமோ? ஒன்று கூறுவாயாக; எ - று.

படுசினை - தாழ்ந்தகிளை. தேம்பெய்பால் - கண்டசருக்கரையொடு கலந்தபால். குடந்தை - குடமென்பதன் திரிபு. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - பேதைமையூட்டல்.

(உ) உரை :—கொடிச்சியாகிய தோழீ! யான் மெய்துவண்டதுதான் என்னென்றனையே! பால் வௌவலின் கண் அழுது நீலம்போன்றன; வயிறலைத்தலின் விரல் காந்தள்போன்றன; எ - று.

கொடிச்சி வயிறலைத்து அழுமாறு, மந்தியின் மகவு பாலைவெளவுதல் போல நீ மனந்தளருமாறு எதிலார் பொன்னணிந்து தலைவியைக் கைக் கொள்ளினுமாம்; ஆதலின், இன்னே வரைகவென் றுரைத்தாளென வேறு மொருபொருள் பயப்பது அறிக. **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - அயா வுயிர்த்தல். (ருஎக)

## ருஅ௦. கூடலூர்ப் பல்கண்ணனார்

**மருதம்:** இது, பாணற்குத் தோழி வாயில் மறுத்தது.

எ - து, பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகன் துனிகொண்ட தலைமகளது ஊடல்தீர்க்குமாறு பாணனை விடுப்ப, வந்தானை நோக்கிய தோழி 'பாணனே! தலைவி ஈன்ற அணிமையால் முயங்குதற்குரியளல்லள்; ஆதலால் ஊரனைப் பரத்தையர்சேரிக்கண்ணே கொண்டுசெல்வாயாக; எம்மைத் தொழாதேகொள்; பயனில கூறற்க' என மறுத்துக் கூறுநிற்பது.

நெய்யும் குய்யும் ஆடி மையோடு

மாசுபட் டன்றே* கலிங்கமும் தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்†

புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே

௫. வாலிழை மகளிர் சேரித் தோன்றுந்

தேரோற்கு ஒத்தனெம் அல்லேம் அதனால்
பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்

எழாஅல் வல்லே ஆயினுந் தொழாஅல்
கொண்டுசெல் பாணநின் தண்துறை யூரனைப்
௧௦. பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்
புரவியும் பூணிலை முனிகுவ
விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே.

(பாடம்) * பட்டின்று. † பிலிற்று; பனிற்ற.

## மூலமும் உரையும்

௬௨௫

உரை :—பாணனே! எம்முடைய ஆடைதானும் நெய்யும் நறும்புகையும் அளாவிப் புதல்வற்குத் தீட்டும் மையும் இழுகி அழுக்கும் படிந்திராநின்றது; சுணங்கணிந்த மெல்லிய கொங்கையின் இனியபால் பெருகுதலாலே அந்தப் பால்சுரப்பப் புதல்வனைப் புல்லிக்கொண்டு எம் தோளும் ஈன்ற அணிமையானாகிய முடைநாற்றம் வீசாநிற்கும்; இங்ஙனமாகையில் தூய இழையணிந்த பரத்தையர் சேரிக்கண்ணே தோன்றுகின்ற தேரை உடைய காதலன் கூடுதற்குரிய தகுதிப்பாடு உடையேமல்லேம்; ஆதலின் நின் தண்ணிய துறையையுடைய அவ்வூரனை இப்பொழுதே கொண்டு சென்று பரத்தையர்பால் விலைகொண்டு ஈடாக உய்ப்பாயாக; பொன் போன்ற நரம்பின் இனிய ஓசையையுடைய சிறிய யாழையெடுத்துப் பாடுதலில் நீ வல்லனேயாயினும் ஈண்டு எம்மைத்தொழுது பாடாதேகொள்; சிறந்த எமது மனையின்கண்ணே நீ நின்று பாடுதலைச் செய்யாதபடி நெடும் பொழுது நிற்றலையுடைய தேரிலே பூட்டிய குதிரைகளும் தம்மைப் பிணித்திருத்தலை வெறுக்கின்றனகண்டாய்; யாம் விரும்பியது இல்லாதவிடத்துப் பயனில்லாத சொற்களை எம்பால் மொழியவேண்டா; எ – று.

நெய் – வாலாமைநீங்க ஆடும்நெய். குய் – அவ்வாலாமை முதலாய முடைநாற்றம் நீங்க இடும் நறும்புகை. எழால் – யாழ்நரம்பினோசை.

*பரத்தைமகளிர் தாயராதலின் அங்குச் செல்கவென்பாள், வாலிழை மகளிரென்றாள். அதன்முன் தம் இழிந்தநிலைமை கூறுவாள், புனிறுநாறு மென்றாள். சேரித்தோன்றும் தேரென்றது, தம்மனைக்கண்ணே நிறுத்தாது பரத்தையர் சேரியிலேயே நாளுங்கொண்டு சென்ற அவன்கொடுமை குறித்தவாறு. எழால் வல்லையென்றது, அதனால் எம்மை வசிக்க இயலாதென்றவாறு. நீடுநிலைப் புரவியென்றது, ஊரன் நெடும்பொழுது அயலில் வந்திருப்பதனை யாம் அறிந்துளேமென்றவாறு.* **மெய்ப்பாடு** - *வெகுளி.*
**பயன்** - *வாயின்மறுத்தல்.* (௩௪0)

## ௩௪க. ஔவையார்

**முல்லை :** *இது, பிரிவிடை யாற்றாளாகிய தலைமகள் பருவவரவின்கண் சொல்லியது.*

*எ - து, தலைமகன் வினைவயிற் பிரிந்தவழி ஆற்றாத தலைமகள், அவன் குறித்தபருவம் வருதலும் கண்டு, அவர்கூறிய கார்காலம் வந்து நிலைத்திரா நின்றது; இன்னும் இறந்துபடுதலின்றி யானும் உயிரோடிராநின்றேன்; நடுங்குவது தீராத உள்ளத்துடனே இத் துன்பத்தை எவ்வாறு தாங்குவேன் என அழிந்து கூறுநிற்பது.*

அருந்துயர் உழத்தலின் உண்மை சான்மெனப்

பெரும்பிறிது இன்மையின் இலேனும்

அல்லேன்

கரைபொருது இழிதரும் கான்யாற்று

இகுகரை

வேர்கிளர் மாஅத்து அந்தளிர் போல

நடுங்கல் ஆனு நெஞ்சமொடு இடும்பை
யாங்கனந் தாங்குவென் மற்றே

ஓங்குசெலல்

கடும்பகட்டு யானை நெடுமோன் அஞ்சி



ஈர நெஞ்சம் ஓடிச்சேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்ருல் மழையே.

உரை :—தலையெடுத்து நடக்கும் உயர்ந்த விரைந்த நடையையுடைய களிற்றியானைப்படையும், விரைந்து செல்லுங் குதிரைப்படையுமுடைய அஞ்சியென்பான் குளிர்ந்தஉள்ளத்தால் ஆராய்ந்து நீண்டகாலம் தன்பெயர் விளங்குகிற்குமாறு இரவலர்க்குத்தேர்களைப் பரிசுகொடுக்க இருக்கின்ற நாளோலக்கம்போல மேகம் மழைபெய்யத்தொடங்கி மாருது ஒரு தன்மையாய்ப் பெய்யாநின்றது; என் காதலர் வருவேமென்ற இப்பருவத்தில் அவர் வாராமையாலே தாங்குதற்கரிய துன்பத்தை நுகர்தலின் அறிகுறியாக இதுகாறும் யான் இறந்தொழியின் அவர்பால் அன்புடையேன் என்பது உண்மையாகும்; அவ்வாறு இறந்தொழியாமையின் அன்பிலேன் அல்லேனே? அவ்வண்ணம் அன்பில்லாதேனை அவர் அருளாராயினும் கரையைமோதி யோடுகின்ற கான்யாற்றின் இடிகரையில் வேர்களெல்லாம் அசைப்பட்டுத்தோன்றிக் காற்றுலலையும் மாமரத்தின் அழகிய தளிர்போல நடுங்குதல் நீங்காத நெஞ்சுடனே இத்துன்பத்தை எவ்வாறு தாங்கவல்லேன்? எ - று.

பெரும்பிறிது - சாக்காடு. இருகரை - இடிந்தகரை. இடும்பை - காமநோயுமாம். மெய்ப்பாடு-அழுகை. பயன்-அயாவுயிர்த்தல். (௩௮௧)

௩௮௨.

# நிகண்டன் கலைக்கோட்டுத்தண்டனார்

**நெய்தல்:**

*இஃது, ஒருவழித்தணந்தகாலத்துப் பொழுதுபட ஆற்றாள் ஆகின்ற தலைமகளைத் தோழி ஆற்றுவிக்கல்லாள் ஆயினாட்குத் தலைமகள் சொல்லியது.*

*வ - து, களவின்வழிவந் தொழுகுந் தலைமகன் யாதோவொரு காரியமாக இறைமகளை யகன்று போகியகாலை மாலையம்பொழுதுகண்டு அவ்விறைமகள் வருந்துவதறிந்த தோழி தான் அவளை ஆற்றுவிக்காது தனியே வருந்தலும், அதனையறிந்த தலைவி தான்படுந் துன்பத்தை யடக்கிக்கொண்டு தோழியை நெருங்கித் தோழீ! நம்மை யகன்ற காதலரை நினைந்து நாம் வருந்துவதாயினும் அவரும் நாணும்படி அலரெழுமாதலிற் கரத்தல் வேண்டும் என்பதறிந்தே யான் வருந்துகிலேனென ஆய்ந்து கூறுகிற்பது.*

கானல் மாலைக் கழிநீர் மல்க

நீல்நிற நெய்தல் நிரையிதழ் பொருந்த

ஆனாது அலைக்குங் கடல்மீன் அருந்திப்
புள்ளினம் குடம்பை யுடன்சேர்பு

உள்ளார்

௫. துறந்தோர் தேஎத்து இருந்துநனி வருந்தி
ஆருயிர் அழிவது ஆயினும் நேரிழை
கரத்தல் வேண்டுமால் மற்றே

பரப்புநீர்த்

தண்ணந் துறைவன் நாண

நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே.

மூலமும் உரையும்

**உரை** :—நேர்மையான கலன்களையுடைய தோழீ! பரவுதல் கொண்ட கடல்நீரின் தண்ணிய துறைக்குத் தலைவராகிய நம் காதலர் களவொழுக்கம் மேற்கொண்டு பலகாலும் இங்கு வருதலால், அவரும் நாணமெய்தி இனி இவ்விடத்தை நோக்காதபடி,—நமக்குப் பகைவராயுள்ள ஏதிலாட்டியரும் சேரியம்பெண்டிரும் ஒருசேரத் தூற்றுகின்ற பழிச்சொல்லுத்தான் மிகுதியாகவுண்டன்றே; ஆதலின், மாலைப்பொழுதிலே கடற்கரைச்சோலை சூழ்ந்த கழியிடத்து நீர் உவாவெள்ளமாகிப் பெருக, நீலநிறத்தையுடைய நெய்தலின் நிரையாகிய இதழ்கள் குவிய, அமைந்திராது அலையெழுந் துலாவுங்கடலகத்து மீன்களைத் தின்னுகின்ற பறவையின்கூட்டம் கானலின்கண்ணே யிருக்கின்ற தம்தம் கூட்டினிடத்தே ஒருசேரச் சென்று புகுதாநிற்றலையுடைய மாலையம்பொழுதை நினையாராய் நம்மைக் கைவிட்டு அகன்ற அவர் முன்பு தங்கியிருந்தவிடத்து நாமிருந்து பிரிவுக்கு மிக வருந்திப் பெறுதற்கரிய உயிர் அழிந்துபோவதா யிருப்பினும் அந்நோய் புறத்தார்க்குப் புலனாகாதபடி மறைத்துக்கொள்ளுதல்வேண்டும்; ஆதலால் யான் புலம்பாது ஆற்றியிருப்பேன்காண்; அதுகாரணமாக நீ வருந்தாதே கொள்; எ - று.

சேர்பு - சேர்தல். துறந்தோர் துறைவன் - பன்மையொருமை மயக்கம்.

இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்த இடமாதலிற் கானலை முற்கூறினள்; அப்பொழுது துன்புறுங்காலம் மாலையாதலின் அதனையு முடன்கூறினள், அலைக்குங்கடலில் மீனருந்திப் புள்ளினங் குடம்பைசேரு மென்றதனாலே அரியநெறியிலே சென்று வினைமுடித்து மீண்டுவந்து கூடினாரில்லையே என்று குறிப்பித்தாளுமாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவி ஆற்றியதுகூறல். (௩௮௨)

## ௩௮௩. கோளியூர் கிழார்மகனார் செழியனார்

**குறிஞ்சி** : இது, தோழி ஆறுபார்த்துற்றுச் சொல்லியது.

எ - து, களவின்வழி வந்தொழுகுந் தலைமகனை நெறியினது ஏதங் கருதியஞ்சுவதுகூறித்தோழி இறைச்சியாலே வரைவுடன் படுத்துகின்றாள், மலைநாடனே! எம் தலைவிபால் அருளுடையையாயிருப்பினும் இன்னதொரு கொடிய நெறியில் வருதலானே, நீ அருளுடையையல்லை என நொந்து கூறுநிற்பது.

கல்லயல் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கலம் தொடலை அன்ன குருளை
வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென
வயப்புலி
புகர்முகஞ் சிதையத் தாக்கிக் களிறட்டு
உருமிசை உரறும் உட்குவரு நடுநாள்
அருளினை போலினும் அருளாய் அன்றே
கனையிருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்
பாம்புடன் திரிக்கும் உருமோடு
ஓங்குவரை நாடநீ வருத லானே.



உரை :—உயர்ந்த மலைநாடனே! நீ எம் தலைமகள்பால் மிக்க அருளுடையை போலுகின்றனை யாயினும்,—மலையின் தாள்வரையிலே தழைந்த கரிய அடியையுடைய வேங்கைமலராலே தொடுக்கப்பட்ட அசைதலை உடைய மாலைபோன்ற குட்டிகளை அணித்தாக ஈன்ற வயாநோய் பொருந்திய கரிய பெண்புலி பசியுழந்ததாக, அதனையறிந்த வலிய ஆண்புலி புள்ளிகளையுடைய முகம்பிளவுபடுமாறு மோதிக் களிற்றுயானையைக் கொன்று இடியினுங் காட்டில் மேலாக முழங்காநிற்கும் அச்சம்மிக்க நடுயாமத்திலே செறிந்த இருளான் மூடப்பட்ட, கருதினோர்க்கு நடுக்கம் வருகின்ற நெறியின்கண்ணே பாம்பின்மீது சினந்துவிழுந்து கொல்லுகின்ற இடி இடிக்கும்பொழுது நீ எங்களை நினைந்து வருதலானே அருளுடையை அல்லைகாண் ; எ – று.

அவனது அன்பின் மிகுதிபுலப்படுத்துவாள் அருளினை போலினும் எனவும், பிரிதலானே தாங்கள் துன்புறுவதும் நெறியினதேதமுங் கூறுவாள் அருளாயன்றேயெனவுங் கூறினள். இஃது அழிவில்கூட்டத் தவன் புணர்வுமறுத்தல்.

இறைச்சி:—பெண்புலி பசியுடையதென் றறிந்து ஆண்புலி களிற்றை அட்டு முழங்குமென்றது, நின் காதலி வரைந்து கொள்ள விரும்புதலை அறிந்து நீ அயல்நாடு சென்று பகைவென்று பொருள்கொண்டு வலம்புரி முழங்க வருவாயாக வென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கூஅங)

## கூஅச. பாலைபாடிய பெருங்கடுங்கோ

**பாலை:** இஃது, உடன்போகாநின்றான் மலிந்து தன் சொல்லியது.

நெஞ்சிற்குச்

எ - து, தலைமகளை வைகிருளிலே கொண்டுதலைக்கழிந்து பரன்முரம்பாகிய பயனில் நெடுஞ்சுரஞ் செல்கின்ற தலைமகன் தன்னெஞ்சை நெருங்கி நெஞ்சமே! இம் மடவோளை வேங்கைமலர் உதிர்ந்து பரவ அதன்மீது அன்னப்பறவை நடந்தாற்போல நடக்க அதனை யாம் கண்டனம் இனி நீ காண்பாயாக வென்று மகிழ்ந்து கூறுநிற்பது.

வண்புறப் புறவின்* செங்கால் சேவல்
களரி ஓங்கிய கவைமுட் கள்ளி
முளரியம் குடம்பை ஈன்றிளைப் பட்ட
வயவுநடைப் பேடை உணீஇய மன்னர்
ரு. முனைகவர் முதுபாழ் உகுநெற் பெறூஉம்

மாணில் சேய்நாட்டு அதரிடை மலர்ந்த
நன்னாள் வேங்கைப் பொன்மருள்
புதுப்பூப்
பரந்தன நடக்கயாம் கண்டனம் மாதோ
காணினி வாழியெம் நெஞ்சே நாண்விட்டு
அருந்துயர் உழந்த காலை
மருந்தெனப் படூஉம் மடவோ ளையே.

---

(பாடம்) * பண்புறப் புறவு.

உரை :—எமது உள்ளமே! நீ வாழ்வாயாக ; நாணமென்பது குறுக்கே தடுப்பின் அப்பொழுது காமநோயைத் தீர்க்குநெறியின்றி அரிய துன்பம் எய்தி யாம் வருந்தியவழி, அத் துன்பநோய்க்கு மருந்தெனப்படாது நாணம்விட்டு நெருங்கியகாலத்து அக் காமநோய்க்கு மருந்தெனப்படுகின்ற மடப்பத்தையுடைய இவளை,-வளவிய புறத்தையும் சிவந்த காலையுமுடைய புறவின்சேவல் களரில் உயர்ந்து வளர்ந்த கவையாகிய முள்ளையுடைய கள்ளியின் தலையிலே சுள்ளிகளையடுக்கி அமைத்த குடம்பையின்கண்ணே பிள்ளைகளையீன்று அவற்றைக் காவல்செய்யுமாறு பொருந்திய வருந்திய நடையுடைய பேடையாகியபுறவு உண்ணும்பொருட்டு, வேற்றரசர் படையொடு வந்து பொருது பகை முனையிலே சென்று எல்லாவற்றையுங் கவர்ந்து சென்றொழிந்ததனாலே மாந்தர் யாருமின்றி முதிர்ந்த பாழ் நிலத்திலே தானே விளைந்து உதிர்ந்த நெற்கதிர்களைப் பெற்றுக்கொணர்ந்து கொடுக்காநின்ற மாண்பு சிறிதுமில்லாத நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ள நாட்டுக்குச் செல்லுநெறியின்கண் நல்ல நாட்காலையின் மலர்ந்து வேங்கை மரத்தின் பொன்போன்ற புதியபூக்கள் உதிர்ந்து பரவிக்கிடப்ப அப் பரப்பின்மீது அன்னப்பறவை நடப்பதுபோல நடக்க அதனை யாம் நேரே கண்டு மகிழ்ந்தேம் ; அவ்வாறே இனி நீயுங்காண்பாயாக ; எ - று.

களரி - பாலையிலுள்ள களர்நிலம். முளரி - சுள்ளி ; விறகுமாம். இளைப்படல் - காவற்படல். பரந்து - பரவ எனத்திரிக்க.

இறைச்சி :—பார்ப்பையீன்று காவலாயுள்ள புறவின்பேடை உண்ணுமாறு அதன் சேவல் முதுபாழில் விளைந்த நெற்கதிரைப் பெற்றுவந்து அளிக்குமென்றது, நெஞ்சமே! இவளைப்பெற்று இல்வயிற் செல்லுகின்ற யாம் ஆண்டு இவள் இல்லறம் நிகழ்த்துமாறு வேற்றுநாட்டுச் சென்று பொருளீட்டிவந்து கொடுத்து ஓம்புகிற்போ மென்றதாம். மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல். (௩௮௪)

## ௩௮௫. ........................

### நெய்தல்:

*எல்லை சென்றபின் மலருங் கூம்பின
புலவுநீர் அடைகரை யாம்பார்ப் போடும்
அலவனும் அளைவயின் செறிந்தன
கொடுங்கழி
இரைநசை வருத்தம் வீட மரமிசைப்
ரு. புள்ளும் பிள்ளையோடு வதிந்தன அதனால்
பொழுதன்று ஆகலில் தமியை வருதி
எழுதெழில் மழைக்க.......................
(நஅரு)

---

* கிடைத்த படிகளனைத்திலும் இப்பாட்டு இந்த அளவே காணப்படுகிறது; இதன் எஞ்சிய பாகமும், துறைக்குறிப்பும், பாடினோர் பெயரும் காணப்படவில்லை.



நஅசு. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

குறிஞ்சி : இது, பரத்தையின் மறுத்தந்த தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி, தலைமகளை முகம்புகுவலென முற்பட்டாள் தலைமகள்மாட்டு நின்ற பொறாமை நீங்காமை அறிந்தும் பிறிதொன் றன்மேல் வைத்துப் பாவியேன் இன்று பேதைமை செய்தேன் எம்பெருமாட்டி குறிப்பு உணர்ந்து வழிப்படுவேன் ஆவேன்மன்னோ எனச் சொல்லியது.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில்வேண்ட நேர்ந்த தோழி தலைமகளைக் கண்ணுலே குறிப்பாகக் கூறி அறிவேனென வந்து அவன் பொய்கூறினனென இறைவி சினமாறாமை கண்டு வேறொரு காரியமாக் அங்கு வந்தவள்போலக் காட்டிப் பின்னர் யான் இவள் கருத்தறியாது இறைவனுக்கு வாயில்நேர்ந்தேன் ; அது கழிந்தது ; இங்கு இவளது குறிப்பறிந்து அவ்வாறொழுகுவேன் என்று கருதி இறைவியை நெருங்கி மலைநாடன் களவின்கண்ணே நின்பால் சூளுறலும் நீ இழித்துக் கூறினையாகப் பின்னர் வரைவொடு புகுதக்கண்ட யான் அவர் பொய்யுரையாரென வியந்தேனென்பாள், உள்ளுறையால் அத்தகைய மெய்ம்மையுடைய தலைவர் இப்பொழுது நின் முன்றிலில் நிற்கின்றனர் காணெனை நயந்து கூறுநிற்பது.

சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்

துறுகண் கண்ணிக் கானவர் உழுத

குலவுக்குரல் ஏனல் மாந்தி ஞாங்கர்

விடரளைப் பள்ளி வேங்கை அஞ்சாது

ரு. கழைவளர் சாரல் துஞ்சும் நாடன்

அணங்குடை அருஞ்சூள் தருகுவன்

எனநீ

நும்மோர் அன்னோர் துன்னோர் இவையெனத்
தெரிந்தது வியந்தனென் தோழி பணிந்துநம்
கல்கெழு சிறுகுடிப் பொலிய
௧௦. வதுவை என்றவர் வந்த ஞான்றே.

உரை:—தோழீ! சிறிய கண்ணும் பெரிய சினமுமுடைய ஆண் பன்றிகள் நிரம்பிய மாலையணிந்த கானவர் உழுதுவிளைத்த வளைந்த தினைக் கதிரைத் தின்று பக்கத்திலுள்ள மலைப்பிளப்பினைத் தனக்குத் தங்குமிடமாக உடைய புலிக்கு அஞ்சாது மூங்கில் வளர்ந்த மலைச்சாரலில் உறங்கா நிற்கும் மலைநாடன் ஒருபொழுது நின்பாற் போந்து, 'இன்னதொரு நாளில் வந்து நின்னை வரைந்துகொள்வேன் அதற்குச் சான்றாக முருகவேள் முதலாயினோரைச் சுட்டியுந் தொட்டும் யாருங் கருதலரிய சூள்செய்து தருவேன்' என்றலும் அதனைக் கேட்ட நீ அவரை நோக்கி 'நின்னையொத்த ஒருதன்மையோர் இத்தகைய சூள்புகலார்; பெருந் தகைமையென்பது நின்மாட்டில்லையாதலின் நீ சூளுறத்துணிந்தனை' என்றுகூற, அஃது உண்மையெனக் கொண்டிருந்த யான் பின்பு ஒரு பொழுது நமது மலையகத்து விளங்கிய சிறுகுடி பெருகிப் பொலிவடைய அவர் அந்தணர் சான்றோரை முன்னிட்டு அருங்கலந் தந்து 'வதுவை



அயர்தும்' என்று வந்தநாளில் அதனையறிந்து இவர் இல்லா ஒருவரென வியந்தனென்காண்; எ - று.

ஒப்புருமிக்காரும்

குலவுக்குரல் - விளைந்த கதிர். உலகத்துச் சூளுறுவார், அங்கிலத்துத் தெய்வம், பார்ப்பார், பசு, மகளிர் இவர்களைச் சுட்டியுந் தொட்டுஞ் சூளுறுவர். பரத்தையை முயங்கிவந்த தலைமகனைத் தலைமகள் வினவப் பரிமாவூர்தன் முதலாய சிலவற்றைக் கூறி அவைகாரணமாகப் பாவித்தேன் எனலும் தலைமகள் இவன் பொய்த்தான்மன்றேவெனத் துனிகூர்ந்தாளாக அதுகண்ட தோழி பண்டு நிகழ்ந்தது கூறிப் பொய்யாரென்று அறிவுறுத்தினளாயிற்று.

உள்ளுறை :—பன்றி குறவருடைய ஏனற்கதிரைத் தின்று வேங்கைக்கு அஞ்சாது சாரலிலே துஞ்சுமென்றது, தலைமகன் பரத்தையரின்பந் துய்த்து உலகமிகழும் இகழ்ச்சிக்கு அஞ்சாது நின் முன்றிலிற் காத்து வைகினனென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - ஊடலைத் தணித்தல். (௩அ௬)

# ௩அஎ. பொதும்பில் கிழார்மகனார்

**பாலை :** இது, பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி பருவங் காட்டி வற்புறீஇயது.

எ - து, தலைமகன் பிரிதலானே மெலிவடைந்த தலைமகளைத் தோழி நெருங்கிச் 'சுரத்தின்கண்ணே சென்ற காதலர் குறித்த கார்ப்பருவம் வந்திறுத்ததாதலின் அவர் இன்னே விரைந்து வருவர்காண்; அங்ஙனம் வருவதன்முன் நினது நலன் சிதைந்தழியுமாறு வருந்தாதேகொள்' என்று கூறிப் பருவங்காட்டி வலியுறுத்துக் கூறுநிற்பது.

நெறியிரும் கதுப்பும் நீண்ட தோளும்

அம்ம நாளும் தோன்னலஞ் சிதையேல்

ஓராச் செங்தோடை ஒரீஇய கண்ணிக்
கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
துன்னரும் கவலை அருஞ்சுரம் இறந்தோர்
வருவர் வாழி தோழி செருவிறந்து
ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த
வேல்கெழு தானைச் செழியன் பாசறை
உறைகழி வாளின் மின்னி உதுக்காண்

நெடும்பெருங் குன்றம் முற்றிக்
கடும்பெயல் பொழியுங் கலிகெழு வானே.

**உரை:**—தோழீ! வாழ்வாயாக; யான் கூறுகின்ற இதனைக் கேட்பாயாக; யாவரும் அஞ்சும்படி போர்வென்று தலையாலங்கானத்துச் சென்று தங்கிய வேற்படை பொருந்திய சேனைகளையுடைய பாண்டியன் நெடுஞ்செழியன் தனது பாசறையிலேயிருந்து உறையினின்று நீக்கிய வாள்போல மின்னி, உவ்விடத்தே பாராய், நெடிய பெரிய மலையைச்

சூழ்ந்து முழக்கம் மிக்க மேகம் விரைந்து மழையைப் பெய்யாநின்றது; இப் பருவத்தினை நோக்கியவுடன் வெறுத்தொழித்த மாலையையுடைய தந்தொழிலன்றிப் பிற கல்லாத வீரர் பயிலாது ஏந்திய செவ்விய அம்பினை வில்லினின்றும் விடுதலானே அஞ்சி யாரும் நெருங்குதற்கரிய குறுக்கிட்ட கவர்த்த வழியையுடைய சென்று சேர்தற் கியலாத சுரத்தின்கண்ணே முன்பு சென்ற காதலர் விரைவில் வாராநிற்பர்; அங்ஙனம் அவர் வருதற் குள்ளாக நீ வருத்தமுற்று நெறித்த கரிய கூந்தலினும் நெடிய தோளினும் நாள்தோறும் பழைமையாயுள்ள அழகெல்லாவற்றையுங் கெடுத்துக் கொள்ளா தொழிவாய்; எ - று.

மழவர் - வீரர். உதுக்காணென்றது பருவங்காட்டியது. **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைமகளை ஆற்றுவித்தல். (௩அ௭)

# ௩அஅ. மதுரை மருதங்கிழார்

# மகனார்

# பெருங்கண்ணனார்

**நெய்தல் :**

(க) இது, வரைவுநீட ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

எ - து, வரைந்தெய்துமாறு கருதிய தலைமகன் பொருளீட்டச் சென்று நீட்டித்தலாலே தலைமகள் வருந்துமெனக் கவன்ற தோழியை,— அங்ஙனம் நீட்டித்தான் மீண்டுவந்து ஒருசிறை உறுவானுதலை அறிந்த தலைமகள் நோக்கித் துறைவன் என்னைப் பிரிந்தானென்ப தன்றி அவன் என் னுள்ளத்தினின்று நீங்க அறியானாதலின், என் நெற்றியிற் பசலை எவ்வா றுண்டா மெனத் தேற்றித் தான் கூறும் உள்ளுறையைக் கேட்ட தலைமகன் விரைந்து வரையுமாறு கூறுநிற்பது.

(உ) மனையுள் வேறுபடாது ஆற்றினையென்றாற்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்குமொக்கும்.)

அம்ம வாழி தோழி நன்னுதற்கு
யாங்கா கின்றுகொல் பசப்பே நோன்புரிக்
கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்
திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ
நடுநாள் வேட்டம் போகி வைகறைக்
கடல்மீன் தந்து கானல் குவைஇ
ஓங்கிரும் புன்னை வரிநிழல் இருந்து
தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப்
பெரிய மகிழுந் துறைவன்எம்
சிறிய நெஞ்சத்து அகல்வுஅறி யானே.

உரை:—தோழீ, வாழ்வாயாக; யான் கூறுகின்ற இதனைக்கேள்; வன்மைமிக்க புரிகளான் முறுக்குண்ட கயிற்று நுனியிலே கட்டிய திமிங்கிலத்தின்மீது எறிகின்ற ஈட்டியையுடைய நீரில் விரைந்து செல்லவல்ல

திண்ணிய மீன்படகிலே செல்லுகின்ற பரதவர் ஒள்ளிய விளக்கங்களைக் கொளுத்திக்கொண்டு, இரவு நடுயாமத்து வேட்டைமேற் சென்று கடலிலே பிடித்த மீன்களை விடியற்காலையிற் கொண்டுவந்து, கழிக்கரைச் சோலையின் கண்ணே குவித்து, உயர்ந்த கரிய புன்னைமரங்களின் வரியமைந்த நிழலில் இருந்து தேன்மணம் வீசுந் தெளிந்த கள்ளை அருகிலே தம் உறவினருடன் கூடிப் பருகி, அளவில்லாது மிகவும் மகிழ்ந்துவைகும் கடலின் துறையையுடைய தலைமகன், எமது சிறிய வுள்ளத்தினின்று நீங்குதல் கற்றறிந்திலனுதலின் எப்பொழும் எம்முள்ளத்தூடே இராநின்றனன்; அங்ஙனம் அவன் எம்மைப் பிரியாது உறைதலானே எமது நல்ல நுதலின் கண்ணே பசலை எவ்வாறு உண்டாகாநிற்கும்? அதனை ஆராய்ந்து கூறிக்காண் ;எ - று.

கடுநடைத்திமிலென்க. உளி - எஃகினுலாகிய ஈட்டிக்கு ஆகுபெயர்.

அவனது உயர்வுந் தனது தாழ்வுந்தோன்றச் சிறிய நெஞ்சமென்றாள். காதலன் கையகன்றதனுல் செயலறவுகொண்டு அவனைக் கருதி யுறைகின்றேனெனவும், அங்ஙனங் கருதுவதொன்றனுல் என் நுதலின் பசலை நீங்குவதன்றி அவன் வந்து முயங்கலான் நீங்குவது கண்டிலேனெனவுங் கூறினளாயிற்று.

**உள்ளுறை :**—பரதவர் திமிலொடு சென்று மீன்பிடித்துக் கானலின் கண்ணே குவித்துப் புன்னையி னிழலிலிருந்து கிளையொடு தேறலை மாந்தி மகிழுந் துறையென்றது, தலைமகன் தேரொடு வேற்றுநாட்டுச் சென்று பொருளீட்டிவந்து முன்றிலிலே குவித்து எம்மனைக்கட் சுற்றத்தாரொடு மகிழ்ந்து என்னை மணந்து எனது நலனை நுகர்ந்து மகிழ்வானுக வென்றதாம். **மெய்ப்பாடு** - அழுகை. **பயன்** - வரைவுடன்படுத்தல். (௩அஅ)

## ௩அசு. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனர்

**குறிஞ்சி :** இது, பகற்குறிவந் தொழுகாநின்றகாலத்துத் கேட்பச் சொல்லியது.

தலைமகன்

எ-து, தலைமகன் வரையாது பகற்குறிவந் தொழுகுகின்றான் அறிந்து விரைய மணஞ்செய்துகொள்ளுமாறு தோழி தலைவியை நெருங்கி, நம் அன்னை என்னை நோக்கி, நுந்தை வேட்டைமேற் சென்றதனாலே தினைப்புனங்காப்பு நினதேயென்றனள்; அவ்வாறு காவல்செய்யும்பொழுது மலைநாடனொடு தொடர்புற்றேம்; தினைகொய்யுங்காலம் நெருங்கினமையின் அவனோடுற்ற தொடர்புதான் யாதாய் முடியுமோ' என நொந்து கூறாநிற்பது.

வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்
தேம்படு நெடுவரை மணியின் மானும்
அன்னையும் அமர்ந்துநோக் கினளே
என்னையும்

௫.

களிற்றுமுகந் திறந்த கல்லா விழுத்தொடை
ஏவல் இளையரொடு மாவழிப் பட்டெனச்
சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்
காவல் இனியென் றோளே சேவலொடு





சிலம்பில் போகிய சிதர்கால் வாரணம்
முதைச்சுவல் கிளைத்த பூழி மிகப்பல
நன்பொன் இமைக்கும் நாடனொடு

தொடர்பே.

உரை :—எம் தந்தையானவன் களிற்றியானையின் முகத்தைப் பிளந்த சிறந்த அம்பையுடைய கொலைத்தொழிலன்றிப் பிறகல்லாத ஏவன் மக்களாகிய வீரருடனே விலங்கின்பின் வேட்டைமேற் சென்றதனாலே, அன்னை என்னை நோக்கிச் 'சிறிய கிளிகள் கொய்தழிக்கின்ற பெரிய கதிர் கலையுடைய தினைப்புனம் இனி உன்னாலே காவல்செய்யப்படுவதாக' என்றனள்; அதுமுதலாக நாம் அதன்கண்ணே காவலோம்பிவருங்காலைச் சிலம்பிலே சென்ற கிளைக்கின்ற கோழி தன் சேவலுடனே பழங்கொல்லையின் மேற்புறத்தைக் கிளைத்த புழுதியிடையே மிகப் பலவாகிய நல்ல பொன் ஒளிவீசாநின்ற நாடனுடன் அன்புமிக்க காமமே தலைக்கீடாக யாம் தொடர்ச்சியுடையேமாயினேம்; அங்ஙனமாகிய தொடர்ச்சி விரைவின் நீங்குமாறு தினை கொய்யுங்காலங் காட்டவேண்டி வேங்கைமரங்களும் புலி போன்ற புள்ளிகளையுடைய மலரரும்பி மலர்ந்தன; அருவிகளெல்லாம் தேன்மணமிக்க நெடிய மலையிடத்தில் நீலமணிபோலத் தெளிவடைந்தன; தினைகொய்யுங் காலமும், மணம்புரியுங்காலமும் ஒருசேரவந்தமை கருதிப் போலும் எம் அன்னை அமர்ந்து என்னை நோக்கிநின்றனள்; இனி நமது தொடர்பு யாதாய்முடியுமோ? அறிகின்றிலேன்; எ - று.

புலி - மலர்க்கு உவமையாகுபெயர். முரணுதல் - மாறுகொண்டழித்தல். சிதர்தல் - கிளைத்தல்.

வேங்கை மலர்ந்தவுடன் தினை கொய்தலும், தலைவியை இல்வயிற் செறித்தலும் வழக்காதலானே தொடர்பற்றுவிட்டதென் றிரங்கினள். தலைவனைப் பிரிப்பதற்குக் காரணமாயிருத்தலின், அதன் கொடுமைதோன்றப் புலியென்ற பெயராற் கூறினள்.

இறைச்சி :—கோழி கிளைத்த பூழியிடத்து நன்பொன் இமைக்குமென்றது, செல்வக் குறைபாடில னாதலால் எமர்க்கு வேண்டும் பொருள் கொடுத்து என்னை மணம்புரிந்துகொண்டான் இல்லையேயென் றிரங்கியதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவுகடாதல். (கூஅகூ)

## ௩௯௦. ஔவையார்

மருதம் : (௧) இது, பாங்காயின வாயில்கேட்ப வியது.

நெருங்கிச் சொல்

எ - து, தலைமகன் விழாக்களத்தின்கண்ணே வரைவின்மகளிர் பலரின் நடுவண் நிற்பப், புதுவதாக மனையோளாதற்குரியாளோர் இளமகள் சுற்றத்தார் கட்டளைப்படி ஆருடலும், காவிற்பூச்சூடலும் ஆகிய தொழில்களைச் செய்யுமாறு கருதி அவனைக்கொணரவேண்டி, நிரம்பிய கோலத்துடனே அவ்விழாக்களங் குறுகுதலும் அதனையறிந்த காமக்கிழத்தி அப்புதியாளின் பக்கத்தவராய வாயிலாவார் கேட்குமாறு நெருங்கி இப்புதியவளைத் தலைவன் காணின் வரையாதுவிடான்; வரைந்தாலோ பலபலமாதர் தந்தந் நலனிழப்பராதலின் யான் இப்பொழுதே கோலங்கொண்டு சென்று

மூலமும் உரையும்

௪௩௫

இவள்பால் எய்தாதபடி அவனைக் கைப்பற்றிக் கொள்வேனென வெகுண்டு கூறுநிற்பது.

(௨) தலைமகள் தோழிக்குரைப்பாளாய் வாயிலாகப் புக்கார் கேட்பச் சொல்லியதூஉமாம்.

எ - து, வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

வாளை வாளின் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வேள் ஆம்பல் உருவ நெறித்தழை
ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ
விழவிற் செலீஇயர் வேண்டும் மன்னோ
யாணர் ஊரன் காணுநன் ஆயின்

வரையா மையோ அரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையும் நற்றோள்
அளிய தோழி தொலையுந பலவே.

உரை:—தோழீ! வாளைமீன்கள் வாள்போலப் பிறழாநிற்ப, அவற்றை இரையாக உண்ணக் கருதாது நாள்தோறும் பொய்கையிலுள்ள நீர்நாய் தங்கிய துயிலை ஏற்றுப் பொருந்தாநிற்கும் கைவண்மையுடைய கிள்ளிவளவனது கோயில்வெண்ணியைச் சூழ்ந்த வயலிலுள்ள வெளிய ஆம்பலின் அழகிய நெறிப்பையுடைய தழையை மெல்லிதாய் அகன்ற அல்குலின் மேலே அழகுபெற உடுத்து யானும் இங்கு நடக்கின்ற விழாக்களத்தின் கண்ணே செல்லவேண்டும்; முன்னமே கருதாமையின் அது வீணே கழிந்தது; இப்பொழுது, இவ்விளமகள் தோற்றப்பொலிவோடு செல்லுதலைப் புது வருவாயினையுடைய ஊரன் காண்பானாயின், ஏனையோரை ஏறட்டுப் பாராது இவளையே கொண்டுசெல்லாநிற்கும்; அங்ஙனம் கொள்ளாது விடுத லரிதேயாம்; கொண்டு சென்றொழிந்தாலோ, வரைபோல்கின்ற யானையும் வாய்மையுமுடைய முடியனது மலையிலுள்ள மூங்கில்போன்ற இவனுக்குரிய இல்லுறை மாதர்களின் நல்ல தோள்கள் பல தம் நலனிழப்பனவாகும்; கருதின் அவை இரங்கத்தக்கன; எ – று.

வரைதல் – கொள்ளுதல்.

வரையாமை அரிதென்றதனால், அவளது அழகின்மிகுதி கூறினாள். மாதர் தோள்கள் பல நலனழியு மென்றதனால், தன்னையும் அவன் விரும்பானெனவும் தனது நலனுமழியுமெனவுங் கூறினாளென்பது. அவன் போலத் தான் அழகின்மையால் உடையின் சிறப்பாலேனும் வயமாக்க வெண்ணித் தழை அணிபெற உடுத்தென்றாள். ஐதகலல்கு லென்றதனால், அஃது இயல்பாயமைந்த அழகுடையதென்பது.

உள்ளுறை :—பொய்கையில் வாளைமீன் பிறழ அதனை இரையாகக் கொள்ளக்கருதாது நீர்நாய் துயிலேற்குமென்றது, விழாக்களத்து ஏதில்



ஒருத்தி புனைந்து வந்துநிற்ப அவளைக் கடிந்து போக்காது யான் வாளா மனையகத்திருந்தனென் எனக் காமக்கிழத்தி உள்ளுறை கூறினாளென்றதாம். **மெய்ப்பாடு** – வெகுளி. **பயன்** – காமக்கிழத்தி இனிவருந் தலைவியைக்கடிதல்.

(௩௯௦)

நூ௯௧.

## பாலைபாடிய பெருங்கடுங்கோ பாலை:

(க) இது, பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய
தோழி வற்புறுத்தியது.

தலைமகளைத்

எ – து, தலைமகன் தான் பொருள்வயிற் பிரிவேனென்றதை யறிந்து வருந்திய தலைமகளைத் தோழி நெருங்கி, மடந்தாய்! கண்ணீர்மல்க அழாதே கொள்; நின் காதலர் எழில்மலையைப் பெறுவதாயினும், நின்னைப் பிரிபவர் அல்லர்; நீ அழுவதனை அவர்கண்டால் இன்னே செலவழுங்குவரென வலியுறுத்திக் கூறுநிற்பது.

(உ) வரைவுணர்த்தியதூஉமாம்.
எ – து, வெளிப்படை. (உரை இரண்டற்கு மொக்கும்.)

ஆழல் மடந்தை அழுங்குவர் செலவே
புலிப்பொறி அன்ன புள்ளியம்
பொதும்பில்
பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்
மலர்தலைக் காரான் அகற்றிய தண்ணடை
ரு. ஒண்தொடி மகளிர் இழையணிக்
கூட்டும்
பொன்படு கொண்கான நன்னன்

ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்
யாரோ பிரிகிற் பவரே குவளை

கo.

நீர்வார் நிகர்மலர் அன்னநின்
பேரமர் மழைக்கண் தெண்பனி கொளவே.

**உரை** :—மடந்தாய்! குவளையின் நீர்வடிகின்ற ஒளிபொருந்திய மலர் போன்ற நின்னுடைய பெரிய அமர்த்தலையுடைய குளிர்ச்சியுற்ற கண்களிலே தெளிந்த நீர்வடியும்படி நீ அழாதேகொள்; அழுவதனை அறிந்தால் அவர் பொருள் கொணருமாறு செல்லுவதனை இன்னே ஒழிகுவர்காண்; புலியினது புள்ளிபோன்ற புள்ளிகளமைந்த நிழலையுடைய மரங்கள் செறிதலி னிடையே படர்ந்த ஈரிய கொடியை மேய்ந்த நெடிய கரிய கொம்பையும் பருத்த தலையையுமுடைய எருமைமாடு அக்கொடியினின்று தின்றொழித்த மலைப்பச்சையின் இலைகள் ஒள்ளிய தொடியையுடைய மகளிர் கலன்களை யணிதற்குப் பயன்படுமாறு கூட்டாநிற்கும் கொண்கானத்தின்கணுள்ள நன்னனது நல்ல நாட்டி லிருக்கின்ற பொலிவு பொருந்திய ஏழில்மலையைத் தாம் பெறுவதாயினும் நின்னைவிட்டுப் பிரிபவர் யாவர்? எ – று.

காரான் – எருமை. தண்ணடை – மலைப்பச்சை. புள்ளி – இலையடராது புள்ளிப்பட்டநிழல். நிகர் – ஒளி. இழையணிக்கூட்டும் – கலன்களாக அணியும்படி கூட்டாநிற்கும் எனவுமாம்.

**உள்ளுறை** :—எருமை தின்ருெழித்த மலைப்பச்சை மாதர் இல்லையணியாகக் கூட்டுமென்றது, அவர் ஈட்டிக் கொணர நீ இல்லறம் நிகழ்த்தி எஞ்சிய பொருள் உலகத்துக்குப் பயன்படுங்கா ளென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தலைவியை ஆற்றுவித்தல். (௩௬௧)

## ௩௬௨. மதுரை மருதனிளநாகனர்

### நெய்தல்: (க) இஃது, இரவுக்குறி முகம்புக்கது.

எ - து, தலைமகன் இரவுக்குறிவேண்ட, அதற்கு நேர்ந்த தோழி தலைவியால் வருதலும் ஆங்கு ஆயம் பல அருகி லியங்குதலானே புலப்படக் கூறுது நம் காதலர் மிக்க அன்பினராதலின் நடுயாமத்து நாம் படுகின்ற துன்பத்தைப் போக்குதலுஞ் செய்வர்; அத்தகையார் இப்பொழுது முன்புற்ற பகற்குறியைவந்து நோக்கி வருந்தியிருக்கின்றனர்போலும்; அவர் நமது மாளிகையை அறிந்திருப்பாராயின் அது மிக்க நலம் எனக் கண்ணுலே குறிப்பாகக் கூறுநிற்பது.

(உ) வரைவுநீட ஆற்ருளாய தலைமகளைத் தோழி வரைவுணர்த்தி வற்புறுத்தியதூஉமாம்.

எ - து, மணஞ் செய்துகொள்வலென்று அகன்ற தலைமகன் நீட்டித்து வாராமையால் வருந்திய தலைமகளைத் தோழி இன்னபொழுது வரையுமெனக்கூறி வலியுறுத்தியதூஉமாகும். (உரை இரண்டற்கு மொக்கும்.)

கடுஞ்சுறு எறிந்த கோடுந்தாள் தந்தை
புள்இமிழ் பெருங்கடல் கொள்ளான்
சென்றேன

மனையழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்
துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்
பணைகோள் வெம்முலை பாடுபெற்று

உவக்கும்

பெண்ணை வேலி உழைகண் சீறூர்
நன்மனை அறியின் நன்றுமற்று இல்ல
செம்மல் நெஞ்சமொடு தாம்வந்து பெயர்ந்த
கானலொடு அழியுநர் போலாம் பால்நாள்
முனிபடர் களையினுங் களைய
நனிபேர் அன்பினர் காத லோரே.

**உரை :**—*கொடிய சுறுமீனை வலையிட்டுப் பிடிக்கின்ற கடிய முயற்சியுடைய தந்தை நீர்க்காக்கைகள் ஒலிக்கின்ற பெரிய கடலின்கண் வேட்டைக்குச் செல்கின்றவன் உடன்கொண்டு செல்லானாய் நிறுத்திவிட்டுச் சென்றதனாலே, மனையின்கண் இருந்தபடி தந்தையுடன் செல்ல விரும்பி அழுதுநின்ற மெல்லிய தலையையுடைய சிறுவர் ஆங்கு விரைய முயற்சியாலே கிடைத்த இனிய கண்ணையுடைய பனைநுங்காகிய பருத்தமைந்த விருப்பம்வரும் கொங்கையின் பயனைப்பெற்று மகிழாநிற்கும் பனையோலையிட்டு விசித்த வேலிசூழ்ந்த அகன்ற இடத்தையுடைய சிறிய ஊரிலுள்ள நல்ல நமது மனையகத்தை நம் காதலர் அறியின் நல்லதேயாம்; அஃது*

அனேவேம்மும் விரும்பத்தக்க தொன்ருகும்; எவ்வாறெனின், அத்தகைய காதலர் நம்பால் மிகப்பெரிய அன்புடைய ராதலால் இரவு நடுயாமத்தில் நம்மை வருத்துந் துன்பத்தைப் போக்கவேண்டு மெனினும் அவ் வண்ணமே செய்யவல்லவர்காண்; அவர் தாம் செம்மாப்புற்ற உள்ளத் துடனே முன்பு வந்து நின்னை முயங்கி அகன்ற கடற்கரைச் சோலே யிடத்துள்ள குறியை இப்பொழுது வந்துகண்டு நின்று அழிகின்றனர் போலும்; எ - று.

சிறுவர் சுவைப்பதற்குரிய கொங்கைபோறலின் நுங்காகிய முலே யென்ருர். தில்ல - இடைச்சொல் லீறு திரிந்தது. பால் நாள் - இரவு பாதியாகப்பகுத்த நடுயாமம்.

பால்நாள் முனிபடர் என்றதனுல், இரவு நடுயாமத்து வருந்துகின்றனே யாதலின் இரவுக்குறிக்கு உடன்படுவாயாக என்று குறிப்பித்தாள். களேட என்றதனுல், நீ உடன்படின் இரவினஞ்சாது போந்து முயங்கி நின் துயரை நீப்பரென்று குறிப்பித்தாள். நன்மனே அறியின், நன்றென்றதனுல் உடன்படின் யானே சென்று அழைத்துவந்து நமது மாளிகையை அறியச் செய்வேனென்ருள்.

**இறைச்சி**:—தந்தையொடு செல்ல முயன்றும் செல்லாதொழிந்த சிருர் பனைநுங்கைப் பெற்று மகிழு மென்றது, தலைவனேமணந்து அவனு டன்சென்று இல்லறம் நிகழ்த்தற்பால மாகிய யாம் அங்ஙனம் நிகழ்த்தற் கியலாமையின் அவனுடன் கூடுமின்பத்தை நமது இல்லகத்தேயே பெறற் பாலம் என்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - இரவுக்குறி ஏற்குமாறு தலைவியின் குறிப்பறிதல். (நஉஉ)

## நஉந. கோவூர்கிழார்

**குறிஞ்சி**: இது, வரைவு மலிந்தது.

எ - து, தலைமகன் வரைவொடு வருதலை யறிந்த தோழி, தலைவியை நெருங்கி மகிழ்ந்து கூறுகின்றாள் 'நம் காதலர் நாம் உய்யுமாறு புதியராகி வரும் வருகையும் நாணம் மீதூர்தலான் நாம் ஒடுங்குவதும் காண்பா ராயின், அவர் வரையவந்ததற் கேற்ப நமர் உடன்படுவரோ? உடன்படின் காதலரொடு மகிழ்ந்து பேசுவரோ?' என ஆய்ந்து கூறுநிற்பது.

நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பில்
கடுஞ்சூல் வயப்பிடி கன்றீன்று உயங்கப்
பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து
வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்
கானவன் எறிந்த கடுஞ்செலல் ஞெகிழி
வேய்பயில் அடுக்கஞ் சுடர மின்னி
நிலைகிளர் மின்னில் தோன்றும் நாடன்
இரவின் வரூஉம் இடும்பை நாம்உய
வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப
நமர்கொடை நேர்ந்தனர் ஆயின்
அவருடன்
நேர்வர்கொல் வாழி தோழிநம் காதலர்

புதுவர் ஆகிய வரவுநின்
வ்துவைநாண் ஒடுக்கமுங் காணுங்

காலே.

உரை :—தோழீ! வாழ்வாயாக; நீண்ட மூங்கிலுயர்ந்த நிழல் மிக்க மலையில் முதிர்ந்த சூலினையுடைய வலிய பிடியானை தான் கன்றையீன்று வருந்தாநிற்பப் பால்மடிசுரந்த பசிய ஈன்ற அணிமையினா லுண்டாகிய பசி நோயைத் தீர்க்கவேண்டி மகிழ்ச்சி மிக்குக் கரிய களிற்றியானை வளைந்த தினைக்கதிரைக் கொய்து கொண்டு போதலாலே கானவன் கண்டு எறிந்த விரைந்த செலவினையுடைய எரிகொள்ளி மூங்கில் நிரம்பிய மலைப்பக்க மெங்கும் விளங்கும்படி மின்னி, விசும்பினிடத்தில் நிலைபெற்றிராது தோன்றி மறைகின்ற மின்னலைப் போலத் தோன்றாநிற்கும் மலைநாட்டினை ராகிய நம் காதலர் இரவில் வருதலாலாகிய துன்பத்தினின்று நாம் பிழைக்கவேண்டி அவர் புதியராய் வரும் வருகையும், நின் வதுவைக்காக நீ நாணி யொடுங்கியிருக்கும் ஒடுக்கமும் கண்டக்கால், அந்தணர் சான்றோரை முன்னிட்டு அருங்கலந்தந்து வரைவதற்குவந்த வாய்மொழிக்கு ஏற்குமாறு நம் சுற்றத்தார் மகட்கொடைக்கு உடன்படுவர்போலும்? அங்ஙனம் உடன்படுவாராயின் அவர்தாம் நம் காதலரொடு மகிழ்ந்து பேசுவரோ? நேர்ந்து பேசுவரெனின் அது மிக்க நன்மையாகுங்காண்; எ - று.

வாலாவேழம் - வெண்மையில்லாத (கரிய) வேழம்.

உள்ளுறை :—ஈன்ற பிடியின் பசியைப் போக்கவேண்டிக் களிறு தினைக்கதிரை அழிப்பக்கண்ட கானவன் எறிந்த கொள்ளி எங்குஞ்சுடர மின்னித் தோன்றுமென்றது, நீ படுங் காமநோயை யாற்றவேண்டி யான் இயற்பழித்துரைப்பக் கேட்டு ஆற்றாத தலைமகன் நின்பால் அன்புகொண்டு நமர்பெறுமாறு முன்றிலிற் குவித்த நிதியமுங்கலனும் எங்குஞ் சுடரொளி வீசாநின்றனவென்றதாம். **மெய்ப்பாடு** - உவகை. **பயன்** - கேட்ட தலைவி மகிழ்தல். (நகக)

நஅ. ஔவையார்

முல்லை :

(க) இது, வினைமுற்றி மறுத்தராநின்ற தலைமகனை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

எ - து, சென்று வினைமுடித்துவரும் தலைமகனை இடைச்சுரத்து முன்னும் பின்னும் நோக்கிநின்றவர்களுள் ஒருவர் நோக்கி, 'முன்பு இவன் இச்சுரநெறியின்கண்ணே ஆழி யதிர முன்பனிநாளிற் சென்றனன்; இப்பொழுது கார்ப்பருவம் வரலாயதே யெனக் குளிர்ந்த வுள்ளத்தனாகி மீளாநின்றனன்; இவன் வாழ்வானாக; இதற்கு யான் மகிழ்வேன் மன்னோ' என மகிழ்ந்து கூறுகிறபது.

(உ) வன்சொல்லாற் குறையயப்பித்த தோழி, தான் தனித்துக் கூறியதுமாம்.

எ - து, வெளிப்படை.

மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய
தெளிர்ப்பப்

பெய்ம்மணி ஆர்க்கும்
இழைகிளர் நெடுந்தேர்
கி. வன்பால் முரம்பில் நேமி அதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
இடைச்சுரத்து எழிலி
உரைத்தென மார்பில்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியன்கோல்
நோகோ யானே.

**உரை** :—மரங்கள் மிக நெருங்கிப் பொருந்திய இடமகன்ற காட்டின் கண்ணே வாடிய ஞெமையின்மீ திருந்த பேராந்தை பொற்கொல்லன் தொழில் செய்வதினெழுகின்ற ஒலிபோல இனியவா யொலியாநிற்பப் பூட்டிய மணிக ளொலிக்கும் அருங்கலம் விளங்கிய தேரினுருள் சுரத்தி னுள்ள மேட்டுநிலத்தின்கண் அதிர்ந்து செல்லாநிற்ப, முன்பு இத்தோன் றல் முன்பனிநாளிலே சென்றனன் ; இப்பொழுது சுரத்திடையே மேகம் எழுந்து உலாயதெனக் கொண்டு கார்ப்பருவம் வந்திறுத்ததெனத் தன் காதலியை ஆற்றுமாறு மீள்வானாகித் தன் மார்பிற் குறிய புள்ளிக ளமைந்த பூசிய சாந்தத்தினுங் காட்டில் நறிய குளிர்ச்சியுடையனாய் வாராநின்றான் கண்டீர் ; இவன் வாழ்வானாக ; யான் இதற்கு நோவேனோ? நோவேனல் லேன் ; மகிழ்வேன்மன் ; எ – று.

அலந்தலை – துன்பம் ; நீரின்றி வாடிய ஞெமைக்கு அடைமொழி யாயிற்று. தெளிர்த்தல் – ஒலித்தல். வன்பால் – பாலை. உரைத்தல் – உலாவல். **மெய்ப்பாடு** – உவகை. **பயன்** – மகிழ்தல்.

(உ) உரை:—[திணை - குறிஞ்சி] நென்னல் என்பாற் குறையுற்றுக் கையுறை ஈந்துவிட்டுச் சென்ற தலைமகனுவான் இடைச்சுரத்து மேகம் இயங்கி மழைபெய்தாற்போலக் குளிர்ச்சியுற்றவனாய் இன்று மீண்டு வாரா நின்றான்; யான் வன்சொல்லாற் குறைநயப்பித்து விட்டமையால் இனி இறைவியை முயங்கி வாழ்வானாக; இதற்கு யான் நோவேனல்லேன். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - தோழி தானே மகிழ்ந்துரைத்தல்.

## ௩௯௫. அம்மூவனார்

**நெய்தல்:** இது, நலந்தொலைந்தது.

எ - து, "வரைவுடன் பட்டோற் கடாவல் வேண்டினும்" என்ற (தொல் - பொ - ௧௧௪) விதிப்படி தலைவி கொடுஞ்சொற்கூறி வரைவு கடாவ வேண்டியவழி அதனை யறிந்த தோழி தலைமகனை நெருங்கி "அன்பனே, நீ அயலானாயிராநின்றனை; எமக்கு யாராந்தன்மையை; நின்னால் யான் நலனிழந்தேன்; அதனைத்தந்து அப்பாற் செல்லுவாயாக" என்று உள்ளுறையால் வேற்றுவரைவு நேர்ந்ததுங்கூறி வரைவுகடாவா நிற்பது.

யாரை எலுவ யாரே நீயெமக்கு

யாரையும் அல்லை நொதும லாளனை

அனைத்தாற் கொண்கவெம் இடையே

நினைப்பின்

கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்

வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன
ஓங்கல் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ ஆர்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை அன்னஎம்
வேட்டனை அல்லையால் நலந்தந்து
செல்மே.

**உரை:**—நண்பனே ! யாரை நட்பாகவுடையை ? நீ எமக்கு யாராந் தன்மையுடையை ? ஆராயின் நட்புடையாரையும் போல்வாயல்லை ; அயலானுமல்லை ; எம்மிடத்தில் நீ நடந்துகொள்ளு மியலை ஆராயப்புகின், அஃது அத்தன்மையதேயாகும் ; கடிய பகடாகிய யானையையும் நெடிய தேரையுமுடைய குட்டுவன் பகைவேந்தரைக் கொன்ற போர்க்களத்தின் கண்ணே, அவனது வெற்றிமுரசு அதிர்ந்தாற்போன்ற ஒலியையுடைய அலை உயர்ந்து வருகின்ற கடலிலே பாய்ந்து விளையாட்டயர்ந்து நீராடு மகளிர் அணிந்து கழித்தெறிந்த பலவாய மலர்களைப் பொருந்தித் தின்ற முதிர்ந்த பசு மீண்டு தான் உறைக்கின்ற புலத்துட் புகாநின்ற பெரிய இசையையுடைய மாலைப்பொழுதை எதிர்கொள்ளுகின்ற கடற்கரையின் கண் விளங்கிய மாந்தைநகர் போன்ற எம்மை விரும்பி யொழுகுவாயல்லை யாதலின் நின்னுலிழந்த எமது நலனைக் கொடுத்துவிட்டு அப்பாற் செல்லு வாயாக ; எ - று.

அணிந்து இடு பூ - அணிந்து கழித்துப்போகட்ட மலர்.

**உள்ளுறை:**—மகளிர் கழித்துப்போகட்ட பூவை முதிர்ந்த பெற்றம் தின்னுமென்றது, நீ களவொழுக்கத்துக்கூடிப் பின்பு கைவிட்ட தலைவியை ஏதிலார் போந்து மணம் நயவாநிற்ப ரென்றதாம். **மெய்ப்பாடு** - வெகுளி. **பயன்** - நலந்தொலைவுரைத்து வரைவுகடாதல். (கஅரு)

ந௨கஅ. ...........................

குறிஞ்சி: (க)

இது, தோழி தலைமகனை வரைவுகடாயது.

எ - து, வரையாது களவொழுக்கம் நீட்டித்தானைத் தோழி நெருங்கி, 'மலைநாடனே! நின் மார்பால் வருந்திய நோயை யாரிடங் கூறுவேன்? பலகாலும் இனியகூறி அருளாயாய் நீ மயங்காநின்றனை' என வரைந்து கொள்ளுங் குறிப்புத்தோன்ற வினவாநிற்பது.

(உ) வரைவுணர்த்தப்பட்டு

ஆற்றாளாய்ச் சொல்லிய

தூஉம ஆம.

(ந) இரவுக்குறி மறுத்ததூஉமாம்.

என்பன வெளிப்படை.

(உரை மூன்றற்குமொக்கும்.)

பெய்துபோகு எழிலி வைகுமலை சேரத்
தேன்தூங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப
வேங்கை தந்த வெற்புஅணி நன்னாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்



ரு. கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை

பாசறை மீமிசைக் கணங்கொள்பு

ஞாயிற்று

உறுகதிர் இளவெயில் உண்ணும்

நாடன்

நின்மார்பு அணங்கிய செல்லல்

அருநோய்

யார்க்குநொந்து உரைக்கோ யானே

பன்னாள்

௧௦. காமர் நனிசொல் சொல்லி

ஏமமென்று அருளாய் நீமயங் கினையே.

**உரை:**—மழையைப் பெய்தொழிந்து செல்லும் மேகமெல்லாம் தாம் முன்பு தங்கியிருந்த மலையின்கண்ணே சென்று தங்காநிற்பத் தேனிறால் தூங்குகின்ற உயர்ந்த வெற்பினின்று அருவி ஆரவாரித்து வீழாநிற்ப வேங்கைமரங்கள் மலர்ந்த அழகிய மலையில் நல்ல நாட்காலைப்பொழுதிலே பொன்போன்ற பூக்களையுடைய கிளையிலிருந்து அளாவி நறுமணம் வீசும் மகரந்தத்தில் அளைந்த அழகுபெற்ற மயில் பசிய கற்பாறையினுச்சிமீது தன்கூட்டத்தொடு கூடி ஆதித்தனது மிக்க கதிரையுடைய இளவெயிலைத் துய்க்கின்ற மலைநாடனே! நினது மார்பினால் வருத்தப்பெற்ற இன்னலை நீங்குதற்கரிய காமநோயை யான் யாரிடத்து நொந்து கூறுகிற்பேன்? நீ வந்து புணரும் பலநாளும் மிக இனிய வார்த்தைகளை யான் விரும்பும்படி கூறி இங்ஙனம் கூறியவழி நடத்தல் இவட்குக் காப்புடைத்தாகுமென்று அருளாயாய் நீ மயக்கமுறுகின்றனை; இதனை யான் யார்க்கு நொந்து கூறுகிற்பேன்? எ - று.

வேங்கை தந்த பூஞ்சினையெனக் கூட்டுக.

நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேனென்றனாதலின், நனிசொற் சொல்லினையென்றாள். பிரியின் இறந்துபடுமென்று கருதி வரைந்தாய் அல்லையென்பாள் அருளாயென்றாள்.

உள்ளுறை :—மயில் வேங்கைமலரின் தாதில் அளைந்து தன்கூட்டத்தொடு சேர்ந்து ஞாயிற்றின் இளவெயில் உண்ணுமென்றது, நீ தானும் இவளை மணந்து இன்பம்நுகர்ந்து நின் சுற்றத்தொடு கெழுமி இல்லறம் நிகழ்த்தற்பாலை யென்றதாம். **மெய்ப்பாடு** - பெருமிதம். **பயன்** - வரைவு கடாதல். (௩௬௬)

## ௩௬௭. அம்மூவனார்

**பாலை :**

இது, பிரிவிடை ஆற்றாளாகி நின்ற தலைமகளை வற்புறுநின்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

எ - து, தலைமகன் வினைவயிற்பிரிந்தான் குறித்தபருவத்து வந்திலனென்பதறிந்து வருந்திய தலைமகளைத் தோழி ஆற்றியிருக்குமாறு கூறக்கேட்ட தலைமகள், 'என்னைக் காதலன் பிரிந்து கைவிடுதலின் யான் இறந்துபடுதற் கஞ்சினேனில்லை; இறந்து வேறொரு பிறப்பாய்விடின் அப்பொழுது அவனை மறக்க நேரிடுமோவென் றஞ்சுகின்றேன்' என நொந்து கூறுநிற்பது.

தோளும் அழியும் நாளும் சென்றென
நீளிடை அத்தம் நோக்கி வாள்அற்றுக்

மூலமும் உரையும்

௯௭௩

